# தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்

தொகுதி இரண்டு

ஆங்கில மூலம்

எட்கர் தர்ஸ்டன்

தமிழாக்கம்

முனைவர் க. ரத்னம்



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

# தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்

தொகுதி இரண்டு

**Castes and Tribes of South India Vol. - II**

கஞ்சி முதல் ஜுங்கு வரை

**(Canji to Jungu)**

ஆங்கில மூலம்:

எட்கர் தர்ஸ்டன்

தமிழாக்கம்:

முனைவர் க. இரத்னம்



தமிழ்ப் பல்கலைக் கழகம்

தஞ்சாவூர்

ISBN : 81-7090-093-X

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 72-2

திருவள்ளுவராண்டு 2018, ஆனி - சூலை 1987

நூல் : தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்
தொகுதி இரண்டு

ஆசிரியர் : ஆங்கில மூலம்: எட்கர் தர்ஸ்டன்
தமிழாக்கம்: முனைவர் க.ரத்தினம்

மொழி : தமிழ்

பொருள் : மானிடவியல்

பதிப்பு : முதற்பதிப்பு 1987
மறுபதிப்பு 2005 ஜுன் 2010

பக்கம் : 688

தாள் : டி.என்.பி.எல்.மேப்லித்தோ 16 கிலோ

அளவு : டெம்மி 1/8

நூற்கட்டுமானம் : சாதாக்கட்டு

விலை : உரூ. 300.00

படிகள் : 500

அச்சு : தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம்
தஞ்சாவூர்

# தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்

## தொகுதி - இரண்டு

**கஞ்சி - Canji (gruel)**

பத்ம சாலேக்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம். "அரிசி வெந்தபின் வடிக்கப்படும் எஞ்சிய தண்ணீர், கஞ்சியென இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் வழங்கப் படுகிறது. இந்திய வண்ணார்கள் துணிக்குப் பசையாகப் போட இதனையே பயன்பத்துதுகின்றனர்."* சாலே நெசவுக்காரர்களான இக்குலப் பிரிவினரின் இப்பெயர் இவர்கள் பாவு ஓட்டும்போது கஞ்சியினைப் பயன்படுத்துவதால் இவர்களுக்குரியதாக வழங்குவதாகலாம்.

**சச்சாடி - Chacchadi**

துப்புரவுப் பணிபுரியும் ஹட்டிகள். இவர்களோடு பிற ஹட்டிகள் மண உறவு கொள்வதில் நாட்டம் காட்டுவதில்லை.

**சதரபு தொம்ப்டி - Chadarapu Dhompti**

மணத்தின்போது சதுரமான இடத்தில் படையல் இடுபவர்கள் எனப் பொருள்தருவது. மாதிகர்களின் ஓர் உட்பிரிவின் பெயர்.

---

* யூலும் பர்னலும், ஹாப்சன் – ஜாப்சன். (Yule and Burnell. Hobson - Jobson.)

இவர்கள் மண நிகழ்ச்சியின்போது தெய்வத்திற்குச் சதுரமான இடத்தில் படையலிடுவர்.

**சாக்கல - Chākala**

*பார்க்க: தசாகலர்* – **see: Tsākala**

**சக்கான் – Chakkān**

"மலபாரைச் சேர்ந்த எண்ணெய் ஆட்டும் சாதியார். (சக்கு– எண்ணெய் ஆட்டும் செக்கு) இத்தொழில் புரிவோர் தென் மலபாரில் வட்டக்காடன்கள் என அழைக்கப்படுகின்றனர். வடமலபாரில் வாணியர் என அழைக்கப்படுகின்றனர். வட்டக்காடன்கள் வாணியரைவிடச் சாதியில் உயர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். வாணியர்களும் சக்கான்களும் நாயர்களைத் தொட்டால் நாயர்கள் தீட்டுக்குள்ளாகின்றனர். வட்டக்காரன்கள் தொட்டால் தீட்டாவதில்லை. சக்கான்களும் வாணியர்களும் பிராமணர்களுடைய கோயில்களில் நுழையவிடப்படுவதில்லை. இவர்களுடைய பழக்கவழக்கங்கள் பெரிதும் நாயர்களுடையன போன்றனவே. ஆனால் இவர்கள் நாயர்களோடு மண உறவு கொள்ளமுடியாது" என 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் இவர்களைப் பற்றிப் பதியப்பட்டுள்ளது. சக்கிங்களவன் என்பது சக்கானுக்குரிய மற்றுமொரு பெயர்.

**சக்கிலியர் – Chakkiliyan**

"தெலுங்கு பேசப்படும் பகுதிகளுக்குரிய மாதிகர்களுக்கு ஒப்பானவர்கள் தமிழ் நாட்டில் தோலில் பணிபுரியும் சக்கிலியர். இவர்கள் தெலுங்கு அல்லது கன்னடம் வழங்கும் மாவட்டங்களிலிருந்து வந்து குடியேறி இருத்தல் வேண்டும். தொன்மையான தமிழ்க் கல்வெட்டுக்களிலோ இலக்கியங்களிலோ இவர்களைப் பற்றிய குறிப்பேதும் இல்லை. மேலும் இவர்களில் பெரும்பாலோர் கன்னடம் அல்லது தெலுங்கினைப் பேசுகின்றனர். சமுதாயப் படிநிலையில் சக்கிலியரே அடிமட்டத்தினராகக் கருதப்பட்டாலும் பறையர்களுக்கும் இவர்களுக்குமிடையே இது தொடர்பான மிகுந்த கருத்து வேறுபாடு இருக்கவே செய்கின்றது. பெயரளவில் சைவர்களாக உள்ள இவர்கள்

தேவதைகளையே உண்மையில் வழிபட்டு வருகின்றனர். இவர்கள் ஆவாரம் செடியை (*Cassia auriculata*)* மிகவும் போற்றி மதிக்கின்றனர். மணச் சடங்குகளின்போது முதலில் ஆவாரம் செடிக்கு இவர்கள் தாலி கட்டுகின்றனர். சிறுமியர் பருவ மடைந்த பின்னரே மணம் செய்விக்கப்படுகின்றனர். மணமகன் மணமகளைவிட வயதில் இளையவனாகவும் இருக்கலாம். கைம் பெண்கள் மறுமணம் செய்து கொள்ளலாம். மணமகளோ மணமகனோ உள்ளூர்ச் சாதித் தலைவன் முன்னிலையில் ரூ. 12–12–0 செலுத்தியபின் தங்கள் விருப்பப்படி மண முறிவு பெற்றுக் கொள்ளும் உரிமை உள்ளது. இச்சாதியைச் சேர்ந்த பெண்கள் நல்ல அழகிகள் எனக் கருதப்படுகிறார்கள். நெறி முறைப் படுத்தப்படாத சக்தி வழிபாடு செய்பவர்கள் அதற் காக இச்சாதியைச் சேர்ந்த பெண்களையே தேர்ந்தெடுக்கின் றனர். இவர்கள் வரன்முறையின்றிப் போதை தரும் மதுவகை களை அருந்துவதோடு பன்றி, மாடு போன்ற எல்லா வகை விலங்குகளின் இறைச்சிகளையும் உண்ணுகின்றனர். இதனா லேயே இவர்கள் ஊன் உண்பதில் முற்பட்டவர் என்ற பொருள் பட 'சத்குலி' என வடமொழிப் பெயருக்குரியவர்களாகி உள்ள னர். பதினெட்டாம் நூற்றாண்டில் சானெரட்† சக்கிலியர் செருப்புத் தைக்கப் பசுவின் தோலினைப் பயன்படுத்துவதால் பறையரைவிடவும் இழிந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள் எனக் குறித்துள்ளார். "தீபகற்பப் பகுதி முழுவதிலும்சக்கிலியர் அல்லது செருப்புத்தைப்பவர்கள் பறையர்களைவிடத் தாழ்ந்தவர் களாகவே கருதப்படுகின்றனர். இவர்கள் குடிப் பழக்கத்திலும் சிற்றின்ப வெறியிலும் மிகுதியும் ஊறித் திளைக்கும் பழக்கம் உடையவர்களாக உள்ளனர். இவர்களின் இந்தக் களியாட்டம் பெரும்பாலும் மாலை வேளைகளிலேயே நடைபெறும். குடி வெறியில் ஒருவரோடு ஒருவர் உரக்க ஏசிப் பேசிச் சண்டை யிடும் ஓலம் இவர்கள் வாழும் ஊர்ப்புறங்களில் இரவில் நெடு

---

* இந்தியாவில் தோல் பதனிடும் தொழிலில் ஆவாரம் பட்டை மிகுந்த மதிப் புடையதாகக் கருதப்படுகிறது.

† கிழக்கிந்தியாவில் பயணம், 1774, 1781. (Voyage to the East Indies, 1774 and 1781. - sonnerat)

நேரம்வரை கேட்டபடி இருக்கும். பறையர்களே இவர்களோடு எந்த உறவும் வைத்துக் கொள்ள விரும்பாததோடு தங்கள் விருந்துகளில் கலந்து கொள்ள இவர்களை அனுமதிப்பதும் இல்லை" என அப்பெ துபைஸ்* எழுதுகிறார். சக்கிலியரைப் பற்றி 1868-ஆம் ஆண்டு மதுரை மாவட்டக் கையேடு கூறுவதாவது:- "இவர்கள் தோல் பதனிடுவதோடு செருப்புகள், குதிரைச் சேணங்கள், தோல் பொருட்கள் ஆகியவற்றைத் தயாரிக்கின்றனர். குடிப்பழக்கமும் கீழான நடத்தையும் உடைய இவர்கள் தீய ஒழுக்க வழிப்பட்டவர்கள். இவர்கள் இனப் பெண்கள் பத்மினி பிரிவைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுவது வியப்பிற்குரியதாகவே உள்ளது. அதாவது அப் பெண்கள் தனித்த முக அழகும் உடற்கட்டும் வாய்க்கப்பட்டிருப்பதோடு நல்ல நடத்தையும் உடையவர்களாக உள்ளனர். சக்கிலியர் பெரும் எண்ணிக்கை உடையவர்களாக வாழ்கின்ற பரமக்குடியைச் சார்ந்துள்ள பகுதிகளில் சமீன்தார்களும் செல்வம் மிக்கவர்களும் இச்சாதிப் பெண்களோடு உறவு கொள்வதில் ஆர்வம் மிகுந்தவர்களாக உள்ளனர் என்பது எல்லோரும் அறிந்த ஒன்றே." சக்கிலியப் பெண்ணும் சோளக் கதிரும் கூடப் பருவம் வரும்போது அழகாகவே இருப்பர் என்ற தமிழ்ப் பழமொழியும் உள்ளது. 1883-ஆம் ஆண்டு தஞ்சாவூர் மாவட்டக் கையேட்டில், "சக்கிலியர் மிகத் தாழ்ந்த சாதியாராகக் கருதப்படுகின்றனர். மாவட்டத்தில் சில பகுதிகளில் தெலுங்கு பேசுவதோடு வைணவச் சின்னமான நாமம் தரிக்கும் இவர்கள் தெலுங்குப் பகுதிகளிலிருந்து வந்து குடியேறியவர்களாதல் வேண்டும்." எனக் கூறப்பட்டுள்ளது. இவர்கள் தமிழைப் பேசினாலும் தெலுங்கு மாதிகர்களைப் போல வட பகுதிகளில் கோத்திரம் எனவும், தென் மாவட்டங்களில் கிளை எனவும் வழங்கும் புறமணக்கட்டுப்பாடுடைய குலப் பிரிவுகளைக் கொண்டுள்ளனர். மாதிகர்கள் தங்கள் சாதிப் பெண்களில் சிலரைப் பசவிகளாக (நேர்ந்து கொண்டு பரத்தையராக ஆக்குவது) விடுவதைப் போல இவர்கள் பெண்களை விடும் பழக்கத்தை மேற்கொள்வதில்லை.

---

* இந்துக்களின் பழக்கவழக்கங்கள், சடங்குகள், விழாக்கள். (Hindu Manners, Customs and Cermonies - Abbe Dubos)

தெலுங்குப் பகுதியைச் சேர்ந்த மாதகர்களுக்கும் சென்னை நகரில் வாழும் சக்கிலியர்களுக்கும் இடையே காணப்படும் முக்கிய மான உடல் அளவுகளுக்கிடையே உள்ள ஒற்றுமையைப் பின் வரும் புள்ளி விவரங்கள் தெளிவாகக் காட்டுவனவாம்:-

| | முப்பது மாதிகர் | ஐம்பது சக்கிலியர் |
|---|---|---|
| | செ.மீ | செ.மீ |
| உயரம் | 163.1 | 162.2 |
| தலையின் நீளம் | 18.6 | 18.6 |
| தலையின் அகலம் | 13.9 | 13.9 |
| தலையின் விகிதத் தகவு அளவு | 7.5 | 75. |
| மூக்கின் உயரம் | 4.5 | 4.6 |
| மூக்கின் அகலம் | 3.7 | 3.6 |
| மூக்கின் விகிதத் தகவு அளவு | 80.8 | 78.9 |

சென்னையைச் சேர்ந்த சக்கிலியர்கள் தங்கள் நெற்றியில் மட்டுமன்றிக் கைகள், தோள்கள் ஆகியவற்றில் தங்கள் பெய ரோடு கூடத் தங்கள் தொழிலுக்கு உரிய கருவிகள், நாட்டியப் பெண்களின் உருவங்கள் ஆகியவற்றைப் பச்சைக் குத்திக் கொள்கின்றனர்.

மதுரை மாவட்டக் கையேடு, அம்மாவட்டத்தில், "இப் பிரி வினைச் சேர்ந்தவர்களாக இருக்கும் பெண்கள் இடங்கைப் பிரிவினராக இருப்பதோடு அப்பிரிவின் தீவிர ஆதரவாளர் களாகவும் விளங்குகின்றனர். வலங்கை, இடங்கைப் பிரிவின ரிடையே மோதல் நிகழ்ந்த காலப்பகுதி முழுவதும் இப்பெண்கள் தங்கள் கணவர்களுக்குரிய மண உறவு தொடர்பானதான உரிமைகளைக் கூட மறுத்துவிட்டனர் எனக் கூறப்படுகிறது" எனக் கண்டு குறித்துள்ளது.

சென்னை மாநிலத் தோல் தொழில் பற்றித் திரு ஏ.சாட் டெர்டன்* பின்வரும் கருத்தில் கொள்வதற்குரிய தகவல்களைத்

---

* தோல் பதனிடுதலும் தோல் தொழிலும் பற்றிய தனி நூல், 1904.
(Monograph of Tanning and Working in Leather, 1904).

தந்துள்ளார்:- "தென் மாவட்டங்களில் வாழும் சக்கிலியர் நிலை வட பகுதிகளில் வாழும் மாதிகர் நிலையிலும் பெரிதும் வேறுபட்டதாக உள்ளது. மாதிகர்களின் உரிமைகளில் பல வற்றைத் தெற்கே பறையர்களின் உட்பிரிவினரான வெட்டி யான்கள் அனுபவிக்கின்றனர். இவ்வெட்டியான்கள் ஊர்ப் புறங்களிலிருந்து இறந்துபோன கால்நடைகளை எடுத்துச் செல்லும் உரிமை பெற்றுள்ளனர். அதற்கு ஈடாக உழவுத் தொழிலுக்குத் தேவையான தோலினைத் தந்து உதவு கின்றனர். சக்கிலியர்களில் பெரும்பாலோர் தோல் பதனிடுவ தில்லை. தோலில் தொழில் மட்டுமே செய்கின்றனர் வெட்டியானிடமிருந்து பச்சைத் தோலையும் உலர்ந்த தோலையும் வாங்குவதைவிட நேரிடையாகப் பதனிடும் மையங் களிலிருந்து கொண்டு வரப்படும் பதனிட்ட தோலினை வணிகர் களிடமிருந்து வாங்குவதையே அவர்கள் விரும்புகின்றனர். செருப்புகளையோ, அடிபுதை செருப்புகளையோ செய்யத் தொடங்கும் சக்கிலியன் தனக்குத் தேவையான தோலினையோ, பச்சைத் தோலினையோ கடைவீதியில் வாங்கி வீட்டுக்கு எடுத் துச் சென்று அதனைப் பதப்படுத்தத் தொடங்குகின்றான். முதலில் தோல் நனைக்கப்பட்டு நன்கு நெகிழ்த்தப்படுகிறது. பின்னர் 'அனிலைன்' சாயம் ஏற்றுகின்றனர். 'படிச்சே அனி லின்' சோட பேப்ரிக்கான செஞ்சிவப்புச் சாயமே பெரிதும் அவர்கள் பயன்படுத்தும் வண்ணமாகும். இச்சாயப் பவுடர் பொட்டலங்கள் கடைவீதியில் வாங்கப்பட்டுத் தண்ணீரில் கரைக்கப்பட்டு அதனோடு சிறிது ஆக்சாலிக் அமிலம் கலக்கப் படுகிறது. இச்சாயத்தை ஒரு பழந்துணியில் நனைத்துத்தோலின் சொரசொரப்பான பக்கத்தில் பூசி உலர வைப்பர். தோல் உலர்ந்தபின் ஊன் இருந்த உட்பக்கத்தில் புளிக்கலவையைப் பூசியபின் அதனைக் கைகளிடையே உருட்டித் தோலின் வெளிப் புறத்தில் சொரசொரப்பான புள்ளிகள் அமையுமாறு செய்வர். அடிபுதை செருப்பு செய்யும்போது தோலினை நனைத்து மரத்தாலான உருவ அமைவுகளில் பொருத்தி வடிவம் தருகின் றனர். தைப்பதற்கு இவர்கள் பருத்தி நூலினையே பயன் படுத்துகின்றனர். இங்கிலாந்தில் செருப்பு தைப்பவன் பயன் படுத்தும் மெழுகு பூசப்பட்ட நூலினை இவர்கள் அறியார்.

மாநிலத்தில் கவலையில் தண்ணீர் இறைக்கும் ஏற்றத்துக்கான பறிகள் செய்யவே தோல் மிகுதியும் பயன்படுத்தப்படுகிறது. நெய், எண்ணெய் முதலியவற்றை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்லும் பைகள் தைக்கவும் தோல் பயன்படுத்தப்படுகின்றது. மாநிலத்தில் 600,000 கிணறுகள் உள்ளன. இவற்றில் ஒரு சில இரும்புப் பறியினைப் பயன்படுத்துகின்றன. பெரும்பாலான கிணறுகளில் நீர் இறைக்கத் தோலாலான பறியே தோல் வாலுடன் பயன்படுத்தப்படுகின்றது. ஒரு பறி பத்து முதல் ஐம்பது காலன் தண்ணீர் கொள்ளும் அளவுடையது. அவை நன்கு பதப்படுத்தப்பட்ட மாட்டுத் தோலால் மூட்டப்படுகின்றன. மிகப் பெரிய பறிகளை எருமைத் தோல் கொண்டு மூட்டுவர். மாநிலத்தில் பெருமளவிலான எண்ணெய், நெய் வைக்கும் பைகள் உபயோகத்தில் உள்ளன. இதற்காகத் தோல் பைகளை உபயோகிக்கும் பழக்கம் குறைந்து வருகிறது. விலை மலிவானதும், அடுக்கி வைக்க ஏற்ற வடிவினதுமான மண்ணெண்ணெய் டின்கள் இப்பொழுது எண்ணெய் வைக்க ஏற்றதாகக் கருதப்படுகின்றன. மற்ற நாடுகளில் தோல் பைகள் வழக்கிழந்து விட்டதைப் போல இங்கும் காலப் போக்கில் இத்தொழில் மறைந்து விடக்கூடிய வாய்ப்பு உள்ளது. நாட்டுப்புறச் சக்கிலியர் பணித்துறை பரந்துபட்டதாய் இல்லை. மரச் செருப்புகளுக்குத் தோல் வார் போடுவதோடுகூட உழவர்களின் கால்நடைகளுக்கான வாராலான கயிறுகளையும் அவன் தயாரிக்கின்றான். மாட்டின் கழுத்தில் மணிகள் கட்டத் தேவையான வார்களையும். மாடு ஓட்டுபவர்களுக்குத் தோலாலான சாட்டைகளையும், எருதுகளின் தலைக்கு அலங்காரச் சங்கிலிகளையும், கொல்லர்களுக்கான துருத்திகளையும், அம்பட்டர்களுக்கான பைகளையும் அவன் தயாரிக்கின்றான். சில இடங்களில் தோலாலான கயிறுகள் பல படித்தாகப் பயன்படுத்தப்படுகின்றன. தேரோட்டம் நிகழும் சமயம் கோயில் தேர்களை இழுக்கும் வடங்களைத் தோல் வளையங்களால் தேரோடு சேர்த்து இணைப்பது வழக்கம். வெட்டியான்களும் சக்கிலியரும் முரசு, தப்பட்டை ஆகியவற்றின் வாயினைப் பச்சைத் தோலால் கட்டுவர். முரசு பெரும்பாலும் அளவில் மிகப் பெரியது. அது யானை, குதிரை, எருது, ஒட்டகம் ஆகியவற்றின் முதுகின் மீது

வைத்தே கொண்டு செல்லப்படும். அவற்றிற்குப் பச்சைத் தோல் தேவைப்படும். சிறிய முரசுகள் ஆட்டுத் தோல் கொண்டே அமைக்கப்பட்டுவிடும். பச்சைத்தோலின் ஊனுள்ள பக்கம் சீவப்பட்டுப் பின் உலர்த்தப்படும். மயிர்ப்புறம் மரச்சாம்பல் கொண்டு தேய்த்து மயிர் நீக்கப்பெறும், மயிர் நீக்கச் சுண்ணாம்பு பயன்படுத்தப்படுவது அனுமதிக்கப்படுவதில்லை. அதனைப் பயன்படுத்தினால் அது தோலின் நெகிழ்ச்சித் தன்மையைப் பாதிக்கும்." கம்மாளர், பள்ளியர், கைகோளர் ஆகியோருக்கும் மற்றச் சாதியாருக்கும் அவர்கள் வேண்டும் போது சக்கிலியர் தப்பட்டை அடிக்கச் செல்வர்.

மாதிகர்களுடைய சிறப்புத் தெய்வமான மாதங்கியினைச் சக்கிலியர் வழிபடுவதில்லை. மதுரைவீரன், மாரியம்மன், முனீசுவரன், திரௌபதி, கங்கம்மா ஆகியோரே இவர்கள் வழிபடும் தெய்வங்கள். இவர்களுள் கங்கம்மாவே மிக முக்கியமான தெய்வம். இவளுக்கு இயலும் போதெல்லாம் ஆண்டுவிழா எடுப்பர். இதற்கான செலவுகளைச் சரிக்கட்டச் சக்கிலியர் சிலர் மராட்டியக் குருவிக்கார ஆண் பெண்களைப் போல வேடந் தரித்து ஒன்பது நாள்கள் தெருக்களில் பிச்சை எடுத்துத்திரிவர். பத்தாம் நாள் விழா முடிவுறும். இந்தப் பத்து நாள்களும் ஓர் ஆற்றங்கரை அல்லது குளக்கரையில் வேப்பமரம் அல்லது அரசமரத்தின் அடியில் இடப்பட்ட பந்தலின் கீழ் கங்கம் மாவை அலங்கரிக்கப்பட்ட மூன்று பானைகளில் ஏற்றி வைத்து வழிபடுவர். இறுதி நாளன்று ஆடும், சேவலும் பலியிடப் படுவதோடு, எலுமிச்சம் பழத்தையும் நறுக்கிப் படைப்பர்.

சக்கிலியப் பெண் பூப்படையும்போது தீட்டுப்பட்டவளாகத் தனியே பசுந்தளிர்க் கொத்துக்களால் வேயப்பட்ட குடிசையில் வைக்கப்படுவாள். அக்குடிசையை அவள் கணவனோ தாய் மாமனோ அமைப்பர். அவள் அச்சமயத்தில் ஊன், பால், தயிர் ஆகியவற்றை உண்ணுதல் கூடாது. தீட்டு நீங்கும் இறுதி நாளன்று அக்குடிசை எரிக்கப்படும். மணநிகழ்ச்சியின்போது ஒரு சக்கிலியனே புரோகிதனாக இருந்து சடங்கை நடத்துவான். வள்ளுவர் பிரிவைச் சேர்ந்த புரோகிதரை அமர்த்தியும் மணச் சடங்கை நடத்துவர். ஒரு பெண்ணை மணம் செய்து தரும் முன்

அவள் தாய் மாமனின் உடன்பாடு பெறுதல் வேண்டும். இவர்கள் மணச்சடங்கும் பறையருடைய சடங்கினை ஒத்ததே. சக்கிலியரின் சாவுச் சடங்கின் இறுதி நாளன்று பறையருடைய சடங்கில் செய்வது போலவே இரண்டு செங்கற்களை வழிபட்டுப் பின் அவற்றைக் குளத்திலோ ஆற்றிலோ விடுவார்.

மாலர், மாதிகர், சக்கிலியர் சாதியைச் சேர்ந்த மெலிந்த குழந்தைகளுக்கு அவர்கள் உடல் தேறச் சக்கிலியன் அதற்காகவேசெய்த ஒரு தோலினை அணிவிப்பர். அது அவர்கள் நன்குவளர உதவுவதாக நம்பப்படுகிறது.

கணக்கெடுப்பின்போது சில சக்கிலியர்கள் தங்களைப் பகடியர், மாதாரி, ரணவீரன் எனப் பதிந்து கொண்டுள்ளனர்.

**சாக்கியர் - Chākkiyar**

அம்பலவாசிப் பிரிவினரான சாக்கியர் பற்றி 1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் பின்வரும் விவரங்கள் தரப்பட்டுள்ளன. இந்தப் பெயர் 'சிலாக்கிய வாக்குக்கார்' என்பதிலிருந்து (சொல் வன்மை மிக்கவர்) வந்ததாகப் பொதுவாகக் கருதப்படுகிறது. மலபார் சமுதாயத்தில் இவர்கள் பணியினைக் குறிப்பதாகும் இப்பெயர். 'ஜாதி நிர்ணய' நூலில் கூறியுள்ளபடி சாக்கியர் கலியுகத்தில் தோன்றிய ஒரு சாதியினராவர். உபநயனச்சடங்கினைச் செய்து கொண்ட பின் ஒருவனுடைய தாயாருடைய நடத்தைக் கேடு வெளிப்பட்டதால் அவன் சமுதாயத்தில் முதல் சாக்கியன் என்ற இந்த நிலையை அடைந்தான். உபநயனச் சடங்கு நடைபெறும் முன் அவளுடைய அந்தக் குறைபாடு வெளிப்படுமாயின் அவள் பிள்ளைகள் நம்பியார்களாகக் கருதப்படுவர். மலபார் சாக்கியரை ஒத்ததான பணியினை மேற்கொண்டுள்ள சூதரை மனு பிராமண மனைவிக்கும் சத்திரியக் கணவனுக்கும் பிறந்த பிரதிலோமனாக* வைத்துள்ளார். இவ்வகையில் பிறக்கும் பெண்கள் தங்கள் சொந்தச் சாதியில் மணம்புரிந்து கொள்கின்றனர். அல்லது நம்பூத்ரிகளோடு சம்பந்தம்,உறவு மேற்

---

* உயர்ந்த சாதிப் பெண்ணுக்கும் தாழ்ந்த சாதி ஆணுக்கும் இடையே நிகழும் மண உறவில் பிறப்பவன் பிரதிலோமன்.

கொள்கின்றனர். இப்பெண்கள் 'இல்லோட்டம்மாமார்' என அழைக்கப்படுகின்றனர். இவர்கள் அணியும் அணிகள், நம்பூதிரி களின் அணிகளை ஒத்தவையே. சாக்கியர்கள் நம்பியார் சாதியிலிருந்து ஒருத்தியைச் சம்பந்தம் செய்துகொண்டு மனைவி யாக வைத்துக் கொள்ளலாம். இவர்கள் தங்கள் சாதிக்குத் தாங்களே புரோகிதராகப் பணியாற்றுகின்றனர். வீட்டுக்குப் புண்யாகம் செய்யவும் சாவு, பிறப்புத் தீட்டுக்களைப் போக்கும் சடங்குகளை நடத்தவும் பிராமணர்களை அமர்த்துகின்றனர். காயத்ரியை இவர்கள் பத்துத் தடவை திரும்பத் திரும்பச் சொல்லலாம். சாக்கியர்களின் பரம்பரைத் தொழில் புராணக் கதைகளைப் பாடிச் சொல்வதுதான். பிராமணர் அல்லாதவர் களுக்கான சமய நூல்களுள் அவதாரங்களை விளக்கும் புராணங்கள் சிறந்தவையாகக் கருதப்படுகின்றன. முன் காலத்தில் பிராமணர்கள் வேதச் சடங்குகளின் நிகழ்ச்சிகளுக் கிடையேயான பிற்பகல் நேர ஓய்வினை இந்த அவதாரக் கதை களைக் கற்று எடுத்துச் சொல்லும் அளவிற்கு ஓய்வினைப் பெற் றுள்ள சாதியார்கள் வாயிலாக இந்த வரலாற்றினைக் கேட் பதில் கழித்தனர். நாராயண பட்ட பாதர் போன்ற எழுத் தாளர்கள் இதற்கெனவே புராணக் கதைகளைத் தழுவிய தனிப் பாடல்களை இயற்றினார்கள். தூத வாக்கியம், பாஞ்சாலி சுயம் வரம், சுபத்ராஹரணம், கவுந்தேயாஷ்டகம் ஆகியன பட்டாத்திரி பாட் எனச் சிறப்பிக்கப்படும் இவருடைய புகழ்பெற்ற நூல் களாகும். இவற்றோடுகூடப் போகசம்பு, மகாநாடகம் ஆகிய தரமான இலக்கியங்களும் சாக்கியர்களால் பயன்படுத்திக் கொள்ளப்பட்டன. சாக்கியர் கதை கூறும்போது விளக்கத்திற் கான எடுத்துக்காட்டாகப் பல கிளைக் கதைகளையும் வரலாறு களையும் இடையிடையே எடுத்துக் கூறுவர். கதை சொல் பவரின் சொல்லாற்றலும், நிகழ்ச்சிகளை நகைச்சுவை தோன்ற விவரிக்கும் பாங்கும் கேட்பவர்களை மெய்மறக்கச் செய்யும். சிறப்பான கோயில்கள் எல்லாவற்றிலும் திருவிழா நிகழ்ச்சி களில் - வடதிருவாங்கூர் பகுதியில் சிறப்பாக - சாக்கியர் கூத்து ஒரு நிகழ்ச்சியாக இடம்பெறும். கூத்தம்பலம் என வழங்கும் ஒரு தனிக் கட்டிடம் இதற்கெனவே கோயில்களில் உள்ளது. இதில் சாக்கியர் பழைய மரபுப்படி உடை அணிந்து, முக்காலி மேல்

அமர்ந்து, கேட்பவர்கள் பயனுறும்படியும் மகிழ்வுறும்படியும் கதை சொல்வார். தங்கச்சரிகைக் கரையோடு கூடிய பட்டுத் தலைப்பாகையினை அவர் அணிந்திருப்பார். வண்ணக்கரை களைக் கொண்ட, இத்தகையது என விளக்க இயலாதபடியான மடிப்புக்களோடு கூடிய சாக்கியருக்கான நீண்ட வேட்டியினை இடையினில் உடுத்தியவராக இருப்பார். சாக்கியரோடு இன்ன உறவு முறையினர் என்று முன்பே விளக்கப்பட்டுள்ள நம்பி யார், முழவு எனப்படும் சாடி வடிவிலான உலோகத்தாலான முரசுடன் சாக்கியரின் பின்னால் நிற்பார். சாக்கியர் கூத்தை நம்பியாரின்றி நடத்துதல் இயலாது. நம்பியார் கூத்தின் தொடக் கத்திலும், முடிவிலும், கதை சொல்லும் சாக்கியர் வடமொழிச் சுலோகத்தைச் சொல்லி நடுவில் நிறுத்தும்போதும், சொல்லி முடிக்கும்போதும் தன் முழவினை முழக்குவார். நம்பியார் சாதியைச் சேர்ந்த நங்கையார் என்ற பெண்ணும் சாக்கியக் கூத்துக்கு இன்றியமையாத உறுப்பினரே. இவள் சாக்கியருக்கு முன்புறம் கதையினிடையே எப்போதாவது ஒலிக்கப்படும் தாளத்துடன் அமர்ந்திருப்பாள். பரபரப்பானவர்களாகக் கதை கேட்போர் மகிழ்ச்சியுடன் நிறைந்திருக்கும் அந்த அரங்கில், ஒருவர் மட்டுமே சிலை போல எத்தகைய உணர்ச் சியையும் வெளிப்படுத்தாமல் அமர்ந்துள்ளார் என்பது மிகச் சுவையானதும் குறிப்பிடத்தக்கதும் ஆகும். அவ்வாறு அமர்ந்திருக்கும் நங்கையார் சிறிதே புன்முறுவல் காட்டினா லும் கூத்து உடனே நிறுத்தப்பட்டுவிட வேண்டும். இதனால் சில கோயில்களில் கூத்து நடத்துவது என்பது பழங்கதையாகப் போய்விட்ட ஒன்றாகிவிட்டது. சாக்கியர் அடிக்கடி கதை கேட் பவர்களுள் ஒருவரைத் தான் கதை கூறும் பகுதிக்குரிய பாத்திர மாகப் பாவனை செய்து கூறி அவர்களை ஏமாற்றப் பார்ப் பார். அவர் அவ்வாறு சொல்லுவது அதனைக் கேட்பவர் மனத்தை நோகச் செய்யாத வகையில் நயம்படச் சொல்லுவதாக அமையும். கதையின் சுவையில் மூழ்கி இருக்கும் பார்வையாளரை வெறிக்கப்பார்த்து நேருக்கு நேரே இக்கட்டான கேள்விகளைச் சாக்கியர் கேட்பார். அவ்வாறு கதைப் பாத்திரமாகப் பாவிக்கப் பட்டவரைப் பார்த்துச் சாக்கியர் கேள்வி கேட்கும்போது மௌனம் மேற்கொண்டு பதிலேதும் கூறாது அமைதியாக

இருத்தலுக்கு மிகுந்த முயற்சி வேண்டும் என்பது உண்மையே. எனினும் இவ்வாறு சாக்கியர் பார்வையாளர் ஒருவரைப் பார்த்துக் கேட்கும் நேரடியான கேள்விக்கு அவர் பதில் சொல்ல முற்படுவாராயின் நிகழ்ச்சி உடனே நிறுத்தப்பட வேண்டும் என்பது சாக்கியக் கூத்தின் மரபுவழிப்பட்ட விதியாகும். சாக்கியர் ஒருவரின் இயல்பான மெருகேறிய நடிப்புக் காரணமாக அச்சாக்கியர் உயிரிழக்க வேண்டிய அவல நிகழ்ச்சியொன்றும் நிகழ்ந்துள்ளது. மகாபாரதத்தின் ஒரு பகுதியினை யாரும் நடிப்பு எனக் கூற இயலாதபடி சாக்கியர் நடித்துக் காட்டிக் கதை சொல்லிக் கொண்டிருந்தார். நெஞ்சில் கொஞ்சமும் கருணை இல்லாதவனாகத் துரியோதனன் எவ்வாறு ஒரு ஊசி முனை அளவு கூடப் பூமியை வனவாசம் மேற்கொண்டு திரும்பிய பாண்டவருக்குத் தரமுடியாது எனக் கூறினான் என்ற கதைப்பகுதியே அவர் நடித்துக் காட்டிக் கொண்டிருந்த பகுதியாகும். பாண்டவர்களுக்கு எவ்வகையிலேனும் உதவ விரும்பிய அவர்களின் நண்பனான பார்வையாளர்களில் ஒருவன் அப்போது ஆத்திரத்தோடு தன் இருக்கையைவிட்டு எழுந்து சாக்கியரை அடித்து வீழ்த்திவிட்டான். இந்நிகழ்ச்சி தனியார் ஒருவர் வீட்டில் சாக்கியக் கூத்து நிகழ்ந்தபோது நடந்ததாக நம்பப்படுகிறது. இதன்பின் சாக்கியர் கூத்து கோயில்களைத் தவிர வேறெங்கும் நிகழக் கூடாது என்ற விதி ஏற்பட்டது.

"சாக்கியர்கள் அல்லது சிலாக்கிய வாக்குகார் மக்கள் தாயத்தைப் பின்பற்றும் பூணூல் அணிகின்ற சாதியார் கூடா ஒழுக்கத்தில் ஈடுபட்ட குற்றத்திற்கு ஆட்பட்ட நம்பூதிரிப் பெண்ணுக்குப் பிறந்தவர்களிடையேயிருந்து இவர்கள் தேர்வு செய்யப்படுகிறார்கள். அந்தப் பெண்களின் மீது இக்குற்றம் சுமத்தப்படும் காலத்திற்கு முன்பு பிறந்த பிள்ளைகளான இவர்கள் அச்சமயம் பூணூல் அணிவிக்கப்பட்டிருக்க வேண்டும். அவ்வாறு தங்கள் தாயார் மீது கூடா ஒழுக்கக் குற்றம் சாட்டப்படும் நாளில் பூணூல் அணிவிக்கப்படாமல் இருக்கும் சிறுவர்கள் சாக்கியர் நம்பியார் என்ற பிரிவினைச் சேர்ந்தவர்களாக, மருமக்கள் தாய முறையைப் பின்பற்றும் பூணூல் அணியாத சாதியாராகக் கருதப்படுவர். அவ்வாறு குற்றத்திற்கு ஆட்

பட்டவனுக்குப் பிறந்த பெண்கள் சாக்கியர் பிரிவையோ, சாக்கிய நம்பியர் பிரிவையோ சேர்ந்து கொள்ளலாம். சாக்கியர் நங்கையரை மணந்து கொள்ளலாம். ஆனால் சாக்கிய நம்பியார் இல்லோட்டம் மாமார்களை மணக்க முடியாது." என மலபார் விவரக் குறிப்பில் குறிக்கப்பட்டுள்ளது.

**சாலியன் – Chāliyan**

மலையாளத்தைச் சேர்ந்த பருத்தித் துணி நெய்யும் சாதியாரான சாலியரைப் பற்றித் திரு பிரான்சிஸ் 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் பின்வருமாறு கூறுகின்றார்:—"உடை, பழக்க வழக்கம் ஆகியவற்றில் இவர்கள் மலபாரைச் சேர்ந்த கைவினைஞர் சாதிகளை ஒத்தவர்களாகவே உள்ளனர். எனினும் இவர்கள் பட்டர் பிராமணர்களைப் போலத் தனித்தெருக்களிலே தங்கி வாழ்வது, கிழக்குக் கடற்கரைப் பகுதியிலிருந்து இவர்கள் அண்மைக் காலத்தில் வந்து குடியேறியவர்கள் ஆதல் வேண்டும் எனக் கருத இடம் தருகின்றது. பொதுவான் எனப்படும் தங்கள் சாதிக்குரிய தனி அம்பட்டர்களை இவர்கள் பெற்றுள்ளனர். அவர்களே இவர்களுக்குப் புரோகிதர்களாகவும் உள்ளனர். கிழக்குக் கடற்கரையைச் சார்ந்த சாலிய நெசவாளர்களைப் போல இவர்கள் பூணூல் அணிவதில்லை. மூதாதையரை வழிபடும் பழக்கம் இவர்களிடம் இருப்பினும் அதற்காக இவர்கள் பிராமணர்களைப் புரோகிதர்களாக அமர்த்துவதில்லை. மலபார் சாதியாருள் இவர்களிடையே மட்டும் வலங்கை, இடங்கைப் பிரிவுகளும், அது தொடர்பான சச்சரவுகளும் காணப்படுகின்றன. இச்சாதியில் இரு பிரிவுகளும் காணப்படினும் இடங்கைப் பிரிவின்ரே உயர்ந்தவராக மதிக்கப்படுகின்றனர். எனவே இச்சாதியார் கிழக்குக் கடற்கரையில் இப்பிரிவுகள் தோன்றிய பின் கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டிற்குப் பின் மலபாரில் வந்து குடியேறியவர்கள் எனக் கருத இடமுள்ளது. இவர்களுள் சிலர் மருமக்கள் தாய உரிமை முறையையும், மற்றவர்கள் மக்கள் தாய உரிமை முறையையும் கடைப்பிடிக்கின்றார்கள். இது மருமக்கள் தாயத்தைக் கடைப்பிடிப்பவர்கள் மக்கள் தாயத்தைக் கடைப்பிடிப்பவர்களுக்கு முன்னதாகவே இப்பகுதியில் வந்து

குடியேறியவர்களாதல் வேண்டும் எனத் துணிய ஏதுவாகின்றது."

சாலியர்கள் இவ்வாறு அழைக்கப்படுவதற்குக் காரணம், இவர்கள் மேற்குக் கடற்கரை சார்ந்த பிற சாதியாரைப் போலன்றித் தெருக்களில் வாழ்வதே ஆகும். தெருவன் என்பதும் இச்சாதிக்குரிய மற்றுமொரு பெயராக வழங்கப்படுகின்றது. வலங்கைப் பிரிவினர் கணேசரையும், இடங்கைப் பிரிவினர் பகவதியையும் வழிபடுவதாகக் கூறப்படுகிறது.

மலபார் மாவட்ட விவரக் குறிப்பில் சாலியர்களைப் பற்றிப் பின்வரும் விவரம் தரப்பட்டுள்ளது:- "இவர்கள் கிழக்குக் கடற்கரைப் பக்கத்திலிருந்து வந்து குடியேறிய சாதியார் என்பதில் ஐயத்திற்கு இடமில்லை. முறையாக அமைக்கப்பட்ட தெருக்களில் இவர்கள் வாழ்ந்து வருவது இதனை வற்புறுத்தும் ஆதாரமாக உள்ளது. வழக்கு வரலாறும் இவர்கள் கிழக்குப் பகுதியிலிருந்து வந்தவர்கள் என்பதாகவே வழங்குகின்றது. இவர்கள் முதலில் உயர்ந்த சாதியாராக இருந்தவர்கள் எனவும், கணபதி வழிபாட்டைப் புகுத்த முனைந்த 'சாமோரின்' அரசர் ஒருவரால், கணபதி வழிபாட்டில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்த இவர்கள், மலபாருக்கு வரவழைக்கப்பட்டார்கள் எனவும் கூறப்படுகிறது. புதியவர்களாக வந்து சேர்ந்த இவர்களை உபசரிக்கும் பொறுப்பு மாங்காட்டு அச்சனிடம் விடப்பட்டிருந்தது. இவர்களுக்கு அவர் வழங்கிவந்த உணவினைப் பற்றி இவர்கள் ஏதாவது குற்றங்குறை கூறி வந்தனர். அதனால் இவர்கள் அனைவரையும் ஒருசேர மட்டம் தட்டத் தந்திரமாக இவர்கள் அறியாதபடி இவர்கள் உணவில் மீனினைக் கலந்து அதனை உண்ணச் செய்து இவர்களைத் தாழ்ந்த சாதியாராக மாங்காட்டு அச்சன் ஆக்கிவிட்டாரென ஒரு வழக்கு வழங்கி வருகின்றது. கிழக்குக் கடற்கரைப் பகுதியில் வாழும் இவர்களையொத்த நெசவாளர்களைப் போல இவர்கள் பூணூல் அணிந்து கொள்வதில்லை. ஆனால் இவர்களுக்குச் சடங்குகளை நடத்தி வைக்கும் இவர்கள் சாதியினைச் சேர்ந்த புரோகிதர்கள் சிலவழிபாடுகளை நடத்தும்போது பிராமணர்களைப் போல இடது தோளில் பூணூல் அணியாமல் வலது தோளில் பூணூல் அணிந்து

கொள்கின்றனர். சில வட்டாரங்களில் பூணூலுக்குப் பதிலாக ஒரு சிவப்புத் துண்டையோ தோல் பட்டிகையையோ அணிந்து கொள்ளும் பழக்கம் உள்ளது. கிழக்குக் கடற்கரைப் பக்கத்தில் பரவலாகக் காணப்படும் இடங்கை, வலங்கைப் பிரிவினை மலபாரில் பெற்று விளங்கும் ஒரே சாதியார் இவர்கள் தான் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். எண்ணிக்கையில் மிகச் சிறுபான்மையரான இடங்கைப் பிரிவினரைத் தொட்ட அளவிலே வலங்கைப் பிரிவினர் தாங்கள் தீட்டுக்குள்ளானவர் களாகக் கருதும் அளவிற்குத் தங்களிடையே இவர்கள் வேறு பாடு பாராட்டுகின்றனர். பூத ஆட்டத்தில் இவர்கள் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள். கோமரங்கள் எனப்படும் இவர்கள் சாதியைச் சேர்ந்த சிலரே பகவதி, வேட்டைக்கொரு மகன், குளிகன் போன்ற தெய்வங்களினைச் சிறப்பிக்க இந்த ஆட்டச் சடங்கினை ஆடுகின்றனர். சில வட்டாரங்களில் மக்கள் தாய உரிமை முறையையும், வேறு சில வட்டாரங்களில் மருமக்கள் தாய உரிமை முறையையும் இவர்கள் பின்பற்றுகின்றனர். பத்து நாள் தீட்டினை மேற்கொள்ளும் இவர்களுடைய தீட்டினைப் போக்கும் சடங்கினை, இவர்கள் சாதியினுள்ளேயே சிறிது தாழ்த்தப்பட்டவனாகக் கருதப்படும் 'தெளிக்குன்னவன்' என் பவன் நடத்தி வைக்கிறான்.''

இச்சாதித் தொடர்பான எல்லா விவகாரங்களையும் ஊராளன் என்னும் சாதித் தலைவன் தீர்த்துவைக்கிறான். சாதி அம்பட்டனான 'பொதுவன்' என அழைக்கப்படுபவனே சாதிச் செய்திகளை அறிவிக்கும் பணியினை மேற்கொள்கின் றான். சாதிப் பஞ்சாயத்துக் கூட்டம் ஊர்க் கோயிலில் நடை பெறும். குற்றம் செய்தவர்களிடமிருந்து வசூலிக்கப்படும் தண்டத்தொகை அவ்விடத்திலேயே கோயில் வழிபாட்டுக் கெனச் செலவழிக்கப்படும்.

சிறுமி ஒருத்தி பூப்பெய்தினால் ஊராளன் குடும்பத்தைச் சேர்ந்த வயதான பெண்கள் அவளைக் குளக்கரைக்கு அழைத்துப் போய் பலா இலைகளாலான தொன்னைகளில் நீரெடுத்து அவள் தலையில் ஊற்றிக் குளிப்பாட்டுவர். பின்னப்பட்ட பச்சைத் தென்னந் தடுக்காலான பாயில் அவளை ஓர் அறையில்

தனியே அமரச் செய்வர். அப்பாயினைச் சுற்றிப் பச்சரிசியும் நெல்லும் பரப்பப்படும். தென்னம்பாளையும தேங்காயும் வைக் கப்பட்ட ஒரு பாத்திரம் அவள் அருகே வைக்கப்படும். மூன்றாம் நாள் மாலை பெருவண்ணான் 'மாத்து' எனப்படும் துவைத்த துணிகளைக் கொண்டுவருவான். அவனுக்குக் கொஞ்சம் அரிசி யும் நெல்லும் வழங்குவர். அவன் ஓர் இலையில் அதனைச் சுருட்டிக் கட்டியபின் பூசை செய்வான். அதன்பின் மனையின் மேலிருக்கும் 'மாத்து' ஆடைகளை, அவன் தன் தலைமேல் வைத்துக்கொள்வான். சில பாடல்களைத்திரும்பச் சொல்லியபின் அவன் தன் தலைச் சுமையைத் தரையில் வைப்பான். சிறுமியின் உறவினரான பெண்கள் சிலர் ஏற்றிய விளக்கு, ஒரு குடத்தில் தண்ணீர், ஒரு படி அரிசி ஆகியவற்றை ஏந்தியபடி அம்மனை யினை மும்முறை சுற்றிவருவர். மறுநாள் சிறுமியைக் குளிக்கச் செய்வர். அதுவரை அவள் இருந்த அறையில் வைக்கப்பட்டிருந்த பொருள்கள் ஆற்றிலோ குளத்திலோ விடப்படும்.

மலபாரைச் சேர்ந்த வேறுபல சாதியாரைப் போலவே சாலியரும் தாலிகட்டுச் சடங்கினைச் செய்கின்றனர். இச்சடங் கினைச் செய்துகொள்ள இருக்கும் ஓர் ஊரினைச் சார்ந்த சிறுமிகள் அனைவரும் பல ஆண்டுகளுக்கு ஒருமுறை ஊராளன் ஒருவன் இல்லத்திற்கு அழைத்து வரப்படுகின்றனர். அங்குப் பந்தல் இடப்பட்டிருக்கும். அதன் கீழ் பலா மரத்தால் செய்யப் பட்ட மணை, ஏற்றப்பட்ட விளக்கு, வெற்றிலை பாக்கு, ஒரு படி அரிசி முதலியன வைக்கப்படும். சடங்கினைச் செய்து கொள்ளும் சிறுமி 'சந்துக்கோல்' எனப்படும் போலி அம் பினை வலது கையில் தாங்கியவளாக மணையில் அமர்வாள். இச் சடங்கினை நடத்தக் கட்டணமாக ஒரு பணத்தையும் மூன்று கவுளி வெற்றிலையையும் பெறுகின்ற பொதுவன், ஊராளன் குடும்பத்தைச் சேர்ந்த ஓர் ஆணிடம் தாலியினைத் தர, அவன் அதனை சிறுமியின் கழுத்தில் அணிவிப்பான்.

மணநாளுக்கு முந்திய நாள் மணமகன் தன் குடும்பத்தைச் சேர்ந்த ஆடவர்களுடன் மணமகள் இல்லத்திற்கு வந்து சேர் வான். அங்கு விருந்து நடைபெறும். மறுநாள் மணமகளைக் குளிக்கச் செய்து தரையில் வைக்கப்பட்டிருக்கும் ஏற்றிய விளக்

கருகே நிறுத்துவர். மணமகளின் தந்தையோ சிற்றப்பாவோ மணமகள் கரத்தில் தங்கக்காசினை வைப்பான். அதன்பின் மறுபடியும் விருந்து நடைபெறும்.

ஒருத்தி கருக்கொண்ட ஏழாம் மாதம் புளி குடி எனப் படும் சடங்கு நிகழ்த்துவர். பெண்ணின் உடன்பிறந்தவன் ஒரு புளியங்கொத்தினைக் கொண்டுவருவான். அதிலுள்ள இலை களைப் பறித்தபின் அதனை வீட்டுப் புறக்கடையில் நடுவான். இலைகளிலிருந்து சாறெடுத்து அதனை ஏழு இளநீர் களின் தண்ணீரோடு கலப்பர். இக் கலவையில் கொஞ் சத்தைக் கருவுற்ற பெண்ணின் வயதான பெண் உறவினர்கள் அவளுக்குப் பருகத் தருவர். இச்சடங்கு தொடர்ந்து மூன்று நாள்கள் திரும்பத் திரும்ப நிகழ்த்தப் பெறும். குழந்தை பிறந்த தற்கான தீட்டினை ஒன்பதாம் நாளன்று நாசுவத்தி குழந்தை பெற்றவள் மீது தண்ணீர் தெளித்துப் போக்குவாள்.

இவர்கள் இறந்தவர்களைப் புதைக்கின்றனர். இறந்தவனின் மகன் ஒரு பானையில் தண்ணீரைப் புதைகுழிக்குக் கொண்டு சென்று அதனை மும்முறை சுற்றி வருவான். நாவிதன் அதன் பின் பானையில் ஒரு துளையிட அப்பானை பின்னர் புதை குழியின் தலைப் பக்கம் வீசி எறியப்படும். பிணத்தைப் போர்த்திய ஆடையின் ஒரு பகுதியை நாவிதன் கிழித்துக் கொள் வான். பத்தாம் நாள் நாவிதனும், இறந்தவர் மகனும் இத்துணி யினை ஓர் ஆற்றிலோ குளத்திலோ கொண்டு விடுவர். புதை குழியின் மீது மூன்று கற்கள் வைக்கப்படும்.

சாலியன் என்ற பெயர் நாயர்களிடையே தொழில் தொடர் பான பட்டமாகவும் உட்பிரிவின் பெயராகவும் வழங்குகின்றது. சாலியன்னாய என்பது பண்டர்கள் புறமணக்கட்டுப்பாடுடைய குலம் ஒன்றின் பெயருமாகும். 1901 சென்னை மாநிலக் கணக் கெடுப்பில் சாலியன் என்பது வாணியர் சாதியின் உட்பிரி வாகக் கொடுக்கப்பட்டுள்ளது. சாலியர்கள் சிலர் ஊர்ஊராகச் சென்று எண்ணெய் விற்கும் தொழிலையும் செய்கின்றனர்.

**சள்ளா - Challa**

சள்ளா என்பது மீந்த எச்சத்தைத் தின்பவர் எனப் பொருள்படும். இது ஏனாதியரின் ஓர் உட்பிரிவாக உள்ளது. மோர் எனப் பொருள்படும்போது இது தேவாங்கர்களின் புற மணக்கட்டுப்பாடுடைய குலம் ஒன்றின் பெயராகும். சள்ளக் குடி என்பது பழைய அல்லது ஆறிய உணவினை உண்பவர் எனப் பொருள் தரும். இது காபுகளின் புறமணக்கட்டுப் பாடுடைய குலம் ஒன்றின் பெயராகும்.

**சமர் - Chamar**

தோல் பதனிடுவதும், தோல் தொழில் செய்வதுமான வங்காளிகளான இச்சாதியார் முந்நூறு பேர் வரை 1901 கணக்கெடுப்பில் பதியப்பட்டுள்ளனர். இவர்களோடு ஒத்த சமுரர் என்ற தோல் தொழில் புரியும் சாதியார் மத்திய மாநிலங்களில் காணப்படுகின்றனர்.

**சண்டாளர் - Chandāla**

1901 கணக்கெடுப்பில் ஆயிரத்திற்கு மேற்பட்டவர்கள் தங்களைச் சண்டாளரெனப்பதிந்துள்ளனர். இச்சொல், தாழ்ந்த சாதியாரைக்கூடத் தீட்டுப் படுத்துபவன் என்ற பொருளில் ஒரு சாதியாரைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. "இது பிராமணர்களின் சமுதாயச் சட்டங்களைச் செய்தவர்களின் சகிப்புத்தன்மை இன்மையை விளக்குவதற்கான எடுத்துக் காட்டாக விளங்குகின்றது. சாதிகள் எல்லாவற்றிலும் தாழ்ந்த சாதியாகச் சண்டாளன் என ஒரு சூத்திர ஆணுக்கும் ஒரு பிரா மணப் பெண்ணுக்கும் பிறந்தவனை வகுத்து, அதே சமயம் ஒரு பிராமண ஆணுக்கும் சூத்திரப் பெண்ணுக்கும் பிறந்தவனைச் சாதிக் கலப்பின் கூட்டுறவால் பிறந்தவர்களுள் உயர்ந்த சாதிக் காரனாக வகுத்துள்ளது. அவர்களுடைய இந்த மனப்பான்மை யைத் தெளிவுறுத்தும்." எனச் சர்ஜன் மேஜர் டபிள்யூ. ஆர். கார்னிஷ் எழுதியுள்ளார்.* "சண்டாளர், ஸ்வபகர் ஆகியோர்

* 1871 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை. (Madras Census Report, 1871.)

குடியிருப்புக்கள் நகருக்கு வெளியே இருக்கவேண்டும். அவர்கள் முழுமையாக உள்ள பாத்திரங்களைப் பயன்படுத்தக்கூடாது. நாய்களும், கழுதைகளுமே அவர்களுடைய செல்வம். நோயாளிகளின் மேலாடையே அவர்களுக்கு உடை. உடைந்த பானைகளே அவர்கள் உண்ணும் கலம். துருப்பிடித்த இரும்பே அவர்கள் அணியும் நகை. அவர்கள் தொடர்ந்து இடம் விட்டு இடம் பெயர்ந்தபடி இருத்தல் வேண்டும். சமுதாய, சமயப் பொறுப்பினை உணர்ந்த எந்த மனிதனும் அவர்களோடு எத்தகைய உறவையும் கொள்ளுதல் கூடாது. அவர்களுக்கு உணவு இடுபவர்கள் மண்பாண்ட உடைசல்களிலிருந்து இடுதல் வேண்டுமே அல்லாமல் கையினால் இடுதல் கூடாது" என மனு விதித்துள்ளார்.

**சந்திரர் - Chandra**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய குலம் ஒன்றின் பெயர். சந்திரவம்சத்தார் என்ற பெயரைத் தங்களைச் சத்திரியர் எனவும், மகாபாரதத்திற்குரிய மன்னர்களின் சந்திர வம்சத்தில் வந்தவர் எனவும் கூறிக்கொள்ளும் சில ராசுக்கள் சூடிக்கொள்கின்றனர்.

**சானிபொயினர் - Chanipoyina (those who are dead)**

ஒருங்குண்ட காபுகளின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம். இறந்தவர்கள் எனப் பொருள்படுவது.

**சாப்பாய் - Chāpa (mat)**

போயர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம்.

**சப்படி - Chappadi (insipid)**

ஜேகிகளின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம். (உப்புச் சப்பற்ற என்ற பொருள் தருவது)

**சப்பரம் – Chapparam (a pandal or booth)**

தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம்.

**சப்பர்பந்தர் - Chapparband**

*பம்பாய் மாநிலத்தைச் சேர்ந்த காவல் துறையினரின் கண் காணிப்பில் உள்ளவரான கள்ளநாணயம் தயாரிக்கும் கூட்டத் தினரே சப்பர்பந்தர். 1904–ஆம் ஆண்டு காவல் துறை அறிக்கை கஞ்சம் பகுதியில் இக்கள்ள நாணயக் குழுக்கள் சில கண்டு பிடிக்கப்பட்டுத் தண்டிக்கப்பட்ட நல்ல பணியைப் பற்றிக் கூறுகிறது.*

இவர்களைப் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்குப்* பம்பாய்க் காவல் துறையைச் சேர்ந்த திரு எச். என். அலெக் சாந்தர் அவர்களுக்கு நான் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன். இவர்களின் இப்பெயர் பதிவு அல்லது முத்திரை எனப் பொருள் படும் சாப்பா என்ற இவர்கள் வழக்கின் தொடர்பானதாகும். “இவர்கள் தங்களைப் பதூஸ் எனக் கூறிக் கொள்கின்றனர். இந்துஸ்தானத்துப் போக்கிரிகளும், கொள்ளைக்காரர்களும், இவர்களைக் கள்ள நாணயக்காரர்கள் என்ற பொருளில் ‘கோல் சுரையர்’ எனக் கூறுவர். தங்கள் சொந்த ஊர்களில் தங்கி வாழும்போது இவர்கள் பயிரிடுதல், கோழி வளர்ப்பு, ஆடு வளர்ப்பு ஆகிய தொழில்களைச் செய்வர். பெண்கள் இணைப்பு மெத்தைகள் தயாரிப்பர். ஆண்கள் அவற்றைத் தங்கள் சுற்றுப் பயணத்தின்போது விற்பனை செய்வர். எனினும் இவர்கள் உண்மையில் கள்ள நாணயம் தயாரித்து அதனைச் செலவாணி யாக்குவதையே தொழிலாகக் கொண்டுள்ளனர். முகமதியருக்கு உரிய தங்கள் ஆடைகளைக் களைந்து மறைவாக வைத்துவிட்டு, முட்டார் பிரிவினைச் சேர்ந்த பக்கீர்களின் ஆடைகளையும், வேடத்தையும் தாங்கியே கள்ள நாணயத் தயாரிப்பில் ஈடுபடுவர். முட்டார்கள் இவர்களுடைய ‘பீர்’. இவர்கள் அப்போது பெண் களை உடன் அழைத்துக் கொள்ளாமல் ஊர்ஊராகத் திரிவர். சப்பர்பந்தர் மராத்தி மொழி பேசினாலும் தங்களுக்கெனத் தனியே இழிவழக்கினதான ஒரு மொழியையும் பெற்றுள்ளனர். இப்பிரிவைச்சேர்ந்த மற்ற எல்லோரையும் போலவே இவர்களும்

---

* *1902 சென்னைக் காவல் துறை விவர அறிக்கை.* (Madras Police Gazette, 1902.)

பல மூட நம்பிக்கைகளைக் கொண்டிருப்பதால், நல்ல சகுனம் வாய்த்தால் அன்றித் தங்கள் தொழிலை மேற்கொண்டு வெளியே புறப்படமாட்டார்கள். கள்ள நாணயம் எவ்வாறு தயாரிக்கப் படுகின்றது என்பது பற்றிப் பின்வருமாறு விளக்கம் தரப் பட்டுள்ளது. மாதிரி அச்சு ஒன்றினை இவர்கள் ஒரு முறைக்கு மேல் பயன்படுத்துவதில்லை. தயாரிக்கப்படும் ஒவ்வொரு ரூபாய் அல்லது நாணயத்திற்கும் புதிய மாதிரி அச்சு ஒன்று தேவைப்படும். அது நீர்க்கப்படாத சுண்ணாம்பையும், நன்கு பொடி செய்யப்பட்டுச் சலிக்கப்பட்ட 'செத்தூ' எனப்படும் ஒருவகை மஞ்சள் மண்ணையும் கலந்து பொறுமையாகத் தண்ணீர் விட்டுக் கெட்டியான மாவுப் பக்குவத்தில் நெடுநேரம் பிசைந்தபின் கள்ள நாணயம் தயாரிக்கப்பட வேண்டிய காசுகளில் ஒன்றினை அதில் வைத்து அழுத்திப் பின் முழுதும் மூடி வழித்து எடுத்துவிட வேண்டும். அதன்பின் அதனை நெருப்புத் தணலின் மீது வைப்பர். நன்றாக இறுகியபின் அதனை ஒரு கத்தியால் பக்குவமாக அறுத்துப் பிளந்து உள்ளே இருக்கும் காசினை வெளியே எடுப்பர். மேல் கீழ் மண்ணில் இப்பொழுது நாணயத்தின் அச்சுத் தெளிவாகப் பதிந்திருக்கும். பின் அதனை ஒருவகைப் பசையால் மீண்டும் மூடி ஒட்டுவர். அதன் ஒரு பக்கத்தில் சிறு துளை இடப்படும். அதன் வழியே உருக்கிய தகரக் குழம்பை வார்ப்பர். இவ்வாறு ஒரு கள்ளக் காசு உருவானதும் அதனை அழுக்கேற்றிப் புழக்கத்தில் இருக்கும் பழைய காசு போலத் தோன்றச் செய்வர். தகரத்தைக் கடை வீதியில் எல்லா இடங்களிலும் வாங்கலாம். குழு பயணம் செய்யும் போது பாதை ஓரத்திலேயே தங்கிக் கள்ளக் காசு தயாரிக்கும் தங்கள் கள்ள நாணயத்தை மாற்றச் சப்பர்பந்தர் பல வழிகளைக் கையாளுகின்றனர். அவர்கள் கடைகளில் முதலில் நல்ல ரூபாய்களைக் காட்டிப் பொருள்களைக் கேட்பர். கடை சியில் பணம் கொடுக்கும்போது கள்ள நாணயத்தைக் கொடுப் பர். கள்ள ரூபாயைக் கொடுத்துச் செப்புக் காசுகளைச் சில்லரை யாகப் பெற முயல்வர். நல்ல ரூபாய்களையும் நோட்டுகளையும் இதற்கு மாற்றாகப் பெறுவர். பெரும்பாலும் பெண்களையும் அப்பாவி ஆள்களையுமே தங்கள் ஏமாற்று வேலைக்கு உள்ளாக் குவர், நல்ல காசினைக் காட்டிய பின் கள்ளக் காசினை

மாற்றித் தருவது அவர்கள் கைகளின் லாவகத்தால் செய்யப் படுவதாகும். கள்ள நாணயத்தை அவர்கள் அணிந்திருக்கும் 'லங்கோட்டின்' மடிப்பின் இடையிலும், உடலின் மறைவான உறுப்புக்களின் இடையிலும் மறைத்து வைத்திருப்பார்கள்."

குற்றவியல் விளக்க ஆய்வு, மற்றும் சட்டச் சுருக்கம்* சப்பர்பந்தர்கள் பற்றி மேலும் பின்வரும் தகவல்களைத் தருகிறது:- "இவர்கள் சிறு குழுவாகவே பயணம் செய்வர். பெண்கள் அவர்களோடு ஒருபோதும் உடன் செல்வதில்லை. தங்கள் ஊரைவிட்டுப் புறப்படும் முன் குறி கேட்பர். ஊரை விட்டுப் புறப்படும்போது பக்கீர்கள் போல உடை அணிந்து கொள்வதில்லை. தங்கள் இருப்பிடத்திற்குத் தொலைவில் உள்ள ஓரிடத்தினை அடைந்து அங்கே மாதாரி பக்கீர்கள் போல வேடமிட்டுக் கொள்வர். அப்போதிருந்து தங்கள் பெயரோடு ஷா என்பதனையும் சேர்த்துக் கொள்வர். சாகிப் என்ற பட்டப் பெயரையும் இணைத்துக் கொள்வதோடு 'சவலர்'கள் பிச்சை கேட்கும்போது பாடும் பான்மையை ஒத்ததாகத் தங்கள் குரலை மாற்றிக் கொள்வர். அனைவரும் குழுத் தலைவனான 'காக்தா'வின் கட்டளைகளை மறுப்பேதும் கூறாமல் ஏற்று நிறைவேற்ற வேண்டும். அவனே குழுவின் பொருளாளன். கள்ள நாணயம் தயாரிப்பதற்கான கருவிகளையும், உலோகங் களையும் அவனே தன்னிடம் வைத்திருப்பான். தயாரிக்கப்பட்ட கள்ள நாணயங்களை அவன் தன்னிடம் பெரும்பாலும் வைத்துக் கொள்வதில்லை. கள்ள நாணயத்தைச் செலவாணி ஆக்கும் பொறுப்பு 'போந்தன்' உடையதாகும். இக்குழுவில் பெரும்பாலும் ஒரு சிறுவனும் இடம் பெற்றிருப்பான். அவன் 'ஹண்டிவால்' என அழைக்கப்படுவான். அவன் எடுபிடிக் கான சிற்றாளாக உதவுவதோடுகூடக் கள்ள நாணயம் தயாரிக்கும்போது கண்காணிப்பாளனாகவும் இவர்கள் தங்கி யுள்ள இடத்தைப் பாதுகாப்பான். இவர்கள் பொதுவாக நீர் நிலைகளைச் சார்ந்த மேடான இடங்களிலேயே தங்கள் இருப் பிடத்தை அமைத்துக் கொள்வர். ஆபத்து ஏற்படும்போது

---

* ஐ. எண். 4. 1908, வேலூர். (I-No. 4. 1908, Vellore.)

தங்கள் கள்ள நாணயத் தயாரிப்புக்கான கருவிகளையும், கள்ள நாணயங்களையும் அருகே உள்ள நீர்நிலையில் வீசிவிட அது அவர்களுக்கு வாய்ப்பாக இருக்கும். ஓரிடம் விட்டு மற்றோரிடத்திற்கு இருப்பை மாற்றிக் கொள்ளும்போது 'காக்தாவும்' சிறுவனும் தனித்து முதலில் பயணம் மேற்கொள்வர். 'காக்தா' பெரும்பாலும் ஒரு மட்டக் குதிரையில் பயணம் செய்வான். குழுவின் மற்ற உறுப்பினர்கள் தயாரித்து முடித்த கள்ள நாணயங்களைச் சுற்று வட்டாரத்தில் செலாவணி ஆக்குவதில் ஈடுபடுவர். பின்னர் முன்பே முடிவு செய்யப்பட்ட இடத்தில் தங்கள் தலைவனோடு சென்று சேர்ந்து கொள்வர். அந்த இடம் தொழிலுக்கு ஏற்றதாகத் தோன்றவில்லையானால் 'காக்தா' வேறொரு இடத்தைத் தேர்ந்தெடுப்பான். இந்தப் புதிய இடத்தைப் பின்னால் வரும் குழுவினர் கண்டு கொள்ளத் தான் செல்லும் பாதையில் அவன் உரிய அடையாளங்களை இட்டுச் செல்வான். இந்த அடையாளம், சுமார் அரை அடி உயரமும், அரை அடி நீள அகலமும் உள்ள சேற்றுக் குவியலை அமைத்து, அதன் மீது அவன் செல்லும் திசையினைக் காட்டும் அம்புக் குறியாக இருக்கும். சில நூறு கச தூரங்கள் இடைவெளிவிட்டு 'காக்தா' இவ்வாறுமூன்று அடையாளங்கள் அமைப்பான். ஒன்று அழிந்துபட்டாலும் எஞ்சியவை வழிகாட்டும் என்பதற்காக இவ்வாறு மூன்று அடையாளங்கள் இடுகின்றான். கள்ள நாணயத்திற்கான அச்சு முல்தானி அல்லது களிமண்ணால் உருவாக்கப்படுகிறது. கோபி சந்தனமும், பதாப்பும் கூட இதற்காகப் பயன்படுத்தப்படுவதுண்டு. களிமண்ணைப் பொடி செய்து, சலித்த பின் சிறிது தண்ணீரும், எண்ணெயும் விட்டு நன்கு பிசைவர். அச்சின் இரு பக்கங்களையும் பதிப்பதற்குரிய வடிவினைக் கையினால் தட்டித் தனித்தனியே உருவாக்கியபின் ஒரு நல்ல நாணயத்தை அவ்விரு பகுதிகளுக்கு இடையே பதித்து நாணயத்தின் இரு பக்க அச்சும் களிமண் அச்சின் இரு பகுதிகளிலும் விழும்படியாக மூடுவர். பின்னர் அதனைத் தற்காலிகமாக அமைக்கப்பட்ட சூளை அடுப்பில் வைத்துச் சுடுவர். உலோகம் உருக்கி ஊற்றுவதற்கான துளையும் விளிம்பு பக்கத்தில் இடப்படும். பின்னர் இரு பகுதிகளும் தனியே பிரிக்கப்பட்டு உள்ளே உள்ள நல்ல நாணயம் வெளியே எடுக்கப்படும்.

அதன்பின் அந்த அச்சில் உருக்கிய தகரத்தை ஊற்றி ஆறும்படி விடுவர். மற்றொரு முறைப்படி இவர்கள் தங்கள் பகுதியிலிருந்து கையோடு கொண்டுவரும் பதாப் களிமண்ணையே அச்சு அமைக்கச் சிறந்ததாகக் கருதிப் பயன்படுத்துவர். அது தீர்ந்து போய் விட்ட சமயங்களில் முல்தானி களிமண்ணைப் பயன்படுத்துவர். இருபக்க வட்டங்களும் பிசைந்த களிமண்ணால் உருவாக்கப் படும். இவ்வட்டங்களின் உட்புறங்களைத் தந்தால் எனப்படும் ஜவரிக் குச்சியால் நன்கு பளபளப்பேற்றுவர். ரூபாயில் கொஞ்சம் எண்ணெய் தடவி வட்டங்களுக்கு இடையே அதனை வைத்து இறுக மூடிப் பின்னர்த் தணலில் இட்டுச் சுடுவர். இந்த முறையில் பயன்படுத்தப்படும் உலோகக் கலவை ஈயமும், செம்பும் கலந்ததாக முன்னைய முறையினும் மாறுபட்டு அமையும். இரு முறைகளிலும் உலோகம் பதித்த அச்சினை மறுபடியும் பிரித்து எடுக்கக் கத்தியையோ கிளிஞ்சல் துண்டையோ பயன்படுத்துவர். சப்பர்பந்தர்கள் தாங்கள் ஏமாற்றுவதற்குரியவர்களைக் கவனமாகத் தேர்ந்தெடுப்பர். யார் ஏமாறக் கூடியவர், யாரிடம் தாங்கள் ஏமாற வேண்டிவரும் என ஆண், பெண் இருபாலாரையும் சுலபமாக இவர்கள் அடையாளம் கண்டு கொள்வர். தங்களைவிடப் புத்திக் கூர்மையுள்ளவர்களாகத் தோன்றுபவர்களை நெருங்கவே மாட்டார்கள். பெரும்பாலும் பெண்களிடமே இவர்கள் தங்கள் கைவரிசையைக் காட்டுவர். இவர்கள் கையாளும் வழிகளில் பெருவழக்கினதான ஒன்று 'பொந்தர்' பிச்சைக்காரன் வேடத்தில் தான் பிச்சை எடுத்த செப்புக் காசுகளைக் காட்டி, அதற்குப் பதிலாக வெள்ளி நாணயம் தரும்படியாகக் கேட்பதாகும். அவன் தன்னிடம் தரப்பட்ட வெள்ளி நாணயத்தை நோட்டம் விட்டபடி தலையைக் கவலை தரும் வகையில் ஆட்டித் தன்னிடம் தரப் பட்ட நாணயத்திற்குப் பதிலாக ஒரு கள்ள நாணயத்தை மாற்றித் தந்து, அந்த மாதிரி நாணயம் தங்கள் பகுதியில் வழக்கில் இல்லை எனக் கூறியபின் இதே ஏமாற்று வேலையை வேறொருவரிடம் காட்ட அங்கிருந்து நழுவி விடுவான். இவ்வாறு செயற்படும்போது அவர்கள் நாணயத்தினை மாறாட்டம் செய்யும் லாவகம் வியக்கத்தக்கதாக இருக்கும். அவன் நெடுங் காலம் 'ஹண்டிவால்'லாகப் பயிற்சி பெற்றதன் விளைவாக அது அவனுக்குக் கைவந்ததாகும்.''

சப்பர்பந்தர் பற்றி மேலும் சில விவரங்களைத் திரு பாப்பா ராவ் நாயுடு அண்மையில் வெளியிட்டுள்ளார்.† அதனின்றும் பின்வரும் தகவல்கள் திரட்டித் தரப்படுகின்றன. "சப்பர் பந்தர் என்ற இவர்களுடைய பெயருக்கு ஏற்ப இவர்கள் முதலில் கூரை வேயும் தொழிலை மேற்கொண்டிருந்தவர்கள் அல்லது குடிசை அமைப்பாளர்கள் எனவும் பொதுப்படக் கூறலாம். இவர்கள் பஞ்சாப்பைச் சேர்ந்தவர்களாயிருந்த ஷேக் முகமதியப் பிரிவினர். 1687-88-இல் முகமதியர்கள் கரு நாடகத்தின் மீது படையெடுத்தபோது படைவீரர்களுக்குக் குடிசை இடுவதற்காக இவர்கள் பெரும் எண்ணிக்கையில் படையோடு கூட வந்தனர். முகமதியப் படையோடு 1714-இல் பீஜாப்பூர், பேஷ்வாக்கள் கையில் வீழும்வரை அவுரங்காபாத், அகமத் நகர், ஸ்ரீரங்கப் பட்டணம் ஆகிய ஊர்கள் வரை இவர்கள் வந்துள்ளனர். அதன்பின் சப்பர்பந்தர் பேஷ்வாக் களிள் படையில் அதே பழைய பணியை மேற்கொள்ளும் பகுதியினராக அமைந்தனர். 1818-இல் ஆங்கிலேயர் ஆட்சி ஏற்படும்வரை அப்பணியில் தொடர்ந்து இருந்த இவர்களில் பெரும்பான்மையானவர்கள் அதன்பின் இவர்களின் அந்தப் பணி தேவைப்படாத காரணத்தால் வடக்கு நோக்கிச் சென்றனர். இங்கே தங்கிவிட்டவர்களின் ஒரு பகுதியினர் நிசாம் மாநிலத்திலும், மற்றொரு பகுதியினர் தலைக்கோட்டை மாவட்டத்திலும் தங்கிவிட்டனர். 1904-இல் ராயப்பூரில் காவல் துறைக் கண்காணிப்பாளர் முன்னிலையில் புத்திக் கூர்மையுள்ள சப்பர்பந்தன் ஒருவன் தந்த விவரங்களின்படி, இவர்கள் கள்ள நாணயம் தயாரிக்கும் இந்தக் கலையை முகமதியர் ஆட்சிக் காலத்தில் கற்றுக் கொண்டதைப் புலனாக்கும் வகையில், ஒரு வழக்கு வரலாறாக வழங்கி வருகின்றது என்பது தெரிகின்றது. 'சப்பர்பந்தர் முகமதியப் பேரரசின் காலத்தில் பிஜாப்பூரில் தங்கியிருந்தனர். அச்சமயம் பீர்பாய் பீர் மக்கான் என்ற பக்கிரி ஒருவர் அப்பகுதியில் வாழ்ந்து வந்தார். சப்பர்பந்தர்களில் ஒருவன் அவரை அணுகி, சப்பர்பந்தர்கள் ஏதாவது ஒரு தொழிலை மேற்கொள்ள வழிகாட்டும்படியாகத் தெய்வத்திடம்

† இந்தியக் குற்றப் பரம்பரைப் பழங்குடிகள். எண். 111, 1907. (Criminal Tribes of India, No. 111, 1907.)

தங்களுக்காக வேண்டும்படி கூறினான் அந்தப் பக்கிரி அவனிடம் ஒரு ரூபாயைத் தந்து, அவனுடைய வீட்டிற்கு விரைந்து திரும்பிப் பார்க்காமல் அதனைக் கொண்டு போகும் படி கூறினார். அவன் தன் வீட்டை நோக்கி ஓடும்போது, யாரோ ஒருவன் அவனை அழைக்க, அது யாரெனத் தெரிந்துகொள்ள அவன் திரும்பிப் பார்த்தான். அவன் தன் வீட்டை அடைந்து பார்த்தபோது தன்னிடமிருந்த ரூபாய் ஒரு கள்ள நாணயமாக இருக்கக் கண்டான். அவன் மீண்டும் பக்கிரியிடம் திரும்பி வந்து அந்த ரூபாய் கள்ள நாணயமாக உள்ளது எனக் குறைபட்டுக் கொண்டான். ஓடும் போது அவன் பின்னால் திரும்பிப் பார்த்ததற்காக மிகுந்த சினங்கொண்ட பக்கிரி, பின்னர் சப்பர்பந்தர் கள்ள நாணயம் தயாரித்தே வாழ்க்கை நடத்த வேண்டுமெனக் கூறி விட்டார். அப்போதிருந்து சப்பர்பந்தர் கள்ள நாணயத் தயாரிப்பாளர் களாக மாறி விட்டனர்'' என்பதே அக்கதை வழக்கு. ஞாயிற்றுக் கிழமை தோறும் இவர்கள் தங்களிடம் உள்ள கள்ள நாணயங் கள், அச்சுக்கள், மற்ற கருவிகள் ஆகியவற்றைத் தங்கள் முன் வைத்துப் பீர் மக்கானைத் தொழுகின்றனர். இவர் பீர் மாடர் எனவும் அழைக்கப்படுகின்றார். இவர்கள் ஒரு கோழியை அவருக்குப் பலியிட்டு அதன் கண்களையும் வால் இறகினையும் பிடுங்கிக் கருவேல், பீர், தால் மக்கான ஆகிய மூன்று மரங் களிலும் முட்களில் குத்தி வைப்பர். வழிபாடு முடிந்தபின் அவர்கள் அவற்றை மீண்டும் எடுத்து எந்த வழியாகப் பயணம் தொடங்க எண்ணியுள்ளனரோ அந்தத் திசையை நோக்கி விட்டெறிவர். சப்பர்பந்தர் தங்கள் ஆசனவாயில் பெருமளவில் ரூபாய் நாணயங்களைப் பதுக்கி வைப்பர். இத் தகைய தொடர்ந்த பழக்கம் காரணமாக ஆசனவாய் பத்தி லிருந்து இருபது வரையான ரூபாய் நாணயங்களைக் கொள்ளும் அளவிற்குக் குழியுடையதாகிவிடும். இதேபோல வாயில் நாக்கின் அடிப் பகுதியிலும் குழிகளை இவர்கள் பெற்றிருப்பர்.''

திரு எம். கென்னடி அவர்களால் பதியப்பட்டுள்ள ஒரு வழக்கில்,* ''ஒரு சப்பர்பந்தனைச் சந்தேகத்தின் பேரில் கைது

* பம்பாய் மாநில குற்ற வழக்குகள். (Criminal Classes in the Bombay Presidency.)

செய்து அவன் உடலைச் சோதனையிட்டபோது அவனுடைய ஆசனவாயிலுள்ள குழியில் ஏழு ரூபாய் மறைத்து வைக்கப் பட்டிருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. ஆசனவாயில் அத்தகைய குழி ஏற்பட நெடுங்காலம் அவன் அங்கு அவ்வாறு ரூபாயை மறைக்கும் பழக்கத்தை மேற்கொண்டிருக்க வேண்டும் என அரசு அறுவைச் சிகிச்சை மருத்துவர் கருத்துத் தெரிவித் துள்ளார்.'' இதே போன்ற ஒரு வழக்கு தென் கன்னட மாவட்ட நீதி மன்றத்தின் முன் சில ஆண்டுகளுக்கு முன் வந்தது.

1903 – ஆம் ஆண்டு காவல்துறை அறிக்கையில் தஞ்சாவூர் மாவட்டத்தில் நிகழ்ந்ததான பின்வரும் ஏமாற்று வேலை பதியப் பட்டுள்ளது. ''முகமதியர்களான ஒரு குழுவினர் தங்களுக்கு ரூபாய்த் தாள்களை இரட்டிப்பு ஆக்கும் வித்தை தெரியும் எனக் கூறிக் கொண்டனர். ஒரு ரூபாய்த் தாளினைச் சில வெள்ளைத் தாள்களுடன் இரு கண்ணாடிகளுக்கிடையே வைத்துக் கட்டி, அதனைத் துணியால் மூடி, நூலால் கட்டிப் பின் நெருப்புத் தணலின் மீது வைத்து வெப்பம் ஏற்றுவதுதான் அவர்கள் கையாளும் முறை. பின்னர் அக்கட்டைப் பிரித்துப் பார்க்கும்போது இரண்டு ஒரு ரூபாய் தாள்கள் இருக்கும். அதில் இரண்டாவதான ரூபாய்த்தாள் கட்டுப் பிரிக்கப்படும் போது கள்ளத்தனமாக நுழைக்கப்படுவதாகும். மதிப்புக் குறை வான ரூபாய்த் தாள்களின் இத்தகைய இரட்டிப்பு வெற்றி சில பணக்காரர்கள் உள்ளிட்ட பல வாடிக்கையாளர்கள் அவர் களை நாடி வரச் செய்தது. அவர்கள் விரித்த வலையில் நாளாக நாளாக அதிக மதிப்புடைய ரூபாய்த் தாள்கள் வந்து விழத் தொடங்கின. ஏமாற்றுக்காரர்கள் மதிப்பு அதிகம் உடைய ரூபாய்த்தாள்கள் இரட்டிப்பாக அதிக நாள்கள் பிடிக்கும் எனவும் கட்டினைப் பல நாள்களுக்குப் பிரிக்கக் கூடாது எனவும் அறிவித்தனர். கட்டினைப் பிரிப்பதற்குரிய நாள்நெருங்கும் போதுஅக்குழுவினர் அங்கிருந்து நழுவிவிட்டனர். கட்டுக்களைப் பின்னர் பிரித்துப் பார்த்தபோது அதனுள் எதிர்பார்த்தபடி ரூபாய்த் தாள்கள் எவையும் இல்லை. ஒரு செல்வந்தர் இவ்வாறு ரூ. 4,600 ஏமாந்து இழந்துள்ளார்.'' கள்ள நாணயத் தயாரிப்

பாளன் ஒருவனைக் குடல்கழுவதற்கு உட்படுத்தினால் மறைத்து வைக்கப்பட்ட பல மதிப்புடைய பொருட்கள் வெளிப்படக் காணலாம்.

**சபதேகாரர் - Chaptēgāra**

சப்தேகாரர் அல்லது செப்தேகாரர் பற்றித் தென் கன்னட மாவட்ட விவரக் குறிப்பில் திரு எச்.எ. ஸ்டுவர்ட் பின்வருமாறு எழுதியுள்ளார்:- "கொங்கணி பேசும் தச்சர்களான இவர்கள் கொங்கணத்திலிருந்து வந்தவர்களாதல் வேண்டும். சாதி விவகாரங்களைக் குரிக்காரன் எனப்படும் தலைவன் மேற் பார்க்கிறான். வசூலிக்கப்படும் தண்டத் தொகை சிருங்கேரி மடத்தில் சேர்ப்பிக்கப்படுகின்றது. பூணூல் அணியும் இவர்கள் கராடி பிராமணர்களைப் புரோகிதர்களாக அமர்த்திக் கொள் கின்றனர். குழந்தை மணத்தை நடத்தும் இவர்கள், கைம் பெண்கள் மறுமணத்தை அனுமதிப்பதில்லை. வசதி இருக்கு மாயின் இறந்தவர்களை எரிப்பர்; இல்லையேல் புதைப்பர். சைவர்களான இவர்கள் துர்க்கையையும் கணபதியையும் வழி படுகின்றனர். மது பருகுவதோடு புலாலும் உண்பர். நாயக், செனாய் முதலியன இவர்கள் தரிக்கும் பட்டப் பெயர்களாகும்." 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் சாரஸ்வட் பிராம ணர்கள் இவர்களோடு உண்பர் எனக் குறிக்கப்பட்டுள்ளது. சௌட்காரர் என்பது சப்தேகாரர் என்பதின் சிதைந்த வடி வாகும் எனப் பதியப்பட்டுள்ளது.

**சரமூர்த்தி - Charamūrti**

ஊர்ஊராகச் சமய போதனை செய்தபடி செல்லும் ஜங்க மங்களின் ஒரு பிரிவினர்.

**சாரோடி - Chārōdi**

தென் கன்னட மாவட்டக் கையேட்டில் சாரோடி பற்றிப் பின்வருமாறு விளக்கப் பட்டுள்ளது:- "கன்னடம் பேசும் தச்சர்களான இவர்கள் கொங்கணி சப்தேகார[illegible] யானவர்கள். இவ்விரு சாதியா[illegible] பழக்க வழக்கங்களில் [illegible] வேறுபாடு இல்லை. சாரோடிகள் சிவாலி மற்றும் கொங்

கணத்துப் பிராமணர்களைப் புரோகிதர்களாக அமர்த்துவதும், சப்தேகாரர் காரடி பிராமணர்களைப் புரோகிதர்களாக அமர்த்துவதுமே இவர்களிடையேயுள்ள மாறுபட்ட பழக்கம். நாயக் இவர்களின் பட்டப் பெயர். 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் மேஸ்தா என்பது கொங்கணி பேசும் சாரோடியரின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**சாட்ல - Chātla (winnow)**

மாதிகர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலப்பிரிவு. சாட்ல தோம்ப்டி மாதிகர்களின் ஓர் உட்பிரிவாகும். இவர்கள் மண நிகழ்ச்சியின்போது படையலினை முறத்தில் வைத்துப் படைப்பர். சாட்ல - முறம்.

**சட்ரி - Chatri**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் இது சத்திரியர் என்பதற்குச் சமமானது எனப் பதியப்பட்டுள்ளது. ஹொலேயர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய குலம் ஒன்றின் பெயராகவும் குடை என்ற பொருளிலும் வழங்குகின்றது.

**சதுரட்ச்சாரி - Charturākshari**

சாதானிகளின் ஓர் உட்பிரிவு. இவர்கள் ரா-மா-னு-ச என்ற நான்கு அட்சரத்தின் நற்றிறத்தினில் நம்பிக்கை கொண்டவர்கள்.

**சௌத்ரி - Chaudari**

சௌத்ரி என்ற இப்பெயர் ஹட்டி, காலிங்கி, கோமட்டி ஆகிய சாதியாருக்குரிய பட்டப் பெயராகப் பதியப்பட்டுள்ளது.

**சாயகுருப் - Chāya (colour) Kurup**

இவர்கள் மலபாரைச் சேர்ந்த மெருகெண்ணெய் பூசும் தொழில் செய்யும் கொல்லர் வகுப்பார்.

**சேலி - Chēli (Goat)**

இது பொட்டடார் மற்றும் மட்டியர் சாதியின் புறமணக்

கட்டுப்பாடுடைய உட்பிரிவின் பெயர். வெள்ளாடு எனப் பொருள்படுவது.

**சேளு - Chēlu (Scorpion)**

இது குருபர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம். பத்ம சாலேகளின் தேளு என்ற குலப் பிரிவு இதனோடு ஒத்த தாகும்.

**செம்படியர் - Chembadi**

நன்னீர் நிலைகளில் மீன் பிடிக்கும் தெலுங்கு பேசும் சாதியார் செம்படியர். படகு, பரிசல் ஆகியன ஓட்டும் தொழிலையும் செய்பவர். மீன் பிடிக்கப் பெஸ்தர்களைப் போல வீசுவலையைப் பயன்படுத்தாமல் பைதி வலை எனப் படும் பெரிய இழு வலையைப் பயன்படுத்துகின்றனர். அவ் வலையின் இரு முனைகளும் கம்பங்களோடு சேர்த்துப் பிணைக் கப்பட்டிருக்கும். ஒரு புது வலையைத் தயாரித்தவுடன் அதனை மடித்துச் சுருட்டி ஒரு குளம் அல்லது ஏரிக்கரையில் வைத்து, அதன்மீது சேற்றினைப் பரப்பி, அச்சேற்றின் மீது கூம்பு வடி வாகக் களிமண்ணால் பிசைந்து பிடிக்கப்பட்ட தெய்வ உருவங் களை வைத்து வழிபடுவர். குடுமுழு எனப்படும் பணியாரங்கள் அத்தெய்வங்களுக்குப் படைக்கப்படும். இவர்களுள் ஒருவன் அப்பணியாரங்களுள் ஒன்றினைப் பல்லினால் கவ்வியபடி வலையைச் சுற்றி வந்து, பின்னர் அதனைத் தண்ணீருக்குள் இழுத்துச் செல்வான். அப்போது அதன் மீது அமைக்கப்பட்ட தெய்வ உருவங்கள் நீரில் கரைந்துவிடும். பெஸ்தர்களைப் போலவே இவர்களும் வலையில் அகப்படும் முதல் மீனின் குரு தியை வலையில் பூசுவர். ஆனால் அவர்களைப் போல வலையில் ஒரு கண்ணியை எரிக்கும் பழக்கம் இவர்களிடம் இல்லை.

செம்படியரில் சிலர், குரப்ப குருநாதுடுவைத் தங்கள் குலத் தெய்வமாகக் கருதுவதோடு கூட, அவரை வன்னி மரத் தோடு தொடர்பு படுத்துகின்றனர். இதற்கான காரணம் விளங்கவில்லை. வன்னி மரத்தின் தெலுங்கு பெயரான ஜம்மி என்பது இவர்கள் கோத்திரம் ஒன்றின் பெயராகவும் உள்ளது.

குழந்தைகள் சிலர் குரப்ப, குருநாதுடு எனப் பெயரிடப்படுகின்றனர். அத்தகைய குழந்தைகளுக்கு வயது ஐந்து, ஏழு, ஒன்பதாக ஆகும்போது அவர்களை ஒரு நல்ல நாளில் ஒரு வன்னி மரத்திடம் அழைத்துச் சென்று அங்கு அவர்கள் தலையை மழித்து முடி இறக்குவர். அதன்பின் வன்னி மரத்திற்குப் பொங்கல் வைத்துப் பூசை புரிவர்.

திருமண உறுதிப்பாட்டுச் சடங்கின்போது மணப்பெண் பாக்கு வெற்றிலையை எடுத்துத் தன் மடியில் வைத்துத் துணியில் மடித்துக் கட்டியவுடன் சாதித் தலைவன் தன் கரங்களைக் குவித்து அந்த வெற்றிலை பாக்கினை இரு கைகளையும் குறுக்கே நீட்டித் தன்முன் வாரி வைப்பான். மாலர், மாதிகர் ஆகிய கீழ்ச் சாதியாரின் திருமண உறுதிப் பாட்டுச் சடங்கில் நிகழ்த்தப்படும் 'தொணுக்குத் தாம்பூலம்' எனப்படும் சடங்கோடு ஒப்புமை உடையது இச்சடங்கு. மங்கலர் தசாகலர் சாதிகளில் இவ்வாறு தாம்பூலம் எடுத்துக் கொள்பவன் பலிச செட்டி ஆவான். சாவுச் சடங்குகளை நிகழ்த்தச் செம்படியர் தங்கள் சாதியைச் சேர்ந்த தாசரிகளை அமர்த்துகின்றனர். அச்சடங்கில் இவர்கள் இறந்து போனவருக்குப் புலாலும் கள்ளும் படைப்பதில்லை.

**செம்பியன் - Chembian**

தங்களைச் சோழ அரசு மரபினராகக் கருதும் சில பள்ளிகளும், வன்னியர்களும் சூடிக் கொள்ளும் பெயர். செம்பி நாடு என்பது, சோழ நாட்டுக்குரிய மற்றுமொரு பெயர் என்று இவர்கள் நினைத்து இவ்வாறு பெயர் சூடிக் கொள்கின்றனர்.

**செம்பில்லம் - Chembillam (chembu- copper)**

இது முக்குவர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலத்தின் பெயர்.

**செம்போட்டி - Chembotti**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் செம்போட்டி என்ற பெயர் செம்பு கொட்டி என்ற இரு சொற்கள் இணைந்து

செம்பினை அடிப்பவர் என்ற பொருளில் வழங்குவதாகக் குறிக்கப்பட்டுள்ளது. இவர்கள் மலபாரைச் சேர்ந்த செம்புக் கொல்லர்கள். மலபார் கம்மாளர்களிலும் வேறுபட்டவர். கோயில்களுக்காகச் செம்புச் சிலைகள் வார்ப்பவர்கள் மரபில் வந்தவர்கள் என்ற எண்ணத்தால் இவர்கள் தங்களை மற்றக் கம்மாளர்களை விடச் சாதியில் உயர்ந்தவர்களாகக் கருது வதோடு நாயர்களுள் தாழ்ந்த வகுப்பாரோடு சமமானவராகத் தங்களைக் கருதுகின்றனர்.

கொங்கணத்தைச் சேர்ந்த கிறித்தவச் செமபுக் கொல்லர் களாலும் இபபெயர் அவர்கள் தொழிலைக் குறிக்கப் பயன் படுத்தப்படுகின்றது. கொச்சி மற்றும் திருவாங்கூர்க் கணக் கெடுப்பு அறிக்கைகளில் செம்பு கொட்டி என்பது தொழிலுக்கு உரிய பட்டப்பெயரோ கோயில்களிலும் பிராமணர் இல்லங் களிலும் சிறப்பாகச் செம்பு வேலை பார்க்கும் நாயர் சாதியின் உட்பிரிவோ ஆகும் எனப பதியப்பட்டுள்ளது.

மலபார் மாவட்ட விவரக் குறிப்பில் செம்போட்டிகள் செம்புத் தொழிலாளரெனவும், இவர்கள் பரம்பரைத் தொழில் கோயில் அல்லது கருவறைகளுக்கு அந்த உலோகத்தால் மேற் கூரை அமைப்பதாகும் எனவும் கூறப்பட்டுள்ளது. இவர்கள் முதலில் கம்மாளர் சாதியின் ஒரு வகுப்பாராகவே இருந்து வந்தனர். "தளிபரம்பாவில் உள்ள பெரிய கோயில் கட்டி முடிக் கப்பட்டபோது அதற்கு ஆயிரம் பிராமணர்களை அமர்த்திப் பெருமளவில் குடமுழுக்கு விழா எடுக்கப்பட்டது. அவ்விழா தொடங்கி நடைபெற்றுக் கொண்டிருக்கையில் அவர்கள் செம் போட்டி ஒருவன் ஸ்ரீகோயிலின் உள்ளிருந்து கூரைக்கு இறுதி யாகச் செய்ய வேண்டிய பணிகளை முடித்தவனாக வெளியே வருவதைக் கண்டு மிகுந்த கவலை அடைந்தனர். மிகுந்த பொருட் செலவினதும் விரிவான செயலுக்குரியதுமான குட முழுக்குச் சடங்கினை மறுபடியும் முதலிலிருந்து தொடங்க வேண்டி ஆகிவிட்டதே என்பதே அவர்களின் கவலைக்குக் காரணம். அப்பொழுது வானிலிருந்து ஒரு தெய்வக் காட்சி தோன்றி அன்று முதல் செம்போட்டிகள் சமூகத்தில் உயர்ந்த

வர்களாக ஆகின்றனர் எனவும் அவர்களைத் தீட்டு உண்டாக்கும் சாதியாராகக் கருதக் கூடாது எனவும் கூறியது.''

செம்பெட்டி அல்லது செம்மட்டி என்பது தெலுங்கு ஏனாதியர்களின் புறமணக் கட்டுப்பாடுடைய ஒரு குலப் பெயராக வழங்குகின்றது. இது சம்மட்டி எனப் பொருள்படுவதாகும்.

**செண்பகராமன் - Chempakarāman**

நாயர்களுள் பாராட்டுப் பெற்றவருக்கான பட்டப்பெயர் என 1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் பதியப் பட்டுள்ளது.

**செஞ்சு - Chenchu**

செஞ்சுகள் அல்லது செண்ட்சுகள் கர்நூல், நெல்லூர் மாவட்டங்களில் உள்ள மலைகளில் வாழும் தெலுங்கு பேசும் பழங்குடிகளாவர். திரு நெவில் விசாகப்பட்டினம் பகுதியைச் சார்ந்த பல்வேறு பழங்குடிகளின் சொல்வழக்குகள் பற்றி வங்காள ஆசியக் கழகத்திற்கு அனுப்பிய கடிதம் ஒன்றில்* பின்வருமாறு கூறியுள்ளார்:- ''செஞ்சு பழங்குடிகளின் மொழியானது இந்தி, உருது மொழிகளின் சிதைந்த வடிவமாகவே பெரிதும் காணப்படுகிறது. சில வங்காளிச் சொற்களும் அவற்றிடையே காணப்படுகின்றன. நாகரிகம் அடையாத பழங்குடி இன மக்கள் தங்கள் சொந்த மொழியினைக் கைவிட்டுவிட்டனர் என்பதற்கு இது மற்றும் ஓர் எடுத்துக்காட்டாகும்.'' 1885-இல் கர்நூல் மாவட்டக் கையேட்டினைத் தொகுத்தவர், ''திரு நெவில் அனுப்பியுள்ள சொற்றொகுதி லம்பாடிகள் பேசும் கிளை மொழிக்கு உரியதாகும். இவர்கள் சிலபோது மலைப் பகுதிகளில் சுற்றித்திரிவர். அவர் தான் சொற்றொகுதி தயாரித்த இனத்தவர்களின் அடையாளத்தைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்க வேண்டும்'' எனக் கூறியுள்ளார். திரு நெவில் கொடுத்துள்ள சொற்பட்டியலில் இருந்து அவற்றிற்கு மாதிரியாகப் பின்வரும் சொற்களைக் காட்டலாம்:-

| | |
|---|---|
| எலும்பு, ஹட் | ஒன்று, எக் |
| பூனை, பில்லெயி | பத்து, தஸ் |
| காது, கான் | தொலைவிடம், தூர் |

* ஆசியக் கழக இதழ், XXV, 1857. (Journal Asiatic Society, XXV, 1857).

| | |
|---|---|
| யானை, ஹேட் | குடிப்பது, பி |
| புலி, பாக் | இனிப்பு, மித்தா |

திரு நெவில் செஞ்சுக்களைச் சிதைந்த வடிவிலான ஒரிய மொழி பேசும் பொந்துக் சவரர் (பார்க்க: தனிக்கட்டுரை) களோடு குழப்பிக் கொண்டவராதல் வேண்டும். பொந்துக் சவரர் தங்களைச் செஞ்சு வாண்டுலு என அழைத்துக் கொள்வதோடு செஞ்சுக்களைப் போலவே அகோபிலம் நரசிம்மர் தங்கள் பழங்குடியைச் சேர்ந்த பெண் ஒருத்தியை மணந்து கொண்டார் என நம்புகின்றனர். செஞ்சுக்கள் பற்றிய குழப்பத்திற்கு மேலும் ஓர் எடுத்துக்காட்டாகப் புச்சனன்* தமிழ் பேசும் காட்டு வாசிகளான இருளர் பற்றிக் கூறியுள்ளதை நான் தருகின்றேன். "மற்றவர்களால் காட்டு இருளரு என அழைக்கப்படும், ஆனால் தங்களைக் காட்டுச் செஞ்சுக்கள் எனக் கூறிக்கொள்ளும் இனத்தவர் மலைப் பகுதிகளில் இருக்கின்றனர். ஓரிரு கருநாடக அல்லது தெலிங்க சொற்கள் கலந்ததான தமிழே செஞ்சுக்கள் பேசும் மொழியாகும். ஆனால் அவர்கள் பேசும் முறை சென்னையைச் சேர்ந்தவர்கள் பேசுவதிலும் வேறுபட்டிருந்ததால் என் பணியாட்களால் அவர்கள் சொல்வதை முதலில் புரிந்து கொள்ள முடியவில்லை. மலைகளுக்கு அப்பால் உள்ள ஆனை மலைக் காடுகளே தங்களுக்கு உரிய நாடாகும் என அவர்கள் கூறுவதை அவர்கள் பேசும் மொழியும் உறுதிப்படுத்துகின்றது." 1901 கணக்கெடுப்பில் செஞ்சு என்ற பெயர் வட ஆர்க்காட்டையும், மைசூர் பீடபூமியையும் சார்ந்த இருளர்கள் சில சமயங்களில் தங்களை அழைத்துக் கொள்ளும் பெயராகும் எனக் கூறப்பட்டுள்ளது. 1891 கணக்கெடுப்பில் செஞ்சு என்பது ஏனாதியரின் ஓர் உட்பிரிவாகத் தரப்பட்டுள்ளது. செஞ்சுக்களும் ஏனாதியரும் ஒரே கால்வழியினர் என்பதில் ஐயப்பட ஏதும் இல்லை. மெக்கென்சி தொகுத்த இப்பகுதிக்குரிய பதிவுப் பத்திரங்கள் செஞ்சுக்களை ஏனாதி செஞ்சுக்கள் எனக் கூறு

---

* மைசூர், கன்னடம், மலபார் வழியான பயணம். (Journey through Mysore, Canara and Malabar.)

கின்றன. இன்று செஞ்சுக்கள் தாங்களும் ஏனாதியரும் ஒரு இனத்தவரே எனக் கூறிக் கொள்வதோடு அவ்விரு பழங்குடி இனத்தவர்களும் தங்களுக்குள் மண உறவும் மேற்கொள்கின்றனர்.

ஔரங்கசீப்பின் ஒரு மகனான இளவரசன் முகமது மசூம், 1694 - இல் கர்நூல் மாவட்டம் வழியாகச் சென்றபோது அவரைச் செஞ்சுக்கள் வந்து கண்டு கொண்டது ஸ்காட்டின் 'பெரிஸ்டா' (Ferishta) வில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:- "மிகக் கறுத்த உடலும், நீண்ட முடியும், தலைகளில் மரத்தின் இலைகளாலான தொப்பியும் அணிந்து அவர்கள் காணப்பட்டார்கள். ஒவ்வொருவரும் கையில் வேட்டைக்குரிய முனை வைக்கப்படாத அம்பும் வில்லும் தாங்கியிருந்தனர். அவர்கள் யாரையும் துன்புறுத்தினார்களில்லை. மலை முழைஞ்சுகளிலோ நிழல் தரும் கிளைகளையுடைய மரங்களின் அடியிலோ இவர்கள் தங்கி வாழ்கின்றனர். இளவரசர் அவர்களில் சிலருக்குப் பொன் வெள்ளிக் காசுகளை வழங்கினார். அவற்றை அவர்கள் மதித்ததாகத் தெரியவில்லை என்பது அவற்றை அவர்கள் அலட்சியமாகப் பெற்றுக் கொண்ட போக்கே புலப்படுத்தியது. துப்பாக்கியிலிருந்து வெடிச்சத்தம் கிளம்பியவுடன் மனிதர்களுக்கு இயல்பாக வாய்க்கப் பெறாத ஒரு வேகத்துடன் பார்ப்பவர்கள் வியக்கும்படியாக அவர்கள் மலைமீது ஏறி ஓடினார்கள்."

டெய்லரின், 'கீழ்த்திசைக் கையெழுத்துப் பிரதிகளின் அட்டவணை' மூலத்தில் செஞ்சுக்கள் பற்றிப் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:– "செஞ்சுக்கள் கோபிலம், சீசைலம் முதலிய இடங்களுக்கு மேற்கேயுள்ள பகுதிகளில் காடுகளிலும் இயற்கை வனங்களிலும் வாழ்பவர்கள். தங்கள் கைகளில் வில்லும் அம்பும் தாங்கியபடி இவர்கள் எப்பொழுதும் அலைந்து திரிந்தபடி இருப்பார்கள். இலைகளாலான ஆடைகளை அணியும் இவர்கள் "சாகோ" அல்லது மூங்கில் அரிசியை உண்டு வாழ்கின்றனர். பயணிகளைக் கொள்ளையிடும் இவர்கள் பயணிகள் தங்கள் பொருள்களைப் பறிகொடுக்க மறுப்பின் கொலையும் புரிவர். வாழும் உயிரினங்கள் அனைத்தும் இவர்கள்

கொலைக்கு (தின்பதற்காகக் கொலலபபடுவமத இங்குக் குறிக் கப்படுகின்றது) ஆளாகின்றன.'' கர்நூல் மாவட்டக் கையேட்டில் முன்பெல்லாம் செஞ்சு இனத்தாரின் தலைவனே கொலை வழக்குகளைப் பற்றி விசாரித்துக் குற்றம் நிரூபிக்கப்படுமானால் கொலை செய்தவனை, அவன் கொலை செய்யப் பயன்படுத்திய அதே கொலைக் கருவியால் உயிரிழக்கச் செய்வான் எனக் கூறப் பட்டுள்ளது. 1846 - இல் காப்டன் நியூபோல்டு, தான் பச்சர்ல காட்டு வழியே சென்று கொண்டிருந்தபோது ஒரு புளியமரத்தில் மண்டையோடு ஒன்று வெயிலில் காய்ந்தபடி தொங்கிக் கொண்டிருந்ததைக் கண்டதாகவும், அது செஞ்சுத் தலைவனால் கொலைத் தண்டம் விதிக்கப்பட்ட கொலை, கொள்ளையில் ஈடுபட்ட கொலைகாரனுடைய மண்டையோடு எனத் தகவல் கூறப்பட்டதாகவும் எழுதியுள்ளார். நவாபுக்களின் ஆட்சிக் காலத்தில் செஞ்சுக் கொலைகாரர் சிலர் பிடிக்கப்பட்டுத் தண்டிக்கப்பட்டுள்ளனர் எனினும் அவர்கள் இனத்தலைவனே கொலைகாரர்களை விசாரித்துத் தண்டிக்கும் வழக்கம் 1860–இல் புதிய காவல் துறை அமைப்பு ஏற்படும் வரை தொடர்ந்து இருந்து வந்துள்ளது. அதன்பின் எல்லா வழக்குகளும் அருகில் உள்ள காவல்துறை அதிகாரிக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளன.

நந்தியாவில் என்னைப் பார்க்க வந்த செஞ்சுத் தலையாரி ஒருவன், தெலுங்கில் அவன் பெயர் பொறிக்கப்பட்ட அடையாளச் சின்னம் ஒன்றினைத் தரித்திருந்தான். அது ஓர் ஊரினில் கொள்ளையில் ஈடுபட்ட இரண்டு தொங்க ஒட்டர்களை இரட்டைக் குழல் துப்பாக்கியால் அவன் சுட்டு வீழ்த்தியதைச் சிறப்பிக்க அவனுக்குத் தரப்பட்ட பட்டயம் ஆகும். இன்னொரு வயதான தலையாரி தெலுங்கில் எழுத்துக்களைக் கொண்ட வெள்ளிக் கங்கணத்தை அணிந்திருந்தான். அது காவல் துறையினர் தேடி வந்த ஒரு கொலையாளி அவன் குடிசைக்கு வந்த போது, அவனைப் பிடித்துக் காவல் துறையினரிடம் ஒப்படைத்தமைக்காக அவனுக்குத் தரப்பட்ட பாராட்டுப் பரிசாகும். அவன் குடிசைக்குத் தான் ஐதராபாத் போய்க் கொண்டிருப்பதாகக் கூறியபடி வந்த வழிப் போக்கனின் ஆடையில் இரத்தக் கறையினைக் கண்ட அவன், அவ்வழிப்போக்கனைப் பிடித்துத் தன் குடிசையில் கட்டிப் போட்ட பின் அவனைப்

பற்றிக் காவல் துறையினருக்குத் தகவல் தந்துள்ளான். இதே செஞ்சு கள்ள மதுத் தயாரிப்பவர்களைப் பற்றித் தகவல் தந்து அக்பாரி சட்டப்படி உரியதான பரிசுகளையும் பெற்றுள்ளான்.

நல்லாமலைக் குன்றுகளைச் சேர்ந்த வனத்துறை அலுவலர் ஒருவர் அண்மையில் செஞ்சுக்களைப் பற்றித் தந்துள்ள தகவல்கள் வருமாறு:- ''சீசைலம் கோயிலுக்கு வரும் பயணிகள் வழியில் ஒவ்வொரு திருப்பத்திலும் சுரண்டலுக்கு ஆளாகின்றனர். கோயிலுக்குப் பயணிகள் வரும் பருவத்தில்தான் செஞ்சுக்களின் பேராசை எண்ணம் வெளிப்படுகின்றது. பயணிகளிடமிருந்து பொருள் பறிப்பதில் பலர் ஈடுபட்டாலும், அதில் தீவிரமாக இருப்பவர்கள் செஞ்சுக்களே. பயணிகளுக்குப் பாதுகாப்புத் தருவதாகக் கூறி அதற்குக் கட்டணம் என்ற பெயரால் தலைக்கு இவ்வளவு எனப் பயணிகளிடமிருந்து எவ்வளவு பறிக்க முடியுமோ அவ்வளவு பறிக்கின்றனர். போதை மருந்தின் மயக்கத்திலிருந்த ஒரு செஞ்சு கத்தியினைக் காட்டி வனத்துறை ஊழியர் ஒருவரைப் பயமுறுத்தியபோது நாங்கள் தலையிட்டு அந்த ஊழியருக்குப் பாதுகாப்புத் தந்து அனுப்ப வேண்டியதாயிற்று...செஞ்சுக்கள் இயற்கையோடு இயைந்து மற்றவர்களுக்குத் தீங்கு ஏதும் செய்யாது அப்பாவிக் காட்டு வாசிகளாகக் கிழங்கு, தேன், கனிவகைகள், காட்டில் வேட்டையாடும் விலங்குகள் ஆகியவற்றை உண்டு வாழ்வதாகப் பொதுவாக நம்பப்படுகிறது. இது உண்மையாயின் இவர்களை முறைப்படுத்துவதில் இடையூறு ஏதும் இருந்திருக்க நியாயம் இல்லை. உண்மையில் இவர்கள் குடிவெறியர்களாகச் சோம்பித் திரிந்து காட்டுத்தனமாகக் கொள்ளையில் ஈடுபடுபவர்களே. மலை அடிவாரங்களில் உள்ள ஊரார் இவ்வளவு செலுத்த வேண்டும் எனக் கூறி அச்சுறுத்திப் பணம் பறிப்பர். கேட்கும் தொகை தர மறுக்கும் உழவர்களின் விளைந்த பயிர் நிலவு இல்லாத இரவு ஒன்றில் மாயமாக மறைந்துவிடும். மலைக் கோயிலுக்கு வரும் ஒவ்வொரு பயணியிடமும் அச்சுறுத்தித் தலைக்கு இவ்வளவு எனப் பணம் வசூல் செய்வர். மலைக் காடுகளில் ஆடு மாடுகள் மேய்ப்பவர்களிடமும் இதே போலப் பணம் பறிப்பர். கோமட்டி, பணியாவான வட்டிக்கடைக்காரன் ஆகியவர்களிடம்

கடன் வாங்கும் இவன் அத்தொகையைக் காட்டில் திருடிய மரம் முதலிய வனப் பொருளாகத் திரும்பித் தந்து ஈடு செய்வான். எப்பொழுதும் கோமட்டிகளுக்குக் கடன்காரன்களாக இருக்கும் இவர்கள் அவர்களின் அடிமைகளாகிக் காட்டு மரங்களையும் வனப்பொருள்களையும் அவர்களுக்குக் கொண்டு கொடுத்தபடி இருப்பர். ஒரு மரத்தின் பழங்களைப் பறிக்க மரத்தையே வெட்டி வீழ்த்தச் சிறிதும் தயங்கமாட்டார்கள். வனப் பொருள்கள் சில வற்றை எளிமையாகச் சேகரிக்கவும், வேட்டையாடும் காட்டு விலங்குகளின் இருப்பிடத்தை அறியவும் பல மைல் பரப்பளவு உள்ள காட்டுப் பகுதியை எரித்துப் பாழாக்குவர். சிற்றாறுகளை நஞ்சிட்டு மலைப் பகுதிகள் எங்கும் அவற்றைப் பயனற்றதாக் குவர். (இது சுலபமாக மீன்களைப் பிடிக்கச் செய்யப்படும் செயல்.) சுருங்கச் சொன்னால் நல்லாமலைப் பகுதி முழுவதிலும் அவர்கள் தங்கள் மனம் போன போக்கில் செயல்பட்டவர்களாக உள்ளனர்." இத்தகவல்கள் மிகைப் படுத்தப் பட்டவையல்ல என இது பற்றிக் கருத்துக் கூறிய வனப் பாதுகாவலர், "செஞ்சுகள் காடுகளுக்குப் பலவகையிலும் தீங்கு செய்கின்றனர். அவர்களுக்கு நில உரிமையை அவர்கள் பெயருக்கு ஆக்கித் தந்துள்ள உடமை உரிமையே (Settlement) இக்கேடுகள் பெருகக் காரணம்" எனக் கருதுகின்றார்.

அவர்களுக்குத் தரப்பட்டுள்ள உரிமைகளாவன:-

1. காட்டுவழித் தடம் பயன்படுத்தும் உரிமை மற்றும் தீப் பந்தம் எடுத்துச் செல்லும் உரிமை.

2. அருவி, சிற்றாறு, கிணறு, குட்டைகளில் நீரெடுத்துக் குடிக்கவும், குளிக்கவும், துவைக்கவுமான உரிமை.

3. காட்டில் கிடைக்கும் பொருள்களை வீட்டு உபயோகத் திற்காக எடுத்துக் கொள்ளும் உரிமை.

4. மீன் பிடிக்கவும், வேட்டையாடவுமான உரிமை.

5. குறிப்பிட்ட அளவு கால்நடைகளை மேய்க்கும் உரிமை.

6. சில சாதாரணக் காட்டுப் பொருள்களை விற்கவோ, பண்டமாற்றுக்காகவோ சேகரிக்கும் உரிமை.

உரிமை 3 தொடர்பாக மாவட்ட வன அலுவலர் கூறும் கருத்து வருமாறு:- "ஆண்டுதோறும் எடுத்துக் கொள்ளப்படும் மரம், மூங்கில், நார், விறகு, தேன் ஆகியவற்றின் அளவு வரையறை செய்யப்பட வேண்டும். எடுத்துக் கொள்ளும் மரம் முதலிய பொருள்களின் தரமும் உறுதி செய்யப்பட வேண்டும். செஞ்சுகளுக்குத் தேக்கு, ஈட்டி, கினோ முதலான மரங்களின் ஆரக் கால்களோ வட்டைகளோ குடும்ப உபயோகத்திற்குத் தேவையில்லை. ஆனால் இந்த உரிமைப்படி அவர்கள் விருப்பப்படி எந்த மரத்தை வேண்டுமானாலும் வெட்டி வீழ்த்தலாம். அவை விற்பனைக்காகத்தான் என்று தெரிந்தாலும் செஞ்சுக்கள் வீட்டு உபயோகத்திற்கு எனக் கூறும்போது அவர்களைத் தண்டிக்க முடியாது. அவர்கள் எடுத்துக் கொள்ள உரிமையுள்ள மரங்கள் பட்டியல் படுத்தப்படாத மரங்களின் கழிகளும், மூன்றாம் தரத்துண்டுகளும் என வரையறை செய்யப்பட வேண்டும்.

நல்லா மலைகளில் உள்ள பாதுகாக்கப்பட்ட காடுகளில் வாழும் செஞ்சுக்களின் உரிமைகளை வரையறைப்படுத்த 1898 – இல் ஆளுநர் தன் அவையில் பின்வரும் விதிகளைப் பிறப்பித்தார்:-

1. தீப்பந்தங்களைக் கொண்டு செல்வதும், தீ மூட்டுவதும் நெருப்பு மூட்டும் பருவத்தில், நெருப்பிலிருந்து பாதுகாக்கப்பட்ட பகுதிகளில் தடை செய்யப்படுகிறது.

2. மாவட்ட வன அலுவலர் குடிநீருக்குரியன என ஒதுக்கப்படும் சிற்றாற்றின் பகுதிகளிலும், ஊற்றுகளிலும், கிணறுகளிலும், குட்டைகளிலும் குளிக்கவும் துவைக்கவும் உரிமை இல்லை.

3. மாவட்ட ஆட்சியர் குடும்பப் பயன் பாட்டுக்கு உரிய தேவையான அளவு எவ்வளவு என்று வரையறை செய்கின்றாரோ அந்த அளவுக்கு மேல் மரம், மூங்கில், நார், வேய்வதற்கான புல், விறகு, கிழங்கு, பழங்கள், தேன் முதலான பிற காட்டுப் பொருள்களை எடுக்கும உரிமை இல்லை. "பிற காட்டு வளங்கள்" என்ற தொடர் தந்தம், கொம்பு நீங்கலான பிற சாதாரணக் காட்டுப் பொருள்களையே குறிக்கும். கழிகள் மற்றும் பட்டியல் படுத்தப்படாத மூன்றாம் தர மரங்களின் சிறு துண்டுகள் தவிர, பிற மரங்களை எடுத்துச் செல்லுதல் கூடாது.

4. நில உரிமை வழங்கப்பட்ட போது மாவட்ட ஆட்சியர் எத்தனைத் துப்பாக்கிகள் வைத்துக் கொள்ள உரிமம் வழங்கி உள்ளாரோ அதற்கு அதிகமாக எந்தச் செஞ்சுக் கிராமமும் (கூடம்) வைத்துக் கொள்ளக் கூடாது. உரிமம் வழங்கப்பட்ட துப்பாக்கிகள் அனைத்தும் தெளிவான அடையாளமோ எண்ணோ இட்டு முத்திரை பொறிக்கப்பட வேண்டும். தண்ணீரில் நஞ்சு கலப்பதோ, வெடிகள் வெடிப்பதோ கூடாது. மீன்களைப் பிடிக்கவோ, அழிக்கவோ தடைகளை அமைப் பதோ, நிலையாகப் பொறிகளை அமைப்பதோ தடை செய்யப் படுகிறது.

5. காடு மீண்டும் தளிர்ப்பதற்காக மேய்ச்சலுக்கென ஒதுக்கப்பட்டுள்ள பகுதியில், ஐந்தில் ஒரு பங்குக்கு மேற்படாத பகுதி, மேய்ச்சலுக்கு உரியதல்லாததாக எப்பொழுது வேண்டு மாயினும் தடுக்கப்படலாம். அத்தடை மாவட்ட வன அலு வலர் தேவை எனக்கருதும் காலக்கெடுவரை நீட்டிக்கப் படலாம்.

6. எத்தகைய சாதாரண வனப் பொருள்களைச் செஞ்சுக்கள் விற்பனைக்கோ பண்டமாற்றுக்கோ சேகரிக்கலாம் என் பதனை முன் கூட்டியே முடிவு செய்யும் உரிமை வனத்துறை யைச் சேர்ந்ததாகும். வீட்டுக்குப் பயன்படுத்தவும், விற்பனை அல்லது பண்டமாற்றுக்காகச் சேகரிக்கவும் காட்டில் இயற் கையிலே கிடைக்கும் பொருள்களே உரியன. வனத் துறை யினர் நட்டும், பாதுகாத்தும் வளர்க்கும் பொருள்கள் உரிமை உடையன ஆகா.

நல்லாமலைகளின் காடுகளில் கிடைக்கும் சாதாரண வனப் பொருள்கள் பற்றிய திட்டம் தொடர்பாக 1905-இல் வனப் பாதுகாவலர் பின்வருமாறு எழுதியுள்ளார்:- "குறிப்பிடத்தக்க அளவு பொருள் இழப்பு ஏற்பட்டாலும், அதனைப் பொருட் படுத்தாது செஞ்சுக்களின் நல்லெண்ணத்தைப் பெற வேண்டும் என்பதுதான் அரசியல் நோக்கிலும், நாட்டு நல நோக்கிலும் பின்பற்றுவதற்குரிய வழி எனப் பொதுவாக அனைவராலும் கருதப்படுகிறது என நான் நினைக்கிறேன். நாம் இதனை

செய்யவில்லையாயின் நல்லாமலைக் காடுகள் முழுவதுமாக விரைவில் நெருப்பினால் அழிக்கப்பட்டுவிடும். செஞ்சுக்கள் இயல்புக்கு மாறுபட்டவர்களாக இருப்பதால் இயல்புக்கு மாறு பட்ட நெறி முறைகளைக் கையாண்டே அவர்களை வழிக்குக் கொண்டுவர வேண்டும். இங்குத் தரப்பட்டுள்ள நடவடிக்கை மேற்கொள்வதற்கான திட்டங்கள், இரண்டு மாவட்ட வன அலுவலர்களும் முழு உரிமை உடையவர்களாகச் செயல்பட்டு அவர்களைச் சரிக்கட்டும் வகையில் செயல்பட வேண்டும் என்ற அடிப்படையில் வரையப்பட்டுள்ளது. இப்பொழுது வேண்டப்படுவது யாதெனில் சோதனைமுறையில் வனத் துறைக்காகச் செஞ்சுக்களைச் சாதாரண வனப் பொருள்களைச் சேகரிக்க அமர்த்தும் உரிமையாகும். அவர்கள் அவ்வாறு சேக ரிக்கும் பொருள்களுக்கான விலையைப் பணமாகவோ பண்ட மாகவோ, சேகரிப்பினை அவ்வப்போது பார்த்து முடிவு செய்யும் உரிமையும் மாவட்ட வன அலுவலர்களுக்கு வழங்கப்பட வேண்டும்." இத்திட்டத்தின் மீது வருவாய்த் துறை வாரியம் பின்வரும் கருத்துக்களைத் தெரிவித்துள்ளது:- "நல்லாமலை களின் இன்றைய நிலையைக்கருத்தில் கொண்டு பார்க்கும் போது, தரப்பட்டுள்ள திட்டப்படி நடவடிக்கை எடுக்க வேண்டியது சரி யானதே. மதிப்புமிக்க இந்தக் காடுகள் விரைவில் நெருப்பால் அழிந்து விடக்கூடிய ஆபத்தில் உள்ளன. அப்பகுதி அலுவலர் களின் கருத்துப்படி செஞ்சுக்களே முழுதும் அதற்குக் காரண மாக உள்ளனர். வனத்துறை, காட்டில் மூளும் நெருப்பினை அணைக்கச் செஞ்சுக்களின் உதவியினைப் பெறக்கூடிய அளவு இன்று செல்வாக்கு அற்றதாக உள்ளது. அடக்குமுறை நட வடிக்கை மேலும் நிலைமையை மோசமாக்கும். செஞ்சுக்கள் மலைகளில் சென்று பதுங்கியிருந்து மீண்டும் வெளிவந்து அதிகத் தீங்கிழைப்பர். வன உரிமங்களை வரையறைப் படுத்தும்போது அரசுக்கு உரியதான காடுபடு சாதாரணப் பொருள்களின் அளவினை முன்கூட்டியே முடிவு செய்து விடு வதுதான் அவர்களோடு தொடர்பு கொண்டிருக்க ஏற்றதான ஒரு வழியாகும். அவர்களோடு நியாயமான பரந்த மனப் பான்மையோடு செய்து கொள்ளும் இத்தகைய ஒப்பந்தம்தான் அவர்கள் நம்பிக்கையைப் பெறுவதற்குரிய வழியாகும்.

இதனைச் செய்யக் கூடுமானால் வனத் துறையினர் காட்டில் நெருப்புகளை அணைக்க அவர்களுடைய ஒத்துழைப்பையும் உதவியையும் பெற முடியும். வனத்துறையினர் அவர்கள் சேகரிக்கும் பொருள்களை நல்ல விலைக்கு விற்பதோடுகூட, அதே சமயம் செஞ்சுக்களைப் பெரும்பாலும் ஏமாற்றும் சௌகார்களை விட நல்ல நிலையையும் செஞ்சுக்களுக்குத் தரலாம். முன்பணம் தருவதால் ஏற்படும் இறுதி இழப்புப் பெரிதாக இருக்காது என வாரியம் கருதுகின்றது. சௌகார்களுக்குக் கடனைத் தீர்க்கவேண்டிய செஞ்சுக்களுக்குத் தரப்படும் முன் பணத்தைத் தவிர மற்றத் தொகைகள் மிகக் குறைவாகவே இருக்கும். எனவே கூடிய விரைவில் மாவட்ட ஆட்சியரும், மாவட்ட வன அலுவலர்களும், சௌகார்களுக்குச் செஞ்சுக்கள் எவ்வளவு கடன்பட்டிருக்கிறார்கள் எனத் தெரிந்து அவர்கள் அந்தக் கடனை அடைக்க ஒரு திட்டம் தயாரிப்பார்களானால் அது இத்திட்டத்தின் வெற்றிக்கு நலமாக அமையும்."

நல்லாமலைக் குன்றுகளில் வாழும் செஞ்சுக்கள் பற்றிய ஒரு குறிப்பிலிருந்து நான் அறிந்து கொண்டவை வருமாறு:- "வெங்கடாபுரத்திலிருந்து பைர்னுதி வரை நீண்டு பரந்திருக்கும் காட்டுப் பகுதிகளில் வாழ்பவர்களுக்கும், காட்டின் இடையே செல்லும் பெரிய நெடுஞ்சாலையின் இரு மருங்கிலும் தங்கி வாழ்பவர்களுக்கும் இடையே உள்ள வேறுபாடு பளிச்சென எளிதில் புலனாகக் கூடியதாகும். இந்த நெடுஞ்சாலைதான் தென் மராட்டப் புகைவண்டிப் பாதை போக்குவரத்தை வழி மாற்றும் வரை பெரு வழக்கினதாக இருந்தது. முதலில் கூறிய பகுதியில் வாழும் செஞ்சுக்கள் ஓரளவு நாகரிகம் அடைந்தவர்களாக, ஆடைகள் அணிந்து காணப்படுகின்றனர். இவர்கள் கால்நடைகளையும் வளமான வயல்களையும் பெற்றிருப்பதோடு தோட்டங்களைக் கூடப் பெற்றுள்ளனர். இவர்கள் பண்ட மாற்றில் மிகுந்த ஆர்வம் காட்டுகின்றனர். பைர்னுதி பகுதியைச் சார்ந்த இந்தச் செஞ்சுக்களின் மேம்பாட்டுக்கு ஒரு தனிப்பட்ட ஆங்கிலேயரின் செல்வாக்கும், முன்மாதிரியும் உழைப்புமே காரணம எனலாம். இந்த ஆங்கிலேயர் பைர்னுதி காட்டின் நடுவே கல்லால் நல்ல வீடு ஒன்றினைக் கட்டிக்

கொண்டுள்ளார். அங்கு அவர் அவுரிச் சாயம் எடுக்கும் கொப்பரை ஒன்றினை அமைத்ததோடு, அவுரிச் செடிகளும் வளர்க்கின்றார். அத்தோடு ஒட்டுமா, ஆரஞ்சு, எலுமிச்சைத் தோப்புகளையும் அமைத்துள்ளார். எருமைகளை வாங்கி நல்ல தரமான கலப்பு இன எருமைகளையும் உருவாக்கினார். இந்த எருமைகள் இப்பொழுது காடுகளில் தரையில் பெருவாரியாகப் பரந்து கிடக்கும் பழங்களை – சிறப்பாக இலுப்பை, மற்றும் அத்திப் பழங்களை – மட்டுமே தின்னும் பழக்கத்தை மேற்கொண்டு விட்டன. பழங்களைத் தின்னும் காரணமாக இந்த எருமைகளின் பால் இனிய மணமுடையதாக இருப்பதோடு, நல்ல தரமான வெண்ணெயையும் தருகின்றன. செஞ்சுக்கள் இந்த வெண்ணெயை நெய்யாக்கி நல்ல விலைக்கு விற்கின்றனர். பைர்னுதி செஞ்சுக்களின் உடன்பிறப்புகளான பச்செர்ல காட்டில் வாழும் செஞ்சுக்கள் முற்றிலும் மாறுபட்ட வாழ்க்கையை உடையவர்களாக உள்ளனர். அவர்கள் இடையைச் சுற்றிக் கட்டியுள்ள மரப்பட்டை நாரிலே தங்கள் அம்புகளையும், கத்தியையும் சொருகியவர்களாகக் காட்சி தருவர். இது அவர்களுடைய நிர்வாணக் கோலத்தை மேலும் மிகைப்படுத்திக் காட்டுவதாகும். இதனையே தங்களுடைய · ஆடையாகக் கொண்டுள்ள இவர்கள் உடம்பில் வளரும் முடியே மனித இனத்துக்குப் போதுமான இயற்கை உடை என்று கருதுகின்றனர் கிறித்தவ சமயத் துறை சார்ந்த வேட்டைக்காரர் ஒருவர் அவர்களோடு இது பற்றி உரையாடியபோது அவர்கள் இன்ப நுகர்ச்சியாளனான கண்ணன், அவர்கள் இனத்தைச் சார்ந்த ஒரு மங்கையின் அழகில் மயங்கி, அவளைக் கவர்ந்து சென்ற புகழ்பெற்ற கணவாயைக் காட்டியபோது அவர் வாயடைத்துப் போனார். தங்கள் கூற்றின் நியாயத்தை நிலை நாட்ட, செஞ்சு ஒருவன் 'எளிமையான அவளுடைய போதை தரும் அழகு தானே கடவுளைக் கூடக் கருத்திழக்கச் செய்தது என்பது உங்களுக்குப் புரிந்திருக்க வேண்டும்' எனக் கூறினான். இதற்கிடையே வேறொன்றையும் கூற விரும்புகிறேன். ஒரு செஞ்சு ஒரு மங்கையின் சிறப்பினை நன்கு பாராட்ட விரும்பும் போது அவன் அவளை ஒரு குரங்கிற்கு ஒப்பிட்டுப் பேசுவான். அவன் நோக்கிலே ஒரு பெண்ணின் பேரழகு



செஞ்சு மரம் ஏறுதல்

அவளுடைய விரைந்து இயங்கும் திறனாகும். உயர்ந்த மரத்தில் தாவி ஏறித் தனக்குத் தின்னப் பழங்கொண்டு தருபவளே பெண்மையின் முழுமை நிரம்பியவள்.'அட! என் இனிய குரங்குப் பெண் நாள் முழுதும் மரங்களில் ஏறி எனக்குப் பழங்களைப் பறித்திட்டாள். என் குரங்குப் பெண்ணைப் போல மரம் ஏறக் கூடிய ஆண் பிள்ளை இந்தக் காட்டில் ஒருவன் கூட இல்லை' எனச் சோம்பேறியாக மரம் ஏற மனமில்லாத வனாகி விட்ட செஞ்சு பெருமை பேசிக் கொள்வான். அரசுத் துறையினர் முன்யோசனையுடன் செஞ்சுக்களைச் சாலைக் காவலர்களாகவும், தலையாரிகளாகவும் வழிப்பறியைத் தடுக்க அமர்த்தியுள்ளனர். இது அரசினர் கூர்த்த மதியுடையவர்களாகக் கையாண்டுள்ள செயலாட்சித் திறனாகும். இப்பகுதிகளில் வழிப்பறிக் கொள்ளையில் ஈடுபடுபவர்கள் செஞ்சுக்களே. சாலைக் காவலர் எனக் கூறி அதற்காக அவர்களுக்குத் தரப் படும் ஊதியம் அவர்கள் வழிப்பறியில் ஈடுபடாதிருக்கத் தரப் படும் கையூட்டாகும். தான் வாழும் காடுகளில் கிடைக்கும் காடு தரும் பொருள்களான தேன், மெழுகு, மான்கொம்பு, தோல், புளி, விளாம்பழம், இலுப்பைப் பூவும் பழமும் ஆகிய வற்றைப் பண்டமாற்று செய்து, அதன் வழி நல்ல வருவாய் பெறுகின்றான். ஆண்டுதோறும் பெரும் அளவில் கொம்புகளும், தோல்களும் அவனுக்குக் கிடைக்கின்றன. கடமானும், புள்ளி மானும் சில பருவங்கள் தங்கள் கொம்பினை உதிர்க்கின்றன. அக்கொம்புகள் செழித்து வளர்ந்த புல்வெளிகளினிடையே மறைந்து கிடக்கும். கோடை வெயிலில் அப்புல்வெளிகளில் புல் வாடத் தொடங்கியவுடன் செஞ்சு இரண்டு குச்சிகளை உரசி நெருப்பு உண்டாக்கி அப்புல்வெளிக்குத் தீயிடுவான். புல் முதலியன எரிந்து சாம்பலான பின், எளிதில் கண்ணுக்குத் தெரியும் மான் கொம்புகளை, எஞ்சிய நெருப்பு வெளிச்சத்தில் தேடி எடுத்துச் சேர்ப்பான். இதனோடு கூட்வில், அம்பு மற்றும் துப்பாக்கியால் வேட்டையாடியும் மான் கொம்புகளையும், தோலையும் பெறுவான். துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தியே அவன் பெரும்பாலும் தோலினைப் பெறுகின்றான். பழங்குடி களில் பெரும்பாலோரைப் போலச் செஞ்சுவும் குறிபார்த்துச் சுடுவதில் திறமை அற்றவனே. மறைந்து நின்றும் செஞ்சு

விலங்குகளை அடித்து வீழ்த்த முற்படுவான். அவ்வாறு செயல் படும்போது துப்பாக்கியைக் கையாளுவதில் அவனுக்குள்ள திறமை இன்மையை, மறைந்து நின்று தாக்குவதில் ஈடுசெய்து கொள்கின்றான். காற்று வாக்கிலே மானுக்குத் தன்னுடைய வாடை தெரிந்து விடக் கூடாது என்பதை அவன் புரிந்து கொண்டுள்ளான். மான்கள் அவனைப் பார்த்துவிடுமானால் கறுத்த மரக்கட்டை போல அவன் ஆடாது அசையாது அப்படியே நின்று விடுவான். அவன் இவ்வாறு வேட்டையில் விலங்குகளை வீழ்த்த அவை நீர்குடிக்கவும், உப்பு நக்கவும் வரும் இடங்களையே பெரிதும் தேர்ந்தெடுப்பான். அங்கு இலுப்பம் பூவைக் கொண்டு கள்ளத் தனமாகக் காய்ச்சப்பட்ட கெட்ட நாற்றம் வீசும் சாராயத்தை நிறைய பக்கத்தில் வைத்துக் கொண்டு இரவு பகலாக விலங்குகளின் வருகைக்காகக் காத்துக் கிடப்பான். கடமான், புள்ளிமான், இரலை, மறிமான் ஆகியவற்றை இரக்கமின்றி அங்கு அவன் அடித்து வீழ்த்து வான். புலிகள் அடிக்கடி அவ்விடத்திற்கு மறைந்து வந்து நீர் குடிப்பதோடு கூடத் தண்ணீரில் விழுந்து புரளவும் செய்யும். அதனை அடித்து வீழ்த்தும் நெஞ்சத் துணிவு செஞ்சுவுக்குக் கிடையாது. தன் குறிப்பார்க்கும் திறமையில் அவனுக்கு உள்ள சந்தேகமே அவனை இச்செயலில் ஈடுபடவிடாமல் தடுத்து விடுகின்றது போலும்." புலிகள், சிறுத்தைகள் ஆகியவற்றால் ஆபத்து என உணரும்போது செஞ்சு மரங்களில் ஏறிக் கொண்டு உரக்கக் கூச்சலிடுவான். சிறப்புலி, சிறுத்தைப் புலி என இரண்டு வகைச் சிறுத்தைகள் இருப்பதாகச் செஞ்சுக்கள் கூறுகின்றனர். இதுபற்றிப் பிலன்போர்டு* பின்வருமாறு எழுதுகின்றார்:– "மத்திய இந்தியாவில் வேட்டையாடும் வேட்டைக்கார ஆங்கிலேயர் பலரும், இந்திய வேட்டைக் காரர்களும் இரண்டு வகைச் சிறுத்தைகள் இருப்பதாக வேறு பாடு கண்டு கூறுகின்றனர். சில பகுதிகளில் இரண்டுவகைச் சிறுத்தைகளும் காணப்படுவதாகத் தெரிகின்றது. உருவில் பெரிய சிறுத்தை மலைகளிலும் காடுகளிலும் காணப்படுகின்றது.

---

* பிரிட்டிஷ் இந்தியாவின் விலங்குத் தொகுதி, பாலூட்டிகள். (Fauna, British India, Mammalia.)

சிறியது புல்வெளிகளிலும் விளைநிலங்களிலும் தோப்புகளிலும் காணப்படுகிறது. பெரிய சிறுத்தை குறுகிய வாலும் உச்சிக் கொண்டையோடு கூடிய நீண்ட தலையும், வெளிறிய தோலில் தெளிவான அமைப்போடு கூடிய புள்ளிகளையும் கொண்டது. சிறிய சிறுத்தை அளவில் சற்றுநீண்ட வாலும், உருண்ட தலையும், தடித்த தோலில் தெளிவற்ற புள்ளிகளையும் கொண்டது. இவற்றிடையே காணப்படும் இந்த வேறுபாடுகள் வயது வேறுபாடு காரணமாக அமைந்தவை என்பதே என் எண்ணம்."

ஒரு செஞ்சுவை, நான் அவர்கள் காட்டு விலங்குகளைக் கொல்வதுண்டா எனக் கேட்டபோது அதற்கு அவன், 'நாங்களே காட்டு விலங்குகள்தான்' எனப் பதிலிறுத்தான். காட்டில் நான் தங்கியிருந்த இடத்தில் அவர்களுக்காக நான் ஏற்பாடு செய்திருந்த விருந்தில்,புலாலினை வெறியோடு எலும்புகளைக் கடித்தும் இறைச்சியைக் கிழித்தும் தின்றவர்களாக அவன் கூறிய பதிலினை மெய்ப்பிப்பது போல அவர்கள் நடந்து கொண்டனர். உண்பதற்கு எவ்வளவு தாராளமாக உணவு படைத்தாலும்,தாராளமாகக் கள் வழங்காவிட்டால் ஒரு செஞ்சு அதனை விருந்தாகவே கருதமாட்டான். சிறு குழந்தைகள் கூட தங்கள் பங்கிற்கான கள்ளினைப் பருகுவர். கள் இல்லாவிட்டால் இலுப்பம் பூ அரும்புகளைக் கொண்டு அவர்களே கள்ளச் சாராயம் தயாரித்து விடுவர். சோளக் கொல்லைப் பொம்மை மீது அம்பினைக் குறி பார்த்து எய்யும் போட்டியில் ஒரு வேட்டியினைப் பரிசாகப் பெற்றவன் நல்ல போதையில் இருந்தான். அவன் தன் வெற்றிக்குக் குடிபோதையே உதவியதாகக் கூறிக் குடியின் பெருமையைப் பற்றி வேறு பேசினான். தொலைவில் அம்பெய்யும் போட்டியில் அம்பினை 144 கெச தூரம் செலுத்தியவன் வெற்றி பெற்றான். இந்தப் போட்டியில் அம்பினை மேல் நோக்கிச் செலுத்த வேண்டும். செஞ்சுக்கள் அம்பினைக் குறி தவறாது எய்வதில் திறமை பெற்றவர்களாக இல்லை என்று காப்டன் நியூபோல்டு குறித்துள்ளார். அவர்களுக்கான போட்டியில் வெற்றி பெறுபவனுக்குப் பரிசளிப்பதற்காக நாற்பது கெச தூரத்தில் கட்டி வைக்கப்பட்டிருந்த செம்மறி ஆடு ஒருவனது அம்பு குறி தவறிப் போய் அதன் மீது பட்டதால்

இறக்க நேரிட்டது. சிறிது காலம் முன்பு ஒரு குடியிருப்பின் அடாவடிப் பேர்வழியான செஞ்சு, இன்னொரு செஞ்சுவையும், அவனது மனைவியையும் அடித்து விட்டான். அடிபட்டவன் தன்னை அடித்தவனைக் கொல்லச் சட்டம் இடம் தராது என்பது தனக்குத் தெரியுமாயினும் தன்னை அடித்தவனை வில், அம்பொடு தேடிச் சென்று கொல்ல எழுத்து மூலமாக அனுமதி வழங்கும்படி மாவட்ட வன அலுவலருக்கு முறையீடு செய்து கொண்டான்.

செஞ்சுக்கள் சிலர் தலையில் மெழுகுத் துணி, மான் அல்லது முயலின் தோலினைக் கட்டியிருப்பர். புதுமையில் நாட்டம் கொண்டவர்கள் அணிலின் கொண்டை முடியையோ அல்லது அடர்த்தியான வால் முனையினையோ அலங்காரமாகத் தலை மயிரைச் சுருட்டிக் கட்டும் கயிற்றின் முனையோடு கட்டி அணிவர். இலையாடைகளுக்குப்பதிலாகத் தற்போது கோவணம் தரிக்கின்றனர். பெண்கள் சிலர் சமவெளியில் உள்ள பெண் களைப் பார்த்து இரவிக்கை அணியத் தொடங்கி உள்ளனர். சிறுவர்களும், சிறுமிகளும் பெண்களும் பனை ஓலையால் செய்த வளையல்களை அணிகின்றனர். வலிகளைப் போக்கக் குச்சிகளை நூலில் கோத்துக் கழுத்தில் அணிவர். வெண்டாளி (*Givotia rottleriformis*) விதையினையும் இதேபோலப் பலவகை வலி களையும் போக்கக் கோத்து அணிகின்றனர். பெண்கள் சிலர் நெற்றி, கண்கடை, கைகள் ஆகியவற்றில் பச்சைக் குத்திக் கொண்டிருக்கக் காணலாம். வாத நோயினைத் தீர்ப்பதற்காக ஆண்கள் சிலர் தங்கள் தோளில் பச்சைக் குத்திக் கொண்டிருப் பதை நான் பார்த்தேன்.

செஞ்சுக்களின் 'கூடெம்' எனப்படும் குடிசைகள் தேன் கூட்டின் அமைப்புடையனவாக ஏனாதியர் குடிசைகளைப் போலஅல்லது நீள் வட்ட வடிவில் தாழ்வான அமைப் புடைய கூரையோடு குட்டை அல்லது சிற்றோடைகளின் கரையில் அமைக்கப்பட்டிருக்கும். தான்யங்களே செஞ்சுக்களின் முக்கிய உணவு. இதனோடு வள்ளிக் கிழங்கையும் சேர்த்துக் கொள்வர். அதனை இரும்பு முனை சொருகப்பட்ட குச்சியால் அகழ்ந்து எடுப்பர். காட்டில் கிடைக்கும் பழங்கள் மயில், காக்கை,

ஓணான், கரடி, கருங்குரங்கு போன்ற விலங்குகளின் இறைச்சி ஆகியவற்றையும் உடன் உண்பர். இலுப்பம் பூ, இலுப்பை அரும்பு ஆகியவற்றில் அதிக விருப்பம் உடையவர்கள். புளியம் பழத்தினை அதனுடைய அமிலத் தன்மையை நீக்கப் புளியம் பட்டையை எரித்த சாம்பலோடு கலந்து பின் உண்பர்.

செஞ்சுக்கள் காடுகளில் பின்வரும் காடுபடு பொருள்களைச் சேகரிப்பர்:-

கடுக்காய்
புளியம்பழம்
சீவக்காய்
தேத்தாங்கொட்டை
மலை மாவு
முட மாவு
அத்தி
ஈச்சுர மூலிக்கொடி வேர்
நன்னாரி வேர்
அதிமதுரம் (குன்றி மணி)
காட்டு இலுப்பைப் பூ

செஞ்சுக்கள் மலைத் தேனீ, சிறிய தேனீ என இரு வகைத் தேனீக்களைப் பிரித்து அறிகின்றனர். மரங்களிலும் பாறைகளிலும் உள்ள தேன் கூடுகளிலிருந்து அவர்கள் தேன் எடுக்கின்றனர். இது பற்றிக் கடப்பை மாவட்டக் கையேட்டில் கூறப்பட்டுள்ளதாவது:- ''அடைதற்கு அரிதான யாரும் நெருங்க இயலாத இடங்களில் உள்ள இடங்களுக்கு ஏறிச் சென்று தேன் எடுப்பதில் ஏனாதியரும் செஞ்சுக்களும் நிகரற்றவர்களாக உள்ளனர். நூறு, இருநூறு அடி உயரம் உள்ள செங்குத்தான பாறை உச்சிகளில் கூட இவர்கள் ஏறிச் செல்கின்றனர். நார்க் கயிற்றில் இளம் மூங்கில்களை இணைத்துத் தொங்கும் நூல் ஏணிகள் அமைத்து இவர்கள் இவ்வாறு செயல்படுகின்றனர். கயிறு அறுவதால் சில

சமயங்களில் விபத்துகள் ஏற்படவும் செய்கின்றன. இந்த உறுதி யற்ற ஆதாரத்தில், அவர்கள் மேலும் கீழுமாக ஏறிச் செல்வ தைப் பார்க்கும்போது மனத்தில் கலவரம் ஏற்படவே செய்யும். கீழே இருந்து பார்ப்பவர்களுக்கு உயர உள்ள மனிதர்கள் கயிற்றில் தொங்கும் குழந்தைகள்போல் காட்சி தருவர். பாறை உச்சியில் முளை அடித்தோ, அங்குள்ள மரத்தில் இணைத்தோ நூலேணியைக் கட்டிய பின் அதனைக் கீழே தொங்க விடுவர். கையில் ஒரு கோலுடனும் ஒரு கூடையுடனும் ஒருவன் அதன் வழியாகக் கீழே இறங்குவான். அவ்வாறு இறங்கிய செஞ்சு கொஞ்சம் புல்லையோ புதர்ச் செடி யையோ தேன் கூட்டின் அடியே எரிப்பான். இதனால் பெரும் பாலும் தேனீக்கள் கூட்டை விட்டுப் பறந்து சென்றுவிடும். இவ்வாறு செய்து முடித்த பின் அவன் தொங்கும் நூலேணி யைத் தேன் கூட்டை நெருங்கும்படியாக அசைத்து உதைப்பான். நூலேணி தேன் கூட்டை நெருங்கி வரும் சமயம் தேனடைகள் கூடையில் விழுமாறு கூடையை ஏந்தியபடி தேன் கூட்டினைக் குச்சியால் குத்துவான். கூடை நிரம்பிய பின் அவன் நூலேணியை அதற்கு அடையாளமாக அசைப்பான். அப்போது மேலே இருப் பவன் (அது பெரும்பாலும் நூலேணியில் இறங்கியவன் மைத் துனனாக இருப்பான்) நூலேணியை மேல் நோக்கி இழுப்பான். இதற்குப் பயன்படுத்திய மூங்கில், நார் முதலியவற்றாலான ஏணியை அவர்கள் திரும்ப எடுத்துக் கொள்வதோ, மீண்டும் அதனைப் பயன்படுத்துவதோ இல்லை. ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு இடத்திலும் தேனெடுக்கப் புதிய நூலேணிகளைக் கட்டுவர். அத்தகைய ஏணிகள் தாமே இற்று அறுந்து விழும் வரை தொங்கியபடி இருக்கக் காணலாம்.''

மற்றத் தெலுங்கு வகுப்பாரைப் போலவே செஞ்சுக்களிடை யேயும் புறமணக்கட்டுப்பாடுடைய பல குலப் பிரிவுகள் அல்லது இல்லப் பெயர்கள் உள்ளன. அவற்றின் மாதிரிக்குச் சில வருமாறு:–

| | |
|---|---|
| குர்ரம் (குதிரை) | மேகலா (வெள்ளாடு) |
| அரட்டி (வாழை) | இண்டில (இல்லங்கள்) |

மான்ல (மரங்கள்) சவரம் (தங்கச் சவரன்)
தோட்ட (தோட்டம்) குண்டம்(குழி)

செஞ்சுக்களின் மணமுறைகள் தொடர்பாகக் கர்நூல் மாவட்டக் கையேட்டில் பின்வரும் விவரம் தரப்பட்டுள்ளது:- "மணச்சடங்குகள் தொடர்பாகச் செஞ்சுக்கள் ஒரே மாதிரியான பழக்கம் உடையவர்களாக இல்லை. இவர்கள் மணம் மூன்று வகையாக நடத்தப்படுகிறது. மணம் செய்து கொள்ள விரும்பும் ஆடவன் தானே மணமகளைத் தேர்ந்தெடுக்கிறான். இருவரும் மனம் ஒப்பி, ஓர் இரவைக் கூடெடத்திற்குப் புறம்பே தங்கிக் கழிப்பர். மறுநாள் காலை அவர்கள் திரும்பியவுடன், அவர்களுடைய பெற்றோர், தங்கள் நண்பர்களையும் உறவினர்களையும் அழைத்து, மணமக்களுக்குப் புத்தாடை வழங்கி அவர்களைக் கணவன் மனைவியாக அறிவிப்பர். சடங்கினை நிறைவு செய்யும் வகையில் கூடியுள்ள அனைவருக்கும் விருந்திடுவர். இரண்டாவது வகையில் நடைபெறும் மணநிகழ்ச்சிச் சடங்குகள் பின்வருமாறு நிகழும். கொஞ்சம் இடத்தை வட்ட வடிவமாகச் சுத்தம் செய்து சாணி தெளிப்பர். அதன் நடுவே ஒன்றாகப் பிணைக்கப்பட்ட வில்லும் அம்பும் தரையில் ஊன்றப் படும். மணமக்கள் அந்த வட்டத்தைச் சுற்றி வருவர். கூடி இருப்பவர்கள் அவர்கள் மீது அரிசியினைத் தூவி வாழ்த்த மணச் சடங்கு நிறைவுறும். மூன்றாம் வகை மணச் சடங்கில், முதலில் குடும்பத்தைச் சேர்ந்த பெரியவர்கள் ஒரு பிராமணனிடம் சென்று நல்ல நாள் பார்ப்பர். மேடை அமைக்கப்பட்டு அதில் மணமக்களை அமர்த்தித் தாலி கட்டும் நிகழ்ச்சிக்குப் பின் கூடியுள்ளவர்கள் அரிசியினைத் தூவி வாழ்த்துவர். மணச் சடங்கை நடத்த மூன்று அல்லது நான்கு நாள்களுக்கு ஒரு பிராமணர் அமர்த்தப்படுவார். அவருக்குப் புதுத் துணியும் பணமும் வழங்கப்படும். இச்சடங்கு பயிர்த்தொழில் செய்யும் இந்துக்களின் சடங்கை ஒத்தது. பிராமணர் மணச் சடங்கில் இடம் பெறுவது அண்மைக் காலத்தில் புகுத்தப்பட்ட புதுமை ஆதல் வேண்டும். மண நிகழ்ச்சிகளின்போது தப்பட்டை அடிப்பவர்கள் கிடைப்பார்களானால் அதனை முழக்க ஏற்பாடு செய்வர். நடனமும் நிகழ்த்தப் பெறும்." எனக்கு இரண்டாவது

வகை மண நிகழ்ச்சியைப் பற்றிக் கூறியவர், அதில் மணமக்கள் எதிரெதிரே அமர்த்தப்பட்டு அவர்களுக்கு இடையே தரையில் நான்கு அம்புகள் நடப்படும் எனக் கூறினார். மக்கென்சியின் குறிப்புகளில் மணமக்கள் எதிரெதிரே அமர்த்தப்பட்டு அவர்களுக்கு நடுவே ஓர் அம்பு நடப்படும் எனவும், அம்பின் நிழல் தரையில் விழாத நேரம் பார்த்துப் பெரியவர்கள் மணமக்கள் தலையில் அரிசியினைத் தூவுவர் எனவும் பதியப்பட்டுள்ளது. செஞ்சுக்களின் மணச் சடங்கில், ஏனாதியர் மணச் சடங்கில் போலவே அம்பின் நிழல் தரையில் விழாத நேரமே மணச் சடங்கை முடித்துக் கொள்வதற்குரிய நல்ல நேரமாகக் கருதப் படுகிறது. கைம்பெண்கள் மறுமணத்தை இவர்கள் அனுமதிக்கின்றனர். இரண்டாவது கணவன் பெரும்பாலும் இறந்து போன முதற்கணவன் உடன்பிறந்தவனாகவே அமைவான்.

செஞ்சுக்களின் பாடல்களுக்கு மாதிரியாக இரண்டு ஆண்களும் ஒரு பெண்ணும் பாடிய திருமணப் பாடலினை என் ஒலிப் பதிவுக் கருவியில் பதிந்தேன். அதனை இங்குத் தருகின்றேன்.

"ஆவாரம் இலைகள்தான் தாலி - ஓ! செஞ்சுக்கள் சாமியே
காட்டுத் தழைகள் தான் பாசிங்கம் - ஓ! செஞ்சுக்கள் சாமியே
காட்டு மஞ்சளே கையில் கங்கணம் - ஓ! செஞ்சுக்கள் சாமியே
'பாரு' மரத் தழைகளை ஆடை உடுத்தி - ஓ! செஞ்சுக்கள் சாமியே
'பன்னு'மரத் தழைகளில் பாடி போட்டு- ஓ! செஞ்சுக்கள் சாமியே
உயர்ந்த மலைகளில் அலைந்து திரிந்து- ஓ! செஞ்சுக்கள் சாமியே
அடர்ந்த காடுகளில் அலைந்து திரிந்து- ஓ! செஞ்சுக்கள் சாமியே
செய்யக் கூடாததெல்லாம் செஞ்சபின் - ஓ! செஞ்சுக்கள் சாமியே
ஓபலேசனின் மணமும் முடிச்சாச்சு - ஓ! செஞ்சுக்கள் சாமியே

நாலு மூலைமேடை அமைத்து - ஓ! செஞ்சுக்கள் சாமியே
மேடையிலே அம்புகளும் நட்டு - ஓ! செஞ்சுக்கள் சாமியே
மூங்கிலரிசியிட்டு மூத்தோர்கள் வாழ்த்தெடுக்க - ஓ! செஞ்சுக்கள் சாமியே
தேங்காயுடைத்து அம்பில் வெச்சபின் - ஓ! செஞ்சுக் கள் சாமியே

எங்க கல்யாணச் சடங்கெல்லாம் நடந்தாச்சு."*

என்னைப் பாராட்டும் வகையில் செஞ்சு ஆண்களும் பெண்களும் நடனம் ஆடினர். தம்புராவினை ஒத்த பெரிய தப்பட்டையின் அடிக்கு ஒத்திசைய அவர்கள் அடியிட்டு ஆடினர். ஒவ்வொரு நடனம் முடிந்தவுடனும் சோளத்தட்டையிட்டு எரித்த தீயில் தப்பட்டையின் தோல் உரிய தாளக்கட்டுப் பெற சூடேற்றப்பட்டது. வயதான ஒரு கிழவி தேவதாசிகளைப் போலப் பலவகை அபிநயங்களைப் பிடித்துக் காட்டினாள். வைக்கோலாலும் கிழிந்த பாயாலும் தன்னை அலங்கரித்துக் கொண்ட ஒருவனும், பெண் வேடம் போட்டுக் கொண்ட மற்றொருவனும் கால்களில் சலங்கைகளை அணிந்தவர்களாக வேடிக்கை வினோதங்களை நிகழ்த்தினர்.

"ஒரு குழந்தை பிறந்தவுடன் தொப்பூழ்க் கொடியினை ஒரு கத்தியாலோ அம்பாலோ அறுப்பர். பின்னர் குழந்தையினைக் குளிப்பாட்டுவர். கோடைக் காலமாயின் தண்ணீரும், குளிர் காலமாயின் வெந்நீரும் குளிப்பாட்டப் பயன்படுத்தப் படும். மூன்றாம் நாள் சாதியைச் சேர்ந்த பெண்கள் அனைவரையும் அழைத்து வெற்றிலை பாக்கு வழங்குவர். நான்காம் நாள் வயதான ஒருத்தி குழந்தைக்குப் பெயரிடுவாள். குழந்தையை மான் தோலாலான தொட்டிலிலேயே பெரும்பாலும கிடத்துவர். தொட்டில் ஒரு மூங்கிலிலிருந்து கயிற்றிலோ

---

* செஞ்சுக்கள் தங்கள் மொழியில் பாடிய பாடலின் ஆங்கிலத் தழுவலினைத் தழுவித் தமிழில் அமைந்த பாடல் (மொழிபெயர்ப்பாளர் குறிப்பு.)

துசராக் கொடியிலோ கட்டித் தொங்க விடப்பட்டிருக்கும்'' எனக் கர்நூல் மாவட்டக் கையேடு கூறுகின்றது.

இறந்தவர்களைத் துணித் தொட்டிலில் மூங்கிலில் தூக்கிய படி புதைகுழிக்கு எடுத்துச் செல்வர். உடலைப் புதைகுழியில் கிடத்தியபின் அதன்மேல் இலைக் கொத்துகளை இட்டுப் பின் புதைகுழியை மண்ணால் நிரப்புவர். புதைத்த இடத்தில் மேடை அமைப்புச் செய்து அதன்மீது கற்களைக் குவிப்பர். இரண்டு அல்லது மூன்றாம் நாள் இறந்தவரின் ஆவிக்குப் புதைகுழி அருகே சோறு படைப்பர். அதில் கொஞ்சத்தைக் காகங்களுக்கு இட்ட பின் எஞ்சியதைப் புதைகுழியின் உள்ளோ புதைகுழியின் மேலிடப்பட்ட மேடையிலோ புதைப்பர். இதே சடங்கினை மீண்டும் எட்டாம் நாள் நிகழ்த்துவர்.

செஞ்சுக்கள் ஏனாதியரைப் போலவே செஞ்சுதேவதா என்ற தெய்வத்தை வழிபடுகின்றனர்.* அத் தெய்வத்திற்குச் சில சமயங்களில் தேனும் பழங்களும் படைப்பர். அவர்கள் ஓபலேசுடு என வழங்கும் அகோபிலம் கோயிலைச் சேர்ந்த நரசிம்மர் செஞ்சிட என்ற பெயருடைய அழகில் சிறந்த செஞ்சுச் சிறுமியைத் தூக்கிச் சென்று மணந்து கொண்டதாக நம்புகின்றனர் என்பதனை முன்னமேயே குறிப்பிட்டுள்ளோம். தங்கள் குலத்தைச் சேர்ந்த மற்றப் பெண்களுக்கு இத்தகைய ஆபத்து மீண்டும் வராமல் தடுக்கச் செஞ்சிட, இனி அவர்கள் அழகும் கவர்ச்சியும் அற்றவர்களாகப் பிறக்க வேண்டும் என விதி வகுத்துவிட்டாள். செஞ்சுக்கள் ஓபலேடுசுடுவதைத் தங்கள் மைத்துனர் எனக் கருதுவதோடு, அவருடைய கோயிலுக்குச் செல்லும்போது வேட்டியையும் சேலையையும் கொண்டு சென்று பரிசளிப்பர். செஞ்சுக்களின் தோற்றம் பற்றிக் காப்டன் நியூபோல்டு பின்வரும் கதையினைக் கூறியுள்ளார்:– ''துவாபர யுகத்தில் கிருஷ்ணாவதாரத்திற்கு முன் செஞ்சுவார் யெர கோல்லர் சாதியைச் சேர்ந்த இடையர்களாக இருந்தனர். புகழ் பெற்ற நல்லாமலைகளில்

---

* *1891* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை. (Madras Census Report, 1891.)

கோயில் கொண்டிருக்கும் ஓபலத்தைச் சேர்ந்த ஓபல் ஈசுவரர் யெர கோல்லர் குடும்பத்தைச் சேர்ந்த கன்னி செஞ்சிடாவைத் தூக்கிச் சென்று வைத்துக்கொண்டார். அவளுக்கு அவர் வழிப் பிறந்த குழந்தைகளின் சந்ததியினரே செஞ்சுக்கள்.'' செஞ்சுக்கள் அங்காளம்மன், பொட்டுராசு சுங்காளம்மன், மல்லம்மா, குருப்பா போன்ற சிறு தெய்வங்களையும் வழிபடுகின்றனர்.

உராய்ந்தால் நெருப்புப் பற்றும் நெருப்புக் குச்சிகள் வழக்கிற்கு வராத அந்த நாள்களில் செஞ்சுக்கள் சக்கிமுக்கிக்கல், எஃகு, சற்றே கரிந்த இலவம் பஞ்சுச் சுளை ஆகியவற்றைக் கொண்டு நெருப்பு உண்டாக்கினர். மலபாரைச் சேர்ந்த பணியன்களைப் போலப் பிளந்த இரு மூங்கில் துண்டுகளைக் கொண்டு தீக்கடையும் முறையாலோ அறுத்து இழுக்கும் முறையாலோ நெருப்பு உண்டாக்க அறிந்துள்ளனர் எனவும் எனக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

காதிர், பணியன், குறும்பர் ஆகிய காட்டு வாசிகளுக்குரிய தான பண்புகளான கட்டையான உயரத்தையும், உயர்ந்த மூக்கு விகித அளவினையும் இன்னமும் சில செஞ்சுக்கள் பெற்று விளங்குகின்றனர். அவர்கள் இனத்தில் உடற்கூறு ஒரே படித்தான அமைப்புடையதாக இல்லை என்பது பார்ப்பவர்களுக்கு வெளிப்படையாகத் தெரியக் கூடிய ஒன்றாகும். நடுத்தர உயரம் அல்லது நல்ல உயரமும் நீண்டு குறுகிய மூக்கும் கொண்ட பலரை அவர்களிடையே காணலாம். கர்நூல் மாவட்டக் கை யேட்டில் செங்கல் தயாரிக்கும் ஒருவன் செஞ்சுச் சிறுமி ஒருத்தியை மணந்து கொண்ட செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

| உடல் வாகு. செ. மீ. | | | மூக்கின் தகவு அளவு | | |
|---|---|---|---|---|---|
| சராசரி | மேல் அளவு | கீழ் அளவு | சராசரி | மேல் அளவு | கீழ் அளவு |
| 162.5 | 175.0 | 149.6 | 81.9 | 95.7 | 68.1 |

போயன் ஒருவன் செஞ்சுப் பெண்ணை மணந்து கொண்டவனாக அவர்களோடு கூடெத்தில் தங்கி வாழ்வதாகவும் எனக்குத் தகவல் தந்துள்ளனர். இப்படியாகச் செஞ்சுக்களின் தூய உடற்கூறு உரு மாறாட்டத்திற்கு ஆளாகியுள்ளது. (பார்க்க: பக்கம்-54 அட்டவணை)

பிற பழங்குடிகளின் தலை அமைப்பைப் போலவே செஞ்சுக்களும் நீண்ட மண்டையோட்டோடு கூடிய (dolichocephalic) பொதுவான தலை அமைப்பை உடையவர்களாக விளங்குகின்றனர். குறுகிய செங்குத்தான பக்கங்களோடு கூடிய மண்டை ஓட்டினை உடைய (mesaticephalic) நல்லாமலைகளைச் சார்ந்த சமவெளிகளில் வாழ்பவர்களோடு செஞ்சுக்கள் எவ்வாறு மாறுபட்டவர்களாக உள்ளனர் என்பதனைப் பின்வரும் அட்டவணை தெளிவுபடுத்தும்.

| | | தலையின் தகவு அளவு | தகவு அளவு 80-க்கும் மேற்பட்டதாக உள்ளோர் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 40 | செஞ்சுக்கள் | 74.3 | 1 |
| 60 | கோல்லர் | 77.5 | 9 |
| 50 | போயர் | 77.9 | 14 |
| 39 | தோட்ட பலிசர் | 78.0 | 10 |
| 49 | மொத்தாரி காபுகள் | 78.0 | 16 |
| 19 | உப்பரர் | 78.8 | 4 |
| 16 | மங்களர் | 78.8 | 7 |
| 17 | யெருக்கலர் | 78.6 | 6 |
| 12 | மேதரர் | 80.7 | 8 |

செஞ்சுக்களது பார்வையின் கூர்மைத் திறன் கொஹனின் (Cohn's) ஆறாம் எண்ணுக்குரிய E எழுத்தினைக் கொண்டு சோதனை செய்யப்பட்டது. மருத்துவச் சோதனை அமைப்புப்படி பார்வைக் கூர்மையைக் கணக்கிடும் முறையில் 6 என்பது வாய்பாட்டின் நிலைத்த அடியெண் கூறாகவும், எழுத்தினை எத்தனை மீட்டர் தூரம் வரையில் பரிசோதனைக்கு உட்படுத்தப்படுபவர் இனம் கண்டு கொள்கின்றாரோ அந்தத் தூரம் வாய்பாட்டின் மேலெண் கூறாகவும் கொள்ளப்படும்.

எடுத்துக்காட்டு:-

$$\text{பார்வைக் கூர்மைத் திறன்} = \frac{13 \text{ மீட்டர்}}{6} = 2.16$$

நானும் முனைவர் டபிள்யூ. எச். ஆர். ரிவர்ஸ் அவர்களும் பல சாதியினரையும், பழங்குடியினர்களையும் பரிசோதித்து அவர்கள் சராசரியாக எவ்வளவு மீட்டர் தூரத்தில் எழுத்தினை இனம் கண்டு கொள்கின்றனர் எனக் கண்டறிந்த விவரம் வருமாறு:-

| | | |
|---|---|---|
| 16 | சோழகர் (ரிவர்ஸ்) | 12.9 |
| 94 | கோத்தர் | 12.8 |
| 108 | படகர் | 12.6 |
| 50 | பறையர் | 12.5 |
| 58 | தெலுங்கு உழவர் | 12.4 |
| 28 | செஞ்சுக்கள் | 12.3 |
| 55 | ஊராளிகள் | 12.2 |
| 30 | பிராமணர், மைசூர் | 12.2 |
| 30 | பிராமணரல்லாதார், மைசூர் | 12.2 |

சோதனைக்கு உட்படுத்தப்பட்ட எல்லாப் பிரிவினருள்ளும் பார்வைக் கூர்மைத் திறன் 12 மீட்டருக்கும் 13 மீட்டருக்கும் இடைப்பட்டதாக இருப்பதால் அத்திறன் 2.15-க்கும் 2.03-க்கும் இடைப்பட்டதெனலாம். எவ்வளவு அதிகதூரம் ஒவ்வொரு பிரிவினராலும் எழுத்தினைப் பார்த்து அறிய முடிந்தது என்ற விவரம் வருமாறு:-

| | | |
|---|---|---|
| சோழகன் | 18 | மீட்டர் |
| பறையன் | 19 | ” |
| படகன் | 20 | ” |
| தீட்சிதர்-பிராமணன் | 20 | ” |

அளவுக்கு மீறிய கூரிய பார்வைத் திறன் உடையவர்கள் எவரும் காணப்படவில்லை. சோதனைக்கு உட்படுத்தப்பட்ட ஒன்பது வகுப்பாரும் பழங்குடியினர்களான செஞ்சுக்கள், சோழகர், ஊராளிகள் முதல் நாகரிகமிக்கவரான பிராமணர் வரை பரந்துபட்டதொரு மக்கட் பரப்பினைச் சேர்ந்தவர்களாக அமைந்துள்ளனர். தன் உணவிற்காகக் காட்டில் அலைந்து திரிந்தும், வனவிலங்குகளின் காலடிச் சுவடுகளைக் கண்டறிந்தும் காட்டு வாழ்க்கை வாழ்வதற்குத் தேவையான நன்கு பழக்கப் படுத்தப்பட்ட பார்வைத் திறன் கொண்டிருந்தாலும், மேற் கண்ட புள்ளி விவரங்கள் அவனுடைய பார்வைத் திறன் மற்ற நாகரிகமடைந்த வகுப்பாருடைய பார்வைத் திறனைவிட மிகுந்திருக்கவில்லை என்பதனைத் தெளிவாக்குகின்றன.

1904-05-ஆம் ஆண்டில் கர்நூல் மாவட்டத்தில் செஞ்சுக் களுக்காக இரண்டு போர்டு உயர் தொடக்கப் பள்ளிகள் இருந்தன. அவற்றில் எழுபத்தி மூன்று மாணவர்கள் படித்தனர். உணவு, உடை, புத்தகங்கள், கற்பலகைகள் ஆகியன அவர் களுக்கு இலவசமாக வழங்கப்பட்டன.

**சேனு - Chēnu (dry field)**

புஞ்சை எனப் பொருள்படும் இது கம்மர்களின் புறமணக் கட்டுப்பாடுடைய குலத்தின் பெயர்.

**சேப்பாட் – Chēppāt**

மாரான்களின் ஓர் உட்பிரிவு.

**சேறுக்காரர் – Chērukāra**

1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் நாயர்களின் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**செருக்கு - Cheruku (sugarcane)**

கரும்பு எனப் பொருள்படும் இது போயர், ஜோகிகள் ஒட்டர் ஆகியோரின் புறமணக்கட்டுப்பாடுடைய குலப் பிரிவு களுக்குரிய பெயராகப் பதியப்பட்டுள்ளது.

**செறுமான் - Cheruman**

செறுமான் அல்லது செறுமக்கள் மலையாளத்துப் பண்ணை யாள்கள் எனவும், மலபாரைச் சேர்ந்த இழிந்த சாதியார் எனவும் விளக்கம் தரப்பட்டுள்ளது. இவர்கள் மண்ணினை நம்பி மண்ணில் உழலும் மக்கட் பிரிவினர். 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில், "இந்தச் சாதியார் தென் மலபாரில் செறுமான் எனவும், வட மலபாரில் புலையன் எனவும் வழங்கப் படுகின்றனர். செறுமான் என இவர்கள் அழைக்கப்படும் தென் மலபாரில் கூட 30,000 – க்கும் மேற்பட்ட பெரும் உட்பிரிவினர் புல செறுமான் என அழைக்கப்படுகின்றனர். இச்சாதியின் முக்கிய உட்பிரிவுகளாகப் பதியப்பட்டுள்ளவை கணக்கன், புல செறுமான், இறாளன், கூடான், ரோலன் என்பனவாம். கணக்கன், புல செறுமான் பிரிவினர் மலபாரின் தென் பகுதி வட்டங்கள் அனைத்திலும் காணப்படுகின்றனர். கூடான் வள்ளுவ நாட்டிலும், ஊராளன் பாலக்காடு, வள்ளுவ நாடு வட்டங்களிலும் காணப்படுகின்றனர்" எனப் பதியப்பட்டு உள்ளது. 1901 கணக்கெடுப்பில் ஆளன், பரம்பன் ஆகியனவும் செறுமான் சாதியின் உட்பிரிவுகளாகப் பதியப்பட்டுள்ளன.

ஒரு கூற்றுப்படி, செறுமான் அல்லது செறுமக்கள் என்ற சொல் மண்ணில் உழைப்பவர்கள் எனப் பொருள் தருவதாகவும் மற்றொரு கூற்றுப்படி, செறுமக்கள் என்பது சிறு குழந்தைகள் எனப் பொருள் தருவதாகவும் கருதப்படுகிறது. இரண்டாவது பொருளுக்குக் காரணமாகப் பரசுராமர் இவர்களைக் குழந்தைகள் போல் பாவித்து நடத்த வேண்டும் எனக் கட்டளை இட்டதை அடிப்படையாகக் கூறுவர். புலையன் என்ற சொல், தீட்டுப் படுத்தல் எனப் பொருள் தரும் புல என்பதன் வேர்ச் சொல்லிலிருந்து பிறந்ததென்பர்.

மலபார் மாவட்ட விவரக் குறிப்பில் செறுமான்கள் பற்றித் தரப்பட்டுள்ள விவரங்கள் வருமாறு:- ‘‘இவர்களுள் 39 பிரிவுகள் இருப்பதாகக் கூறப்படுகிறது. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை கணக்கச் செறுமான், புலச் செறுமான் அல்லது புலையன், இற செறுமான் அல்லது இறாளன், ரோலி செறுமான் அல்லது ரோலன், கூடான் என்பனவாம். இந்த உட்பிரிவுகளைத் தனிச் சாதிகளாகக் கருதப்பட வேண்டுமா என்பதனைப் பற்றி முடிந்த முடிவாக எதுவும் கூறுவதற்கில்லை. இவற்றுள் சில அகமணக் கட்டுப்பாடுடையனவாக உள்ளன. மற்றும் சில அவற்றுள்ளேயே பல உட்பிரிவுகளைக் கொண்டுள்ளன. இதன்படி, சிரக்கல் பகுதியைச் சேர்ந்த புலையன்கள் அகமணக்கட்டுப்பாடுடைய ஒரே பிரிவினராக இருப்பதோடு, அவர்களிடையே மாவடன், எலமானம், தச்சக் குடியன், குண்டத்தோன், செறுவுலன், முலட்டன், தாளன், வண்ணதம், இறமாலோடியன், முல்லவிரியன், இகுடன், குண்டோன் என்ற பதினொரு புறமணக்கட்டுப் பாடுடைய உட்பிரிவுகளையும் கொண்டுள்ளனர். இந்தப் பிரிவுகள் சிலவற்றின் பெயர்கள் தொழில் வேறுபாடு காரணமாக அமைந்தவை எனத் தெரிகின்றது. குண்டோன் பிரிவினைச் சேர்ந்த பெண்களான குண்டோட்டியர் மருத்துவச்சிகளாகத் தொழில் புரிபவர்கள். இதன் காரணமாக இப்பிரிவினைத் தொடும் மற்ற பிரிவினரே தீட்டுக்குள்ளாவதாகக் கருதப் படுகின்றனர். இந்தப் பிரிவினைச் சேர்ந்தவர்களோடு மற்றப் பிரிவினர் உண்பதோ, மண உறவு கொள்வதோ இல்லை. சாவு அல்லது பிறப்பு காரணமாக ஏற்படும் தீட்டைப் போக்குபவன் மருட்டன் என அழைக்கப்படும் மாவடன் பிரிவினன் ஆவான். இவன் தீட்டுப்பட்டவர்கள் பாதங்களில் சாணித் தண்ணீரையும், தலையில் பாலையும் தெளித்துத் தீட்டுப் போக்குகின்றான். மணநிகழ்ச்சிகளின்போது மருட்டன் மணமகளுக்குரிய விலையான 32 பணத்தை மணமகனிடம் இருந்து பெற்று, மணமகள் வீட்டாரிடம் சேர்க்கின்றான். மலபார் மாவட்டத்தின் தென் வட்டங்களில் மட்டும் காணப்படும் இற செறுமான்களும், கணக்கன்களும் புறமணக்கட்டுப்பாடுடைய பல கூட்டங்களாகப் பிரிவு பட்டுள்ளனர். இக் கூட்டங்களுக்குரிய பெயர்கள் பெரும்

பாலும் இவர்கள் பணிபுரியும் பண்ணையார்களுடைய இல்லப் பெயர்களாகவே உள்ளன. செறுமான்கள் பயிர்த்தொழிலாளரா கவும், கூலிகளாகவுமே அமர்த்தப்பட்டுள்ளனர். அவர்கள் பாய்கள் பின்னுவதும், கூடைகள் முடைவதும் உண்டு.

இவர்களைப் பற்றித் திரு எல். கே. அனந்த கிருட்டிண அய்யர் குறித்துள்ள* தகவல்கள் வருமாறு:- ''புலையர்களிடையே வழங்கி வருகின்ற வழக்கு வரலாற்றுப்படி முன்னொரு காலத் தில் அவர்கள் நாட்டின் பெரும் பகுதியின் ஆட்சி உரிமை பெற்றவர்களாக இருந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது. வட திருவாங்கூரைச் சேர்ந்த புலையர்களால், இன்றும் மரியாதைக் குரியவராக நடத்தப்படும் அய்க்கரை எஜமானின் முன் னோர்கள் புலைய மன்னர்களாவர். அவரை இன்றும் புலையர்கள் தங்கள் இனத் தலைவராகவும், மேலாண்மை நடத்துவதற்குரிய வராகவும் ஏற்றுக் கொள்கின்றனர். குன்னத்து நாடு வட்டத் திலுள்ள அய்க்கரை நாடு அப்பகுதியில் இன்றும் இக்கதை வழக்கின் ஆதாரமாகச் சிறப்புறத் திகழ்ந்து வருகின்றது. திருவனந்தபுரத்தில் வெள்ளி ஏரியின் கரையில் புலையனார் கோட்டை என்ற குன்று உள்ளது. ஒரு காலத்தில் புலைய அரசன் அங்கு இருந்து ஆண்டதாக நம்பப்படுகிறது. வேறு பகுதிகளிலும் அவர்கள் ஆட்சி நிலவியதாகக் கூறுகிறார்கள். செல்வப்பிள்ளையின் திருவுருவத்தை மேல் கோட்டையில் ஒரு பறையன் கண்டெடுத்ததையும், சவரன் ஒருவன் தன்னிடம் வைத்திருந்த புனிதக் கல்லானது பூரி செகன்னாதர் ஆலயத் திருவுருவம் ஆனதையும் ஒப்பத் திருவனந்தபுரத்திலுள்ள பத்மனாபர் வழிபாடும் புலையர்களோடு நெருங்கிய தொடர் புடையதாக உள்ளது. முன் ஒரு காலத்தில் அனந்தன் காட்டில் தன் கணவனோடு வாழ்ந்து கொண்டிருந்த புலைச்சி ஒருத்தி, திடீரென ஒரு குழந்தையின் அழுகுரல் கேட்டதும் அவ்விடத்திற்கு விரைந்து சென்று பார்த்தபோது, பாம்பினால் பாதுகாக்கப் பட்டதாகத் தரையில் ஒரு குழந்தை கிடக்கக் கண்டாள். அதன்மீது இரக்கங்கொண்ட அவள் அதனைத் தன் குழந்தை

---

* கொச்சி மாநில மனித இயல் ஆய்வு வெளியீடு, எண். 6. 1906.
(Monograph, Eth. Survey of Cochin, No. 6, 1906.)

யாகப் பாவித்துப் பாலூட்டி வளர்த்து வந்தாள். பாம்பு அக்குழந்தையைப் பாதுகாத்து அதனுடைய தெய்வீகத் தன்மையை அவளுக்கு உணர்த்தியது. அக்குழந்தை விட்டுணு வின் அவதாரம் ஆகையால் அந்த உண்மை வெளிப்பட்டது. இந்த வியக்கத்தக்க நிகழ்ச்சியைக் கேள்விப்பட்ட திருவாங்கூர் மன்னர், அந்தக் குழந்தை கண்டெடுக்கப்பட்ட இடத்தில் உடனே ஒரு கோயிலைக் கட்டி அதனைப் பத்மனாபருக்கு உரியதாக்கினார். திருவனந்தபுரத்தைச் சுற்றி வாழும் புலையர்கள், முன்னொரு காலத்தில் புலைய அரசன் ஆட்சி புரிந்ததாகவும், அவன் தலைநகர் இன்றைய திருவனந்தபுரத்திற்கு அருகே அமைந்திருந்ததாகவும் இன்றும் உறுதியான நம்பிக்கை உடையவர்களாக உள்ளனர். பின்வரும் கதையும் அவர்களிடையே வழங்கி வருகின்றது. புலையர்கள் சிவனிடமிருந்து காட்டினை அழித்து அந்த நிலத்தில் பயிர்த்தொழில் புரிய மண்வெட்டி, கோடரி ஆகியவற்றோடுகூட வரமும் பெற்றனர். அந்த நிலத்தை மற்றவர்கள் பறித்துக் கொண்ட போது அவர்கள் அவ்வாறு பறித்துக் கொண்டவர்களின் கீழ் பணிபுரியுமாறு அறிவுறுத்தப்பட்டார்கள்.''

திரு லோகன் கருத்துப்படி,* செறுமான்கள் இரு பிரிவினர்களாக உள்ளனர். அவர்களுள் இறயன் புலையனை விடச் சாதியில் சிறிது உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான். ''அப் பிரிவுகளின் பெயர்கள் உணர்த்துவதுபோல இறயன் தன்னைப் பணிக்கு அமர்த்திக்கொண்டுள்ள பண்ணையாரின் வீட்டு இற வாரம்வரை நெருங்கும் உரிமை உடையவன். புலையன் என்ற பெயரே அவனைக் காண்பவர்களையும், நெருங்குபவர்களையும் தீட்டுப் படுத்துபவன் எனப் பொருள் தருவதாகும்.'' செறு மான் என்ற பெயர் சிறியது எனப் பொருள்படும் செறு (சிறு) என்ற பகுதியின் அடியாகப் பிறந்ததாதல் வேண்டும். அல்லது அது குட்டை அல்லது தாழ்வான வயல் என்ற பொருள்தரும் 'சேர' என்ற சொல்லிலிருந்து பிறந்ததாதல் வேண்டும். ''மலபார் கடற்கரைப் பகுதி ஒருகாலத்தில் சேரப் பேரரசின் பகுதியாக

* மலபார் மாவட்டக் கையேடு. (Manual of Malabar.)

இருந்தது. இன்றும் கள்ளிக்கோட்டையின் கடற்கரை சார்ந்த பகுதியும் அதற்குத் தென்கிழக்காகப் பரந்து கிடக்கும் உள் நாட்டு நிலப்பகுதியும் அந்தப் பழைய பெயரான சேர நாடு என்ற பெயரையே கொண்டு வழங்கி வருகின்றது. மேலும் கடற் கரைப் பகுதியைச் சார்ந்த சிறு குழந்தைகளுங்கூட நன்கு அறிந்த பெயரான மலபாரின் பேரரசரின் பெயர் சேரமான் பெருமாள் என்பது அவருடைய பட்டப் பெயரே அன்றி அவருடைய இயற் பெயரன்று என்பதில் ஐயத்திற்கு இடமில்லை. அப்பட்டத்தின் பொருள் சேர மக்களின் தலைவர் (பெருமகன்) என்பதாகும்.''

மலபாரில் அடிமை நிலை பற்றிய வரலாறு தொடர்பாக நல்லதொரு விவரக் குறிப்பு திரு லோகனால் தரப்பட்டுள்ளது. அதிலிருந்து சில பகுதிகள் வருமாறு:– ''ஆங்கிலேயரின் ஆட்சி தொடங்கப்பட்ட 1792-இல் அடிமை வணிகத்திற்கு எதிராகப் பொது அறிவிப்பு வெளியிடப்பட்டது. 1819–இல் முதன்மை மாவட்ட ஆட்சியர் செறுமார்களின் நிலைபற்றி அரசுக்கு ஒரு அறிக்கை அனுப்பினார். வரிபாக்கிக்காக அடிமைகளை விற்கும் பழக்கம் நிறுத்தப்பட வேண்டும் என அதற்குப் பதில் கிடைக்கப் பெற்றார். 1821-இல் ஆட்சிக் குழு உறுப்பினர்கள் தங்களுக்குத் தரப்பட்ட செய்திகள் அடிமைகளைப் பற்றிய சரியான தகவல்களைக் கொண்டதாக இல்லையென அதிருப்திப் பட்டவர்களாகப் பின்வருமாறு கூறியுள்ளனர்:– 'பண்ணை யாள்களில் ஒரு பகுதியினர் அடிமைகளாக உள்ளனர் என எங்களுக்குத் தகவல் கிடைத்து உள்ளது. அவர்கள் நிலத்தோடு ஒருங்கு பிணைக்கப்பட்டு விற்பனைக்கு உரியவாகளாகவும் கருதப்படுகிறார்கள் எனத் தெரிகிறது.' 1836-இல் மலபாரில் அரசின் நிலத்திற்காக அடிமைகள் செலுத்த வேண்டிய வரித் தொகையாக ரூ. 927-13–0ஐ மாவட்ட ஆட்சியரின் கணக்கி லிருந்து வரிக் குறைப்புச் செய்து கழித்துக் கொள்ள அரசு ஆணை பிறப்பித்துள்ளது. அதே சமயம், மலபாரில் அரசு நிலத்தில் குடியிருக்கும் அடிமைகளை அடிமைத் தனத்தினின்றும் விடுவித்து, உரிமை நல்குவதற்கான பரிந்துரைக்கும் ஒப்புதல் அளிப்பதாகவும் அரசு கூறியுள்ளது. 1841-இல் கள்ளிக்கோட்டை யில் நடுவராயிருந்த திரு ஈ. பி. தாமஸ், சில வட்டங்களில்

அடிமைகளைப் பெற்றுத் தருவதற்காகப் பெண்கள் அதிக விலைக்கு விலை போகின்றனர் என்பதனைச் சுட்டிக் காட்டிச் சதார் அதாலத்துக்குக் கடுமையான சொற்களால் விமர்ச்சித்துக் கடிதம் ஒன்றினை அனுப்பியுள்ளார். அதில் பத்து வயதுக் குட்பட்ட சிறுவனின் சராசரி விலை ரூ. 3-8-0; ஒரு சிறுமியின் விலை அதனை விடச் சற்றுக் குறைவானது; பத்து மாதக் கைக் குழந்தை மட்டும் தனியே ஒரு வழக்கு மன்ற ஏலத்தில் ரூ. 1-10-6க்கு விலை போனது. அண்மையில் தொடுக்கப்பட்ட ஒரு வழக்கில் இருபத்தேழு அடிமைகளின் மீதான உரிமை பற்றி விசாரிக்கப்பட்டு வேறு தீர்ப்பும் வழங்கப்பட்டுள்ளது போன்ற குறைகளை அவர் சுட்டிக் காட்டியுள்ளார். இன்னொரு கடிதத்தில் திரு தாமஸ் 1835 கணக்கெடுப்பில் 1,44,000 எண்ணிக்கையினராக இருந்த அடிமைகள் 1842 கணக்கெடுப்பில் 1,55, 000 எண்ணிக்கையினராக உயர்ந்துள்ளதையும் சுட்டிக் காட்டியுள்ளார். இந்தக் கடிதங்களே வாரிய ஆட்சிக் குழு உறுப்பினர்கள் அடிமைகள் பற்றிச் சட்ட மூலங்கள் செய்யும்படி ஆணை பிறப்பிக்கக் காரணமாயின எனலாம். ‘1843-ஆம் ஆண்டுச் சட்டம் ஐந்து, அதன்பின் பிறப்பிக்கப்பட்டது. அதன் வரைவுகள் மலபார் முழுதும் நன்கு எடுத்து விளக்கப்பட்டு விளம்பரப்படுத்தப்பட்டன. மாவட்ட ஆட்சியாளர் செறுமாரிடம், அவர்களுடைய உரிமையைக் காக்கவே இந்தச் சட்டம் இயற்றப்பட்டதாக எடுத்துக் கூறிய தோடு, அவர்களின் பண்ணையார்கள் அவர்களை இரக்கத்துடன் நடத்தினால் அவர்கள் தொடர்ந்து அவர்களின் கீழ் பணிபுரியலாம் எனவும், ஒருவன் கீழ்பணிபுரியும் ஓர் அடிமை அவனைவிட்டு வேறு ஒருவன் கீழ்ச் சென்று பணியாற்ற வேண்டுமென அரசு ஆணை இடாது எனவும், ஓர் அடிமை பணியாற்ற விரும்பும் இடத்தை அவன் விருப்பத்திற்கு மாறாக மாற்றி அமைக்கும் வகையில் அரசு தலையிடாது எனவும்’ விளக்கிக் கூறினார். மேலும், ‘ஓர் அடிமையை ஜன்மம், காணம், பணயம் எனக் கூறுபவனுடைய அத்தகைய கூறும் உரிமை அல்லது உரிமைகளின் உண்மையை ஆராய அரசு அலுவலர்களோ வழக்கு மன்றங்களோ முயற்சி மேற்கொள்ளாது எனவும் அவரே கூறியுள்ளார். 1852-இலும், மறு

படியும் 1855–இலும் அடிமைகள் வணிகம் தொடர்ந்து நடை பெறுவதாக அரசின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டது, அதனை முழுவதுமாக ஆராய்ந்த பின் செறுமாரை மீட்பதற் காக மேற்கொண்டு எதுவும் செய்ய வேண்டியதில்லை என முடிவெடுக்கப்பட்டது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இங்கிலாந் தில் நிலவிய பொதுமக்கள் கருத்தின் வலிமையால் அவர்கள் எத்தகைய கசப்பினைத் தொல்லைப்பட்டு விழுங்கவேண்டி வந்தது என்பதனைச் செறுமார் இன்றுங்கூட உணர்ந்து கொண்டார்களில்லை. இப்பொழுதுங்கூட, அவர்களின் முழு ஒப்புதலுடன், அவர்கள் விற்கவும் வாங்கவும் வாடகைக்கு விடவும் படுகிறார்கள் எனக் கருத ஆதாரமான சான்றுகள் உள்ளன. இச்செயல் 1862–இல் இயற்றப்பட்ட இந்தியாவில் அடிமை வணிகத்திற்குச் சாவு மணியடித்த தண்டனைக்குரிய குற்றச் சட்டத்திலிருந்து தப்ப மறைவாகவே நடத்தப்பட்டு வருகின்றது. இந்த அடிமைச் சாதியினரால், அவர்களுக்கு எனக் குடியிருக்கத் தோப்புகளில் உரிமையோடு கூடிய மனை இடங்கள் வழங்கப்படும்வரை உண்மையான சுதந்திரம் என்பது எப்படிப்பட்டது என்பதனை அவர்கள் உணர்ந்து கொள்ள முடி யாது.'' திரு அனந்த கிருட்டிண அய்யரவர்கள், “பல ஆண்டு களுக்கு முன்பே அடிமைத்தனம் ஒழிக்கப்பட்டு விட்டாலும் வள்ளியாள் (வள்ளம் பெறும் ஆள்; ஆண்டுக்கு இத்தனை வள்ளம் நெல் எனத் தந்து பண்ணைப் பணியாளாக அமர்த்துவது; தமிழ் நாட்டில் படி ஆள் என வழங்குவர்) என்ற பெயரில் இது இன்னமும் இருந்தே வருகின்றது'' எனக் குறித்துள்ளார்.

தண்டனைக்குரிய சட்ட வரைவு, அடிமைகள் பற்றிக் கூறுவதாவது:-

ஒருவனை அடிமை என்ற பெயரால் இறக்குமதி, ஏற்றுமதி, இடப்பெயர்வு, விற்பது, வாங்குவது, கொடுப்பது ஆகியன வற்றைச் செய்ய யார் முற்பட்டாலும், ஒருவனை அவனுடைய விருப்பத்திற்கு மாறாக ஏற்கவோ, பெறவோ, பிடித்து வைக்கவோ செய்ய யார் முற்பட்டாலும், அவர்கள் ஏழாண்டு கள் சிறைத் தண்டனை பெறுவதோடு அபராதத்திற்கு ஆட் படவும் வேண்டிவரும்.

அடிமைகளை இறக்குமதி, ஏற்றுமதி, இடப்பெயர்வு விற்றல், வாங்கல், கடத்தல், முகவராய் இருந்து வணிகம் செய்தல் ஆகியவற்றில் வழக்கமாக ஈடுபடுபவர்கள் வாழ்நாள் முழுதும் நாடு கடத்தப்படவோ பத்தாண்டுகள் சிறைத் தண்டனை பெறவோ உரியவராவதோடு அபராதத்திற்கு ஆட்படவும் வேண்டிவரும்.

சட்டத்திற்குப் புறம்பாக, ஒருவனை அவன் விருப்பத்திற்கு மாறாகப் பணிசெய்யும்படி வற்புறுத்தும் ஒருவன் ஓராண்டு வரையான சிறைத் தண்டனையோ அபராதமோ இரண்டுமோ விதிக்கப்பெறுவதற்கு உரியவனாவான்.

''பரிதாபத்திற்குரிய இவர்கள் நிலை சமுதாய அமைப்பில் மிகத் தாழ்ந்ததாகவே உள்ளது. செறுமான் ஒருவன் உயர்ந்த சாதிக்காரன் ஒருவனை எதிர்ப்படின் முப்பதடி தூரம் ஒதுங்கி நிற்றல் வேண்டும். இந்த எல்லையை மீறி அவன் நெருங்கி வந்து விடின் உயர்ந்த சாதிக்காரன் தீட்டுக்கு உள்ளானவன் ஆவான். தண்ணீரில் குளித்தே அவன் அதனைப் போக்கிக் கொள்ள இயலும். ஒரு செறுமான் பிராமணர்கள் வாழும் ஊரையோ கோயிலையோ, குளத்தையோ நெருங்கக் கூடாது. அவன் அப்படி நெருங்குவானாயின் புனிதமாக்கும் சடங்கு நிகழ்த்தப் படல் வேண்டும். பொதுச் சாலைகளில் நடக்கும் போதுகூட அவன் தனது பண்ணையாரைப் பார்ப்பானாயின் சாலையை விட்டு விலகிச் சேற்றிலும் சகதியிலுமாக அவரைத் தீட்டுப் படுத் தாதிருக்கவும், அவருடைய கோபத்திற்கு ஆளாகாதிருக்கவும் ஒதுங்கிப் போக வேண்டியவனாகின்றான். வழியில் எதிரே வருபவர்களைத் தீட்டுப்படுத்தாமல் இருக்கும் பொருட்டு அவன் 'ஓ, ஓ, ஓ' என்ற இனிமையற்ற ஒலியினைத் திரும்பத் திரும்ப எழுப்பியபடி செல்ல வேண்டியவனாகின்றான். (சில இடங்களில் -உதாரணமாகப் பாலக்காட்டைக் கூறலாம்-செறுமான் சாலை யில் அழுக்கான கந்தல் துணியைத் தன் முன் விரித்து வைத்தபடி கீச்சுக் குரலில் 'அம்பிரானே, அம்பிரானே, என குக் கொஞ்சம் காசு போடுங்கள், அதனை இந்தத் துணியில் வீசிப் போங்கள்' எனக் கத்தியபடி இருப்பதைக் காணலாம் பிராமணர் செல்வாக்கு மேலோங்கியுள்ள திருவாங்கூர்

கொச்சி மாநிலங்களில் அவன் நிலை, தாங்க இயலாத துன்பம் மிகுந்ததாகும். பாலக்காடு வட்டத்தில் செறுமார் இன்றும் கடைவீதியில் நுழைய முடியாது" எனத் திரு எஸ். அப்பா துரை அய்யர் எழுதியுள்ளார்.* உயர்ந்த சாதிக்காரரைத் தீட்டுப் படுத்திவிடக் கூடாது என்பதற்காகச் சகதியில் இறங்கி ஒதுங்கி, அடிக்கடி இடுப்பளவு வரைகூட உடலை நனைத்துக் கொள்ள வேண்டியவராகும் செறுமார் பற்றிய ஒரு பரிதாபகரமான நிகழ்ச்சியும் உண்டு. 1904-இல் செறு மான் ஒருவன் நாயர் ஒருவனைத் தீட்டுப்படுத்தும் எல்லை யையும் தாண்டி நெருங்கிவிட்டான். அவனை அந்த நாயர் தடியால் தாக்கினான். அச் செறுமான் ஓடிச் சென்று துணைக்கு இன்னொரு செறுமானை அழைத்து வந்தான். இதனைக் கண்ட நாயர் ஓடத் தொடங்கினான். செறுமான்கள் இருவரும் அவனைத் துரத்தியபடி ஓடினர். தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சியில் அந்த நாயர் துரத்தி வந்தவர்களுள் முன்னால் வந்த செறுமானை மண்வெட்டியால் தாககித் தலையில் அடித்துக் கொன்றுவிட்டான்.† மற்றொரு வழக்கில் ஒரு மாப்பிள்ளாவின் பண்ணையாளான செறுமான் தன் பண்ணையாருக்காகப் புல் சுமந்து வரும்போது, தெரியாது தியன்கள் சிலரை நெருங்கிச் சென்று அவர்களைத் தீட்டுக்கு உள்ளாக்கி விட்டான். தங்களுக்கு ஏற்பட்ட இந்த அவ மானத்தைப் போக்கிக் கொள்ள அந்தத் திமிர் கொண்ட தியன்கள் அந்தச் செறுமானையும், அவன் பண்ணையாரையும் நன்கு அடித்து உதைத்தனர்.

கொச்சி மாநிலத்தைச் சேர்ந்த புலையர் பற்றிய நிலை யைத் திரு அனந்த கிருட்டிண அய்யர் பின்வருமாறு விளக்கு கின்றார்:- "இவர்கள் வெளக்கத் தலைவன் (நாவிதர்), மண்ணான் (வண்ணார்), பாணான், வேட்டுவன், பறை யன், நாயாடி, உள்ளாடன், மலயன், காடர் ஆகி யோர் சமைத்த உணவினை உண்பதில்லை. மாநிலத்தின்

---

* கல்கத்தா ரெவ்யூ, 1900. (Calcutta Review, 1900.)

† சென்னை மாநிலக் காவல்துறை அறிக்கை, 1904. (Madras Police Report, 1904.)

தெற்குப் பகுதியில் புலையர் பிராமணர்களிடமிருந்து 90 அடி தூரத்திலும், நாயர்களிடமிருந்து 64 அடி தூரத்திலும் நிற்க வேண்டும். சாதியில் தாழ்ந்தவர்களின் நிலைக்கேற்ப இந்தத் தூரம் குறைந்து கொண்டே வரும். புல செறுமான்கள், பறையன்கள், நாயாடிகள், உள்ளாடன்கள் ஆகியோர் இவர்களை நெருங்கும்போது இவர்கள் தீட்டுக்கு உள்ளாகின்றனர். (புல செறுமான்கள் மாட்டிறைச்சியை உண்பதோடு கூடக் கால்நடைகளின் தோலையும் விற்பனை செய்கின்றனர்.) சித்தூர் வட்டத்தைச் சேர்ந்த கணக்கச் செறுமான்கள் எற செறுமான்களையும், கொங்க செறுமான்களையும் தொடுவதாலோ ஏழெட்டு அடிக்கு மேலே நெருங்கிச் செல்வதாலோ தீட்டுப் படுத்துகிறார்கள். இதே கணக்கச் செறுமான்கள் புல செறுமான்கள், பறையன்கள், வேட்டுவன்கள் ஆகியோரை நெருங்குவதால் தீட்டுக்கு உள்ளாவதால் அவர்கள் இவர்களிடமிருந்து ஏழெட்டு அடி தூரத்திற்கு அப்பாலேயே நிற்றல் வேண்டும். புலையனும் வேட்டுவனும் ஒருவனை ஒருவன் நெருங்க நேரிட்டால் இருவருமே தீட்டு நீங்கக் குளிக்கின்றனர். இதற்குக் காரணம் இந்த இருவருள் சாதியில் உயர்ந்தவர் யார் என்பது பிரச்சனைக்குரியதாக இருந்து வருவதுதான். நாயாடியால் தொடப்படும் இழிவிற்கு உள்ளாகும் செறுமான் ஏழு குளங்களில் நீராடுவதோடுகூடத் தன் விரல்களில் ஒன்றிலிருந்து சில சொட்டுக்கள் குருதியை வெளியேற்றித் தன் தீட்டினைப் போக்கிக் கொள்ள வேண்டும். ஒரு புலையன் வீட்டு எல்லையில் நுழைந்துவிட்ட பிராமணன் தன் பூணூலை மாற்றிக் கொள்வதோடு கூடப் பஞ்ச கவ்வியம் (பசு தரும் ஐந்து பொருள்கள்) பருகித் தன் தீட்டினைப் போக்கிக் கொள்ள வேண்டும். திருச்சூர் வட்டத்தைச் சேர்ந்த வள்ளுவப் புலையன் கன்று ஈன்ற பசுவினைத் தொட நேர்ந்தால் மூன்று நாள் உண்ணாது பட்டினி இருப்பான். அவன் கள்ளையும் இளநீரையும் மட்டுமே பருகி அந்த நாள்களைக் கழிப்பான். அவன் மனைவி பிள்ளை பெறும் சமயத்திலும் அவன் மூன்று நாள்கள் பட்டினி இருக்க வேண்டும்.'' மலபாரில் மக்களிடையே நடைபெறும் உரையாடலில் தியபாடு அல்லது செறும்பாடு அதாவது தியனும் செறுமனும் எவ்வளவு தூரத்தில் ஒதுங்கி

நிற்க வேண்டும் என்ற அளவு) என்ற சொல் வழக்குகளை அடிக்கடி கேட்கலாம்.*

திரு டி.கே. கோபால் பணிக்கரால் செறுமான்கள் நிலை பின்வருமாறு விளக்கப்பட்டுள்ளது.† தங்கள் நிலங்களில் செறுமார் குடியிருக்க இடம் தரும் பண்ணையார்களின் கைப்பாவைகளாக உழைக்கும் மிகத் தாழ்ந்த சாதியாரே செறுமான்கள். அவர்கள் அன்றாடத் தேவையைப் பண்ணையாரே நிறைவு செய்கின்றார். ஒவ்வொரு நாளும் காலையில் பண்ணையாரின் மேலாள் இவர்களைப் பண்ணையாரின் இல்லத்திற்கு அழைத்துச் செல்வான். பின்னர் அங்கிருந்து உழுதல், நீரிறைத்தல் போன்ற எல்லா வயல் வேலைகளையும் செய்ய அழைத்துச் செல்லப்படுவர். மாலையில் இவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட அளவு நெல் கூலியாக வழங்கப்படும். வயலில் இவர்கள் உழைத்தாலும உழைக்காவிட்டாலும் பெரும்பாலும் ஆண்டு முழுவதும் இவர்கள் பண்ணையாராலேயே ''டியளந்து காப்பாற்றப்படுகிறார்கள் என்பது நடைமுறையிலும் கொள்கை அளவிலும் உண்மை. மலபாரில் பயிர்த்தொழில் நடைமுறையைக் கருத்தில் கொண்டு பார்க்கும்போது இவர்கள் ஓய்வாக இருக்கும் நாள்கள் மிகமிக அருமையானவையே. வயலை உழுது, விதைத்து, நாற்று நட்டு, நீர்பாய்ச்சிக், களைபிடுங்கிக், கால்நடைகளாலும் திருடர்களாலும் பயிருக்கு அழிவு நேராமல் பாதுகாப்பவன் செறுமானே. பயிர் விளையும் சமயம் அவன் வயிலில் இரவு நேரத்தில் காவல் புரியவேண்டும். காவலுக்குரிய பரண் பனையோலைகளாலும் தென்னை ஓலைகளாலும் வேயப்பட்டு நான்கு கம்பங்களின்மேல் உயர்வாக நீள் வட்டமாக அமைக்கப்பட்டிருக்கும். அதன் மேல் காவல் காப்பவன் படுக்கை, மூங்கிலால் அமையும். இராக் காவல் காப்பவர்களின் மனைவியரும் சிலபோது அவர்களுடன் காவலுக்குச் செல்வதுண்டு. அறுப்புப் பருவம் நெருங்கும்போது செறுமான்களுக்கு

---

* மலபார் மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Malabar District.)

† மலபாரும் மலபார் வாழ் மக்களும், 1900. (Malabar and its Folk, 1900.)

நிற்கக்கூட நேரம் இருக்காது. விளைந்த பயிரை அறுத்துக் களத்திற்குக் கொண்டு வந்து சேர்த்து, அதனை அடித்துத் தூற்ற வேண்டும். இரண்டாம் போக வயல் வேலை உடனடியாகத் தொடங்கிவிடும். செறுமான் மீண்டும் மேற்சொன்ன வேலைகளைத் தொடர்ந்து செய்ய வேண்டிவரும். கோடைக் காலத்தில் அவனுக்குச் சிறிது ஓய்வு இருக்கும். அப்போதும் காய்கறித்தோட்டம்போடுதல் நிலம் திருத்துதல் போன்ற பல சின்னஞ்சிறு பணிகளை அவன் பண்ணையார் அவனுக்கு இடுவார். வயதானவர்களும், இயலாதவர்களும், சிறுவர்களும் பண்ணையாரின் கால்நடைகளைப் பார்த்துக்கொள்ளும் பணியை மேற்கொள்வர். தனது அன்றாட அற்பக் கூலியான நெல்லினைப் பெறும் செறுமான் குடிசைக்கு வந்து அதில் ஒரு பகுதியை உப்பு, மிளகாய், கள், புகையிலை, கருவாடு ஆகியவற்றுக்காகத் தனியே ஒதுக்கி வைப்பான். எஞ்சிய பகுதி உணவுக்காகப் பயன்படுத்தப்படும். தன் கூலியில் பெரும் பங்கினைச் செறுமான் கள்ளுக்காகவே செலவழிக்கின்றான். மலபாரில் கள்ளுக் கடைகளின் முன் செறுமான்கள் தங்கள் மனைவி மக்களோடு கூட்டாக அமர்ந்திருப்பதை எங்கும் காணலாம். கள்ளை வாங்கிக் குடிக்கும் செறுமான், எஞ்சியதைத் தன் மனைவியிடம் தருவான். அவள் அதில் எஞ்சியதைத் தன் குழந்தைகளுக்குத் தருவாள். செறுமான் குடிபோதைக்கு ஆளாவதும் அதன் காரணமாகக் குற்றம் புரிவதும் பெரும்பாலும் நிகழ்வதில்லை. பகவதி அல்லது காளி கோயிலில் திருவிழா நடைபெறும் சிறப்பான நாள்களின் போதும், தேசியத் திருவிழாவின் போதுமே செறுமான்களுக்கு விடுமுறை கிடைக்கின்றது. இந்த நாள்களில் அவர்களுக்கு உரிய கூலி முன்னதாகவே தரப்பட்டுவிடும். இதைக் கள்ளுக் கடையில் கொடுத்துக் குடித்துவிட்டு அவர்கள் விழா நடைபெறும் மைதானம் நோக்கி ஒருவர் தோள் மேல் ஒருவர் கை போட்டபடி, குடிமயக்கத்தில 'லாலே, லாலே, லலேஹொ, லாலே, லாலே, லாலேஹொ, எனப் பாடி உளறியபடி செல்வர். ஐரோப்பியர்களின் மலைத் தோட்டங்களில் செறுமான்கள் பெரும் அளவில் தேவைப்படுகின்றனர். இப்பொழுதெல்லாம் அவர்கள் அச்சமின்றி புகைவண்டிகளில் மலைத் தோட்டங்

களுக்குப் பயணம் செய்வதைக் காணமுடிகின்றது. சிலர் மைசூரி லுள்ள தங்கச் சுரங்கத்திலும் பணியாற்றுகின்றனர்."

பிற அடிமை வகுப்பாரைப் போலவே, செறுமான்களும் ஒரு சில சிறப்பான சமயங்களில் சில தனி உரிமைகளைப் பெறு கின்றனர். உதாரணமாக மலபாரில் சால் ஓட்டும் சடங்கின் போது பண்ணையார், பண்ணை மேலாள், செறுமான்கள் ஆகி யோர் தானியச் சேமிப்புக் கிடங்கில் கூடுவர். அக்கட்டிடத்தின் முன் வாசலில் ஒரு பகுதி கஞ்சியால் மெழுகப்படும். அங்கு வெண்கல விளக்கு ஏற்றி வைத்து அதன் அருகே நெல், அரிசி ஆகியவற்றோடு கிடங்கில் எத்தனை வகைத் தானியங்கள் இருக்கின்றனவோ அத்தனை எண்ணிக்கையுடைய எட்டி மரத்து இலைகளால் ஆன தொன்னைகளையும் வைப்பர். அதன் பின் கடவுளின் மேல் பாரத்தைப் போட்டு, இறந்து போன பெரியவர்களை நினைத்தபடி, பண்ணையார் தானியக்கிடங்கின் கதவைத் திறப்பார். அவரைத் தொடர்ந்து செறுமான்கள் சாயம் பூசிய கூடையில் தொன்னைகளை வைத்து எடுத்துக் கொண்டு செல்வர். பண்ணையார் விதைக் கூடையிலிருந்து ஒரு பிடி விதையினை எடுத்து ஒரு தொன்னையில் இடுவார். அதே போலப் பண்ணை மேலாளும், செறுயான்களும், மற்றும் நல்ல விளைச்சல் காண வேண்டும் என விரும்புபவர்களும் விதைகளை எடுத்து விதைமணிகள் தீரும் வரை அவற்றைத் தொன்னைகளில் இட்டு நிரப்புவர். தொன்னைகள் நிரம்பிய கூடை அடுத்து மெழுகப்பட்ட முற்றத்தில் கொண்டு வைக்கப் படும். அங்குப் புதிய கலப்பையில் புதிய கொழு பொருத்தப் படும். ஓர் இணை எருதுகளையும் அங்குக் கொண்டு நிறுத்துவர். கலப்பை, எருதுகள், கூடை ஆகியவற்றின் மேலும் கஞ்சி தடவுவர். அதன்பின் வயலை நோக்கி அவர்கள் கூட்டமாகச் செல்வர். வயலை அடைந்ததும் தலைமைச் செறுமான் கூடை யைக் கீழே வைத்துவிட்டு மண்வெட்டியால் ஒரு சிறு மேடையாக மண்ணைக் குவிப்பான். அதில் கொஞ்சம் எருவைக் கலந்தபின் பண்ணையார் ஓர் கை விதையினை எடுத்து அதில் தெளிப் பார். பின்னர் எருதுகளைக் கலப்பையில் பூட்டித் தலைமைச் செறுமான் ஒரு சுற்றுச் சால் ஓட்டுவான். அதனுள்ளே குறைந்தது

ஏழு சால்கள் உழுது முடிந்தபின் கலப்பை வலப்பக்க மாகச் சாய்க்கப்படும். கணபதியை வழிபட்டுப் பண்ணையார் சில விதைகளை உழுத சாலில் வீசுவார். அடுத்துத் தலைமைச் செறுமான், 'மேலே இருக்கும் தெய்வங்களும், இறந்துபோன முன்னோர்களும் இங்குப் பரவலாகப் போடப்பட்ட விதை யினை வாழ்த்தட்டும். அவிழ்த்து ஓட்டப்படும் கால்நடைகளை யும், பண்ணையாரின் மனைவியையும், குழந்தைகளையும், பண்ணையாரையும், அடிமைகளையும் காப்பாற்ற அவர்கள் நல்ல விளைச்சலையும் நல்ல வெயிலையும், நல்ல அறுவடையை யும் தரத் துணை நிற்பார்களாக' என உரக்கக் கூறுவான். பின்னர் கலப்பையின் கொழுவில் ஒரு தேங்காயை உடைப்பர். தேங்காய் உடையும் பாங்கிலிருந்து பல ஊகங்கள் செய்யப்படும். உடைத்த தேங்காயின் குடுமிப் பக்கம், முன்பக்கத்தை விடப் பெரிதாக இருக்குமானால் விளைச்சல் சாதாரணமாகவே இருக் கும். தேங்காய் குறுக்கே உடைந்தாலும், உடைத்த மூடியில் தேங் காய்த்தண்ணீர் சிறிது கூட தங்காது சிதறி விட்டாலும் அது ஏதோ கேடு வருவதற்கான அறிகுறியாகக் கருதப்படும். உடைத்த தேங்காய் மூடிகளை எடுத்துவைத்து அவற்றில் கொஞ்சம் தண்ணீர் விட்டு அதில் துளசி இலை ஒன்றினைப் போடுவர். இலை வலப்பக்கம் சுழன்று திரும்பினால் அது நல்ல விளைச் சலுக்கு அறிகுறி. இலை இடப் பக்கம் சுழன்று திரும்பினால் அது கேடு வருவதற்கான அறிகுறி. இந்தச் சடங்கு முடிந்தவுடன் உரக்க எல்லாக் கடவுள்களின் பெயரையும்சொல்லிக் குழப்பமான வாழ்த்தொலி எழுப்புவர். வயலுக்குச் சென்றவர்கள் பின்னர் கலைந்து செல்வர். எஞ்சியிருக்கும் விதை தானியங்களை வேலை யாள்கள் தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்வர்."* மலபாரில் நாற்று நடவு முடிந்தபின் நடக்கும் சடங்கில் கால்நடைகளையும் வயல் வேலை பார்ப்போரையும் காக்கும் முனீஸ்வரனுக்கு ஒரு ஆட்டினைப் பலிகொடுப்பர். அதில் பண்ணையாரின் மேலாளே பூசாரியாகப் பணியாற்றுவான். ஒரு நாயர் அல்லது சிலபோது செறுமான் அந்தப் பணியை ஏற்பான்.

---

* கருணாகரமேனன், சென்னை அருங்காட்சியக இதழ், தொகுதி, 5, பகுதி 2, 1906. (Karunakara Menon, Madras Mus. Bull. V, 2, 1906.)

கொச்சி மாநிலத்தில் நடைபெறும் அறுவடைச் சடங்குகள் தொடர்பாகத் திரு அனந்த கிருஷ்ண அய்யர் பின்வருமாறு எழுதுகின்றார்:- "மாநிலத்தின் தென்பகுதியில் புலையர்களிடையே அறுவடைச் சடங்கு தொடர்பான சில அரிய வழக்கங்கள் காணப்படுகின்றன. அறுக்கத் தொடங்குமுன் புலையர்களின் தலைவன் அறுக்கத் தொடங்கலாமா எனப் பண்ணையாரைக் கேட்பான். அவன் அனுமதி வழங்கியதும் கிழக்குப் பார்த்து நின்று அரிவாளைத் தூறிலிட்டு அறுப்பான். முதல் அரி பண்ணையாரின் தெய்வத்திற்கும், இரண்டாவது அரி தன் சாதிக்குரிய தெய்வத்திற்கும் உரியதாகும். நெல்லை அடிக்கத் தொடங்குமுன் அதே புலையர் தலைவன் தன் சாதித் தெய்வத்திற்குரிய கட்டிலிருந்து சில நெற்கதிர்களை எடுத்து அவற்றின்மீது கள்ளினைத் தெளிப்பான். இன்னொரு புலையன் அதே போல மற்றவர்கள் கொண்டு போட்ட சுமைகளின் மீது 'கலம் காணட்டும், கலம் காணட்டும்' எனக் கூறியபடி கள்ளினைத் தெளிப்பான. இது களத்தை நிறைத்தல் எனக் கூறப்படும். பின் ஒவ்வொருவனும் தங்கள் தலைச் சுமையைத் தாங்களே களத்தில் அடிப்பர். அடித்து முடிந்ததும் தலைமைப் புலையன் பண்ணையார் தெய்வத்திற்குரிய சுமையைக் களத்தின் நடுவே இட்டபின், தங்கள் தெய்வத்திற்கு உரிய சுமையைச் சற்று வெளியே தள்ளி இடுவான். இருவகைத் தெய்வங்களும் கருணை காட்ட வேண்டும் என்பதற்காக இவ்வாறு செய்யப்படுகிறது. தலைமைப் புலையன், அடித்த நெல்லை இரண்டு உதவியாளர்களோடு களத்தில் உட்கார்ந்து அளக்கும் உரிமை உடையவனாவான். முதலில் 'நெல்லே நன்கு கண்டு முதலாகு' எனக் கூறியபின், 'நல்ல நெல் ஒன்று' எனவும், 'கெட்ட நெல் இரண்டு' எனவும் பத்து வரை மாறி மாறிச் சொல்லியபடி அளப்பான். பதினொன்றாவது அளவு அறுவடை செய்தவர்களுக்கு உரியதாகும். பின் இரு கைகளாலும் நெல்லை வாரி ஒரு கூடையில் இடுவான். இவ்வாறு இடப்பட்டுக் கூடையில் நிறையும் நெல்லில் ஒரு பாதி அவனுக்கும், அவன் உதவியாளர்களுக்கும், களக் காவல்காரனுக்கும் உரியதாகும். மறுபாதி ஏழை எளியவர்களுக்குக் களத்திலேயே தானமாக வழங்கப்பட்டு விடும். மாநிலத்தின் வட பகுதியில் அறுவடை தொடங்குமுன் மல்லாண்டி, முனியாண்டி ஆகிய களத்தெய்வங்களுக்கு ஆடுகள்,

கோழிகள், பலியிடுவதோடு தேங்காய்களும் உடைக்கப்படும். செறுமான்களின் தலைவன் கிழக்கு நோக்கி நின்று அரிவாளைத் தூறில் வைத்துஅறுத்து, முதல் அரியினை மேலே கூறிய தெய் வங்களுக்காக என ஒதுக்குவான். அறுத்தவற்றை அவர்களில் ஒருவன் களத்தில் அடித்து அளப்பான். அளக்கத் தொடங்கு முன் 'லாபம் ஒன்று' எனவும், 'சேதம் இரண்டு' எனவும் மாறி மாறிப் பத்துவரை சொல்லி அளப்பான். பதினொன்றா வது அளவு அறுவடை செய்தவர்களுக்கு உரியதாகும். இதன் படி அறுப்பவர்கள் ஒவ்வொரு பத்துப் பறை நெல்லுக்கும் ஒரு பறை கூலியாகப் பெறுகின்றனர். களத்தில் கூடும் ஏழை களுக்கும் கையளவுநெல் வழங்கப்படும். அறுவடை முடிந்த பின் சில சாதியார் கீழ்க்கண்டபடி நெல் பெறுவர்.

| சாதி | நெல் தரப்படுவதற்கான காரணம் | கூலியின் அளவு |
|---|---|---|
| தச்சர் | கலப்பைகள் செய்தல், பழுது பார்த்தல் ஆகியவற்றுக்காக | ஒரு பெரிய கட்டு நெல் |
| கொல்லர் | அரிவாள், கத்தி முதலிய கருவி கள் செய்தமைக்காக | ,, |
| பறையன் | வயலில் தலைச் சுமையைக் களத் திற்குக் கொண்டுவரும் செறு மான்களுக்குத் தூக்கிவிட்டதற் காக | ,, |
| வண்ணான் | வயலில் பறவைகள், பூச்சிகள் விழாது மாய வித்தை செய்து ஓட்டியதற்காக | ,, |
| வில் குருப் | செறுமான்களுக்கு வைத்தியம் பார்த்ததற்காகவும், தலைக்கு எண்ணெய் இட்டமைக்காகவும் | ,, |
| கணியன் | விதைப்பு, அறுப்பு, நடவுக்கு நாள் பார்த்துக் கூறியதற்கும், ஓணத்திற்குச் செறுமான்களுக்கு அரிசி காய்கறி வழங்க நாள் பார்த்துக் கூறியதற்குமாக | ,, |

பயிர்த் தொழில் நடைபெற்ற மாதங்களில் பயிரிடுபவருக்கு, அவர்கள் செய்த உதவிக்காகச் மேற்கண்டவாறு தானியம் அளிக்கப் பெறுவர்.

"புலையர்கள் காவல் காத்ததற்குக் கூலியாகக், காவல் குடிசை சார்ந்த சிறுபகுதி அறுவடை செய்யப்படாமல் ஒதுக்கி விடப்படும். அது அவனுக்கு ஒரு பறை அளவு நெல் காணும்."

"அறுவடையில் ஈடுபடும் செறுமான்கள் அறுக்கப்படும் ஒவ்வொரு வயலுக்கும் இரண்டு சுமை நெல் பெறுவதற்குரியர். நெல்லை அளப்பதற்காகச் செறுமான் இடங்கழி நெல்லினைத் தனக்கு உரிய அன்றாடக் கூலியோடு சேர்த்துப் பெறுவான். மூன்று பறை நெல் உள்ளூர்த் தெய்வத்திற்கு என ஒதுக்கப் படும். கர்கடக (ஆடி) மாதத்தில் பண்ணையார் ஒவ்வொரு செறுமானுக்கும் ஒரு கோழி, கொஞ்சம் எண்ணெய், பூண்டு, கடுகு, சோம்பு, மிளகு, மஞ்சள் ஆகியன வழங்குவார். அவர்கள் அவற்றைக் கொண்டு சாறு தயாரித்து அதில் கோழிக் கறியை வேகவைத்து அதனை மூன்று நாள்கள் உண்பர். அந்த நாள் களில் அவர்களுக்கு விடுமுறை வழங்கப்படுவதோடுகூட அந்த நாள்களுக்கு உரிய கூலியும் முன்னதாகவே வழங்கப்பட்டுவிடும்.

திருவாங்கூரில் நடைபெறும் மகம் விழாத் தொடர்பாகப் பின்வரும் விவரங்கள் வெளியிடப்பட்டுள்ளன:-* மகநாள் (ஆகஸ்டு மாதத்தில் வரும் திருவோணத்தை அடுத்து வரும் மகம் நட்சத்திரம்) இந்துக்களால் விழாவிற்குரிய சிறந்த நாளா கக் கருதப்படுகிறது. குழந்தைகளை விற்றேனும் அந்த நாளைக் கொண்டாட வேண்டும் என்ற வழக்கு மொழியும் உள்ளது. அந்த மகம் நட்சத்திரத்தில் ஒரு பெண் பிறந்தால் அந்தக் குடும்பத்தில் செல்வச் செழிப்பு மிகும் என்றும், அவள் மிகுந்த அதிர்ஷ்டம் உடையவளாக இருப்பாள் என்றும் நம்பப்படுகிறது. முனிவர் ஒருவரின் சாபத்திலிருந்து மீள, அமிர்தம் பெறுவதற் காகப் பாற்கடலைத் தேவர்கள் ஒரு மக நாளிலேதான் கடையத் தொடங்கினார்கள். மகம் சிறந்த நாளாகக் கருதப்படுவதற்குக்

* சென்னை மெயில் நாளிதழ், 1908. (Madras Mail, 1908.)

காரணம் எதுவாயினும் இன்றும் இந்துக்கள் அதனைக் கொண்டாடுவதில் மிகுந்த ஆர்வமுடையவர்களாய் உள்ளனர். அந்த விழாவோடு தொடர்புடைய சில முரட்டுத்தனமான பழக்க வழக்கங்கள் காலப் போக்கில் மாற்றம் பெற்றுள்ளன, அல்லது அவைகளை ஒடுக்க அரசு நடவடிக்கை மேற்கொண்டு உள்ளது எனலாம். இந்த நாளன்று இன்றும் சில இடங்களில் போலிச் சண்டைகள் நிகழ்கின்றன. நூறாண்டுகளுக்கு முன்பு வரை அத்தகைய போலிப் போர்கள் பள்ளம் என்ற இடத்தில் நிகழ்வது வழக்கம். திருவாங்கூரில், ஆங்கில அரசின் பதிலாளாக இருந்த தளபதி மன்றோவின் தலையீட்டால் அந்தப் போர்கள் நிறுத்தப்பட்டன. அந்த இடம் இன்றும் படைநிலம் என வழங்கப்பட்டு வருகின்றது. எதிரெதிர் அணிகள் திரண்டு நிற்கும் இடத்திற்கு நடுவே உள்ள ஏரி சொரக் குளம் (குருதிக்குளம்) என வழங்கப்படுகின்றது, அப்போலிப் போர்களில் பயன்படுத்தப்பட்ட உருக்கு வாள்கள், பலதிறப்பட்ட உருவிலான ஈட்டிகள், ஒருவனைப் பாதுகாக்கப் போதுமான பெரிய கேடயங்கள் ஆகியன இன்றும் உள்ளூர்க் கோயிலில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அந்தப் போர்களில் உயிரிழந்தோர் பலர். இந்தப் பகுதிகளில் வாழும் மக்களுக்குக் கூட ஆண்டுதோறும் மகத்தின்போதும், அதற்கு முந்திய நாளிலும் செங்கணச்சேரி, அம்பலப்புழா வட்டங்களுக்கிடையே வீழ்கப்பர என்ற இடத்தில் போலிப் போர் நடைபெறுவது தெரிந்திருப்பதாகத் தெரியவில்லை. அந்தப் போர் நடைபெறும் இடத்திற்கு அடையாளமாக மூன்று ஆலமரங்கள் நிற்கின்றன. மக்கள்-சிறப்பாகப் புலையன்களும் பறையன்களும் - பல்லாயிரக் கணக்கில் உருக்குவாள், ஈட்டி, கவண் ஆகியவற்றை ஏந்தியவர் களாக அந்த மரங்களின் புறத்தே குழுமுவர். போரில் ஈடுபட உள்ள இரு கட்சிகளையும் வரப்பு பிரிவுபடுத்தும். நடுவில் நிற்கும் மரங்களுக்கு அவர்கள் சில சடங்குகளைச் செய்ய வேண்டும். அதற்காக அவர்கள் இசை முழங்க வாளும், ஈட்டியும் ஏந்தியவர்களாக மரங்களை நெருங்குவர். அப்போது வரப்புக்கு அப்பால் இருப்பவர்கள் வரப்பைத் தாண்டுவார்கள். அதனால் இரு கட்சிகளுக்கும் இடையே கைகலப்பு நிகழும். இத்தகைய கைகலப்பினைத் தவிர்க்கவும் அவர்கள் தங்கள் வழிபாட்டை இடையூறு ஏதும் இன்றி நடத்தி முடிக்கவும்

இந்த ஆண்டு அரசு வேண்டிய அனைத்து ஏற்பாடுகளையும் செய்தது. காவலர்களும் இதற்காக வரவழைக்கப்பட்டிருந்தனர். ஒரே ஒரு சிறு கலவரம் தவிர அனைத்தும இனிதே நடந்து முடிந்தது. மக்கள் உருக்காலான போர்க் கருவிகளோடு வருதல் கூடாதெனவும், மரத்தாலான கருவிகளையே கொண்டு வரவேண்டும் எனவும் கேட்டுக் கொள்ளப்பட்டனர். அவர்கள் அக்கருவிகளைக்கூடக் கீழே வைத்த பின்னரே மரங்களை நெருங்கி வழிபாடு செய்ய அனுமதிக்கப்பட்டனர்."

தற்போது முகமதியர்களாக மதம் மாறி வருபவர்களுக்குச் செறுமான்களை நல்ல உதாரணமாகக் காட்டலாம். "1871-இல் மலபார் கணக்கெடுப்பில் 99,000 ஆக இருந்த செறுமான்கள், 1881-இல் 64,735 ஆகக் குறைந்துவிட்டனர். பெரும் மாற்றத்தை நிகழ்த்தி வருகின்ற ஒரு நிகழ்ச்சி இல்லாதிருக்குமேல் செறுமான்கள் தற்போது இருப்பதைவிட 40,000 பேர் எண்ணிக்கையில் அதிகமாக இருப்பர். அந்த நிகழ்ச்சி முகமதியனாக மதம் மாறுவதுதான். இசுலாத்தைச் சார்ந்தவுடன் அவனுக்குக் கிடைக்கும் மதிப்புக் காரணமாக அவன் ஒரே பாய்ச்சலில்தான் முன்பிருந்த சமூகப் படிநிலையை விட்டுப் பல படிகள் உயர்ந்து விடுகிறான்." என 1881-ஆம் ஆண்டு மக்கட் கணக்கெடுப்புக் கண்காணிப்பாளர் எழுதியுள்ளார். மலபாரைச் சேர்ந்த அடிமைகளாக இருந்த சாதியாருக்கு அவர்கள் மேலானவர்களிடமிருந்து விடுதலை வழங்கியதில் முகமதியராக மதம் மாறியது குறிப்பிடத்தக்க தாக்கத்தைச் செய்துள்ளது. மதமாற்றம் காரணமாக ஒரு செறுமான் சமூகப் படிநிலையில் குறிப்பிடத்தக்க உயர்வு பெறுகிறான். இதன் காரணமாக அவன் அச்சுறுத்தப்படவோ, அடிஉதை படவோ நேரிட்டால், முகமதிய சமுதாயம் முழுவதுமே அவனுக்காக வரிந்து கட்டிக் கொண்டு உதவ முன்வருகிறது" எனத் திரு லோகன் எழுதுகின்றார். முகமதியராக மதம் மாறிய செறுமான்கள் மலபாரின் அமைதியினை அடிக்கடி சீர்குலைக்கும் மாப்பிள்ளா கலவரங்களிலும் ஈடுபட்டு வருவதாகத் திரு என். அப்பாதுரை அய்யர் குறித்துள்ளார்.

செறுமான்கள் குடியிருப்பு, சால அல்லது குடிசை என அழைக்கப்படும். புல் அல்லது பனை ஓலையால வேயப்பட்ட

கூரையை உடைய அது தேன் கூட்டினை ஒத்த அமைப்புடை யது. குடிசையில் வாழ்பவர்களின் தான்யக் கிடங்காகப் பலகைகளால் மூடப்பட்ட நிலத்தடியில் உள்ள குழி பயன்படுகின் றது. வீட்டில் காணப்படும் தட்டு முட்டுச் சாமான்கள் குழவி, அம்மி, இரண்டு மூன்று மண்பானைகள் மட்டும்தான்.

திரு அனந்த கிருட்டிண அய்யர் கொச்சி மாநிலப் புலையர் கள் குடியிருப்பைப் பற்றிப் பின்வருமாறு விளக்குகின்றார்:- ''இவர்களுடைய குடிசைகள் பொதுவாக மடங்கள் என அழைக்கப்படும். அவை வயல்களின் ஓரங்களில் உள்ள மேட்டிலோ, நெல் வயலின் இடையே உள்ள திட்டுகளிலோ அல்லது பயிர்களை இரவில் பார்ப்பதற்கு உதவியாக வயல் ஓரங்களில் நிற்கும் மரங்களின் மீதோ அமைக்கப்பட்டிருக்கும். நல்ல குடிசைகளை அவர்கள் அமைத்துக் கொள்வார்களானால் பயிர்த்தொழில் செய்ய வேண்டிய இடங்களுக்கு இடம் பெயர மறுப்பார்கள் என்ற காரணத்தால் அவ்வாறு அமைத்துக் கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. நான்கு சிறு கழிகளால் தாங்கப்படும் இலைகளால் கூரை வேயப்பட்ட மிக எளிய குடிசைகளாகவே மடங்கள் காட்சி தருகின்றன. அதன் பக்கங் களும் அதே மாதிரி தழைகளால் மறைக்கப்பட்டிருக்கும். ஒரே அறையைக் கொண்ட அந்த மடத்தின் தரை சற்றே உயர்த்தப் பட்டிருந்தாலும், மழைக் காலத்தில் ஈரக் கசிவு உடையதாகவே இருக்கும். இந்தத் தற்காலிகக் குடியிருப்புகள் அறுவடை முடிந்ததும் மறுபடியும் பயிர்த்தொழில் தொடங்க வேண்டிய இடத்திற்கு மாற்றி அமைக்கப்படும். குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றாக அந்தக் குடிசையின் உள்ளேயே படுத்து உறங்குவர். கவிழ்த்து வைக்கப்பட்ட கூடையைவிடச் சற்றே பெரியதான தற்காலிகக் குடிசைகளும் சிலபோது அமைக்கப் படும். நெல் விளைந்த வயல்களிலும், நெல் அடிக்கும் களங் களிலும் காவல் காப்பவர்கள் அவற்றைக் கொண்டு வைத்துத் தங்குவர். கொச்சி மாநிலத்தின் வடபகுதியில் குடிசைகளின் சுவர்கள் மண்ணால் அமைக்கப்பட்டு, மரத்தாலான கதவுகள் பொருத்தப்பட்டிருக்கும். கூரை, மூங்கில் கழிகளால் அமைக்கப் பட்டுப் பனை யோலையால் வேயப்பட்டிருக்கும். தரை நன்றாக

உயர்த்தப்பட்டிருப்பதோடு குடிசையைச் சுற்றிலும் திண்ணை அமைப்பும் இருக்கக் காணலாம். குடிசைக்குள் ஒரே அறை இருக்கும். புதிதாக மணம் புரிந்து கொண்டவர் அதனைத் தூங்கப் பயன்படுத்திக் கொள்ள, மற்றவர்கள் குடிசைக்கு வெளியே உள்ள திண்ணைகளில் படுத்து உறங்குவர் என எனக்குக் கூறப் பட்டது. சமைப்பதற்கான சில மண்பானைகளும் தண்ணீர் வைக்கும் மண்குடங்களும், உண்ணும் கலங்களான மண் பாத்தி ரங்களுமே அங்கே உள்ள பாத்திர பண்டங்கள். இவற்றோடு கூட நான் அங்கே மரத்தாலான உரல், சில உலக்கைகள், இரண்டு தட்டுகள், இரண்டு முறங்கள், ஒவ்வொரு பெண்ணுக் கும் உரிய மீன் கூடைகள், உப்பு முதலியன வைத்துக் கொள்வதற் கான கொப்பரை, ஒன்றில் அழுக்குத் துணி போடப்பட்ட அவர்களே முடைந்த சில கூடைகள், அவர்களே பின்னிய சில பாய்கள், தான்யங்கள் அளப்பதற்கான மூங்கிலாலான படி, கள் வைக்கும் கலம் ஆகியன இருக்கக் கண்டேன்.''

''மழைக் காலத்தில் வயலில் வேலை செய்யும் செறுமான் சாதிப் பெண்கள் சில பச்சை இலைகளை - பெரும்பாலும் வாழை இலைகளை - தங்கள் இடுப்பைச் சுற்றிச் சொருகிக் கொள்வதோடு, வாழையிலையாலான கோப்பை வடிவிலான குல்லாயையும் தலையில் அணிந்து கொள்வர். மலபாரைச் சார்ந்த பெண்களால் தற்போது இந்தப் பழக்கம் கைவிடப் பட்டுவிட்டது. கொச்சி, திருவாங்கூர் மாநிலங்களில் ஓரளவு இன்னமும் இப்பழக்கம் மேற்கொள்ளப்படுகின்றது. செறுமி நீண்ட கெட்டியான ஒரே இடை ஆடை மட்டும் உடுக்கிறாள். அது அவள் முழங்கால்களை மறைக்கக்கூடப் போதுமானதாக இராது. அவள் தன் மார்பை ஆடையால் மறைத்துக் கொள்வதில்லை.''* வயலில் வேலை செய்யும் செறு மான் சாதிப் பெண்கள் ஓலைகளால் அமைக்கப்பட்ட நீள்வட்ட வடிவமான கைப்பிடி இல்லாத குடையினைக் குனிந்து வேலை பார்க்கும் நிலையில் மேலே கவிழ்த்துக் கொள்வார்கள் எனக் கூறப்பட்டுள்ளது. மழைக் காலத்தில் ஆண்கள் குறுகிய கைப்பிடி உடைய ஓலைக் குடையைப் பயன்படுத்துவர்.

---

* கல்கத்தா ரெவ்யூ, 1900. (Calcutta Review, 1900.)

பெண்கள் விலை மலிவான அணிகளை மிகுதியாக அணி வர். அவற்றிற்கான சில மாதிரிகள் வருமாறு:–

1. சுருளான ஈயக் காதணிகளை அணிவதால் காதுத் துளைகள் மிக விரிந்து போயிருக்கும். பித்தளை, மற்றும் கண்ணாடிப் பாசிமணிகளாலான கழுத்துச் சங்கலிகள். பழைய இத்தாலியத் தங்கக் காசுகளை அளவில் ஒத்த திருவாங்கூரின் பழைய தங்கக் காசு போன்ற அமைப்புடைய பட்டையான பித்தளை அணிகளும், பின்னால் பித்தளையாலான இரண்டு உருளை வடிவிலான பதக்கங்கள் கட்டப்பட்டதும் செம்பஞ்சுக் குஞ்சங்கள் கட்டப்பட்டதுமான நூலால் ஆன கழுத்தணி; வலது கைச் சிறுவிரலில் மூன்று பித்தளை மோதிரங்கள்; ஒரு பித்தளை மற்றும் இரண்டு எஃகு வளையல்கள் இடது மணிக்கட்டில்.

2. மணிகளாலான பல கழுத்தணிகள், பல வரிசைகள் கொண்ட பாசி மணிகளாலான ஒரு கழுத்தணி; முன்னவளைப் போலவே பித்தளைப் பதக்கங்கள் கொண்ட கழுத்தணி, பல் குத்தவும் காது குடையவுமான கவர் ஊசியும், சவட்டுக் கரண்டி யும் அந்தக் கழுத்தணிகளுள் ஒன்றில் கோக்கப்பட்டிருக்கும். பேய் பிசாசுகளை அணுகாது விரட்ட மலையாளத்தில் மந்தி ரங்கள் பொறிக்கப்பட்ட ஓலைச் சுருளோடு கூடிய சத்து ஒரு கழுத்தணியில் கோக்கப்பட்டிருக்கும். வேலைப்பாடுகளுடன் அமைந்த மூன்று பித்தளை வளையல்கள் வலது மணிக்கட்டில்; இரண்டு வளையல்கள் இடது மணிக்கட்டில்; இடது மணிக்கட்டில் இரும்பு வளையல். காதுகளின் மடிப்பில் மெல்லிய பித் தளை வளையங்கள்; 'அலன்தோடி' எனப்படும் எழுபது மெல்லிய பித்தளை வளையங்களும் 'அடிக்கய' எனப்படும் ஒரு கெட்டியான பித்தளை அணியும் தொளைகள் பெருத்த இரு காதுகளிலும் தொங்கும்.

3. கண்ணாடிப் பாசி மணிகளாலான கழுத்தணியோடு கூடிய இதய வடிவிலான கெட்டியான பித்தளைப் பதக்கங்கள்; காய்ச்சல் காணாதிருக்கக் கழுத்தைச் சுற்றிக் கயிறு.

4. உருளை வடிவிலான ஐந்து பித்தளைப் பதக்கங்களோடு கூடிய கயிற்றுக் கழுத்தணி; வலது மணிக்கட்டில் ஐந்து பித்தளை

வளையங்கள்; இடது மணிக்கட்டில் ஆறு பித்தளை வளையல்களும் இரண்டு இரும்பு வளையல்களும்.

வலது கையில் நடுவிரலில் ஒரு செம்பு மற்றும் ஐந்து பித்தளை மோதிரங்கள்; சிறு விரலில் ஓர் இரும்பு மற்றும் மூன்று பித்தளை மோதிரங்கள்.

இடது கையில் நடுவிரலில் ஒரு செம்பு மற்றும் ஐந்து பித்தளை மோதிரங்கள்; மோதிர விரலில் மூன்று பித்தளை மற்றும் இரண்டு செம்பு மோதிரங்கள்; சிறு விரலில் ஓர் பித்தளை மோதிரம்.

5. இடது காது மடலில் கால்சட்டையில் தைப்பதற்குரிய பித்தான்.

6. "சப்பானில் தயாரிக்கப்பட்ட உயர் ரகக் குடை. இது பம்பாய் பசல்பாய் பீரோ முகமதுவுக்காகத் தயாரிக்கப்பட்டது" என்ற விளம்பரம் பொறிக்கப்பட்ட பதக்கத்தோடு கூடிய பித்தளைப் பாசிகள் கோக்கப்பட்ட கழுத்தணி. கள்ளிக்கோட்டையில் ஒரு கோயிலில் முழவு அடித்துக் கொண்டிருந்த ஒரு செறுமான் தன் தலை மயிரை நீளமாக வளர்த்து ஒழுங்கின்றி வைத்துக் கொண்டிருந்தான். இன்னொரு செறுமான் தன் நோய் நீங்கியதற்காக வேண்டுதல் செலுத்தத் தன் தலைமயிரை நன்றாகப் பிரித்துப் பின்னிவிட்டுக் கொண்டிருந்தான். தன் அரணாக் கயிற்றில் மந்திரம் பொறிக்கப்பட்ட பித்தளைத்தகடு பொருத்தப்பட்ட செம்புச்சத்து ஒன்றினைச் கட்டிக்கொண்டிருந்த செறுமான், அதனை எனக்கு ஒரு ரூபாயுக்கு, அது என்னைப் பேய் பிசாசுகளிடமிருந்து காக்குமெனக் கூறி விற்றுவிட்டான்.

மலபாரைச் சேர்ந்த செறுமான்களின் மணச் சடங்குகள் பற்றித் திரு அப்பாதுரை அய்யர் பின்வருமாறு எழுதுகின்றார்:- "செறுமான்களின் மண நிகழ்ச்சியில் முக்கிய இடம் பெறுபவள் மணமகன் உடன்பிறந்தவளே. அவளே மணமகளின் விலையான

பரிசத்தைத் தந்து, அவளைத் தூக்கிச் செல்பவள். அதற்கு மண மகளின் பெற்றோர் உடன்பாடு பெறப்பட வேண்டும். மண மக்களின்பெற்றோர் ஒருவருடைய இல்லத்திற்கு மற்றவர் வருகை புரிவதின் வழி அதனைத் தருவர். இவ்வாறு வருகை தரும் போது கஞ்சியினைக் குடிப்பர். கஞ்சி குடிக்கும்போது அதனைக் குடிக்கும்முன், மணத்திற்குத் தங்கள் உடன்பாட்டினைத் தெரிவிப்பதற்கு அடையாளமாகக் கஞ்சி இருக்கும் பாத்திரத்தில் ஒரு பணத்தைப் (அப்பகுதிக்குரிய காசு) போடுவர். மணமகன் புறப்படும்போது செறுமான்கள் பெருங்கூட்டமாகத் திரண்டு உடன் செல்வர். வழியில் இடையிடையே சிலம்ப ஆட்டம் நிகழும் சிலம்பம் ஆடுபவர்களை ஊக்கம் ஊட்டும் வகையில் பெண்கள் குழுவாகப் பாடுவர். 'ஓ! செறுமானே! எங்கே உங்கள் வடி தள்ளலை (சிலம்ப ஆட்டம்) நாங்கள் பார்க்கட்டும்! நாங்கள் பார்க்கட்டும்!!' எனப் பாடி ஊக்கம் ஊட்டுவர். ஆண்களும், பெண்களும் மண நிகழ்ச்சியின்போது வேறுபாடின்றிக் கலந்து நடனம் ஆடுவர். மணமகன் வீட்டுக்குத் திரும்பி வந்தவுடன் மணமகள் உரக்க அழுது புலம்பித் தன் தலைவிதியை நொந்து கொள்ள வேண்டும். மணமகன் வீட்டை அடைந்தவுடன் வாசற் படியின் குறுக்கே போடப்பட்டிருக்கும் உலக்கையினை அவள் மிதித்துச் செல்ல வேண்டும்.'' நடனத்தின்போது பெண்கள் தங்கள் கூந்தலை அவிழ்த்துத் தொங்கவிட்டுக் கொள்வர் எனக் கூறப்படுகிறது. வேகமான தாளத்திற்கும் இசைக்கும் இயைய சீராக அடியிட்டபடி அவர்கள் ஆட்டம் நிகழும். மற்றொரு தகவலின்படி மணமகன் தன் மைத்துனனிடமிருந்து ஒரு கைக் குட்டையைப்பெறுவான் எனவும்,அதனைக் கொடுப்பவன் அதை மணமகன் இடையைச் சுற்றிக் கட்டிவிடுவதோடு அவன் கரத்தில் ஒரு வளையலையும் அணிவித்துவிட வேண்டும் எனவும் கூறப் படுகிறது. மணமகள் தன் உடன்பிறந்தவனிடமிருந்து ஓர் ஈயப் பாத்திரத்தைப் பரிசாகப் பெறுவாள். அடுத்து அவளுடைய ஒன்றுவிட்ட உடன்பிறந்தவன் மணமகன் நெற்றியில் ஒரு கைக் குட்டையைக் கட்டிவிட்டு அதில் ஒரு வெற்றிலையைச் சொருகி விடுவான். அதன்பின் மணமகள் மணமகனிடம் ஒப்படைக்கப் படுவாள்.

கொச்சி மாநிலத்தைச் சேர்ந்த புலையர்களின் பூப்பு நீராட்டு

மற்றும் மணச் சடங்குகள் தொடர்பாகத் திரு அனந்த கிருட்டிண அய்யர் தந்துள்ள விரிவான விளக்கங்கள் வருமாறு:- "புலையர் சாதியைச் சேர்ந்த ஒரு பெண் பூப்பெய்தியவுடன் அவளைத் தனியே ஒரு குடிசையில் இருத்துவர். ஐந்து வல்லோன்களையும் (தலைமைக்காரன்கள்), கரையைச் சேர்ந்த சாதிக்காரன்களையும் இச்சடங்கில் பங்குபெற அழைப்பர். முழவும் குழலும் இசைக்கும் இசைக்கேற்ப மலைப்பாட்டு எனக் கூறப்படும் பாட்டினை ஒரு பறையன் ஒரு மணி நேர அளவிற்குப் பாடுவான். இதற்காக அந்தப் பறையன் ஒரு பறை நெல்லும், அவன் உதவியாளர்கள் தலைக்கு மூன்று அணாக்களும் பெறுவர். இந்நிகழ்ச்சி முடிந்த பின் ஏழு தேங்காய்கள் உடைக்கப்படும். அத் தேங்காய்களின் தண்ணீர் பூப்படைந்த பெண்ணின் தலையில் ஊற்றப்படும். தேங்காய் மூடிகள் ஐந்து வல்லோன்களுக்கும், அழைக்கப்பட்ட ஏழு சிறுமிகளுக்கும் பிரித்து வழங்கப்படும். அப்போது பூப் படைந்த பெண்ணின் தலையில் மேலும் கொஞ்சம் தண்ணீர் ஊற்றப்படும். தற்காலிகமான ஒரு குடிசையில் அவள் ஏழு நாள் கள் தங்கி இருக்க வேண்டும். அச்சமயம் தூரத்திலிருந்தே அவளுக்கு உணவு வழங்குவர். அவள் வெளியே சென்று தன் தோழிகளோடு சேர்ந்து விளையாட அனுமதிக்க மாட்டார்கள். ஏழாம் நாள் காலையில் கரையைச் சேர்ந்த வல்லோன்களும் சாதிக்காரர்களும் திரும்ப அழைக்கப் படுவர். சாதிக்காரர்கள் விருந்தின் செலவினைச் சரிக்கட்டத் தங்களோடு கொஞ்சம் அரிசி, காய்கறி, கள் ஆகியவற்றைக் கொண்டு வருவர். பொழுது புலரும்போது பூப்படைந்த பெண் ணின் தாயார் ஏழு சிறுமியருக்கும் தன் மகளுக்கும் எண் ணெய் தேய்த்துக் குளிக்க எண்ணெய் வழங்குவாள். அவர்கள் அருகே உள்ள குளத்திற்கோ ஓடைக்கோ சென்று குளித்துத் திரும்புவர். பிறகு அச்சிறுமிக்குச் சிறந்த ஆடைகளை அணிவித்து இயன்ற அளவு அலங்காரம் செய்வர். அவள் முகத்தில் மஞ்சள் பூசிப் பல வண்ணங்களில் புள்ளிகள் இடுவர். உடம்பில் ஏதேனும் கெட்ட ஆவிகள் புகுந்து இருக்குமானால் அவற்றை ஓட்ட வேண்டி, அவள் குழலும் முழவும் இசைக்கும் சில பறையன்கள் முன் நிற்பாள். அவள் உடம்பில் ஆவிகள் புகுந்து இருக்கு மானால், அச்சிறுமி இசைகேட்டுத் தாவித் தாவிக் குதிப்பாள்.

சான்று பொய்யாக இருப்பின் அவ்வாறு உரைப்பவனுக்கு ஏதேனும் தீங்கு நிகழும் என நம்பப்படுகிறது.'

படகன் அல்லது வடுகன் என்ற சொல் வடக்கத்தியான் எனப் பொருள்படும். படகர்கள் கன்னடப் பகுதியிலிருந்து வந்து குடி புகுந்த மைசூராரின் வழித் தோன்றல்கள் என நம்பப்படுகிறது. இவர்கள் தங்கள் நாட்டில் ஏற்பட்ட பஞ்சம், அரசியல் குழப்பம், சுற்றியிருப்போரால் நசுக்கப்படுதல் ஆகிய காரணங்களால் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இங்குக்குடிபுகுந்தனர் எனக் கருதப்படுகிறது. எனினும் இது தொடர்பாகப் படகர்களுடைய தலை, தோடர்களுடையதையும் கோத்தர்களுடையதையும் போல் நீண்ட வடிவுடையதாக உள்ளதேயன்றி, மைசூரில் எங்கும் காணப்படுவதுபோல் செங்குத்தான பக்கங்

**நீலகிரியாரின் சராசரி அளவுகள்**

| | மண்டையின் நீளம் | மண்டையின் அகலம் | விகித அளவு |
|---|---|---|---|
| | செ. மீ. | செ. மீ. | |
| படகர் | 18.9 | 13.6 | 71.7 |
| தோடர் | 19.4 | 14.2 | 73.3 |
| கோத்தர் | 19.2 | 14.2 | 74.1 |

**மைசூராரின் சராசரி அளவுகள்**

| | மண்டையின் நீளம் | மண்டையின் அகலம் | விகித அளவு |
|---|---|---|---|
| | செ. மீ. | செ. மீ. | |
| காணிகர் | 18.5 | 14.3 | 77.6 |
| பேடர் | 18.3 | 14.3 | 77.7 |
| ஹொலையர் | 17.9 | 14.1 | 79.1 |
| மண்டையா மணர் | 18.5 | 14.8 | 80.2 |
| வகலிகர் | 17.7 | 14.5 | 81.7 |

புலைச் சாதிச் சிறுமிகள் பூப்படையும் முன்பே மணம் செய்விக்கப்படுகின்றனர். பிற பகுதிகளில் கணக்கச் செறுமான்களும், பிற உட்பிரிவினரும் பெண்கள் மணத்தைப் பூப்படையும் முன்போ பூப்படைந்த பின்போ நடத்துகின்றனர். கணக்கச் செறுமான்களிடையே ஒரு சிறுமி பூப்படையும் முன் மணம் செய்யப்படவில்லையாயின் அவள் தீட்டுக்குரியவளாகக் கருதப்படுகிறாள். மேலும் அவள் வயது பிறரால் அறியப்பட்டுவிட்டதற்கான பழிக்கும் உள்ளாவாள். அவளுடைய பெற்றோரும், சிற்றப்பன், பெரியப்பன் ஆகியோரும் அவள் மீது தங்களுக்குள்ள உரிமை அனைத்தையும் துறப்பர். அவளை முறைப்படி குடிசையை விட்டு வெளியே துரத்திய பின், அதன் உள்ளும் புறமும் சாண நீர் தெளித்துத் தூய்மைப் படுத்துவதோடு புது மணலும் பரப்புவர். இவ்வகையில் அவள் சாதி விலக்கம் செய்யப்பட்டவளாகின்றாள். முன்பெல்லாம் அவளை வல்லோனிடம் ஒப்படைப்பர். அவன் அவளைத் தன் பிள்ளைகளுக்கு மணம் செய்விப்பான். அல்லது அடிமைகளை வைத்துள்ள ஒரு பண்ணையாருக்கு விற்றுவிடுவான். ஒரு சிறுமி பூப்படையும் முன் மணம் செய்விக்க வசதியற்ற ஏழையாக இருப்பின் கரையைச் சேர்ந்த சாதிக்காரர்கள் அதற்காக நிதி திரட்டி அவளைத் தங்களுக்குள் ஒருவனுக்கே மணம் செய்து வைப்பர்.

"புலைய இளைஞன் ஒருவன் மணம் செய்து கொள்ள விரும்புவானாயின் அதனைத் தன் பண்ணையாருக்குத் தெரிவிப்பான். அவர் அதற்கான செலவினைக் கொடுத்து உதவக் கடமைப்பட்டவர். அவர் பெண்ணின் பண்ணையாருக்கு ஏழு பணம் (ஒரு பணம் - நான்கணா எட்டுப் பைசா) தருவார். மணப் பெண்ணுக்கு ஒரு பணம் விலைபெறும் ஆடைகளை வழங்குவார். மண விருந்துக்காகப் பத்துப் பணம் தருவார். மொத்தத்தில் அவர் பத்து ரூபாய் வரை செலவழிக்க வேண்டி வரும். மணச் சடங்கில் ஒரு மோதிரம் கோக்கப்பட்ட கயிற்றினை மணப் பெண்ணின் கழுத்தில் அணிவிப்பர். இதனை அவன் பெற்றோர்கள் தருதல் வேண்டும். ஒருவனுக்குத் தன் மனைவி பிடிக்கவில்லையானால் அவன் அவளை மணச் செலவுகளுக்கான தொகையினைத் தரும் வேறொருவனுக்கு உரியவள் ஆக்கி

விடுவான். இன்றும் பலவிடங்களில் கணவனும் மனைவியும் வேறு வேறு பண்ணையார்களின் கீழ் பணிபுரிந்து வருகின்றனர். ஆனால் இருவரும் ஒரு பண்ணையாரின் கீழ் பணிபுரிதலே பெருவழக்கு.

"ஒருத்திக்குப் பிறக்கும் மூத்த ஆண் குழந்தை அவளுடைய பண்ணையாரின் அடிமையாக உரியவன். குடும்பத்தின் மற்ற உறுப்பினர்கள், வளர்ந்து பெரியவர்கள் ஆகும்வரை தங்களுடைய தாயாரோடேயே தங்கி இருப்பர். வேலைக்கு ஏற்ற ஆள்களாக அவர்கள் வளர்ந்தவுடன் உரிய பண்ணையாரின் அடிமைகளாவர். ஒருத்தி கைம்பெண்ணாக நேரிட்டால் வளர்ந்த தன் பிள்ளைகளுடன் சென்று வாழ்வாள். சில இடங்களில் ஒருவன் ஒருத்தியை அழைத்து வந்து அவளைத் தன்னுடைய மனைவியாக வைத்துக் கொள்ளப் போவதாகப் பண்ணையாரிடம் கூறுவான். அவளுக்கும், அடிமை ஒருத்திக்கு உரிய அளவு நெல் அப்போதிருந்து பண்ணையாரால் கூலியாக வழங்கப்படும். ஆனால் அவள் தன் கணவனைத் தன் விருப்பம் போல் விட்டுப் பிரிந்து போகலாம். எனினும் ஒருவனை விட்டு மற்றொருவனோடு சென்று வாழ்வதில் அவள் அதிக ஆர்வம் காட்ட மாட்டாள். மற்ற இடங்களில் இற செறுமான்களின் மண நிகழ்ச்சி அதிகச் சடங்குகளின்றியே நிகழ்கின்றது. மண மகன் வீட்டார் மணமகள் குடிசையை அடைந்து அக்குடும்பத் தலைவனுக்கு அரிசியும், வெற்றிலையும் தந்து பெண் கேட்பர். மணமகளின் உடன்பிறந்தவன் மணமகன் வீட்டார் முன் கொஞ்சம் அரிசியையும் ஒரு துணியையும் வைப்பது உடன் பாட்டுக்கு அடையாளம் ஆகும். கூடியிருக்கும் சாதியார் அனைவர் மீதும், உடன்பாட்டினை உணர்த்த அரிசியினைத் தூவுவான். மணநாளன்று மணமகன் இரு துணைவர்களுடன் மணமகள் இல்லம் சென்று அவளுக்குப் பன்னிரண்டு பணமும் துணியும் தருவான். அன்றிலிருந்து அவன் அவள் கணவனாகக் கருதப்படுவான். இருவரும் உடல் உறவு கொள்ள அனுமதிக்கப் பட்டாலும், மங்களம் என்னும் சடங்கு நடந்து முடியுமுன் மணமகள் அவனோடு அவன் இல்லம் செல்ல அனுமதிக்க மாட்டார்கள். மணமகன் வீட்டார் கூட்டமாக மணமகள் இல்லம் செல்வர். அங்கு அவர்களுக்கு விருந்திடப்படும். மணமகன்,

மணமகளின் உடன் பிறந்தவனுக்கு இனிப்புக்கள் வழங்குவான். சாதியைச் சேர்ந்த சடங்குகள் செய்பவன் மணமக்களைப் பற்றிய வரலாற்றைச் சொல்வதோடு, இரண்டு குடும்பங்களின் முன்னோரின் பெயர்களையும், குலதெய்வங்களின் பெயரையும் கூறுவான். அதன்பின் மணமக்களைப் பந்தலின் கீழ் குவிக்கப் பட்டுள்ள அரிசி, விளக்கு ஆகியவற்றின் முன் அமர்த்துவர். கூடியிருப்பவர்களில் ஒருவன் எழுந்து குடும்ப வாழ்க்கையில் மேற்கொள்ள வேண்டிய கடமைகளைப் பற்றியும், திருட்டு, ஏமாற்று, கூடா ஒழுக்கம் ஆகியவற்றின் தீமைகள் பற்றியும் உரையாற்றுவான். மணமக்களின் தலையில் அரிசி தூவப்படும். மணமகன் பெரியவர்கள் காலில் விழுந்து வணங்குவான். மறுநாள் மீண்டும் மணமக்கள் தலையில் அரிசி தூவப்படும். அதன்பின் கூடியுள்ளவர்கள் மணமக்களுக்குப் பரிசுகள் வழங்குவர். அதிலொரு பங்கு சடங்கு நடத்தியவனுக்குச் சேரும். இன்னொரு பங்கு மணமகள் பண்ணையாருக்கு உரியது. மணமுறிவினை எளிதாகப் பெறலாம் எனினும் கொடுத்த பணத்தினைப் பெண்ணுக்குத் திரும்பச் செலுத்தியே பெறவேண்டும். (பரிசமிட்டவளான மணமகனுடைய உடன்பிறந்தவளுக்கு அவளிட்ட பரிசத் தொகை செலுத்தப்பட வேண்டும்.)

"திருச்சூர் வட்டத்தைச் சேர்ந்த ஒரகம் பகுதியிலும், அதன் சுற்றுப் புறங்களிலும் உள்ள புலையன்களிடையே அவர்களின் பண்ணையார்களான நாயர்களிடையே காணப்படுவது போன்ற பெரும் போக்கான சம்பந்தங்கள் நடைபெறுகின்றன. கணவன் – அப்பெயர் கூறி அவன் அழைக்கப்படலாம் எனின் அவ்வாறு சுட்டலாம் – தன்னுடைய ஒரு நாளைய கூலியோடு கூட, ஓரிரவு மட்டும் தங்கி இருக்க ஒரு பெண்ணின் வீட்டிற்குச் செல்வான். அவர்கள் இருவரும் வேறு வேறு பண்ணையாரின் அடிமைகளாகக் கூட இருப்பர். திருச்சூரைச் சேர்ந்த புலச் செறுமான்களிடையேயும் இதனை ஒத்த பழக்கம் நிலவுகின்றது. இந்தத் தொடர்பு 'மெருங்கு கூடுக' எனப்படும். இதன் பொருள் வசப்படுத்துதல் அல்லது உறவுகொள்ளுதல் என்பதாகும்.

"ஒருத்தியை மணம் செய்து கொள்ள விரும்பும் இளைஞன் அந்த இளம் பெண்ணின் பெற்றோரிடம் சென்று அவர்களுடைய

மகளோடு உறவு கொள்ள அவர்களிடம் அனுமதி வேண்டுவான். அவர்கள் உடன்படுவார்களானால் அவன் அடிக்கடி இயன்ற வரை இரவு நேரங்களை அவளோடு கழிப்பான். அந்தப் பெண் தன் பண்ணையாரின் அனுமதியோடு முக்கியமான நிகழ்ச்சிகளின் போது மட்டும் கணவன் குடிசைக்கு வருவாளேயன்றிச் சாதாரணமாகக் கணவன் குடிசைக்கு வரும் பழக்கமில்லை. அவர்கள் தங்கள் விருப்பம்போல் உறவைத் துண்டித்துக் கொள்ளும் உரிமை உடையவர்கள். இத்தகைய உறவுகளின் வழிப் பிறக்கும் குழந்தைகள் தாயின் பண்ணையாருக்கு உரியவர்கள் மாநிலத்தின் வடபகுதியில் வாழும் கணக்கச்செறுமான்களிடையே பின்வரும் மணஉறவு முறைகள் வழக்கில் உள்ளன. ஓர் இளைஞன் ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுப்பின் மணத்திற்கான அடிப்படை ஏற்பாடுகளை அந்தப் பெண்ணின் குடிசையில் அவள் பெற்றோர், உறவினர், ஊரினைச் சேர்ந்த சாதிக்காரர் முன்னிலையில் செய்து முடிப்பர். மணநாள் நிச்சயிக்கப்படும். அங்கு மணமகன் மணப்பெண்ணின் விலையாக ஐந்து பணம் செலுத்துவான். கூடியுள்ளவர்களுக்கு அதன்பின் விருந்து அளிப்பர். பின்னர் மணமகனைப் பார்க்க வரும் மணமகளின் பெற்றோர், அவர்களின் உடன்பிறந்தோர், சாதியைச் சேர்ந்தோர் ஆகியோருக்கு மணமகன் இல்லத்தில் இதேபோன்று விருந்து அளிக்கப்படும். முடிவு செய்யப்பட்ட மணநாளன்று காலையில் மணமகனைச் சேர்ந்தவர்கள் மணமகள் குடிசையை அடைவர். அங்கு அவர்களை வரவேற்று குடிசையின் முன் போடப்பட்டுள்ள பந்தலில் பாயில் அமரச் செய்வர். ஒரு முறியும் (சேலை), இரண்டு முண்டுகளும் (துண்டுகள்) மணமகளுக்கு மணப் பரிசாக வழங்கப்படும். அந்தப் பந்தலின் நடுவே நெல் நிறைந்த ஒரு பாத்திரமும், ஏற்றிய விளக்கும், ஒரு தேங்காயும் வைப்பர். மணமகள் ஏழு கன்னிப் பெண்களுடன் மணப் பந்தலை ஏழு முறை வலம் வந்த பின் மணப் பந்தலில் நுழைந்து மணமகன் அருகே அமர்வாள். மணமக்களைக் காக்கும்படி தெய்வங்களை வேண்டியபின் மணமகள் கழுத்தில் தாலி அணிவிக்கப்படும். மணமகனின் உடன்பிறந்தவள் முடிச்சிடுதலை முடித்து வைப்பாள். மணச் சடங்கு நடைபெறும்போது மணமகளின் தாயார் அவ்விடத்திற்கு வரமாட்டாள். அவ்வாறு வருவது

சடங்கினைத் திட்டுப் படுத்தும் என்ற விசித்திரப் பழக்கம் இவர்களிடையே உள்ளது. கூடியிருப்பவர்களுக்கு விருந்தளிப்ப தோடு மணச் சடங்கு நிறைவுறும். விருந்தில், கள் இன்றியமை யாததாக இடம் பெறும். இரவில் ஆண்களும், பெண்களும் மகிழ்ச்சியோடு ஒன்றாகக் கூடி மனம்போனபடி நடனம் ஆடு வர். அதன்பின் மணமகன் தன் கூட்டத்தாருடன் மணமகளையும் அழைத்துக் கொண்டு தன் குடிசைக்குத் திரும்புவான். அங்கும் விருந்து நடைபெறும். ஒரு வாரம் சென்றபின் மணமகள் வீட் டார் இருவர் அங்கு வந்து மணமக்களை மணமகள் இல்லம் அழைத்துச் செல்வர். மணமக்கள் மணமகள் குடிசையில் சில நாட்கள் தங்கியிருப்பர். 'வத்தல் சோறு' எனப்படும் விருந்து உபசாரம் நடக்குமுன் மணமகன் அங்கிருந்து தன் குடிசைக்குத் திரும்ப முடியாது.

"கொச்சி, கணயன்னூர் வட்டங்களைச் சார்ந்த மாநிலத் தின் தென் பகுதியில் பெருமளவில் வாழ்கின்ற வள்ளுவப் புலை யன்கள் மணச் சடங்குகள் பரும்போக்கானவை. மணம் செய்து கொள்கின்ற இளைஞனின் சராசரி வயது பதினைந் துக்கும், இருபதிற்கும் இடைப்பட்டதாக இருக்கும். மண மகளின் வயது பத்துக்கும், பன்னிரண்டிற்கும் இடைப் பட்டதாகும். இளைஞனான ஒரு புலையன் மணம் செய்து கொள்ள முடிவு செய்யுமுன் தன் வயதினை ஒத்த, தன் பகுதி யைச் சார்ந்த இன்னொரு இளைஞனோடு தானாகச் சென்று நட்பு செய்து கொள்ள வேண்டும். அவனுக்கு அத்தகைய உறவு ஏற்படுத்திக் கொள்ளும் நாட்டம் இல்லையாயின், அவன் தந்தையே தன் மகனுக்காகத் தங்கள் சமூகப் படிநிலையை ஒத்த அல்லது உயர்ந்த வேறு குடும்பத்தைச் சேர்ந்த இளைஞனைத் தேர்ந்தெடுப்பான். அந்த இளைஞர்களின் பெற்றோர் இருவருக் கும் இடையே ஓர் உடன்பாடு ஏற்படுமாயின் அவர்கள் நட்பை உறுதிப்படுத்த எவரேனும் ஒருவருடைய குடிசையில் சந்திப்பர். அச்சடங்கிற்கான ஒரு நாள் முடிவு செய்யப்படும். வல்லோனை யும், சாதியைச் சேர்ந்தவர்களையும் அழைத்துப் புலையருக்கு உரிய மரபுப்படி விருந்து வைப்பர். விருந்தளிப்பவரும் முக்கிய விருந்தாளியும் ஒரே கலத்தில் உண்பர். விருந்துக்குப் பின் தன்

மகனுக்கு ஒரு தோழனை ஏற்படுத்தி வைக்கவேண்டிய புலையன், வல்லோனிடமும், கூடியிருக்கும் மற்றவர்களிடமும் பணம் செலுத்தி ஒருவனைத் தோழனாகக் கொள்ள அனுமதி வழங்கும் படி வேண்டுவான். அவர்கள் அனுமதி வழங்கியவுடன் சிறுவனின் தந்தை தோழனாக வர உள்ளவன் தந்தைக்கு உரிய தொகையைக் கொடுப்பான். அந்தச் சிறுவர்கள் இருவரும் அதன் பின் கைகளைக் கோத்துக் கொள்வர். அவர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்ளக் கூடாது. புதிய தோழன் அப்போ திருந்து அந்தச் சிறுவனின் குடும்ப உறுப்பினர்களுள் ஒருவனாகி விடுவான். அந்தச் சிறுவனின் குடிசைக்கு அவன் விருப்பம் போல் வந்து போவான். அந்தக் குடிசையில் அவனில்லாமலோ அல்லது அவனைக் கலந்து கொள்ளாமலோ எந்தச் சடங்கும் நடைபெறுதல் கூடாது. அவன் அங்கு நடைபெறும் எல்லா நிகழ்ச்சிகளிலும் சிறப்பாகத் திருமணங்களில் இன்றியமையாத வனாகின்றான். அந்தத் தோழன் அவனை நட்புக்கொண்ட சிறுவனின் மனைவி மீது உரிமையும் பாராட்டுவான் என நான் நினைக்கின்றேன். மணச் சடங்கின் முதல் நிகழ்ச்சி பெண் பார்த்தலாகும். மணமகன், அவன் தோழன், தந்தை, தாய்மாமன் ஆகியோர் பெண்ணைப் பற்றிய தங்கள் திருப்தியைத் தெரி விக்க அவள் குடிசைக்குச் செல்வர். விரைவில் மணநிகழ்ச்சி நடைபெற வாய்ப்பில்லையாயின், மணமகனின் பெற்றோர் தங்கள் உரிமையை உறுதிப்படுத்தியபடி இருக்க மணமகளின் பெற்றோருக்குப் பரிசுகளை அனுப்பியபடி இருப்பர். பெரும் பாலும் அவை இனிப்புப் பலகாரங்களாக இருக்கும். அவற்றை மணமகள் இல்லத்திற்கு மணமகனும் அவன் தோழர்களுமே கொண்டு செல்வர். அங்கு அவர்களை மணமகளின் தாயார் நன்கு உபசரிப்பதோடு மறுநாள் காலை அவர்கள் அங்கிருந்து புறப்படும்போது அவர்களுக்குப் பயன்படும் சிறு பொருள் களையும் கொடுத்து அனுப்புவாள். அடுத்து நிகழ்வது மணம் பேசுதல். அப்போது மணமகளுக்குரிய விலையைத் தருவதோடு உள்ளூர்க் கணியனைக் கலந்து மணநாளும் முடிவு செய்யப்படும். மணநாளுக்கு முன்தினம் மாலையில் மணமகன் குடிசையில் அவன் நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் விருந்து வைப்பர். மறுநாள் பொழுது புலர்கையில் மணமகனும் அவன் தோழனும்

குளித்து முடித்தபின் வெள்ளை வேட்டி உடுத்து அதன் மீது ஒரு கைக் குட்டையையும் சுற்றிக் கட்டிக் கொள்வர். அவற்றின் மடிப்பிடையே ஒரு கத்தியைச் சொருகிக் கொண்டவர்களாகத் தம் கூட்டத்தாருடன் மணமகள் இல்லம் நோக்கிச் செல்வர். அங்கு அவர்களை வரவேற்றுப் பாயில் அமரச் செய்வர். மண மகளின் தாயாரால் இதற்காகவே பின்னப்பட்ட பாயின்மீது மூன்று படி அரிசியும், தங்கத் துணுக்குகள் சிலவும், பித்தளைத் தட்டு ஒன்றும், வெள்ளையும் சிவப்புமான உறையால் மூடப் பட்ட பலகை ஒன்றும் வைக்கப்படும். மணமகன் ஏழுமுறை பந்தலை வலம் வந்தபின் அந்தப் பலகை மீது நிற்பான் அடுத்து, நான்கு பெண்கள் மணமகளின் தலைக்கு மேல் மேற்கட்டி பிடிக்கவும், ஏழு கன்னியர் முன் செல்லவும் மணமகள் மணப் பந்தலை மும்முறை வலம் வந்து, மணப் பந்தலின் உள்ளே புகுந்து மணமகனுக்கு எதிரே சென்று நிற்பாள். அவளுடைய பாது காவலர் தாலிக் கயிற்றில் ஒரு தங்கப் பாசியினைக் கோப்பர். இசை முழக்கப்பட்டபின், கதிரவனை நோக்கிமணமகள் கழுத்தில் அணியப்படுகின்ற தாலியை வாழ்த்துமாறு வேண்டுவர். மணமகன் கட்டிய தாலியினை, அவன் தோழன் மணமகள் பின் னால் நின்று நன்கு முடிச்சிடுவான். சமயத் தொடர்புடையதான மணச் சடங்கு இந்நிகழ்ச்சியோடு முடிவுறுகின்றது. மணமக் களைக் குடிசையினுள் அழைத்து அவர்களுக்கு ஒரே இலையில் உணவு இடுவர். அதன் பின் விருந்தினருக்கு விருந்தளிக்கப் படும். விருந்தினர் உண்டபின் 'பொலி' எனப்படும் தொகை யினைச் செலுத்துவர். ஒரு பட்டுத் துண்டோ சிவப்புத் துணியோ தரைமீது விரிக்கப்படும். அல்லது மணமகன் முன் ஒரு பித்தளைத் தட்டை வைப்பர். விருந்தினர் அதில் சில அணாக்களைப் போட்டபின் விருந்தளித்தவரிடம் விடை பெறு வர். அடுத்து மணமகள் மணமகன் குடிசைக்கு அழைத்துச் செல்லப் படுவாள். அவளுடைய பெற்றோர் மறுநாள் மண மகன் குடிசைக்குச் சென்று விருந்துண்பர். நான்காம் நாள் மணமக்கள் குளித்து முடித்தபின் உள்ளூர்க் கோயிலுக்குச் சென்று வழிபடுவர். ஏழாம் நாள் அவர்கள் மணமகள் குடிசைக் குத் திரும்புவர். அங்கு மணமகள் கழுத்தில் கட்டப்பட்ட தாலி முறையாக அகற்றப்படுவதோடு, கழுத்தில் பித்தளைப் பாசிச்

சங்கிலியும், காதுகளில் வளையங்களும், கைகளில் வளைகளும் அணிவிக்கப்படுவாள். மறுநாள் காலையில் மணமகனின் மாமியார் அவனுக்குத் தேவையான சில பொருள்களைப் பரிசாகக்கொடுத்துத் தன் மகளையும் அவனோடு அவன் இல்லத்திற்கு அனுப்பி வைப்பாள்.

"மற்றச் சாதியரிடையே நடைபெறுவதைப் போலவே ஒரு பெண் கருவுற்ற ஏழாம் மாதம் புளிகுடி எனப்படும் புளிச் சாறு குடிக்கும் சடங்கு செறுமான்களாலும் நடத்தப்படுகிறது. இதுவே பெண்ணின் உடலில் கெட்ட ஆவிகள் ஏறியிருக்குமாயின் அவற்றை ஓட்டுவதற்கும் உரிய நிகழ்ச்சியாகவும் இருக்கும். கருவுற்ற பெண்ணை அவள் பெற்றோர் தங்கள் குடிசைக்கு அழைத்து வருவர். பேய் ஓட்டுபவன் கூடாரம் போன்ற ஓர் அமைப்பினை இட்டு அதனை வாழைமட்டைகளாலும், தென்னோலை களாலும் வேய்வான். அதன் நடுவே உயரத்தில் ஒரு கமுகம் பாளை தொங்கவிடப்படும். ஒரு தென்னம்பாளையினை வெட்டி அதன் வெட்டுவாய் வெளியே தெரியும்படியாக அதனை ஒரு துணியால் போர்த்தி அதனைக் கருவுற்ற பெண்ணின் மடியில் வைத்து அவளைக் கூடாரம் போன்ற அமைப்பின் முன் உட்காரச் செய்வர். அவள் மடியிலிருக்கும் தென்னம்பாளை பிறக்கப் போகும் கருவில் இருக்கும் குழந்தையின் உருவகமாகும். அங்குக் கூடியுள்ள வல்லோன், பெண்ணின் பெற்றோர், உடன் பிறந்தோர் ஆகிய பலரும் இலையால் ஆன கரண்டியால் இளநீரை எடுத்துப் பெண்ணின் மடியிலிருக்கும் தென்னம் பாளையின் வெட்டுவாயில் விடுவர். அதன்பின் பேய் ஓட்டுபவன், அந்தத் தென்னம்பாளையைப் பிளந்து அதனுள் இருக்கும் பிஞ்சுகளைப் பார்த்துப் பிறக்கப் போகும் குழந்தை ஆணா அல்லது பெண்ணா என்று சொல்வான். பாளையின் காம்பின் மேல் முனையில் பிஞ்சுகள் இருக்குமானால் பிறக்கும் குழந்தை பிழைத்திருக்கும் எனவும், பிஞ்சுகள் இரட்டைப்படையாயின் இரட்டைக் குழந்தை பிறக்கும் எனவும் கூறுவான். பிஞ்சுகளில் எதாவது ஒன்று நன்கு வளர்ச்சி பெறாது இருப்பின் சாவு நிகழும் என்பான். பேய் ஓட்டுபவன் ஒரு மந்திரத்தைத் திரும்பத் திரும்பக் கூறிக் காளிதேவியின் துணையை வேண்டுவான். அவள் அந்தக்

கூடாரத்தில் இருப்பதாக நம்பிக்கை. அவன் அந்தப் பாளையால் கருவுற்றப் பெண்ணுக்கு விசிறுவான். அவன் அதன் மீது பூவும், அரிசியும் இடுவான். காளியினை நோக்கிச் செய்யப்படும் வழி பாடாக அவன் மற்றொரு மந்திரத்தினை அப் பெண்ணின் உடம்பிலிருந்து பேயினை ஓட்டுவதற்காகக் கூறுவான். இந்த மந்திரச் சடங்கு கருப்பப் பலி எனப்படும். அதன்பின் அந்தக் கூடாரம் பலிப் பொருள்களோடு அகற்றப்பட்டு வீட்டில் தெய்வங் களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் பகுதியில் வைக்கப்படும். அவன் அதன்பின் தொடர்ந்து மற்றச் சடங்குகளை நடத்து வான். கூடாரத்தில் வைக்கப்பட்டிருக்கும் இருபத்தொரு தொன்னைகளில் அவன் பசும்பால், இளநீர், மலர், மஞ்சள் பொடி ஆகியன கலந்த கலவையினை ஊற்றுவான். அதன்பின் அவன் அந்தக் கூடாரத்தை ஏழு முறை வலம் வந்து தென்னம் பாளையில் தொட்டு அந்தக் கலவையினை அதன்மீதும் வீசுவான். பின் கை நிறைய நெல்லையும், அரிசியினையும் எடுத்துத் தலை யைச் சுற்றியபின் அதன்மீது எறிந்து அக்கூடார அமைப்பினை ஒரு துணி கொண்டு போர்த்துவான். அங்கிருந்து அவன் திரும்பியவுடன் தயாராக வைத்திருக்கும் ஏழு புளி உருண்டை களை அவன் கணவன் அவள் வாயில் இடுவான். பேய் ஓட்டு பவன் அவள் உடம்பில் *Phlomis* இதழ்களையும் நெல்லையும் தேய்த்துப் பார்த்து அவளைப் பேய் பிடித்துள்ளதா எனச் சோதிப்பான். அவளைப் பேய் பிடித்திருக்குமாயின் அதற்குத் தர வேண்டிய பலிகளைத் தந்து அதனை ஓட்டுவான். பேய் ஓட்டுபவன் தன் பணிக்காகப் பன்னிரண்டரைப் படி நெல்லும் இரண்டு வேட்டியும் பெறுவான். இச்சமயம் கருவுற்றிருப்பவள் கணவன், முகம் மழித்துக் கொள்ளுதல் கூடாது.

" இளம்பெண் ஒருத்தியின் பேறு காலத்தின்போது அவள் குடியிருப்புக்கு அருகே ஒரு சிறு குடிசையில் அவளைத் தங்கச் செய்து அவள் தாயாரும் குடும்பத்தைச்சேர்ந்த சில மூத்தப் பெண் களும் அவளைக் கவனித்துக் கொள்வர். குழந்தை பிறந்தவுடன் தாயையும் சேயையும் குளிப்பாட்டுவர். மீண்டும் ஏழாம் நாள் தாயினைக் குளிக்கச் செய்து தீட்டுப் போக்குவர். மருத்துவச்சி யாகப் பேறு பார்த்தவள் அந்தக் குடிசையின் முன் தரையில்

இரண்டு இரண்டு அடி இடைவெளி விட்டு ஏழு கோடுகளை இழுத்து அவற்றின் மீது நாராகக் கிழிக்கப்பட்ட கற்றாழை களைப் பரப்புவாள். பின் எரியும் கொள்ளிக்கட்டையினைக் கையில் ஏந்தியவளாகத் தன் குழந்தையோடு ஏழுமுறை அந்தக் கற்றாழைகளின் மீது முன்னும் பின்னுமாக நடந்து தன் தீட்டினைப் போக்கிக் கொள்வாள். இந்த ஏழு நாட்களும் குழந்தையின் தந்தை அரிசியால் சமைத்த எதனையும் உண்ணுதல் கூடாது. கள், பழங்கள் முதலியவற்றை உண்டே அவன் நாள்களைக் கழிப்பான். குழந்தையின் தாய் அந்தக் குடிசையில் பதினாறு நாள்கள் தங்கி இருப்பாள். பின் குளித்துத் தீட்டு நீங்கியவளாக அவள் வழக்கமாகத் தங்கும் குடிசைக்குள் புகுவாள். அவள் 'எணங்கத்தி (மணவழி உறவானவள்) அவள் தங்கியிருந்த குடிசையைப் பெருக்கிச் சாணநீர் தெளித்துத் தீட்டுப் போக்குவதோடுகூட, குளித்து வரும் அவள் மீதும் சாண நீர் தெளிப்பாள். சிலவிடங்களில் இந்த நீரோடு அத்தி, இத்தி ஆகியவற்றின் பட்டைகளை இடித்துச் சாறெடுத்து அதனையும் கலந்து கொள்வர். அதனோடு கொஞ்சம் பாலும் சேர்த்து அக்கலவையைக் குடிசையின் உள்ளும் புறமும் தெளிப்பர். இதன் பிறகே குடிசையும் அதனைச் சுற்றியுள்ள பகுதியும் தீட்டிலிருந்து விடுபடுவதாகக் கருதுவர். பாலக்காட்டைச் சேர்ந்த செறுமான்கள் பத்து நாள்கள் தீட்டுப் பாவிக்கின்றனர்.

''குழந்தைக்கு ஆறு அல்லது ஏழு மாதம் நடக்கும்போது காது குத்தும் சடங்கு நடத்தப்படுகிறது. இதற்காக அழைக்கப் படும் வல்லோன் ஒரு கூரிய ஊசி கொண்டு காதில் துளையிடு வான். காதில் ஏற்படும் காயம் தேங்காய் எண்ணெய் வைத்து ஆற்றப்படுகிறது. நெட்டி, மரச்சிம்பு, பனை ஓலைச் சுருள் ஆகியனவற்றைத் துளையிலிட்டுத் துளையைப் படிப்படியே பெரிதாக்குவர். இச்சடங்கின்போது சாதியைச் சேர்ந்த உள்ளூர்க் காரர்கள் விருந்துக்கு அழைககப்படுவர். இதற்காகப் பண்ணை யார், பெண்ணின் பெற்றோருக்கு மூன்று பரை நெல் தருவார். விருந்துண்ண வருபவர்களும் கொஞ்சம் நெல் கொண்டு வருவார்கள். இவற்றைக் கொண்டு விருந்துக்கான செலவு சரிக்கட்டப்படும். விருந்துக்குப் பிறகு பறை முழக்கியபடி

அவர்கள் பண்ணையார் இல்லம் சென்று அவருக்கு ஒரு பறை ...விளைப் பரிசளிப்பர். அது வேலையாட்களிடையே வழங்கப் ...விடும். காது குத்தியவன் எட்டு இடங்கழி நெல்லும், ஒரு ...யும், ஒரு பானை நிறைய அரிசியும், நான்கணாவும் ...றுவான்.

"பறையன் ஒருவனோடு உடல் உறவு கொண்டதாகக் கண்டு பிடிக்கப்பட்டவள் சாதியிலிருந்து விலக்கப்படுவாள். அவள் கிறித்தவ சமயம் அல்லது முகமதிய சமயத்தைத் தழுவி விடுவாள். அத்தகைய தகாத உறவு சாதியைச் சேர்ந்த ஒருவனோடு கொள்ளப்படுமானால் அவன் நன்கு அடிஉதை தரப் பட்டு அக்கெட்ட ஒழுக்கத்தில் மீண்டும் ஈடுபடாது தடுக்கப் படுவான். தகாத ட்ட ...த்தை எல்லோரும் அறிந்த ஒரு நிகழ்ச்சி ஆகிவிடும் சட பங்கல ல் சாதிக்காரர்கள் வல்லோனை அணுகி அது பற்றி முறையாகக் கேட்டு அறிந்து தீர்ப்பு வழங்கும்படி கேட்பார்கள். ஓர் இளம்பெண் மணமாவதற்கு முன் கரு உறுவாளாகில், அவள் காதலன் புலையனாக இருப்பின் அவளை மணந்து கொள்ளும்படி அவன் கட்டாயப் படுத்தப்படுவான். காதலன் வேறு சாதிக்காரனாகில் அவள் சாதி விலக்கம் பெறுவாள். கள்ளக் காதலர்கள் இருவரும் மணமானவர்களாக இருப்பின் காதலனுக்கு நல்ல அடிஉதை தரப்படுவதோடு தண்டமும் விதிக்கப்படுவான். பெண்ணைத் தாண்டன் (ஈழவர் சாதித் தலைவன்) முன் கொண்டு நிறுத் துவர். அவளை அவன் விசாரித்த பின் அவளுக்குக் குடிக்க ஓர் இளநீர் தருவான். தான் செய்த பாவத்திலிருந்து விடு பட்டதாக அவள் மனமார நம்புவாள் ஆகில் அவள் அதனைக் குடிக்கலாம் எனக் கூறுவான். அவளுடைய கணவன் விரும் பினால் மீண்டும் அவளை மனைவியாக ஏற்றுக் கொள்ளலாம். அல்லது அவள் தன் விருப்பப்படி வேறொருவனை மணந்து கொள்ளலாம். தாண்டன் இதற்காகச் சில அணாக்கள், வெற்றிலை பாக்கு, புகையிலை ஆகியனவற்றைப் பெறுவான். குற்றம் செய்த பெண்ணின் தந்தையும் அவள் காதலனும் தண்டம் விதிக்கப் பெறுவர். அந்தத் தொகையைக் கொண்டு கள் வாங்கிக் கூடியுள்ள அனைவரும் குடிப்பர். மாநிலத்தின் வட பகுதிகளில், இளம் பெண்கள், தங்கள் பெற்றோர் உடன்

பாட்டுடன் மணமாவதற்கு முன் ஓரிரு கள்ளக் காதலர்களுடன் உடல் உறவு கொள்ளும் பழக்கம் உள்ளது. இறுதியில் அவர்களில் ஒருவன் அவளை மணப்பான். மணம் முடிந்தவுடன் அவள் மற்றவர்களுடனான தன் தொடர்பினை அடியோடு அறுத்துக் கொள்வாள்."

தென் மலபாரைச் சேர்ந்த செறுமான்களின் சாவுச் சடங்குகள் பற்றி நான் கேட்டறிந்த விவரங்கள் வருமாறு:- ஓர் செறுமான் இறந்தவுடன் அத்தகவல் அவனுடைய பண்ணையாருக்கு அறிவிக்கப்படுகிறது. பழைய வழக்கத்தின் அடிப்படையில் அவர் ஒரு மண் வெட்டி, ஒரு வெள்ளை வேட்டி, கொஞ்சம் எண்ணெய் ஆகியவற்றை இறந்தவன் வீட்டுக்கு அனுப்பி வைக்கக் கடமைப் பட்டவர். துக்க நிகழ்ச்சியை அறிவிக்கக் கொட்டு முழக்கு அடிப்பதற்காகச் சமூகத்தைச் சேர்ந்த பறை அடிப்பவர்கள் கூப்பிட்டு அனுப்பப்படுவர். இந்தக் கொட்டு முழக்கு 'பறையடிக்க' என வழங்கப்படும். இறந்தவன் உடல் எண்ணெய் பூசப் பட்டு உறவினர்களால் வெள்ளை, சிவப்பு வண்ணத் துணிகள் போர்த்தப்பட்டு வீட்டு முற்றத்திற்குத் தூக்கி வரப்படும். அதன்பின் உறவினர்கள் குளிப்பர். பின் பிணம் இடுகாட்டிற்குத் தூக்கிச் செல்லப்படும். அங்கு ஒரு புதைகுழி தோண்டப்படும். துக்கம் கேட்கக் கூடிய அனைவரும் இறந்தவரின் உடலைத் தொடுவர். அதன் மேல் உள்ள சிவப்புத் துணிகள் சில அகற்றப் பட்டபின் பிணம் குழியில் இறக்கப்படும். புதைகுழியை மூடி மேடை அமைத்த பின் தலை, வயிறு, பாதம் ஆகியன இருக்கும் இடங்களுக்கு மேலே கற்கள் வைக்கப்படும். இடுகாட்டிற்குப் பிணத்தோடு சென்ற ஆண்கள் பின்னர் வீட்டுக்குத் திரும்புவர். அவர்கள் தங்களைத் தூய்மைப் படுத்தக் குளிப்பர். பிணத்தின் மீதிருந்து கொண்டு வரப்பட்ட சிவப்புத் துணிகள் நீளவாக்கில் துண்டுகளாகக் கிழிக்கப்படும். அவற்றுள் ஒன்றினைப் புனித நினைவுப் பொருளாக வைத்துக் கொள்ள இறந்து போனவரின் உறவினருக்குத் தருவர். இதற்கிடையே அங்கு வந்து சேரும் உறவினர்கள் ஒவ்வொருவரும் வீட்டாருக்குக் கொடுத்த தொகையில் கள் வாங்கிக் கொண்டு வந்து கூடியுள்ள அனைவருக்கும் தருவர். மறுநாள் காலை அனைவரும் குளிப்பர். கள் குடிக்கும் பழக்கம் இல்லாதவர்களுக்காக

நெல்லைக்குற்றிக் கஞ்சிகாய்ச்சுவர். சாதியைச் சேர்ந்த "அவகாசி" என்ற முதியவன் பனை ஓலைகளைக் கொண்டு ஒரு கூடை முடைவான். அவன் அதனை வீட்டிற்கு வெளியே தெற்குப் பக்கத்தில் உள்ள ஒரு மரத்தில் தொங்க விடுவான். காய்ச்சப்பட்ட கஞ்சி வீட்டிற்கு வெளியே கொண்டுவரப்பட்டு, ஓர் ஆட்டுரலின் மீது வைக்கப்படும். பலா இலைகளைக் கொண்டு கரண்டிகள் செய்து அந்தப் பெரியவர் கஞ்சியினை எடுத்து" அனைவருக்கும் வழங்குவார். அதன் பின் கூடியுள்ள உறவினர்கள் பணமும் அரிசியும் சாவு வீட்டாருக்கு வழங்குவர். சோறும் காய்கறிகளும் தயாரித்து, வரும் உறவினர்களுக்கு வழங்குவர். அடுத்து "ஓரோ ஜுல்கா" என்ற சடங்கு நடத்தப்படும். ஒரு படி அரிசியையும் ஒருபடி நெல்லையும் கலந்து அதனை இரண்டு கூறிடுவர். ஒரு கூறின் மீது நான்கு காலணாக் காசுகளும், மற்றொன்றின் மீது எட்டுக் காலணாக் காசுகளும் வைக்கப்படும். முதற் கூறு வீட்டைச் சேர்ந்தவர்களுக்கு உரியதாகக் கொடுக்கப்படும். இரண்டாவது கூறின் மேல் இருக்கும் காசுகளில் அவகாசி நான்கினை எடுத்துக் கூடியிருப்பவர்களுள் நான்கு பெரியவர்களுக்கு வழங்குவான். அந்த நால்வரும் இறப்பு நிகழ்ந்த வீட்டின் நான்கு திசைகளிலும் வசிப்பவர்களாக இருக்க வேண்டும். எஞ்சியுள்ள காசுகளும் அரிசியும் பெரியவரான அவகாசிக்கு உரியன. அவன் தன் பங்கான அரிசி, நெல் ஆகியவற்றில் ஒரு பகுதியை வறுக்கவும் குற்றவும் தருவான். அது பின்னர் வீட்டைச் சேர்ந்தவர்களுக்கு வழங்கப்படும். வருகை தந்தவர்கள் வெற்றிலை பெற்றுக் கொண்டு 'பொல்லா' எனப்படும் பதின்மூன்றாம் நாள் நடைபெறுவதற்குரிய சடங்கைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டு புறப்படுவர். பதின்மூன்றாம் நாள் காலையில் உறவினர்கள் அனைவரும் இறந்து போனவர் வீட்டில் மீண்டும் கூடுவர். வீட்டிற்குரியவர்கள் குளித்த பின் மீனும், அரிசியும் வாங்கி வருவர். மீனில் கொஞ்சத்தை நெருப்பில் வாட்டுவர். கூடியுள்ள அனைவரும் அதில் சிறிது கடித்துக் கொள்வர். இது தீட்டினை இறுதியாக விலக்குவதற்காகச் செய்யப்படுகிறது. இதன்பின் எல்லோரும் விருப்பம்போல் மீனினை உண்பர். அரைச் சேர் அல்லது ஒரு படி அரிசியை நன்றாக வேகவைத்து அதனை மஞ்சள் சேர்த்துக் கெட்டியான கூழ்போலப் பிசைவர். வறுத்த

அரிசி, நெல் குற்றிய பின் எஞ்சிய தவிடு, ஒரு தேங்காய், ஒரு இளநீர், கொஞ்சம் மஞ்சள் பொடி, வாழை இலைகள், வேக வைத்து மஞ்சளிட்டுப் பிசைந்த களி ஆகியவற்றை அவகாசி இடுகாட்டிற்கு எடுத்துச் செல்வான். அவனோடு கள்ளாடி அல்லது மூணுபாட்டுக்காரன் எனப்படும் பாடுபவனும் இறந்தவரின் ஒன்றிரண்டு நெருங்கிய உறவினரும் உடன் செல்வர். களி போன்ற அரிசி மாவால் அவகாசி ஒரு மனித உருவினைச் செய்வான். புதைகுழியின் தலைமாட்டில் ஒரு மேடை அமைத்து, அதன் மீது மஞ்சளால் மந்திரச் சக்கரம் வரைந்து, அச்சக்கரக் கோடுகளின் மீது வேக வைத்த அரிசி மாவையும் இலைகளையும் வைப்பான். தேங்காயினை உடைத்து அதன் பருப்பினை வட்ட வடிவமான துண்டுகளாகக் கீறுவர். அத்துண்டுகள் மாவால் செய்யப்பட்ட மனித உருவத்தின் மீது வைக்கப்பட்டு அந்த உருவம் வாழை இலை மீது வைக்கப்படும். அந்த மேட்டினைச் சுற்றி வட்டமாகக் காட்டு மரங்களின் இலைகள் அமைக்கப் படும். அதன்பின் அப்பெரியவர் இறந்து போனவரின் மார்பு இருக்கும் இடத்தைக் கணித்து ஒரு கழியினைப் புதைகுழிக்குள் செலுத்துவார். அந்தக் கழி இறந்தவரின் மார்பினைத் தொட வேண்டும் என்பது விதி. தரையில் கழியின் ஒருபக்கம் ஒரு இளநீரும், மற்றொரு பக்கம் கள்ளோடு கூடிய தேங்காய்த் தொட்டியும் வைக்கப்படும். அதனபின் கழியின் மேல்முனையில் ஒரு சிறு செம்பு வளையம் சேர்த்துக் கட்டப்படும். ஒரு தேங்காய்த் தொட்டியிலிருந்து அந்த வளையத்தின் மீது எண்ணெய் ஊற்றப்படும். இளநீரும், தொட்டியில் வைக்கப்பட்ட கள்ளும் அது போலவே அந்தச் செம்பு வளையத்தின் மீது ஊற்றப்படும். மறை பொருளான இந்தச் சடங்கின் பிறகு, கள்ளாடி அவலம் நிறைந்த கையறுநிலைப் பாடல் ஒன்றை ஏற்ற இறக்கமற்ற குரலில் பாடுவான். இச்சடங்கில் பங்கு பெறும் மற்றவர்களும் அவனோடு சேர்ந்து பாடுவர். அந்தப் பாடல், உலகம் படைக்கப்படும் முன் எங்கும் சூழ்ந்திருந்த இருளையும், வெறுமையையும் எடுத்துக் கூறி, அதன்பின் உலகம் எவ்வாறு படைக்கப்பட்டது என்ற கற்பனை வளமிக்க செய்தியையும் விவரிக்கும். அந்தப் பாடலின் இடையிடையே 'ஐயகோ! ஐயகோ!' என்பதான விதியை நொந்து கூறும் பல்லவி இடம்

பெறும். பாட்டு முடிவுற்றதும் மாலாளான மனித உருவை மட்டும் புதைகுழியின் தலைமாட்டில் விட்டு விட்டுக் கழியை மட்டும் கன்னாடி தன்னோடு எடுத்துக் கொள்வான். சடங்கு நடத்தச் சென்றவர்கள் குளித்து விட்டு, இறந்தவர் வீட்டுக்குத் திரும்புவர். அங்குக் கன்னாடி அருள் ஏறப் பெற்ற நிலையில் இருப்பான். இறந்தவரின் ஆவி அவனுள் புகுந்து அவன் வழியாகப் பேசும். அது துக்கங் கொண்டாடுகின்றவர்களிடம் தான் மகிழ்ச்சியாக இருப்பதாகவும், தனக்காக அவர்கள் அதிகம் கவலைப்பட வேண்டாம் எனவும் கூறும். பிறகு கன்னாடி வீட்டிற்குள் நுழைந்து, நடு அறையின் மூலையில் கொஞ்சம் மண்ணைக் குவித்து அந்தக் கழியை அதில் நட்டு வைப்பான். அதனருகே ஒரு விளக்கு, கொஞ்சம் கள், ஓர் இளநீர், வறுத்த அரிசி ஆகியன வைக்கப்படும். கன்னாடியின் வாயிலாகப் பேசும் இறந்து போனவரின் ஆவி, அவர்கள் தனக்குப் படைத்திருப்பவைகளுக்காக நன்றி கூறுவதோடு, தன்னை அவ்வப்போது நினைத்துக் கொள்ளும்படியும், தனக்குப் படையல் இடும்படியும் கேட்டுக் கொள்ளும். கூடியிருப்போர் அதன்பின் விருந்துண்பர். அரிசியும், நெல்லும் கலந்து அதனை இரு கூறாக்குவர். ஒரு கூறின் மீது எட்டுக் காலணாக் காசுகளும், மற்றொரு கூறின் மீது பன்னிரண்டு காலணாக் காசுகளும் வைக்கப்படும். இரண்டாவது கூறு அவகாசியைச் சேரும். முதற் கூறில் உள்ள கலவையும், ஒரு காலணாவும் கன்னாடியைச் சேரும். எஞ்சிய காலணாக்கள் இறந்தவரின் நெருங்கிய உறவினர்களிடையே வழங்கப்படும். அன்று காலை தெற்கு மூலையில் மரத்தில் தொங்கவிடப்பட்ட பனை ஓலைக் கூடையை எடுத்துத் தூர எறிவர்."*

"செறுமான்களும் மற்றச் சாதியாரைப் போலவே சாவுத் தீட்டைக் கடைப்பிடிக்கிறார்கள். சில பருவங்களில் தொடர்ந்து பதினான்கு நாள்கள் அவர்களால் சோம்பேறிகளாக உட்கார்ந்திருக்க இயலாது ஆகையால் இதற்காக அவர்கள் ஒரு தந்திரம் செய்கின்றனர். பசுஞ்சாணத்தையும், நெல்லையும் கலந்து உருண்டையாக்கி அதனை ஒரு மண் பானையில் வைத்து, அதன்

---

* சென்னை மெயில் நாளிதழ், 1895. (Madras Mail, 1895.)

வாயினைக் களி மண்ணால் நன்றாக அடைத்து மூடுவர். அந்தப் பானை குடிசையின் ஒரு மூலையில் வைக்கப்படும். அது எவ்வளவு காலம் அப்படியே திறக்கப்படாமல் இருக்கிறதோ அதுவரை அவர்கள் தீட்டிலிருந்து விடுபட்டிருப்பவர்களாக மற்றவர்களோடு கலந்து பழகலாம். பின்னர் வசதியான ஒரு நாளில் அந்தப் பானையைத் திறப்பர். உடனே அவர்கள் தீட்டுக்கு உள்ளானவர்களாவர். இவ்வாறு இடைவிட்டுத் தீட்டப்படும் போது தீட்டுக்காலம் நாற்பது நாள்களாக நீளும். அப்படி இல்லையாயின் தொடர்ந்து பதினான்கு நாள்கள் தீட்டு அனுபவிப்பதே போதுமானது. பதினைந்தாம் நாளோ நாற்பத்தி ஒன்றாம் நாளோ தீட்டு அனுபவிப்பதைப் பொறுத்து முன்னோர்களுக்குச் சோறு படைப்பதோடு அதைத் தொடர்ந்து விருந்துண்டும் தீட்டுப் போக்குவர் '' எனத் திரு லோகன் குறித்துள்ளார்.

சாவுச் சடங்குகள் பற்றிப் பின்வரும் விவரங்களைத் திரு அனந்தகிருட்டிண அய்யர் தந்துள்ளார்:- ஒரு புலையன் இறந்தவுடன் சுற்று வட்டாரத்தில் உள்ள சாதிக்காரர்களுக்கு அதனைத் தெரிவிப்பர். தங்கள் நலத்தைப் பேணிவரும் தங்களுடைய மூத்த குலதெய்வமான கொடுங்கோளூர் பகவதிக்குக் காணிக்கை செலுத்துவர். இறந்தவர்கள் பெரும்பாலும் புதைக்கப்படுவர். உறவினர்கள் ஒவ்வொருவராக ஒரு துணியினை, அதன் நான்கு முனைகளிலும் நெல்லும், அரிசியும் முடிந்து கொண்டு வந்து பிணத்தின் மேல் போர்த்தி மும்முறை வாய்விட்டு மார்பில் அடித்துக் கொண்டு அழுத பின் அப்பால் செல்வர். பறையன்கள் சிலரை அழைப்பர். அவர்கள் ஓரிரு மணி நேரம் கொட்டு முழக்குவதோடு குழலும் ஊதுவர். அதன்பின் வாழையிலைத் துண்டுகளைப் பிணததருகே போட்டு அதில் அரிசி மாவையும், நெல்லையும் இறந்து போனவரின் ஆவிக்கு உணவாகப் படைப்பர். பக்கத்திற்கு மூவராக ஆறுபேர் பாடையினை இடுகாட்டிற்கு எடுத்துச் செல்வர். புதைகுழி தோண்டப்பட்டு ஒரு துணியால் பிணத்தைப் போர்த்தி அதனைக் குழியில் வைத்துக் குழியினை மண்ணிட்டு நிரப்புவர். குழியின்மீது இருபத்தொரு இலைத் துணுக்குகள் வைக்கப்படும். கவைத்த ஒரு குச்சியினை இறந்து

போனவரின் வாயிருக்கும் இடத்திற்கு நேராகப் புதை குழியின் மீது நட்டு, ஒரு தேங்காயை உடைத்து அதன் தண்ணீரை இறந்தவரின் வாயைக் குறிக்கும் குச்சியின் பக்க மாகப் போகும்படி விடுவர். இறந்து போனவர் உயிர்விடும் போது அவருக்குக் கஞ்சியினை வாயில் ஊற்ற இயலாது போன உறவினர்கள் இப்பொழுது கஞ்சி ஊற்றுவர். புதைகுழியின் இருபக்கமும் பக்கத்துக்கு மூவராகப் பாடை யினைத் தூக்கி வந்த அறுவரும் அப்போது விழுந்து வணங்கு வர். பூசாரி அதன்பின் புதைகுழியின் மீது இறந்து போன வரின் ஆவி உண்ணவும் குடிக்கவும் ஒரு தேங்காயையும் ஓர் இளநீரையும் வைப்பார். பூசாரி பன்னிரண்டு படி அரிசியும், புதைகுழி தோண்டியவர்கள் பன்னிரண்டு அணாவும், வல் லோன் இரண்டணாவும், பாடை தூக்கியவர்கள் ஆளுக்கு ஓர் அணாவும் பெறுவர். மகனோ, உடன்பிறந்தவர்களின் ஒருவன் மகனோ துக்கம் மேற்கொள்பவன் ஆவான். குடிசையின் தெற்குப் பக்கத்தில் மண்ணால் மேடை அமைத்து அதனை வழிபாடு செய்வான். ஏழு நாள்கள் காலையிலும் மாலையிலும் அவன் அந்த மேடையின் முன் விழுந்து வணங்கி அதன்மேல் இளநீரையும் தெளிப்பான். எட்டாம் நாள் இவன் உறவினர்கள் நண்பர்கள், வல்லோன், பேய் ஓட்டுபவன் ஆகியோர் ஒன்றாகக் கூடுவர். பேய் ஓட்டுபவன் வெளியே பார்த்தபடி நின்று தன் சங்கை முழக்கிப் பேய் இருக்கும் இடத்தைக் கண்டு பிடிப்பான். அது மண் மேடையில் குடியிருக்கிறதா ஏதேனும் தேவதைகள் அதனைத் தங்கள் வசம் வைத்துள் ளவா எனக் காண்பான். அவ்வாறு அது தேவதைகளுக்கு வசப் பட்டிருக்குமாயின் அதனை விடுவிக்கச் சடங்கு நிகழ்த்தி விடு வித்து அந்த ஆவியை வீட்டுக்குரிய தெய்வம் ஆக்குவான். துக்கம் கொண்டாடுபவன் அதிகாலையில் குளித்துமுடித்தவனாக இறந்து போனவரின் ஆவிக்குச் சோற்று உருண்டைகளைப் பலியாகத் தருவான். இதனை அவன் பதினைந்தாம் நாள் வரை செய் வான். பதினாறாம் நாள் காலையில் குடும்ப உறுப்பினர்கள் தீட்டுப் போக்கக் குளிப்பர். அவர்களின் 'இணங்கன்' குடிசை யையும் அதனைச் சுற்றியுள்ள இடத்தையும் கூட்டித் துப்பரவு செய்து பசுஞ்சாண நீர் தெளிப்பான். குளித்துத் திரும்பும்

குடும்ப உறுப்பினர்கள் மீதும் சாண நீர் தெளிக்கப்படும். துக்கம் கொண்டாடுபவன் முகம் மழித்த பின், குளித்துவிட்டுக் குடிசைக்குத் திரும்புவான். ஓர் இலையில் சோறு, நெல், தேங்காய்த் துண்டுகள் ஆகியன வைக்கப்படும். துக்கம் மேற் கொண்டவன் தன் குடும்ப உறுப்பினர்களோடு சேர்ந்து இறந்து போனவரின் ஆவியை அவற்றை வந்து பெற்றுக் கொள்ளுமாறு அழைப்பான். பின்னர் அனைவரும் சென்று குளித்து வருவர். அங்கு அழைக்கப்பட்டிருக்கும் சாதிக்காரர் களுக்கு நல்ல விருந்து வைப்பர். துக்கம் கொண்டாடுபவன் துக்கத்திற்கு அடையாளமாகத் தன் முடியினை வளர்ப்பான். ஓர் ஆண்டு முடிவில் மீண்டும் சாதியைத் சேர்ந்தவர்களுக்கு விருந்து கொடுக்கப்படும்.''

''முரடான கல் உருவங்களில் எழுந்தருளி இருக்கும் சில தெய்வங்களைச் செறுமான்கள் வழிபடுகின்றனர். அவர்கள் மேற்கொள்ளும் ஒரு சில சடங்குகளையும் அவர்கள் சாதியைச் சேர்ந்த பூசாரிகளே செய்கின்றனர். அப்பூசாரிகள் மிகுந்த மரியாதையோடு நடத்தப்படுவர். அத்தெய்வங்களுக்கு இவர்கள் சேவல்களைப் பலி தருவர். சேவல்களின் அறுபட்ட கழுத்தி லிருந்து வெளிப்படும் பசுங்குருதியை அக் கற்களின் மீது பூசி அத்தெய்வங்களைச் சினம் தணிவிப்பர்'' எனத் திரு கோபால் பணிக்கர் கூறுகின்றார். செறுமான்கள் குறிப்பிட்ட முல்லை நிலத் தெய்வங்களையும், தோட்டங்களில் வாழும் தெய்வங் களையும், வயல்களுக்குரிய தேவதைகளையும் கூட வணங்குவ தாகக் கூறப்படுகிறது. ''பதினாறு ஆண்டுகளுக்கு முன்பு மலபாரில் சில செறுமான்களால் ஒரு நாயர் கொலை செய்யப் பட்டான். கொலை உண்டவன் உடல் சில உறுப்புக்கள் இன்றிக் காணப்பட்டது. கொலை செய்தவர்களை (அவர்கள் தங்கள் குற்றத்தை வெளிப்படையாக ஒப்புக் கொண்டார்கள்) அது ஏன் அவ்வாறு உள்ளது எனக் கேட்டபோது அதற்கு அவர்கள், 'தின்னால் பாவம் தீரும்' எனப் பதலிறுத்தனர்''*

---

* இந்தியத் தொல்லியல், தொகுதி – 8, 1879. (Ind. Ant., VIII, 1879.

என மனிதரைத் தின்னும் பழக்கம் பற்றி அவரே ஒரு குறிப்பு எழுதியுள்ளார். இந்துக்களுள் பல சாதிகளையும் சேர்ந்தவர்கள் தின்பதற்காக ஒருவன் கொல்லலாம் எனப் பொதுவான நம்பிக்கையுடையவர்களாக உள்ளனர். இந்த நம்பிக்கை 'கொன்ற பாவம் தின்றால் தீரும்' என்ற பழமொழியாலும் புலப்படுகிறது. அந்தச் செறுமான் பதில் பழிதீர்த்துக் கொண்டதால் ஏற்பட்ட மனத் திருப்தியையும் குறிப்பதாகலாம். கீழ்ச் சாதி மக்கள் பழி தீர்த்துக் கொண்டவுடன் இப்பொழுதுதான் என் பசி அடங்கியது என வழக்கமாகக் கூறுவர்.

புலையன்கள் சமயம் பற்றித் திரு அனந்த கிருட்டிண அய்யர் பின்வருமாறு எழுதுகின்றார்:– "புலையர் ஆவிகளை வழிபடுதலை மேற்கொண்டவர்களாக இருப்பினும், மெல்ல மெல்ல உயர்ந்த தெய்வங்களின் வழிபாட்டிலும் ஈடுபாடு காட்டி வருகின்றனர். பறங்குட்டி, கரிங்குட்டி, சாத்தான், இறந்துபோன முன்னோர்களின் ஆவிகள் ஆகியனவே அவர்கள் வழிபடும் தெய்வங்கள். கர்கடகம் சங்கராந்தி, மகர சங்கராந்திகளின் போதும் ஓணம், விஷு முதலான புனித நாள்களிலும் இவர்கள் தங்கள் தெய்வங்களுக்குப் படையல் இடுவர். அப்போது புலையன்களில் ஒருவன் வெளிச்சப்பாடாகிக் கூடியிருப்பவர்களுக்கு நல்வாக்குச் சொல்வான். காளி அல்லது பகவதியையும் அவர்கள் ஆர்வத்தோடு வழிபடுகின்றனர். ஆபத்துக் காலங்களிலும் நோய்வாய்ப்பட்டபோதும் அத்தெய்வத்தின் அருளை வேண்டி வழிபடுவர். அவளுக்காக ஊரில் நடைபெறும் விழாவில் பங்கு கொள்வர். கொடுங்களூர் பகவதியே இவர்களின் குலதெய்வம். வெட்ட வெளியில் அமைக்கப்பட்ட ஒரு மேடையில் உருவச் சிலையாகவோ, மொட்டைக் கல்லாகவோ அத்தெய்வத்தை நிறுவி வழிபடுவர். இவர்கள் சாதியைச் சேர்ந்த ஒருவனே பூசாரியாக இருப்பான். புத்தாண்டின்போது அவன் அத்தேவதைக்குக் கோழிகள், பழங்கள், கள் ஆகியவற்றைப் படையல் இடுவான். தங்கள் குடும்ப உறுப்பினர்கள் மீது ஆவிகள் செல்வாக்குச் செலுத்தும் எனப் புலையர்கள் நம்புகின்றனர். ஆகவே அவற்றினைத் திருப்திப்படுத்த ஆண்டுதோறும்

சங்கராந்தியின்போது படையல் இடுவர். புலையர் பங்கு கொள்ளும சிறப்பான திருவிழாக்கள் வருமாறு:—

1. **பூரம் விழா:-** "மலபாரின் சதுர் நாளிய எனக் கூறப்படும் இவ்விழா ஊர்தோறும் பகவதி கோயில்களில் நிகழும். பிராமணர்கள் நீங்கலாக மற்ற எல்லா வகுப்பாரும் பங்கு கொள்ளும் விழா இது. மாசி அல்லது பங்குனி மாதத்தில் இது நடைபெறும். வட பகுதியைச் சேர்ந்த செறுமான்களும் தென் பகுதியைச் சேர்ந்த புலையன்களும் நன்றாக விருந்துண்டு கள்ளையும் குடித்தபின் ஊர்வலத்தில் சேர்ந்து கொள்வர். பொம்மைக் குதிரைகள் செய்து அவற்றை நீண்ட மூங்கில் கழிகளில் சேர்த்துக் கட்டிக் கோயிலைச் சுற்றியுள்ள பகுதிகளில் ஊர்வலமாகக் கொண்டு செல்வர். அவ்வாறு செல்லும்போது முழவு, குழல் ஆகியவற்றின் இசைக்கேற்பத் தாவிக் குதித்து ஆட்டம் ஆடுவர். அவர்களில் ஒருத்தன் வெளிச்சப்படாக—ஆவி ஆட்டக்காரன்—எல்லோருக்கும் முன் செல்வான். நன்கு ஆடிப்பாடிய பின் கையில் உள்ள தெய்வத்தை நோக்கி உரக்கக் கத்தி வழிபாடு செய்த பின் வீட்டுக்குத் திரும்புவர்.

2. **விட்டு இடுக (வித்து இடுதல்):—** இந்த விழா விதையினை இடுவது அல்லது நெல் விதையினை ஊர்ப் பகவதி கோயிலுக்குக் கொண்டு வருவதாகும். இது மாசி மாதத்தில் பரணி நட்சத்திரத்தில் நிகழும் ஒரு சிறப்பான விழாவாகும். கிராம அதிகாரிகள் அவர்களுக்கு என ஒதுக்கிய இடத்தில் நின்று, காளியினை வழிபட்டு, தாங்கள் கொண்டுவந்த நெல்லினை அவர்கள் முன் விரிக்கப்பட்டுள்ள மூங்கில் தட்டியில் இட்டு வீட்டுக்குத் திரும்புவர்.சித்தூர் வட்டத்தில் கார்த்திகை மாதத்தில் கதிர் என அழைக்கப்படும் திருவிழா ஊர்த் தேவதையைச் சிறப்பிக்கக் கொண்டாடப்படுகிறது. அவ்விழாவின் போது புலையன்கள் தங்கள் பண்ணையார் வயல்களிலிருந்து குழலும், பறையும் முழங்க ஊர்வலமாகச் செல்வர். கதிர் திருவிழாவின் குறிப்பிடத்தக்க சிறப்பு, ஊர்த் தேவதைகளின் கோயில்களில் மூங்கிலாலும் வாழைப்பட்டைகளாலும் கட்டப்பட்டு, மலர்கள், இலைகள், நெற்கதிர்கள் ஆகியவற்றால் அலங்கரிக்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கும் எண்ணிறந்த கூடுகளாகும். சரக்கூடம்

என அழைக்கப்படும் இவை ஓர் இணை மூங்கில்களை இணைத்துக் கட்டப்படுபவை. பண்ணை அடிமைகளான புலையன்கள் தாங்கள் பணியாற்றும் பண்ணைகளிலிருந்து இவற்றைத் தூக்கியபடி கொட்டு முழக்கும், வாண வேடிக்கைகளும் உடன் வர ஆடிப்பாடியபடி வருவர். சரக் கூடத்தோடு சிறிய வட்ட வடிவமான பனையோலைப் பெட்டிகளில் வைக்கோலால் சுற்றிக் கட்டப்பட்ட நெல் பொட்டலங்களையும் பெரும் அளவில் கொண்டுவருவர். இப்பொட்டலங்கள் கதிர்க்கூடு எனப்படும். ஊர்வலத்தின் போது வழி நெடுக வேடிக்கை பார்க்கும் கூட்டத்தை நோக்கி இக்கதிர்க் கூடுகளை வீசியபடி செல்வர். கோயிலை அடைந்த பின்னும் இக் கதிர்க் கூடுகள் வீசப்படும். பார்வையாளர்களான இளைஞர்களும், முதியவர்களும் இவைகளைப் பெற்றுத் தங்கள் வீட்டுக்குக் கொண்டு செல்லப் பார்ப்பர். பின்னர் அவை வீட்டு வாசலில் தொங்கவிடப்படும். மறுபடியும் அடுத்த ஆண்டு அவ்விழா நிகழும் வரை குடும்பத்திற்கு அவ்வாறு தொங்கவிடப்படும் கதிர்க் கூடுகள் நல்ல அதிர்ஷ்டத்தைக் கொண்டு வரும் என நம்புகின்றனர். எத்தனைக்கு எத்தனை மிகுதியாக இக்கதிர்க் கூடுகளை ஒரு குடும்ப உறுப்பினர்கள் கொண்டு வருகின்றனரோ அத்தனைக்கு அத்தனை குடும்பத்திற்கு நல்ல அதிர்ஷ்டம் என்று நம்புகின்றனர். தொலைவிலிருந்தால்கூடத் தீட்டினைத் தரக் கூடியவர்கள் எனக் கருதப் படும் பண்ணை அடிமைகளான புலையன்கள், ஊருக்குள்ளே வந்து உரிமையோடு ஊரின் நடுவீடங்களிலேயே பொதுவாக அமைக்கப்பட்டிருக்கும் ஊர்த் தேவதைகளின் கோயில்களில் வழிபாடு செய்யும் உரிமை பெறும் ஒரு 'சில சந்தர்ப்பங்களில் இதுவும் ஒன்றாகும். பல பண்ணைகளிலிருந்தும் சரக் கூடங்களையும், கதிர்க் கூடுகளையும் கொண்டு செல்லும் ஊர்வலங்கள் பொழுது சாயும் சமயத்தில் கோயில்களை அடைய ஏற்ற வகையில் முன் கூட்டியே புறப்படும். ஊர்த் தேவதைகளின் முன் சரக் கூடங்கள் அழகுற வரிசையாக வைக்கப் படும். செறுமான்கள் தங்கள் மனம் நிறைவு கொள்ளும்படி யாக ஆடிப்பாடி மகிழ்வர். வெங்கல விளக்குகள் ஏற்றப் படுவ தோடு, வாண வேடிக்கைகளும் நிகழ்த்தப்படும். கதிர்க்

கூடுகளும் கூடியிருப்பவர்களிடையே கோயிலின் எல்லாப் பக்கங்களிலிருந்தும் வீசப்படும். இரவு முழுக்க ஊர்வலமாகச் சென்ற புலையன்களுக்கும் மற்ற பண்ணையாட்களுக்கும் அவரவர்களுடைய பண்ணையார் வீட்டில் உணவளிக்கப்படும். அதன்பின் அவர்கள் பண்ணைக்குத் திரும்புவர்.

3. **மண்டல விளக்கு:-** கார்த்திகை மாதம் முதல் தேதி முதல், மார்கழி மாதம் பத்தாம் தேதி வரையான நாற்பத்தொரு நாள்கள் பகவதி கோயிலில் நடைபெறும் விழாவாகும் இது. அப்போது இரவில் கோயிலின் உள்ளும் புறமும் நிறைய ஒளி விளக்குகளை ஏற்றுவர். இரவில் கோயிலில் கொட்டுமுழக்கு நடைபெறுவதோடு, சுண்டல் பணியாரங்கள் முதலியன கோயில் தேவதைகளுக்குப் படைக்கப்பட்டுப் பின்னர் அவை கூடியிருப்பவர்களுக்கு வழங்கப்படும். விழா முடிவுறும் நாற்பத்தி ஒன்றாம் நாள் பெரும் அளவில் விழா நிகழ்ச்சிகள் அமையும். அப்போது எல்லாச் சாதியைச் சேர்ந்தவர்களும் கோயிலுக்கு வருகை புரிவர். சித்தூரில் நடைபெறும் விழாவிற்குச் செறுமான்கள், மலையர்கள், எரவாளர்கள் ஆகிய அனைவரும் வருகை தருவர். அங்கு நடைபெறும் கொங்கப் படை விழாவிலும் அவர்கள் கலந்து கொள்வர். மாநிலத்தின் ஊர்ப்புறங்களில் ஓலைப் பாவைக் கூத்து எனப்படும் ஒருவகைப் பொம்மலாட்டம் நிகழும். இதனைக் குசவர்களும் தமிழ்ச் செட்டிகளும் ஊர்த் தேவதையைச் சிறப்பிக்க நடத்துவர். அதற்குரிய கட்டணங்களும் அவர்களிடையே வசூலிக்கப்படும். அவர்கள் கொடுங்கோளூரில் நடைபெறும் சேவல் சண்டைகளில் பங்கு பெறுவதோடு கோழிகளையும் பலியிடுவர்.''

திருவாங்கூரைச் சேர்ந்த புலையன்களின் சமய நெறி பற்றிப் பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு என். சுப்ரமணி அய்யருக்குக் கடப்பாடுடையேன்:- ''இறந்துபோன முன்னோர்களின் சாவர்கள் என வழங்கப்படும் ஆவிகளை இவர்கள் வழிபடுகின்றனர். மாடன், அஞ்சு தம்பிராக்கள் - விவரம் தெரிந்த புலையன்கள் இவர்களைப் பஞ்சபாண்டவர் எனக் கூறுவர் - ஆகிய தெய்வங்களையும் இவர்கள் போற்றி வணங்குகின்றனர். புலையர்களுக்கு என்று தனியே கோயில்கள்

இல்லை. தோப்புகளிடையே சதுர வடிவிலான மேடைகளிலேயே அவர்கள் வழிபாட்டை நிகழ்த்துவர். ஒன்றுக்கருகில் ஒன்றாக மூன்று இலைகளை ஒவ்வொரு புலையனும் இடுவான். அவற்றில் பச்சரிசி, அவல், கமுகம் பாளை ஆகியவற்றைப் படைப்பர். இந்த இலைகள் ஒவ்வொன்றின் மீதும் அவன் ஒரு பூவினை இட்டு கைகுவித்து வணங்குவான். சாவர்கள் எனப் படுபவை இறந்து போன குழந்தைகளின் ஆவிகள். நிறைவு உறாத ஆசைகளின் உந்தல் காரணமாக அந்த ஆவிகள் உலகில் திரிந்தபடி இருக்கும் என நம்புகின்றனர். இத்தகைய இயற்கை இறந்த ஆவிகளிடம் மரியாதையும் அச்சமும் கலந்த உணர்வோடு அவைகளுக்கு ஆண்டுதோறும் பலவகைப் பொருள்களைப் படைத்துப் புலையர்கள் வழிபாடு செய்கின்றனர். தேவரட்டும் புரன் என்பவை இன்னொரு பிரிவைச் சேர்ந்த தெய்வங்கள். பர சாலையில் உயர்சாதி இந்துக்கள் வழக்கமாக வழிபடும் தெய்வங்கள் என்பது இதன் பொருள். திருவிழாக் காலங்களில் புலையர் சில தனிச் சலுகைகள் பெறுகின்றனர். உச்சிரா, குமாரநல்லூர், நெடுமாங்காடு ஆகிய இடங்களை இதற்குச் சான்றாகக் கூறலாம். 'நெடுமாங்காட்டில் மார்ச் மாதத்தில் நடைபெறும் ஆண்டுத் திருவிழாவின்போது ஈராயிரம் அல்லது மூவாயிரத்திற்கு மேற்பட்ட சூத்திரர்களும், ஈழவர்களும் கூடுகின்றனர். இவர்களுள் மூன்றில் ஒரு பங்கினர் அக்கோயிலின் சுற்று வட்டாரத்திலிருந்து வந்து திரளும் பறையர், குறவர், வேடர், காணிக்கார், புலையர் சாதிகளைச் சேர்ந்தவர்களே. அவர்கள் தங்களுடன் மரத்தாலான பசுமாடுகளை, நெற்கதிர்களை அவற்றின் மேல் மயிருக்கு உரியதாக ஒழுங்காக அமைத்துப் பதித்துக் கொண்டு வருவர். இந்த உருவங்களை அவரவர்கள் ஊர்களிலிருந்து தனித் தனியே ஊர்வலமாக எடுத்து வருவர். அவை மூங்கில் சட்டத்தில் பொருத்தப்பட்டுக் கொட்டு முழக்கோடு, ஆண்களும் பெண்களும் ஊர்வலமாகப் பின்வர எடுத்து வரப்படும். ஊர்வலத்தில் வரும் பெண்கள் பல வரிசைச் சிவப்பு, வெள்ளைப் பாசி மணி மாலைகளோடு ரூபாய் வடிவிலான பித்தளைப் பதக்கங்கள் கோக்கப்பட்ட சங்கிலிகளையும் மிகுதியாகக் கழுத்தில் அணிந்திருப்பர் வழி நெடுக அவர்கள் உரக்கக் குலவை இட்டபடி வருவர். இந்த உருவங்கள் கோயிலைச் சுற்றி எடுத்துச் செல்லப்படும். அனை

வரும் ஆரவாரமான மகிழ்ச்சியில் திளைப்பர்.' என மட்டீர் (Mateer) எழுதுகிறார்.* புலையன்களுடைய சமய விழாக்களுள் விசித்திரமானது தை மாதத்தில் கொண்டாடப்படும் புலையர் சனிக்கிழமை ஆகும். குன்னத்தூர் வட்டத்திலுள்ள சஸ்டம் கோட்டையில் இவ்விழா நடைபெறும். மிகத் தொன்மையான தான இதனை ஆண்டுதோறும் புலையர்கள் மிகுந்த பக்தி சிரத்தை யுடன் கொண்டாடுவர். சாதிப் பூசாரி அல்லது வள்ளுவன் குழுமியுள்ள அனைவரையும் கோயிலின் முன்னுள்ள ஆலமரம் அருகே அழைத்துச் செல்வான். அங்கு நெல், கிழங்குகள், வாழைப் பழம், கோழி, பருப்பு, காசுகள், தங்க இழைகள் ஆகிய பல வகைப் பொருட்கள் பக்தியோடு படைக்கப்படும். இந்தச் சடங் கிற்காகப் புலையன்கள் வெகு தொலை தூரத்திலிருந்தும் கூட வருகின்றனர். புலையர்களிடையே வழிபாட்டுக்குரிய பொருட் களுள் மிகச் சிறப்பானதாகக் கருதப்படுவது உதய தம்புரான். காலையில் எழும் கதிரவனையே அவர்கள் இப்பெயரால் அழைக் கின்றனர். பேயோட்டுதலிலும் ஆவி ஏறப் பெற்று ஆடுதலிலும் இவர்கள் மிகுந்த நம்பிக்கை வைத்திருப்பதோடு அவை பல நோய்களைத் தீர்க்கும் ஆற்றல் உள்ளவை எனவும் நம்புகின் றனர். கொக்கர எனப்படும் இரும்புக் கிலுகிலுப்பை, பேயோட்ட எங்கும் பயன்படுத்தப்படுகின்ற ஒரு கருவியாகும். விலங்குகளைப் பலியிடும் வள்ளுவன் உடனே சாமி ஏறப்பட்டவனாகிவிடுகின் றான். அவனிடம் கேட்கப்படும் கேள்விகளுக்கு எல்லாம் அப் போது தக்க பதில் உரைப்பான். மற்றச் சமயங்களில் அவன் அதே கேள்விகளுக்குப் பதில் கூறத் திறமையற்றவன் ஆவான். புலையன்கள் வட திருவாங்கூரில், கமஞ்சேரி, ஓங்கார பகவதி, யட்சி அம்பலம், பேய்க் கோயில், வலியப்பட்டு முட்டன் ஆகிய இடங்களில் தெய்வ வழிபாட்டுக்கெனத் தங்களுக்கு உரிமை உடைய கட்டிடங்களைப் பெற்றுள்ளனர். அவ்விடங் களில் வள்ளுவன் பூசாரியாக இருந்து தெய்வ வழிபாட்டினை நிகழ்த்துவான். புலையன்கள் சகுனத்தில் நம்பிக்கை உடைய வர்கள். மற்றொரு புலையனைப் பார்ப்பதோ, கிறித்துவன் ஒருவனை எதிர்ப்படுவதோ, கையில் தன் குடுவையுடன் வரும்

* திருவாங்கூர் மக்கள் வாழ்க்கை. (Native Life in Travancore.)

ஈழவனைப் பார்ப்பதோ, அரிசியோ, நெல்லோ ஏற்றப்பட்ட படகினைப் பார்ப்பதோ, அவர்களால் நல்ல நிமித்தங்களாகக் கருதப்படுகின்றன. மாறாகப் பூனை குறுக்கே போதல், விலங்குகள் தங்களுக்கிடையே சண்டையிட்டுக் கொள்ளுதல், துணி மூட்டையுடன் ஒருவன் எதிரே வருதல், இரும்புக் கருவிகளை எடுத்து வரும் மனிதர்களைப் பார்த்தல் ஆகியன மிகக் கெட்ட நிமித்தங்களாகக் கருதப்படுகின்றன. உயர் சாதி இந்துக்களைப் போல இவர்கள், வரும் நலந்தீங்குகளைச் சொல்லும் ஆற்றல் பல்லிக்கு உண்டென நம்புவதில்லை."

திருவாங்கூர் புலையன்களின் சாதி நிர்வாகம் பற்றித் திரு சுப்ரமணிய அய்யர் பின்வருமாறு எழுதுகின்றார்:- "ஆயிரக் கரை எசமானர் எனப்படும் ஆயிக்கரை தம்பிரானே புலையர் சாதியாரின் தலைவராவார். வட திருவாங்கூரைச் சார்ந்த சேர்த்தலை வட்டத்தில் உள்ள வயலாரில் வாழ்ந்து வரும் இவர், சேரமான் பெருமாள் இவருடைய முன்னோர் ஒருவருக்குப் பரிசாக அளித்த சரிகைக் குல்லாயைத் தலையில் அணிந்து கொள்வதில் மிகவும் பெருமைப்படுகின்றார். வட திருவாங்கூரைச் சேர்ந்த பறையன்களும் இவரைத் தங்களுடைய முறையான தலைவராக ஏற்றுக் கொள்கின்றனர். இவருக்குக் கீழ்துட்டேரி அச்சன மண்ணாட்டு கோயில் வல்லோன் என்ற இரண்டு சாதித் தலைவர்கள் பெயரளவில் செயல்படுகின்றனர். ஒவ்வொரு "கரை"க்கும் உரிய உள்ளூர் பூசாரியான வள்ளுவனைத் நியமிப்பவர் ஆயிக்கரை தம்மரரே. அவ்வாறு நியமனம் பெறுபவர்கள் அதற்காக இவருக்கு 336 சக்கரங்கள் (காசு) அன்பளிப்பாகத் தர வேண்டும். புலையன்கள் இன்றும் பழைய திருவாங்கூர் காசான சக்கரத்தைக் கொண்டே தங்கள் கணக்கு வழக்குகளை நடத்துகின்றனர். தன் பணியினை மேற்கொள்ளத் தொடங்குமுன் வள்ளுவன் எப்பொழுதும் தம்மரரிடமிருந்து எழுத்து மூலமான ஆணையினைப் பெற்றுவைத்துக் கொள்கின்றான். ஒவ்வொரு மண நிகழ்ச்சியின் போதும் 49 சக்கரங்களும், நான்கு முனிக் காக்களும் (ஐந்து வெற்றிலை, ஒரு பாக்கு, இரண்டு புகையிலை ஆகியன அடங்கியதற்கான பெயர் முனிக்கா) தமரருக்குச் செலுத்தப்பட வேண்டும். வள்ளுவன் எட்டுச் சக்கரங்களும்

ஒரு முளிக்காவும் பெறுவான். தமரருக்குச் சேர வேண்டிய வைகளைப் பெற்று ஆண்டுக்கு ஓரிரு முறைகளில் வயலாருக்கு அனுப்பி வைப்பவன் வள்ளுவனே. வள்ளுவனையும் மற்றச் சாதி அலுவலர்களையும் நியமிக்கும் அதிகாரம் தவிர வேறெந்த அதிகாரமும் தமரருக்கு இல்லை. இவரால் நியமிக்கப்படும் வள்ளுவன் தன்னைத் தலைமை வள்ளுவன் எனக் கூறிக் கொள்வான். இவ்வாறு அவன் கூறிக் கொள்வது கோயில் அதிகாரிகளாலும் பிராமணர்களாலும் நியமிக்கப்படுகின்ற வள்ளுவன்களிலிருந்து தன்னை வேறுபடுத்திக் கொள்வதற் காகவே ஆகும். இவனுக்குத் தன் ஆட்சி உரிமை உடைய பகுதியில் வாழும் புலையர்களைப் பொதுவாக மேற்பார்க்கும் அதிகாரம் உண்டு. ஒவ்வொரு வள்ளுவனும் ஐந்து சிறப்புத் தகுதிகளைப் பெறும் உரிமை உடையவன். அவையாவன:- 1) நீண்ட மூங்கில் பிடி உடைய குடை. 2) ஐந்து வண்ணக் குடை. 3) தன் தகுதியை உணர்த்தும் காப்பு. 4) நீண்ட தங்கக் கடுக்கன். 5) வெற்றிலை வைத்துக் கொள்ளப் பெட்டி. இவற்றை வைத்துக் கொள்ளும் உரிமையே அந்த ஐந்து சிறப்புக்கள். நாற் காலியில் அமரவும், விரிப்பினைப் பயன்படுத்தவும், திருமணங் களில் பித்தளைக் குடமுழா வைத்துக் கொள்ளவும் ஆகிய தனி உரிமைகளையும் இவர்கள் பெறுவர். வள்ளுவன் கீழ் பணிபுரி பவர்கள்:- 1) கறுப்பன் அல்லது கணக்கன். வள்ளுவன் தன் பணியினைச் செய்ய இவன் உதவுவான். 2) குமாராட்டன் எனப்படும் பேய் ஓட்டுபவன். 3) கைக்காரன் அல்லது ஊர் உறுப்பினன். 4) வடிக்காரன், காவலன் அல்லது தண்டல்காரன். குடைபிடித்தல், சடங்குகளின்போது மரங் களிலிருந்து இளநீர் போடுதல் போன்ற பல்வேறு பணிகளைச் செய்வதற்குரியவன் கறுப்பன். ஒரு சிறுமி பூப்படைந்தபின் அவளைக் குளிக்கச் செய்வதில் வடிக்காரன் பங்கு கொள்வான். முன்பெல்லாம் தவறான நடத்தையில் ஈடுபடுவது மிகக் கொடிய குற்றமாகக் கருதப்பட்டதோடு அதில் ஈடுபடுபவர்களுக்கு உரிய கடுந்தண்டனையும் வழங்கப்பட்டது. அவ்வாறு நடப்பவள் கொதிக்கும் எண்ணெய் உள்ள பாத்திரத்தில் கையினை விடும்படி கூறப்படுவாள். ஒருவன் கள்ளத்தொடர்பு கொண்ட பெண், மணமானவளா இல்லையா

என்பதனைப் பொறுத்து ஆண்களுக்கு 336 அல்லது 64 சக்கரங்கள் அபராதம் விதிப்பர். அதன்பின் 'அறியும் பிறயும் திட்டுக்கா' என்ற கொடிய சடங்கு நடத்தப்பட்டுச் சாதி விலக்கம் செய்யப்படுவான். அச்சடங்கு எத்தகையது என்ற சரியான விவரம் அறியப்பட இயலாததாக உள்ளது. மணமான பெண் ஒருத்தி தன் கணவனுக்குப் பணிய மறுப்பாள் ஆகில் வள்ளுவனும் மற்ற அலுவலர்களும் அவளை விசாரிப்பார்கள்.''

''தென் மலபாரில் உள்ள பாலக்காடு வட்டத்தில் கண்ணடிக் குட்டி வட்டல் என்ற இடத்தில் திருட்டு, கள்ளத் தொடர்பு, மணமுறிவு தொடர்பான வழக்குகளை ஆராய முன்பு பெரும் கூட்டங்கள் கூட்டி வந்தனர். இந்த அவைகளில் வாளையாறு காட்டுப் பகுதி முதல் கரிம புழா (வள்ளுவ நாடு வட்டம்) வரையுமான வடக்கிலும் தெற்கிலும் உள்ள மலைகளுக்கு இடைப்பட்ட பகுதிகளில் வாழும் செறுமான்கள் இடம் பெறுவர். இவர்கள் வழக்குகளைத் தொடர்ந்து பல நாள்கள் கூட ஆராய்வர் எனக் கூறப்படுகிறது. யாராவது குற்றம் புரிந்தால் அவர்களுக்குச் சில உரூபாய்கள் அபராதம் விதிப்பதோடு சில சமயங்களில் நல்ல அடிஉதையும் தருவர். தான் குற்றம் செய்யவில்லை என்பதனை நிரூபிக்க விரும்பும் ஒருவன் 'கண்ணடி சுவரூபமா நான் அந்தக் குற்றத்தைச் செய்யவில்லை' எனக் கூறவேண்டும். இந்தக் கண்ணடி அவை மிகப் புனிதமானதாகக் கருதப்படுவதால் குற்றம் புரிந்த எந்தச் செறுமானும் பொய்யாக அந்த அவையின் மேல் சத்தியம் செய்யமாட்டான். காலப்போக்கில் அந்த அவை கூடுவதில் உள்ள இடையூறுகள் காரணமாக அவை கூடுவது அடியோடு கைவிடப்பட்டுவிட்டது'' எனத் திரு அனந்த கிருட்டிண அய்யர் குறிப்பிட்டு உள்ளார்.

புலையன்களின் பொழுதுபோக்குகள் பற்றித் திரு அனந்த கிருட்டிண அய்யர் பின்வருமாறு எழுதுகின்றார்:- ''இவர்களுடைய விளையாட்டுக்கள் இவர்களுடைய சமயத் தொடர்பான நிகழ்ச்சிகளோடு தொடர்புடையனவாக உள்ளன. இவர்களின் முக்கியமான நடனம் கோலாட்டம் ஆகும். பத்து அல்லது பன்னிரண்டு ஆண்கள் சுமார் ஒரு கஜ நீளமுள்ள கோல்களை

ஏந்தியபடி வட்ட வடிவமாக நின்று கோலோடு கோல் அடித்த படிச் சுற்றி ஆடி வருவர். பாட்டுப் பாடியபடி சீராக அடி எடுத்து வைத்து ஆடுவர். வட்டம் பெரியதும் சிறியதும் ஆக அமையும்படி மாறிமாறிச் சுற்றி வருவர். வட்டக் களி என்பது வேகமாக இயலும் மற்றுமொரு நடன வகை. இதனை ஆடவும் பத்து முதல் பன்னிரண்டு ஆண்கள் தேவைப்படுவர். சிலபோது பெண்களும் இந்த ஆட்டத்தில் சேர்ந்து கொள்வர். பரும்படி யான பாட்டினை பாடியபடி ஆடுபவர்கள் தங்கள் கைகளைத் தட்டியபடி வட்டமாகச் சுற்றி வருவர். தட்டிமேல்களி என்ற ஆட்டம் நான்கு மரக்கழிகளை உறுதியாகத் தரையில் நட்டு, அவற்றில் இரண்டினைக் குறுக்காக மரக்கட்டைகளால் இணைத்து அவற்றின்மீது பலகைகளை இட்டு, புலையர் கூட்டம் குழலும், முழவும் முழங்க அப்பலகைகளின் மேல் ஏறி ஆடும் ஆட்டம் ஆகும். இந்தப் பலகை மேடை பொதுவாகப் பகவதி கோயிலின் எதிரில் அமைக்கப்படும். அறுவடை முடிந்தவுடன் இந்த ஆட்டங்களை நடத்துவர். பகவதி தேவியைத் திருப்திப்படுத்த ஆடப்படுவது இது. மணவிழாக்களின் போது பெண்கள் வட்டமாகச் சுற்றி வந்து ஆடுவர்."

செறுமான்களும் புலையன்களும் தென் கன்னடத்தைச் சேர்ந்த கொரகர்களைப்போலக் குள்ள உருவமும், கறுப்பு நிறமும் உடையவர்கள். கள்ளிக்கோட்டையில் நான் ஆய்வு மேற்கொண்ட செறுமான்கள் சிலரின் முக்கியமான அளவு விவரங்கள் வருமாறு:-

| | உடல்வாகு செ.மீ. சராசரி | மூக்கின் விகித அளவு சராசரி | தலையின் விகித அளவு சராசரி |
|---|---|---|---|
| ஆண்கள் | 157.5 | 78.1 | 73.9 |
| பெண்கள் | 147.8 | 77.0 | 74.8 |

**செருப்புக்கட்டி – Cheruppu-Katti (shoemaker)**

மாதிகர் என்பதற்குச் சமமான மலையாளப் பெயர்.

## செட்டி - Chetti

1891 மாநிலக் கணக்கெடுப்பில், "செட்டி என்ற பெயர் ஒரு குறிப்பிட்ட சாதிப் பெயராகவும், பட்டப் பெயராகவும் பயன்படுத்தப்படுகிறது. இந்தப் பட்டத்தைச் சூட்டிக் கொள்ளும் மக்கள் வேளாளன் தன்னை முதலி என்று சொல்லிக் கொள்வதைப் போலத் தங்களையும் செட்டிச் சாதியைச் சேர்ந்தவர்களாகக் கூறிக் கொள்கின்றனர். இவ்வாறு செட்டி என்ற பட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டிருப்பது கணக்கெடுப்புப் பதிவில் சில குழப்பங்களை ஏற்படுத்தியுள்ளது. உரிய செட்டிச் சாதியுடன் வேறு பல சாதிகளும் சேர்க்கப்பட்டிருப்பதாக உட்பிரிவுகளிலிருந்து தெரிய வருகிறது" எனக் கூறப்பட்டுள்ளது. மீண்டும் 1901 மாநிலக் கணக்கெடுப்பில், "செட்டி என்றால் வணிகன் என்பது பொருள், பட்டப் பெயராகவும் தொழிலைச் சுட்டும் பெயராகவும், வரன்முறையின்றிப் பயன்படுத்தப்படும் சாதிப் பெயர்களுள் இதுவும் ஒன்று. நெசவாளர்கள், எண்ணெய் ஆட்டுவோர் முதலியவர்களும் இதனைப் பட்டப் பெயராகப் பயன்படுத்துகின்றனர். பலர் தங்கள் தொழில் வணிகத் தொடர்புடையது என்பதனைக் காட்டச் செட்டி என்ற பெயரைத் தங்கள் பெயருக்குப் பின் இணைத்துக் கொள்கின்றனர். உரிய முறையில் பயன்படுத்தினால் இது ஒரு சாதியினை மட்டும் குறிக்கும் பெயராக அமையும்." எனக் கூறப்பட்டுள்ளது. செட்டிகள் எண்ணிக்கையில் மிகுந்திருப்பதோடு மிகப் பரந்துபட்டவர்களாகவும் வாழ்ந்து வருகின்றனர். பலவாக உள்ள இவர்களுடைய உட்பிரிவுகள், பலவேறு வகைப்பட்ட வாழ்க்கை நடைமுறைகளைப் பின்பற்றுவனவாக உள்ளன. இந்த உட்பிரிவுகளுள் நன்கு அறியப்பட்டவை பேரி செட்டிகள், நாட்டுக் கோட்டைச் செட்டிகள், நகரத்துச் செட்டிகள், காசுக்காரச் செட்டிகள் என்பனவாம். இவற்றுள் பேரி செட்டிகள், நாட்டுக் கோட்டைச் செட்டிகள் ஆகிய இரு தலைப்பிலும் தனிக் கட்டுரைகள் உள்ளன. மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த செட்டிகளின் பின்வரும் பிரிவுகளைப் பற்றி என் குறிப்புகளில் பதியப்பட்டுள்ளது.

**1. ஆண்கள் தலையை முழுக்க மழித்துக் கொள்ளும் பழக்க முடைய பிரிவுகள்:-**

இளவகை (அல்லது) கமக்குடி — அரியூர்
சுண்டரத்தம் — மலம்பட்டி
பாளையப்பட்டு — தெடக்கோட்டை
பெரிய கோட்டை வேளாண் — புளியங்குடி
வல்லம் (அல்லது) திருப்பூர் — குறுங்கலூர்

**2. ஆண்கள் தலையில் குடுமியோடு இருக்கும் பிரிவினர்:—**

பூவத்துக்குடி (அல்லது) மன்னகுடி — மாரயக்கார
கீரமங்கலம் — வல்லநாட்டு
பண்டுகுடி (அல்லது) மஞ்சப்பத்து

இவர்களுள், தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள சிற்றூரான பூவத்துக்குடியின் பெயரைக் கொண்டுள்ள பிரிவினர் ஊர் ஊராக அலைந்து திரிந்து வணிகம் செய்வதோடு, வட்டித் தொழிலும் நடத்துபவர்கள். நாடு முழுதும் சுற்றும் இவர்கள் சமைக்கும்போதும், தூங்கும்போதும் தவிர மற்ற நேரங்களில் தங்கள் உடைமைகளைத் தோளில் சுமந்தபடி திரிவர். இப்பிரிவினைச் சேர்ந்த பெண்கள் தங்களோடு பகை கொண்டிருப்பவர்களைச் சாடை மாடையாகத் திட்டிப் பேச வாய்ப்பாக இருக்க வேறு பெண்களைப் பணிக்கு அமர்த்திக் கொள்வர் என எனக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது. பூவத்துக்குடிச் செட்டிகளிடையே பொருளியல் சிக்கனம் கருதித் திருமணங்கள் சில ஆண்டுகளுக்கு ஒரு முறை மட்டும் நடத்தப்படுகிறது. இந்தப் பழக்கம் பற்றி அந்தச் சாதியைச் சேர்ந்த ஒருவர் எனக்குப் பின்வருமாறு எழுதியுள்ளார்:- ''எங்கள் ஊரில் பத்து அல்லது பதினைந்து ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் திருமணங்கள் நடத்தப்படுகின்றன. என்னுடைய திருமணம் நந்தன (1892-93) ஆண்டு நடைபெற்றது. அப்பொழுது எழுபது எண்பது திருமணங்கள் நடைபெற்றன. அதற்குப் பிறகு இந்த ஆண்டு (1906)தான் திருமணங்கள் நடைபெறுகின்றன. ஆவுடையார்கோயிலில் உள்ள தெய்வமே எங்கள் சாதிக்குரிய தெய்வம். திருமணத்திற்காக

அந்தக் கோயிலிருந்து மாலைகள், சந்தனம், பல்லக்கு ஆகியன நாங்கள் பெற வேண்டும். ஒவ்வொரு மணமகனும் நகரத்தார் (ஊர்த் தலைவன்) மூலமாகக் கோயிலுக்கு முப்பத்தைந்து ரூபாய் செலுத்துகின்றான். வண்ணான், நாவிதன், நாதசுரம் வாசிப் போர், தலையாரி, தச்சன், குயவன், கொல்லன், குருக்கள், மாலைகட்டி ஆகியோருக்கான செலவினங்கள் திருமணம் நடைபெறும் குடும்பத்தவர்களால் பங்கிட்டுக் கொள்ளப்படு கின்றன." திருமணங்களை ஒன்றாக இணைத்து நடத்தும் பழக்கம் பூவத்துக்குடி, மன்னகுடி ஊர்களில் மேற்கொள்ளப்படுவ தாகவும் அவ்வாறு நடைபெறும் சமயம் ஏழு வயதுக்கு மேற் பட்ட பெண்கள் அனைவருக்கும் மணம் முடிக்கப்படும் என்றும் இன்னொரு செட்டி எனக்கு எழுதியுள்ளார். திருமணங்கள் ஒரு சில ஒன்றாகச் சேர்த்து நடத்தப்பெறும் காலப்பகுதி பல மாதங்கள் நீட்டிக்கும்.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள பழைய செங்கடம், பன்னிரண்டாம் செட்டிகள் என்ற பிரிவினர் வாழும் தலைமை இடமாகும். "இவர்கள் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள காவிரிப் பூம்பட்டினம் அழிவிற்கு உள்ளானபோது அங்கிருந்து தப்பி வந்த பதினொரு இளைஞர்களின் வழிவந்தவர்கள். ஒரு சோழ மன்னன் ஒரு செட்டிப் பெண்ணை மணக்க விரும்பியதாகவும் அதன் காரணமாக இந்தச் சாதியார் அந்த ஊருக்கு நெருப்பு இட்டதாகவும், அதிலிருந்து இந்தப் பதினொரு சிறுவர்கள் மட்டும் தப்பியதாகவும், தங்கள் உடமைகளைப் பங்கிட்டுக் கொள்ள இவர்கள் ரத்னகிரி மலையில் தங்கியதாகவும், இவர்கள் எப்படிப் பங்கிட முயன்றாலும் அவை பன்னிரண்டு பங்காகவே அமைந்ததாகவும், ரத்னகிரியில் உள்ள தெய்வம் இவர்கள் முன் தோன்றித் தன் தேரின் ஒரு பகுதியை வைத்துக் கொண்டு அதற்கு விலையாகத் தனக்கும் ஒரு பங்கு தரும்படி கேட்ட தாகவும், அவர்களும் அவ்வாறு பன்னிரண்டு பங்கு வைத்ததால் பன்னிரண்டாம் செட்டிகள் எனத் தங்களை அழைத்துக் கொண்டதாகவும் ஒரு கதை வழங்கி வருகிறது. இவர்கள் தங்கள் மணத்தின் போது மணமகனைத் தேரில் ஊர்வலமாக

அழைத்துச் செல்வர். கோயமுத்தூர் மாவட்டத்தில் இவர்கள் மிகுந்த எண்ணிக்கையில் வாழ்கின்றனர்."*

1871 மாநிலக் கணக்கெடுப்பில் இழப்பிற்கு ஆட்பட்ட சில செட்டிகள் தங்களை, "நொடித்துப் போன செட்டிகள்" எனப் பதிந்து கொண்டுள்ளனர்.

பின்வரும் சாதியாரும், குடியினரும் செட்டி என்ற பட்டத்தையோ அதற்குச் சமமான ஷெட்டி என்ற பட்டத்தையோ தரித்துக் கொள்வதாகப் பதியப்பட்டுள்ளது.

பலிசர் — வணிகச் சாதி, தெலுங்கர்.
பண்டர் — பயிர்த்தொழில் செய்யும் சாதி, துளுவர்.

பிலிமக்க, தேவாங்கர், பட்டுநூல்காரர், சாலியர், சேடன், சேணியன் — இவர்கள் அனைவரும் நெசவுத் தொழில் புரிவோர்.

தோபி — ஒரிய வண்ணார்.
காணீகர் — எண்ணெய் ஆட்டுவோர்.
கம்மலர் — கள் இறக்கும் தெலுங்கர்.

காவுடர் — பயிர்த்தொழிலாளரான கன்னடியர்.
குடிகார் — மரவேலைப்பாடு செய்வோரான கன்னடியர்.
சமணர் —
சணப்பர் — முதலில் பலிசர் சாதியின் ஓர் உட்பிரிவாக இருந்தவர்கள். கோணிப்பை தயாரிப்பவர்கள்.
கவரை — பலிசருக்கச் சமமான தமிழ்ப் பெயர்.
கோமட்டி — வணிகம் புரியும் தெலுங்கர்.
கொரச்சர் — நாடோடிக் குடிகள்.
குடுமி — திருவாங்கூரைச் சேர்ந்த சாதியினர். கொங்கணிப் பிராமணர் இல்லங்களில் பணி புரிவோர்.

* திருச்சிராப்பள்ளி மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Trichinopoly district.)

மண்டலன் செட்டி —

| | | |
|---|---|---|
| மேதரர் | — | தெலுங்கர்.பிரம்பு பிளப்பவர், பாய் பின்னுபவர். |
| நாயர் | — | மலபாரைச் சேர்ந்த சில நாயர்களின் தொழில் காரணமான பட்டப் பெயர். |
| பட்டணவன் | — | மீனவர், தமிழர். |
| பட்டபு | — | மீனவர், தெலுங்கர். |
| சேனைக் குடியன் | — | வெற்றிலைக் கொடிக்கால் வைத்து வெற்றிலை வணிகம் செய்பவர்கள். |
| சாணான் | — | தமிழ் நாட்டுக் கள் இறக்கும் வகுப்பார். |
| சேஈனர் | — | பொற்கொல்லர். |
| தொரெயர் | — | மீனவர், கன்னடியர். |
| உப்பலியன் | — | உப்புக் காய்ச்சுவோர், கர்ப்பூரம் தயாரிப்பதால் சிலர் தங்களைக் கர்ப்பூரச் செட்டி எனவும் கூறிக் கொள்கின்றனர். |
| வாணியன் | — | தமிழ் நாட்டுச் செக்கார் |

வயநாடன் செட்டி —

செட்டிகள் தொடர்பான பழமொழிகளுள்* பின்வருவன எடுத்துக் காட்டாகத் தரப்படுகின்றன:-

1. ஒரு செயலைச் செய்யும் முன் எண்ணிப் பார்த்துச் செய்பவன் செட்டி. எண்ணிப் பாராமல் செய்பவன் மூடன்.
2. செட்டி செத்தால் அவன் நிலைமை வெளியாகும்.
3. செட்டிப் பெண் போல் செட்டாகக் குடும்பம் நடத்து கிறாள்.

---

* மறைத்திரு எச். ஜென்சன் தமிழ்ப் பழமொழிகளின் தொகுப்பு, 1897. (Rev. H. Jensen, Classified Collection of Tamil Proverbs, 1897.)

4. செட்டிக் கெட்டாலும் செட்டியே, பட்டுக் கிழிந்தாலும் பட்டுத்தான்.

5. செட்டி முன்பணத்தைக் குறைத்தால் சேணியன் வேட்டிக் கரைக்கான பட்டு நூலைக் குறைப்பான்.

6. பிறந்த நாள் தொட்டு செட்டி பயிர்த்தொழிலுக்குப் பகை.

செட்டிகள் ரகசிய மொழிகள் பற்றித் திரு சி. ஹயவதன ராவ் எழுதியுள்ள குறிப்பு வருமாறு:- "சென்னையைச் சேர்ந்த மோடெல்லியர்களும், செட்டிகளுமான பெட்டிக் கடைக்காரர் களும் துணி வணிகர்களும் பேசுவனவே ரகசிய மொழிகளுள் நம் கவனத்தை மிகவும் கவர்வனவாகும். இவர்கள் வணிகத்தில் பெரும்பாலும் பொருள்கள் கொள்முதல் செய்யும்போதே உரிய தொகை செலுத்துகின்றனர். எனவே இவர்கள் எண்களுக் குரிய ஒரு தனி அட்டவணையை வைத்துள்ளனர். ஒன்று முதல் பத்து வரையான எண்களுக்குத் தனிப் பெயர்கள் உள்ளன. அவற்றை இன்றும் பயன்படுத்துகின்றனர். அவ்வாறு பயன்படுத்துபவர்கள் அவற்றின் பொருள் என்ன எனத் தெரிந்து கொள்ளாமலே பயன்படுத்துகின்ற அளவுக்கு அவை நெடுங்காலமாகப் பழக்கத்தில் உள்ளன. இந்து சாத்தி ரங்களில் மனம் ஒன்று எனக் கூறப்படுவதால் மனத்தைக் குறிக் கும் மதி என்ற சொல் ஒன்று என்பதற்குப் பதிலாகப் பயன் படுத்தப்படுகிறது. நல்வினை, தீவினை என வினை இரண்டாக உள்ளமையால் வினை என்ற சொல் இரண்டுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படுகிறது. இராசதம், தாமசம், சாத்வீகம் எனக் குணம் மூவகைப்படுவதால் மூன்றைக் குறிக்கக் குணம் என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. இதே அமைப்பில் சுருதி என்ற சொல் நான்கையும், மன்மதன் பஞ்ச பாணங்களைக் குறிக்கும் வகையில் சரம் என்ற சொல் ஐந்தையும், ஆறு சமயங் களின் அடிப்படையில் மதம் என்ற சொல் ஆறையும், ஏழு கடல்கள் என்ற அடிப்படையில் திரை என்ற சொல் ஏழினையும், கிரிகள் அஷ்டகிரிகள் என இந்துக்களால் வழங்கப்படுவதால் கிரி எட்டினையும், மணிகள் நவமணிகள் என இந்துக்களால்

வழங்குவதால் மணி என்ற சொல் ஒன்பதினையும், திசைகள் பத்து ஆகையால் திசை என்ற சொல் பத்தினையும் குறிக்கும் படியாக இந்த மாற்று மொழிகளை அமைத்துள்ளனர். ரூபாய்க்கு உரிய பொதுவான பெயர் வெள்ளி அல்லது வெள்ளை. தங்கம் என்பது அரை ரூபாயையும், பிஞ்சு வெள்ளி என்பது கால் ரூபாயையும் குறிக்கும். பூ வெள்ளி என்பது ரூபாயில் எட்டில் ஒரு பங்கினைக் குறிப்பதாகும். பணம் எனப்படும் ஒன்றேகால் அணா சுனை எனப்படும். இந்த ரகசியச் சொல் லாட்சியைப் பயன்படுத்துபவர்கள் பெரும்பாலும் படி, ரூபாய், அணா ஆகிய சொற்களின் முன்னரே இவற்றைச் சேர்த்துச் சொல்ல வேண்டி வருகின்றது. மதி அணா என்பது ஓர் அணாவையும், மதி படி என்பது ஒரு படியினையும், மதி வெள்ளி என்பது ஒரு ரூபாயையும் குறிப்பதாக இந்தச் சொற்கள் பயன் படுத்தப்படும். இதே போல மற்ற எண்களுடனும் இந்தச் சொற் களை இணைத்துக் கூறலாம். திருச்சிராப்பள்ளியைச் சேர்ந்த வணிகர்களும் எண்களைக் குறிக்க இதே அட்டவணையையே பெரும்பாலும் பயன்படுத்துகின்றனர். ஆனால் ரூபாயின் பின் னங்களுக்குப் பெரிய அளவில் வேறு சொற்களைப் பயன்படுத்து கின்றனர். இவர்களிடையே மூன்று அணா என்பது ஓர் அணாவைக் குறிக்கும். ஏ அணா இரண்டணா; பூ அணா நான்கணா; பணி அணா எட்டணா; முன அணா பன்னிரண்டு அணா; இவர்களிடையேயும் வெள்ளே என்பது ஒரு ரூபாயைக் குறிக் கும். தமிழ் அகர வரிசையினை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட புதுமையானதொரு எண்களுக்கான இன் னொரு அட்டவணையும் இவர்களிடையே வழக்கில் உள்ளது. இந்த அட்டவணையில் பி என்ற எழுத்து ஒன்றையும் ள என்ற எழுத்து இரண்டையும், ளை என்ற எழுத்து மூன்றையும், ய என்ற எழுத்து நான்கையும், ல என்ற எழுத்து ஐந்தையும், ம என்ற எழுத்து ஆறையும், வ என்ற எழுத்து ஏழையும், ந என்ற எழுத்து எட்டையும், தி என்ற எழுத்து ஒன்பதையும் து என்ற எழுத்து பத்தையும் குறிக்கும். இந்த எழுத்துக்கள் அனைத்தையும் இணைத்து 'பிள்ளையலாம் வந்தித்' என நினைவூட்டு வாசகமாக எப்பொழுதும் எளிதாக நினைவில் கொள்ளலாம். இந்த அட்ட

வணை அளவுகள், ரூபாய்கள், அணாக்கள் ஆகியவற்றோடு இணைத்துக் கூறவும் பயன்படும். சென்னையிலும், செங்கல் பட்டு மாவட்டத்திலும் கெட்டி ரகக் கைத்தறித் துணிகளை விற்பனை செய்பவர்கள் தங்களுக்கெனத் தனித்ததொரு அட்ட வணையைப் பயன்படுத்துகின்றனர். இது ஒரு பைசாவிலிருந்து ஆயிரம் ரூபாய் வரை அனைத்துத் தொகையையும் சுட்ட உதவும் முழுமையான அட்டவணையாகும். இந்து வணிகர்கள் அவ்வப்போது இந்துஸ்தானியை அடிப்படையாகக் கொண்ட ஒரு ரகசிய மொழியையும் பயன்படுத்துகின்றனர். சென்னை நகரின் ஒரு பகுதியில் இந்த வழக்கத்தைக் காணலாம். அவர்கள் மொழியில் 'பாவ் கானே' ஓர் அணாவையும். 'அட கானே' இரண்டணாவையும், 'பாவக் ரூபா' ஒரு ரூபாயையும் என்பது போலத் தொடர்ந்து சுட்டும். தரகர்கள் தங்களுக்கெனத் தனிமொழிகளை உடையவர்கள். 'படியைப் பார்' என்ற தொடரை அவர்கள் விலையைக் குறைத்துக் கேள் அல்லது விலையைக் குறைத்துக் கூறு எனச் சந்தர்ப்பத்தை ஒட்டிப் பொருள் தரும்படி பயன்படுத்துவர். அதே போல 'முடுக்கப் பார்' என்ற தொடர் அதிக விலை கேள் என அறி வுறுத்துவதாகும். ஒரு தரகன் சிவன் தாம்பரம் எனக் கூறுவா னாயின் விற்பவன் கூறுகின்ற விலையில் தரகனுக்குரிய தரகுத் தொகையும் அடங்கி உள்ளது எனப் பொருள்படும். தெலுங்குத் தரகர்களிடையேயும் இது போன்ற குழூஉக்குறித் தொடர்கள் வழக்கில் உள்ளன. அவர்களிடையே 'மலசு வக்காடு' 'நாசி வக்காடு' என்ற தொடர்கள் முறையே விலையை உயர்த்து என்பதையும் விலையைக் குறை என்பதையும் குறிப்பனவாகும்.''

**செவ்வுலு — Chevvula (ears)**

போயர், கோல்லர் சாதிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர்.

**செய்யக்காரன் — Cheyyakkāran**

கன்னட செர்வேக்காரருக்கான மலையாளப் பெயர்.

**சீகல — Chikala (broom)**

தோட்டியன்களின் புறமணக் கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**சிக்க — Chikka (small)**

குர்ணிகளின் ஓர் உட்பிரிவு.

**சிக்குடு — Chikkudu *(Dolichos Lablab)***

மொச்சை எனப் பொருள்படும் இது மூக தொரையரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**சிலகல — Chilakala (paroquet)**

கிளி எனப் பொருள்படும். போயர், காபு, ஏனாதியர் சாதி களின் புறமணக்கட்டுப்பாடுடைய குலத்தின் பெயர்.

**சில்ல — Chilla (*Strychnos potatorum:* clearing nut tree)**

தீத்தான் கொட்டை மரம் எனப் பொருள்படுவது. குருபர் களின் புறமணக்கட்டுப்பாடுடைய குலத்தின் பெயர். தோட்டி யர்களின் உட்பிரிவு ஒன்றின் பெயரும் ஆகும்.

**சீம்ல — Chimla (ant)**

போயர், தசாகலர் ஆகிய சாதிகளின் புறமணக் கட்டுப் பாடுடைய குலத்தின் பெயர்.

**சிம்பிகர் — Chimpiga (tailor)**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் ரங்காரிகளின் லிங்காயதச் சமயநெறி சார்ந்த உட்பிரிவு எனப் பதியப்பட்டுள் ளது. 1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் தர்ஜிகள் பின் வருமாறு வகைப்படுத்தப்பட்டுள்ளனர்:- "(1) தர்ஜி, சிப்பிக, மற்றும் நாமதேவ், (2) ரங்காரி" முதல் மூன்று வகுப்பாரும் தர்ஜி என்ற பொதுப் பெயரினைப் பெற்றுள்ளனர். இவர்கள் தையல் தொழில் புரிவோர். ரங்காரிகள் தையல் தொழிலோடு சாயம் போடுதல், துணிக்கு அச்சுப் போடுதல் ஆகியவற்றையும் மேற்கொள்வர்.

**சிம்பிரி — Chimpri (rags)**

கந்தல் எனப் பொருள்படும் இது போயர்களின் புறமணக் கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர்.

**சினேரிகாடு — Chinērigādu**

பத்ம சாலேக்களோடு தொடர்புடைய இரவலர் பிரிவினர் (பார்க்க: தேவாங்கர்)

**சிண்ட — Chinda**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் கஞ்சம், விசாகப் பட்டினம் மாவட்டங்களைச் சேர்ந்த பயிர்த்தொழில் செய்யும் சிறு சாதி எனப் பதியப்பட்டுள்ளது.

**சீனத் தமிழ்க் கலப்பினம் - Chinese- Tamil Cross**

நீலகிரிக்கு மேற்குப் பக்கத்தில் உள்ள மேட்டுப் பகுதியில், நான் என் மனித இனவியல் தொடர்பான ஆய்வுப் பயணத்தின் போது தங்கியிருந்த இடத்தில் சீனர்களின் சிறிய குடியிருப்பு ஒன்றினைக் கண்டேன். நடு வட்டத்திற்கும், கூடலூருக்கும் இடைப்பட்ட சரிவுகளில் குந்தியிருந்த இவர்கள் தமிழ்ப் பறையர் பெண்களுடன் தொடர்பு கொண்டவர்களாகக் காய்கறி களும், காபியும் பயிரிட்டு வாழ்க்கை நடத்தி வருகின்றனர்.

முதன்முதல் நீலகிரிக்கு வந்து சேர்ந்த சீனர்கள் மலேயா, சிங்கப்பூரைச் சேர்ந்த கைதிகளாவர். அங்குப் போதிய சிறை வசதிகள் இல்லாத காரணத்தால் இவர்கள் நீலகிரியில் உள்ள சிறைக்கு அனுப்பப்பட்டனர். "1868-ஆம் ஆண்டில் புயல் வீசிய ஓர் இரவில் பன்னிரண்டு சீனர்கள் சிறையிலிருந்து தப்பி ஓடினர். அவர்களை மலைப் பகுதிகளில் துருவித் தேட ஆயுதம் தாங்கிய காவலர் குழுக்கள் அனுப்பப்பட்டன. இரு வாரங் களுக்குப் பின் அவர்கள் மலபாரில் கைது செய்யப்பட்டனர். அவர்கள் காவலர்களுடைய சில ஆயுதங்களையும் தங்கள் வசம் வைத்திருந்தனர். அவர்களைத் தேடச் சென்ற காவலர் குழுக் களில் ஒன்று பின்னர் நிகழப் போகின்ற தீமையைக் காட்டு

இன்ற வகையில் காணாது போய்விட்டது. அந்த வட்டாரம் முழுவதும் அக்குழுவினைத் தேட ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இறுதியாகச் சிஸ்பாரா கணவாய்ச் சாலையின் பாதி வழியில் இருக்கும் வாலகாட் காட்டில் அந்த நான்கு காவலரின் சடலங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. வெட்டப்பட்ட அவர்களுடைய தலைகள் அவர்கள் சடலங்களோடு இணைத்து வைக்கப்பட்டு நான்கு உடல்களும் வரிசையாகத் தரையில் கிடத்தப்பட்டிருந்தன" என நீலகிரி மாவட்ட விவரக் குறிப்பில் பதியப் பட்டுள்ளது.

சீனத் தமிழ்க் கலப்பினக் குடும்பம் ஒன்றின் அளவுகள் பின்வரும் அட்டவணையில் தரப்பட்டுள்ளது:-

| | | தலையின் நீளம் | தலையின் அகலம் | தலையின் விகித அளவு | மூக்கின் நீளம் | மூக்கின் அகலம் | மூக்கின் விகித அளவு |
|---|---|---|---|---|---|---|---|
| தமிழ்ப்பறைச்சி | குழந்தைகளின் தாய் | 18.1 | 13.9 | 70.8 | 4.7 | 3.7 | 78.7 |
| சீனன் | குழந்தைகளின் தந்தை | 18.6 | 14.6 | 78.5 | 5.3 | 3.8 | 71.7 |
| சீனத் தமிழினம் | சிறுமி வயது 18 | 17.6 | 14.1 | 80.1 | 4.7 | 3.2 | 68.1 |
| சீனத் தமிழினம் | சிறுவன் வயது 10 | 18.1 | 14.3 | 70 | 4.6 | 3.3 | 71.7 |
| சீனத் தமிழினம் | சிறுவன் வயது 9 | 17 | 14 | 82.4 | 4.4 | 3.3 | 72.7 |
| சீனத் தமிழினம் | சிறுவன் வயது 5 | 17.1 | 13.7 | 80.1 | 4.1 | 2.8 | 68.3 |

இக்குடும்பத்தின் தந்தை சீனர்களுக்கு நல்ல மாதிரியாகத் கொள்ளத் தக்கவன். கிறித்தவ சமயத்தில் சேரும்போது அவனுக்கு ஏற்பட்ட நடைமுறை சார்ந்த மனக்குறை 'அவன் தன் தலை வாலினை வெட்ட' வேண்டி வந்ததுதான். இக்குடும்

பத்தின் கறுத்த நிறம் உடைய தமிழ்ப் பறையர் சாதியைச் சேர்ந்த தாய் அச்சாதிக்கு மாதிரியாகக் கொள்ளத் தக்கவள். குழந்தைகளின் நிறம் தாயின் நிறத்தைச் சார்ந்ததாக இல்லாது தந்தையினுடைய நிறம்போல் மஞ்சள் கலப்புடையதாக இருந்தது. மங்கோலிய இன வழிப்பட்டவர்கள் என்பதனைக் காட்டும் வகையில் அவர்கள் சாய்ந்த கண்களையும், சப்பட்டை யான மூக்கினையும் பெற்றிருந்தனர். குழந்தைகளில் ஒன்று நன்கு உயர்ந்த கன்னக் கதுப்பு எலும்புகளையும் பெற்றிருந்தது.

பெற்றோர்களின் அளவுகளோடு ஒப்பிடக் குழந்தைகளின் எல்லா அளவுகளையும் பதிவது பயன்படாததாகும். நான் கைவசம் உள்ள அளவுகளிலிருந்து தலை, மூக்கு ஆகியவற்றின் நீள அகலங்களை மட்டும் தந்துள்ளேன். இவை இந்தக் குழந்தை களின் புற உறுப்புகளின் அளவுகளின் மீது பெற்றோரின் தாக்கத்தைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. அட்டவணை யில் தரப்பட்டுள்ள புள்ளிவிவரங்கள் நீளத்தோடு ஒப்பிடும் போது அகலத்தின் விகிதம் அதிகமாக இருப்பதைத் தெளிவாக்கி அதனால் தலையின் விகித அளவு எண் உயர்வாகப் பெறப்பட்டு உள்ளதையும் தெளிவாக்கும். இதனை வேறு வகையாக விளக் கினால் நான்கு குழந்தைகளில் ஒன்று செங்குத்தான தலை அமைப்பினையும் (79) எஞ்சிய மூன்று குழந்தைகள் குறுகிய தலையிலும் சற்றே குறைவான அமைப்பையும் (80.1;80.1;82.4) பெற்றவர்களாக உள்ளனர் எனலாம். இவர்கள் செங்குத்தான தலை (78.5) அமைப்பை உடையவனான சீனக்காரனின் நீண்ட அமைப்பினும் சற்றே குறைவான தலை அமைப்பினை உடைய தமிழ்ப் பறையர் சாதிப் பெண்ணுடன் (76.8)கொண்ட உறவால் பிறந்துள்ளதையும் காணலாம். இந்தக் குழந்தைகளின் தலை அகலம் எவ்வளவு அதிகமாக உள்ளது என்பதனைத் தமிழ் பறையர்களின் சராசரித் தலை அகலத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அறியலாம். பெரியவர்களான தமிழ்ப் பறையர் களின் சராசரித் தலையின் அகலம் 13.7 செ. மீ. எனினும் வயது பத்தும், ஒன்பதும், ஐந்துமாகவே உள்ள சிறுவர்களின் தலை அகலங்கள் முறையே 14.3, 14.0, 13.7 செ.மீ. ஆக உள்ளன.

இவர்களின் மூக்கின் அமைப்பிலும் பெற்றோரின் தாக்கம்

பனிச்செனப் புலனாவதாக உள்ளது. இந்தக் குழந்தைகளின் மூக்கின் நீள அகலங்களுக்கிடையே உள்ள விகித அளவு (68.1, 71.7, 72.7, 68.3) ஆகும். நீண்ட மூக்கினை உடைய தந்தையின் விகித அளவோடு (71.7) மிகுந்த ஒற்றுமை உடைய தாயிருப்பதுடன் அகன்ற மூக்கினை உடைய பறையர் சாதித் தாயின் மூக்கு விகித அளவுடன் (78.7) அவை மிகவும் மாறு பட்டனவாக உள்ளன.

முரண்பட்டதான இந்தச் சிறிய குடியிருப்பில் வாழும் சிறுவர் சிறுமியரின் வருங்காலம் எப்படிப்பட்டதாக அமை கின்றது எனக் கவனிப்பது ஆர்வம் ஊட்டுவதாகும். சீனர்கள் தமிழர்களோடு கொண்ட கலப்பு உறவின் விளைவாகப் பிறந் தவர்களின் உடல் கூறுகள், மனநிலை, இனப் பெருக்கத் திறன் ஆகியன பற்றிப் பார்த்து அறிவதில் வருங்காலத்தவர் ஆர்வங்காட்டலாம்.

**சின்ன – Chinna (little)**

போயர், குன்னுவர், கொண்ட தொரையர், பட்டணவன், பட்டப்பு ஆகிய சாதிகளின் உட்பிரிவு. மாலர் சாதியின் புற மணக்கட்டுப்பாடு உடைய குலம் ஒன்றின் பிரிவு. சின்ன, சின்னம், சின்னட எனத் தங்கத்தைக் குறிக்கும் சொற்கள் குருபர்கள், பத்ம சாலே, தொரையர், வக்கலிகர் ஆகியோரின் புறமணக்கட்டுப்பாடுடைய குலங்களின் பெயர்களாகும்.

**சிந்தல — Chintala (tamarind: *Tamarindus Indica*)**

காசி (Ghāsi), கோல்லர், மாதிகர், மாலர் ஆகிய சாதிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். சித்தல குல அல்லது புளிக்குலம் என்பது கோமட்டிகளின் ஒரு குலப் பெயர். சிந்தஜின்சல (புளியங்கொட்டை) என்பது பத்ம சாலேக்கள், பண்ட ரெட்டிகள் ஆகியோரின் புறமணக்கட்டுப்பாடுடைய குலத்தின் பெயர். இவர்கள் புளியங்கொட்டையினைத் தொடவோ பயன்படுத்தவோ மாட்டார்கள். சிந்தக்காய் அல்லது சிந்தக்காயல (புளியம்பழம்) போயர், தேவாங்கர் சாதி களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயராகும்.

**சிர்ல - Chirla (woman's cloth)**

சேலை எனப் பொருள்படும் இது கம்மர்களின் புறமணக் கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர்.

**சிட்டிகன் - Chitikan**

மாரான் சாதியைக் குறிக்கும் மற்றொரு பெயர். இது பிணம் எரிக்கும் சிதைக்கு ஏற்பாடு செய்யும் தொழிலோடு தொடர்புடையவன் என்பதைக் குறிக்கும். சிட்டிகன் மூசாடு களின் சுடுகாட்டுக்குச் சடங்குகளை நடத்தி வைப்பவனாவான்.

**சிட்டி கர்ணம் - Chiti Karnam**

ஒரிய கர்ணம் சாதிக்குரிய பெயர். சிரேஷ்ட கர்ணம் என்பதன் இழிந்த வழக்கு இது.

**சித்ர காசி - Chitra Ghāsi**

சித்ர காசிகளைப் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு சி. ஹயவதன ராவ் அவர்களுக்குக் கடப்பாடுடையேன். கைவினைப் பொருள்கள் தயாரிப்பவர்கள் எனப் பொருள்படும் காசி என்ற சொல் இவர்கள் கைவினைப் பொருள்கள் செய்வ தைத் தொழிலாகக் கொண்டவர்கள் என்பதனை உணர்த்தும். அரசாங்கப் பேராளர் ஆட்சியிலிருக்கும் செயப்பூர் பகுதியைச் சார்ந்த பழங்குடிகள் பேரளவில் அணியும் பித்தளை, வெண்கல அணிகளைத் தயாரிக்கும் பணியாளர்களாக இவர்கள் அமர்த்தப் பட்டுள்ளனர். கோண்ட், சவரர், ஊர்களைச் சார்ந்து இவர்கள் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் தீட்டு உண்டாக்கும் சாதியராகக் கருதப்படுவதால் இவர்கள் குடியிருப்புக்கள் ஊரா ரின் குடிசைகளுக்குச் சற்று ஒதுங்கியே அமைந்திருக்கும். ஒரிய மொழியின் சிதைந்ததொரு வடிவினையே இவர்கள் பேசுகின் றனர்.

பூப்பெய்திய பின்பே சிறுமியர் மணம் முடிக்கப் பெறுகின்ற னர். ஒருவன் தன்னுடைய அத்தையின மகளை மணக்க உரிமை கொண்டாடலாம். அத்தகைய திருமண ஏற்பாடு செய்யப்பட

இருக்கும் சமயம் அவன் பெற்றோர் கொஞ்சம் அரிசியையும், ஒரு பானையில் சாராயத்தையும் எடுத்துக் கொண்டு அவனு டைய அத்தையின் வீட்டிற்குச் செல்வர். அதனை அவர்கள் ஏற் றுக் கொண்டால் அது பெண்தரச் சம்மதிப்பதாகக் கொள்ளப் படும். அதன்பின் பெண்ணின் விலையான 'ஜ்ஹோலா டொங்க' எனப்படும் பரிசப்பணம் ரூபாய் பன்னிரண்டு செலுத்தப்படும். சில நாள்கள் சென்ற பின் மணமகளை மணமகன் வீட்டிற்கு அழைத்து வந்து மணம் முடிப்பர். மூத்தவன் இறந்துவிட்டால் விதவையான அவன் மனைவியை இளையவன் மணக்கலாம். அந்த விதவை வேறொருவனை மணக்க விரும்பினால், தன் உரிமையை விட்டுக் கொடுக்கும் அவள் கொழுந்தனுக்கு, அவளு டைய இரண்டாவது கணவன் ஒரு பசுவினைத் தரவேண்டும். இறந்தவர்கள் எரிக்கப்படுவர். சாவுத் தீட்டு மூன்று நாள்கள் மேற்கொள்ளப்படும். அந்த நாள்களில் சாதிக்குரிய தொழிலைச் செய்யமாட்டார்கள். மூன்றாம் நாள் எரித்த பிணத்தின் சாம்பலைத் திரட்டி ஒரு கோழியைப் பலியிட்டபின், அச்சாம்ப லைப் புதைக்கவோ ஓடும் நீரில் எறியவோ செய்வர்.

**சித்திரக்காரர் அல்லது சித்திரக்காரோர் - Chitrakāra or Chitrakāro**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் கஞ்சம் மாவட்டத் தைச் சேர்ந்த ஒரிய சித்திரம் தீட்டுபவர்கள் முச்சி சாதியின் உட்பிரிவினராகப் பதியப்பட்டுள்ளனர். 1891 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் சித்திரக்காரர்கள், "ராச்சேவர் (அல்லது ராசு) சாதியின் உட்பிரிவினராகப் பதியப்பட்டுள்ளனர். வண்ணம் தீட்டுதல், அலங்காரம் செய்தல், முலாம் பூசுதல் ஆகியவற்றோடு தகரப் பெட்டிகள், பல்லக்குகள், கோயில்களுக்குத் தேவையான மரப் பொம்மைகள், உருவங்கள், வாகனங்கள் முதலியவற்றையும் செய்வதில் இவர்கள் ஈடுபட்டுள்ளனர். மைசூரிலுள்ள சென்னப் பட்டணத்தில் நிலப்பாலையின் வெள்ளை மரத்தில் (*Wrighita tinctoria*) பொம்மைகள் செய்து கொண்டிருந்த சித்திரக்காரர் ஒருவரை நான் பேட்டி கண்டேன். அவர் தரையில் நடப்பட் டுள்ள இரண்டு மரக்கட்டைகளின இணைக்கப்பட்டுள்ள இரண்டு உருக்கு ஆரங்கள் கொண்ட, பழம்பாணியிலான கடைசல் இயந்திரத்தில் மரத்தைக் கடைந்து கொண்டிருந்தார்.

அந்த வினைஞர் தன் கடைசல் இயந்திரத்தின் முன் தரையில் அமர்ந்தபடி மரக்கட்டையை ஆரங்களிடையே தள்ளிய படி, தனது வலக் கையிலிருந்து வில்லின் உதவியால் மரக் கட்டையைச் சுற்றிக் கயிற்றைச் செலுத்தி இழுத்துக் கொண் டிருந்தார். உளியை வலப் பாகத்திற்கும் இடக் கைக்கும் இடையே தாங்கிக் கொண்டிருந்தார். சுழலும் பொம்மை களுக்கு வண்ணங்களும், மெழுகு எண்ணெயும் முத்திரை அரக்கினை ஒத்த குச்சிகளாலும், மெழுகு எண்ணெய் தோய்க் கப்பட்ட பனை ஓலைக் கட்டைகளாலும் பூசப்பட்டுக் கொண் டிருப்பதையும் கண்டேன். கடைசல் பொம்மைகளோடு கூடப் பழங்களின் உருவங்களும் களி மண்ணாலும் மரத்தூளாலும் செய்யப்படுகின்றன. மேதரர்களால் செய்யப்படும் பிரம்புத் தொட்டில்களுக்கு வண்ணம் தீட்டுகின்றனர். பெங்களூரில் கொண்டாடப்படும் ஹோலி பண்டிகைக்கான சிலை உருவங் கள் சமைக்கப்படுகின்றன. போலியாக முதுகில் கொக்கி மாட் டித் தேர் இழுக்கும் சித்தி வீரண்ணன் மர உருவங்களையும் தயாரிக்கின்றனர். தும்கூரில் நான் சந்தித்த சித்திரக்காரர்கள் பொம்மை செய்தல் இலாபகரமானதாக இல்லாததால் அத் தொழிலைக் கைவிட்டு விட்டனர். அவர்கள் எல்லம்மா, மாரி யம்மா போன்ற ஊர்ப்புறத் தெய்வங்களின் பெரிய மர உருவங் களைத் தயாரிப்பதோடு பலவகைத் தெய்வங்களின் ஊர்தி களின் உருவங்களான எருதுகள், பாம்புகள், மயில்கள், சிங்கங் கள், புலிகள், குதிரைகள் ஆகியவற்றையும் செய்து கொண்டி ருந்தனர். அத்தோடு வண்ணம் தீட்டப்பட்ட தங்கச் சரிகைக் காகிதம் ஒட்டிய இலக்குமி, சிவனின் மனைவியான கௌரியின் தலைகள் ஆகியவற்றையும் தயாரிக்கின்றனர். இவை பிராமணர் வக்கலிகர், கோமட்டிகள் போன்றவர்களால் ஆண்டுதோறும் நடத்தப்பெறும் கௌரி பூசையில் வைத்து வழிபடப் பயன் படுத்தப்படுகின்றன. 'மந்தஹாசங்கள்' என வழங்கப்படும் கோயில் இல்லங்களின் தூண்களைத் தூணில் எழும் நரசிம்ம மூர்த்தி போன்ற புராணத்தொடு தொடர்புடைய மரச் சிற்பங் களைச் செதுக்கியும் அமைக்கின்றனர். இத்தகைய மந்தஹாசங் கள் ஸ்மார்தர்களும், மாத்வ பிராமணர்களும் நாளும் வழிபாடு செய்யும் வீட்டுத் தெய்வங்களான சாலக்ராமங்கள், லிங்கங்கள்

ஆகியவற்றை வைக்கும் இடமாகவும் பயன்படுத்தப்படுகின்றன. இச் சித்திரக்காரர்கள் தங்களைச் சூரிய வம்சம் அல்லது சந்திர வம்சத்தவர்கள் எனக் கூறிக் கொள்வதோடு பூணூலும் அணிகின்றனர்.

**சித்ரவளியர் - Chitravaliar**

அளவன்களுக்குரிய மற்றும் ஒரு பெயர்.

**சோகன் - Chōgan**

பார்க்க: ஈழவர். (See: Izhava)

**சோழபுரம் (அல்லது) சோழவரம் - Cholapuram or Sholavaram**

செட்டிகளின் ஓர் உட்பிரிவு.

**சோழிய பட்டர் - Chōlia Pattar**

மலபாரைச் சேர்ந்த பட்டர் பிராமணர்களின் பெயர்.

**சொண்டி - Chondi**

பார்க்க: சொண்டி. (See: Sondi)

**சோயுட்டகாரர் - Chōutagāra**

சாப்தேகாரர் என்பதன் சிதைந்த வடிவம்.

**சோவட்டோன் - Chōvatton**

முத்தன், தரகன் சாதியாரின் பூசாரிகள்.

**சுதிட்டிய - Chuditiya**

பார்க்க: கேவுட்டொ. (See: Kevuto)

**சுண்ணம் - Chunam (lime)**

சுண்ணாம்புக் காளவாய் போடும் தொரெயர்களின் ஓர் உட்பிரிவினர். கிளிஞ்சல், சுண்ணாம்புக்கல் ஆகியவற்றிலிருந்து தயாரிக்கப்படும் சுண்ணாம்பு வீடுகள் கட்டப் பெரும் அளவில்

பயன்படுகிறது. சென்னையில் போடப்படும் சுண்ணாம்புக் காரையின் பளிங்கு போன்ற வழவழப்பு நெடுங்காலமாகப் புகழ் பெற்றுள்ளது. சுண்ணாம்பு வெற்றிலை போடுபவர் களாலும் பயன்படுத்தப்படுகிறது.

**சுவ்வனொ - Chuvano**

*1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் சத்தியர் வழித் தோன்றல்கள் எனக் கூறிக் கொள்ளும் ஒரியப் பயிர்த்தொழி லாளர்கள்.*

**தாயிண்டல - Dāindla**

*மாலர் சாதியிலிருந்து ஓடி ஒளிந்து கொண்ட அல்லது பிரிந்து ஓடிப்போன உட்பிரிவினரின் பெயர்.*

**தெய்வம்பதி – Daivampati**

*1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் அம்பலவாசிகள் சாதியுள் ஒன்றாகவும், நாயர்களின் ஓர் உட்பிரிவாகவும் பதியப்பட்டுள்ளது.*

**தக்கலர் – Dakkla**

*தக்கலர் அல்லது தக்கலிர் என்பது மாதிகர்களிடம் மட்டும் இரந்துண்ணும் வகுப்பாருக்கு உரிய பெயர். கர்நூல் மாவட் டத்தை இவர்கள் முஷ்டிகர்களுடன் பங்கிட்டுக் கொண்டு இவர்கள் பங்குக்கு உரிய பகுதியில் மட்டுமே இரந்து வருவ தாகக் கூறப்படுகிறது.*

*தக்கலர்களின் தோற்றம் பற்றி வழங்கும் கதை வருமாறு:- ஒரு கொல்லன் சிவனுடைய திருமணத்திற்காகத் தாலி செய்யும் படி பணிக்கப்பட்டான். இதற்காக அவனுக்குத் துருத்தி, தீச் சட்டி, சுத்தி முதலியன தேவைப்பட்டன. சம்புவாடு என்ற பெயரை உடைய அவன், தன் மூத்த மகனை அழைத்து அவனு டைய உடம்பில் முதுகு எலும்புத் தண்டினை மட்டும் விட்டு விட்டு மற்ற உறுப்புக்களைக் கொண்டு தனக்கு வேண்டிய*

கருவிகளைச் செய்து கொண்டான். இதனால் மகிழ்ந்த தெய்வங்கள் அவனுடைய முதுகெலும்புத் தண்டுக்கு உயிர் ஊட்டினர். அவன் தன் தந்தை சம்புவாடுவிடம் சென்றான். அவன் தன் மகனை அடையாளம் கண்டு கொள்ளாததோடு அவனைத் தன்னோடு சேர்த்துக் கொள்ளவும் மறுத்துவிட்டான். அவன் மாதிகரைச் சார்ந்து அவர்களிடம் இரந்து உண்டு வாழும்படி அறிவுறுத்தப்பட்டான். முதுகுத் தண்டிலிருந்து உயிர் பெற்று எழுந்து வந்தமையால் தக்கலன் என அழைக்கப் பட்டான். (தக்கை – முதுகுத் தண்டு).

தக்கலர் அலைந்து திரியும் கூட்டத்தார் இவர்கள் மாதிகர் இல்லங்களுள் செல்வதில்லை. மாதிகர் இல்லங்களில் ஆண்களே இவர்களுக்கு வீட்டுக்கு வெளியே உணவு கொண்டுவந்திடுவர். பெண்களை இவர்களுக்கு உணவிட அனுமதிப்பதில்லை தக்கலர்களின் காலடித் தாரைகளை மாதிகர் சாதிப் பெண்கள் மிதிக்க மாட்டார்கள்.

**தக்கு - Dakku (fear)**

மாலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**தக்ணி - Dakni**

தக்ணி அல்லது டெக்கானியர் 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் தட்சிணத்தைச் சேர்ந்த முகமதியர்களுக்குரிய பெயராகவும், இசுலாத்தைத் தழுவியவர்களைப் பொதுபடக் குறிக்கும் பெயராகவும் வழங்குகின்றது எனக் கூறப்பட்டுள்ளது. தஞ்சாவூர் மாவட்டத்தில் கலப்பற்ற முகமதிய இனத்தின் வழி வந்தவர்கள் எனக் கூறிக் கொள்ளும் இந்துஸ்தானி பேசும் முகமதியர்கள் தக்ணிகள் அல்லது தக்கணியர் என வழங்கப்படுவர். மற்றத் தமிழ் மாவட்டங்களில்இவர்களை லப்பைகள், மரக்காயர் ஆகியோரிலிருந்து வேறுபடுத்தப் பட்டாணியர் என அழைக் கின்றனர். தக்ணிகள் தங்கள் மணச் சடங்குகள் தவிர மற்ற அனைத்திலும் முகமதியர் வழிப்பட்டவர்களாகவே இருக்கின்றனர். இவர்களுடைய மணச் சடங்குகள் இந்துக்கள் முகமதியர்கள்

மணச் சடங்குகளின் கலப்பினுக்குத்தக்க எடுத்துக்காட்டாகும். மணத்தின்போது இந்துக்களைப் போலவே இவர்களும் பால் கம்பம் நடுகின்றனர். ஒரு மூங்கிலில் இரண்டணா நாணயத்தையும், சிவப்புத் துண்டில் முடியப் பெற்ற மிட்டாயையும் கட்டி அதனைச் சாதித் தலைவனிடம் தருவர். அவன் அதனை மலர் மாலைகள், வெற்றிலைச் சுருள் ஆகியவற்றால் அலங்கரித்து வீட்டுவாசலில் தோண்டப்படும் குழியில் நடுவான். அவ்விடத்தில் பால் தெளிக்கப்படும். மறுநாள் பால்கம்பத்தின் அருகே இரண்டு பெரிய பானைகளை வைப்பர். நான்கு தம்பதியர்கள் அவைகளை நீர் ஊற்றி நிரப்புவர். அப்பானைகளைச் சுற்றி நவதானியங்கள் தூவப்படும். மூன்றாம் நாள் மணமகன்வீட்டார் பதின்மூன்று தட்டுகளில் வெற்றிலை, பழம், பூ சந்தனம் மருதாணி இலைகள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு மணமகள் இல்லம் செல்வர். மணமகளை அலங்கரித்து ஒரு பலகையில் அமர்த்துவர். பெண்கள் மணமக்களின் முகம், கை ஆகியவற்றில் நறுமணச் சாந்து பூசியபின் அவர்களில் ஒருத்தியோ மணமகனின் உடன்பிறந்தவளோ மணப் பெண்ணின் கழுத்தில் கருப்புப் பாசிமணி மாலையினை அணிவிப்பாள். இதனைக் கட்டும்போது யாரும் தும்முதல் கூடாது. மணமக்கள் மணிக்கட்டில் கங்கணமும் அணிவிக்கப்படும். நான்காம் நாள் நிக்காச் சடங்கு நடத்தப்படும். புதிய தம்பதியர், சந்தனக் கலவை பூசப்படும் நலங்கின்போதும், மஞ்சள் நீரால் ஆரத்தி எடுக்கும் போதும் ஒன்றாக அமர்ந்திருப்பர். இரண்டு பானைகளில் ஊற்றப்பட்ட தண்ணீரை நாற்பது நாள்கள் அப்படியே வைத்திருந்து பின்னர் ஆராய்ந்து பார்ப்பர். நீர் சுவை மாறாமலும், புழுப்பூச்சிகள் தோன்றாமலும் நன்றாக இருக்குமானால் அது நல்ல நிமித்தமாகக் கொள்ளப்படும். பானைகளைச் சுற்றித் தூவப்பட்ட நவதானியங்களும் நன்கு முளைத்து வளர்ந்திருக்க வேண்டும்.

### தம்முலர் – Dammula

*1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் தெலுங்கு பேசும் பிச்சைக்காரர்கள் எனவும், ஊர்த்தெய்வங்களின் கோயில் பூசாரிகள் எனவும் பதியப்பட்டுள்ளது.

**தண்டாசியர் - Dandāsi**

கஞ்சம் மாவட்டக் கையேட்டில் தண்டாசியர் ஊர்க் காவலர்கள் எனவும், அவர்களுள் பலர் தேர்ந்த திருடர்கள் எனவும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது. "தெலுங்கில் நாயுடு எனச் சிதைந்து வழங்கும் தலைவன் அல்லது முதல்வன் எனப் பொருள்படும் நாய்கோ என்ற சொல் ஊர்க் காவலர்களையும் திருட்டையே தொழிலாகக் கொண்டவர்களையும் தாழ்ந்த சாதியாரையும் ஒருங்கே சுட்டும் சாதிப் பெயராக வழங்குவது வியப்பிற்கு உரியதாக உள்ளது. இவன் பட்டப்பெயர் மிக மதிப்புடையதாக இருந்தாலும், தண்டாசி என்ற சாதிப் பெயராலேயே இவன் வழங்கப்படுகின்றான். தண்டாசி என்ற இச் சொல் தண்டித்தற்குரியவன் எனப் பொருள்படும். இந்தப்பெயர் போன்று இப்பெயர் தாங்கியுள்ள இவர்களுக்கு மிகப் பொருத்தமாக அமைவது வேறொன்று இருக்க முடியாது என உறுதியாகக் கூறலாம். ஒரே சமயத்தில் ஊர்க்காவலனாகவும் ஊர்த் திருடனாகவும் தொழில்புரிபவனாக இவன் விளங்குவது விசித்திரமானதொரு கலவையாகவே உள்ளது" எனத் திரு எஸ். பி. ரைஸ் எழுதுகிறார்."* தடி எனப் பொருள்படும் தண்ட என்ற சொல்லும் வாள் எனப் பொருள்படும் ஆசி என்ற சொல்லும் இணைந்து தண்டாசி என்ற இச்சொல் தோன்றியது எனக் கூறுவாரும் உளர். தண்டபாடி என்ற கெட்டியான மூங்கிலைக் குறிக்கும் சொல்லிலிருந்தோ தண்டபாசி என்ற தடியும் கயிறும் எனப் பொருள்படும் சொல்லிலிருந்தோ இப் பெயர் தோன்றியதாகலாம். இவர்களின் தொழிலுக்கு உரிய சின்னமாக இவர்கள் இவற்றைக் கையில் வைத்திருப்பர்.

வழிப்பறி, திருட்டு ஆகிய குற்றங்களுக்காகக் கஞ்சம் மாவட்டத்தில் சிறைத் தண்டனை அனுபவிப்பவர்களில் பெரும் பான்மையோர் தண்டாசியரே. இச்சாதியைச் சேர்ந்தவர்கள் தமிழ்நாட்டுக் கள்ளர்களைப்போலத் திருடுவது தங்கள் குலத் தொழில் என நம்புவதோடு அதனை நியாயப்படுத்தவும் செய் கின்றனர். இவர்களுடைய முன்னோர்கள் கௌரவர்கள் கட்டிய

---

* தென்னிந்திய மக்கள் வாழ்க்கை பற்றி அவ்வப்போது எழுதிய கட்டுரைகள். (Occasional Essays on Native South Indian Life.)

அரக்கு மாளிகையில் சுரங்கம் தோண்டிப் பாண்டவர்கள் தப்ப உதவிய காரணத்தால் இவர்கள் கன்னம் வைக்கும் இத் தொழிலை மேற்கொள்ள வேண்டியதாயிற்று என ஒரு வழக்கு வரலாறும் கூறப்படுகிறது. இன்னொரு கதைப்படி, தண்டாசியர் ராதையின் தோழியான தூதிகா என்பவளோடு கண்ணன் கொண்ட கள்ள உறவு காரணமாகப் பிறந்தவனின் வழித்தோன்றல்கள் எனக் கூறப்படுகின்றது. ஒரு குழந்தை பிறந்தவுடன் அதனைத் திருட்டுத் தொழிலில் ஈடுபடுத்தும் ஒரு விசித்திரச் சடங்கினைத் தண்டாசியர் நடத்துகின்றனர். ஒரு குழந்தை பிறந்து மூன்று அல்லது ஐந்து நாள்களாகும்போது பேகரா என்ற சாதித் தலைவனை அழைப்பர். வாயிற்படிக் கட்டை அடியில் அல்லது சுவரில் ஒரு துளை இடப்படும். இதன் வழியாகப் பேகரா அக்குழந்தையை மூன்று முறை தரக் குடும்பத் தைச் சேர்ந்த ஒருவர் அக்குழந்தையைப் பெற்றுக் கொள்வார். இவ்வாறு குழந்தையைக் கொடுக்கும்போது ஒவ்வொரு முறை யும் பேகரா, "நுழைந்து போடா குழந்தை, நுழைந்து போ. நீ உன் அப்பனின் திறமையை விஞ்சுவாய்," என்று கூறுவான். இப்பழக்கம் பற்றித் தண்டாசியரிடம் கேட்டபோது அவர்கள் இதனை மறுத்தனர். சிலர் இது முன்பு மேற்கொள்ளப்பட்டு வந்த பழக்கம் எனக் கூறினர். ஒரு மூதாட்டி தன் பேரன் ஒருவன் இவ்வாறு துளை வழியே செலுத்தப்பட்டான் என ஒப்புக் •கொண்டாலும் அது பற்றி விரிவாகப் பேச மறுத்து விட்டாள்.

தாண்டாசியரிடையே புறமணக்கட்டுப்பாடு உடைய பல குலப் பிரிவுகள் உள்ளன. அவற்றுள் பின்வருபவை குறிப்பிடத் தக்கவை. சண்டராசி குலப் பிரிவினைச் சேர்ந்தவர்கள் சண்ட ராசி என்ற பெயரை உடைய கோரையால் பின்னப்பட்ட பாயினைப் பயன்படுத்த மாட்டார்கள். கிலவெண்டியர் பிரி வினர் வண்ணார் துணி காய வைப்பதற்காகக் கயிறு கட்ட நட்டிருக்கும் மூங்கில் கம்பங்களைத் தொட மாட்டார்கள். இவர்கள் ஆண் குழந்தைக்கு முடி இறக்கும் அமாவாசை நாளில் ஒரு பன்றியையும், ஏழு கோழிகளையும் தங்கள் குல தெய்வத்திற்குப் பலியிடுவர். தியாசியர் குலப் பிரிவினைச் சேர்ந்தவர்கள் சூரியனைப் போற்றி வழிபடுவர். மணமக்கள்

பயன்படுத்தும் உடைகள், முக்கூடுகள், மாலைகள் முதலிய பிற பொருள்களைக் கதிரவன் ஒளி அவற்றின் மீது படும் பொருட்டு வீட்டுக்கு வெளியே வெயிலில் வைப்பர். எகொபொத்திரியர் குலத்தைச் சேர்ந்தவர்கள் சமூகப் படி நிலையில் தாழ்ந்தவர் களாகக் கருதப்படுகின்றனர். அதற்கான காரணமாகக் கூறப் படும் நிகழ்ச்சி வருமாறு:- ஒரு தண்டாசி தன் நண்பர்களோடும், உறவினர்களோடும் எகொபொத்திய குலத்தினைச் சார்ந்த ஒருவன் இல்லத்திற்கு மண ஏற்பாடுகளைச் செய்யச் சென்றிருந் தான். விருந்தினர்களை அவன் நல்ல முறையில் வரவேற்று உபசரித்தான். அப்பொழுது மணமகளாக உள்ள பெண் தன் தந்தையிடம் வந்து அவர்களுக்கு என்ன கறி செய்வது எனக் கேட்டாள். அவள் தந்தை புறக்கடையில் பாகற்காய் இருந் ததால் புறக்கடையில் இருப்பதை அறுத்துக் கறி செய் எனக் கூறினான். சில விருந்தாளிகளுக்குச் செய்ய இருப்பது என்ன கறி என அறிந்து கொள்ளும் ஆர்வத்தை இது தூண்டியது. அவர்கள் புறக்கடைக்குச் சென்று பார்த்தபோது அங்குப் பாகற்காய்க்குப் பதிலாக இரத்தத்தை உறிஞ்சும் பல பல்லிகள் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டனர். தங்களுக்கு விருந்து வைப்பவர் பரிகொலொர எனக் கூறியது அவற்றைத் தான் எனக்கருதி அங்கிருந்து அவர்கள் நழுவி விட்டனர். எகொபொத்ரியர் தங்கள் வளர்ந்த குழந்தைகளோடு கூட ஒரே கலத்தில் உண்ணும் பழக்கம் உடையவர்கள் அல்லர். மணமான ஒரு பெண் பிறந்த வீட்டிற்கு வரும்போது கூட இதனைச் செய்யார்.

தண்டாசியர், தாகுராணிகள் எனப்படும் சங்கைத்துனி குல்லடங்குணி, கொம்பேசரி, காளிமுகி போன்ற கிராம தேவதை களை வழிபடுகின்றனர். அத்தெய்வங்களைத் தற்காலிகமாகப் பித்தளைப் பாத்திரங்களில் ஏற்றி வைத்தோ சின்னஞ் சிறு தங்கத் துண்டுகள் உள்ளே பதிக்கப்பட்ட மூன்று களிமண் உருண்டைகளில் நிலையாக வைத்தோ வழிபடுவர். இலுப்பம் பூ, மாங்காய் போன்ற பொருள்களை ஒரு பருவத்தின் தொடக்கத்தில் முதன் முதலாக உண்ணும் முன் ஒரு ஆட்டையும் ஒரு கோழியையும் அவற்றைக் குவித்து வைத்து அவற்றின் முன் பலியிடுவர்.

தண்டாசியருக்குப் பேகரா என்ற தலைவன் உள்ளான். அவன் பல ஊர்கள் சேர்ந்த தொகுதிகளுக்கு ஒருசேரத் தலைவனாவான். ஒவ்வொரு தொகுதியும் நாய்கோ என்பவன் நேர்பார்வையில் இருக்கும். நாய்கோவிற்குத் தொண்டிய என்ற உதவியாளன் உளன். ஒவ்வொரு ஊருக்கும் பொல்லொபைய என்ற அலுவலனும் உளன். சில இடங்களில் பொத முண்டி என்ற அலுவலர்கள் சமீன்தார்களால் அமர்த்தப்பட்டிருப்பர். சமூகத்தினரின் முறை வழுவிய செயல்களைச் சமீன்தார்களிடம் சென்று உரைப்பது இவர்கள் கடமையாகும். ஒரு பெண்ணிற்குக் குழந்தை இறந்து பிறந்தால் அவள் குடும்பத்தினர் பதினொரு நாள்கள் தீட்டுக்கு உள்ளாவர். அதன்பின் சாதித் தலைவனை அழைத்து அவனுக்கு அன்பளிப்புகள் வழங்குவர். அவன் அந்தக் குடும்ப உறுப்பினர்கள் மீது நீர் தெளித்து அவர்களைத் தீட்டிலிருந்து விடுவிப்பான்.

தண்டாசியர் தாங்கள் திருடுவதில் ஒரு குறிப்பிட்ட பங்கை சாதித் தலைவனுக்கு என்று ஒதுக்கி வைப்பர். தமிழ்நாட்டுக் கள்ளர்களையும், மறவர்களையும் போல இவர்களும் அச்சுறுத்திப் பொருள் பறிக்கும் ஒரு முறையை மேற்கொண்டுள்ளனர். ஒரு தண்டாசியைக் காவலுக்கு அமர்த்தி விட்டால் பொருள்கள் களவு போகாமல் இருக்கும். களவு போனாலும் உரியவருக்கு அதனை மீட்டுக் கொண்டு வந்து தந்து விடுவான்.

பெண்கள் பருவம் அடைந்த பின்னரே மணம செய்விக்கப் படுகின்றனர்.ஒருவன் தன் தாய்மாமன் மகளை மணந்து கொள்ளலாம். ஆனால் அத்தைமகளை மணந்து கொள்ளும் பழக்கம் இல்லை. மணச் சடங்குகள் வழக்கமாக மூன்று நாள்கள் நிகழும். சிலர் மேல் வகுப்பாரைப் பார்த்து அவர்களைப் போல மணத்தினை ஏழு நாள்கள் நீட்டிப்பதும் உண்டு. ‘கொண்டொ சொனொ’ எனப்படும் மண நாளுக்கு முந்திய நாளில் குயவனிடமிருந்து ஏழு புதிய பானைகள் வாங்கி வந்து ஓர் அறையில் வைப்பர். ஏழு பெண்கள் இலந்தை இலைகளை (*Zizyphus jujuba*) அவற்றின் மீது தூவிய பின் அவற்றை ஒரு குளத்திற்கோ, ஒரு குட்டைக்கோ எடுத்துச் சென்று நீர் நிரப்புவர். அப்பானைகளில் ஒன்றினை மணமகனின் மைத்துனி தூக்கி

வரவேண்டும். ஒரு பித்தளைப் பாத்திரத்தை வீட்டில் தொங்க விட்டு அதற்கு வழிபாடு செய்வர். மாலையில் புற்று ஒன்றுக்குக் கோழியைப் பலியிடுவர். அன்றே மணமகனுக்கு அவனுடைய மைத்துனன் முகம் மழித்துவிடுவான். மற்ற ஒரிய சாதியாரைப் போலவே தண்டாசியரும் ஏழு வீடுகளிலிருந்து தண்ணீர் வாங்கி வருகின்றனர். ஆனால் இவர்கள் தங்களைவிட உயர்ந்த சாதிக்காரர்கள் இல்லங்களிலிருந்தே நீர் பெறுவர். இந்தத் தண்ணீர் இருக்கும் பானை மேடையின் மீது கட்டித் தொங்க விடப்படும். 'பிப்பா' எனப்படும் மணநாளன்று மணமகன் ஒரு மேடையில் அமர்ந்திருக்க மணமகள் அவன் எதிரே தன் தாய் மாமன் மடியிலோ அவன் அருகிலோ வந்து அமர்வாள். சாதித் தலைவனோ சாதியைச் சேர்ந்தவர்களுள் பெரியவர் ஒருவரோ பாக்கு வெட்டி ஒன்றை மணமக்கள் மீது வைத்து அல்லது ஒரு பாக்கையும் கொஞ்சம் அரிசியையும் கைகளுக்கு இடையே வைத்து அவர்கள் கரங்களை மஞ்சள் பூசிய நூலால் ஏழு சுற்றுக்கள் சுற்றிக் கட்டுவார். பின்னர் அவர், ...... உடைய பேத்தியும் ...... உடைய மகளுமான, ...... இவளை ...... உடைய பேரனும் ...... உடைய மகனுமான இவனுக்கு மனைவியாக மணம் முடித்து வைக்கிறேன் எனக் கூறுவார். மணமக்களின் பெற்றோர் ஒரு சங்கிலிருந்தோ இலையி லிருந்தோ மணமக்களின் இணைக்கப்பட்ட கைகளின் மீது நீர் ஊற்றுவர். மணமகளின் உடன்பிறந்தவன் அவர்கள் கையோடு கட்டப்பட்டுள்ள பாக்கு வெட்டியை அகற்றியபின் மணமகனை அடித்துவிட்டு அப்பால் செல்வான். மணமக்கள் அடுத்துச் சோழி விளையாடுவர். அப்போது அவர்கள் ஆடை முடிச்சிடப் படுவதோடு, அவர்கள் கரங்கள் இணைக்கப்பட்டபோது கையில் வைக்கப்பட்ட அரிசி தனியே முடியப்படும். சோழி ஆட்டம் முடிந்ததும் இந்த முடிச்சை அவிழ்த்து அதில் உள்ள அரிசியினை ஒரு சிறிய மண்பாண்டத்தில் முதலில் மண மகளைச் சேர்ந்தவர்கள் அளந்து பார்த்துச் சரியாக உள்ளது எனக் கூறுவர். அடுத்து அது மறுபடியும் அளந்து பார்க்கப்படும். அச்சமயம் அளவில் குறைகிறது எனக் குறை கூறுவதோடு கேலி யாக மணமகனைத் திருடன் என்பர். அதில் அவன் கொஞ்சம் திருடிக் கொண்டதுதான் அவ்வாறு அரிசி குறையக் காரணம்

எனக் கூறுவர். மேல் சாதியார் மணமுறைகளைப் பின்பற்று பவர்கள் மணநிகழ்ச்சியில், மணமகன் சினங் கொண்டு மண மேடையில் உயர மேலே தொங்கும் பானையை உடைத்துவிட்டு வீட்டை விட்டு வெளியே செல்லும் சடங்கையும் சேர்த்துக் கொள்வர். பின்னர் அவனை அவனுடைய மைத்துனன் திரும்ப அழைத்து வருவான்.

முதன்முதல் பூப்படையும் சிறுமி ஏழு நாள்கள் தீட்டுக்கு உரியவளாகக் கருதப்படுவாள். அவளை மணம்பேசி முடித் திருப்பின் அவளுடைய வருங்கால மாமனார் அவளுக்கு ஏழாம் நாளன்று சில நகைகளையும் பணத்தையும் அன்பளிப்பாகத் தந்து மண ஒப்பந்தத்தை உறுதிப்படுத்துவார்.

இறந்தவர்கள் எரிக்கப்படுகின்றனர். கணவனை இழந்தவள், கணவன் பிணத்தோடு ஊர் எல்லைவரை ஒர் உலக்கையையும் ஒரு பானையையும் எடுத்துக் கொண்டு சென்று ஊரெல்லை யில் அவற்றைப் போட்டுவிட்டுத் திரும்புவாள். பிணம் எரிக்கப் பட்ட மறுநாள் தணலை அணைத்தபின் சாம்பலை இறந்தவரின் உருவம் போல அங்கே அமைத்து அதற்கு உணவு படைப் பர். வீட்டில் கூடியுள்ளவர்களுக்குக் கள் வழங்கப்படும். பத்தாம் நாள் பத்துப் பானை ஓடுகளில் உணவினை வைத்துப் படைப்பர். இறந்து போனவர் குறிப்பிடத்தக்க புள்ளியாயின் பதினொன்றாம் நாள் மேல் சாதிக்காரர்கள் நடத்துவதான ‘ஜோல ஜோல ஹண்டி’ என்ற சடங்கினை ஒத்த சடங்கினை நடத்துவர். பிணத்தை எரித்த இடத்தில் ஒரு துணியை விரிப்பர். பெண்கள் சிலர் அத்துணியைப் பாராது அதற்குத் தங்கள் முதுகைக் காட்டியபடி அதனைக் சுற்றியுள்ள இடத்தைப் பெருக்கிக் தூய்மை செய்வர். இரண்டு ஆண்கள் கையில் வாள் அல்லது நீண்ட கத்தியை வைத்தபடி அத்துணியருகே அதன் மீது ஒரு பூச்சி வந்து அமரும் வரை காத்திருப்பர். ஒரு பூச்சி துணி மீது அமர்ந்ததும் தங்கள் கத்திகளையோ வாள்களையோ அத்துணிமீது வைத்து அத்துணியைச் சுருட்டி எடுத்து ஒரு புதிய முறத்தின் மீது வைப்பர். அதனை வீட்டிற்கு எடுத்து வந்து, தரையில் வைத்து, ஒரு கயிற்றால் அதனை வீட்டுத்

தெய்வத்தோடு இணைப்பர். (தெய்வம் முன்பு கூறிய களி மண் உருண்டை அல்லது பித்தளைப் பாத்திரம் ஆகும்) அதன் பின் துணியை விரித்து அதிலுள்ள பூச்சி தெய்வத்தின் அருகே விழும்படி உதறுவர்.

கொண்ட்ரா சாதியின் ஓர் உட்பிரிவாகவும் தண்டாசி என்ற பிரிவு உள்ளது. அப்பிரிவினர் ஊர்க் காவலர்களாகப் பணிபுரிகின்றனர்.

**தண்டி - Danti (a staff)**

குறவர்கள் இல்லப் பெயர்களுள் ஒன்று.

**தண்டு - Dandu (army)**

ஈதிகர்களின் ஓர் உட்பிரிவு. போயர், காபுகளின் புறமணக் கட்டுப்பாடு உடைய குலப் பெயரும் ஆகும். இப்பெயர் படை எனப் பொருள்படும் தண்டு என்பது அன்று எனவும், ஈதிகர்கள் இறக்கப் பனைமரம் ஏறப் பயன்படுத்தும் தண்டே என்ற கழியைக் குறிப்பதாகும் எனவும் கூறுவர். தண்டு அகசர் என்ற பெயர் படையினரின் துணியைத் துவைக்கும் மைசூரைச் சேர்ந்த மராட்டிய வண்ணாருக்கு உரியதாகும். இவர்களுடைய முன்னோர்கள் படைகளுடன் துணி துவைப்பவர்களாகச் சென்றவர்கள் ஆதல் வேண்டும்.

**தார - Dāra (stream of water)**

மாலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலம் ஒன்றின் பெயர்.

**தரபல - Darabala**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் மாலர்கள் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. தெலுங்குச் சாதியார் பலரின் இல்லப் பெயராகவும் இது உள்ளது.

**தாராள - Dārāla (thread)**

மாதிகர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய குலம் ஒன்றின் பெயர்.

**தர்ஜி - Darji**

தர்ஜி அல்லது தர்ஜீ என்ற இப்பெயர் தையல் தொழில் புரியும் முகமதியர்களுக்குரிய தொழில் தொடர்பான பெயர். "கீழ்த் திசை சார்ந்த மக்கள் இப்பொழுது தையல் இயந்திரம் கொண்டு தைக்கின்றனர். சிங்கரின் பெயர் மத்தியதரைக் கடற் பகுதி முதல் பசிபிக் வரை அறியப்பட்டுள்ளது. இந்தியாவில் கடைத் தெருக்கள் எங்கும் தலைப்பாகை அல்லது முசல் மான்களுக்குரிய தொப்பி அணிந்த ஆண்கள் - பெண்கள் எப் பொழுதும் இதில் ஈடுபடுவதில்லை - தையல் இயந்திரத்தின் மீது தலை சாய்த்தவர்களாகக் காலால் மிதிப்பானை ஆட்டியபடி இருக்கக் காணலாம்."* பிரிட்டனின் ஆளுகையில் உள்ள இந்தி யாவில் இறக்குமதி செய்யப்பட்ட தையல் இயந்திரங்களின் மதிப்பு 1901-02-இல் 5,91,046 ரூபாயிலிருந்து, 1904-05-இல் 10,06, 625 ரூபாயாக உயர்ந்துள்ளது.

**தாஸ் - Dās**

வட இந்தியாவிலிருந்து தெற்கே குடியேறியுள்ள சமண சமயம் சார்ந்த வணிகர்களின் பட்டப்பெயர். திருப்பதி திருமலை கோயிலின் அறங்காவலர் பட்டப்பெயரும் ஆகும். எடுத்துக் காட்டு:- பலராம் தாஸ், பகவான் தாஸ்.

**தாசரி - Däsari**

தாசரி அல்லது தாதன் பற்றி திரு எச். எ. ஸ்டுவர்ட் அவர் கள் வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் பின்வருமாறு எழுதி யுள்ளார்:- "தாசரிகள் வைணவ சமயம் சார்ந்த இரந்துண்ணும் சாதியார். வட மாவட்டங்களுள் ஒன்றில் சூத்திரர் பிரிவினரான

---

* சிட்னி லோ, இந்தியாவின் வருங்காலம், 1906. (Sidney Low, A vision of India, 1906.)



தோசாயியின் கரண்டி

ஒரு செல்வர் மகப்பேறு இல்லாது வருந்தித் தனக்குக் குழந்தைகள் பிறக்குமாயின் அவர்களுள் ஒருவனை இறைபணிக்கு ஆளாக்குவதாக வேண்டிக் கொண்டார். அதன்பின் அவருக்குப் பல பிள்ளைகள் பிறந்தன. அவர்களுள் ஒருவனைத் தாசன் (அடிமை) எனப் பெயரிட்டுத் தான் வேண்டிக் கொண்டபடி இறைபணியில் நிற்கும்படியாக விட்டார். தாசன் தன் தந்தையின் நிலபுலங்களின் மீது தனக்கிருந்த உரிமைகள் அனைத்தையும் விட்டுக் கொடுத்துவிட்டதால் அவனுக்குப் பிறந்த பிள்ளைகள் இரந்துண்ண வேண்டியதாயிற்று.

"சாதானிகள் சாதியைப் போலவே இச்சாதியிலும் சோம்பித்திரியும் சூத்திரர் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் திருப்பதியிலும் பிற கோயில்களிலும் இருக்கும் குருக்களால் முத்திரையிடப் பட்டுச் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர். இவர்கள் தப்பை எனப்படும் தோலால் ஆன இசைக் கருவியால் தாளமிட்டபடி பக்திப் பாடல்களைப் பாடித் திரிவர். சூத்திர சாதியார் சிலர் இவர்களைப் பிணத்தின் முன் பாடிச் செல்ல அமர்த்துவர். திருப்பதிக்குக் கூட்டமாகச் செல்லும் பக்தர்களோடு இவர்கள் பாடியபடியே உடன் பயணம் மேற்கொண்டவர்களாக அவர்களைப் பக்தி பரவசத்தில் மூழ்கும்படி செய்வர். எருதாண்டிகள் (பார்க்க: தனிக்கட்டுரை) என அழைக்கப்படும் சிலர் கோயில்களுக்கு நேர்ந்து விடப்படும் காளைக் கன்றுகளைப் பிடித்துப் பின்னர் அவற்றைப் பழக்கிச் சில வித்தைகளைக் கற்றுத் தருவர். அந்தக் காளைகள் அவர்கள் சொல்வதைப் புரிந்து கொண்டவை போல அவர்கள் இடும் கட்டளைகளுக்கேற்பச் செயல்படும். தாசரிகள் சிலர் தெய்வங்கள் ஏறப் பெற்றவர்களாகப் பந்தச்சேவையைச் தூக்கியபடி எரியும் தீக்கொழுந்தால் உடம்பைச் சுட்டுக் கொள்வர். அவர்கள் இவ்வாறு செய்யும்போது பாதுகாப்பாக உடம்பில் ஏதேனும் தடவிக் கொள்வர். துளசி மணிமாலை அணிந்து கொண்டவர்களாக இவ்வாறு பல் வேறு கோலங்களில் இவர்கள் ஊர்ஊராகத் திரிந்து இரப்பர். தாசரிகள் அனைவரும் தென்கலைப் பிரிவினரே. அவர்களுள், பலிசர், சணப்பர். பள்ளி, வள்ளுவன். கங்கேத்துலர், கோல்ல தாசரி என ஆறு

உட்பிரிவுகள் உள்ளன. இப்பிரிவினர் தங்களுக்குள் மண உறவு கொள்வதோ ஒன்றாக இருந்து உண்பதோ இல்லை தற்பொழுது வழக்கில் உள்ள தனிப்பட்ட சாதிகளின் பெயராக இவை இருப்பதால் இத்தாசரிகள் முன்பு இச்சாதிகளைச் சேர்ந்தவர்களாக இருந்து தங்களுடைய அலைந்து திரியும் ஆவல் காரணமாக இரந்து உண்டலை மேற்கொண்டவர்கள் ஆதல் வேண்டும் என எண்ண இடமுள்ளது. கைம்பெண்களை மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை என்பதனைத் தவிர இவர்களிடையே வேறுசமூகக் கட்டுப்பாடுகள் எவையும் இல்லை."

அனந்தப்பூர் மாவட்ட விவரக் குறிப்பில் அனந்தப்பூரைச் சேர்ந்த இரவலர்கள் பற்றித் திரு டபிள்யூ. பிரான்சிஸ் எழுதியுள்ளவை வருமாறு:- "இம் மாவட்டத்தில் எங்கும் காணப்படும் பிச்சைக்காரர்கள் தாசரிகளே. காபுகள், பலிசர், குருபர் போயர், மாலர் ஆகிய பல சாதிகளிலிருந்தும் இப்பிரிவினர் தேர்ந்தெடுத்துச் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர். எனினும் சமூகப் படிநிலையில் தாழ்ந்த சாதியினராகக் கருதப்படும் போயர், மாலர் சாதிகளைச் சேர்ந்தவர்கள் மற்றவர்களோடு ஒன்றாக இருந்து உண்ண அனுமதிக்கப் படுவதில்லை. தாசரிகள் அனைவரும் வைணவர்களே. வைணவக் குரு ஒருவர் இவர்களுக்கு முத்திரையிட்டு இவர்களை இப்பிரிவில் சேர்ப்பார். அதன்பின் அவ்வாறு சேர்க்கப்பட்ட புதியவன் தாசரியாக இல்லந்தோறும் இரந்துண்ணும் உரிமை பெறுகின்றான். சில குடும்பங்களில் இது பரம்பரைத் தொழிலாக மேற்கொள்ளப்படுகின்றது. தங்கள் வருகையை அறிவிக்க இவர்கள் முழக்கும் சங்கு, போகும் போதே இவர்கள் அடித்துச் செல்லும் சேகண்டி, எண்ணெய் வைத்துக் கொள்வதற்கான தேங்காய்த் தொட்டி பொருத்தப்பட்ட எப்பொழுதும் எரிந்துகொண்டே இருக்கும் உயர்ந்த இரும்பு விளக்கு, இரப்பதைப் போட்டு வைக்கத் தோளில் தொங்கும் நாமம் தீட்டப்பட்ட பித்தளை அல்லது செம்புச் சொம்பு, கழுத்தில் தொங்கும் உலோகத்தாலான அனுமானின் சிறு உருவம் ஆகிய ஐந்தும் தாசரிகளின் சிறப்பு அடையாளச் சின்னங்களாம். இவற்றுள் காண்பவர்களைக் கவரக் கூடியதும்,

தாசரிகளுக்கு மிகவும் இன்றியமையாததும் அவர்கள் ஏந்தித் திரியும் இரும்பு விளக்கே. இதனை வெங்கடேசர் அடையா ளம் என்பர் இது எப்பொழுதும் எரிந்தபடி இருக்க வேண் டும் என்பர். ஏற்றப்படாமல் இதனை வைத்திருத்தல் தீமை தரும் எனவும் கூறப்படுகிறது. இந்துக்களின் வழிபாடுகள், விழாக்கள் ஆகிய சடங்குகளின்போது தாசரிகள் சிலர் பூசாரி களாகப் பணி செய்து வாழ்க்கை நடத்தி வருகின்றனர்.'' கர்நூல் மாவட்டத்தில் ஒரு சிறுமி பசவியாக (வேண்டுதலின் பேரில் தேவதாசியாக்கி விடுதல்) விடப்படும்போது மற்ற பகுதி களில் செய்யப்படுவது போல கோயிலில் உள்ள சிலைக்கு மண முடிக்கப்படாமல் தாசரியின் கருடக் கம்பம் என அழைக்கப் படும் நீண்டு உயர்ந்த விளக்குக் கம்பத்தோடு சேர்த்து மலர் மாலையால் பிணைக்கப்படுவாள். அவளை அக்கட்டிலிருந்து விடுவிப்பவனோ அவளுடைய தாய் மாமனோ அவளோடு முதலில் உறவு கொள்ள உரிமை உடையவன்.

1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் மைசூரில் காணப் படும் தாசரிகள் பற்றிப் பின்வருமாறு கூறப்படுகின்றது:— ''தாசரிகள் சூத்திரர் வகுப்புக்கள் பலவற்றையும் சேர்ந்த இரந் துண்டு வாழ்வோர். வாழ்க்கையில் கவலையோ எதிர்பாராத இடரோ ஏற்பட்ட சமயத்தில் அதிலிருந்து விடுபட இவர்களோ இவர்கள் உறவினர்களோ திருப்பதியில் உள்ள தெய்வத்திற்கு நேர்ந்துகொண்டதன் காரணமாக அத்தெய்வத்தின் பெயரால் இரந்துண்ணும் வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் இவர்கள். வைணவ சமயத்தைச் சேர்ந்தவர்களே அந்தச் சமயத்தைச் சேர்ந்த இந்தத் தெய்வத்தின் பெயரால் இவ்வாறு நேர்ந்து கொள்வதால் தாசரிகள் அனைவரும் வைணவர்களாகவே உள்ள னர். சூத்திரர்கள், சமயச் சடங்குகளின்போது தாசரிகளை அழைத்து விருந்திடுவர். சரியாக விளக்க வேண்டுமானால் தாசரி ஒரு சாதியாகாது. ஒரு தொழிலை மேற்கொண்ட வகுப்பா ராகவே இவர்களைக் கொள்ளுதல் வேண்டும். மேற்கூறியபடி, தான் நேர்ந்து கொண்டதற்காக ஒருவன் தாசரியாகும்போது அவனுடைய மூத்த மகனும் அதே தொழிலை மேற்கொள் கின்றான். மற்றப் பிள்ளைகள் வேறு தொழில்களை

மேற்கொள்கின்றனர். பின்வரும் சாதியார் தாசரியாவதாக நேர்ந்து கொள்ளுதலை மேற்கொள்கின்றனர்:- தெலுங்கு பணசிகர், ஹொலையர், திக்கலர், வக்கலிகர். தாசரி நாளும் தலையோடு குளிக்கும் கடமைப் பட்டவன். தங்கள் நெறிப்படாதவர்களோடு உடன் அமர்ந்து உண்ணும்போது அவர்கள் உண்ணும் உணவு தங்கள் உணவோடு கலந்து விடாதபடி தாசரிகள் பார்த்துக் கொள்ள வேண்டும். சனிக்கிழமை தோறும் குளித்துவிட்டுச் சில மணி நேரம் வழிபாடு நடத்திய பின் தங்கள் உணவை அவர்களே தூய்மையான ஒரு மண் சட்டியில் சமைத்துக்கொள்ள வேண்டும். தெருக்களில் ஹரிகீர்த்தனங்களைப் பாடியபடி செல்லும் இவர்கள் தங்கள் பாட்டினிடையிடையே களைப்பைப் போக்கும் வகையில் சங்கை முழக்குவதோடு சேகண்டியையும் அடித்துச் செல்வர்."

தாசரிகளைக் குறிக்கும் மற்றொரு சொல்லான தாதன் என்பது பற்றித் தஞ்சாவூர் மாவட்டக் கையேடு, "வடமொழிச் சொல்லான தாஸ என்பதோடு அன் விகுதி சேர்க்கப்பட தாசன் என்பதாகின்றது. இச்சொல் அப்படியே பயன்படுத்தப் படுவதோடு தாசரி என்ற வழக்கும் அடிக்கடி பயன்படுத்தப் படுகிறது. இச்சொல் இரந்துண்ணும் வைணவர்களைக் குறிப்பதாகும். நாளும் காலையில் இசைப் பாடல்களையோ பக்திப் பாடல்களையோ பாடியபடி இவர்கள் அரிசி கேட்டுப் பிச்சை எடுத்துச் செல்வர். ஒரு சிறு முழவில் விரல்களால் தாளம் அடித்துச் செல்வதோடு உடன்கொண்டு செல்லும் சங்கையும் முழக்குவர். இவர்கள் குடிக்கும் பழக்கம் உடையவர்கள்" எனக் கூறுகின்றது. நெல்லூர் மாவட்டக் கையேடு தாசரி வாண்டுகள் தெலுங்கு கன்னடப் பகுதிகளில் இரந்து உண்பவர்கள் எனவும், இவர்கள் கத்தரித் திருட்டு எனக் கூறப்படும் திருட்டில் ஈடுபடும் வழக்கத்தினர் எனவும் கூறுகின்றது. மேலே கூறப்பட்டுள்ள குறிப்பில் கூறப்பட்டுள்ள இரந்துண்ணும் தாசரிகள் பற்றித் திரு எஸ். எம். நடேச சாஸ்திரி 1905–ஆம் ஆண்டு கல்கத்தா ரெவ்யூ இதழில் கூறியுள்ள விவரங்கள் வருமாறு:- "குடி தாசரி எனப்படுவோர் ஒரு குடியிருப்பு அல்லது கோயிலைத் தங்கள் வீடாகக் கொண்டு வாழ்பவர்கள். சோம்பேறிகளான இவர்கள் அமைதியும் அறியாமையும் நிறைந்த எளிய அப்பாவிகளாவர்.

இவர்களுக்கு முற்றிலும் மாறுபட்டவர்கள் தொங்க தாசரிக எனப்படும் திருட்டுத் தாசரிகள். பெல்லாரி மாவட்டத்தில் மற்ற வர்கள் அச்சம் கொள்ளும்படியாகக் குற்றம் புரியும் வகுப்பார் இவர்கள். இவர்கள் பெயரளவில் மட்டுமே தாசரிகளாக உள்ளனர்.'' (பார்க்க: தொங்க தாசரி - Donga Dasari)

சில தாசரிகள் பிற சாதியைச் சேர்ந்தவர்களுக்குக் குருக்க ளாக இருக்கும் வைணவப் பிராமணர்களின் கீழ் பணியாளர்க ளாக உள்ளனர். அக் குருக்கள் கூறும் செய்திகளைக் கொண்டு செல்வதும், அவர்களின் வருகை பற்றி அவர்களின் சீடர் களுக்கு அறிவிப்பதும் இவர்கள் கடமையாகும். வழிபாட்டின் போதும் குருக்கள் ஒரு ஊரை நெருங்கும்போதும் தாரை எனக் கூறப்படும் நீண்ட குழலை இவன் ஊதுவான். பிராமணனான குருக்கள் பறையரான தன் சீடர்களை நெருங்கவோ, தொட ரவோ மாட்டார். ஆகையால் அவர்களுக்குத் தாசரிகளே தீர்த்தம் கொடுப்பர். பறையன் ஒருவனுக்கு சங்கு சக்கர முத்திரை பொறிக்கப்பட வேண்டுமானால் அவற்றின் அச்சுக்கள் உள்ள கருவிகளைப் பிராமணன் சூடாக்கித் தாசரியின் கையில் தர, தாசரியே முத்திரை பொறிக்கும் பணியைச் செய்வான். திருத்தணி, திருப்பதி, திருவள்ளூர் ஆகிய இடங்களில் திருவிழாக்கள் நடைபெறும் சமயங்களில் இவர்கள் அவைக் கூட்டங்கள் நடத்தித் திருமண ஏற்பாடுகள், சமூகத் தொடர்பான முடிவுகள் ஆகியவற்றைச் செய்வர்.

கோயமுத்தூர் மாவட்டத்தில் உள்ள காரமடைக் கோயிலில் ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழாவின்போது தாங்கள் நேர்ந்துள்ள கடன்களைச் செலுத்தப் பல பகுதிகளிலிருந்து பெருந்திரளான மக்கள் கூடுவர். இவர்களில் பெரும்பாலோர் தாழ்ந்த பிரிவுகளைச் சேர்ந்தவர்களே. இந்த நேர்ச்சிகளில் ஒன்று தாசரிகளுக்குக் கவளம் தருவதாகும். சிறு துண்டுகளாக வெட்டப்பட்ட வாழைப்பழங்களைச் சர்க்கரை, வெல்லம், வறுகடலை அல்லது அவல் கலந்து தரப்படுவதே கவளம் ஆகும். இத்தாசரிகள் இக் கோயிலைச் சேர்ந்தவர்கள். இவர்கள் அரை கால்சட்டை அணிந்து இடையிலும் பாதங்களிலும் சலங்கை கட்டியிருப்பர். சாமி ஏறியவர்கள் போலத் தப்பட்டை இசைக்

கேற்ப வேகமாகக் குதித்து ஆடுவர். இவர்கள் ஆடியபடியே சுற்றி வரும்போது கவளம் கொடுப்பதாக நேர்ந்துகொண்ட பக்தர்கள் இவர்கள் வாயில் கவளம் இடுவர். தாசரிகள் அதில் கொஞ்சத்தை விழுங்கியபின், எஞ்சியதைப் பக்தர்கள் கையில் உமிழ்வர். பக்தர்கள் அதனை உண்பர். இவ்வாறு உண்ணப் படும் கவளம் எல்லா நோய்களையும் தீர்ப்பதாகவும், குழந்தைப் பேறில்லாதவர்களுக்கு அப்பேற்றினைத் தருவதாகவும் நம்பப் படுகிறது. கவளம் மட்டுமேயன்றிச் சிலர் தாசரிகள் வாயில் வெற்றிலை பாக்கினை இடுவர். அவர்கள் அதனை மென்று அதன்பின் பக்தர்கள் வாயில் துப்புவர். இரவு நேரங்களில் தாசரிகள் பழந்துணிகளால் கட்டப்பட்ட பந்தத்தை ஏந்தித் திரிவர். பக்தர்கள் அத்தீப்பந்தத்திற்கு நெய் வார்ப்பர். பல ஆண்டுகளுக்கு முன்பு பிள்ளைப் பேறில்லாத பெண்கள் இக் கோயிலுக்கு வருவதாக நேர்ந்து கொண்டு திருவிழாவின்போது கோயிலுக்கு வந்து கவளம் தந்தபின் தாசரிகளோடு உடல் உறவு கொள்வது வழக்கம் எனக் கூறப்பட்டது. கோயில் அதிகாரிகள் இது மாதிரி வழக்கம் இருந்ததாகத் தங்களுக்குத் தெரியாதெனக் கூறுகின்றனர்.

பழனியில் உள்ள சுப்ரமணியசுவாமி கோயிலுக்குச் செல்லும் பக்தர்களில் சிலர், தங்கள் கன்னங்களில் வாய்வழியே ஊடுருவிச் செல்லும் வெள்ளியாலான கரண்டி போன்ற சிறு வேலினைக் குத்திக் கொள்வர். வெள்ளி அம்பினைச் சிலர் நாக்கினை வெளியே நீட்டியபின் செங்குத்தாக அதில் குத்திக் கொள்வர் சிலர் இரு உதடுகளையும் இணைத்து வெள்ளித் தகட்டினைப் பூட்டுப் போல வாயின் முன் இணைத்துக் கொள்வர். சில தாசரிகள் இது போலக் குத்திக் கொள்வதற்காகத் தங்கள் கன்னங்களில் நிலையான துளைகளை உடையவர்களாக இருப்பர். தாங்கள் இரக்கும் தொழிலை மேற்கொண்டு அலைந்து திரியும்போது அத்துளைகளில் கரண்டி அமைப்பிலான வேலினைச் சொருகிக் கொள்வர்.

விசாகப்பட்டினம் மாவட்டத்தைச் சேர்ந்த தாசரிகள் பற்றிய பின்வரும் குறிப்புக்களுக்கு நான் திரு சி. ஹயவதன ராவிற்குக் கடப்பாடுடையேன். தாசரிகள் சாதி, அகமணக்கட்டுப்

பாடுடைய ஒரு குழுவாகும். அதன் உறுப்பினர்கள் தங்களைச் சங்கு தாசரிகள் என அழைத்துக் கொள்வதோடு புறமணக் கட்டுப்பாடு உடைய பல குலங்களாகவும் பிரிவு பட்டுள்ளனர். இவர்கள் தாய் மாமன் மகளைத் திருமணம் செய்து கொள்ளும் மேநகரிகத்தைப் பின்பற்றுபவர்கள். கைம்பெண்களின் மறு மணத்தை இவர்கள் அனுமதித்தாலும் மணமுறிவினை இவர்கள் அனுமதிப்பதில்லை. இறந்தவர்களை எரிக்கும் இவர்கள் சின்ன ரோசு, பெத்தரோசு எனும் சாவுச் சடங்குகளைச் செய் கின்றனர். இத்தாசரிகள் தென்கலை வைணவத்தைப் பின்பற்று வதோடு சங்கு சக்கர முத்திரையும் இட்டுக் கொள்வர். தென் மாவட்டங்களைச் சார்ந்த தாசரிகளைப் போல இச் சாதியார் மிகுந்த சமய ஈடுபாடு கொண்டவர்களாக இல்லை. வட ஆர்க்காடு அல்லது அனந்தப்பூர் மாவட்டத்தைச் சேர்ந்த தாசரிகளைப் போலச் சங்கு, சேகண்டி, விளக்கு, செம்புப் பாத்திரம், கழுத்தில் அனுமன் உருவம் ஆகியவற்றைத் தாங்கிய தாசரிகளை இப்பகுதிகளில் காண்பது அருமை. விசாகப் பட்டினத்தைச் சேர்ந்த தாசரிகள் அப்பகுதியைச் சேர்ந்த வீரர் களையும் வீராங்கனைகளையும் பற்றிய கதைப் பாடல்களைப் பாடுவதில் புகழ் பெற்றவர்கள். இவர்கள் பாடும் கதைப் பாடல்களுள் புகழ் பெற்றவை வருமாறு:-

1. 1757-இல் புஸ்ஸி பொப்பிலிக் கோட்டையை முற்றுகை யிட்டுக் கைப்பற்றிய வரலாற்றை விளக்கும் பொப்பிலிப்பாட்டு.

2. பால்கொண்டா வட்டத்தைச் சேர்ந்தவன் அம்மி நாயுடு. ஊர்த் தலைவனான இவன் பெரும் கொடுமைக்காரன். இவன் மக்களுக்கு இழைத்த கொடுமைகளையும் அதனால் மக்கள் பட்ட அல்லல்களையும் இறுதியில், இவன், ஊரைச் சேர்ந்த ஒருவனாலேயே இவன் கொல்லப்பட்டதையும் விளக்குவது அம்மி நாயுடு பாட்டு.

3. தன் சாதியில் உள்ள மேநரிக மணமுறைக்கு எதிராகப் போராடிய வெலம சாதிப் பெண் லட்சமம்மா. இவள் இவளு டைய கணவனாலேயே கொல்லப்பட்டாள். இவள் வாழ்வையும் சாவையும் விவரிப்பது லட்சமம்மா பாட்டு.

4. தன் கணவனோடு உடன்கட்டை ஏறிய யெருக்கம்மாவின் கதையைக் கூறுவது யெருக்கம்மா பேரிண்டாளன் பாட்டு.

விசாகப்பட்டினம் மாவட்டத்திலுள்ள சிறுகவரம்புக் கோட்டையைச் சேர்ந்த உள்ளூர்த் தேவதையாகப் போற்றப்படுபவள் யெருக்கம்மா. இவளைப் பற்றிய கதைப் பாடல் இவள் தாசரிப் பெற்றோர்களுக்குப் பிறந்தவள் எனக் கூறுகின்றது. இவள் பிறப்பைப் பற்றி யெருகல சாதியைச் சேர்ந்த பெண் ஒருத்தி முன் கூட்டியே ஆருடம் கூறியதோடு இவளுக்கு வருவதறியும் ஆற்றலும் அமையும் எனக் கூறினாள். (யெருக்கல சாதிப் பெண் இவளைப் பற்றிக் கூறியதால் இவளுக்கு யெருக்கம்மா எனப் பெயர் வைத்தனர்.) திருமணம் செய்து கொண்டபின் ஒரு நாள் இவள் தன் கணவனை வயலுக்குப் போக வேண்டாம் எனவும், அவன் அவ்வாறு சென்றால் புலியால் கொல்லப்படுவது உறுதி எனவும் கூறித் தடுத்தாள். அவள் தடுத்ததைக் கேளாது சென்ற அவளுடைய கணவன் புலியால் அடித்துக் கொல்லப்பட்டான். கணவன் கொல்லப்பட்ட அந்த இடத்தில் அவள் தீப்பாய்ந்து உயிர் துறந்தாள். அங்கு இவளுக்காக அமைக்கப்பட்ட கோயில் இன்றும் உள்ளது. ஆண்டுதோறும் சிவராத்திரியின்போது அங்கு விழா நடைபெறுகிறது.

கதைப்பாட்டுப் பாடும் தாசரிகள் பொதுவாக இருவர் ஒன்றாகச் சேர்ந்தே வீடு வீடாகவோ, வாரச் சந்தைகளிலோ இரந்தபடி செல்வர். ஒருவன் கதையினைப் பாட மற்றவன் இசையினை இசைப்பதோடு ஒத்துப்பாடுவான்.

இத்தாசரிகள் அண்ணா, அய்யா என்ற பட்டப்பெயர்களைச் சூடிக் கொள்வர்.

தாசரி என்பது குறவர், மாலர், யெருக்கலர் சாதிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலப்பெயருமாகும்.

**தாசி – Dāsi (servant)**

நம்பூத்ரிப் பிராமணப் பெண்ணின், பிராமணர் அல்லாத பணிப் பெண்ணுக்கு உரிய பெயர். இதனைத் தேவதாசி என்ற வேறு பொருள்படும் பெயரோடு குழப்பிக் கொள்ளுதல் கூடாது.

**தாயரே – Dayare (Muhammadan)**

தாயரே, தய்யர, மாகதேவ் முகமதியர் என்ற பெயர்களால் வழங்கப்படும் இவர்கள் மைசூர் மாநிலத்தில் பெங்களூர், மைசூர் மாவட்டங்களில் காணப்படுகின்றனர். இவர்களைப் பற்றி மைசூர் மாவட்ட விவரக் குறிப்புக் கூறுவது வருமாறு:- "இவர்கள் முகமதியர்களின் பொது அமைப்பிலிருந்து, இமாம் மகதியின் அவதாரம் குறித்த நம்பிக்கையில் மட்டும் மாறுபட்ட வர்களாக உள்ளனர். தாயரேக்கள் இமாம் மகதி இம்மண்ணுல கில் அவதரித்துத் திரும்பி விட்டார் என நம்புகின்றனர். சமய நெறிப்பட்ட பிற முகமதியர்கள் இமாம்மகதி இன்னமும் அவதாரம் செய்யவில்லை என்றும், அவ்வாறு அவர் தோன்றுவது இந்த உலகின் அழிவிற்கு அறிகுறி என்றும் நம்புகின்றனர். பிரிவு பட்டுச் சென்றவர்களான இவர்கள் தோற்றம் பற்றிப் பின்வரும் வரலாறு கூறப்படுகிறது. நானூறு ஆண்டுகளுக்கு முன் குசராத் தில் சையத்பிரிவினைச் சேர்ந்த முகமதியர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அதற்குச் சையத் அகமது எனப் பெயரிட்டனர். தன் கல்வித் தகுதி காரணமாகப் பின்னர் ஆலம் என்ற பட்டத்தையும் பெற்றுச் சிறப்புற்றான் அவன். சையத் அகமது தன்னை முகமதுவுக்குச் சமமானவன் எனவும் இறைவனின் தூதுவர்களான பைகம்பரர் அனைவரிலும் தான் மேற்பட்ட வன் எனவும் அறிவித்துக் கொண்டான். அவன் சொல்வதை நம்பும் சிலரைத் தன்னோடு திரட்டிக் கொள்வதில் வெற்றி பெற்ற அவன், அவர்களோடு நிசாம் எல்லையில் உள்ள ஜீவனம்பூர் சென்று, அங்கு இமார் மகதி எனப் பெயர் வைத் துக் கொண்டான். அங்கிருந்து சில சீடர்களோடு மெக்கா சென்ற அவன் மெதினா செல்லாமலேயே சிறிது காலம் சென்று ஐதராபாத்துக்குத் திரும்பி வந்தான். தொடர்ந்து இமாம் மகதி என்ற பெயரையே அவன் வைத்துக் கொண்டிருந்தான். பெருவாரியான முகமதியப் பொதுமக்களால் இவனது இந்தத் தற்பெருமைபாராட்டலைப் பொறுத்துக்கொள்ள இயலாததால் சையது அகமதுவும், அவனைப் பின்பற்றுபவர்களும் சமயக் கருத்து வேறுபாடு காரணமாக நன்றாக அடி உதை தரப் பட்டு ஐதராபாத்தை விட்டு விரட்டப்பட, அங்கிருந்து பெங்களூர் மாவட்டத்தில் உள்ள சென்னபட்டணத்தில் வந்து

குடியேறினர். இவ்வாறு குடியேறியவர்களுடைய வழித் தோன்றியவர்கள், சையத் அகமதுதான் குரானில் கூறப் பட்டுள்ள நபிகள் நாயகம் இமாம் மகதி என நம்புகின்றனர். இவர்கள் தங்களுக்கெனத் தனியே உள்ள மசூதிகளிலேயே வழிபாடு நடத்துகின்றனர். மற்ற முகமதியர்களோடு இவர்கள் மண உறவு வைத்துக் கொள்வதில்லை. வணிக முயற்சியில் சிறந்தவர்களான இவர்கள் மேற்குக் கடற்கரைப் பகுதியோடு சுறுசுறுப்பாகப் பட்டு வணிகம் செய்து வருகின்றனர்." இவர் களில் பெரும்பாலோர் மல்பெரி பட்டுப் புழுக்கள் வளர்ப்புத் தீவிரமாக நடைபெறும் சென்னபட்டணம் பகுதியில் வாழ்ந்து வருகின்றனர்.

வயதான இந்துக்கள் தாயரே முகமதியர்களாக மதம் மாறும்போது போலியானதொரு சுன்னத்துச் சடங்கு, வழக்க மான சுன்னத்துச் சடங்குக்குப் பதிலாக நடத்தப்படுகிறது. வெற்றிலை இலைத் துண்டு ஒன்று, ஆண் குறியைச் சுற்றி வெளியே நீட்டிக் கொண்டிருக்குமாறு கட்டப்பட்டு அதன் முனை நுதித் தோலுக்குப் பதிலாக வெட்டப்படும்.

தென்னிந்தியாவைச் சேர்ந்த மற்ற முகமதியர்களைப் போலவே தாயரேக்களும் நீண்ட மண்டையோட்டை உடைய வர்களாக உள்ளனர். மிகுதியான மண்டையோட்டு விகித அளவை உடைய இப் பிரிவினர் எண்ணிக்கை சற்றே அதிக மாக இருப்பது செங்குத்தான மண்டையோடு அல்லது குறுகிய மண்டையோட்டினை உடைய கன்னடிய வகுப்பார் இப்பிரிவில் மிகுதியாக மதம் மாறியதைத் தெளிவுபடுத்துவதாகும்.

| சாதிப்பிரிவு | வாழ்விடம் | சோதனைக்கு ஆட்பட்டோர் எண்ணிக்கை | 80க்குமேல் தலையின் விகித அளவு பெற்றவர்கள் எண்ணிக்கை |
|---|---|---|---|
| மாப்பிள்ளா | மலபார் | 40 | 0 |
| சையத் | சென்னை | 40 | 2 |
| பட்டாணியர் | ,, | 40 | 2 |
| ஷேக் | ,, | 40 | 2 |
| தாயரே | மைசூர் | 40 | 8 |

**தய்யாளகுலம் – Dayyālakulam (Devils family)**

கணக்கெடுப்பின் போது கோல்லர்களின் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளனர். இவர்கள் மற்போர், கழைக்கூத்து ஆகியன செய்பவர்கள்.

**தெதிங்கி - Dedingi**

பொரொசர் சாதியின் ஓர் உட்பிரிவினராகப் பதியப்பட்டுள்ளனர்.

**தேர - Dēra**

தேரர், தேரெந்தரர், தேவரர் ஆகியன தேவாங்கருக்கு உரிய வேறு பெயர்கள்.

**தேசர் – Dēsa**

பலிசர்களின் ஓர் உட்பிரிவு. தேசாதிபதி ஒரு நாட்டை ஆள்பவரைக் குறிக்கும். தங்களைப் பலிசர் எனக் கூறிக் கொள்ளும் சணப்பர் சிலர் இப் பெயரைச் சூடிக் கொள்வர்.

**தேசாயி - Dēsāyi**

தேசாயிகளின் சமூக அமைப்புப் பற்றிய பின்வரும் முழுமையான விவரங்களுக்கு நான் திரு எஸ். எம். நடேச சாஸ்திரிக்குக் கடப்பாடுடையேன்.* "தேசாயி என்ற சொல் நாட்டைச் சேர்ந்தவன் எனப் பொருள்படும். வட ஆர்க்காடு மாவட்டத்தில் ஒவ்வொரு வட்டத்திலும் தேசாயி செட்டி என அழைக்கப்படும் சாதித் தலைவன் உள்ளான். இவன் அமைதி ஏற்படுத்தும் நடுவருக்கு ஒருவகையில் ஒப்பானவன் எனலாம். இவர்கள் கவரை அல்லது பலிசர் சாதியைச் சேர்ந்தவர்கள். கவரைகளிடையே பொதுவாகச் செல்வத்தைக் காப்பவன் என்ற பொருளில் வழங்கும் தனபாலன் என்பதே இவர்கள் குடும்பப் பெயராகும். தனபால தேசாயி செட்டி பதினெட்டுச் சாதிகளுக்குத் தலைவனாவான். கவரை, உப்பார், லம்பாடி, ஜோகி, ஈதிகர், பறையன்

* சென்னை மெயில் நாளிதழ், 1901. (Madras Mail, 1901.)

முதலியன அச்சாதிகள். வலங்கைப் பிரிவினைச் சேர்ந்த அனைத்துச் சாதியினரும் இவனது உரிமை எல்லைக்கு உட்பட்டவர்கள். தன் சாதியைச் சேர்ந்த இரண்டு பணியாளர்களையும், ஒரு கொம்பு ஊதும் குற்றேவலனையும் தன் கீழ் பணியில் இவன் வைத்திருப்பான். தேசாயி சுற்றுப் பயணம் மேற்கொள்ளும் போது கொம்பு ஊதுபவன் முன்னால் கொம்பு ஊதியபடி செல்வான். இவன் ஆளுகைக்கு உட்பட்ட ஊர்களில் ஒரு ஆணோ பெண்ணோ ஒழுக்கம் தவறி நடந்தால் அவ்வூர்ப் பறையன் வாயிலாக அது பற்றிய தகவல் தேசாயிக்குத் தெரிவிக்கப்படும். தன் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட ஒவ்வொரு ஊரிலும் இவன் தன் சார்பில் முகவர்களை வைத்திருப்பான். தகவல் கிடைக்கப் பெற்றதும் தன் ஆட்சி உரிமைச் சின்னங்கள் அனைத்தையும் உடன் எடுத்துக் கொண்டு அந்த ஊருக்குப் பயணம் மேற்கொள்வான். உள்ளே மெத்தை வைத்துத் தைக்கப்பட்டு தலையணைகள் இடப்பட்ட மாட்டு வண்டியிலேயே இவன் பயணம் நடைபெறும். பம்பை ஊதும் பறையன் தன் தோளில் எப்பொழுதும் தொங்கியபடி இருக்கும் பம்பையினை ஊதியபடி தேசாயி பயணம் செய்யும் வண்டிக்கு முன் ஓடுவான். ஓர் ஊருக்கு இவன் வந்து சேர்ந்ததும் பம்பை முழக்கி இவன் வருகை ஊராருக்கு அறிவிக்கப்படும். இவன் ஒரு ஊரில் தங்கி இருக்கும் சமயம், அந்த ஊரைச் சுற்றியுள்ள பகுதிகளில் வாழும், இவனைச் சாதித் தலைவனாக ஏற்றுக் கொண்டுள்ளவர்கள் இவனிடம் தங்கள் குறைகளை வந்து கூறிக் கொள்வர். முதலில் தேசாயியின் தனிப்பட்ட தேவைகள் நன்கு பேணப்படும். யார் தொடர்பாக இவன் அங்கு வந்துள்ளானோ, அவர்கள் தேசாயிக்கு வேண்டிய உணவுப் பொருட்களைத் தாராளமாகவே வழங்குவர். கிண்ண வடிவிலான பெரியதொரு கரண்டியே தேசாயியின் விருதுச் சின்னம். அதன் வெளிப் பக்கத்தில் விளிம்பு ஓரங்கள் முழுதும் தேசாயியின் ஆளுகைக்கு உட்பட்ட பதினெட்டுச் சாதிகளைச் சேர்ந்தவர்களின் மாதிரி உருவங்கள் செதுக்கப் பட்டிருப்பதோடு, ஒவ்வொரு உருவத்தின் கீழும் தமிழில் அந்த உருவம் எந்தச் சாதியைக் குறிப்பது என்பதும் பொறிக்கப்பட்டிருக்கும், அந்த உருவம்

சந்தனம். குங்குமம் பூசப்பட்டு மலர்களால் அலங்கரிக்கப் பட்டிருக்கக் காணலாம். குற்றேவலன் அந்தக் கரண்டியை எடுத்து அதனோடு சங்கிலியால் இணைக்கப்பட்டிருக்கும் மணியை ஒலித்து வழக்குத்தொடர்பானவர்களை அழைப்பான். இந்த மணியோசைக் கேட்டவுடன் குற்றம் நிகழ்ந்துள்ள சாதியைச் சேர்ந்தவர்கள் தேசாயியின் முன் வந்து கூடுவர். அந்த ஊரிலிருக்கும் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் ஓர் உறுப்பினர் பங்கு பெறும் பஞ்சாயத்து அவையாக அது இருக்கும். தேசாயியின் விருதுச் சின்னத்தை அங்குக் கூடியுள்ள அவையினர் நடுவே வைத்தபின் வழக்குப் பற்றிக் கேட்டறியத் தொடங்குவர். ஒருவன் கூடா ஒழுக்கத்தில் ஈடுபட்டதாக வழக்குக் கொண்டு வரப்பட்டிருக்குமேல் குற்றவாளி அவையினர் முன் நிறுத்தப் படுவான். கூடியுள்ள அவையினர் அறிவுரைகளையும் கேட்டு, வழக்கு பற்றிய தன் முடிவினைத் தேசாயி வழக்கின் இயல்புக்கு ஏற்ப, ஒருவன் குற்றவாளியா இல்லையா எனத் தெரிவிப்பான். ஒருவன் குற்றவாளி என முடிவு அறிவிக்கப்படின் பஞ்சாயத்தார் அவனை அவனுடைய தகாத நடத்தையால் பாதிக்கப்பட்ட கணவனுக்கு அவன் தன் திருமணம் தொடர்பாகச் செய்த செலவுத் தொகையினைக் கொடுக்கும்படி கூறுவர். இதனோடும்கூட அவனுக்குப் பத்து முதல் இருபது ரூபாய் வரை அபராதமும் விதிக்கப்பட்டு அவ்விடத்திலேயே வசூலிக்கப்படும். இந்தத் தண்டத் தொகையில் நான்கு அணாவிற்கு மேற்படாத சிறு தொகையைப் பஞ்சாயத்தில் வந்து அமர்ந்திருப்பவர்களுக்குப் பிரித்துத் தந்த பின் எஞ்சியதைத் தேசாயி தன் பையில் போட்டுக் கொள்வான். குற்றம் புரிந்தவன் தண்டத் தொகையைச் செலுத்த மறுத்தால் அதே பஞ்சாயத்தார் மீண்டும் கூடி அவனைச் சாதி விலக்கம் செய்வர். முதலில் முரண்டு செய்த அந்தக் குற்றவாளி சாதி விலக்கத்தால் தனக்கு நேரப் போகும் துன்பங்களை நினைத்து அஞ்சி, விரைந்து வந்து தேசாயியின் காலில் விழுந்து தான் அவன் கட்டளைக்குப் பணிவதாகக் கூறுவான். மீண்டும் தேசாயி அவனோடு அவனுடைய ஊருக்கு வந்து பஞ்சாயத்தைக் கூட்டி அவர்கள் முன்னிலையில் தனது சாதி விலக்க ஆணையைத் திரும்பப் பெற்றுக் கொள்வான். இப்பொழுது சாதி விலக்கப் பெற்றவன் முதலில் விதிக்கப்பட்ட தண்டத் தொகை

யைப் போல் இரு மடங்கு செலுத்த வேண்டும். சாதி விலக்கத் தால் ஏற்படும் தீங்குகளை மக்கள் நன்கு உணர்ந்துள்ளமையால் ஒரு சிலரே தேசாயியின் தீர்ப்புக்கு எதிராக முரண்டு செய்வர். தான் நேரில் கேட்டுத் தீர்ப்பு வழங்கிய வழக்குகள் அனைத்தை யும் பற்றிய விவரங்களைத் தேசாயி முறையாகப் பதிந்து வைத் திருப்பான். நவாபுகள் ஆண்ட காலத்தில் நீதி மன்றங்களில் கூட இவ்வாறு தேசாயி செய்யும் முடிவுகள் ஏற்றுக் கொள்ளப் பட்டன. கிழக்கிந்தியக் கம்பெனியாரின் தொடக்க கால வழக்கு மன்றங்களிலும் தேசாயியின் முடிவுகளுக்கு மதிப்பு அளிக்கப் பட்டதாகக் கூறப்படுகிறது.

“பெரியதனக்காரன் என அழைக்கப்படும் தேசாயியின் ஊர் முகவனுக்குப் பதினெட்டுச் சாதிகளையும் சேர்ந்த ஒவ்வொரு வீட்டாரும் தங்கள் குடும்பத்தில் திருமணம் நடைபெறும் சமயம் ஒரு பகோடா (ரூ. 3-8-0) வுடன் அரிசி, பருப்பு முதலிய பிற உணவுப் பண்டங்களைக் கொடுக்க வேண்டும். இவன் தேசாயிக்குப் பணத்தை மட்டும் அனுப்பிவிட்டுக் கெட்டுப் போகக் கூடிய பண்டங்களைத் தானே பயன்படுத்திக் கொள் வான். இப்படியாகத் தன் தலைமையின் கீழ் உள்ள பகுதிகளில் நடைபெறும் ஒவ்வொரு திருமணத்திற்கும் தேசாயி ஒரு பகோடா பெறுகின்றான். அண்மையில் பழைய தேசாயிகளிடமிருந்து சாதித் தலைமை உரிமையை விலை கொடுத்து வாங்கிய புதிய தேசாயிகள், திருமணங்களுக்கு ஒரு பகோடாவிற்குப் பதிலாக இரண்டரை அணா மட்டுமே தீர்வை விதிக்கின்றனர். ஒரு ஊரில் நிகழும் ஒவ்வொரு சாவின் போதும் தேசாயி வருமானம் பெறு கின்றான். சாவு நிகழ்ந்த வீட்டார் தங்கள் தகுதியைப் பொருத் துத் தேசாயிக்கு நான்கணாவோ அதற்கு மேற்பட்ட தொகையோ செலுத்துவதோடு, உணவுப் பண்டங்களையும் கொடுத்தல் வேண்டும். திருமணத்தின்போது போலவே உள்ளூர் முகவர் உணவுப் பொருட்களைத் தான் பயன்படுத்திக் கொண்டு பணத்தை மட்டும் தேசாயிக்கு அனுப்பி வைப்பான். உள்ளூர் முகவர் தன் ஊரில் நடைபெறும் எல்லா நிகழ்ச்சிகள் பற்றியும் பட்டியலிட்டு வைத்திருப்பான். தேசாயி பயணம் வரும்போது அப்பட்டியலை ஆராய்ந்து செலுத்தப்படாத தீர்வைகளைக்

கேட்டுப் பெறுவான். தேசாயின் வீட்டில் மண நிகழ்ச்சி நடக்கும் போதெல்லாம் அவன் மேற்பார்வையில் உள்ள ஊரார் அனைவரும் அவனுக்கு அரிசி, பருப்பு முதலிய பண்டங்களோடு அவர்களால் இயன்ற அளவு தொகையும் கொடுத்து உதவக் கடமைப்பட்டவர்கள். சிலபோது செல்வர்கள் தேசாயி வீட்டு மணத்தின்போது அவன் ஆடை அணிமணிகள் ஆகியன வாங்கிக்கொள்ள உதவியாகப் பெருந்தொகையினை அனுப்பி வைப்பர். ஒரு தேசாயி தன் மேற்பார்வையில் உள்ள ஊர்கள் அனைத்திலும் தனியே தான் தன் பணியைச் செய்து முடிப்பது இயலாததாக உள்ளது எனக் கருதினால் அவன் அதன் ஒரு பகுதியின் மேற்பார்வை உரிமையைச் சில நூறு அல்லது சில ஆயிரம் ரூபாய்களுக்கு அதன் எல்லை அளவிற்கு ஏற்ப விலை பேசி விற்றுவிடுவான். இந்த விற்பனை தொடர்பான பத்திரம் எழுதப்பட்டு அது பதிவும் செய்யப்படும்."

**தேசிகர் - Dēsikar**

பண்டாரங்களின் உட்பிரிவின் பெயராகவும், பட்டப் பெயராகவும் உள்ளது.

**தேசூர் - Dēsūr**

வாழும் இடத்தின் அடிப்படையிலான காபுகளின் உட்பிரிவு ஒன்றின் பெயர். தேசம், சூரம் என்ற சொற்கள் இணைந்து தேக வலிமை உடையவர்கள் என்ற பொருளில் அமைந்ததும் ஆகலாம்.

**தேவ - Dēva**

தேவ அல்லது தேவர என்பது தெய்வம் எனப் பொருள் படும். தேவாங்கர், காணிகர் அல்லது காந்தளர் சாதிகளுக்குரிய மற்றுமொரு பெயராக உள்ள இது மோகேர்களின் குலப் பெயராகவும் உள்ளது. விசாகப்பட்டினம் மாவட்டத்தில் எண்ணெய் ஆட்டி விற்கும் தேவ தெலிகுலகளிகளுக்குரிய பெயராகவும் உள்ளது. தேவர என்பது ஜங்கமர்களின் பட்டப்பெயராகவும் உள்ளது. 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில்

பாண்டிச்சேரியிலிருந்து வந்து கண்ணாடிப் பொருட்கள் விற்கும் தெலுங்கு வணிகர்களின் பெயராகவும் பதியப் பட்டுள்ளது. ஊர்த் தேவதைகளின் கோயில்களில் பூசாரிகளாக இருக்கும் உவச்சர்களின் பட்டப் பெயராகத் தேவர் என்பது உள்ளது. மறவர்களுக்கும் தேவன் அல்லது டேவன் என்பது பட்டப்பெயராகும். தென் கன்னடமாவட்டத்தில் கள் இறக்கும் ஹலபைக்கர் கடவுளின் குழந்தைகள் என்ற பொருளில் தேவரு மக்களு என வழங்கப்படுகின்றனர். தென் கன்னட மாவட்டக் கையேட்டில் இது தீவுகளிலிருந்து வந்தவர்கள் எனப் பொருள் படும் தீவரு மக்கள் என்பதின் திரிபாக வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. இவர்கள் முன்பு ஈழத்திலிருந்து வந்து குடியேறியவர்களின் வழித் தோன்றல்கள் என்பதனைச் சுட்ட இவ்வாறு அழைக்கப்பட்டவராதல் வேண்டும்.

## தேவதாசி - Dēva-dāsi

இந்துக்களின் தொன்மையான நூல்களில் தாசிகள் பின்வருமாறு ஏழு வகையாகப் பாகுபடுத்திக் கூறப்பட்டுள்ளனர். (1) தாதா - தன்னைத் தானே ஒரு கோயிலுக்கு அடிமைப் படுத்திக் கொள்பவள். (2) விக்ரித - ஒரு கோயிலுக்குத் தன்னைத் தானே விற்றுக் கொள்பவள். (3) பக்ரிட்ய - தன் குடும்ப நலங்கருதித் தன்னைத் தானே கோயிலுக்கு அடிமைப் படுத்திக் கொள்பவள். (4) பக்தா - பக்தி காரணமாக ஒரு கோயிலினைச் சென்று சேர்பவள். (5) கிரிட - ஏமாற்றி அழைத்துச் செல்லப்பட்டுக் கோயிலுக்கு உரிமையாக்கப்பட்டவள். (6) அலங்கார - தன் தொழிலில் நன்கு பயிற்சி பெற்ற ஒருத்தியை நன்கு அலங்கரித்து அரசர்களாலோ செல்வர்களாலோ கோயில்களுக்கு வழங்கப் பட்டவள். (7) ருத்ர கணிகை அல்லது கோபிகை - கோயிலிலிருந்து முறையாக ஊதியம் பெற்றுக்கொண்டு கோயிலில் ஆடிப் பாடுகின்றவள்.

தேவதாசிகளைப் பற்றிய பின்வரும் பொதுவான விவரங்களுக்கு நான் 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கைக்குக் கடப்பாடுடையேன்.

தாசிகள் அல்லது தேவதாசிகள் (தெய்வங்களின் அடிமைகள்) தமிழ் நாட்டுக் கோயில்களைச் சார்ந்த நாட்டியமாடும் மகளிர் ஆவர். இவர்கள் பாடி ஆடுவதோடு, 'உலகத்தில் மிகத் தொன்மையானதான தொழிலையும் செய்து வாழ்க்கை நடத்தி வருகின்றனர். இரு வேறு சாதிகளைச் சேர்ந்தவர்களிடையே ஏற்படும் முறையல்லாத உறவு வழிப் பிறந்தவர்களே முதலில் தாசிகளாக இருந்திருக்க வேண்டும். தற்போது பிற வகுப்பாரிடையே இருந்து பெண்களைத் தேர்ந்தெடுத்தும், விலைக்கு வாங்கியும் கூட இப்பிரிவில் சேர்த்துக் கொள்கின்றனர். இத் தொழிலில் ஈடுபடுபவர்களுக்கு முன்பு இருந்து வந்தது போன்ற சமூகச் சிறப்பு தற்போது இல்லை. முன்பு இவர்களுக்கு குறிப்பிடத்தக்க சமூகத் தகுதி இருந்தது. தேவதாசிகளின் தொழிலைத் திரும்பத் திரும்ப இந்து சாத்திரங்கள் வன்மையாகக் கண்டித்து வந்த போதிலும் இதனைச் சமய அமைப்புக்கள் ஒப்புதல் தந்து ஏற்றுச் கொண்டுள்ளதானது இந்து சமயத்தின் முரண்பாடான போக்குகள் பலவற்றுள் ஒன்றாக உள்ளது. கி. பி. ஒன்பது, பத்தாம் நூற்றாண்டுகளிலேயே இச் சாதி உயர்வு அடைந்ததோடு இதற்குரிய பெயரும் தகுதியுடைய மங்கல வழக்குச் சொல்லாக அமைந்தது எனலாம். இச் சமயத்தில் கோயில்கள் கட்டுவதிலும், கோயில் பணிகளை விரிவாக்கம் செய்வதிலும் செயல்பாடுகள் மிகுதியும் காணப்பட்டது. கோயில் உற்சவர்களுக்கு வெண்சாமரம் வீசுவதும், கும்பர்த்தி எனப்படும் புனித விளக்கை ஏந்திச் செல்வதும், தெய்வங்களின் ஊர்வலத்தில் முன்னால் பாடுவதும் ஆடுவதும் இன்று போலவே அன்றும் அவர்கள் பணிகளாக இருந்தன. ராசராசன் தஞ்சாவூரில் கட்டிய பெரியகோயிலில் கி. பி. 1004-இல் தளிச்சேரிப் பெண்டுகள் நானூறு பேர் இருந்தனர் எனவும், அவர்கள் கோயிலைச் சுற்றி அமைந்திருந்த நான்கு தெருக்களிலும் இலவசமாகத் தரப்பட்ட இல்லங்களில் வாழ்ந்து வந்ததோடு கோயிலுக்கு அறக்கட்டளையாக வழங்கப்பட்ட நிலங்களை வரியிலியாக அனுபவித்து வந்தனர் எனவும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.* பிற கோயில்களிலும் இதே போன்ற ஏற்பாடுகள்

* தென்னிந்தியக் கல்வெட்டுக்கள், தொகுதி — 2, பகுதி - 3, பக்கம் 259.

இருந்தன. சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் காஞ்சிவரத்தி லுள்ள கோயிலைச் சேர்ந்த நூறு நாட்டிய மகளிர் இருந்தனர். "இவர்கள் கோயிலில் உள்ள தெய்வங்களைச் சிறப்பிக்கவும், அத்தெய்வங்களை வந்து வழிபடுகின்றவர்களை மகிழ்விக்கவும் வைக்கப்பட்டிருந்தனர். இப் பெண்களுக்கும் இந்து சமய நெறியில் நம்பிக்கையில்லாத புற சமயிகளுக்கும் இடையே தொடர்பு ஏற்படுமாயின் அது பெரும் பரபரப்பை ஏற்படுத்தும் செய்தி ஆகிவிடும்" எனப் புச்சனன் கூறுகிறார்.* மதுரை, காஞ்சிவரம், தஞ்சாவூர் ஆகிய இடங்களில் இன்னமும் பெரிய கோயில்களில் அறக்கட்டளைகளிலிருந்து உதவித் தொகை பெறும் தேவதாசிகள் இருந்து வருகின்றனர். முன்காலத்தில் அத்தொழிலுக்குக் கோயில்களேயன்றி அரசும் ஒப்புதல் வழங்கி வந்துள்ளது. 15-ஆம் நூற்றாண்டில் விசய நகர அரசவையில் இருந்த துருக்கிய தூதுவரான அப்துல்ரசாக், தேவதாசிகள் அரசின் கட்டுப்பாட்டிலுள்ள அமைப்புக்களில் வாழ்ந்தனர் எனவும், இதனால் அரசுக்குக் கிடைக்கும் வருவாய் காவலர் களை வைத்துக் கொள்ள உதவியதாகவும் கூறியுள்ளார்.†

"தங்களுக்கெனத் தனியே சொத்துரிமைச் சட்டங்களையும், தங்கள் சாதிக்கென உரிய பழக்க வழக்கங்களையும், ஒழுக்க நடைமுறைகளையும், சாதிக்கான சட்டதிட்டங்கள் நன்கு பேணப்படுகின்றனவா என்பதனை மேற்பார்வையிடும் பஞ்சா யத்து அவைகளையும் கொண்டு, உலகில் வேறெங்கும் இதற்கு ஒப்புமை கூறத் தக்கது வேறு ஏதும் இல்லாத ஒரு சாதியாக இன்று தேவதாசிகள் சாதி விளங்குகின்றது. தேவதாசிச் சாதிக் குரியவர்களாக விடப்படும் நாட்டிய மகளிர் முறைப்படி ஒரு கோயிலில் வாளுக்கோ தெய்வத்திற்கோ திருமணம் செய்விக்கப் படுவர். அவள் கழுத்தில் அவள் சாதியைச் சேர்ந்தஆண்மகன் ஒருவன் தாலி கட்டுவான். மக்கள் கணக்கெடுப்பு அலுவலர் களுக்கு இத்தகைய பெண்களை உரிய கட்டத்தில் மணமான

---

* சென்னையிலிருந்து மைசூர், கன்னடம் மலபார் வழியாகப் பயணம், 1807. (Journey from Madras, through Mysore, Canara and Malabar, 1807.)

† எல்லியட், இந்திய வரலாறு. (Elliott History of India.)

வர்கள் என்று குறிப்பதா அல்லது மணம் ஆகாதவர் எனக் குறிப்பதா என்பது தீராத பிரச்சனையாக இருந்து வருகின்றது.

"இந்துக்களின் வழக்கத்திற்கு மாறாகத் தாசிகளின் மகனும் மகளும் அவள் சொத்தில் சம பங்கு பெறுகின்றனர். ஆண் பிள்ளைகளில் சிலர் சாதியோடேயே இருந்து, நாட்டியம் ஆடுப வர்களுக்கு உடன் பாடியும், பாடல் இசைப்பவர்களுக்குப் பக்க வாத்தியம் இசைத்தும் வாழ்க்கை நடத்துகின்றனர். சிறுமி களுக்கு ஆடலும் பாடலும் கற்றுத் தருவதோடு, சிறுவர்களுக்குப் பாட்டும் சொல்லி வைக்கின்றனர். இவர்கள் நட்டுவனார்கள் என அழைக்கப்படுகின்றனர். மற்றவர்கள் தங்கள் சாதியினைச் சேர்ந்த, தாசித் தொழிலில் இறங்கி வெற்றி பெற முடியாது என ஒதுங்கி விடும் பெண்களை மணந்து கொண்டு தங்கள் சமூ கத்தை விட்டு விலகிச் சென்று விடுகின்றனர். இவாகளில் சிலர் வேளாளர், கைகோளர் சாதிகளுக்குரிய பட்டப்பெயர்களான பிள்ளை, முதலி என்ற பட்டப்பெயர்களைத் தங்கள் பெயர்க ளோடு இணைத்துக் கொண்டு தங்களுக்குப் பிறப்பிலேயே அமைந்துவிட்ட இழுக்கினை ஒதுக்கி வாழ முற்படுகின்றனர். மேற்கூறிய வேளாளர், கைகோளர் சாதிகளிலிருந்துதான் பெரும்பாலும் தாசிகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மற்ற வர்கள் மேளக்காரன்கள் அல்லது இசையைத் தொழிலாகக் கொண்டவர்களோடு சேர்ந்து விடுகின்றனர். நாட்டிய மகளிரின் செல்வ வளம் மிகுந்த பிள்ளைகள், குடும்ப நெறிப்பட்ட வேறு சாதியைச் சார்ந்த பெற்றோருக்குப பிறந்த பெண்களை மணந்து கொண்ட நிகழ்ச்சிகள் சில உள. எனினும் அவை மிகச் சிலவே. இச்சாதியைச் சேர்ந்தவர்களின் பெண்கள் சாதித் தொழிலுக்கு உரியவர்களாக வளர்க்கப்படும்போது ஆடல், பாடல், ஆடைபுனை திறன், காதல் புரியும் பாங்கு ஆகியன கற்பிக்கப்படுகின்றனர். தங்கள் வலையில் விழும்படி ஆடவர் களை இவர்கள் கவர்ந்து இழுப்பதற்குக் காரணம் சமையல் கட்டிலும், குழந்தைகளைப் பேணுவதிலுமே தன் கருத்தையும் காலத்தையும் செலவிடும் இந்துக் குடும்பப் பெண்ணுக்கு மாறு பட்டவர்களாக இவர்கள் இவ்வாறு பயிற்சி பெற்றுத் தோற்றம், தருவதுதான் எனலாம். உலகத்திலேயே மிகப் பழமையான

இந்திய இசை மரபினைத் தற்போது பேணிக்காத்து வருபவர்கள் நாட்டிய மகளிரும் அவர்களோடு சாதித் தொடர்புடையவர்களான மேளக்காரர்களுமே ஆவர். இவர்களோடு கூட ஒரு சில பிராமணர்களும் அக்கலையைக் கற்று வருகின்றனர். ஊர்ப் புறத்தைச் சேர்ந்த அம்பட்டர்களின் இசைக்குழு சங்கீதத்தை விடத் சப்தத்தையே அதிகம் வெளிப்படுத்தக் காணலாம். இதற்கு விதிவிலக்காகக் குறிப்பிடத்தக்க வகையில் விளங்குபவர்கள் சென்னையில் உள்ள குழுவினர். இக்குழுவினர் சால் (Saul) எழுதிய இறுதி ஊர்வல இசையினைப் பறையர் சேரிகளில் இசைக்க முயன்றதாகத் தெரிய வருகின்றது.

"தாசிகளிடையே வலங்கை, இடங்கை என்ற இரு பிரிவுகள் உள்ளன. இந்த இரண்டு பிரிவினருக்கும் இடையே உள்ள முக்கிய வேறுபாடு வலங்கைப் பிரிவினர் கம்மாளர்களுடனோ வேறு இடங்கைச் சாதியினருடனோ எத்தகைய உறவும் வைத்துக் கொள்ளாதிருப்பதோடு, அவர்கள் வீட்டு நிகழ்ச்சிகளில் ஆடவோ, பாடவோ ஒப்புக் கொள்ளாமலும் இருப்பதுதான். இடங்கைப் பிரிவினர் இத்தகைய வேறுபாடு எதனையும் பாராட்டுவதில்லை. இதனால் இவர்கள் சிலபோது கம்மாள தாசிகள் எனவும் அழைக்கப்படுகின்றனர். எனினும் இந்த இரு பிரிவினருமே தாழ்ந்த சாதியைச் சேர்ந்த ஆண்களோடு தொடர்பு கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. இந்த ஒழுக்க நெறியினை மீறி நடப்பவர்களைச் சாதிப் பஞ்சாயத்தார் விசாரித்துச் சாதி விலக்கம் செய்கின்றனர்.

"தெலுங்கு பேசப்படும் மாவட்டங்களில் நாட்டிய மகளிர் போகங்கள், சானிகள் என அழைக்கப்படுகின்றனர். தாசிகளைப் போலவே இவர்களும் தெய்வங்களுக்கு உரிமையாக்கப் பட்டவர்களே. ஆனால் மாநிலத்தின் வட பகுதியில், தெற்கே உள்ள கோயில்களைச் சார்ந்து தாசிகள் இருப்பதைப் போல, ஒரே ஒரு கோயிலில் மட்டுமே தாசிகள் இருக்கக் காண்கிறோம். விசாகப்பட்டினத்திலுள்ள ஸ்ரீ கூர்மம் கோயிலே இவ்வாறு விதி விலக்காத் தாசிகளைப் பெற்றுள்ளது. இக் கோயிலைச் சேர்ந்த தாசிகள் கூர்மபுகள் எனப்படுவர். விசாகப்பட்டினத்துப் போகங்களும், சானிகளும் நாகவாசுலு மற்றும் பள்ளிச் சாதி

யைச் சேர்ந்தவர்கள். இவர்களுக்குப் பிறக்கும் ஆண் பிள்ளைகள் தங்களை நாகவாசுலுக்கள் என அழைத்துக் கொள்கின்றனர். நெல்லூர், கர்நூல், பெல்லாரி மாவட்டங்களைச் சேர்ந்தவர்கள் பலிசர், யெருக்கலர் சாதிகளைச் சேர்ந்தவர்களாகவே உள்ளனர். நெல்லூரில் உள்ள போகங்கள் கோமட்டிகளின் வீட்டில் வந்து பாட உடன்படுவதில்லை. சானிகள் பிரிவைச் சேர்ந்த ஆண்கள் அவர்கள் இல்லப் பெண்கள் ஆடும், பாடும் நிகழ்ச்சிகளுக்குப் போகம் தாசிப் பிரிவினைச் சேர்ந்த ஆண்களைப் போலப் பக்க வாத்தியங்கள் வாசிக்கச் செல்வதில்லை.

"ஒரிய பகுதியில் நாட்டிய மகளிர் குனி என அழைக்கப் படுகின்றனர். அங்கு அவர்கள் கோயில்களோடு போகங்கள், சானிகளை விடவும் குறைந்த அளவு தொடர்பே கொண்டுள்ளனர். இவர்கள் தெய்வங்களுக்கு என மணம் செய்விக்கப்படுவது கூட இல்லை.

"கன்னடம் பேசப்படுகின்ற பெல்லாரி மாவட்டத்தின் மேற்குப் பகுதி வட்டங்களிலும், அதனை அடுத்துள்ள தார்வார் மற்றும் மைசூரிலும் போயர்களிடையேயும், பேடர்களிடையேயும், மற்றும் வேறு சில சாதிகளிடையேயும் தனித்தன்மையான தான ஒரு பழக்கம் நிலவுகின்றது. அதன்படி ஆண் பிள்ளைகள் இல்லாத குடும்பத்தினர் தங்கள் பெண் குழந்தைகளுள் ஒருத்தியைப் பசவியாக ஆக்கிவிட்டுவிட வேண்டும். அவ்வாறு பசவியாக விடப்படும் பெண் கோயிலுக்கு அழைத்துச் செல்லப் பட்டுக் கழுத்தில் தாலியும், கால் விரலில் மெட்டியும் அணிவிக்கப்பட்டுத் தெய்வத்திற்கு மணம் முடிக்கப்படுவாள். அதன் பின் அவள் பொதுமகளாகக் கருதப்படுவாள். எனினும் அவள் தன்னைவிடச் சாதியில் தாழ்ந்த ஆண்களோடு உறவு கொள்வதில்லை. பொதுமகளாக இருக்கும் காரணத்தால் இவளை யாரும் வெறுத்து ஒதுக்குவதில்லை. மாறாக மண நிகழ்ச்சிகளின்போது தாலியைத் தயாரிக்கும் பணியை இவர்களே மேற்கொள்கின்றனர் (இவள் என்றும் சுமங்கலியாக இருப்பது தான் இதற்குக் காரணம் போலும்.) இந்துச் சட்டங்களுக்குப் புறம்பாக இவள் ஒரு ஆண் மகனைப் போலப் பாவிக்கப்பட்டு குடும்பச் சொத்தில் ஒரு பங்கினைப் பெறுகின்றாள். ஆனால்

இவளுடைய இந்த உரிமையைக் குற்றவியல் சாராத வழக்கு மன்றங்கள் இன்னமும் உறுதிப் படுத்தவில்லை. இவளுக்கு ஆண் பிள்ளை பிறந்தால், அவன் இவளுடைய தந்தையின் சாதிப் பெயரை வைத்துக் கொள்கின்றான். பெண் பிறந்தால் அவள் இவளைப் போலவே பசவி ஆகின்றாள். பசவிகளின் குழந்தைகள் எத்தகைய கட்டுப்பாடுமின்றித் தங்களுக்குள்ளா கவே மண உறவு கொள்கின்றனர்.

"மலபாரில் முறையாக நாட்டியம் ஆடும் தொழிலை மேற் கொண்டுள்ள மகளிர் இல்லை. மாநிலத்தில் முகமதியர் களிடையேயும் இப்பிரிவினர் காணப்படவில்லை."

"சமயத்தின் ஒப்புதல் பெற்றவர்களாகத் தாசிகள் மிகுதி யான பொருள் ஈட்டுகின்றனர். அரசவைத் தாசிகள் சிலர் மிகுந்த செல்வம் குவித்துள்ளனர் என்பது அனைவரும் அறிந்ததே. தாங்கள் தகாத வகையில் பொருள் சேர்த்தாலும் அதனைக் கொண்டு மக்களுக்குப் பயன்படும் அறச் செயல் களைச் செய்வது முறையற்றது என இவர்கள் கருதவில்லை. இங்கும் அங்குமாகக் காணப்படும் பாலங்களும், பொதுப் பணிக்குப் பயன்படும் கட்டிடங்களும் ஒழுக்க நெறிப்படாத இந்தச் சகோதரிகளின் தாராள மனப்பான்மை காரணமாக எழுந்தவையே" என மொனியெர் வில்லியம்ஸ் குறித்துள்ளார். * மைசூரில் சென்னராயபட்டணத்தில் உள்ள பெரிய ஏரி இரண்டு நாட்டிய மகளிரின் அறக்கொடையால் கட்டப் பட்டதாகும்.

1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் கிழக்குக் கடற்கரைப் பகுதியைச் சேர்ந்த தாசிகள் ஒரு வடமொழிக் கவிஞரின் கூற்றுப்படி தங்கப் பழங்கள் காய்க்கும் நடக்கும் ஊன்பொதி மரங்களாவர் என உவமித்துக் கூறப்பட்டுள் ளனர். இந்தியப் பெண்கள் அனைவருள்ளும் விலைமகளி ரான இவர்களே மிகப் பாங்காக உடை அணிபவர்கள்.

---

* பிராமணீயமும் இந்து சமயமும். (Brahmanism and Hinduism.)

பெண்கள் தங்கள் அழகைப் புறத்தே புலனாகுமாறு காட்டுவது புலன் உணர்ச்சிகளை மழுங்கச் செய்யும் என்பதனையும் கண்ணைவிடக் கற்பனையே உணர்ச்சிகளைத் தூண்டும் ஆற்றல் மிக்கது என்பதனையும் இவர்கள் தங்கள் அனுபவத்தால் அறிந் துள்ளதால் உடலழகை மறைத்து வைத்துஆடை புனைகின்றனர் எனக் கூர்ந்து நோக்கும் இயல்பினரான அப்பெ துபைஸ் கூறுகிறார்.

மதுரைக்கு வைசராய் வருகை தந்தபோது நாட்டிய மகளி ரின் ஆடை முன்புறம் பாவாடை போலத் தொங்கியதாகவும், பின்புறம் கால்சட்டை போலவே காட்சி தந்ததாகவும் லார்டு டுஃபெரின் குறித்துள்ளார்.

திருநெல்வேலியில் பெண்கள் காதின் புற மடலைத் தொங் கும்படியாக விடும் பழக்கம் பற்றி மறைத்திரு எ. மார்கோச் சிஸ், நீண்டு தொங்கும் காதுகளை உடையவர்களாக இருப் பது ஒருகாலத்தில் நாகரிகமாகவும், மதிப்புக்கு உரியதாகவும் கருதப்பட்டது. சில ஆண்டுகளுககு முன்பு வரை கூட ஒரு பெண்ணின் காது நீண்டு தொங்கவில்லையானால் அவளைப் பார்த்துத் தேவதாசியா எனக் கேட்பர். ஏனென்றால் அந்தப் பிரிவினரே காதுகளை நீளவிடாமல் அவற்றின் இயற்கைப் போக்கில் வைத்திருப்பர். இப்பொழுது எங்கும் அப்பழக்கம் மாறி வருகின்றது. நாட்டிய மகளிர் கூடத் தங்கள் காதுகளின் புறமடலை நீளும்படி செய்து கொள்கின்றனர் என எழுதியுள் ளார். "இந்துக்களுள் நாட்டிய மகளிர் பலவகைத் திறமைகளும் கைவரப் பெற்ற பெண்களாக விளங்குகின்றனர். படிக்கவும், எழுதவும், பாடவும், விளையாடவும், நாட்டியம் ஆடவும் அவர் களுக்குத் தெரியும். ஆகவேதான் பெண்களைப் படிக்க வைக்கும் படியாக வற்புறுத்தும்போது அதற்கு எதிர்ப்புக் கூறும் பெற்றோர்கள், 'எங்கள் பெண்களை நாட்டிய மகளிராக்க நாங்கள் விரும்பவில்லை' எனக் கூறுகின்றனர்'' என மறைத் திரு எம். பிலிப்ஸ் எழுதியுள்ளார்.*

1791-இல் கருநாடக நவாப் சென்னை மாநிலக் கவர்ன ரோடு விருந்துண்டார் எனவும், விருந்துக்குப் பின் அவர்கள்

* இந்து சமயத்தின் உருவாக்கம், 1903. (Evolution of Hinduism, 1903.)

மனம் மகிழ நாட்டிய மகளிரின் ஆட்டம் நிகழ்ந்ததென்றும் நவாபிற்குக் கிளர்ச்சியூட்டும் பானங்கள், பிரெஞ்சு பிராந்தி, சித்திரப்பின்னல் வேலைப்பாடு செய்யப்பட்ட சீனப் பஞ்சு பொதிந்த போர்வை ஆகியன பரிசளிக்கப்பட்டதென்றும் பதிவுகளில் காணப்படுகிறது.* அண்மையில் கவர்னர், கீழை நாடுகளில் ஒருவருக்கு மரியாதை காட்டும் வகையில் பின்புறத்தைக் காட்டாமல் அருகில் வருவதும் விலகிச் செல்வதுமான வழக்கம் உண்டு என்பதனை அறியாமல், தனக்கு முதுகுப்புறத்தைக் காட்டியபடி வந்த நாட்டிய மங்கை தன் மடியில் உட்கார வருகிறாள் என அஞ்சினார் என்ற செய்தி எங்கும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியதாகக் கதையொன்று வழங்குகின்றது. சர். எம். இ. கிராண்ட் டப்† அவர்களைச் சிறப்பிக்க மண்டசா சமீன்தாரின் கோட்டையில் நிகழ்ந்த நாட்டிய நிகழ்ச்சியில் நாட்டிய மங்கையர் மால்ப்ருக்கின் செவதென் குர்ரெ (Se va t'en guerre) இசைப்பாட்டிற்கு ஏற்ப ஆடினர். புஸ்ஸி (Bussy) நாட்டிய மகளிருக்கு அதனைச் சொல்லித் தர அவர்கள் அதனைத் தங்கள் வட்டாரத்தைச் சேர்ந்தவர்களுக்குக் கற்றுத் தந்துள்ளனர். விசாகப்பட்டினம் மற்றும் கோதாவரி மாவட்டங்களைச் சேர்ந்த காடுகளில் வாழும் மக்கள் புலிக்கு மற்றுமொரு பெயராகப் புஸ்ஸி என்பதனைப் பயன்படுத்துகின்றனர். அந்தப் பெயருக்கும் புஸ்ஸிக்கும் தொடர்பு உண்டா என்பதனை நான் அறியேன்.

திப்பு சுல்தான் அவைக்குரிய தேவதாசிகளைப் பற்றிய பின்வரும் விவரங்கள் 1801-இல் வெளியிடப்பட்டுள்ளன.‡ "விசாப்பூரின் ஒரு பகுதிக்குத் தலைவனான திப்பு சுல்தான் திறமை, நயம் அழகு முதலிய பண்புகள் ஒருங்கே வாய்க்கப் பெற்ற 'பயதெரெரைப்' பெற்றிருக்கும் நற்பேறு வாய்க்கப் பெற்றுள்ளான்.

---

* ஜெ. டி. வீலர், பழங்காலத்திய சென்னை. (J.T. Wheeler, Madras in Olden Times.)

† ஒரு நாட்குறிப்பிலிருந்தான குறிப்புகள், 1881–86 (Notes from a Diary 1881-86.)

‡ J. Michaud. Histoire des Progrès et de la Chute de l' Empire de Mysore, sons les Regnes d' Hyder-Aly et Tippoo Saib.

ஆடல் மகளிருள் மிகத் திறமை வாய்ந்த நாட்டிய மங்கையரே இந்தப் 'பயதெரேரர்கள்'. அவர்களுடைய உடலில் அனைத்தும் ஒரே சமயத்தில் அசைந்து விளையாடும் திறமை பெற்றிருந்தன அவர்களின் தலை, கண்கள், கரங்கள், அடிகள் ஆகியவற்றோடு உடல் முழுவதுமே காண்பாரைக் களிப்பூட்ட அசைந்து ஆடின. நம்பமுடியாதபடி மென்மை படைத்த அவர்கள் நெகிழ்வு உடையவர்களாக இருப்பதுடன், உடல் உறுதியும் ஒருங்கே வாய்க்கப் பெற்றிருந்தனர். இவர்களுள் 16 அல்லது 17 வயதுடையவர்களே வயது அதிகமான பெண்கள். இவர்கள் இந்த வயதை அடைந்தவுடன் நாட்டின் பிற பகுதிகளில் உள்ள நகரங்களுக்கு அனுப்பப்படுகின்றனர் அல்லது கோயில்களுக்கு உரிய உரிமை மகளிராக ஆக்கப்பட்டு விடுகின்றனர். அங்கே இவர்கள் வாழ்க்கை நடத்தத் தேவையானவைகளைப் பெறுவதோடு தங்கள் அழகின் உதவியால் மிகுந்த வருவாயையும் ஈட்டுகின்றனர்.''

பவானியில் நாட்டிய மகளிரின் குழுவினை ஒருவர் வைத்திருந்ததாகவும், அம்மகளிருக்கு அவர் ஆங்கிலேயரின் தேசிய கீதமான கடவுள் அரசரைக் காப்பாராக என்பதனைக் கற்றுத் தந்திருந்ததாகவும், அவர்களுடைய வழித் தோன்றல்கள் அதனைத் தொடர்ந்து கற்றுக் கொண்டிருந்ததாகவும், தான் 1852-இல் அங்கு சென்றபோது அவரை "அவர்கள் கூட்டமாகப் பகட்டான ஆடை புனைந்து தேசிய கீதத்தை முழுதும் புரிந்து கொண்டவர்களைப் போலப் புரிந்து கொள்ளாமலேயே பாடி வரவேற்றதாகவும்" ஜெனரல் பர்டன்* விவரித்துள்ளார். இக் காலத்தவரான ஐரோப்பிய மேலதிகாரி ஒருவர் அனுப்பிய பின் வரும் சுற்றறிக்கை மேற்கண்டவற்றோடு மாறுபட்டிருப்பதைக் காணலாம். "நான் ஜமாபந்திக்காக (வருமான வரித்துறைத் தீர்வைக் கணககுத் தீர்வு) பயணம் வரும் போது மக்கள் சில சமயங்களில் பாடல் அல்லது ஆடல் குழுக்களை என் மீது கொண்ட அன்பினால் எனக்காக ஏற்பாடு செய்கின்றனர். பொருட்செலவு செய்து ஏற்பாடு செய்யப்பட்ட அந்த நிகழ்ச்சிகளுக்கு வர மறுப்பது அவமரியாதை செய்வது போலாகும்

---

* இந்தியன் ஒலியோ. (An Indian Olio.)

என்பதால் நான் அவை எந்த நல்ல நோக்கத்தோடு ஏற்பாடு செய்யப்பட்டனவோ அதே நோக்கில் அவற்றில் பங்கு கொள்ள ஒப்புக்கொண்டு வந்துள்ளேன். நாட்டிய நிகழ்ச்சிகளுக்கு எதிரானவையாக நடந்து வரும் இயக்கத்திடம் பரிவு கொண்டவனாக, அந்த இயக்கத்தை உடன்பட்டு ஏற்றுக் கொள்பவன் நான் என்பதனை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கின்றேன்.''

வேல்ஸ் இளவரசருக்கும், இளவரசிக்கும் வரவேற்புத் தருவதற்காக அமைக்கப்பட்ட நிதிப்பொறுப்புச் செயற்குழு உறுப்பினர்கள் சென்னைக்கு அவர்கள் வருகை தரும்போது அவர்களுக்கான வரவேற்பில் நாட்டிய மகளிரின் நிகழ்ச்சி இடம் பெறுதல் கூடாது என 1905-இல் ஒரு மனதாக முடிவு மேற்கொண்டுள்ளனர்.

பசவிகளைப் பற்றிப் பெல்லாரி மாவட்ட ஆட்சியர் ஒரு குறிப்பில் கூறியிருப்பதாவது:- ''இந்துக்களிடையே தங்கள் குடும்பத்தில் ஒருவர் இறந்துபோனால் ஒரு காளையினைப் பொது உபயோகத்திற்காக நேர்ந்து விடுதல் வழக்கம். இவையே ஊர்ப்புறங்களைச் சார்ந்த கால்நடைகளைச் சினையுறச் செய்பவை. இது போலப் பசுக்களையும் நேர்ந்து விடுவர். அவ்வாறு விடப்படும் பசுக்கள் பசவிகள் எனப்படும். பசவிகளையோ அவர்கள் குழந்தைகளையோ குறைபாடுடையவர்களாக யாரும் கருதுவதில்லை. அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த மற்ற உறுப்பினர்களைப் போலவே சமமாக நடத்தப்படுவர். போயர்களும், பசவிகளை நேர்ந்து விடும் மற்றச் சாதியாரும் போர்வீரர்களாகப் பணியாற்றிய காலத்தைச் சார்ந்தே பசவிகளின் தோற்றம் இருத்தல் வேண்டும். பசவிகள், போரில் காயமுற்றவர்களைப் பேணவும், பாடி வீடுகளில் பணியாற்றவும், போர் வீரர்களோடு உடன் சென்றவர்கள் ஆதல் வேண்டும். இந்து மரபுப்படி போர்வீரர்களின் மனைவியர் அவர்களோடு உடன்செல்லும் வழக்கமில்லை. அந்தச் சாதியைச் சேர்ந்த வேறு பெண்களே அவர்களுடைய தேவைகளைக் கவனித்துக் கொள்ள வேண்டும். இந்தத் தேவையின் அடிப்படையிலேயே பசவிகளின் அமைப்புத்

தோன்றியிருத்தல் வேண்டும். அல்லது இதற்கு முன்பே பசவிகள் சமய ஈடுபாடு தொடர்பாகக் கோயில்களைச் சார்ந்தவர்களாக இருந்திருப்பின் அவர்கள் இதுபோலப் போர்வீரர்களுக்கு உதவும் பணியில் ஈடுபட்டவர்களாதல் வேண்டும். அவ்வப்போது தேவைக்கேற்பப் புதிய உறுப்பினர்கள் சேர்த்துக்கொள்ளப் பட்டிருக்க வேண்டும். நாராயணதேவர்கேரியில் பல போயர் களும் பசவிகளும் உள்ளனர். தேர்த் திருவிழா நாளன்று தேர் வந்து நிலைசேரும் வரை போயர்கள் உணவு கொள்ள மாட்டார் கள். சிலபோது விபத்துக்கள் காரணமாகத் தேர்த் திருவிழா நாளில் தேர் நிலைசேர இயலாமலும் போய்விடுவதுண்டு. அப் பொழுதெல்லாம் தேர் இழுக்கும் போயர்கள் தங்கள் வீடுகளுக் குச் செல்லாமல் தேரின் அருகிலேயே படுத்துக் கொள்வர். அப் பொழுது பசவிகள் உணவு கொண்டு வருவர்களேயன்றி அவர்கள் மனைவியர் உணவு கொண்டு வந்து தர மாட்டார்கள்.'' அதோனியில் பஞ்சுமில் ஒன்றில் நாள் ஒன்றுக்கு மூன்றணாக் கூலிக்கு வேலை பார்த்து வந்த பசவி ஒருத்தியை நான் நேரில் சந்தித்தேன். உள்ளூர்த் தெய்வம் ஒன்றின் விழா தொடர்பாகத் தன்னை முழுதும் அலங்கரித்துக் கொண்டிருந்த அவள் நுட்பமான வேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ள வெள்ளி ஒட்டியாணமும், வெள்ளி அணிகளும் பூண்டிருந்தாள். பசவி களாக ஆக இருக்கும் பெண்கள் ஐரோப்பியக் குற்றவியல் நடுவர் ஒருவரிடமும், காவல்துறைக் கண்காணிப்பாளர் ஒரு வரிடமும் கொடுத்த விண்ணப்பங்களின் மாதிரிகள் வருமாறு:-

**17 அல்லது 18 வயதான ............ யின் விண்ணப்பம்.**

நான் ஒரு பசவியாக உடன்பட்டு என் சாதிக்குரிய விதிப் படி எங்கள் குருவால் முத்திரையிடப் பெற உள்ளேன். முத்திரையிட்டுக் கொள்ள தகுதியுடையதான என்னுடைய சரியான வயதை நேரில் வந்து உறுதிப்படுத்திய பின், எனக்கு முத்திரையிட்டுக் கொள்ள அனுமதி வழங்கும்படி வேண்டு கிறேன்.

முத்திரை இடுவது என்பது, சங்கு சக்கர அடையாளங் களைப் பொறித்தலாகும்.

**.........யினுடை மனைவியான ......... யின் விண்ணப்பம்.**

எனக்கு 15 வயதிலும் 12 வயதிலும் இரண்டு பெண்கள் உள்ளனர். எனக்கு ஆண் குழந்தைகள் இல்லை. ஆகையால் எங்கள் குல குருவின் ஆணைப்படி என்னுடைய பெண்கள் இருவருக்கும் கோயில் தேவதைகளின் தாலியை அணிவிக்கும் சடங்கினை நடத்த வேண்டியவளாக உள்ளேன். வயது வரம்பு உடன்பாட்டுச் சட்டப்படி அதற்கு அதிகாரிகள் ஏதாவது தடை விதிக்கக் கூடும் என்பதால் இந்த விண்ணப்பத்தை அனுப்பு கின்றேன். மதிப்பு மிக்க வழக்கு மன்றத்தார் அவர்கள் இந்தச் சடங்கினை நடத்த எனக்கு அருள் கூர்ந்து அனுமதி வழங்கும்படி கேட்டுக் கொள்கின்றேன்.

**17, 19-வயதுடைய இரண்டு பெண்களின் விண்ணப்பம்.**

எங்கள் தாய் தந்தையர் இறந்துவிட்டனர். நாங்கள் திருமணம் செய்து கொண்டு எங்கள் இல்லப் பெயரை நிலை நிறுத்த விரும்பவில்லையாகையால் பரத்தையராக ஆக விரும்பு கின்றோம். எங்கள் தாயும் இதே தொழிலை மேற்கொண்டிருந் தாள். எங்களை மருத்துவ அலுவலர் சோதித்தபின் எங்கள் சமய நெறிப்படி நாங்கள் பரத்தையர் தொழிலை மேற்கொள்ள அனுமதி வழங்கும்படி வேண்டுகிறோம்.

சட்டப்படி மணம் செய்து கொள்ள இயலாதவளாகப் பசவி ஆகிவிடும் ஒருத்தி, அவ்வாறு அவள் பசவியாகும்போது உரிய வயது ஆகாதவளாக இருப்பாளாயின் அது குற்றவியல் சட்டப் படி குற்றமாகும் என உயர்நீதி மன்றம் வழங்கிய தீர்ப்பின் அடிப்படையிலேயே மேலே எடுத்துக்காட்டப்பட்டுள்ள விண் ணப்பங்கள் தரப்பட்டுள்ளன.

ஆதோனியில், பிறந்த குழந்தை ஒன்றின் உடலைச் சாலை ஓரத்துக் குழியில் கண்ட போது, மற்றவர்களோடு பஞ்சு ஆலை ஒன்றில் வேலை பார்க்கும் பசவி ஒருத்தியே அவ்வாறு குற்றம் புரிந்திருக்க வேண்டுமென ஐயுற்றனர். காவல் நிலைய அதிகாரி, தான் அந்தப் பஞ்சு ஆலைக்கு வந்து பால் கொடுக்கும் தாய்மைப் பேறு நிலையில் உள்ள பெண்கள் அனைவரையும்

சோதனை இட இருப்பதாகவும், ஒவ்வொருத்தியும் தன் குழந்தையைக் காட்ட வேண்டும் எனவும், அவ்வாறு குழந்தையைக் கொண்டு வந்து காட்டத் தவறுபவளே அத்தகைய குற்றத்தைச் செய்திருக்க வேண்டும் எனவும் கூறினார். பெல்லாரி மாவட்டக் கையேட்டில் பசவிகளைப் பற்றித் திரு டபிள்யூ. பிரான்சிஸ் பின்வருமாறு எழுதியுள்ளார்:- "ஆண் குழந்தைகள் இல்லாத பெற்றோர்கள் பொது வழக்குப்படி ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்வதற்குப் பதிலாகத் தங்கள் பெண்களில் ஒருத்தியைச் சிறு சடங்கு ஒன்றின் வழி கோயிலில் உள்ள தெய்வத்திற்கு உரியவளாக்குகின்றனர். அதன்பின் மிகத் தொன்மையானதான வழக்குப்படி அவள் தன் பெற்றோரின் சொத்துக்களை அடையும் உரிமை பெறுவதோடு, பெற்றோரின் சாவுச் சடங்குகளையும் ஒரு மகனைப் போலச் செய்யும் உரிமையையும் பெறுகின்றாள். அவள் மணம் செய்து கொள்ளாமல் தன் பெற்றோரின் வீட்டிலேயே தன் சாதியை அல்லது அதற்கு மேம்பட்ட சாதியைச் சேர்ந்த தான் தேர்ந்தெடுத்த ஒருவனோடு வாழ்ந்து வருவாள். அவளுக்குப் பிறக்கும் குழந்தைகள் அவளுடைய தந்தையின் குலத்தைச் சேர்ந்தனவாகக் கருதப்படுவர். அவள் தந்தையின் பட்டப்பெயரையும் அவர்கள் தரிப்பர். அவர்களுடைய தந்தையின் குலத்தை அவர்கள் சேர மாட்டார்கள். அவளுக்கு ஆண் பிள்ளை பிறப்பானாகில் அவன் அவளுடைய சொத்துக்களுக்கு உரிமை உடையவனாவான். அவளுக்குப் பெண் மட்டும் பிறக்குமாயின் அப் பெண்ணும் பசவியாக்கப்படுவாள். தங்களுக்கு ஆண்பிள்ளை பிறக்க வேண்டும் என விரும்புபவர்களும், தங்களுடைய அல்லது தங்கள் குழந்தைகளுடைய நோய்கள் தீர வேண்டும் என விரும்புபவர்களும், தங்களுக்கு ஏற்பட்ட ஒரு பேராபத்து நீங்க வேண்டும் என விரும்புபவர்களும் இதே போல தங்கள் பெண்ணைப் பசவியாகக் கோயில் ஒன்றுக்கு உரிமையாக்குவர். பசவிகளின் குழந்தைகள் சட்டப்படியான குழந்தைகளாகக் கருதப்படுவர். அக்குழந்தைகளையும் அவற்றின் தாயாரையும் சாதியைச் சேர்ந்த மற்றவர்களைவிடத் தாழ்ந்தவர்களாகக் கருதி எவரும் நடத்துவதில்லை. ஒரு பசவி என்றும் கைம்பெண் ஆவதில்லை என்பதால் மணநிகழ்ச்சிகளில் அவள் அன்போடு வரவேற்கப்படுபவ

ளாக உள்ளாள். கோயில்களுக்கு உரிமையாக்கப்படும் நாட்டிய மகளிரிலிருந்து பசவிகள் வேறுபட்டவர்கள். எந்தக் கோயில்களுக்கு உரிமையாக்கப்படுகிறார்களோ அந்தக்கோயில்களில் பசவிகளின் பணி வரையறை ஓரளவினதாகவே இருக்கும். மேலும் பசவிகள் வரையறையின்றிப் பரத்தமைத் தொழிலில் ஈடுபடுவதில்லை. ஒரு பசவி பெரும்பாலும் ஒருவனுக்கே உரிமை உடையவளாக ஒழுகுவாள். அவன் அவளுக்கு வாழ்க்கையை நடத்த வாரந்தோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை வழங்குவான். ஆண்டுக்கு ஒரு முறை புதிய ஆடைகளையும் அவன் அளிப்பான். அவள் தன் குடும்பத்திற்காக மற்ற பெண்களைப் போலவே உழைப்பாள். தோற்றத்தில் பசவிகள் மற்ற பெண்களை ஒத்தவர்களாகவே காட்சி தருவர். பெரும்பாலும் இவர்கள் கூலிகளாகவே பணிபுரிகின்றனர். சில இடங்களில் இவர்கள் தங்கள் துணைவர்களை ஆண்டுக்கு ஒருமுறை ஊரில் நடைபெறும் தேர்த் திருவிழாவின் போது மாற்றிக் கொள்ளும் பழக்கமும் உள்ளது. அச்சமயம் இவர்கள் தங்கள் துணைவர்களின் அன்பினைச் சோதிக்கத் தங்களுக்குப் புதிய சேலையும் ரவிக்கையும் வேண்டுமெனக் கேட்பர். இவர்களின் துணைவர்கள் பெரும்பாலும் ஏழைகளாக இருப்பதால் தங்கள் துணைவியரின் விருப்பத்தை நிறைவு செய்யச் சிறு திருட்டு, வீடு புகுந்து கொள்ளை அடித்தல் ஆகியவற்றில் திருவிழாச் சமயங்களில் பெரும் அளவில் ஈடுபடுவர்.'' பெல்லாரி மாவட்டத்தைச் சேர்ந்த காவல்துறை மேற்பார்வையாளர் ஒருவர் அண்மையில் அனுப்பியுள்ள அறிக்கையில், ''நாக பஞ்சமித் திருவிழா நெருங்கிக் கொண்டிருப்பதால் இங்கும் அங்குமாகக் குற்றங்கள் நிகழ்ந்தபடி உள்ளன. வரும் அமாவாசை நாளில் நாக பஞ்சமி விழாக் கொண்டாடப் படவுள்ளது. பரத்தையரைக் காதலியராக வைத்துக் கொண்டிருப்பவர்கள் அச்சமயம் தாங்கள் வழக்கமாகத் தரும் அன்பளிப்புக்களை அவர்களுக்குத் தரவேண்டும். இல்லையேல் அந்தப் பரத்தையர் தங்களுக்குப் புதிய துணைவர்களைத் தேடிக் கொள்வர்'' எனக் கூறிக் காவலர்களை எச்சரித்துள்ளார்.

கர்நூல் மாவட்டத்தில் போயர்கள் பசவி முறையினை மேற்கொள்கின்றனர். அம்முறை பெல்லாரி, மைசூர் பகுதிகளில் வழக்கிலிருக்கும் முறையினும் மாறுபட்டது. இவ்விரு இடங்களிலும்

ஒரு குடும்பத்தில் ஆண் பிள்ளை இல்லையெனில் அதற்காகவே பசவிகளை விடும் பழக்கம் உள்ளது. குடும்பத்தில் பெண் மட்டுமே பிறந்தால் அவள் மணமாகிச் சென்றவுடன் அவளுடைய கணவன் குலத்தவளாகி விடுவதால் அவளுடைய பிறந்த வீட்டின் பெயர் சொல்ல ஒருவரும் இல்லாது போய்விடுகின்றனர். இதனைத் தடுக்க அவளை மணம் செய்து தராமல் பசவியாக ஆக்குகின்றனர். அதன்பின் அவள் தன்னுடைய தந்தையின் குலத்தைச் சார்ந்தவளாகத் தொடர்ந்து இருப்பாள். அவளுக்குப் பிறக்கும் ஆண்பிள்ளைகளும் அவளுடைய தந்தையின் குடும்பத்தினராகவே கருதப்படுவர். கர்நூல் மாவட்டத்தில் வேறு நோக்கத்திற்காகப் பெண்களைப் பசவிகள் ஆக்குகின்றனர். பெண்களைக் கோயிலில் உள்ள தெய்வத்திற்குத் திருமணம் செய்விக்காமல் ஒரு நல்ல நாளில் மலர் மாலையால் ஒரு பலிச தாசரியின் கருடக்கம்பத்தோடு சேர்த்துக் கட்டுவர். அவளோடு முதன் முதல் உடல் உறவு கொள்ள உள்ள ஆண்மகன் அல்லது அவளுடைய தாய்மாமன் அவளை அக்கட்டிலிருந்து விடுவிப்பான். ஓர் எளிய விருந்துக்குப் பின் அப்பெண்ணின் கழுத்தில் கறுப்பு மணிமாலை அணிவிக்கப்படும். அவள் ஒரு பரத்தையாவதோடு அவளுடைய குழந்தைகள் உயர்ந்த போயர் குடும்பங்களில் மணந்து கொள்ளும் உரிமையையும் இழக்கின்றனர்.

"பசவிகள் சிலபோது ஒரு குத்துவாளுக்கும், சிலபோது கோயில் சிலைக்கும் மணம் செய்விக்கப்படுகிறார்கள். ஒரு பெண் குழந்தையைக் கோயிலுக்கு உரிமையாக்கும் போது அவளை ஒரு கோயிலுக்கு அழைத்துச் சென்று ஒரு சிலைக்கு வாழ்நாள் முழுதும் துணைவியாக மணம் செய்விப்பர். ஒரு குத்து வாள் தரையில் நடப்பட்டுச் சடங்கு நடத்தப்படுவதற்குரியவள் அதற்கு மாலை அணிவிப்பாள். அவளுடைய தாயார் அவள் தலையில் அரிசியினைத் தூவுவாள். குருக்களாகப் பணியாற்றுபவர் பிறகு முறைப்படி அவளை அந்த வாளுக்கு ஒரு மணமகனுக்கு மணமுடித்து வைப்பது போலவே மந்திரங்கள் சொல்லி மணம் முடித்து வைப்பார். அப்போது மணமகளுக்கும் வாளுக்கும் இடையே ஒரு திரை தொங்கவிடப்பட்டிருக்கும்."

ான முனைவர் இ. பல்போர் எழுதியுள்ளார்.* பெல்லாரி மாவட்டத்தைச் சேர்ந்த பசவிகளை உரிமையாக்கும் சடங்குகள் பற்றித் திரு எப். பாவ்செட் பின்வருமாறு விவரித்துள்ளார்.† "முனையில் எலுமிச்சம்பழம் சொருகப்பட்ட ஒரு வாள் பசவியாக இருப்பவள் வலப்பக்கத்தில் செங்குத்தாக நிறுத்தி வைக்கப் படும். அவள் அதனைத் தனது வலது கையால் பிடித்துக் கொள் வாள். இந்துக்களின் மணச் சடங்கில் மணமகளுக்கு வலப் பக்கம் அமரும் மணமகனாக அந்த வாள் கருதப்படும். ஒரு தட்டில் வைக்கப்பட்ட கலசமும், விளக்கும் அதன்பின் அப் பெண்ணின் முன் மூன்றுமுறை சுற்றப்படும். அவள் எழுந்து அந்த வாளைத் தனது வலக் கையால் எடுத்துக் கொண்டுபோய் கோயிலினுள் வைப்பாள். நாட்டிய மகளிரிடையேயும் இத்தகைய சடங்கு நடத்தப்படுகிறது. அச்சடங்குகளில் வாளுக்குப் பதிலாக மணமகனாக ஒரு முரசு இடம்பெறும். அவள் அதனைப் பணிந்து வணங்குவாள். அவளுடைய தொழிற் சின்னமாக முரசும் சலங்கைகளும் இருக்கும்." பசவிகளை உரிமையாக்குவது பற்றிய மற்றுமொரு குறிப்பில் திரு பாவ்செட் குறித்திருப் பதாவது‡:- "விட்டுணுவின் சின்னமான நாமம் பொறிக்கப் பட்ட தாலியினைக் கறுப்புப் பாசிமணிக் கழுத்தணியில் பிணைத்துப் பசவியின் கழுத்தில் கட்டுவர். அவளுடைய உரிமைச் சின்னமாக அவள் வலது கையில் மாத்திரைக் கோ லாக ஒரு பிரம்பும், இடது கையில் ஒரு பிச்சைக் கூடையும் தரப்படும். அதன்பின் அவளுக்குச் சங்கு சக்கர முத்திரைகள் பொறிக்கப்படும்." வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் நாட்டிய மகளிரின் மணச் சடங்கு பற்றிக் கூறப்பட்டுள்ள தாவது:- பரத்தையர் தொழிலில் ஈடுபடும் போகங்கள் மணம் புரிந்து கொள்ள அனுமதிக்கப்படுவதில்லையெனினும் மிக்க பொருட் செலவினைத் தருவதான ஒரு மணச் சடங்கு செய்விக்

---

* இந்தியா பற்றிய கலைக் களஞ்சியம். (Cyclopaedia of India.)

† மக்கள் இனவியல் இதழ், பம்பாய், தொகுதி - 2, (Journ. Anth. Soc., Bombay, Vol. II.)

‡ மக்கள் இனவியல் இதழ், பம்பாய், 1891. (Journ. Anth. Soc. Bombay, 1891.)

கப்படுகின்றனர். சில சமயங்களில் ஒரு செல்வர் அந்தச் செலவு முழுவதையும் ஏற்றுக் கொண்டு அவளுக்கும் பெரும் பரிசுகள் வழங்கி அதற்கு ஈடாக அவளுடைய முதற் காதலனாகும் பேற்றினை பெறுகின்றார். அத்தகைய வாய்ப்பைப் பெற இயலாத சமயங்களில் ஒரு வாளையோ வேறு போர்க்கருவியினையோ அவளுடைய மணமகனாகப் பாவித்து மணம் செய்விப்பதோடு கற்பனை நாடகமாக மண உறவு நிகழ்ச்சியையும் நடத்துகின்றனர். ஒரு போகத்திற்குப் பெண்கள் இல்லையாயின் அவள் விலை கொடுத்து ஒருத்தியைத் தத்து எடுத்துக் கொள்கின்றாள். பெரும்பாலும் கைகோளர் சாதியிலிருந்தே, இவ்வாறு பெண்கள் தத்தெடுக்கப் படுகின்றனர்.

கோயமுத்தூரைச் சேர்ந்த கைகோளரான இசைவாணர்களிடையே ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் குறைந்தது ஒருத்தியையேனும் கோயில் பணிகளுக்கு என விடவேண்டும் என்ற வழக்கம் உள்ளது. அவ்வாறு விடப்படுவதற்குரியவளுக்கு இசையும் நாட்டியமும் கற்றுத் தரப்படும். தாலிகட்டும் சடங்கின் போது அவளை அணிகள் பூட்டி அலங்கரித்து நெற்குவியலின் மேல் நிற்கும்படி செய்வர். இரண்டு தாசிகள் நெற்குவியலின் மேல் நின்றபடி அவளுக்கு முன் மடிக்கப்பட்ட ஒரு துணியைப் பிடித்தபடி நிற்பர். அச்சிறுமி அத்துணியைப் பிடித்துக் கொள்வாள். அவளுக்கு நாட்டியம் கற்றுத் தரும் நட்டுவனார் அவளுக்குப் பின்னால் அமர்ந்து, அவளுடைய கால்களைப் பிடித்து நட்டுவாங்க இசைக்கேற்ப மேலும் கீழுமாகத் தூக்கி வைப்பார். அன்று மாலை ஒரு மட்டக் குதிரையில் அவளைக் கோயிலுக்கு அழைத்துச் செல்வர். அங்குத் தெய்வத்திற்கான புதிய துணி, தாலி, பூசைக்கு வேண்டிய பொருள்கள் ஆகியனவற்றை ஏற்பாடுசெய்து வைத்திருப்பர். அச்சிறுமி தெய்வத்தைப் பார்த்தபடி அமர்த்தப்படுவாள். பூசை செய்யும் பிராமணர் அவளுக்குப் பூவும் சந்தனமும் தந்து, தெய்வத்தின் காலடியில் வைக்கப்பட்ட தாலியை அவள் கழுத்தில் கட்டுவார். தாலி தங்கத் தகடும், கறுப்புப் பாசி மணிகளுக்கும் கோக்கப்பட்டதாக இருக்கும். இதன் பிறகும் அவள் தொடர்ந்து இசையும் நாட்டியமும் கற்றுக் கொண்டவளாகக் கடைசியில் சாந்தி முகூர்த்தச் சடங்கினைச்

செய்து கொள்வாள். ஒரு நல்ல நாளில் உறவினர்களை அழைத்து அவர்கள் முன்னிலையில் அவள் தாய் மாமன் அல்லது அவ ரால் ஏற்பாடு செய்யப்பட்ட ஒருவர் அவள் நெற்றியில் தங்கத்தாலான நெற்றிப் பட்டத்தைக் கட்டி, அவளைத் தூக்கி வந்து கூடியுள்ள விருந்தினர்கள் முன்னால் ஒரு பலகையில் உட்கார வைப்பார். ஒரு பிராமணப் புரோகிதர் மந்திரங்கள் சொல்லிப் புனித நெருப்பினை மூட்டுவார். சாந்தி முகூர்த்தத் திற்காக முடிந்த அளவு ஒரு பணக்காரப் பிராமணனையே தேர்ந்தெடுப்பர். அது இயலாதாயின் சாதாரண பிராமணனை அதற்காக ஏற்பாடு செய்வர். இதற்காகப் பிராமணனை ஏற் பாடு செய்வது தெய்வத்திற்கு அடுத்தபடியாக மாற்றாகக் கொள்ளத் தக்கவன் அவனே என்பதாலேயே ஆம். ஒரு தாசி என்றும் சுமங்கலியாகக் கருதப்படுவதால் அவள் தாலியில் இருக்கும் பாசிமணிகள் அவைகளை அணியும் பெண்களுக்கு நற்பேற்றினைத் தருவனவாக நம்பப்படுகிறது. சிலர் திருமணத் திற்கான தாலியினைத் தாசியிடம் அனுப்பி வைப்பர். அவள் அதற்கான பாசிமணிகளைக் கோப்பதோடு தன் தாலியிலிருந் தும் சிலமணிகளை அதனோடு சேர்ப்பாள். இந்துக்களின் மண ஊர்வலத்தில் எல்லோருக்கும் முன்னே நடந்து செல்லும் சிறப் பினையும் சிலர் தாசிக்குத் தருவர். மணமான பெண்கள், எதிரில் வரக்கூடும் கெட்ட சகுனங்களுக்கு ஈடுதரும் பாதுக் காப்பாக இருக்கும் ஆற்றல் தங்களுக்கு இல்லையெனக் கருதியே இதுபோலத் தாசியினை முன்னர் நடக்க அமர்த்துகின்றனர். கைம்மைப் பேறு அடையும் வாய்ப்புக்கு உள்ளாகாத தாசி களுக்குக் கெட்ட சகுனங்களினால் ஏற்படும் தீமையினை மாற் றும் ஆற்றல் உண்டு என நம்பப்படுகின்றது. முன் காலத்தைப் போல இந்துக்களின் மண நிகழ்ச்சிகளில் தாசிகள் சிறப்பிக்கப் படுவதில்லை என்பதனையும் இதற்கு இந்து சமூக சீர்திருத்தக் காரர்களின் முற்போக்கான சிந்தனைகளின் விளைவே காரண மாகும் என்பதனையும் இங்கு போகிறபோக்கில் கூறிக் கொள்ள விரும்புகின்றேன். கைகோளர் பிரிவைச் சேர்ந்த தாசி ஒருத்தி இறந்தால் அவள் சார்ந்திருக்கும் கோயில் தெய்வத்தின் மேலிருந்து எடுக்கப்பட்ட ஒரு புதுத் துணி அவள் உடலின் மீது போர்த்தப்படுவதோடு அக்கோயிலிலிருந்து மலர் மாலை

களும் அவளுக்காக அனுப்பப்படும். அக்கோயில் தெய்வம் அவளுடைய கணவனாகப் பாவிக்கப்படுவதால் அவளுடைய பிணம் அகற்றப்பட்டுச் சுடுகாட்டில் புதைக்கவோ எரிக்கவோ படும்வரை கோயிலில் பூசையும் நடைபெறாது.

''கோதாவரி மாவட்டத்தில் இருக்கும் பலிவேலாவில் உள்ள கொப்பேசுவரர் கோயிலில் நாட்டிய மங்கையர் தெய்வத்தின் அணைப்பிற்கு உள்ளாகும்பொருட்டு முதலில் மூன்று இரவுகள் கோயிலின் உட்பகுதியில் படுத்து உறங்கும் பழக்கம் இருந்தது. ஓர் இரவில், அவ்வாறு படுத்து உறங்கியவர்களில் ஒருத்தி காணாது போய்விட்டதால், அப்பழக்கம் மறைந்துவிட்டது. சானிப் பிரிவைச் சேர்ந்த இறந்துவிடும் நாட்டிய மகளிர் ஒவ்வொருத்தியினுடைய ஈம விறகும் கோயிலிலிருந்து கொண்டு வரப்படும் நெருப்பிலிருந்தே பற்ற வைக்கப்பட வேண்டும். திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள ஸ்ரீரங்கம் கோயிலிலும் இப்பழக்கம் உள்ளது.''*

சுமார் நானூறு பேர்களே உள்ள திருவாங்கூர் தாசிகளைப் பற்றிய திரு என். சுப்பிரமணி அய்யர் அவர்களின் குறிப்புகளிலிருந்து பின்வரும் விவரங்கள் எடுத்துத் தரப்படுகின்றன. ''கார்திகப்பள்ளி, அம்பலப்புழா, சேர்த்தலை ஆகிய ஊர்களைச் சேர்ந்த தாசிகள் முதலில் கொங்கணக் கடற்கரைப் பகுதியைச் சேர்ந்தவர்களாய் இருந்தவர்கள். செங்கோட்டையைச் சேர்ந்த தாசிகள் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர்கள். தென் திருவாங்கூரைச் சேர்ந்த தாசிகள் கேரளத்திற்கே உரிய பிரிவினர். இந்தச் சாதியைச் சேர்ந்த பெண்கள் தேவடியாள், தாசி என்ற பெயரால் அழைக்கப்படுவர். இவ்விரு பெயர்களும் தெய்வத்தின் அடிமைகள் எனப் பொருள்படுவன. குடிக்கார் (சர்க்காரால் வரி இன்றித் தரப்படும் இல்லங்களில் இருப்போர்), பெண்டுகள் என்ற பெயராலும் இவர்கள் அழைக்கப்படுவர். இவற்றுள் குடிக்கார் என்ற பெயரே பெருவழக்காக இருக்கின்றது. ஆண்கள் தேவடியான்

---

* கோதாவரி மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Godāvari district.)

என வழங்கப்பட்டாலும் நாஞ்சில் நாட்டு வேளாளர் எனத் தாங்கள் அழைக்கப் படுவதையே அவர்கள் விரும்புகின்றனர். ஆண்கள் அவ்வேளாளர்களைப் போலப் பிள்ளை என்ற பட்டத்தையும் தரிப்பர். முன்பு ஆடல் பாடல்களில் வல்ல தேவதாசிகளுக்கு ராயர் என்ற பட்டம் வழங்கப்பட்டு வந்தது. கடைசியாக இப்பட்டம் கி. பி. 1847-இல் வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. தென் திருவாங்கூர்த் தாசிகள், தமிழ் மாவட்டங் களைச் சேர்ந்த தாசிகளோடு உடன் உண்பதோ, மண உறவு கொள்வதோ இல்லை. இவர்கள் ஒரு குறிப்பிட்ட நாயர் பிரிவினரிடையே இருந்தும், தமிழ்ப்பதம் பிரிவினரிடையே இருந்தும் மட்டுமே பெண்களைத் தேர்ந்தெடுப்பர். கோயில் களில் மட்டும் நாட்டியம் ஆடும் இவர்கள் திருவாங்கூரைச் சேராத தாசிகளைப் போல தனிப்பட்டவர்கள் இல்லங்களில் திருமண நிகழ்ச்சிகளின் போது ஆட உடன்படுவதில்லை. இவர்களுள் சில வீடுகளைச் சேர்ந்த ஆண்கள் தமிழ்ப்பதம், மற்றும் பதமங்கலம் நாயர்கள் குடும்பங்களிலிருந்து பெண் கொள்வர். அதே சமயம் பதமங்கலம் நாயர்களும் நாஞ்சில் நாட்டு வேளாளர்களும் இவர்கள் (திருவாங்கூர்த் தாசிகள்) இல்லங்களிலிருந்து பெண் கொள்வர்.

"ஒரு நாட்டிய மகள் வயதில் மிக மூத்தவளாகவோ நோயுற்றவளாகவோ ஆகித் தன்னுடைய கோயிற் கடமைகளை நிறைவேற்ற இயலாதவளாகிவிடுவாளாகிவிடும்போது அவள் தன்னுடைய காதுத் தோடுகளைக் கழற்றிவிடக் கோயில அதிகாரிகளிடம் அனுமதி வேண்டுவாள். இச்சடங்கு மகாராசா வின் அரண்மனையில் நடைபெறும். குறிப்பிட்ட இடத்தில் உரிய கோயிலின் அலுவலர்கள் கூடுவர். ஒரு முக்காலியில் அமர்ந்த வளாக அப்பெண் தன் தோடுகளின் திருகாணிகளைக் கழற்றிய பின் அவற்றைப் பன்னிரண்டு பணப் பரிசோடும் அம்முக்காலி யின் மீது வைத்த பின், அங்கு வைத்த அதனைத் திரும்பிப் பாராமல் சென்று விடுவாள். இதன்பின் அவள் தாய்க் கிழவியாகக் கருதப்பட்டு ஓய்வு பெற்றவளாகக் கவலையின்றி நாள்களைக் கழிப்பாள். பணியில் இருக்கும் தாசிகளை அதனை உணர்த்தும் வகையில் ஆடும்பாதம் என அழைப்பர். ஓய்வு

பெற்றவளுடைய காதுத் தோடுகள் உடனடியாக அரண்மனையிலிருந்து அவளுக்குத் திரும்ப அனுப்பப்படும் என்றாலும் அவள் மீண்டும் அவைகளை அணிந்து கொள்ள அனுமதிக்கப் படுவதில்லை. பாம்படம் எனப்படும், தமிழ்நாட்டுச் சூத்திரர் பிரிவைச் சேர்ந்த பெண்கள் அணிந்து கொள்ளும் காதணியினையே அவள் அணிந்து கொள்ள வேண்டும். அவள் இயலாமை காரணமாகக் கோயிலிலிருந்து அவளுக்குத் தரப் படும் ஊதியத்தொகை சிறிது குறையும்.

“கேரளபுரத்தில் இருப்பதைப் போல சில கோயில்களில் நாட்டிய மகளிர், அன்றாடம் பணிகளை மேற்கொள்ளும் முறைக்குடி எனவும், சிறப்பான சமயங்களில் மட்டும் பணி மேற்கொள்ளும் சிறப்புக்குடி எனவும் இரு பிரிவினராக உள்ளனர். தென் திருவாங்கூரைச் சார்ந்த தாசிகளுக்குரிய சிறப்புப் பணிகள் வருமாறு:- (1) ஸ்ரீ பத்மனாப சுவாமி கோயிலில் நடைபெறும் இரு உற்சவங்களிலும் தசராவின் போதும் தலைநகரில் நடைபெறும் விழாவிலும் பங்கு பெறுதல். (2) தங்கள் ஊரெல்லையில் அரச குடுபத்தைச் சார்ந்தவர்கள் வரும்போது எதிர்கொண்டு அழைத்தல். (3) கோயிலில் ஆண்டு தோறும் நடைபெறும் அபமர்கம் விழாத் தொடர்பான சடங்குகளின்போது உண்ணா விரதம் இருத்தல். இந்த நாட்களில் அவர்கள் கண்டிப்பான ஒழுக்க முறைகளை மேற்கொள்ள வேண்டும் என்பதோடு கோயிலில் அவர்களுக்கு வழங்கப்படும் ஒரு வேளை உணவை மட்டுமே உண்ண வேண்டும்.

“எந்தத் தெய்வம் உள்ள கோயிலில் தேவதாசிகள் பணியாற்றுகின்றார்களோ அந்தத் தெய்வத்தையே அவர்கள் தங்கள் முக்கிய வழிபடு தெய்வமாகக் கொள்வர். அமாவாசை, பௌர்ணமி ஆகிய நாட்களையும், ஒரு மாதத்தின் கடைசி வெள்ளிக்கிழமையையும், முக்கிய நாட்களாகக் கருதுவர். ஓணம், சிவராத்திரி, தைப் பொங்கல், தீபாவளி, சித்ரா பௌர்ணமி ஆகியன அவர்களுடைய சமயத் தொடர்பான விழா நாள் களாகும். பத்ரகாளி, யக்ஷி, காந்தர்வர் ஆகிய சிறு தெய்வங் களின் அடையாளமாகச் சுவரில் ஒரு திரிசூலம் அல்லது வாளினை

வரைந்து அதற்கு வெள்ளிக்கிழமைகளில் உணவும் இனிப்புப் பணியாரங்களும் படைத்து வழிபாடு நடத்துவர். இச்சமயத்தில் ஓர் உவச்சன் பூசாரியாக இருப்பான். இச்சாதிக்கு எனத் தனியே சாதித் தலைவர்கள் இல்லை. தீட்டு நீக்குவதற்காகப் பிராமணர்களை அமர்த்துவர். சாவுச் சடங்குகளை நடத்தி வைக்க நம்பியன்களையும், சைவ வேளாளர்களையும் அமர்த்துவர். திருமணச் சடங்குகளை நடத்தவும் பதினாறாம் நாள் சாவுச் சடங்கினை நடத்தவும் குருக்களை ஏற்பாடு செய்வர்.

"இச்சாதியைச் சேர்ந்த சிறுமிகள் ஒரு கோயிலுக்கு உரியவர்களாக்கப்படுவார்கள் அல்லது சாதியைச் சேர்ந்த ஓர் ஆடவனுக்கு மணம் முடிக்கப்படுவார்கள். பருவமடைந்த பிறகு ஒரு பெண்ணைக் கோயிலுக்கு உரிமையாக்குதல் முடியாது. மணச் சடங்கின் போது ஐம்பது முதல் நூற்றைம்பது ரூபாய் வரை பெண் வீட்டாருக்குத் தரப்படும். இதனைப் பெண்ணுக்குரிய விலையாகக் கருதாமல் மணச் சடங்குகளை நடத்த ஆகும் செலவுக்கான தொகையாகக் கருதுவர். முதலில் மணத்தினை நிச்சயம் செய்யும் சடங்கு நடத்தப்பட்டுப் பின்னர் நல்ல நேரத்தில் மணம் நிகழ்த்தப்படும். அப்போது குருக்கள் சில மந்திரங்களைச் சொல்வார். தாலி கட்டுவதும் சடங்கில் அடங்கும். மணச் சடங்குகள் நான்கு நாள்கள் வரை நீட்டிக்கும். மணமக்கள், மணப்பெண் பருவம் அடைந்த பதினாறாம் நாளிலிருந்து ஒன்றாக வாழத் தொடங்குவர். கணவன் மனைவி இருவரில் யார் விரும்பினாலும் மணமுறிவு செய்து கொள்ளும் படியாக மணமுறிவு எளிதில் பெறப்படுவதாகும். புதிய மண உறவினைத் தான் மேற்கொண்டதற்கு அடையாளமாக ஒருத்தி மற்றொருவனிடம் இருந்து துணிமணிகளைப் பெற்றுக் கொள் வாள்.

"ஒரு சிறுமியை ஒரு கோயிலுக்கு உரியவளாக்க அக்கோயிலைச் சேர்ந்த மூத்த நாட்டிய மகள் கோயில் அதிகாரிகளுக்கு விண்ணப்பிக்க வேண்டும். அத்தகைய சிறுமிகள் ஆறு வயது முதல் எட்டு வயது வரையானவர்களாக இருக்க வேண்டும். விண்ணப்பம் செய்கின்றவளுடைய நெருங்கிய உறவினளாக அச் சிறுமி இருந்தால் அவளுடைய தகுதியும் உரிமையும் பற்றிய விவ

ரங்கள் கேட்டு அறியப்படாமலேயே அவளை ஏற்றுக் கொள்வர். இல்லையெனில் முறையாக அவளைப் பற்றிய தகவல்கள் கேட்டறியப்பட்டு, உரிய விவரச் சான்றுகள் அப்பகுதியைச் சேர்ந்த வருவாய்த்துறை அலுவலரின் அனுமதி பெறுவதற்காக அனுப்பி வைக்கப்படும். கோயிலுக்கு உரிமையாக்கும் சடங்கினை நடத்தும் செலவுக்காகக் கோயிலிலிருந்து கொஞ்சம் நெல்லும், ஐந்து பணமும் அச்சிறுமியின் குடும்பத்திற்கு வழங்கப்படும். நல்ல நாளில் வலிய ஸ்ரீகாரியக்காரர், யோகத்தில் போத்தி, வட்டப்பள்ளி முட்டாடு முதலியவர்கள் கூடிச் சுசீந்தி, கோயிலில் இச் சடங்கினுக்கான ஏற்பாடுகளைச் செய்தல் வழக்கம். உரிய நாளில் அச்சிறுமி குளித்தபின் இரண்டு புதிய ஆடைகள், வெற்றிலை பாக்கு ஆகியவற்றோடு கோயிலுக்குச் செல்வாள். கோயில் புரோகிதர் அத்துணிகளையும் தாலியினையும் தெய்வத்தின் காலடியில் வைத்துத் துணிகளில் ஒன்றைக் கோயில் உபயோகத்திற்கென எடுத்துக் கொள்வார். தாலி முக்கோண வடிவில் கணேசர் உருவம் பதிக்கப்பட்டதாக இரு புறமும் தங்கமணிகள் கோக்கப்பட்டிருக்கும். எஞ்சிய துணியையும் தாலியினையும் கொண்டு வரும் கோயில் புரோகிதர் அந்தச் சிறுமிக்கு நெருக்கமாக வடக்குப் பார்த்து அமர்ந்து சடங்குகளை நடத்தத் தொடங்குவார். அச்சிறுமி கோயிலில் உள்ள தெய்வத்தைப் பார்த்தபடி அமர்ந்திருப்பாள். நெருப்பு மூட்டி மண நிகழ்ச்சிக்கான எல்லாச் சடங்குகளையும் சிவன் பார்வதியை மணந்து கொள்ளும் திருக்கல்யாணத்தில் நடத்தப்படுவது போல நடத்தி முடிப்பார். அதன்பின் அது சிவன் கோயிலாயின் பஞ்சாட்சரமும், பெருமாள் கோயிலாயின் அஷ்டாச்சரமும் அச்சிறுமிக்கு உபதேசிக்கப்பட்டு, அவளிடம் அந்தத் துணியைத் தந்து அவள் கழுத்தில் தாலியையும் கட்டுவார். அப்போதே முதன் முதலாக நட்டுவனார் அப்பெண்ணுக்கு தன் கலையினைக் கற்றுத்தரத் தொடங்குவார் கோயில் அதிகாரிகள் அப்பெண்ணுக்கு குறிப்பிட்ட அளவு பச்சரிசியினை வழங்குவர். இவ்வாறு மணம் செய்விக்கப்பட்ட சிறுமியைப் பின்னர் அவளுடைய வீட்டிற்கு அழைத்துச் செல்வர் அங்குத் திருமண விழா இரண்டு மூன்று நாள்கள் தொடர்ந்து கொண்டாடப் பெறும். பிராமணர்கள் மணச் சடங்கில்

செய்யப்படுவது போலத் தேங்காயை உருட்டும் சடங்கினைக் கோயில் புரோகிதரைக் கொண்டு நடத்துவர் அல்லது வயதான ஒரு தாசி ஆண் வேடம் தரித்து மணமகனாக இச்சடங்கில் பங்கு பெறுவாள். அச் சிறுமி தெருக்களில் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படுவாள்.

"ஆண் குழந்தை பிறக்கும்போது அது மகிழ்ச்சிக்கு உரிய நிகழ்ச்சியாகக் கருதப்படுவதில்லை. அச் சமயத்தில் விளக்கு மங்கலாகவே ஏற்றி வைக்கப்படும். சொத்துரிமை பெண்கள் வழிபட்டதாவதோடு, ஒருத்தி ஈட்டும் பொருள் அனைத்துக்கும் அவளுடைய பெண்களே உரிமை உடையவர்களாவர். ஒரு நாட்டிய மகள் இறந்தால் அவள் சார்ந்திருந்த கோயிலிலிருந்து சாவுச் சடங்குகள் தொடர்பான செலவுகளுக்காகக் கொஞ்சம் நெல்லும், ஐந்து பணமும் தருவர். கோயில் புரோகிதர் பிணத்தை அலங்கரிக்க மாலையும், விபூதியும் தருவார். இதன் பின் ஒரு நம்பியான், ஓர் ஓவச்சன், சில வேளாளர் சாதிப் பெரியவர்கள் தீட்டுப்படாத ஒரு குடிக்காரி ஆகியோர் இறந்து போனவளுடைய இல்லத்தில் கூடுவர். ஓவச்சன் தன் இசைக் கருவிகளை முழக்குவான். வேளாளரும் குடிக்காரியும் பிணத் தின் மீது தெளிப்பதற்கான மஞ்சளை அரைப்பர். இறந்தது கோயில் நாட்டிய மகளாயின் பிணத்தின் மீது மஞ்சள் நீர் தெளிக்கும் காரியத்தைக் கோயில் குருக்கள் செய்வார். அதன் பிறகே சாவுச் சடங்குகள் நடத்தப்படும். பிணத்திற்குக் கொள்ளி இடுவதற்கு உரியவனான ஆண் பிள்ளை தன் தலையை மொட்டையடித்துக் கொள்வான். ஒருவர் கோயில் குருக்கள் இறக்கும்போது அவர் பிராமணராக இருப்பினும், அவரிடம் தாலிக்கட்டும் சடங்கினைச் செய்து கொண்ட நாட்டிய மகள் அவர் பிணம் கிடக்கும் இடத்திற்குச் சென்று அதன் மீது தெளிப்பதற்கான மஞ்சளினை அரைப்பாள். தாயாரும், தாய் மாமனும் இறந்த நாள்கள் ஆண்டுதோறும் நாட்டிய மகளிரால் நினைவு நாள்களாகக் கடைபிடிக்கப்படும்.

"ஒரு நாட்டிய மகளைத் தத்து எடுத்துக் கொள்வது விரிவான தொரு சடங்காகும். கோயில் அதிகாரிகளிடம் தத்து

எடுத்துக் கொள்ளப்படும் இறுமியைத் தத்து எடுத்துக் கொள் பவள் தன் குடிக்கும், பதிக்கும் உரிமை உடையவளாக அனுமதிக் கும்படி விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும். அதற்கான அனுமதி கிடைத்ததும் தத்து எடுத்துக் கொள்பவளுடைய இல்லத்தில் அனைவரும் கூடுவர். ஓர் உடன்படிக்கை எழுதப் பட்டு ஜாதகர்மச் சடங்கினை ஒத்ததொரு சடங்கு நிகழ்த்தப் படும். அச் சிறுமிக்கு மணச் சடங்குகள் நிகழ்த்தப்பட்டு அவள் நட்டுவனாரிடம் முறையான பயிற்சிக்காக ஒப்படைக்கப் படுவாள்."

தேவதாசிகளின் பொட்டுக்கட்டும் சடங்கு, சொத்துரிமை முதலியவை தொடர்பாக சென்னை உயர் நீதி மன்றத்தில் நிகழ்ந்த வழக்குகள் பற்றிய விவரங்கள் கீழே தரப்படுகின்றன.*

(அ) ஐந்து வயதான ஒரு சிறுமியை, அவளைப் பொது மகளாகப் பயன்படுத்தும் நோக்கத்தோடு விலைக்கு வாங்கிய நாட்டிய மகள் ஒருத்தி மீது, அவள் அச்சிறுமியை அவ்வாறு தவறான நோக்கத்தில் பயன்படுத்தப்படுவதற்கு வாய்ப்பு உண்டு எனத் தெரிந்தும் அறுபது ரூபாய் கொடுத்து விலைக்கு வாங்கி யது தொடர்பான வழக்கு. அவள் வாழ்ந்த பகுதியில் அப்பகு தியைச் சார்ந்த மற்ற நாட்டிய மகளிரும் இதே போன்ற தவ றான நோக்கத்தோடு சிறுமிகளை விலை கொடுத்து வாங்கி வளர்த்து வருகின்றனர். அவர்கள் ஒருபோதும் அச்சிறுமியரைத் திருமணம் செய்து தருவதில்லை. நாட்டிய மகளிராகவோ பொது மகளிராகவோ ஆக்கவே அவ்வாறு அவர்களால் சிறுமிகள் வாங் கப்படுகின்றனர் என்பதும் வழக்கின் ஒரு பகுதியாகும். ஒரு சாட்சி அதோனியில் நாற்பது நாட்டிய மகளிரின் இல்லங்கள் இருப்ப தாகவும், அவர்கள் பொதுமகளிராகத் தொழில் செய்தே பொருள் தேடிக் கொள்கின்றனரெனவும், சொந்தமாகப் பெண் பிள்ளை பெற்றுக் கொள்ளாதவர்கள் மற்றவர்களிடமிருந்து சிறுமிகளை விலைக்கு வாங்கி வளர்த்து அவர்களை நாட்டிய

* பார்க்க: நாட்டிய மகளிரும் அவர்களுடைய சந்ததியினரும் தொடர்பான சொத்துரிமை, சிவனாம்சம் முதலியன பற்றிய வழக்கு விவரங்களும் தீர்ப்பு களும் - சி. இராமச்சந்திர அய்யர், சென்னை, 1892.

மகளிராகவோ பொதுமகளிராகவோ ஆக்குகின்றனர் எனவும் கூறினார். அவரே மேலும் நாட்டிய மகளிருக்கு ஆண் பிள்ளைகளைவிடப் பெண்பிள்ளைகளை வளர்ப்பதால் நல்ல வருமானம் கிடைப்பதாகவும் சாட்சியமளித்துள்ளார். மற்றொரு சாட்சி நாட்டிய மகளிர் தங்களுக்கு வயதாகி விடுமானால் சிறுமிகளை விலைக்கு வாங்கி வளர்த்துத் தங்கள் தொழிலில் ஈடுபடுத்துவரெனவும் நல்ல அழகுள்ள சிறுமிகளையே வாங்குவர் எனவும் சாட்சியம் அளித்துள்ளார்.*

(ஆ) கைதிகள் இருவரும் ஒரு கோயிலைச் சேர்ந்த நாட்டிய மகளிர் என்பதனைச் சாட்சியங்கள் தெரிவித்தன. அவர்களுள் ஒருத்தி மற்றொருத்தியின் இரண்டு குழந்தைகளை நாட்டிய மகளிராக்கக் கோயிலுக்குக் கொண்டு சென்றாள். கோயிலில் அவர்களுக்குப் பொட்டுக் கட்டப்பட்டுக் கோயில் கணக்குகளில் அவர்கள் பெயரும் பதியப்பட்டன. முதல் கைதி (பெண்களின் தாயார்) தன் இரு பெண்களையும் மூன்றாவது கைதியாக உள்ள ஒருத்திக்கு ஓர் அட்டிகைக்கும், முப்பத்தைந்து ரூபாய்க்குமாக விற்றுவிட்டாள். அக்குழந்தைகள் முறையே ஏழு இரண்டு வயதானவர்களாகத் தோன்றுகின்றனர். கொடுக்கப்பட்டுள்ள சாட்சியங்களிலிருந்து, நாட்டிய மகளிர் கோயில்களில் சில பணிகளை மேற்கொண்டும், சில தனிப்பட்டவர்கள் வீடுகளில் நடத்தப்படும் சடங்குகளில் உதவிகள் செய்தும், திருமணங்களின் போது பாடியும் ஆடியும், பொதுமகளிராகப் பொருள் ஈட்டியும் வாழ்க்கை நடத்தி வருவதாகத் தெரிகின்றது.†

(இ) முதல் கைதி ஒரு பெரிய கோயிலுக்குத் தன் மகளை நாட்டிய மகளாகப் பதிந்து கொள்ளும்படி விண்ணப்பம் தந்தாள். அவன் தன் மகளுடைய வயது பதின்மூன்று எனக் குறிப்பிட்டிருந்தாள். அவ்வாறு கோயிலில் பதிந்து கொண்ட ஓரிரு மாதங்கள் சென்றபின் அவள் பூப்படைந்தாள். அவளுடைய தந்தை இரண்டாவது கைதியான நாட்டிய மகளின்

---

* இந்தியச் சட்ட அறிக்கைகள், சென்னையிலிருந்து வெளியானவை, தொகுதி 23, 1900. (Indian Law Reports, Madras Series, XXIII, 1900.)

† முந்து நூல், தொகுதி – 5, 1869-70.

பணியாளனாக இருந்து வருகின்றான். அந்த இரண்டாவது கைதியான நாட்டிய மகளே ஐந்து ஆண்டுகளாக அச்சிறுமிக்கு நாட்டியம் கற்றுத் தந்து கொண்டுள்ளாள். இரண்டாவது கைதி அந்தப் பெண்ணைக் கோயிலுக்கு அழைத்து வந்தவள் என்பதையும், கோயிலில் அச்சிறுமிக்குப் பொட்டுக் கட்டும் போதும் மற்ற சடங்குகளின் போதும் முதலாம் கைதியும் இரண்டாம் கைதியும் உடன் இருந்தனர் என்பதனையும் சாட்சியங்கள் தெரிவிக்கின்றன. மூன்றாவது கைதியான கோயில் பட்டர்தான் அச்சிறுமிக்கு உண்மையில் பொட்டுக் கட்டியவர். அது அத் தாசி தெய்வத்திற்கு மணம் முடிக்கப் பட்டாள் என்பதற்கு அடையாளம் ஆகும். சில சமயங்களில் ஒருவனுக்கே ஓராண்டு அளவிற்கோ அதற்கு மேலுமோ உரிமை பூண்டவர்களாக வாழ்க்கை நடத்தினாலும், நாட்டிய மகளிர் பொதுவாகப் பொதுமகளிராகவே வாழ்க்கை நடத்துகின்றனர் என்பதற்கான வழக்கமான சாட்சியங்களும் கூறப்பட்டன. *

(ஈ) தேவதாசி ஒருத்தி முறையீட்டாளராக வழக்கு மன்றத்தில் பின்வருமாறு முறையிட்டுக் கொண்டாள். ஒரு குறிப்பிட்ட திருவிழாச் சமயத்தில், வழக்கப்படி தெய்வத்திற்கு முன் வைத்துப் படைத்துத் தீபதூபம் காட்டியபின், மற்றவர்களுக்கு வழங்குவதற்காக அத்தேவதாசி கொண்டு வந்த படையலை, அவள் ஒரு கோமட்டியின் வீட்டிற்கு நாட்டியம் ஆடச் சென்றாள் என்ற காரணம் காட்டி அர்ச்சகர் ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார் என்பதே அத்தேவதாசியின் முறையீடு. மறுக்கப்பட்ட படையலின் விலையான ரூபாய் 10-உம், தன் நன்மதிப்புக்குக் கேடு செய்தமைக்கு ஈடாக ரூபாய் 40-உம் தர வேண்டும் என்பதோடு தொடர்ந்து வழக்கப்படி அவள் தன் மண்டகப்படியைச் சித்திரை வசந்த விழாவில் செய்து வர நிலையான ஆணையும் பிறப்பிக்க வேண்டும் எனவும் அவள் அம் முறையீட்டில் கேட்டுக் கொண்டாள். அக்கோயிலின் அர்ச்சகர் ஒழுக்க நெறிமுறைகளுக்கு மாறாக ஒரு கோமட்

---

* முந்து நூல், தொகுதி – 1, 1876 - 78,

டியின் வீட்டிற்கு நாட்டியம் ஆடச் சென்ற அவள் அதன்பின் அந்தக் குற்றத்திற்குப் பரிகாரமாகச் சாஸ்திரங்களில் கூறப் பட்டுள்ள பஞ்சகவ்வியத்தைக் குடிக்க மறுத்ததால் அவள் சாதி விலக்கம் பெற்றதோடு கோயிலிலிருந்தும் விலக்கப்பட்ட வள் என எதிர் வழக்காடியுள்ளார்.*

(உ) ஒரு கோயிலில் அக் கோயிலின் அறங்காவலர் அக் கோயிலைச் சேர்ந்த நாட்டிய மகளிரின் சமூகத்தின் அனுமதி யைப் பெறாமலேயே இரண்டு நாட்டிய மகளிரைக் கோயிலுக்கு உரியவர்களாக ஆக்கினார். அந்த அறங்காவலர் மீதும், அவர் கோயிலுக்கு உரிமையாக்கிய இரண்டு தேவதாசிகள் மீதும் வழக் குத் தொடரப்பட்டது. அவ் வழக்கில் கோயிலைச் சேர்ந்த தேவ தாசிகள் (1) கோயிலுக்குத் தேவதாசிகளை உரிமையாக்கும் உரி மையையும் (2) தங்களைக் கட்டுப் படுத்தவும், கோயிலிலிருந்து விலக்கவும் அறங்காவலருக்கு உள்ள உரிமையையும் பற்றிவழக்கு மன்றத்தார் விசாரித்து முறையீட்டாளர்களான கோயிலில் பணி யாற்றும் தேவதாசிகளின் உரிமைகளை வரையறுப்பதோடு, தங்க ளுக்கு உறவுடையவர்கள், தங்களால் தத்து எடுத்துக் கொள்ளப் பட்டவர்கள், தங்கள் எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்டு அறங்காவலர்களிடம் கோயிலுக்கு உரிமை யாக்கப் பரிந்துரை செய்பவர்களைத் தவிர மற்றவர்கள் தேவ தாசிகளாக உரிமையாக்கத் தகுதியற்றவர்கள் என விலக்கு ஆணை பிறப்பிக்க வேண்டும் எனவும், முறைக்கு மாறாக அப் புதிய தேவதாசிகள் உரிமையாக்கப்பட்டிருக்கின்றனர் எனவும், அவர்களுக்குத் தேவதாசிகளின் உரிமைகளில் எத்தகைய பங்கும் இல்லையெனவும், அந்தப் பொறுப்பில் அவர்கள் கோயிலுக்கு வருகை தருதல் கூடாதெனவும், முறையாக உரிமையாக்கப்பட்ட தேவதாசிகள் தங்கள் பணியினைச் செய்வதில் அவர்கள் தலை யிடக் கூடாதென ஆணை பிறப்பிக்கப்பட வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டனர். முதல் எதிர்வாதி தங்களால் ஒப்புக் கொள்ளப்படாத மற்ற தேவதாசிகளை முத்திரையிட்டு உரிமை யாக்குவதற்கு எதிராக ஆணை பிறப்பிக்க வேண்டும் எனவும்

---

* முந்து நூல், தொகுதி – 6, 1883.

கேட்டுக் கொண்டனர். வழக்கு மன்ற நடுவர் இவர்கள் கேட்டுக் கொண்டபடி ஆணை பிறப்பித்தால் அது பொது நலக் கோட்பாடுகளுக்கு முரணானதாகவும், வழக்கு மன்றமே அவர்களைக் குற்றச் சட்டத்திற்கு உடந்தையாக்கியதாகவும் ஆகும் எனவும் கூறி, வழக்கைத் தள்ளுபடி செய்துவிட்டார். இதன்மேல் அவர்கள் மேல் முறையீடு செய்து கொண்டனர். அதனையும் வழக்கு மன்றம் தள்ளி விட்டது. நடுவர் களில் ஒருவர், முறையீட்டாளர்கள், தங்களுக்கும் வேறு சில நாட்டிய மகளிருக்கும், பொதுமகளிராகத் தொழில் நடத்துபவா களுக்குமே பெண் குழந்தைகளைக் கோயில்களுக்கு நாட்டிய மகளிராக உரிமையாக்கி, அதற்கான முத்திரையிடப்பட்டுப், பின்னர் அவர்கள் பருவமடைந்ததும், பொதுமகளிராகத் தனிப் பட்ட சிலருக்கோ, அல்லது எல்லோருக்குமோ உரிமை உடைய வர்களாகத் தொழில் நடத்திக் கொள்ளுபவர்களாக ஆகும் படியாக ஆக்குவிக்கத் தனி உரிமை வழங்கும்படி கேட்கின்றனர் எனக் குறிப்பிட்டுள்ளார்.*

(ஊ) ஒரு கோயிலில் தனக்கு நாட்டிய மகளிருக்கான உரிய மிராசு உரிமையை நிலைநாட்ட ஒரு தேவதாசி வழக்குத் தொடர்ந்திருந்தாள். அந்த மிராசையும் அதனோடு இணைக்கப் பட்ட சிறப்புகள், முன்னுரிமைகள் ஆகியவற்றிக்குரிய முந்தைய ஆண்டின் மதிப்பான தொகை ரூபாய் இருபதும் தனக்குத் தரப்பட வேண்டும் எனக் கேட்டிருந்தாள். அக்கோயிலின் அறங்காவலரும், அவரது முகவர்களும் தகாத முறையில் தன்னை நாட்டிய மகள் என்ற உரிமையிலிருந்தும் விலக்கிவிட்ட தாகவும், அதற்குக் காரணம், அறங்காவலர் புதிதாகக் கோயி லுக்கு நாட்டிய மகளிரை உரிமையாக்கியபோது, தனக்கும் தன்னையொத்த பணியிலிருக்கும் நாட்டிய மகளிருக்கும் மட்டுமே உரிமையுடைய அப்பணியில் அறங்காவலர் வேறு மகளிரை அமர்த்த முற்பட்டபோது அதற்குத் தான் உடன்படாது எதிர்ப்புக் காட்டியதேயாகும் எனவும் கூறியிருந்தாள். மாவட்ட நடுவர் இந்த முறையீட்டினைத் தள்ளுபடி செய்துவிட்டார்.

---

* முந்து நூல், தொகுதி – 1, 1876–78

எனினும் உயர் நீதி மன்றம் மறுபடியும் அவ் வழக்கை ஆய்ந்து இவ்வழக்கில் பரம்பரைப் பணி உரிமை உள்ளதா எனவும், அப்பணியோடு அறக்கொடையும் பணிக்கான ஊதியமும் இணைக்கப்பட்டிருக்கின்றதா எனவும் கூறும்படியும் கேட்டுக் கொண்டுள்ளது.*

(எ) பதினேழு வயதினளான ஒருத்தி கோயில் அறங்காவலர்கள் மீது வழக்கு ஒன்று தொடர்ந்தாள். அதில் சில ஆண்டுகளுக்கு முன்பு இறந்து போன ஒருத்தி கோயில் நாட்டிய மகளிரில் ஒருத்தி எனவும், எனவே அவள் கோயில் அறக்கொடை ஒன்றினுக்கு உரிமை உடையவள் எனவும், அவள் முறையீட்டாளரான தன்னைத் தத்து எடுத்துக் கொண்டுள்ளாள் எனவும், எனவே தான் அவளுடைய அத்தப் பணிப் பொறுப்புக்கும், அதற்குரிய ஊதியத்திற்கும் உரிமையுடையவள் எனவும், தான் பொட்டுத்தாலி அணிந்து கொள்ளும்வரை கோயிலினுள் நுழைய இயலாதெனவும், அவ்வாறு அணிந்து கொள்ள அறங்காவலர்கள் அனுமதிக்கவில்லை எனவும், தன் முறையீட்டில் கூறியிருந்தாள். முறையீட்டாளரான அவள், எதிர்வாதிகள் தான் கோயிலில் தாலி அணியத் தனக்கு அனுமதி வழங்கினால்தான் கோயிலில் தான் நாட்டியம் ஆடும் பணியைச் செய்து, அதற்கான உரிமைகளையும் மதிப்புக்களையும் பெற முடியும் எனவும் கேட்டுக் கொண்டிருந்தாள். நடுவர் இந்த முறையீட்டினை ஏற்றுக் கொண்டால் அது முறையீட்டாளர் தன்னைப் பொதுமகளாகப் பதிந்து கொள்ள உரிமை வழங்கியதாகும் என்ற அடிப்படையில் அதனை ஏற்றுக் கொள்ளாது தள்ளிவிட்டார்.†

(ஏ) பொதுமகளான ஒரு நாட்டிய மகள் இறந்தபோது, அவள் தத்து எடுத்துக் கொண்ட அவளுடைய உடன் பிறந்தவளுடைய அதே சாதியைச் சேர்ந்த மகள், அதன் காரணமாக இறந்தவளுடைய சாதியைச் சேர்ந்த அவளுடைய தம்பிக்குப்

* முந்து நூல், தொகுதி - 1, 1876-78
† முந்து நூல், தொகுதி - 19, 1896.

பதிலாக அவளுடைய சொத்துக்களுக்கு உரிமை உடைய வளானாள். இது தொடர்பான பொதுவிதி பொதுமகளாகி விட்ட ஒரு நாட்டிய மகளுக்கும், அந்த இழிதொழிலில் ஈடு படாது மேம்பட்டவர்களுக்குமான உறவு அவள் அந்தத் தொழிலை மேற்கொண்ட அளவிலேயே சட்டப்படி துண்டிக் கப்பட்டுவிட்டது என்ற அடிப்படையில் அமைந்ததாகும்.*

(ஐ) நொடித்துப்போன ஒருவன் ரூ. 34,662 மதிப்புடைய சொத்தினைத் தன் உடன்பிறந்தவள் தனக்குப் பாகம் பிரித் துத் தர வேண்டும் என வழக்குத் தொடர்ந்தான். அவர்கள் கோதாவரி மாவட்டத்தைச் சேர்ந்த போகம் சாதியினர். அவனுடைய உடன்பிறந்தவள் தான் பொதுமகளாக இருந்து தன் சொந்த முயற்சியில் ஈட்டியது அந்தச் சொத்து ஆகை யால் அதில் தன் உடன் பிறந்தவனுக்கு உரிமை இல்லை என வழக்காடினாள். அவன் தன் தாயார் விட்டுச் சென்ற சொத் தில் பாதியான ரூ. 100-க்கு மட்டுமே வழக்கு மன்ற ஆணை பெற முடிந்தது. உயர்நீதி மன்றம் அந்த வட்டார வழக்குப் பற்றிய சாட்சியங்களின் அடிப்படையில் கீழ் நீதி மன்றம் வழங் கிய தீர்ப்புச் சரியானதே என்று உறுதி செய்தது.†

(ஒ) பெல்லாரி மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு மாதிகன் ஒரு தெய்வச் சிலைக்கு வயது வராத தன் மகளை மணம் செய் வித்துப் பசவி ஆக்கினான் எனக் குற்றம் சாட்டப்பட்டான். ஒரு பசவி, சட்டப்படி மணம் செய்து கொள்ளும் உரிமை அற்றவள். அவன் பொதுவாக ஆண்களோடு கள்ள நட்புக் கொண்டு வாழ்வாள். அவளுடைய பிள்ளைகள் அவளுடைய தந்தையின் சொத்துக்கு உரிமை உடையவர்கள் ஆவார்கள். குற்றம் சாட்டப் பட்டவன், "பதினேழு வயதுக்குட்பட்ட வயது வராத ஒருவரை யார் ஒருவர் விற்கின்றார்களோ அல்லது வாடகைக்கு விடுகின்றார்களோ, அல்லது பதினாறு வயதுக்குட் பட்ட வயது வராத ஒருத்தியை அவளைப் பொதுமகளாகவோ அல்லது சட்டத்திற்கு முரணாகவோ விற்கவோ பயன்படுத்

* முந்து நூல், தொகுதி - 8, 1890.
† முந்து நூல், தொகுதி - 14, 1891.

தவோ செய்வார்கள் என்பதனைத் தெரிந்திருந்தும், அவளை அவர்களுக்குத் தருபவர்கள் தண்டனைக்கு உரியவர் ஆவர்'' என்ற குற்றவியல் சட்டப்படி குற்றம் புரிந்தவனாவான் எனக் குற்றம் சாட்டப்பட்டிருந்தான். இதனைப் பற்றி மாவட்ட குற்ற வியல் நடுவர் சாட்சியங்களைக் குறிப்பிட்டுப் பசவிகள் மற்றவர் களைப்போலப் பணத்திற்காகப் பொதுமகளிராவதில்லை எனக் கூறியதோடு மேலும் பின்வருமாறு அது பற்றிக் கூறி யுள்ளார்:- ''பசவிகள் மாதிகர் சாதியின் வழக்குப் படியே பசவி களாக விடப்படுகின்றார்கள் என்பது சாட்சியங்களிலிருந்து தெளிவாகப் புலனாகின்றது. பசவிகள் விடப்படுவதின் ஒரு முக்கிய நோக்கம் அவளுக்குப் பிறக்கும் ஆண் சந்ததிகள் அவளுடைய தந்தையின் குடும்பச் சொத்துக்கு உரிமை உடைய வர்களாகி, அவருடைய சந்ததி வளர வழி செய்ய வேண்டிய தற்காகத்தான் என்பதும் சாட்சியங்களால் தெளிவாகின்றது. அவளைத் திருமணம் செய்து தந்துவிடின் அவள் அவளுடைய கணவனின் குடும்பம் தழைக்கக் கொடுக்கப்பட்டவளாகிவிடு வாள். இந்த வழக்கில் இந்தப் பெண் பசவியாக்கப்பட்டது அவள் பசவியாகப் பிள்ளைப் பேறின்றி இருக்கும் அவளுடைய அத்தையின் வாரிசாக இருக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு தான். சித்தலிங்கன கௌட் அவரும் அவருடைய சந்ததியினரும் பெற்றோரின் சொத்துக்களை வாரிசு உரிமையாகப் பெறுவதற் குரியவர் எனக் கூறுகின்றார். மிகப் பெரும் அளவில் பசவிகள் ஆக்கப்படுகின்றார்கள் என்பதற்கும் அவர்கள் அதன் பின்னும் அவர்களுடைய பெற்றோருடனேயே வசிக்கின்றார்கள் என்ப தற்கும் சாட்சியங்கள் உள்ளன. சாதியைச் சார்ந்த மதிப்புமிக்க உறுப்பினர்களாக இவர்கள் கருதப்படுகின்றார்களே அன்றி மாறுபடக் கருதப்படுகின்றார்கள் என்பதற்கான சாட்சியங்கள் ஏதுமில்லை. மாதிகர், போயர் சாதிகளில் பசவி என்பது இந்துச் சட்டம் (மிடக்ஷர, அத்தியாயம். 1, ச. 11, 3) சொல்லும் 'அமர்த்தப்பட்ட மகள்' என்பதற்குச் சமமான சொல்லாகும். இவ்வளவையும் முழுமையாகக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது, உச்சிங்கிடு துர்க்கத்தில் உள்ள கோயிலில் மாதிகர்களி டையே ஒருவகைத் திருமணச் சடங்கினை நடத்தும் பழக்கம் பெருவழக்கினதாக உள்ளது என்பதும், அதன் காரணமாக

ஒரு பெண் விதவையாக ஆகவோ மணமுறிவு செய்யப் படவோ வாய்ப்பின்றி மணம் செய்யப்படுவாள் என்பதும், தன் விருப்பப்படி அவள் ஆண்களோடு உடல் உறவு கொள்ளும் உரிமை உடையவள் என்பதும், அவளுக்குப் பிறக்கும் பிள்ளைகள் அவள் தந்தையின் வாரிசுகளாகிக் குடும்பப் பெயர் தழைக்கச் செய்வர் என்பதும், பசவிகளின் உடன் பிறந்தவள்களின் பெண்கள் பசவிகளாக்கப்பட்டு அப்பசவி களின் வாரிசுகள் ஆக்கப்படுவர் என்பதும் தெளிவா கின்றன. சிலபோது பசவிகள் பொதுமகளிராக ஆகின்றனர் எனத் தெரியவருகின்றது என்றாலும் சாட்சியங்களின் சொற் களை வைத்துப் பார்க்கையில் அவர்கள் ஆண்களோடு உரிமை யோடு உடல் உறவு கொண்டார்கள் எனக் கொள்ள இடம் உள்ளதேயன்றிக் காசுக்குத் தங்கள் உடலை விற்பனைப் பொருளாக்கினர் எனக் கூற இடமில்லை. இவர்கள், தங்கள் சாதிக்கு இழுக்கு ஏற்படும் வகையில் தங்கள் மனைவியர் அல்லாதாரோடு ஆண்கள் உடல் உறவு கொள்வதைப் போலன்றிச், சாதிக்குக் களங்கம் ஏற்படாத வகையில் ஆண்க ளோடு உடல் உறவு கொள்ளும் உரிமையைப் பெற்றுள்ளனர் எனக் கொள்வதே உண்மையாகும்."*

ஆங்கில அரசின் நிர்வாக முறைப்படியான இந்துச் சட்டத் தில் தேவதாசிகள் சாதியார் மட்டுமே சிறுமிகளைத் தத்து எடுத்துக் கொள்ள உரிமை பெற்றுள்ள பெண்களாவர். மற்றச் சாதிகளில் கைம்பெண் ஒருத்தி தனக்கெனத் தத்து எடுத்துக் கொள்ளும் உரிமை பெற்றவளாக இல்லை. அவள் தன்னுடைய கணவனுக்காகத்தான் தத்தெடுக்கலாம். மேலும் அவள் ஒரு மகனுக்குப் பதிலாக ஒரு மகளைத் தத்தெடுத்துக் கொள்ளும் உரிமையில்லை. பூனாவைச் சேர்ந்த ஒரு பிராமணன் அண் மையில் தனக்குப் பிறந்த மகளைப் போல வேறொரு பெண் ணைத் தத்தாக எடுத்துக் கொள்ள மேற்கொண்ட முயற்சி பொதுச் சட்டப் படியும், வட்டார வழக்குப் படியும் செல்லாத

---

* முந்து நூல், தொகுதி - 15, 1892.

தாக அறிவிக்கப்பட்டுள்ளது.* சென்னை மாநிலத்தில் இதே வழக்குச் செல்லத் தக்கதாகலாம். "சென்னை மாநிலத்திலும், மேற்கு இந்தியாவிலும் நாட்டிய மகளிரிடையே தங்கள் தொழிலைத் தொடர்ந்து செய்யப் பெண்களைத் தத்தெடுத்துக் கொள்ளும் பழக்கம் உள்ளது. இவ்வாறு தத்து எடுத்துக் கொள்ளப்படும் பெண்கள் அவர்களுடைய சொத்துக்கும் வாரிசுதாரர்கள் ஆகின்றனர். இதற்கான தனிப்பட்ட சடங்குகள் ஏதும் நடத்தப்பட வேண்டியதில்லை. ஏற்றுக் கொள்ளப்பட்டார்கள் என்பதனை அறிவித்தலே போதுமானது. இதற்கான தனிப்பட்ட வழக்கங்கள் ஏதும் இல்லாத நிலையில் பொதுவான தத்து எடுத்துக் கொள்ளும் சட்ட நெறியைப் பின்பற்றி இவர்களும் ஒரு பெண்ணை மட்டுமே தத்து எடுத்துக் கொள்ளலாம் எனக் கூறலாம்." என மேனெ எழுதுகின்றார்.† கல்கத்தாவிலும் பம்பாயிலும் நாட்டிய மகளிர் தத்து எடுத்துக் கொள்வது செல்லாது எனத் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது.‡

நாட்டிய மகளிர் தொடர்பான பின்வரும் பழமொழிகளை எடுத்துக் காட்டலாம் என நினைக்கின்றேன்:-

(1) ஆடத் தெரியாத தேவடியாள் கூடம் கோணலென்றாளாம்.

மறைத்திரு எச். ஜென்சன் இதற்குச் சமமானதாகத் தரும் ஆங்கிலப் பழமொழி§ "சாத்தானுக்கு நீந்தத் தெரியவில்லையானால் அது தண்ணீரின் மேல் பழியைப் போடும்."

(2) ஒரு நாட்டியக்காரப் பெண் உயிரோடிருந்து, அவள் அம்மாள் இறந்துவிட்டால் அந்த வீட்டில் கொட்டு முழக்குக்

* கங்கா பாய்க்கும் ஆனந்துக்கும் இடையேயான வழக்கு, 13 பம்பாய், 690, (Ganga Bai V. Anant. 13 Bom., 690.)

† இந்துச் சட்டமும் வழக்கும். (Hindu Law and Usage)

‡ மாக்னாக்டென், தொகுப்புச் சுருக்கம். (Magnaghten, Digest.)

§ தமிழ்ப் பழமொழிகளின் பகுக்கப்பட்ட தொகுப்பு, 1897. (Classified Collection of Tamil Proverbs, 1897.)

கேட்கும். ஆனால் நாட்டியக்காரப் பெண் இறந்துபோய்விட அவளுடைய அம்மாள் உயிரோடிருந்தால் அங்கு எந்தச் சத்தமும் கேட்காது-நாட்டியக்காரப்பெண்ணின் தயவைப் பெறுவதற்காக அவள் அம்மா இறந்துவிட்டால் பலரும் வந்து கூடுவர். அவ்வாறின்றி அவள் இறந்துபோய் விடுவாளானால் அங்கு வந்து கூடுவதால் லாபமில்லையாகையால் யாவரும் ஏனென்று கேட்க மாட்டார்கள் என்று இதற்கு ஜென்சன் விளக்கம் தருகின்றார்.

(3) ஒரு நாட்டியக்காரப் பெண் குழந்தையைக் கழுவிவிடுவதைப் போல – நாட்டிய மகளிருக்குக் குழந்தைகள் இருப்பதாகக் கருதப்படுவதில்லை. எனவே அவளுக்குக் குழந்தைகளை எப்படித் தூய்மையாக வைத்துக் கொள்வது என்று தெரியாது. ஒரு குறைபாட்டினை நீக்க முற்பட்டு அனுபவமில்லாத காரணத்தால் அதனை முன்னைவிட மோசமாக்கி விடுபவர்களைக் குறை கூற இப்பழமொழி கூறப்படும் என ஜென்சன் கூறுகிறார்.

(4) தேவடியாள் வீட்டில் பிள்ளை பிறந்ததைப் போல – நாட்டிய மகளிர் தங்களுக்குக் குழந்தை பிறந்தால் பெண்ணாகப் பிறக்க வேண்டும் என்றே ஆசைப்படுவார்கள், அவ்வாறு பிறப்பவர்களைத் தங்கள் தொழிலில் ஈடுபடுத்தலாம் என மகிழ்வர். மாறாக ஆணாகப் பிறந்தால் வருந்துவர் என ஜென்சன் விளக்கம் தருகின்றார்.

(5) கோயிலில் முன்பு மூக்கு முட்டத் தின்றவள் இன்று ஒருவாய் சோற்றுக்கு கரணம் போடுகின்றாள்.

(6) ஒருத்தி கற்புடையவளாய் இருந்தால் தேவடியாள்கள் தெருவில் கூடக் குடியிருக்கலாம்.

காஞ்சிவரத்தில் இருக்கும் பதிவுகளின்படி ஆடல் மகளிருக்குரிய அடையாளச் சின்னம் மன்மதன். ஒரு கிறித்தவனுக்குரிய அடையாளச் சின்னம் குதிரை தேய்க்கும்சீப்பு.*

---

* ஜே. எஸ். எப். மெக்கென்சி. இந்தியத் தொல்லியல், IV, 1875. (J.S.F. Mackenzie. Ind.Ant.IV, 1875.)

**தேவாதிகர் – Dēvādiga**

தேவாதிகர் தென் கன்னடத்தைச் சேர்ந்த கன்னடம் பேசும் கோயில் பணியாளர்கள். இவர்களைப் பற்றித் திரு எச். எ. ஸ்டுவர்ட் பின்வருமாறு எழுதுகின்றார்.* – "இந்துக்களின் கோயில்களில் இசைவாணர்களாகப் பணியாற்றும் இவர்கள் கோயில் பணியாளர்கள். மயூரவர்மன் ஆட்சிக் காலத்தில் அவன் புதிதாகக் கட்டிய பல கோயில்களிலும் எல்லாப் பணிகளையும் பிராமணர்களே செய்வது இயலாததாக இருந்தது. எனவே அவன் கோயில்களில் பூசையையும், வழிபாட்டையும் மட்டும் பிராமணர்கள் செய்ய வேண்டும் எனவும், பிற பணிகளை ஸ்தானிகர்களும், தேவாதிகர்களும் செய்ய வேண்டும் எனவும் விதித்தான். இவர்கள் மொயுளி எனவும் அழைக்கப்படுகின் றனர். கன்னட மொய்ளி என்ற வேறு ஒரு சாதியும் உள்ளது. அவர்களோடு தேவாதிகர் உடன் உண்பதில்லை. தேவாதிகரில் சிலர் பயிர்த்தொழில் செய்கின்றனர். சிலர் குற்றேவலர்களா கவும், காவலர்களாகவும் பணிபுரிகின்றனர். இவர்களுள் பதி னொரு உட்பிரிவுகள் இருப்பதாகப் பதியப்பட்டிருப்பினும் அவற்றுள் துளு பிரிவினர் மட்டுமே எண்ணிக்கையில் மிகுந்துள் ளனர். வைணவர்களான இவர்கள் துளு பிராமணர்களைத் தங்கள் சடங்குகளை நடத்த அமர்த்துவர். பெண்களை மணம் செய்விக்க வயது வரம்பு ஏதும் இல்லை. கைம்பெண்களின் மறு மணம் அனுமதிக்கப்பட்டாலும், இளம் விதவைகளே அதனைச் செய்துகொள்கின்றனர். இறந்தவர்களை எரிக்கின்றனர். இவர்கள் மாமிசம் உண்பதோடு மதுவும் அருந்துவர்."

தேவாதிகர் அல்லது மொயுளிகளான இவர்கள் துளு மொழி பேசுகின்றவர்கள். பெரும்பாலும் பயிர்த்தொழிலையே இவர்கள் மேற்கொண்டிருந்தாலும் இவர்கள் பரமபரைத் தொழில் கோவில் பணி என்றே கூறப்படுகின்றது. ஆண்களும், பெண்களும் பெருமளவில் வீட்டுவேலை செய்யும் பணியாளர்

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, 1891; தென் கன்னட மாவட் டக் கையேடு (Madras Census Report 1891; Manual of the South Canara district.)

கனாக அமர்ந்துள்ளனர். பண்டார்களைப் போலவே அளிய சந்தானச் சொத்துரிமை முறையினையே இவர்களும் மேற் கொள்ளுகின்றனர். பண்டார்களிடையேயும், பில்லவர்களிடையே யும் காணப்படும் குலப் பிரிவு அமைப்புகள் இவர்களிடையேயும் காணப்படுகின்றன. இவர்கள் மணச் சடங்குகள்* பெரும்பாலும் பண்டார் மணச் சடங்குகளையே ஒத்தமைகின்றன. இவர்கள் மணத்தில் தாரை வார்க்கும் சடங்கின் போது தாரை நீர் ஊற்றும் சமயம் மணமக்களுக்கு இடையே ஒரு திரை தொங்க விடப்படுவது இவர்கள் மணச் சடங்கில் குறிப்பிடத்தக்க மாறு பாடாகும். மணம் நிச்சயிக்கப்பட்டதின் அடையாளமாக மணமகளுக்கு ஒரு மோதிரம் வழங்குவர். அவள் அதனைத் தன் சிறு விரலில் அணிந்து கொள்வாள். இது ஒரு கலப்புச் சாதி. சமணர்களைப் போலச் சதுர முகமும் உயர்ந்தெழுந்த கன்னக் கதுப்பு எலும்புகளையும் கொண்ட தேவாதிகரை ஆங்காங்கே காணலாம்.

1901 கணக்கெடுப்பில் தக்கெர தேவளி, பதார்த்தி, வாலகதவ என்பன தேவாதிகர்களின் உட்பிரிவுகளாகப் பதியப் பட்டுள்ளன.

### தேவலர் - Dēvala (belonging to God)

ஒட்டேகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். இதற்குச் சமமான தேவாலி, தேவாதிகர்களின உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. தேவல்யாள் என்பது தோடர்களின் ஒரு பிரிவாகும்.* நீலகிரியில் தேவால என்ற ஊரருகே தங்கி வாழும் இருளர்களின் ஒரு பிரிவினர் தேவால என்ற பெயரைப் பெற்றுள்ளனர்.

### தேவாங்கர் - Devanga

சென்னை மாநிலம் முழுவதிலும் காணப்படும் தெலுங்கு அல்லது கன்னடம் பேசும் நெசவாளர் சாதியைச் சேர்ந்தவர்கள்

* பிரீக்ஸ், நீலகிரி மாவட்ட ஆதி குடிகளும் நினைவுச் சின்னங்களும் பற்றிய குறிப்பு. (Breeks, Account of the Primitive Tribes and Monuments of the Nilgiris.)

தேவாங்கர். பெல்லாரி மாவட்டத்தில் நான் ஆய்வினை மேற்கொண்டபோது இவர்கள் என்னைப் பிளேக் கொள்ளை நோய் வரிவிதிப்புக்காரனெனவும், விக்டோரியா நினைவுச் சின்னத்திற்காகச் சந்தாத் திரட்டுபவன் எனவும், மற்றவர் களோடு என் பணியினைத் தொடர்புபடுத்தித் தவறாகக் கணித்தனர். பெண்களுக்கான பருத்தி நூல் சேலைகளையும், பட்டுக் கரையோடு கூடிய சேலைகளையும் நெய்யும் தொழிலில் ஈடுபட்டவர்களான இவர்கள் அச்சேலைகளைக் கடைத்தெருவில் செல்வர்களான வணிகர்களுக்கு விற்பனை செய்வர். அவ் வணிகர்களுள் சிலர் தேவாங்கர் சாதியினரே. அவர்கள் என் னிடம் சிரித்தபடியே தாங்கள் நெய்யும் தொழில் செய்தாலும், ஐரோப்பாவிலிருந்து இறக்குமதி செயயப்பட்ட துணிகளை அணிவதே மிகச் சிக்கனமானது எனக் கூறினர்.

தேவாங்கர் ஜாதரு அல்லது ஜாத (பெரியவன்), தேந்தர, தேவர, தேர, சேணியன், சேடன் என்றும் அழைக்கப்படு கின்றனர். தமிழ்நாட்டில் கோயமுத்தூரில் இவர்களைச் செட்டுக்காரன் (சிக்கனமானவன்) என வழங்குகின்றனர்.

இவர்கள் தோற்றம் பற்றிப் பின்வரும் வரலாறு கூறப்படு கிறது:- பிரமன் மனுவைப் படைத்தவுடன் அவனிடம் தேவர் களுக்கும் மக்களுக்கும் ஆடைகள் நெய்யும்படி கூறினான். அதன்படி மனு சில ஆண்டுகள் நெய்தல் தொழிலை மேற் கொண்டிருந்தபின் பக்தி நெறியாலும் நன்னடத்தையாலும் தேவர் உலகம் சென்று சேர்ந்தான். அதன்பின் நெசவினை மேற்கொள்ள எவருமில்லாததால் தேவர்களும், மக்களும் இலை ஆடைகளையே அணிய வேண்டியதாயிற்று. இதனால் எரிச் சலுற்ற அவர்கள் பிரமனிடம் தங்களை இந்த இக்கட்டிலிருந்து மீட்கும்படி வேண்டினர். பிரமன் அவர்களைச் சிவனிடம் அழைத்துச் செல்லச் சிவன் ஒளிமிக்கவனான ஒருவனைப் படைத்து அவனைத் தேவலன் என அழைத்தான். அவனு டைய ஒளியினைத் தாங்க இயலாது அனைவரும் குழம் பியவர்களாகச் சிதறி ஓடினர். பார்வதி மட்டுமே சிவனருகே இருப்பாளாயினள். சிவன் பார்வதியிடம், தேவாலன்

தேவர்கள், மக்கள் ஆகியோர் உறுப்புக்களை மறைக்கத் துணி நெய்யப் படைக்கப்பட்டுள்ளதாகவும் அவனுடைய சந்ததியினர் அதன் காரணமாகத் தேவாங்கர் (தேவ அங்கம் தெய்வங்களின் அங்கங்கள்) என அழைக்கப்படுவர் எனவும் கூறினார். தேவலன் விட்டுணுவின் நாபியில் தோன்றியுள்ள தாமரைத் தண்டிலிருந்து துணி நெய்வதற்கான நூலினைப் பெற்றுக் கொள்ளும்படி அறிவுறுத்தப்பட்டான். அவனும் கடுந்தவம் புரிந்து அதனைப் பெற்றான். ஒரு சந்நியாசியைப் போல வேடந் தாங்கி ஒரு குடிசையில் தவம் செய்து கொண்டிருந்த வஜ்ர தந்தன் என்ற ராட்சசனைத் தேவாலன் திரும்பும் வழியில் கண்டு அவனுக்குத் தன் பணிவினைத் தெரிவித்தபின் அக்குடிலேயே இரவைக் கழிக்க முடிவு செய்தான். ஆனால் அன்று மாலையில் அந்த முனிவரும் அவரைச் சேர்ந்தவர்களும் தங்கள் வேடத்தைக் கலைத்து விட்டு, அசுரர்களாக உண்மை உருவில் வந்து தோன்றினர். தேவாலன் விட்டுணுவினுடைய உதவியை வேண்ட, அவர் அவனுக்கு ஒரு சக்கரத்தை வழங்கினார். அதனைக் கொண்டு எண்ணிக்கையில் மிக்கவரான அசுரர்களை வெல்ல முயன்றான். பின்னர் அவன் சௌடேசுவரி அல்லது சௌடநாயகியின் உதவியை வேண்டிப் பூசிக்க, அவள் ஒரு சிங்கத்தின் மீது இருந்தவளாக வந்து அசுரர்களைக் கொன்று தீர்த்தாள். அவளால் கொல்லப்பட்ட அசுரர்கள் வச்ர தந்தன், புகைநேத்ரன், புகைமுகன், சித்ரசேனன், ஜெயதிராத்தன் என்போர் ஆவர். இந்த ஐவரின் குருதியும் முறையே மஞ்சள், சிவப்பு, வெள்ளை, பச்சை, கறுப்பு நிறமாக இருந்தது. அவன் அவர்களது குருதிகளில் தன்னிடம் உள்ள நூல்களைத் தனித்தனியே தோய்த்துப் பல வண்ணங்கள் ஏற்றினான். தங்களைத் தேவாலர் சந்ததியினர் என்றும், தேவாங்கப் பிராமணர் என்றும் கூறிக் கொள்ளும் இவர்கள் சாம்பலிங்க மூர்த்தி என்பவரால் இயற்றப்பட்டதாகக் கருதப்படும் பின்வரும் பாடலை ஆதாரமாகக் காட்டுவர்.

மனு பிராமணர் சாதியில் பிறந்தார்.
கருவில் இருந்தபோது அவர் பிராமணர் என்பது உறுதி.
இத்தச் சாதி சூத்திரச் சாதியில்லை.
தேவாங்கர் பிரமனின் வடிவினர்.

பரமஹல் பதிவுகளில்* தேவாங்கர் தோற்றம் பற்றிய வழக்கு அடிப்படையிலான வரலாறு பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:- "பிரமன் இந்த உலகில் உயிர் உள்ளனவற்றையும், உயிர் அற்றனவற்றையும் படைத்தபோது தேவர், அசுரர், மக்கள் ஆகிய அனைவரும் தங்களுடைய உடலை மறைக்க உரிய ஆடை அற்றவர்களாகவே இருந்தனர். இது நாரதருக்கு மிகுந்த மன வருத்தத்தைத் தந்தால் அவர் கைலையங்கிரியில் இருக்கும் பரமசிவனை அடைந்து, மூவுலகிலும் வாழ்பவர்களின் நாணமற்ற இழிநிலையினை எடுத்துக் கூறி, அதனைப் போக்க ஒரு வழி காணும்படி வேண்டி வணங்கினார். நாரதரின் வேண்டுகோளின் நியாயத்தை உணர்ந்த பரமசிவன் அவர் வேண்டுகோளினை நிறைவேற்ற வேண்டுமென நினைத்தார். அவர் அவ்வாறு எண்ணமிட்டபடி இருக்கும்போதே அவர் உடலிலிருந்தும் ஓர் ஆண்மகன் தோன்றினான். அவன் பிறப்பினைக் குறிக்கும் வகையில் பரமசிவன் அவனுக்குத் தேவ அங்கம் எனப் பெயரிட்டார். தேவ அங்கம் தன்னைப் படைத்தவரை வணங்கித் தன்னைப் படைத்ததற்கான காரணத்தை கூறும்படி வேண்டினான். அதற்கு அவர் பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள ஸ்ரீ மகா விட்டுணுவிடம் சென்றால் என்ன செய்ய வேண்டும் என அவர் கூறுவார் எனப் பதிலிறுத்தார். தேவ அங்கமும் ஸ்ரீ மகா விட்டுணுவை அடைந்து பரமசிவன் பணித்த விவரத்தைக் கூற, அவர், 'நீ உலகத்தவர் உடலை மறைக்க உடையினை நெய்வாயாக' எனக் கூறித் தன் நாபியிலிருந்து வளர்ந்துள்ள தாமரையின் தண்டிலிருந்து கொஞ்சம் நூலினை எடுத்து அதனை எவ்வாறு துணியாக்குவது என அவனுக்குக் கற்றுத் தந்தார். தேவ அங்கம் அதன்படி அவர் கொடுத்த நூலினை ஆடையாக்கி அதனை அவருக்கு வழங்க, அவரும் அதனை ஏற்றுக் கொண்டு, மரங்களிலிருந்து நாரினை எடுத்துத் தேவ உலகத்தவர்களுக்கு உடைகள் தயாரிக்கும்படி கூறினார். தேவ அங்கம் பத்தாயிரம் நெசவாளர்களைப் படைக்க, அவர்கள் காடுகளுக்குச் சென்று மரங்களில் நாரினை எடுத்துத் தேவர்

---

* பகுதி-3, குடிமக்கள். சென்னை அரசு அச்சகம், 1907. (Section III, Inhabitants. Madras Government Press, 1907.)

களுக்கும், மக்களுக்கும் ஆடை நெய்யத் தொடங்கினர். ஒரு நாள் தேவ அங்கமும், அவனைச் சார்ந்தவர்களும் பூலோகத்தில் உள்ள காடுகளுக்கு மரத்தில் நாரெடுக்கச் சென்றபோது அசுரர்கள் அவர்களைத் தாக்கத் தொடங்கினர். அதனால் கடுஞ்சின முற்ற தேவ அங்கம் சீறி எழுந்து, தன் தலைமுடியினைச் சுழற்றித் தரையில் ஓங்கி அடித்தான். அப்பொழுது எட்டுக் கரங்களில் படைக்கலங்களைத் தாங்கியவளாகச் சக்தி தேவி பூமியிலிருந்து வெளிப்பட்டு அசுரர்களைத் தாக்கி அழித்தாள். தேவ அங்கம் தன் சடைமுடியிலிருந்து வந்த அவளுக்குச் சௌடேசுவரி எனப் பெயரிட்டு தன் இனத்தவர்களைக் காத்த அவளைத் தன் குல தெய்வமாக்கிக் கொண்டான்."

காளியின் அவதாரமான சௌடேசுவரியே தேவாங்கர் சாதியின் தெய்வம். அவர்கள் சமூகம் முழுவதும் கோயில் களிலோ, இல்லங்களிலோ, அதற்காக அமைக்கப்பட்ட தோப்புக் களிலோ ஆண்டுக்கு ஒரு முறை அவளுக்காக எடுக்கப்படும் விழாவில் பங்கு பெறுகின்றது. விழாவின்போது நெசவுப் பணி நிறுத்தப்படும். விழாவில் சிறப்பாகப் பங்கு பெறுபவர்கள் விரதம் இருப்பதோடு தங்களைத் தீட்டுப் படாமலும் காத்துக் கொள்வர். விழாவின் முதல் நாள் அலகு நிறுத்துதல் (வாளினை நிறுத்தல்) எனப்படும். அன்று தேவியை வழிபட்டு அவளுக்கு ஒரு மறி அல்லது ஆட்டினைப் பலியிடுவர். அச் சமூகத்தவர் ஊன் உண்ணும் பழக்கம் உடையவர்களாயிருந்தால்தான் இவ்வாறு உயிர்ப்பலி இடப்படும். ஒவ்வொரு குலப் பிரிவிலிருந் தும் குறைந்தது ஒருவனேனும் விரதம் இருந்து, தூய்மை பேணி, வாளினை ஏந்திச் செல்வான். கோயிலினுள்ளோ அதற் கென ஏற்பாடு செய்யப்பட்ட இடத்திலோ பூசாரி நீண்ட வாளினை ஒரு பானையின் வாயின் விளிம்பில் சாயாது நிறுத்தி வைக்கப் பார்ப்பார். அலகு கொண்டு வருபவர்கள் அந்த வாளின் முனையில் தங்கள் மார்பில் காயம் ஏற்படுத்திக்கொள் வர். பூசாரியால் மேலே கூறியபடி வாளை நிறுத்த இயலாவிடின் அது அலகு கொண்டு வந்தவர் தீட்டுக்கு உள்ளாகி உள்ளார் என்பதனைக் குறிக்கும். எனவே அவர் தீட்டு நீங்க மீண்டும் குளித்து வருவார். கூடியுள்ளவர்கள் மீது பசுவின் கோமயமும்

மஞ்சள் நீரும் தெளிக்கப்படும். வீட்டு விலக்குக் காரணமான தீட்டுக்கள் நேராது இருக்க பெண்கள் தூரத்திலேயே நிறுத்தப் படுவர். சௌடேசுவரி ஒரு ஜோதியிலிருந்து தோன்றியதாக நம்பப்படுவதால் விழாவின் இரண்டாம் நாள் ஜோதி நாள் எனப்படும். அன்று அரிசி மாவிளக்கில் நெய்யிட்டுத் தீபம் ஏற்றுவர். இம்மாவிளக்கினைப் பூசாரியின் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் அலகு எடுத்த சிறுவர்களின் உதவியோடு தயாரிப்பார். இந்த விளக்கினைத் தயாரிக்க அரிசி மாவும் வெல்லப் பாகும் பக்குவமாகச் சேர்த்துப் பிசைந்து கூரான உருண்டையாக்கி, அதனை ஒரு வெள்ளி அல்லது பித்தளைத் தட்டில் வைத்து விளக்கேற்றுவர். மூன்றாம் நாள் பானகம், தேங்காய் முதலியன நைவேத்தியமாகப் படைக்கப்பட்டு அனை வருக்கும் வழங்கப்படும். அரிசி மா விளக்கும் பங்கிடப்பட்டுப் பூசாரி, செட்டி., அலகுக்கார ஆண்கள் மற்றும் சிறுவர்கள், சமூகத்தைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்குச் சிறு உருண்டை களாக மிராசு முறைப்படி வழங்கப்படும். திண்டிவனத்தில் இந்த மிராசு உரிமையின் வரிசை பின்வருமாறு அமைந்துள்ளதை எடுத்துக்காட்டாகத் தருகின்றேன்:-

செட்டி (சாதித் தலைவன்).
தொண்டபு குடும்பத்தார்.
பாபட்ல குடும்பத்தார்.
கோசனம் குடும்பத்தார்.
மோடனம் குடும்பத்தார்.

தேவாங்கர்களின் குலதெய்வமான தேவியே நெருப்பிலிருந்து பிறந்தவளாதலால் தீக்குண்டம் மிதிக்கும் நிகழ்ச்சி இவர்கள் விழாவில் இடம் பெறுவதில்லை.

வட ஆர்க்காடு மாவட்டத்தில் சில இடங்களில் இந்த ஆண்டு விழா பத்து நாள்கள் வரை நீடிப்பதோடு, மேற்கூறிய நடை முறைகளிலிருந்தும் சில மாறுபாடுகளைக் கொண்டுள்ளது. முதல் நாள் அனைவரும் ஊர்வலமாக ஒரு வன்னி (*Prosopis*

*Spicigera*)மரத்தினை அடைந்துஅதன்அடியில்அலங்காரம்செய்து வைக்கப்பட்டுள்ள கலசத்திற்கு மறிகளையும் ஆடுகளையும் பலியிட்டு வழிபாடு செய்வர். இரண்டாம் நாளிலிருந்து ஆறாம் நாள் வரை தேவியையும் கலசத்தையும் நாளும் வழிபடுவர். ஏழாம் நாள் ஒருவன் பொங்கலினைத் தோளில் சுமந்தபடி தரையில் எங்கும் வைக்காது கொண்டுவர, மீண்டும் வன்னி மரத்தை அடைவர். பொங்கல் வழியில் கீழே வைக்கப்படாமல் கொண்டு வரப்பட்டிருக்குமாயின் அது விழாத் தொடர்ந்து நடைபெறலாம் என்பதற்கான அறிகுறி ஆகும். அவ்வாறில்லை யாயின் ஒன்பதாம் நாள் மாவிளக்கு ஏற்ற அஞ்சுவர். ஒன் பதாம் நாளில் சந்துக்களைக் கட்டல், அலகு நிறுத்தல், மாவிளக்கு இடுதல், கலச வழிபாடு நிகழ்த்தல் ஆகிய பல சடங்குகளும் ஒருங்கே மேற்கொள்ளப்படும். அன்று அதிகாலை யில் ஊரின் கிழக்கு, வடக்கு, மேற்கு, தெற்கு ஆகிய நான்கு எல்லைகளிலும் ஆடுகளையும், மறிகளையும் பலியிட்டுத் தீய வெளிச் சக்திகள் ஊருக்குள் புக இயலாதபடி தடுப்பதே சந்து கட்டல். முன்பே கூறியதைப் போல அலகினை நிறுத்தும் சடங்கினை முடித்தபின், மாவிளக்கு ஏற்றலாமா என்பதற் கான சில சோதனைகளை மேற்கொள்வர். தேவியின் கொப்பூழ் பகுதியில் ஒரு எலும்பிச்சம் பழத்தினை வைப்பர். யாரும் தொடாமல் அது தானே கீழே விழ வேண்டும். ஒரு கட்டு வெற்றிலையக் க்த்தியால் குறுக்கே வெட்டுவர். வெட்டுவாய் மீண்டும் கூட வேண்டும். இந்த நிமித்தங்கள் நல்லனவாக நடந்தால் மாவிளக்கினை ஏற்றி, ஆடும், மறியும் பலியிட்டு மாவிளக்கினுக்குப் பொங்கலும் வைத்துப் பூசை செய்வர். கலச வழிபாட்டோடு அன்றைய நிகழ்ச்சிகள் முடிவுறும். இறுதி நாளன்று மாவிளக்கு அனைவருக்கும் பங்கிட்டு வழங்கப்படும். வெளியூர்களிலிருந்து விழாவிற்கு வரும் விருந்தினரான தேவாங் கர் அனைவரும் ஊர் வழக்கப்படி சிறப்பாக உபசரிக்கப்பட வேண்டும். இதற்காக இச் சமூகத்தார் தங்கள் குடியிருப்பை ஸ்தலம், பாயகட்டுலு, காறுகிராமத்தரு, பேட்டைலு, குறுகிரா மரு எனத் தகுதி வரிசைப்படி பிரித்து அமைத்திருப்பர்.

தேவாங்கர்களிடையே காணப்படும் அகமணக்கட்டுப்பா

உடைய பிரிவுகளாவன:- (1) தெலுங்கர் (2) கன்னடியர் (3) பதினெட்டு மனைக்காரர் (4) சிவசரம் (5) ஆரிய (6) கொடெகள் ஹடகாரரு (நெசவாளர்).

கன்னடம் பேசுவோர், தெலுங்கு பேசுவோர் என இரு பெரும் பிரிவினராக இச்சாதியினர் காணப்படுகின்றனர். இவர்களுள் முன்னவர் பிராமணர்களின் சடங்கு நெறிப்பட்டவர்களாக இருக்கப் பின்னவர்கள் பழைய மரபு வழிப்பட்டவர்களாக உள்ளனர். கன்னடம் பேசுவோருள் பூணூல் அணிந்துள்ளவர்கள் அதனை அணியாதவர்கள் மீது செல்வாக்குச் செலுத்துபவர்களாக உள்ளனர். தீய சக்திகளை விரட்டப் பூணூலில் சில சமயங்களில் தாயத்துக்களையும் கோத்துக் கட்டிக்கொள்வர்.

தெலுங்கு பேசும் தேவாங்கரிடையே காணப்படும் புறமணக்கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகள் வருமாறு:-

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆகாசம் | — | ஆகாயம் | கட்டு | — | கரை |
| அனுமல | — | மொச்சை | பைதம் | — | பணம் |
| பண்டல | — | வண்டி | கோசு | — | பெருமை |
| சல்ல | — | மோர் | ஜிக்ல | — | குழி |
| சப்பரம் | — | பந்தல் | கட்ட | — | அணை |
| தொட்டி | — | தொட்டி | கோணங்கி | — | கோமாளி |
| துக்காணி | — | பணம் | கத்தரி | — | கத்தரிக்கோல் |
| யெர்ர | — | சிவப்பு | பசுபல | — | மஞ்சள் |
| கொண்ட | — | மலை | போத்துல | — | ஆண் |
| காடிகல | — | அஞ்சனம் | படகல | — | படகு |
| மோட்சம் | — | மேலுலகம் | பௌசல | — | பறவை |
| பிடகல | — | வறட்டி | பம்மி | — | மண் விளக்கு |
| கத்தி | — | கத்தி | நூட்ல | — | துளை |
| பூசம் | — | தான்யம் | போக | — | ஓடு |
| வஸ்திரால | — | துணி | மடம் | — | மடம் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பிச்சிக | — | சிட்டுக்குருவி | சிகை | — | குடுமி |
| சந்தல | — | சந்து | சந்த | — | சந்தை |
| உட்ல | — | உறி | தலகோக | — | சேலை |
| தொய்டபு | — | கோரை | எழுகாடி | — | கூட்டம் |
| பொக்குல | — | அடுப்புக்கரி | மேதம் | — | சண்டை |
| பிருத்வி | — | மண் | சஜ்ஜெ | — | தினை |

| | | |
|---|---|---|
| சிந்தக்காய் | — | புளியங்காய் |
| பண்டாரி | — | பண்டாரம் (பொருளாளர்) |
| மதிர | — | சாராயம் அல்லது மண் குவியல் |
| ஒளிகல | — | ஈமவிறகு அல்லது ஈமச் சாம்பல் |
| புஞ்சல | — | சேவல் அல்லது ஆண் |
| பிஞ்சல | — | பருத்தி தூய்மையாக்கல் |
| பச்சிபூவாக்கு | — | பச்சைப்புகையிலை |

தேவாங்கர்களில் பெரும்பாலோர் சைவர்களாக இருப்ப தோடு லிங்கமும் தரிக்கின்றனர். இவர்கள் ஜங்கங்களின் பாதங்களைக் கழுவிய நீரால் தங்கள் லிங்கத்தைக் குளிப்பாட்டு வதில்லை. இவர்கள் எப்பொழுதும் லிங்கத்தை அணிந்தபடி இருப்பதில்லை. வேலைபார்க்கும்போது பலவகை மக்களையும் தொட வேண்டி வருவதால்தான் அவ்வாறு அணிந்து கொள்வ தில்லை என விளக்கம் கூறுகிறார்கள். வணிகர்கள் வியா பாரத்தில் ஈடுபட்டிருக்கும்போது தாங்கள் விற்கும் துணிகளில் விலையும் தரமும் பற்றிப் பொய் கூற வேண்டியுள்ளதென்றும், அவ்வாறு பொய் பேசும்போது உடலில் லிங்கம் இருந்தால் - அதுவும் ஸ்படிக லிங்கம் இருந்தால் - அவ்வாறு உடம்பில் லிங்கத்தைப் போட்டுக் கொண்டபடி பொய் பேசுபவர்களுக்குச் சீரழிவு ஏற்படும் என்றும் கூறினர்.

கஞ்சம் பகுதியில் ஊர்ப்புறங்களில் வாழும் தேவாங்கர் களில் பலர் கோயில் காளைகளை வளர்க்கின்றனர். இவற்றில் ஒன்று இறந்து போகும்போது தேவாங்கர் அதனை அடக்கம் செய்ய விரிவான ஏற்பாடுகளை மேற்கொள்கின்றனர். இறந்த

காளையை இவர்கள் ஊர்வலமாகத் தூக்கிச் சென்று அடக்கம் செய்வர். தேவாங்கர் லிங்காயதர்கள் ஆகையால் அவர்கள் பசவனரிடம் தனி மதிப்புடையவர்களாக இருப்பதோடு புனிதக் காளையினை நல்லடக்கம் செய்வது நற்பேறு தரும் செயலாகவும் கருதுகின்றனர். மற்றச் சாதியார் கோயிலுக்காகக் கன்றுகளை யும், பசுக்களையும் நேர்ந்து கொண்டு விடும் பழக்கமுடையவர் களாயினும் இவர்களைப் போன்ற இந்த நம்பிக்கை அவர் களுக்கு இல்லை.

தேவாங்கர்களும் பத்ம சாலேக்களும் ஒரே தெருவில் வசிப்பதில்லை. மேலும் இவர்கள் ஒரே கிணற்றிலிருந்து நீரெடுக்க மாட்டார்கள். தேவாங்கர்கள் இடங்கைப் பிரிவை யும், பத்ம சாலேக்கள் வலங்கைப் பிரிவையும் சேர்ந்தவர்களாக இருப்பதே இதற்குக் காரணம் ஆகலாம். மற்ற இடங்கைப் பிரிவினரைப் போலவே தேவாங்கர்களும் தங்கள் சாதிக் கென்றே உரிய 'ஜாதிபிட்டலு' என அழைக்கப்படும் நாட்டிய மகளிரைப் பெற்றுள்ளனர். அவர்களுக்குப் பிறக்கும் ஆண் பிள்ளைகள் துணிக்கு அச்சு இடும் பணியினை மேற்கொள் கின்றனர். சிலபோது அவர்கள் தேவாங்கர்களிடையே பிச்சை கேட்டும் செல்வர். "சென்னையிலும் திருநெல்வேலியிலும் உள்ள தேவாங்கரான சேடர்கள் தங்களைப் பிராமணர்களை விட ஒருபடி உயர்ந்தவர்களாகக் கருதுவதோடு, பிராமணர்களை விழுந்து வணங்குவதோ அவர்களைப் புரோகிதர்களாக அமர்த்து வதோ இல்லை. மதுரையிலும், கோயமுத்தூரிலும் உள்ள சேடன்கள் தங்கள் சாதிக்கு எனத் தனியே நாட்டிய மகளிரை பெற்றுள்ளனர். மதுரையில் இவர்கள் சேடதாசி எனவும் கோய முத்தூரில் மாணிக்கத்தாள் எனவும் அழைக்கப்படுவர். இவர்கள் சாதிக்கே உரியவர்களாகக் கட்டுமானம் செய்யப்பட்டவர்கள். அதனை மீறுபவர்கள் சாதி விலக்கம் மற்றும் பெரிய தொகை தண்டம் கொடுத்தல் ஆகியவற்றிற்கு உள்ளாக்கப்படுவர்" என 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்புக் கூறுகின்றது.

சிங்கமவாடு என அழைக்கப்படும் தேவாங்கர் சாதிப் பிச் சைக்காரர்கள் பற்றிய கதையொன்று வழங்குகின்றது. சௌடே சுவரியும்,தேவாலனும் அசுரர்களோடு போரில் ஈடுபட்டிருக்கும்

போது ஓர் அசுரன் சௌடேசுவரியின் வாகனமான சிங்கத்தின் காதுக்குப் பின்னால் மறைந்திருந்து போர் முடிவுற்றபின் வெளிப் பட்டுத் தேவியிடம் மன்னிப்பு வேண்டினான். அவன் மீது இரக் கங்கொண்ட தேவி அவன் சந்ததியினர் சிங்கம்வாரு என அழைக்கப்பட வேண்டும் எனக் கூறியதோடு, தேவாலவிடம் அவனைப் பணியாளனாக ஏற்றுக்கொண்டு என்றும் ஆதரித்து வரவேண்டும்எனவும்கூறினான்.தேவாங்கர் இந்தப்பிச்சைக்காரர் களுக்குக் காசு தருவர். தேவாங்கர் உண்ணும் சமயம் உணவை எடுத்துக் கொண்டு கதவைத் தாளிட்டபடி செல்லும் உரிமையும் இவர்களுக்கு உண்டு. தேவாங்கர் கூடும் சபைகளில், இவர்கள் கைகளே துப்பும் படிகமாகக் பயன்படுத்தப்படுகிறது. சாவுச் செய்திகளை அறிவிக்கும் பணியினை மேற்கொள்ளும் இவனு டைய சின்னம் துத்தாரி எனப்படும் ஊது கொம்பாகும்.

தேவாங்கரின் சாதித் தலைவரான பட்டக்காரர் பரம்பரை உரிமையாக அதனைப் பெறுவான். அவனுக்குச் சேஷுராஜி அல்லது உமிடி செட்டி எனப்படும் உதவியாளன் உளன். சாதி யினருக்குக் குற்றேவல் புரியும் அவன் தறி ஒன்றுக்கு ஆண்டுக்கு ஒரு சிறு தொகையினை ஊதியமாகப் பெறுகின்றான்.

கைம்பெண்களின் மறுமணம் சிலவீடங்களில் அனுமதிக்கப் படுகிறது. பெரும்பாலான இடங்களில் அனுமதிக்கப்படுவதில்லை. ஊன் உண்ணும் பிரிவினருக்கும் ஊன் உண்ணாதவர்களுக்கும் இடையில் மண உறவுகள் நிகழ்கின்றன. ஊன் உண்ணும் குடும் பத்தைச் சேர்ந்த ஒரு சிறுமி, மரக்கறி உணவு மட்டுமே உண்ப வர்கள் குடும்பத்தில் வாழ்க்கைப்படுவாளானால் அவள் ஊன் உண்பதை விட்டுவிடுவதோடு பூப்பெய்தும்வரை புகுந்த வீட்டில் உணவுப் பொருட்களையோ, பாத்திரப் பண்டங்களையோ தொடுதலும் கூடாது. ஒரு சிறுமியின் மணம் பற்றி முடிவு செய்யும் முன் ஊர்த்தேவதைகளை அல்லது சௌடேசுவரியைக் குறி கேட்டு நல்ல நிமித்தம் கிடைக்கின்றதா எனப் பார்ப்பர். வலது பக்கத்தில் பல்லி சொல்வது நல்ல நிமித்தமாகும். சில சமயம் வெள்ளை, சிவப்பு மலர்களைப் பச்சை இலைகளில் தனித் தனியே பொட்டலமாகக் கட்டித் தெய்வத்தின் முன்னிட்டு அவற்றிலிருந்து ஒரு சிறுவனோ சிறுமியோ தேர்ந்தெடுக்கும்

பூவின் நிறத்தைக் கொண்டு நிமித்தம் நல்லதா, கெட்டதா என முடிவு செய்வர். திருமணச் சடங்குகள், வெற்றிலைப் பாக்கு வழங்குவதோடும், விக்னேஷ்வரர் பூசையோடும் தொடங்கும். மணமகளுக்குப் புதிய சேலை அணிவித்து முக்காலி அல்லது தோணிக்கி (துணி சுற்றும் உருளை) மீது அமரச் செய்வர். அவளுடைய தாய்மாமன் பொந்து எனப்படும் வெளுக்கப்படாத பருத்தி நூல் சிட்டத்தினை மஞ்சளில் நனைத்து அவள் கழுத்தில் இடுவான். தேவாங்கப் பிராமணர் எனத் தங்களைக் கருதிக் கொள்பவர்களைத் தவிர மற்றவர்கள் மணச் சடங்குகள் புராணச் சடங்கு நெறிப்படி நடைபெறும். மணத்தின் முதல் நாள் தமிழ்ப் பகுதிகளில் ஒதிய (*Odina Wodier*) மரத்தினாலும் தெலுங்குப் பகுதிகளில் பாலை (*Mimusops hexandra*) மரத்தினாலும் பால்கம்பங்களை அமைப்பர். முக மயிர் மழித்தல், உபநயனம், பாத பூசை, காசி யாத்திரை, தாரை வார்த்தல் மாங்கல்ய தாரணம் போன்ற பல சடங்குகளும் முறையே நடத்தப் பெறும். பானையில் துழாவுவதோடு சடங்குகள் ஒரு முடிவுக்கு வரும். கிண்டியும், மோதிரமும் பானையில் உள்ள நீரில் போடப்படும். மணமகள் கிண்டியினை முதலில் எடுத்தால் பிறக்கப்போவது பெண் என்றும், மணமகன் முதலில் மோதிரத்தை எடுத்தால் பிறக்கப்போவது ஆண் என்றும் முடிவு செய்வர். ஐந்தாம்நாள், தரையில் வண்ணம் தோய்த்த அரிசி மணிகளால் சதுரமான அமைப்பினைச் செய்வர் மணமக்களுக்கும் சதுரத்துக்கும் இடையே விளக்குகளின் வரிசை இருக்கும். அதன் நான்கு மூலைகளிலும் நான்கு பானைகளை வைப்பர். நான்கு பக்கங்களிலும் பக்கத்துக்கு இரண்டாக எட்டுப் பானைகளை வைத்து, நடுவில் சிவனையும் உமையையும் குறிக்கும் இரண்டு பானைகளை அமைத்து அவற்றின் பக்கத்தில் முளைப்பாலிகைச் சட்டிகளை வைப்பர். நூலினை நடுவில் உள்ள கடவுள் பானைகளைச் சுற்றி ஒன்பது சுற்றுக்கள் சுற்றியபின் மணப்பந்தலின் மேற்பகுதியில் இணைப்பர். அப்பானைகளை வழிபட்டபின சுற்றிக் கட்டப்பட்ட நூலினை அறுத்து மாங்கலியச் சரட்டுடன் மூன்று மாதங்கள்வரை கட்டிக் கொள்வர். இச்சடங்கு நாகவளிச் சடங்கு எனப்படும்.

ஒரு பெண் பூப்பு அடைந்தால், அவளைத் தனித்து



தேவாங்கர்

இருத்தும் குடிசையின் மீது பேய் பிசாசு அணுகாதிருக்க அழிஞ்சில் (*Alangium Lamarckii*) மரத்தின் இலைக் கொத்துக் களைப் போடுவர்.

இறந்தவர்களைப் பெரும்பாலும் உட்கார்ந்த நிலையில் புதைப்பர். புதைகுழியை மூடுமுன் ஒரு கயிற்றினைப் பிணத்தின் குடுமியைச் சுற்றிக் கட்டுவர். இதன் துணையோடு தலையினை மேலே இழுத்து அதன் நேரே ஒரு லிங்கம் அமைத்துச் சாவுச் சடங்கு முடியும் வரை அதனை வழிபடுவர்.

தேவாங்கர்களிடையேயுள்ள ஒரு புதுமையான வழக்கம் பற்றித் திரு ஹயவதன ராவ் கூறுவதாவது:- பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை தேவாங்கர் தன் வீட்டை விட்டு வெளியேறிப் பத்மசாலேக்களுடன் சேர்ந்து கொள்வான். அவன் அவர்களிடம் தான் அவர்கள் சாதியைச் சேர்ந்தவன் எனவும் அதனால் அவர்கள் அவனை ஆதரிக்கக் கடமைப்பட்ட வர்கள் எனவும் கூறிப் பிச்சை கேட்பான். எதுவும் தரப்பட வில்லையானால் வீட்டினுள் நுழைந்து தன் கைக்கு எது கிடைக் குதோ அதனைத் தூக்கிச் சென்று விடுவான். அவனுக்கு எதுவும் கிடைக்காத சில சமயங்களில் ஒரு பத்ம சாலேயின் வாயில் இருக்கும் சுருட்டைக் கூடப் பிடுங்கிக் கொண்டு ஓடிவிடுவ துண்டு. இந்த வழக்கத்தின் தோற்றம் பற்றிய காரணம் தெரிய வில்லை. முதலில் பத்ம சாலேக்களும், தேவாங்கர்களும் ஒரே சாதியினராக இருந்திருக்க வேண்டும். தேவாங்கர் லிங்காயதப் பிரிவைச் சார்ந்த பின் தனிச் சாதியினராகப் பிரிந்தவர்கள் ஆதல் வேண்டும் என்ற ஒரு கருத்துக் கூறப்படுகிறது. வயது மூத்தபின் ஒரு தேவாங்கன் சின்னேரிகாடு ஆகின்றான். அப்பொழுது அவன் பத்ம சாலேக்கள் தங்கள் தட்டில் மிச்சம் வைக்கும் உணவை உண்பான். சின்னேரிகாடு ஒருவன் இறந்தால் அவனைப் பத்ம சாலேக்கள் அடக்கம் செய்வர்.

தேவாங்கர் பொதுவாக உயரங்குறைந்தும், கருமை குறைந்த நிறத்துடனும், திட்டமான அமைப்புடைய உறுப்புக்களோடும், வெளிறிய பழுப்பு நிற விழிப் படலத்துடனும், நீண்டு மெலிந்த விரல்களுடனும் காட்சி தருவர். பெல்லாரி மாவட்டத்தில்

ஹொஸ்பெட் பகுதியைச் சேர்ந்தவர்கள்,முன் லாங்கி, பஞ்சகத்தி, காது குரும்பை தோண்டும் கரண்டி ஆகியவற்றை அரைஞாண் கயிற்றில் சிங்கார வளையம் போலத் தொங்கவிட்டபடி இருப்பர். வசதி படைத்தவர்கள் இவற்றை வெள்ளியினால செய்து வைத்துக் கொள்வதோடு, நகத்தை ஒழுங்கு செய்யவும், சுருட்டு வெட்டவும் வெள்ளியால் அரம் ஒன்றினையும் உடன் செய்து வைத்திருப்பர். பம்பண்ணா என்ற பெயரை இவர்களில் சிலர் வைத்துக் கொண்டிருப்பது ஹம்பியில் வாழும் பம்பா என்ற அரமகள் தொடர்பானதாகும். இவள் பரமசிவனிடம் தன்னை மணந்து கொள்ளும்படி வேண்டினாள். அதன்படி அவர் பம்பாபதி என்ற பெயரைத் தாங்கினார். அவ்வாறு வந்தவர் நினைவாக அணகூண்டியில் ஒரு ஏரியும், ஹம்பியில் ஒரு கோயிலும் உள்ளன. சிவன் பம்பாவை பம்பசரோவர என்ற பெயருடைய ஏரியில் தங்கி வாழ்ந்து வரும்படி பணித்தார்.

அக்டோபர் மாதத்தில் நான் கோயமுத்தூர் சென்றிருந்த போது அங்குள்ள சேடன்கள் தீபாவளிக்கான துணிகளை நெய்வதில் முழுமுச்சுடன் ஈடுபட்டிருந்தனர். நல்ல விளைச்சல் உள்ள சமயங்களில் திருவிழா, திருமணம் ஆகியன நிகழும் போதுதான் இவர்கள் நல்ல வரும்படியினைப் பெறுகின்றனர்.

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் பில்லிமக (வெள்ளைப் பாவுக்காரர்), அடகாரர் (நெசவும் பேயோட்டலும்* செய்வோர்) ஆகியோர் தேவாங்கர்களின் உட்பிரிவினராகப் பதியப்பட்டுள்ளனர். தேவாங்கர்கள் வழக்கமாகச் செட்டி என்ற பட்டப் பெயரைச் சூடிக் கொள்வர்.

நெசவுத் தொழில் புரியும் சாதியினர் குள்ளமான உடல் வாகு உடையவர் என்பதனை நான் நேரில் கண்டு ஆய்ந்த பின்வரும் அளவுகள் தெளிவு படுத்துவனவாம். நெசவாளர் சாதியாரின் சராசரி உயரம் வருமாறு:-

| | | | |
|---|---|---|---|
| பத்ம சாலே | 159.9 செ.மீ. | தொகடர் | 160.5 செ.மீ. |
| சுகூன் சாலே | 160.3 ,, | சுகசாலே | 161.1 ,, |

---

* பாவோட்டல் என்பது பேயோட்டல் எனப் பதியப்பட்டிருக்கக்கூடும் (மொ. கு.)

**தேவேந்திரர் - Devendra**

இந்திரன் மரபில் வந்தவர்கள் எனத் தங்களைக் கூறிக் கொள்ளும் பள்ளர் சிலர் சூடிக் கொள்ளும் பெயர்.

**தப்பை - Dhabba (split bamboo)**

தப்ப அல்லது தப்பை என்பது மூங்கிலைப் பிளந்து பல வகைப் பொருள்களையும் செய்யும் குறவரின் ஓர் உட்பிரி வினருக்கு உரிய பெயர்.

**தக்கடோ - Dhakkado**

ஒரிய கலப்பினச் சாதியாரான இவர்கள் பயிர்த்தொழிலா ளர். ஒரு தக்காடோவுக்குத் தன் தந்தை யாரெனத் தெரியாது என இவர்களைப் பற்றி ஒரு பழமொழி வழங்குகின்றது. "செய்ப்பூர் முகவர் பகுதிகளில் பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ள சாதியார் இவர்கள். பிராமணனுக்கும், சூத்திரப் பெண்களுக் கும் பிறந்தவர்கள் இவர்கள் எனக் கூறப்படுகிறது. மலைப் பகுதிகளில் இவர்கள் வாழ்ந்து வந்தாலும் இவர்கள் நாகரிகம் பெறாத மலைவாசிகள் அல்லர். சிலர் பூணூல் தயாரித்து விற் கின்றனர். மற்றும் சிலர் தின்பண்டங்கள் தயாரிக்கின்றனர். பூணூல் அணியும் இவர்கள் பிராமணர்களைத் தவிர மற்றவர் களிடமிருந்து தண்ணீர் வாங்கிக் குடிக்கமாட்டார்கள். பெண் கள் பூப்படையும் முன்பே மணம் செய்விக்கப்படுகின்றனர். கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படு கிறார்கள். ஊன் உண்ணும் இவர்கள் இறந்தவர்களைப் புதைப் பர்" என இவர்களைப் பற்றி 1891 கணக்கெடுப்பு அறிக்கை யில் கூறப்பட்டுள்ளது.

"பிராமணனுக்கும், தீட்டு ஏற்படுத்தாத மலைச் சாதியைச் சேர்ந்த பெண்ணுக்கும் முறையற்ற உறவின் வழிப் பிறப்பவர் களே தக்கடோக்கள். இவர்கள் பிராமணர்களைப் போலப் பெயர் வைத்துக் கொள்வர். திருமணம், சாவுச் சடங்குகள் முதலானவற்றில் இவர்கள் தங்கள் தாய்வழிச் சாதியின் பழக்க வழக்கங்களை மேற்கொள்கின்றனர். அவளுடைய சாதியைச்

சேர்ந்தவர்கள் இவர்களோடு மண உறவு கொள்கின்றனர். ஒரு தக்கடொ வழக்கமாகத் தன் தாயின் தொழிலையே மேற் கொள்வான். ஒருவனுடைய தாயார் கெவுட்டொவாக இருந் தால் அவன் மீன் பிடிப்பதிலோ, ஆற்றில் படகு விடுவதிலோ ஈடுபடுவான். ஒருவனுடைய தாயார் பூமியராக இருந்தால் அவன் பயிர்த்தொழிலில் ஈடுபடுவான். இப்படியாகத் தொழில் முறை அமையும்" எனத் திரு சி. ஹயவதன ராவ் தக்கடொக்கள் பற்றிய ஒரு குறிப்பில் கூறியுள்ளார்.

### தாகூர் - Dhakūr

விசாகப்பட்டினம் மாவட்டக் கையேட்டில் பிராமணர் களுக்கு முறையற்ற உறவின் வழிப் பிறந்தவர்கள் எனவும், பூணூல் அணிபவர்கள் எனவும் கூறப்பட்டுள்ளது.

### தனபாலர் - Dhanapāla

கோல்லர்களின் ஓர் உட்பிரிவினர். பணப் பெட்டிகள் கொண்டு செல்லப்படும் போது அவற்றின் காவலர்களாக உடன் செல்வர்.

### தன்கர் - Dhangar

தன்கர் அல்லது தொணிகர் என வழங்கப்படும் இவர்கள் 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் மராத்தி பேசும் இடையராகவும், கால்நடை வளர்ப்போராகவும் பதியப் பட்டுள்ளனர். பம்பாய் மாநிலத்தில் உள்ள கன்னட மாவட்டங் களில் வாழும் தன்கர் பற்றிய பம்பாய் மாநில விவரக் குறிப்பில் தன்கர் என்ற சொல், பசுவினைக் குறிக்கும் தேனு என்ற வடமொழிச் சொல்லில் இருந்து வந்தது என நான் கண்டறிந் தேன். வீட்டில் மராத்தி பேசும் இவர்கள் கன்னடமும் பேசுவர். தன்கர் மகசி, தன்கர் கைசி என வழங்கப்படும் சிறப்பின பசுக்களையும், எருமைகளையும் இவர்கள் வளர்க்கின்றனர். இந்த இனக் கால்நடைகளே கன்னட மாவட்டங்களில் மிகுதி யாகக் காணப்படுகின்றன. சாதாரவைச் சேர்ந்த தன்கர்கள் பலர் சிவாஜியின் படைவீரர்களாய் இருந்துள்ளனர்.

**தனியாள - Dhaniāla (coriander)**

கம்மர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். தனியாள சாதி அல்லது கொத்துமல்லி சாதி என்பது கோமட்டி களை இகழ்ந்துரைக்கப் பயன்படுத்தப்படும் ஒரு பெயராகும். கொத்துமல்லி விதையை விதைக்கும்முன் நசுக்கி விதைப்பதனைப் போல வணிகத் தொடர்பான பேச்சு வார்த்தைகளில் இவர்க ளோடு கெடுபிடியாக நடந்து கொண்டால்தான் காரியம் சாதிக்க இயலும் என்ற கருத்தில் இப்பெயர் வழங்கப்படுகிறது.

**தாரெ - Dhāre**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர். கன்னடம் பேசும் பகுதிகளில் மணச் சடங்கின் இன்றி யமையாத, மணத்தை உறுதி செய்யும் சடங்காகத் தாரை வார்த்தல் கருதப்படுகிறது. (பார்க்க: பண்டர்)

**தர்மராசா - Dharmarāja**

வட ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த இருளர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். மகாபாரதக் கதைத் தலைவர்களான பாண்டவர் ஐவரில் மூத்தவர் தர்ம ராசா.

**திப்போ - Dippo (light)**

பொந்தாரிகளின் புறமணக்கட்டுப்பாடுடைய குலம் ஒன்றின் பெயர். இக் குலத்தவர் விளக்கினை ஊதி அணைக்கவோ, வேறு வகையில் அணைக்கவோ மாட்டார்கள். மடியான ஆடைகளைப் புனைந்த பின்பே விளக்கினை ஏற்றுவர். மடி என்பது பட்டாடை அல்லது குளித்தபின் துவைத்து உலர்த்திய ஆடை.

**தோபி - Dhōbi**

இந்தியா முழுவதிலும் ஆங்கிலோ இந்தியர்கள் வண்ணா ரைக் குறிக்கப் பயன்படுத்தும் சொல். 'தோக' என்ற வட மொழிச் சொல்லிலிருந்து 'தாவ்' துவை எனப் பொருள்படும் இச்சொல் வந்ததாகக் கூறுவர். வண்ணான் மண் எனச்

சொல்லப்படுவது, பலவிடங்களில் மேலே உப்புப் பூத்துக் காணப் படும் மண்ணுடன் சுண்ணாம்புக் கிளிஞ்சலையும் சேர்த்துக் கொதிக்க வைத்துப் பெறப்படும் ஓரளவு காரத் தன்மையுள்ள மண்ணாகும்.* "வண்ணான் நமைச்சல் என்று பொதுவாகத் தோலில் வரும் வியாதிகளான சொறி, சிரங்கு அனைத்தையும் குறித்தாலும் அது கிச்சு இடிக்கில் வரும் பொதுவானதொரு தோல் வியாதியினையே குறிப்பதாகும்" என மேன்சன் எழுதியுள்ளார்.† இந்த நோய் வண்ணான் துவைக்கும் ஆடைகள் வாயிலாகவே பரவுகின்றது எனப் பொதுவாக நம்பப்படு கிறது. ஆனால் இது வண்ணார் துவைக்கும் ஆடைகள் வழியா கவே தொற்றிப் பரவுகின்றது என்ற கொள்கை சரியான அடிப்படையில் கூறப்படுவதன்று என மேன்சன் கருதுகின்றார்.

தோபி ஒரிய வண்ணார் சாதிக்கு உரிய பெயராகும். திரு பிரான்சிஸ் இவர்களைப் பற்றி, "இவர்களில் முதலில் ஒரிசா விலிருந்து வந்தவர்கள் எனச் சொல்லப்படுகிறது. பெண்கள் பொதுவாகப் பூப்படையும் முன்பே மணம் செய்விக்கப்படு கின்றார்கள். அவ்வாறு மணம் செய்ய இயலாது போனால் அவர்களை ஒருவனுக்கு மணம் முடிப்பதற்கு முன்பாக, ஒரு வாளுக்கோ மரத்திற்கோ மணம் செய்து வைப்பர். இவர்களுடைய மணச் சடங்குகள் பின்வருமாறு நிகழும். மண மக்கள் ஏழு இல்லங்களிலிருந்து வாங்கி வரப்பட்ட தண்ணீரில் குளிப்பர். மணமகன் மணமகள் கரத்தில் ஒரு வளையலை அணிவிப்பான். (இதுவே மணத்தை உறுதிப்படுத்தும் சடங்காகும்.) மணமகளின் இடக் கரமும் மணமகனின் வலக் கரமும் பின்னர் ஒன்றாக இணைக்கப்படும். மணமகளின் சேலையின் ஒருமுனையில் வெற்றிலை பாக்கினையும் மணமகனின் வேட்டியில் கடுக்காய் (*Terminalia fruit*) ஒன்றையும் முடிவர். இறுதியாகப் பந்தலில் கூடியுள்ளவர்கள் மணமக்கள் மீது மஞ்சள் அரிசியினைத் தூவுவர். கைம்பெண் களும் மணமுறிவு பெற்ற பெண்களும் மீண்டும் மணம் புரிந்து கொள்ளலாம். வைணவர்களான இவர்களுள் சிலர் காளியினை

---

* யூலும் பர்னலும், ஹாப்சன் ஜாப்சன் (Yule and Burnell, Hobson-Jobson)

† வெப்பமண்டல நோய்கள் (Tropical diseases)

யும் வழிபடுகின்றனர். பைராகிகளைப் புரோகிதர்களாக அமர்த்தும் இவர்கள் சில சமயங்களில் பிராமணர்களையும் அமர்த்திக்கொள்வர். இறந்தவர்களை எரிப்பதுடன் ஆண்டு தோறும் அவர்கள் நினைவாகச் சிரார்த்தமும் செய்வர். செட்டி அல்லது மகா செட்டி, பேகரா என்பன இவர்கள் பட்டப் பெயர்கள்'' என எழுதியுள்ளார்.* மணமக்கள் ஏழு இல்லங் களிலிருந்து பெறப்படும் தண்ணீரில் குளிக்கும் பழக்கம் பிராமணர்கள் உட்பட ஒரிய சாதியார் அனைவரிடமும் காணப் படும் ஒன்றாகும். இதனைப் பாணி துலா என அழைப்பர். மண நாளுக்கு முன்தினம் திருமணம் ஆன பூப்படையாத பெண்கள் தண்ணீரை வாங்கி வருவர். பொழுது புலருமுன் மணமக்கள் அதில் குளிப்பர். இந்த குளியல் பாணி சானோ அல்லது குயில் தண்ணீர் குளியல் எனப்படும். குயில் என அழைக்கப்படுவது இந்தியக் கோகிலம் அல்லது குக்கூ (*Endynamis honorata*) ஆகும். கோடையில் இதனுடைய மேன்மேல் உரக்க ஒலிக்கும் 'கூ-இல், கூ-இல்' என்ற கூவுதல் எரிச்சல் ஊட்டுவதாக இருக்கும்.

வண்ணார் பற்றிய பின்வரும் பழமொழிகளை† எடுத்துக் காட்டலாம் என நினைக்கிறேன்.

1. புதிய வண்ணானையும் வயதான நாவிதனையும் வைத் துக் கொள்.

2. ஊரார் ஊழல்கள் பற்றி. வண்ணானுக்குத் தெரியும். (அதாவது அழுக்கு எடுக்கும்போதும், வெளுத்ததைக் கொடுக்கும்போதும் பல குடும்பங்களைப் பற்றிய தனிப் பட்ட செய்திகளை வண்ணார் அறிந்து கொள்வர்.)

3. வண்ணான் நோயுற்றால் அது அவனைத் துவைக்கும் கல்லிடம் அழைத்துப் போகும்.

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, 1901. (Madras Census Report, 1901.)

† மறைத்திரு எச். ஜென்சன். தமிழ்ப் பழமொழிகளின் பகுக்கப்பட்ட தொகுப்பு–1897. (Rev. H. Jenson. Classified Collection of Tamil Proverbs, 1897.)

(இந்தப் பழமொழி வண்ணான்எவ்வளவுதான் நோயுற்றாலும் தன் வேலையைப் பார்த்தே ஆக வேண்டும் என்பதைக் குறிக்கும்.)

**தொட்டி - Doddi**

தொட்டி என்ற சொல் கூடம் அல்லது புறக்கடை மற்றும் ஆடு மாடு அடைக்கும் கொட்டில் ஆகியவற்றைக் குறிக்கும். தேவாங்கர், கொப்பல வெலமர், கர்ண சாலே, மாலர், ஏனாதியர் ஆசிய சாதிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயராகப் பதியப்பட்டுள்ளது.

**தொட்டியன் - Doddiyan**

ஜோகியரைத் தமிழர் இப்பெயரிட்டு அழைப்பர்.

**தொல்லோ - Dhollo**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் தொழுவ சாதிதான் (Doluva) தொல்லோ சாதி எனப் பதியப்பட்டுள்ளது. தொல்லோ சாதி தொழுவ சாதியின் வேறுபட்டது என எனக்கு ஒருவர் விளக்கம் எழுதித் தெரிவித்துள்ளார்.

**தோம - Dhoma (gnat or mosquito)**

மாலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**தொண்டபு - Dhondapu (*Dephalandra indica*)**

தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர். இந்தியக் காய்கறிகளில் மிகுதியும் பயன்படும் பழம். கறியாகச் சமைக்கப்படுவது.

**தோணி - Dhoni (boat)**

மீல மற்றும் ஒருங்கண்டி காபு ஆகிய சாதிகளின் புறமணக் கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். ராயல் ஆசியக் கழகத்தின் இதழில் ஒரு கட்டுரையில் திரு எட்ஜ் தென்னிந்தியக் கலங்கள் பற்றிக் கூறும்போது தோணியைப் பற்றி, "70 அடி நீளமும்

20 அடி அகலமும், 11 அடி ஆழமும், தட்டையான 7 அடிக்கு மேற்படாத அடிக்கட்டையையும் உடைய பேழை வடிவிலான கலம்" என விளக்கியுள்ளதோடு, "முரட்டுத்தனமான இந்தக் கலங்களும், அவற்றின் கட்டமைப்பும் நான் பார்த்தவைகளுள் உரு நயம் அற்றனவாக இருப்பதோடு கடலில் செலுத்த ஆகாதன வாகவும் உள்ளன" எனக் குறைபட்டுக்கொண்டும் உள்ளார்.

**தொர் - Dhor**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் இச்சாதியைச் சேர்ந்த 164 பேர் மராத்தி பேசும் தோல் தொழிலாளராகப் பதிந்துள்ளனர். பம்பாய் மாநிலத்தில் பல்வேறு பகுதிகளிலும் தோல் பதனிட்டுத் தொழில் செய்து வாழ்பவர்கள் இவர்கள். பேச்சு, பெயர், பட்டப்பெயர் ஆகியன அனைத்தாலும் மராட்டியப் பகுதியைச் சேர்ந்தவர்கள் இவர்கள் என்பதனை நான் பம்பாய் மாநில விவரக் குறிப்பிலிருந்தும் தெளிந்துள்ளேன்.

**தூதல - Dhūdala (calves)**

தூமடி கோல்லர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கன்றுகள் எனப் பொருள்படும்.

**துத்தொ - Dhudho (milk)**

ஓமணய்டொக்களின் ஒரு குலம். பால் எனப் பொருள் படும்.

**துக்காணி – Dhuggani (money)**

தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**தூளியர் - Dhūliya**

ஒரியாவைச் சேர்ந்த பயிர்த்தொழில் செய்யும் சிறு பிரிவினர் தூளியர். இவர்களில் சிலர் பூணூல் அணிவதோடு வைணவர்களைப் புரோகிதர்களாகவும் அமர்த்துகின்றனர். பெண்கள்

பூப்படையும் முன் மணம் செய்விக்கப்படவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். ஊன் உண்ணும் பழக்கம் உடைய இவர்கள் இறந்தவர்களை எரிக்கின்றனர் என 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை கூறுகின்றது. நிலத்தில் உழைக்கும் இவர்கள் உடம்பினைப் புழுதி போர்த்துகின்றது. தூசி எனப் பொருள்படும் தூளி என்ற சொல்லின் அடிப்படையில் இவர்கள் தூளியர் எனப்படுகின்றனர். தூளி (பல்லக்கின் ஒரு வகை) தூக்கிச் செல்பவர்கள் என்ற பொருளிலும் இப்பெயர் அமைந்ததாகலாம்.

**திதாவி - Didāvi**

பொரொசர்களின் ஓர் உட்பிரிவு.

**திகம்பரர் - Digambara (space clad i.e. nude)**

சமணர்களின் இரு பெரும் பிரிவுகளுள் ஒன்று. "ஆடையின்றிப் பிறந்த மேனியராகத் திரிவதையே புண்ணியச் செயலாகக் கருதுபவர்கள் இவர்கள். நாகரிக வளர்ச்சியின் காரணமாக இவர்கள் தங்களுடைய இந்தக் கோட்பாட்டிலிருந்து விலகும்படி ஆயிற்று."*

**தீவர் – Divar**

பார்க்க : தேவ (See-Dāva)

**திய்யாசி - Diyāsi**

தண்டாசியரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். இவர்கள் சூரியனிடம் மிகுந்த மரியாதை காட்டுகின்றனர். மணமக்கள் மணநாளில் அணிவதற்குரிய உடைகள், முக்கூடுகள், மாலைகள் முதலிய பொருட்களை சூரிய ஒளிபடும் பொருட்டு வெளியில் வைப்பர்.

---

* இந்தியச் சமணர் பிரிவு பற்றி ஜி. புஹ்லெர், 1903. (G. Bihler on the Indian Sect of Jainas, 1903.)

**தொலைய - Dolaiya**

தொழுவர், ஒடியர் ஆகியோரின் பட்டப்பெயர்.

**தொலொபேகரர் - Dolobehara**

ஒரிய சாதியார்களின் சாதித் தலைவன் அல்லது அவனுடைய உதவியாளர்கள் பெயராகும். சாதித் தலைவ்ராக உள்ள ஹட்டிகளின் குடும்பத்தினர் சில சமயங்களில் இதனைத் தங்கள் பட்டப்பெயராகப் பயன்படுத்துகின்றனர்.

**தொழுவர் - Doluva**

1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பின்படி கஞ்சம் பகுதியைச் சார்ந்த தொழுவர்கள், "பழைய அரசர்களுக்கு அவர்களுடைய காமக் கிழத்தியர் வழிப் பிறந்தவர்கள். இவர்கள் படை வீரர்களாகவும் பணியாட்களாகவும் பணிபுரிகின்றனர். இப்பெயர் படை எனப் பொருள்படும் 'தோள்' என்ற வடமொழிச் சொல்லில் இருந்து வந்ததாகக் கூறப்படுகிறது." தொழுவர் தாங்கள் பூரி அரசர்களின் காமக் கிழத்தியருக்குப் பிறந்தவர்கள் எனக் கூறிக் கொள்வதோடு தங்களில் பலர் சிர்தார்களாகவும், பைக்குகளாகவும் அரசரின் கீழ் பணிபுரிவதாகக் கூறிக் கொள்கின்றனர். தெற்கே போர் புரிய வந்த ஒரு பூரி அரசரோடு வந்த தாங்கள் கஞ்சம் பகுதியிலேயே தங்கி விட்டதாகக் கூறுகின்றனர். இவர்களில் பெரும்பாலோர் இன்று பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். எனினும் வணிகம், கட்டிட வேலை, வண்டி ஓட்டுதல் ஆகிய பணிகளையும் சிலர் மேற்கொண்டுள்ளனர். கொண்டையிடொ, லெங்கா, ரப்ப பொட்டிய, பெகரானிய என இச்சாதி ஐந்து பிரிவுகளைக் கொண்டுள்ளது. இவற்றுள் முதல் இரண்டு பிரிவினருமே எண்ணிக்கையில் மிக்கவர்களாயும், பரந்துபட்டு வாழ்பவர்களாகவும் உள்ளனர். கொண்டையிடொ என்ற பெயர் அம்பினைக் குறிக்கும் கொண்டை என்ற சொல்லில் இருந்து வந்தது எனக் கூறி, இப்பிரிவினர் படைவீரர் பிரிவினர் என்பதைக் குறிப்பதாகக் கொள்வர். கொண்டையிடொக்கள் தங்களைச் சில சமயம் ராசதொழுவர் என அழைத்துக் கொண்டு

மற்ற பிரிவினரைவிடத் தங்களை உயர்ந்தவர்களாகக் கருதுவர். 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில், "ஒரிய சமீன்தார்கள் இந்தப் பிரிவிலிருந்து பெண்கள் கொள்வர். ஆனால் இப்பிரிவினைச் சேர்ந்த ஆண்கள் அக்குடும்பங்களிலிருந்து பெண் கொள்ள இயலாது. பூணூல் அணியும் இவர்கள் எழுதும் தொழிலைச் செய்பவர்கள்" எனக் கூறப்பட்டுள்ளது. முன்னாளில் எழுதுவோர் என்ற பட்டம் கிழக்கு இந்தியக் கம்பெனியைச் சேர்ந்த இளநிலை உதவியாளர்களைக் குறிக்கும். இன்று அது அலுவலகத்தில் படி எடுக்கும் பணிபுரிபவரைக் குறிக்கும்.

பிஸ்ஸொயி, பிஸ்வாலொ தொலெ, ஜென்னா, கொட்டிய, மகந்தி, மஜ்ஹி, நாககொ, பொரிட, ராவுட்டொ, சாமுலொ, சானி என்பது போன்ற பல பட்ட பெயர்களை இச்சாதியைச் சேர்ந்தவர்கள் தரிக்கின்றனர்.

சைதன்யரின் பரமார்த்திக வைணவ சமயத்தைத் தொழுவர் பின்பற்றுகின்றனர். துளசி மணி மாலையினை அணிவர். அதனோடும் கால்வ, பாகதேவி, கொடரி, மகேசுவரி, மணிக்கேசுவரி, போன்ற பல தாகுராணி (கிராமதேவதைகள்) களையும் இவர்கள் வழிபடுகின்றனர். இவர்கள் சில இடங்களில் ஆண்டு தோறும் நடத்தும் சிரார்த்தங்களில் மிகுந்த கருத்துச் செலுத்துவர். சிரார்த்தச் சடங்கு பின்வருமாறு நடத்தப்பெறும். சிரார்த்த நாளுக்கு முந்திய நாள் இரவு இறந்து போனவரின் ஆன்மாவை வரவேற்க ஓர் அறையினைத் தயார்படுத்துவர். இந்த அறை பித்ருவை வரவேற்கும் அறை என அழைக்கப்படும். இந்த அறையினைப் பசுஞ்சாண நீரால் மெழுகி, நெய் விளக்கு ஏற்றி ஒரு பலகை மீது வைப்பர். அந்தப் பலகை மீது ஒரு புதுத் துணியினை விரித்து அதன் மீது வழிபாட்டுக்கு உரிய பொருள்களான தர்ப்பை, இலந்தை இலைகள், மலர்கள் ஆகியன வைக்கப்படும். அந்தப் பலகையின் முன் நீர் நிறைந்த ஒரு பித்தளைப் பாத்திரமும் நாயுருவி வேரினாலான (*Achyranthes aspera root*) பல் துலக்கும் குச்சியும் வைக்கப்படும். இறந்துபோனவரின் மகன் அரிசியையும், இலந்தை இலைகளையும் ஆகாயத்தின் மீது வீசி இறந்து போனவரை மறுநாள் வருகை தந்து வாழ்த்தும்படி

வேண்டுவான். அதன்பின் அந்த அறை பூட்டப்படும். நெய் விளக்கு இரவு முழுதும் அதனுள் எரிந்தபடி இருக்கும். மறு நாள் வீட்டிலுள்ள பழைய பானைகள் அனைத்தும் வெளியே எறியப்படும். வீட்டில் கொஞ்சம் இடத்தைச் சுத்தம் செய்து, அந்த இடத்தில் மாவினால் பன்னிரண்டு கட்டங்களோடு கூடிய சதுரமோ, நீள் சதுரமோ வரையப்படும். ஒவ்வொரு கட்டத்தி லும் ஒரு பலா (*Artocarpus integrifolia*) இலை வைக்கப்படும். ஒவ்வொரு இலை மீதும் இறந்து போனவரின் மகன் சோற்றை யும், காய்கறிகளையும் வைப்பான். நாயுருவி வேருடன் கூடிய ஒரு பாத்திரமும் புதுத் துணி விரிக்கப்பட்ட பலகையும் அந்தக் கட்டங்களருகே வைக்கப்படும். வழிபாடுக்குப் பின், உணவு படைத்தபின் அத்துணியை ஒரு பிராமணனுக்குத் தருவர். வழி பாட்டில் பயன்படுத்திய பிற பொருள்கள் நீரில் விடப்படும்.

**தோம்பர் – Dōmb**

தோம்ப் அல்லது தோம்பொ என்ற சொல் பேயினைக் குறிக்கும் தும்ப என்ற சொல்லிலிருந்து இந்தச் சாதியாரின் திருடும் ஆற்றலினை அடிப்படையாகக் கொண்டு வந்ததென் பர். 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் தோமபர் பற்றித் திரு எச்.எ.ஸ்டுவர்ட் பின்வருமாறு எழுதி யுள்ளார். "தோம்பர் விசாகப்பட்டினம் மலைப் பகுதிகளில் காணப்படும் திராவிட சாதியைச் சேர்ந்தவர்கள். நெசவுத் தொழிலும் குற்றேவல் பணியும் புரிபவர்கள். இச்சாதி வங்கா ளம், பீகார், வடமேற்கு மாகாணத்தைச் சேர்ந்த தோம் சாதி யிலிருந்து பிரிந்து வந்த ஒரு கிளையாகத் தோன்றுகின்றது. தோம் சாதியினரைப் போலவே தோம்பர்களும் மாடு, பன்றி குதிரை, எலி ஆகியவற்றின் இறைச்சியையும் இயற்கையாகவே இறந்து போன விலங்குகளின் இறைச்சியையும் தின்பதால் மற் றவர்களால் வெறுக்கப்படுவதோடு வங்காளிகளாலும் உரியர் களாலும் சண்டாளர் அல்லதுபறையர்எனக்கருதப்படுகிறார்கள். மலை வாழ்மக்களுக்கான ஆடைகளையும், போர்வைகளையும் நெய்பவர்கள் தோம்பர்களே. இதனோடு சமவெளியில் வாழும் பறையரைப்போலத்துப்புரவாளர்களாகவும் கூலிகளாகவும்பணி புரிகின்றனர்.சிலர் பெரும்அளவில் வணிகத்தைமேற்கொண்டிருப்

பதோடு தங்களை வெறுத்து ஒதுக்கும் உழவர்களை விடவும் மிகுந்த உலகியல் அறிவு வாய்க்கப் பெற்றவர்களாக உள்ளனர். இவர்கள் குடிப்பழக்கத்துக்கு அடிமைகள்." 1871 கணக்கெடுப்பு அறிக்கையில், "தோம்பர்கள் பல ஊர்களில் நெசவில் ஈடுபட்டிருந்தாலும், செய்ப்பூரிலும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் இவர்கள் குதிரைக்காரர்களாகவும், தப்பட்டை அடிப்பவர்களாகவும், துப்புரவாளர்களாகவும் மற்றும் பல குற்றேவல் பணிகளை மேற்கொண்டவர்களாகவும் உள்ளனர். சமூகத்தில் மிகத் தாழ்ந்த படியில் இருந்தாலுங்கூட இவர்களிடையே முன்னேற்றத்திற்கான அறிகுறிகள் காணப்படுகின்றன. சில இடங்களில் சந்தைகளுக்கிடையேயுள்ள சிறு விலை வேறுபாட்டினைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு பொருள்களைச் சுமந்து திரிந்து விற்று வாழ்க்கை நடத்தி வருகின்றனர்" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

"தோம்பர் ஒதுக்கப்பட்ட காட்டு வாசிகள். விசாகப் பட்டினத்திலிருந்து ஐம்பதிலிருந்து நூறு வரையான மைல்களுக்கு அப்பால் உள்நாட்டில் உயர்ந்துகிடக்கும் மேட்டுநிலப் பகுதி சார்ந்த காடுகளில் இவர்கள் வாழ்கின்றனர். ஒதுக்கப் பட்ட சாதியார் ஆகையால் இவர்கள் ஒருபோதும் ஊர்களுக்கு உள்ளே வாழ அனுமதிக்கப்படுவது இல்லை. உயர் சாதியார் வாழும் ஊர்களின் புறத்தே இவர்கள் தங்கள் சிறு குடியிருப்புக் களை அமைத்துக் கொள்கின்றனர். இவர்கள் வாழும் பகுதியினை அடுத்ததான கோண்ட் நிலப்பகுதியில் வாழும் பாணோக் களை இவர்கள் ஒத்துள்ளனர் எனக் கூறுவது பொருந்தும். பாணோக்கள் கோண்டர்களிடையே வாழ்ந்து அவர்களுக்கு மெரிய (Meriah) பலிக்காக மனிதர்களைத் தேடித்தரும் பறையர்கள் ஆவார்கள். அவர்களை இழிவாகக் கருதும் கோண்ட் மக்கள் பாயோ என்று அழைப்பதற்குப் பதிலாக தொம்பர் என்ற பட்டப் பெயரைத் தந்தே அழைக்கின்றனர். அதனை அடுத்த சவரர் நாட்டுப் பகுதியில் வாழும் பைதியர்களும் தோம்பர்களோடு உறவுடையவர்கள் என்பதில் ஐயமில்லை. (ஒருவனே தெலுங்கர்களால் பைதி எனவும் சரவர்களால் தாம்பொ எனவும், கொண்டர்களால் பாயோ எனவும்

அழைக்கப்படுகின்றான். 1881 கணக்கெடுப்பில் கோண்ட் கிராமங்களில் உள்ள பாணோக்களின் குடியிருப்புக்கள் தொம் பொ சாய் எனக் குறிக்கப்பட்டுள்ளன.) பல வகையிலும் இவர்கள் பரிதாபத்திற்குரிய நிலையிலேயே உள்ளனர். வேட்டை விலங்குகள் மிகுதியும் திரியும் மாநிலப் பகுதியில் இவர்கள் வாழ்ந்தாலும் இவர்கள் வேட்டையைப் பற்றி ஏதும் அறியாதவர்களாக வில்லையும் அம்பையும் கூட ஏந்தத் தெரியாதவர்களாகவே உள்ளனர். எனினும் கடினமாக உழைக்கும் ஒரு நல்ல பழக்கத்தை உடைய இவர்கள் நெசவு, வணிகம் மலைப் பகுதிகளில் வட்டித்தொழில் ஆகியவற்றைச் செய்வதோடு கோண்ட்கள், சவரர், கடபர் முதலிய பிற மலைவாழ் மக்களுக்கும் சமவெளியில் உள்ள வணிகர்களுக்கும் இடையே மிகப் பயனுள்ள வகையில் இடைத் தரகர்களாகவும் இயங்குகின்றனர். சில தோம்பர் இதனை விடவும் உயர்ந்த நிலையில் இருப்பதாக நம்பிக்கைக்குரியவர்கள் எனக்குத் தகவல் தந்துள்ளனர். அவர்கள் உயர் சாதியோடு கொண்ட உறவால் பிறந்த கலப்பினத்தவர்களாக இருத்தல கூடுமோ என்பதனை அவர்களால் உறுதிப்படுத்த இயலவில்லை. தோம்பர்களில் பெரும்பாலானவர்கள் மிக மோசமான திருடர்களாகையால் அவர்கள் அத்தகைய கலப்பினத்தவர்களாகலாம் என்பது உண்மையாக இருத்தல் கூடும். இந்தத் திருட்டுத் தொழிலில் ஈடுபடும் குணத்தாலேயே நூற்றுக்கணக்கான தோம்பர்கள் விசாகப்பட்டினம் சிறையில் அடைக்கப்பட்டிருப்பதை நான் அங்குச் சென்றபோது காண முடிந்தது. அவர்களுடைய உடற்கூறு அளவுகளை எடுக்கும் வாய்ப்பையும் அது ஏற்படுத்தித் தந்தது'' எனத் திரு எப். பாவ்செட் எழுதியுள்ளார்.*

அவர் எடுத்த அளவுகளில் முக்கியமானவற்றின் சராசரி வருமாறு:-

| | செ.மீ | |
|---|---|---|
| உயரம் ... ... ... ... ... ... ... ... | 161. 9 | |
| தலையின் நீளம் ... ... ... ... ... | 18. 8 | |
| தலையின் அகலம் ... ... ... | 14. 3 | |
| தலையின் நீள அகல விகிதம் ... | | 75. 6 |
| மூக்கின் நீள அகல விகிதம் ... | | 86. 5 |

* Man, 1901.

கிறித்தவ சமய போதகரான க்ளொயெர்* தோம்பர்களின் தோலின் நிறம் நல்ல கறுப்பிலிருந்து மஞ்சள்வரையானதாகவும், அவர்களின் உயரம் ஆரியர்களைப் போன்றதிலிருந்து காட்டு வாசிகளின் குள்ள வடிவம் வரையானதாகவும் இருப்பதாகவும், இவைகளுக்கு ஏற்றபடி முக அமைப்பிலும் மாற்றங்கள் இருப்பதாகவும் குறித்துள்ளார்.

தோம்பர் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு சி. ஹயவதன ராவிற்குக் கடப்பாடுடையேன். தோம்பர் நெசவு, வணிகம், இசைக் கருவிகள் வாசித்தல், இரத்தல, மலைப் பகுதியில் வட்டித்தொழில் ஆகியன செய்து வருகின்றனர். சிலர் கால் நடைகளை வைத்திருப்பதோடு, பயிர்த்தொழிலும் செய்கின்றனர். உள்நாட்டு மலைப் பகுதிகளில் வாழும் மக்கள் தங்கள் ஆடைகளுக்காக இவர்களையே நம்பி உள்ளனர். ஒவ்வொரு சிற்றூரிலும் ஒரு சில தோம்பர் குடும்பங்கள் வாழ்கின்றன. இவர்கள் மலைவாழ் மக்களுக்கும் கோமட்டிகளுக்கும் இடையே இடைத் தரகர்களாக உள்ளனர். இதனால் இவர்கள் நல்ல லாபம் பெறுகின்றனர். சிலவிடங்களில் இவர்களுடைய குழந்தைகள் பள்ளிகளுக்குச் செல்லவும் செய்கின்றனர். இசை வாணர்களாகத் தொழில் புரிவோர் முழவு அடிப்பதோடு, குழலும் ஊதுகின்றனர். செய்ப்பூர் அரசரின் அரசவைப் பரம்பரை இசைவாணர்களாக இவர்கள் இருந்து வருகிறார்கள். தோம்பர் சாதியைச் சேர்ந்த பிச்சைக்காரன் ஒரு சிறு குழலை ஊதியபடி வீடு வீடாகப் பிச்சை எடுத்துச் செல்வான். தொல்லைக்கு ஆளாபவர்கள் இவர்களுக்குப் பேய் பிசாசுகள் மீதுள்ள செல்வாக்கினில் நம்பிக்கை கொண்டவர்களாக இவர்களைக் கலந்து ஆவன செய்வர். தீட்டு ஏற்படுத்தும் தாழ்ந்த சாதியாராக இவர்கள் கருதப் பட்டாலும் கோமட்டி, பொந்தாரியர், காசிகள் ஆகியோர் இல்லங்களில் இவர்கள் உண்பதில்லை. கிறித்தவ சமய போதகர்களின் செல்வாக்கால் சில தோம்பர்கள் கிறித்தவர்களாக மதம் மாறியுள்ளனர்.

1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் தோம்பர்களின் பிரிவுகளாகப் பதியப்பட்டுள்ளவை வருமாறு:- ஒனொமிய, ஓடிய

---

* Jeypore, Breklum, 1901.

மாந்திரி, மிர்காம், கொகர. உட்பிரிவுகளாகப் பதியப்பட்டுள் ளவை வருமாறு:- மிரிகாணி, கொப்பிரிய, ஓடிய, சோதபிசிய, மாந்தரி, அண்டினிய. இவர்களிடையே பல குலப் பிரிவுகளும் உள்ளன. ஓடியர் பிரிவினரிடையே காணப்படும் குலப் பிரிவுகள் வருமாறு:- பாக் (புலி), பாலு (கரடி), நாக் (நாகம்), அனுமான், கொசிப்பொ (ஆமை), பெங்கரி (தவளை), குக்ர (நாய்), சூர்யா (கதிரவன்), மட்சய (மீன்), ஜெய்கொண்டா (பல்லி). "குரங்கு, தவளை, நாகம், சிலண்டி (*Ochna squarrosa*) மரம் ஆகியன வற்றை இவர்கள் பயன்படுத்தமாட்டார்கள். வயல்களில் எங்கும் காணப்படும் பெரிய ஓணான், நாகம், நண்டு ஆகியவற்றை மற்ற காட்டுவாசிகளைப் போல இவர்கள் தின்பதில்லை" எனத் திரு பாவ்செட் குறித்துள்ளார்.

ஒரு சிறுமி பூப்படையும்போது ஐந்து நாட்கள் குடிசைக்கு வெளியே தங்கி இருந்தபின். ஓடை ஒன்றில் குளித்துப் புத்தாடை புனைவாள். இதனைக் கொண்டாட உறவினர்களுக்கு மது வகைகள் வழங்கப்படும். பெண்கள் பெரும்பாலும் பருவம் அடைந்த பின்னரே மணம் செய்விக்கப்படுகின்றனர். ஒருவன் தன் தந்தை வழி அத்தை மகளை மணந்து கொள்ள உரிமை கொண்டாடலாம். மண உறவு பேச விரும்பும் ஒருவன் இரண்டு ரூபாய் மதிப்புள்ள மதுவினை ஒரு பானையில் கொண்டு சென்று மணக்க விரும்பும் பெண்ணின் வீட்டின் முன் வைப்பான். அவளுடைய பெற்றோர் அந்த உறவுக்கு உடன்பாடு தெரிவிக்க விரும்பி னால் அவர்கள் அந்தப் பானையை உள்ளே கொண்டு சென்று அதில் கொஞ்சத்தைப் பருகுவர். அதன்பின் சிறிது நேரம் சென்றதும் அவன் ரூபாய் ஐந்து மதிப்புடைய மதுவினை எடுத்துக் கொண்டு பெண் வீட்டாரிடம் செல்வான். தன் அத்தை மகளை மணம் பேசச் செல்லும் ஒருவன் இரண்டாவது முறை மதுக் கொண்டு செல்லும்போது ரூபாய் மூன்று மதிப் புடைய மதுவினைக் கொண்டு சென்றால் போதுமானது. அதே போல 'ஜொகொல்ல தொங்க' எனப்படும் மணப் பெண்ணிற்கான பரிசப் பணமும் அத்தை மகளுக்குக் குறைந்த

அளவினதாகவே வழங்கப்படும். மண நாளன்று மணமகன் தன் உறவினர்களுடன் மணமகள் இல்லம் சேர்வான். அங்குத் தாசரி குறித்துள்ள நல்ல வேளையில் அவன் தந்தை அவனுக்கும் மணமகளுக்கும் புத்தாடைகள் வழங்குவான். அதனை அவர்கள் அணிவர். மணமக்கள் குடிசையின் முன் நிற்கச் சாதிக்காய், அரிசி, சில செப்பு நாணயங்கள் ஆகியன முடியப்பட்ட துணி அவர்கள் மீது போர்த்தப்படும். மணமகளின் வலது கைச் சிறுவிரல் மணமகளின் இடது கைச் சிறுவிரலோடு இணைக்கப் பட்ட பின் அவர்கள் குடிசையின் உள் நுழைவர். மறுநாள் புதுமணமக்கள் மணமகன் இல்லம் செல்வர். மூன்றாம் நாள் அவர்களை மஞ்சள் நீரில் குளிக்கச் செய்தபின் ஒரு பன்றி அடித்து விருந்து நடத்துவர். ஒன்பதாம் நாள் அவர்கள் மீது போர்த்தப்பட்ட துணிகளில் உள்ள சாதிக்காய், அரிசி, காசு ஆகியன கொண்ட முடிச்சு அவிழ்க்கப்படுவதோடு மணச் சடங்குகள் முடிவுறும். கைம்பெண்கள் மறுமணம் அனுமதிக்கப் படுகின்றது. இறந்து போனவனின் தம்பியே அண்ணனின் விதவை மனைவியை மணந்து கொள்வது வழக்கம்.

வீசாகபட்டினம் மாவட்ட விவரக் குறிப்பில், "பார்வதிபூர் முகவர் பகுதியைச் சேர்ந்த தோம்பர் சமவெளிப் பகுதிகளில் வாழும் சாதியாரின் பழக்க வழக்கங்களை மேற்கொள்வதோடு மேநரிகத் (தாய்வழி மாமன் மகளை மணக்கும் பழக்கம்) தையும் கடைபிடிக்கின்றனர். இவர்கள் தாங்கள் வாழும் பகுதியை அடுத்த, சமவெளியில் வாழும் தாங்கள் மண உறவு கொள்ளும் பைதிகள் அல்லது பைதி மாலர்களினும் தாங்கள் வேறுபட்டவர்களல்லர் எனக் கூறுகின்றனர்" எனக் குறிக்கப் பட்டுள்ளது.

வாழ்க்கை வளம் மிகுந்த தோம்பர்களின் பிணங்கள் எரிக் கப்படுகின்றன. சிலண்டி (*Ochna squarrosa*) கொன்றை (*Cassia fistula*) ஆகிய மரங்களின் விறகுகள் பிணம் எரிக்கப் பயன்படுத் தப்படுவதில்லை. பத்தாம் நாள் இறந்து போனவரின் மகன் அல்லது கணவனின் தலை, மீசை, கையிடுக்கு ஆகியன மழிக் கப்படும்.

செய்ப்பூர் முகவர் பகுதியைச் சார்ந்த தோம்பர் சாதிப் பெண்களும், பிற பழங்குடிப் பெண்களும் நாகுல் என்ற வெள்ளியாலான காதணியை அணிகின்றனர். இது கடிக்கும் நாகத்தின் வாயிலிருந்து நீளும் முன் நாவினை ஒத்த அமைப்புடையது. விசாகப்பட்டினம் சமவெளிப் பகுதிகளில் தெலுங்கு சாதிப் பெண்கள் இது போன்ற தங்கத்தாலான நாக போகுலு (நாகத்தின் வடிவிலானது) என்ற காதணியை அணிகின்றனர்.

தோம்பர்களின் பெயர்கள் மற்ற ஒரிய சாதியாரின் பெயர்களைப் போல பெரும்பாலும் அவர்கள் பிறந்த நாளின் பெயராகவே இருக்கும்.

"தோம்பர்கள் சிறப்பாக வழிபடும் தெய்வம் கலுகா. இது அவர்கள் முன்னோர் ஒருவரின் ஆவியாகலாம். ஒவ்வொரு ஊரிலும் ஊர்த்தலைவன் வீட்டில் இத்தெய்வம் இருக்கும். அரிசி மாவும் மஞ்சளும் பூசப்பட்ட புதிய பானையின் மேலோ, உள்ளோ வைக்கப்பட்டுள்ள செப்புக் காசினையே இத்தெய்வமாகக் கருதுவர். வழிபாட்டின்போது பட்டாடையோ புதிய ஆடையோ ஈர ஆடையோ உடுத்திருக்க வேண்டும். ஒருவன் அப்போது இலை ஆடைகளை உடுத்திருக்கக் கூடாது. மாம் பழங்களைத்தின்னத் தொடங்குமுன் சித்திரை மாதத்து முழு நிலவு நாளன்று நிலவுக்கு அவைகளைப் படைத்த பின்பே அப் பருவத்தில் பழுத்த மாம்பழங்களைத் தின்பர்" எனத் தொம் பர்களின் சமயம் பற்றித் திரு பாவ்செட் குறிப்பிடுகிறார்.

க்ளோயெர் எழுதுவதாவது:- "வீடு கட்ட வேண்டுமானால் முதலில் கெட்ட ஆவிகள் ஒரு சிலவே தங்க வரும் நல்ல இடமாகப் பார்த்துத் தேர்ந்தெடுப்பர். அந்த இடத்தில் பல இடங்களில் கீழே இருக்கும் இரண்டு அரிசி மணிகள், மேலே உள்ள ஓர் அரிசி மணியைத் தாங்கும் படியாக மூன்று அரிசி மணிகளை நிறுத்தி வைப்பர். அவை காற்றில் விழுந்து விடாமல் இருக்கச் சுற்றிலும் கற்களை வைத்து மண்ணால் மூடிவிடுவர். சிறிது நேரங்கழித்து அவற்றை மீண்டும் ஆராய்ந்து பார்க்கும் போது மேலே வைக்கப்பட்ட அரிசி மணி கீழே விழுந்திருக்குமானால் அந்த இடம் நல்லது செய்யாது எனக் கருதி அதனைப்

வீடுகட்டப் பயன்படுத்த மாட்டார்கள். அரிசியின் அமைப்பு அப்படியே இருக்குமாயின் அதனை நல்ல நிமித்தமாகக் கருது வர். அந்த இடத்தில் முதலில் முகூர்த்தக்கால் நாட்டப்படும். அதன் நீளம் ஐந்து, ஏழு அல்லது ஒன்பது முழமாக இருக்க வேண்டும். அதன் மேற்பகுதி வைக்கோல், இலைகள், முட் கொத்துக்கள் ஆகியவற்றால் பறவைகள் எச்சமிட இயலாதபடி மூடப்பட்டிருக்கும். அவ்வாறு பறவைகள் எச்சம் இடுவது கெட்ட நிமித்தமாகக் கருதப்படும். (சர் தாமஸ் மன்றோவின் சிலை பற்றிச் சென்னையில் தற்போது ஒரு கதை வழங்கி வருகின்றது. அவர் அரிசி மண்டிகள் அனைத்திலும் இருந்த அரிசினைத் தூக்கிக் கொண்டு போய்விட மக்கள் பசியால் வாட வேண்டியதாயிற்று. முட்டை ஓட்டில் ஒரு முட்டை அளவு அரிசி ஒரு ரூபாய் விலை விற்கும் பஞ்ச நிலையை ஏற்படுத்திய அவனைத் தண்டிக்க அரசாங்கமே வெட்ட வெளியில் அவன் சிலையினை நிறுத்தியுள்ளது. பறவைகள் அவன் முகத்தில் எச்ச மிட்டு அவனை அவமானத்திற்கு உள்ளாக்க வேண்டும் என் பதே இதன் நோக்கம்.) வீடு கட்டும்போது அளவுகளில் ஒற்றைப்படை எண்களே எப்பொழுதும் சிறப்பிடம் பெறும். பூரா எண் என்று வழங்கப்படும் முழு எண்ணே உரிய அள வாகக் கொள்ளப்பட்டு அதன் அடிப்படையில் வீட்டின் அளவை வீடு கட்டுபவரின் தேவைக் கேற்ப முடிவு செய்வர். (நான்கு முழம் கொண்ட அங்கணம் என்ற அளவு இங்குச் சுட்டப்படுகிறது.) அதன்பின் திஸ்ஸாரி (ஆசாரி) வீடு நந்தி, துய்ய, திய்ய ஆகிய மூன்று முறைகளில் எந்த முறைப்படி கட் டப்பட வேண்டும் என்பதனையும் முடிவு செய்வான். நந்தி என்பது ஒன்றையும், துய்ய இரண்டையும் திய்ய மூன்றையும் குறிக்கும். வீட்டின் அளவோடு கூட இந்த எண்களின் அள வுள்ள முழங்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். வீட்டி னுடைய நீளம் பன்னிரண்டு முழமானால் நந்தி அமைப்பு முறைப் படியான வீட்டுக்கு அத்தோடு ஒரு முழம் சேர்த்துப் பதி மூன்று முழம் உள்ளதாக வீட்டை அமைக்க வேண்டும். நான்கு என்ற எண் தொழுவங்களுக்கு உரியதாகும்.

க்ளொயெர் தொடர்ந்து எழுதுவதாவது:— "தூமங்கள் எனப்படுபவை இறந்து போனவர்களுடைய, தங்க இடமின்றி

அலைந்து திரிந்து மக்களுக்குப் பல தீமைகளைச் செய்யும் ஆவிகளாம். ஒரு குழந்தை பிறந்தவுடன் அதற்கு ஆவியினைத் தரவும் அதற்கு எத்தகைய தீமையும் நேராமல் காக்கவும் தூ மனை நயமாக நட்போடு அழைக்க வேண்டும். இதற்காகக் குழந்தை பிறந்த ஒன்பதாம் நாள் ஒரு கோழியைக் கொன்று அதன் எலும்பு (beinknochen) ஒன்றினை முறித்துக் குழந் தையின் கையில் வைத்துத் திணிக்க வேண்டும். அக்குழந்தை யின் உறவினர்கள் பயபக்தியோடு அமைதியாக அதனைச் சுற்றிலும் உட்கார்ந்தவர்களாகத், 'தாத்தாவோ, பாட்டியோ அப்பாவோ அண்ணனோ வந்தால் இந்த எலும்பை எறிந்து விடு. நாங்கள் உண்மையில் அவர்கள் வந்ததை நம்புவோம்' எனக் கூறியபடி அமர்ந்திருப்பார்கள். கைக்கால்களை அசைத் துப் பரபரப்படைந்தபடி இருக்கும் அக்குழந்தை கையிலிருக்கும் எலும்பினை வீசியவுடன் தூமர்கள் வந்துவிட்டதாகக் கருதி அனைவரும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்வர். தூமர்கள் சில போது தங்களுக்கு உரிய பேய்க் குரலை எழுப்புவர். இதனைக் கேட்கும் அந்த வீட்டுக்குரியவர்கள் கிலியுற்றவர்களாக அஞ்சி ஒளிவர். தந்திரசாலிகளான திருடர்கள் மூடநம்பிக்கை வயப் பட்டவர்களான மக்களைக் கொள்ளை அடிக்க நெஞ்சிலிருந்து ஆழ்ந்த ஒலியினை எழுப்புவர் அல்லது சில கருவிகளால் மெல்லி யதான ஓசையினை (dumpftonede) எழுப்புவர். தூமனுக்கு ஆண்டுதோறும் கருப்புக் கோழியும், வீரியமிக்க சாராயமும் படைக்க வேண்டும். குடும்பத்தில் ஒருவர் நோயில் படுப்பாரா னால் அதன் தொடர்பாகச் சிறப்புப் பலி தர வேண்டும். தூமனைக் கெட்ட பிசாசாக மட்டும் கருதாமல் நலத்தைச் செய்யும் குல தெய்வமாகப் போற்றப்படுவதும் உண்டு. அவன் ஏவல், செய்வினை செய்யும் சூன்யக்காரர்களிடமிருந்து ஒருவனைக் காப்பாற்றுவான். அவனுக்காகக் கதவில் கீழ் இடத்தில் ஓர் இடம் அமைப்பர். அல்லது அவன் வாழும் இடத்தில் கதவின் மேல் மீன் பிடிக்கும் வலை ஒன்றினைப் போட்டு வைப்பர். சூன்யக்காரர் ஏவும் ஏவல். ஆவிகள் அந்த வலையில் உள்ள முடிச்சுக்களை எல்லாம் எண்ணிய பிறகே வீட்டின் உள்ளே நுழையும். பேய் வழிபாடு தூமன்களோடு நெருங்கிய தொடர் புடையதாக உள்ளது. பேய்களை வசப்படுத்தும் பூசாரிகள் -

சிலபோது பெண் பூசாரிகள் - மக்களுக்கும் தூமன்களுக்கும் இடையே ஒரு தொடர்பை உண்டாக்கி ஆவிகளை அவர்கள் உள்புகும்படி செய்வர். இந்த நிலை போதையூட்டும் பானங் களாலும், எரியும் நறுமணப் புகையினாலும் உண்டாக்கப் படுகிறது. இதனால் இழுப்பு உற்றவர்களைப் போலத் தசை நார்கள் இழுத்துக் கொள்ள அசைந்தாடுவர். இந்த நிலையில் அவர்கள் ஆவிகளுக்கு என்னென்ன பலிகளைத் தரவேண்டும் எனக் கூறுவர். சிறப்பான சில சமயங்களில் இவர்கள் தன்னிலை மயங்கியவர்களாகக கூரிய கருவிகள் கொண்டு தங்கள் உடம்பில் காயமேற்படுத்திக் கொள்வர். அல்லது நீண்ட மெல்லிய இரும் புக் கம்பிகளை நாக்கு, கன்னம் ஆகியவற்றில் சொருகிக் கொள்வர். இவ்வாறு செய்யும்போது குருதி வழிதல் கூடாது. இதற்காக அந்தக் கருவிகளில் இரத்தத்தை உறையச் செய்யும் பொருள்களோ வேறு செடிச் சாறுகளோ தடவப்படும். நீண்ட ஆணிகள் பதிக்கப்பட்ட புனித ஊஞ்சலில் அமர்ந்தும் இவர்கள் தங்கள் ஆற்றலைப் புலப்படுத்துவர். (தான் ஒருமுறை விசாகப்பட்டினம் மாவட்டத்தில் சென்று கொண்டிருந்தபோது ஒரு கிராமவாசி வீட்டிற்கு வெளியே அமர்ந்திருக்க வீட்டுக்குள் இருந்து முணகும் குரல் கேட்டதாகவும், அவன் தான் நோயுற் றிருப்பதாகவும் அவனுடைய மனைவி அவன் நோய் குணமா வதற்காக ஆணிகள் பதித்த ஊஞ்சலில் ஆடுவதாகவும் கூறிய தாகத் திரு ஜி. எப். பாடீசன் என்னிடம் கூறினார்.) ஜோம் துட்டோ எனப்படும் பேய் அல்லது எமதூதன் உருவம் ஒற்றைக் கண்ணையும், நொண்டும் கால்களையும் கொண்டதாகவும் கறுத்த தலைமுடி அஞ்சத்தக்க வகையில் நீண்டு கொம்பு போல் இருக்கவும், ஒரு கால் நீண்டும், இன்னொரு கால் எருமைக் குளம்புகளை ஒத்த பாதங்களைப் பெற்றதாகவும் இருக்கும். இவன் கிடக்கும் ஒருவன் முன் அவனை நரக வேதனைப்பட நரகலோகம் கொண்டு செல்லத் தோன்றுவான்.''

குழந்தைகள் ஆன்மாவின்றிப் பிறப்பதாகவும், அதன்பின் இறந்துபோன முன்னோர்களின் ஆவி அந்த குழந்தைகளின் உடலில் குடிபுகுவதாகவும் இவர்கள் நம்புகின்றனர். அவ்வாறு முன்னோர் ஆவி வந்து குடிபுகுவதன் அடையாளமாகக்

குழந்தை தன் கையில் திணிக்கப்பட்ட கோழிக் குஞ்சின் எலும்பினை நழுவவிடும். அப்போது கூடியுள்ள உறவினர்கள் மகிழ்வர்.*

உடம்பில் எத்தகைய காயத்தையும் ஏற்படுத்திக் கொள்ளாமலேயே சில தோம்பர்கள் தங்கள் உடம்பின் மேல் கொதிக்கும் எண்ணெயை ஊற்றிக் கொள்ளும் ஆற்றல் உடையவர்கள், எனப் பெயர் பெற்றுள்ளனர் எனவும், மேலும் தோம்பன் ஒருவனைத் துப்பாக்கியால் சுடும்போதுகூட அது அவன் உடலில் எத்தகைய காயத்தையும் உண்டாக்க இயலாதபடி அவன் தன் தோலைத் தடிக்க செய்துள்ளான் எனவும் திரு படீசன் என்னிடம் கூறினார். விசாகப்பட்டினம் மாவட்டத்தில் உள்ள சுஜனக் கோட்டையில் அடிக்கடி தரப்படும் எச்சரிக்கைகளையும் பொருட்படுத்தாமல் அடுத்தடுத்துப் பணியேற்ற இரண்டு பள்ளி ஆசிரியர்கள் மீது இவர்கள் பேயினை ஏவி விட்டுள்ளனர் என அவரே என்னிடம் கூறினார்.

திரு பாவ்செட் தோம்பர்களின் பச்சை குத்தும் முறைகளை ஆராய்ந்து அவற்றைப் படமாக எழுதி விளக்கம் தந்துள்ளார். "இந்த வடிவங்கள் அனைத்தும் அலங்காரத்திற்காக எழுதப் படுவனவேயன்றி அவை குல மரபுச் சின்னங்களோடோ பழங்குடிகளின் முத்திரைச் சின்னங்களோடோ எவ்வகையிலும் தொடர்புடையவை அல்ல" எனக் கூறியுள்ளார். எனினும் ரிஸ்லெ இது பற்றிக் கருத்துக் கூறும்போது,† "பன்னிரண்டுவரைவுகளுள்நான்குஇந்தப் பழங்குடிகளின் சமயத்தோடும், புராணங்களோடும் நெருங்கிய தொடர்புடையனவாக உள்ளன. அவற்றுள் இரண்டு குலமரபுச் சின்னங்கள். இரண்டு அவர்களுடைய பரம்பரைத் தொழிலைக் குறிப்பவை. எண்கள் 11-உம், 12-உம் தோம்பர்களிடையே நாட்டுப் புறக் கதையாக

---

* விசாகப்பட்டின மாவட்ட விவரக் குறிப்பு (Gazetteer of the Vizagapatam district.)

† Man., 1902.

வழங்குகின்ற அரிச்சந்திரன் கதையாகும். வள்ளலான இவன், தன் செல்வம் முழுவதையும் ஏழைகளுக்குத் தந்துவிட்டதோடு தன்னையே காசியில் உள்ள ஒரு தோம் சாதிக்காரனுக்கு விற்றுக் கொண்டான். அவன் இவனைத் தன்னுடைய சுடு காட்டினை இரவில் காவல் காக்க அமர்த்தினான். அரிச் சந்திரன் இவ்வாறு பணியில் ஈடுபட்டிருக்கையில் அறச் செயல்கள் புரிய வேண்டி விற்கப்பட்ட அவனுடைய மனைவி தன் மகனுடைய உடம்பினை எரிக்க அங்கு வந்தாள். அவளி டம் கட்டணம் செலுத்தக் காசு ஏதும் இல்லை. இரவில் அவளை அடையாளம் தெரிந்துகொள்ளாத அ[illegible]சந்திரன் அவளைத் திருப்பி அனுப்பிவிட்டான். நல்ல காலமாகப் பொழுது புலர்ந்தது. இருவரும் ஒருவரை ஒருவர் அறிந்து கொண்டனர். கொடை மடம் காரணமாகத் துன்பத்திற் குள்ளான அவர்கள் மீண்டும் மணம் புரிவிக்கப்பட்டனர். விட்டுணு அவர்கள் பிள்ளைக்கு உயிர்ப் பிச்சை அளித்தார். வரைவு எண் 11-இல் நிலவொளியில் சுடுகாட்டைக் காவல் காக்கும் காட்சி உள்ளது; அலை வடிவிலான கோடு கங்கையாகும்; புள்ளிகள் எதிர்க்கரையில் உள்ள மரங்கள்; அரசனின் இருபுறமும் உள்ள கோடுகள் விறகுக் கட்டைகள்; அவற்றை அவன் காவல் காக்கின்றான். வரைவு எண் 12-இல் நாம் சூரியன் உதித்து விட்டதைப் பார்க்கிறோம்; அவன் முதல் கதிரொளி பிளவு பட்ட கோடாகக் காட்டப்பட்டுள்ளதோடு அரசனும் அரசியும் சந்திப்பதையும் அவ்வரைவு காட்டுகின்றது.''

"செய்ப்பூர் பகுதியில் தோம்பர்களே (சில காசிகளும் கூட) தொல்லைகள் தரும் வகுப்பார். தோலுக்காக வேண்டிக் கால் நடைகளைத் திருடுவதிலேயே இவர்கள் அதிகமாக ஈடுபடுகின் றனர். 1902-இல் ஒரு தோம்பு கும்பல் நௌரங்பூரினைச் சுற்றி யுள்ள பெரும்பரப்பில் மக்களை அச்சுறுத்திப் பணம் கேட்கும் எல்லை வரை துணிவு பெற்றதோடு, சில மாதங்கள் அகப்படாம லும் தப்பியபடி இருந்து வந்தது. மலைப் பகுதியைச் சார்ந்த மற்ற சாதி மக்கள் தங்கள் கால்நடைகளை இழந்ததால் பொறுமை இழந்து ஆத்திரமுற்றனர். 1899-இல் செய்ப்பூர் வட்டத்தின் வட பகுதியில் உள்ள பதினாறு ஊர்களைச் சேர்ந்த ஊர்த் தலை வர்கள் ஒன்றாக இணைந்து தோம்புகள் வாழ்ந்த பதினைந்து ஊர்களில் உள்ள வீடுகளைத் தாக்கினர். தங்களுக்கு நேர உள்ள ஆபத்தைப் பற்றி முன்கூட்டியே காற்றுவாக்கில் கேள்விப்பட்ட தோம்புகள் ஓடி ஒளிந்துவிட்டனராகையால் குருதி கொட்டும் படியான மோதல் நிலை ஏற்படவில்லை. அடுத்த ஆண்டு செய்ப்பூரின் ராமகிரிப் பகுதியைச் சேர்ந்த சில ஊர்த் தலை வர்கள், பலா மரத்தின் கொம்பு ஒன்றினை ஊர்கள்தோறும் சுற்றி எடுத்துச் சென்றனர். இவ்வாறு செய்வது இரு குழுக் களுக்கிடையே மோதல் நிகழப் போவதற்கான அடையாள மாகும். தோம்புகள் நீங்கலாக மற்ற சாதியார் அனைவரும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில் கூடுமாறு இவ்வாறு அழைப்பு விடுக்கப்பட்டனர். காவல்துறையினரால் பலாக்கிளை ஊர்கள்தோறும் செல்லாமல் நல்லகாலமாகத் தடுத்து நிறுத்தப்பட்டது. அதன்பின் முகவர் செய்ப்பூர் மற்றும் தெற்கு நௌரங்கப்பூர் ஊர்த்தலைவர்களோடு இந்தப் பிரச்சனை பற்றிக் கலந்து பேசினார். தோம்புகளைச் சிறைக்கு அனுப்பு வதால் அவர்கள் போக்கில் எந்த மாற்றமும் ஏற்படப் போவ தில்லை என அவர்கள் கருத்துத் தெரிவித்தனர். சிறையில் அவர்களைக் கொழுக்கச் செய்து மீண்டும் வெளியே அனுப்பு கின்றீர்கள் என அவர்கள் அலுத்துக் கொண்டனர். (1869 ஆம் ஆண்டு விசாகப்பட்டினம் கையேட்டில் செய்ப்பூர் அரசர் கொலைக்குற்றம் புரிபவர்களைக் கைகள், மூக்கு, காதுகள் ஆகிய வற்றை வெட்டுவிப்பார் எனவும், அதன்பின் குற்றவாளி கொலையுண்டவன் உறவினர்களிடமிருந்து தப்ப இயலாது

என்றும் குறிக்கப்பட்டுள்ளது.) இறுதியாக அவர்கள் கால் நடைத் திருட்டுக்களைத் தடுக்க ஒரு வழி கண்டனர். அதுவே இன்றளவும் பின்பற்றப்படுகின்றது. சில ஊர்களை உள்ளிட்ட பகுதிகளுக்குரிய பெரியதனக்காரர்களுக்குக் குறிப்பிட்ட எழுத்துக்களையும் எண்களையும் கொண்ட முத்திரைகள் வழங்கப் பட்டன. அவர்கள் இயற்கையாக இறந்து போகும், மற்றும் விலைக்குப் பெற்றுக் கொல்லப்படும் எல்லாக் கால்நடைகளினுடைய தோலிலும் அந்த முத்திரைகளைப் பொறிக்க வேண்டும். அவ்வாறு முத்திரை இடப்படாத தோலினை வைத்திருக்கும் தோம்புகளும், தோல் வணிகர்களும், மற்றவர்களும் சந்தேகத்தோடு கண்காணிக்கப்படுவதோடு அது எவ்வாறு தங்களிடம் வந்தது என விளக்கமும் தரக் கடமைப்பட்டவர்கள் என வற்புறுத்தப்பட்டனர். இந்த முறையிலோ அன்றி வேறு ஏற்ற வழிகளிலோ தோம்புகளின் திருட்டு நடவடிக்கைகளை வெற்றிகரமாக ஒடுக்கினாலன்றி மற்றச் சாதியார் அவர்களாகவே சட்டத்திற்கு அப்பாற்பட்ட நடவடிக்கைகளை எடுக்கத் தொடங்கும் ஆபத்து உள்ளது. முகவர் பகுதியில் தோம்புகள் 50,000 எண்ணிக்கையினராக இருப்பதால் உண்மையிலேயே அது பெரிய கலவரத்தில் முடியும் எனலாம்'' என்று விசாகப்பட்டினம் மாவட்டக் கையேட்டில் குறிக்கப் பட்டுள்ளது. அதே கையேட்டில் மேலும் பதியப்பட்டுள்ளதாவது:- ''சாலைகளில் கொள்ளை அடிக்கும் பைதிகள் (பைதி மாலர்) ராயகட, குணுப்பூர் வட்டங்களைச் சேர்ந்த அவர்களைவிட மோசமான தோம்புகளுடன் தொடர்புடையவர்களாக உள்ளனர். இவர்கள் தங்கள் அடையாளம் தெரியாதிருக்க முகத்தில் கரியைப் பூசியவர்களாக ஐம்பது பேர் அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் ஒன்றாகச் சேர்ந்து ஆயுதங்கள் தாங்கியவர்களாக இரவில் வீடுகளைக் கொள்ளையடிக்கின்றனர். ஊரார் அஞ்சியவர்களாகத் தங்கள் குடிசைகளுள் பதுங்கி இருக்க, இவர்கள் வசதி படைத்த செல்வர்கள் இல்லங்களில் புகுந்து (முகவர் பகுதிகளில் சுற்றுப் புறத்தவர்களின் இரக்கத்திற்குள்ளாக இயலாதபடி கொள்ளையிடப் பொருள் வைத்திருப்பவர்களான வட்டிக்கடைக்காரச் சௌகார், சாராயம் விற்பவர், உள்ளூர் சோந்தி ஆகிய இவர்களையே

அக்கொள்ளையர் அனைத்தையும் கக்கும்படி செய்வர்.) ஆண்களைக் கட்டிப்போட்டபின், பெண்களைக் கற்பழிப்பதோடு கிடைக்கும் அனைத்தையும் எடுத்துச் செல்வர். ஒளித்து வைக்கப் பட்டிருக்கும் பொருள்களைப் பற்றி அறிந்து கொள்ள இவர்கள் வீட்டுக்கு உரியவர்கள் மீது கொதிக்கும் எண்ணெயைத் தெளிப்பர்.''

**தொம்மரர் - Dommara**

தொம்மரர் கழைக்கூத்தாடிகளாகவும், வித்தை காட்டுபவர்களாகவும், போலி மருத்துவர்களாகவும் உள்ள இனத்தவர். இவர்களில் சிலர் நாடோடிகளாக அலைந்து திரிய மற்றவர்கள் வயல்வேலை செய்யும் கூலிகளாகவோ, கருவாளி (*Elaeodendron glancum*), சுளுந்து (*Ixora parviflora*), பாவட்டை (*Pavetta indica*), ஆல் (*Ficus bengalensis*) ஆகிய மரக்கட்டைகளைக் கொண்டு சீப்புகள் செய்து அவற்றை மொத்த வியாபாரிகளுக்கு விற்பவர்களாகவோ ஓர் இடத்தில் தங்கி வாழ்கின்றனர். இவர்களைப் பற்றி 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையிலும், வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டிலும் திரு எச். எ. ஸ்டுவர்ட் பின்வருமாறு எழுதியுள்ளார்:- ''வித்தை காட்டும் நாடோடிகளான இவர்கள் பலவகையில் ஜிப்ஸிகளை ஒத்தவர்களாக உள்ளனர். இவர்களுடைய பெயர் வட இந்தியாவைச் சேர்ந்த தோம்களோடு தொடர்புடையவர்களோ என எண்ண இடந்தருகின்றது. தெலுங்கு, மராத்தி, இந்துஸ்தானி ஆகிய மொழிகளைப் பேசும் இவர்கள் பெரும்பாலும் தமிழ் பேசுவதில்லை. இவர்கள் திறமையான செப்படி வித்தைக்காரர்கள். ஆண்களும் பெண்களும் மிகத் திறமையாகக் கழைக்கூத்தாடியும் கயிற்றின்மேல் நடந்தும் ஊர் ஊராக சுற்றித் திரிந்து தங்கள் திறமையை வெளிப்படுத்துவர். சிலர் ஈச்சம்பாயும், கூடைகளும் விற்பர். சிலர் பன்றி வளர்த்து விற்பர். ஓர் ஊரில் நிலையாகத் தங்கி இருப்பவர்கள் பயிர்த்தொழிலில் ஈடுபடுவர். சமுதாயப்படி நிலையில் இவர்கள் பறையருக்கும் மாதிகர்களுக்கும் அடுத்து மேம்பட்டவர்களாக உள்ளனர். சைவம், வைணவம் ஆகிய இரு நெறிகளையும் இவர்கள் பின்பற்றுகின்றனர். குழந்தை மணம் இவர்களிடையே வழக்கில்



தொம்பரர்

இல்லை. கைம்பெண்கள் மறுமணம் தாராளமாக அனுமதிக்கப் படுவதோடு ஒருவன் பலரை மணக்கும் பழக்கமும் பொதுவாகக் காணப்படும் பழக்கமாக உள்ளது. இவர்கள் மண உறவு நிலைத்ததாக இல்லாததோடு பெண்கள் அடிக்கடி பரத்தையரா கவும் தொழில் நடத்துகின்றனர். மற்றவர்களின் பொருளைக் கவர்ந்து வாழும் இவர்கள் குடிப்பழக்கத்து அடிமைகளாக இருப்பதோடு, ஒழுக்கக் கேடான பழக்க வழக்கங்களையும் மேற்கொண்டுள்ளனர். இறந்தவர்களைப் புதைக்கும் இவர்கள் சாவுச் சடங்கின் இறுதி நாளன்று காக்கைகளுக்குச் சோறிடுவர். உணவுப் பழக்கத்தைப் பொருத்த வரையில் இவர்கள் பன்றி, பூனை, காக்கை ஆகிய எல்லா வகை விலங்குகளையும் தின்று தீர்ப்பர்.'' என் நண்பர் ஒருவர், பாம்பின் நஞ்சு பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்தபோது அவரால் புதைக்கப் பட்ட பாம்புகளையும், கீரிப்பிள்ளைகளையும் தோண்டி எடுத்து உண்ணத் தொம்மரர் அனுமதி கேட்டனர் என என்னிடம் தெரிவித்தார்.

ஊர் ஊராகச் சென்று கழைக்கூத்தாடிகளாகவும், கோமாளி களாகவும், வித்தை காட்டுபவர்களாகவும், பாம்பாட்டிகளா கவும் தங்கள் திறமையைக் காட்டி வாழ்க்கை நடத்துபவர்கள் தொம்மர்கள் என 1901 மைசூர் மாநில கணக்கெடுப்பு அறிக்கை இவர்களைப் பற்றிக் கூறுகின்றது. 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் தொம்பன், கழைக் கூத்தாடி, ஆரியக் கூத்தாடி ஆகிய பெயர்கள் தொம்மர் களுக்குரிய வேறு பெயர்கள் எனக் கூறப்பட்டுள்ளது. தஞ்சா வூர மாவட்டக் கையேட்டில் கூத்தாடிகளைப் பற்றி, நாடோடி களாக நாட்டியம் ஆடியும் நடித்தும் ஊமைக்கூத்து நடத்தியும் பொம்மலாட்டம் நிகழ்த்தியும் வாழ்க்கை நடத்துபவர்கள் எனக் கூறப்பட்டிருப்பதோடு, சமுதாயப்படி நிலையில் மிகத் தாழ்ந்த வர்களாக உள்ள இவர்கள் தெருக்களையும் கடைவீதிகளையும் ஆட்டம் நிகழ்த்தும் இடமாகக் கொள்கின்றனர் எனவும் கூறப் பட்டுள்ளது.

சென்னை மாநிலக் குற்ற இனப் பிரிவினர் பற்றிய குறிப் பில் திரு எப். எஸ். முல்லலெ தொம்மரர்களை ரெட்டி அல்லது

காபு (பயிர்த்தொழில் செய்வோர்) ஆரயெ (மராட்டியர்) என இரு பிரிவினராகப் பிரித்துக் கூறியுள்ளார். அவரே தொடர்ந்து எழுதியுள்ளதாவது:- ''தொம்மரர் சாதிப் பெண்கள் மரத்தாலும், கொம்புகளாலும் சீப்புச் செய்வதில் கைதேர்ந்தவர்கள். நெசவாளர்களுக்கு வேண்டிய கருவிகளையும் இவர்கள் செய்வர். இவற்றைத் தெருத் தெருவாகக் கூவி விற்று வரும் லாபத்தால் தங்கள் கழைக்கூத்தால் கிடைக்கும் வரும்படியோடு மேலும் கொஞ்சம் பொருள் சேர்ப்பர். செப்படி வித்தை, கயிற்றில் ஆடுதல் முதலிய தொழில்களோடு தொம்மரர் வேட்டையாடுதல், மீன் பிடித்தல், பாய் பின்னுதல், கழுதைகள், பன்றிகள் ஆகியன வளர்த்தல் முதலிய தொழில்களையும் மேற்கொள்வர். இவர்கள் சாதித் தலைவன் முட்லி குரு எனப்படுவான். சமய, உலகியல் தொடர்பான அனைத்திலும் அவனுடைய ஆணையே இறுதித் தீர்ப்பாக ஏற்றுக்கொள்ளப்படும். அவன் தலைமையிடம் கடப்பை மாவட்டத்தில் உள்ள சிட்வேல் ஆகும். முட்லி குருவினைப் பற்றி வழங்கும் வரலாறு வருமாறு:- முட்லி என்று முன்பு பெயர் பெற்றிருந்த சிட்வேலில் ஆட்சி புரிந்து கொண்டிருந்த ஓர் அரசன் ஒரு சமயம் தன் நாட்டில் வாழும் கழைக்கூத்தாடிகள் அனைவரையும் வந்து கூடுமாறு அழைத்தான். பல சாதியினைச் சேர்ந்தவர்களும் வந்து கூடினர். ரெட்டி தொம்மரர் சாதியைச் சேர்ந்த போலேரிகாடு என்பவன் திறமையில் மகிழ்ந்த அரசன், அவனுக்கு ஒரு மோதிரத்தைப் பரிசளித்ததோடு, அந்த மோதிரத்தை அணிந்து கொண்டிருப்பவனும், அவன் சந்ததியினரும் தொம்மரர் சாதியின் தலைவராக இருப்பர் என்ற ஆணையையும் பிறப்பித்தான். சித்வேலில் இன்று இருக்கும் தொம்மரர் தலைவன் அணிந்து கொண்டிருக்கும் மோதிரம் அன்று வழங்கப்பட்டதென்றும் அதில் தெலுங்கில் அதை அணிந்திருப்பவன் தொம்மரர்களின் தலைமைக் குரு என்று பொறிக்கப்பட்டிருப்பதாகவும் கூறப்படுகிறது. இந்தத் தலைமை, பரம்பரை உரிமை உடையதாகும். தொம்மரர் குடியிருப்புக்கள் குறவர், ஜோகிகள் குடியிருப்புக்களை அமைப்பில் ஒத்தனவாகப் பனை ஓலைகளால் ஏழடுக்குகள் உடையனவாக முடையப்பட்டிருக்கும். ஊருக்குப் புறத்தே அமைக்கப்படும் இக் குடிசைகளை, அவர்கள் இடம் பெயர்ந்து செல்லும்போது கழுதைகள் மேல் ஏற்றி எடுத்துச்

செல்வர். மதிப்புடையன அல்லாத திருடப்பட்ட துணிகளை விற்பனை செய்யாமல் கழுதைகளின் மேலுள்ள சுமையில் மறை வாகச் சிலகாலம் வைத்திருந்தபின் எடுத்து அணிவர். தொம் மரர் கூட்டுக் கொள்ளை, வழிப்பறி, கன்னம் வைத்தல், திருட்டு ஆகியவற்றில் தொடர்ந்து ஈடுபடுகின்றனர். மற்ற குற்ற வகுப் பினர் பயன்படுத்தும் கருவிகளைப் போலன்றி இவர்கள் பயன் படுத்தும் கருவி சுமார் ஓர் அடி நீளமுள்ளதாக உளி போன்ற முனையினை உடையதாயிருக்கும். ஆடுகள், கால்நடைகள் ஆகிய வற்றைத் திருடி ஓட்டிச் செல்வதிலும் இவர்கள் கைதேர்ந்த வர்கள். மாநிலம் முழுவதிலுமுள்ள கால்நடைச் சந்தைகள் பலவற்றிலும் இவர்களிடம் திருட்டுக் கால்நடைகளை வழக்க மாக வாங்கிக் கொள்வோர் இருக்கின்றனர்.

நெல்லூர் மாவட்டக் கையேட்டில், "தொம்மரர்கள் சில ஊர்களில் மிராசு உரிமை பெற்றிருப்பதாக நெல்லூர் வட்ட ஆட்சியர் கூறுகின்றார். சில ஊர்களில் தொம்மரர்களான கழைக்கூத்தாடிகளுக்கும், இரவலர்களுக்கும் வழக்கமாகத் தானியம் பெறும் உரிமையின் அடிப்படையில் மைசூரிலும், 'தொம்பர் லிங்கட வீர காணிக்கை' என்ற வரி விதிக்கப்பட்ட தாக வில்சனும் சுட்டியுள்ளார் என நான் கருதுகின்றேன். 1801 -இல் வெங்கடகிரியில் தொம்பர் வரி என்ற பெயரில் இந்த வரி விதிக்கப்பட்டுள்ளது" எனக் கூறப்பட்டுள்ளது. மதுரை மாவட் டத்தில் சமீன்தார்களுக்கு உரிமை உடையனவாக இருந்த சில ஊர்களில் தொம்மரர்கள் தங்களைச் சமீன்தாரின் குழந்தைகள் எனக் கூறிக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் சமீன் தார்களின் ஆதரவு பெற்றவர்கள் ஆதல் கூடும்.

குற்றவியல் வகுப்பாரான இவர்கள், திருடர்கள் மொழி எனப்படும் தனிப்பட்ட மொழியினைப் பயன்படுத்துகின்றனர். அதிலிருந்து மாதிரிக்குச் சில எடுத்துக்காட்டுகள் வருமாறு:-

பீடம்வாடு – தொம்மரர்
போத்தி – காவலர்
மரிகம் - பன்றி
கல்ஜோடு - பொற்கொல்லர்
தாசமச - பரத்தை
கொப்பரம் - உப்பு
கோபரம் - ஏழு

தொம்மரர்கள் தங்கள் சாதியில் மற்றச் சாதிகளைச் சேர்ந்த குழந்தைகளையும், நடத்தையில் ஐயுறவு கொள்ளத்தக்க பெண்களையும் சேர்த்துக் கொள்வதோடு பசவிகளை (நேர்ந்து விடப்படும் பரத்தைகள்) யும் நேர்ந்து விடுவர் எனக் கூறப்படுகிறது. இதிகாசங்களில் கூறப்பட்டுள்ள சலவப் பறவையின் பெயரைத் தெலுங்கு பேசும் தொம்மர்கள் தங்கள் கோத்திரப் பெயராகக் கூறுவர். திருமணத்தில் இவர்கள் பொந்து என அழைக்கப்படும் நூற்றொரு நூலிழைகள் கொண்ட மஞ்சள் நீரில் தோய்க்கப்பட்ட தாலிக் கயிற்றினைத் தங்கத் தாலிப் பொட்டுக்குப் பதிலாகப் பயன்படுத்துகின்றனர். ஆரே தொம்மர்களின் மணச் சடங்குகளை ஒரு வயதான பசவி மேற்பார்வை இடுவதோடு மணப்பெண்ணின் கழுத்தில் தாலியினையும் ஒரு பசவியே கட்டுவாள்.

நான் கோயம்புத்தூரில் பேட்டி கண்ட ஒரு தொம்மரன் அவனுடைய மருத்துவத் தொழிலுக்கும், பாம்பாட்டும் தொழிலுக்கும் தேவையான பல்வேறு பயனற்ற குப்பை கூளங்கள் நிறைந்த துணிப்பை ஒன்றினை வைத்திருந்தான். அதில் மற்றவற்றுடன் மஞ்சள் பூசப்பட்ட போலியான நரிக் கொம்புகளும் இருந்தன. அவை நரியின் கால் நகங்களால் செய்யப்பட்ட போலியான நரிக்கொம்புகள் அல்ல என்பதனை மெய்ப்பிக்க அவன் நரியின் கால் நகங்களையும் தனியே காட்டினான். அந்த நரிக் கொம்புகள் அவனால் போலியாகத் தயாரிக்கப்பட்டவை என்று நான் சொன்னபோது அவன் தன்னோடு வந்த சிறுவனின் தலையில் கை வைத்து அவன் என்னை ஏமாற்றவில்லை எனச் சத்தியம் செய்தான். அவனிடம் உள்ள கொம்புகளில் மிகப் பெரியது அவன் கடந்த அமாவாசையின் போது அவனே வங்கினைத் தோண்டிப் பிடித்த நரியினுடையது என்றும், அத்தகைய கொம்புகளை உடைய நரிகள், கூட்டத்தோடு இரவில் இரை தேடச் செல்லாது என்றும், எப்போதாவது வங்கினைவிட்டுப் பனி நீர் பருகவும் வயல் எலிகளைப் பிடிக்கவும் வரும் எனவும் கூறினான். இந்தப் போலிக் கொம்புகள் அவற்றை வைத்திருப்பவர்களுக்குக் கவசமாக இருப்பதோடு அவர்கள் விருப்பத்தையெல்லாம் நிறை

வேற்றி வைக்கும் ஆற்றலுடையது என நம்பப்படுகிறது (பார்க்க: குருவிக்காரன்). அந்தத் தொம்மரன் விரலில் அணிந் திருந்த இரும்பு மோதிரம் குடல் இறக்கத்தைத் தீர்க்கப் பயன் படுவதாகக் கூறினான். அது சூடேற்றப்பட்டுக் குடல் உள்ள வயிற்றுப் பகுதியில் முத்திரை இடுவது போல வைத்து அழுத் தப்படும். பின் காயத்தின் மீது விளக்கெண்ணெய் தடவி முட்டையோடு கலக்கப்பட்ட ரகசிய மருந்து ஒன்று கொடுக்கப் படும். அந்த மோதிரம் வழிவழிக் குடும்ப உடைமையாய் வருவதால் மிக மதிப்பு வாய்ந்ததென்றும் அவன் கூறினான். பெரிய மூட்டுக்களில் தோன்றும் கீல்வாத நோயினைக் குணமாக்க யூகமானதொரு குருதி உறிஞ்சு குமிழ் முறையினை இவர்கள் கையாளுகின்றனர். நோயுற்ற பகுதியில் சிறிய அளவில் ஒரு கண்ணாடித் துண்டினால் கீறித் தோலினைத் தண்ணீரால் ஈரமாக்குவர். ஒரு பசுவின் கொம்பு முனையின் கூரான பகுதி யினை அகற்றியபின் அதில் உள்ள துளையினை மெழுகு பூசி அடைத்த பின் அது உறிஞ்சு குமிழாகப் பயன்படுத்தப்படு கின்றது. மெழுகின் வழியாக இரும்பு ஊசியால் துளை இடப் பட்ட பின் அக்கொம்பினை நோயுற்ற பகுதியின் மீது வைத்து வாயால் உறிஞ்சி அதனுள் இருக்கும் காற்றினை இழுத்தபின் மெழுகில் இடப்பட்ட துளை அடைக்கப்படும். குமிழினுள் உள்ள காற்று வெளியேறிய காரணத்தால் அதனுள் அடங்கிய உடற் பகுதியின் தோல் மேலே எழும். குமிழினை எடுக்க மீண்டும் மெழுகில் துளையிட்டு காற்றினை உள்ளே புக விட வேண்டும். மிக மோசமாக நோயுற்றவர்களுக்கு அப்பகுதியில் மூன்று குமிழ்கள் வரை பொருத்தப்பட வேண்டும். ஆக்ஸ்போர்டில் உள்ள பிட்ரிவர்ஸ் அருங்காட்சியகத்தில் மிர்ஜாபூரிலிருந்தும், நேட்டாலிருந்தும் கொண்டு வரப்பட்ட உலர் குமிழாகப் பயன் படுத்தப்படும் பசுவின் கொம்புகள் உள்ளன. இந்தியாவின் எப் பகுதியிலிருந்து கொண்டுவரப்பட்டது என்ற விவரம் இல்லாத ஒரு மறிமானின் கொம்புக் குமிழும் அங்கு உள்ளது. தேள் கொட்டியவர்களுக்குத் தொம்மரர் அதற்கென்றே வைத்திருக்கும் மாத்திரையைத் தாய்ப்பாலிலோ திருகு கள்ளிப் (*Euphorbia Tirucalli*) பாலிலோ உரைத்துத் தடவுவர். மார்பு வலிக்குக் காவிக் கல்லையும் குழந்தைகளின் நோய்களுக்குத் தண்ணீரில் கடுக்

காயை உரைத்தும் தருவர். பாம்புக்கடிக்குப் பல மருந்துகளைக் கலந்து காய்ச்சி உருவாக்கப்பட்ட ஒரு கருங்கல்லினைக் கடிவாயில் வைப்பர். அந்தக் கல் நஞ்சு முழுவதையும் உறிஞ்சியபின் தானே விழுந்துவிடும் என்று சொல்லப்படுகிறது. அதன்பிறகு அக்கல்லினைப் பாலில் அல்லது தண்ணீரில் இட்டு அதிலுள்ள நஞ்சினை வெளியேற்றுவர். நஞ்சு கலந்த அத்திரவம், குடிப்பவர்கள் உயிரினைப் போக்கும் ஆகையால் வெளியே கொட்டப்படும். வெறிநாயின் கடிக்கு மாற்றாக ரகசியமாகப் பேணப்பட்டு வரும் ஒரு செடியினை, வெள்ளாட்டுப் பால், மிளகு, பூண்டு முதலிய பொருள்களோடு கலந்து குடிக்கத் தருவர். ஒரே வேளை மருந்தில் கடிபட்டவர் குணமாவார்.

மைசூரில் உள்ள தரிகேரியில் நாடோடிகளான ஆரே மராட்டிய தொம்மரின் நிகழ்ச்சிகளை நான் கண்டேன். பெண்கள் அணிகள், மலர்கள் ஆகியன அணிந்து தங்களை அலங்காரம் செய்து கொண்டிருந்ததோடு காலில் சலங்கையும் அணிந்திருந்தனர். ஆண்கள் தங்கள் கால்சட்டையின் கீழ் விளிம்பில் வரிசையாகச் சலங்கை புனைந்திருந்தனர். ஆட்டம் தொடங்குமுன் பசுஞ்சாணத்தால் செய்து வைக்கப்பட்ட விநாயகருக்கு வணக்கம் செய்தனர். அந் நிகழ்ச்சி வெட்டவெளியில் கொட்டுமுழக்கு, சீழ்க்கை ஒலி, பாட்டு, பாராட்டு ஆகியவற்றிடையே நடைபெற்றது. சர்க்கஸ் கோமாளியின் வேடிக்கை விளையாட்டுக்கு ஒப்பானதான ஒருவன் செயல்கள் வேடிக்கை பார்க்கக் கூடியுள்ள ஊர்மக்களை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. ஆட்டத்தில் முக்கிய பங்கு கொண்ட ஒருவன் ஓய்வாக இருக்கும் இடை வேளையில் முழவினை அடித்ததோடுகூடப் புகைபிடிக்கும் ஹுக்கா குழலிருந்து புகையை வேறு உறிஞ்சிக் கொண்டான். ஹுக்காவினை நிகழ்ச்சியில் பங்கு பெறும் அனைவருமே மாறி மாறி உறிஞ்சிக் கொண்டிருந்தனர். ஆண்கள், பெண்கள் ஆகிய இருபாலரும் பங்கு பெற்ற நிகழ்ச்சியில் கழைக்கூத்துக்களும் குட்டிக் கரணங்களும் பக்கவாட்டுக் கரணங்களும் மூங்கில் கழியின்மேல் நின்று நடத்தலும் இழுத்துக்கட்டப்பட்ட கயிற்றில் நடத்தலும் ஆகியனவே முக்கிய நிகழ்ச்சிகளாக இடம் பெற்றன. இறுதியாக ஒருவன் உயரமான மூங்கில் கம்பத்தில் ஏறி,அதன் உச்சியில் தன்

இடையில் உள்ள கோவணத்தோடு பிணைக்கப்பட்ட இடுக்கிப் பிடிப்பில் மூங்கிலோடு இணைக்கப்பட்ட கம்பியினைச் சேர்த்து இணைத்துக் கொண்டவனாக சுற்றிச் சுற்றி வந்தான்.

**தொண்டிய - Dondia**

கௌடொ சாதியாரின் பட்டப் பெயர்.

**தொங்க தாசரி – Donga Dāsari**

தாசரி என்பதன் பொருள் இறைவனின் அடிமை என்பதாகும். "உண்மையில் இது வைணவ சமயத்தைச் சேர்ந்த சமயத் தொடர்புடைய இரவலர்களைக் குறிக்கும் சொல்லாகும். முன்பு இரந்தே வாழ்க்கை நடத்தி வந்த இவர்களின் தோள்களில் வைணவச் சமயச் சின்னங்கள் பொறிக்கப்பட்டுச் சமயநெறி சார்ந்த இரவலர் கூட்டத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்பட்டு வந்தனர்." எனத் திரு பிரான்சிஸ் தென் ஆர்க்காடு மாவட்டக் விவரக் குறிப்பில் எழுதியுள்ளார். தொங்க அல்லது திருட்டுத் தாசரிகள் உண்மையான தாசரியிலிருந்து மிகவும் வேறுபட்டவர்கள். "தொங்க தாசரி ஆண்களும், பெண்களும் தாசரிகள் போல வேடமிட்டு நெற்றியில் வைணவச் சமயச் சின்னமான நாமம் தரித்துக் கருடக் கம்ப விளக்கு, சேகண்டி, ஜகதா எனப் படும் சிறு முழவு, கொண்டையில் மயிலிறகுக் கற்றை ஆகியன தாங்கியவர்களாக ஊர் ஊராகப் பிச்சைகேட்டுச் செல்வர். வேங்கடேசுவரப் பெருமானின் அடியவர்கள் என்று ஊரார் சிலபோது இவர்களுக்குப் பணியாரங்களோடு நல்ல விருந்திடுவர்.*"

தொங்க தாசரிகளைப் பற்றி 1903 – ஆம் ஆண்டில் கல்கத்தா ரெவ்யூ இதழில் ஒரு கட்டுரையில் திரு எஸ். எம். நடேச சாஸ்திரி பின்வருமாறு சுவைபட எழுதியுள்ளார்:- "கோயில் தாசரிகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டவர்கள்

---

* எம். பாப்பா ராவ் நாயுடு, இரயில்வேத் திருடர்கள் வரலாறு, மூன்றாம் பதிப்பு, 1904.)(M. Paupa Rao Naidu, History of Railway Thieves. 3rd Edition, 1904.)

தொங்க தாசரிகள். பெல்லாரி மாவட்ட குற்ற வகுப்பாருள் மிகவும் அஞ்சத் தக்கவர்கள் இவர்களே. பெல்லாரியில் வந்து இவர்கள் குடி அமர்ந்த தொடக்க நாள்களில் தங்கள் எண்ணிக் கையினைக் கூட்ட மற்றச் சாதிகளைச் சேர்ந்த சிறுவர் சிறுமி யரைக் கடத்தும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தனர். இன்றும் கூட அப்பழக்கத்தின்படி யார் வேண்டுமானாலும் தொங்க தாசரியாகலாம். ஆனால் அவ்வாறு ஆக யாரும் விரும்புவ தில்லை. இந்தக் கூட்டத்தினரைச் சேர்ந்தவர்களாகப் பெரும் பாலும் லிங்காயதர்கள், கப்பேரர்கள் ஆகிய சாதியினரே சேர்க்கப்பட்டுள்ளனர் என்பதே உண்மை. அச் சாதிகளிலும் நேர்மையான வாழ்க்கை நடத்தும் எவரும் இப் பிரிவில் சேர வில்லை. சாதி விலக்கம் பெற்றவர்களே தொங்க தாசரிப் பிரிவினைப் புகலிடமாகக் கொண்டனர். சில சமயங்களில் முகமதிய புத்மாசேயர் (தவறான வழியில் வாழ்க்கை நடத்து பவர்) களும், பிற சாதியைச் சேர்ந்த கீழான நடத்தை உடைய வர்களும் தொங்க தாசரிகளாகின்றனர். அவ்வாறு புதிதாக இப்பிரிவில் சேர வருபவர்களைத் தொங்க தாசரிகள் ஒரு ஆற்றங்கரைக்கு அழைத்துப் போய் எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டச் செய்து புதிய ஆடைகள் தந்து கூட்டத்தாரோடு விருந்துண்ணச் செய்வர். அதன்பின் எரியும் வன்னி (***Prosois spicigera***) அல்லது வேப்பங் (*Melia Azadiracta*) குச்சியினால் லேசாக அவர்களுடைய நாக்கினைச் சுடுவர். ஒவ்வொரு புதிய உறுப்பினரையும் புனிதப்படுத்திக் கூட்டத்தில் சேர்த்துக் கொள்ளும் இச்சடங்கினைச் செய்த பின்னர் அவர்கள் குழுவினில் அமரும் உரிமையும், விருந்துகளில் கலந்து கொள்ளும் உரிமையும் பெறுவர். தொங்க தாசரிகள் தெலுங்கு, கன்னடம் ஆகிய இரு மொழிகளையும் பேசுவர். சுன்ன அக்கி (சன்ன அரிசி), கண்டேலவாரு (மணி வைத்திருப்பவர்கள்) என்ற இரண்டு குடும்பப் பிரிவுகளே இவர்களிடையே உள்ளன. இவற்றுள் பின்னது கப்பேரர்களின் இல்லப் பெயர்களில் ஒன்றாகும். கப்பேரர் சாதியில் பலர் தொங்க தாசரிகள் பிரிவில் சேர்ந்துள்ளனர் என்பதனை இது தெளிவுபடுத்தும். இன்றும் தொங்க தாசரிகள் கப்பேரர்களோடு மண உறவு கொள்கின் றனர். அதாவது கப்பேரர் குடும்பங்களிலிருந்து பெண் கொள்

கின்றனர், எனினும் தங்கள் பெண்களைக் கப்பேரர் குடும்பங் களில் கட்டித்தருவதில்லை. அனுமானே இவர்கள் வழிபடும் சிறப்பான தெய்வம். பலர் விட்டுணுவின் அவதாரமான வேங் கடேசுவரரையும் வழிபடுகின்றனர். எனினும் இவர்களுடைய ஊர்கள் எல்லாவற்றிலும் கிராம தேவதைகளான ஹீளிகவ்வா அல்லது எல்லாமாவிற்கான கோயில்கள் உள்ளன. இந்தத் தெய் வங்களுக்கே இவர்கள் ஆடு, கோழி ஆகியவற்றைப் பலியிடு கின்றனர். குழந்தைகள் நோயுறும்போது இத்தேவதைகளுக்கு நேர்ந்து கொள்கின்றனர். இதனோடும் கூடத் திருட்டுத் தொழி லுக்குப் புறப்படும் முன் இவர்கள் இந்தக் கிராம தேவதைகளின் கோயில்களில் நேர்ந்து கொண்டே புறப்படுவர் என்பது அனை வரும் அறிந்த ஒன்றாகும். அவ்வாறு நேர்ந்து கொள்ளும் சடங் குகள் பின்வருமாறு நிகழும். குழுவினர் திருட்டுக்காகப் பயணம் மேற்கொள்ளுமுன் ஊரருகே உள்ள காட்டினை அடைந்து முன்னிரவில் தங்கள் வழிபடு தெய்வமான ஹுளிகவ்வா அல்லது எல்லம்மாவை ஆடு அல்லது கோழியைப் பலியிட்டு வணங்குவர். பலியிடும் உயிரின் தலை தரையில் விழுந்தவுடன் அவர்களில் ஒருவன் தன் தலைப்பாகையை அதன்மீது வைப் பான். தலைப்பாகை வலப்பக்கமாக விழுமானால் அதனைத் தெய்வம் தங்களைத் தொழில் மேல் செல்ல அனுமதிக்கும் நல்ல நிமித்தமாக ஏற்றுக் கொள்வர். அது இடப்பக்கமாக விழுமா னால் அன்றிரவு வீட்டுக்கே திரும்பிவிடுவர். இவ்வாறு திருட் டுக்காகப் புறப்படும்போது அனுமானிடமும் நிமித்தம் கேட்பர். அதனைக் கேட்கும் முறை வருமாறு:— ஊரருகே உள்ள அனுமான் கோவிலுக்குச் சென்று வழிபாடு செய்தபின் அனுமானுக்கு மலர்களால் ஆன மாலையினை அணி விப்பர். அந்த மாலை அனுமான் உருவத்தின் கழுத்திலிருந்து இரு பக்கங்களிலும் தொங்கியபடி இருக்கும். வலப் பக்கமாகத் தொங்கும் பகுதியிலிருந்து முதலில் ஒரு பூ கீழே விழுமானால் அது நல்ல நிமித்தமாகவும் தொழில் மேற்செல்ல அனுமதியாக வும் கொள்ளப்படும். இதற்கு மாறாக இடப்பக்கமாகத் தொங்கும் மாலையிலிருந்து பூ முதலில் கீழே விழுமானால் அது அனுமதி மறுக்கப்பட்டதாகக் கொள்ளப்பட்டுப் பயணத்தைக் கைவிடுவர். தொங்க தாசரிகள் திருடச் செல்லும்போது மனைவி மக்கள்

பின் தொடரக் குடும்பமாகவே புறப்பட்டுச் செல்வர். வீடுகளில் புகுந்து திருடுவதிலும், களவாடுவதிலும் இவர்கள் கெட்டிக் காரர்கள். குழந்தைகளின் வயது ஐந்து அல்லது ஆறாக இருக் கும்போதே அவர்களின் தாய்மார் அவர்களுக்குத் திருடக் கற்றுத் தருகின்றனர். குழந்தைகளின் தாய்மார் அவர்களை அருகில் உள்ள கடைத் தெருவிற்கு அழைத்துச் சென்று ஒரு துணியையோ அல்லது பாத்திரத்தையோ சுட்டிக் காட்டி அதனை அங்கிருந்து எடுத்து வரும்படி கூறுவர். குழந்தையால் அவ்வாறு செய்து முடிக்க முடியவில்லையாயின் அதற்குத் தண்டனையாக் நன்கு முதுகில் வெளுப்பர். அவ்வாறு முதுகில் அடிவிழும் போதெல்லாம் 'எனக்கு ஒன்றும் தெரியாது' எனச் சொல்லும்படியாக அதற்குக் கற்றுத் தருவர். அக்குழந்தை ஆணாகவோ பெண்ணாகவோ வளர்ந்து பெரியவர்களான பின் ஏதேனும் ஒரு திருட்டு வழக்கில் அகப்பட்டு உண்மையை வரவழைக்கக் காவலர்கள் அடி உதை தரும்போது சொல்வதற் குரிய ஒரே பதிலான 'எனக்கு ஒன்றும் தெரியாது' என்பது இளமையிலே இவ்வாறு கற்றுத் தரப்படுகிறது. காவலரிடம் அகப்படின் பொய்யான பெயரையும் சாதியையும் தரும் இவர்கள் தங்களுக்கே உரிய குழுஉக்குறி மொழி ஒன்றினைக் கொண் டுள்ளனர். தொங்க தாசரிப் பெண்கள் ஒழுக்கம் வழுவும் இயல் புடையவர்கள். அவர்கள் பிராமணன், லிங்காயதன், கப்பேரன், குருபன், உப்பரவன், ராஜ்புத் ஆகியவர்களோடு தகாத உறவு கொள்வார்களாயின் நாக்கில் சூடிட்ட பின் மீண்டும் சாதியில் சேர்த்துக் கொள்ளப்படுவர். கைம்பெண்கள் மறுமணம் தாராள மாக அனுமதிக்கப்படுகிறது. இவர்கள் பன்றி, மாடு ஆகிய வற்றின் இறைச்சியைத் தவிர மற்றெல்லா விலங்குகளின் ஊனினையும் உண்பர்.''

**தொங்க ஒட்டர் – Donga Odde**

திருட்டைத் தொழிலாகக் கொண்ட ஒட்டர்களுக்கு உரிய பெயர்.

**தொங்கயட்டொ – Dongayato**

கௌடொ சாதியின் ஓர் உட்பிரிவு.

**தொங்குருடியர் – Dongrudiya**

மாலியர் சாதியின் ஓர் உட்பிரிவு.

**துரை - Dora**

துரை என்பது தலைவர் (எஜமான்) எனப் பொருள்படும். இது போயர், ஏகாரி, ஜாடாபு, ெ.ாண்ட தொர, முத்ராசா, பத்ரா, தெலக, வெலம, ஏனாதி போன்ற பல சாதிகளுக்கு உரிய பட்டப்பெயராக உள்ளது. கோதாவரி மாவட்ட மலைக் கோய்யிகள் அல்லது கோய்யுகள், கோய் துரை அல்லது துரை லு (துரைகள்) என வழங்கப்படுகின்றனர். தெலுங்குப் பகுதியில் சில இடங்களில் ஒருவர் துரை எனச் சுட்டப்படுவாரானால் அவர் பெரும்பாலும் வெலமர் சாதியைச் சேர்ந்தவராகவே இருப்பார் என நான் கேள்விப்பட்டேன். சமூகப் படிநிலையில் பின்வரும் உயர்வுச் சிறப்புக்கள் உள்ளன எனத் தெரிகிறது.

| | |
|---|---|
| வெலம துரை | - Velama Esquire. |
| கம்ம வாரு | - Mr. Kamma. |
| காபு | - Plain Kāpu, without any honorific suffix. |

தென்னிந்தியாவில் துரை, துரைசானி என்பன வட இந்தியாவில் வழக்கில் உள்ள சாஹிப் மேம்சாஹிப் என்பனவற்றுக்குச் சமமாக ஆங்கிலேய எஜமானர்களைக் குறிப்பனவாக உள்ளன.

"சர் தாமஸ் மன்றோவுக்கு இணைக்கப்பட்ட மாவட்டங்களில் தரப்பட்ட பட்டப்பெயர் கர்னல் துரை என்பதாகும். இன்றும் வருவாய்த் துறையினர் அவர்கள் விதிகள் தொடர்பாக ஏதேனும் விளக்கம் கேட்கப்படுமானால் அந்த விதி கர்னல் துரை ஏற்படுத்தியது எனப் பதிலிறுப்பது மரபாக இருந்து வருகிறது" என சர் எ. ஜே. ஆர்புத்னாட் அவர்கள் குறித்துள்ளார்."*

---

* சர் தாமஸ் மன்றோ பற்றிய நினைவுகள். (Memoir of Sir Thomas Munro.)

பாளையக்காரர்களின் வழிவந்தவர்கள் எனக்கூறிக் கொள்ளும் போயர்கள் தங்களைத் துரை பிட்ட (எஜமானரின் குழந்தைகள்) என்ற பெயருக்கு உரியவர்களாகக் கூறிக் கொள்வர்.

**திராவிட - Drāvida**

கம்சாலர்களின் ஓர் உட்பிரிவு. தென்னிந்தியப் பிராமணர்கள் தங்களைத் திராவிடர் என அழைத்துக் கொள்கின்றனர்.

**தூபதுப - Dūbaduba**

புடுபுடுக்கைக்காரர்களுக்கான ஓரியப் பெயர் எனக் கணக். கெடுப்பில் பதியப்பட்டுள்ளது.

**துட்டு - Duddu (money)**

மாலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலப் பெயர்.

**தூதேகுலர் - Dūdēkula**

வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டிலும் 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையிலும் திரு எச். எ. ஸ்டுவர்ட் தூதே குலத்தவர்களைப் பற்றிப் பின்வருமாறு விளக்கியுள்ளார். "பருத்தியைத் துப்புரவாக்கும் தொழிலை மேற்கொண்டுள்ள முகமதியரே தூதேகுலர் (தூதெ – பருத்தி; யெகுல – துப்புரவு செய்). இவர்கள் தமிழ் நாட்டில் பஞ்சாரி எனவும், பஞ்சுகொட்டி எனவும் அதே பொருள்பட அழைக்கப்படுகின்றனர். இவர்கள் முகமதியர்களாயினும் தங்களைச் சுற்றிலும் வாழும் இந்துக்களின் பழக்கவழக்கங்கள் பலவற்றையும் மேற்கொண்டவராயுள்ளனர். மணமகளுக்குத் தாலி அணிவித்தல், முகமதிய சமயத்தைப் பற்றி ஏதும் அறியாதிருத்தல், இயன்றவரை இந்துக்களின் வழிபாட்டிலும் பங்கு பெறுதல் ஆகியன அவற்றுள் சில எனலாம். இந்துக்களைப் போலவே உடை அணியும் இவர்கள் அடிக்கடி தாடியை மழித்துவிடுகின்றனர். எனினும் இந்துக்களைப் போல் உச்சந்தலையில் மட்டும் முடியினை இவர்கள் வைத்துக் கொள்வதில்லை. சுன்னத்துச் சடங்கு தவறாது நடத்தப்படுகின்றது எனினும் இவர்கள் முகமதிய சமய அருளாளர்களை வழிபடுவதில் மிகுந்த நாட்டம் காட்டுகின்றனர். சுமார் முந்நூறுக்கும்

மேற்பட்ட இந்துக்கள் தங்களைத் தூதேகுலர் அல்லது பஞ்சாரி கள் எனப் பதிந்து கொண்டுள்ளனரெனினும் இவர்கள் பருத்தி யைத் துப்புரவு ஆக்கும் பணியில் ஈடுபட்டுள்ளதால் தங்களை இவ்வாறு அழைத்துக் கொள்ளும் வேறு சாதியினர் ஆவர்.

தூதேகுலரைப் பற்றி 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் திரு டபிள்யூ.பிரான்சிஸ் கூறியுள்ளவை வருமாறு:- "முகமதியர்களுடைய சாதி ஒன்றைச் சேர்ந்த இவர்கள் பருத்தி துப்புரவு செய்வதோடு கயிறு, நாடா ஆகியனவும் தயாரிக்கின் றனர். இவர்கள் இஸ்லாமுக்கு மதம் மாறியவர்கள் அல்லது முக மதியர்கள் பிற பெண்களோடு கொண்ட உறவின் வழியே பிறந்தவர்கள். இதன் காரணமாக இவர்கள் திராவிட மொழி களையே - கன்னடம் அல்லது தெலுங்கு - பேசுகின்றனர். சிலர் இந்துஸ்தானியையும் பேசுகின்றனர். இவர்கள் பழக்க வழக்கங் கள் இந்துக்களுடையதும் முஸ்லீம்களுடையதுமான ஒரு கலப்பட நெறியாகும். சொத்துரிமை பேணுவதில் முகமதியச் சட்டத் தையே பின்பற்றுகின்றனர் என்பது தெளிவு. மசூதிகளில் சென்று தொழுகை நடத்துவதோடு, குழந்தைகளுக்குச் சுன்னத்துச் சடங் கும் செய்விக்கின்றனர். எனினும் சிலர் இந்துக்களின் விழாக் களையும் கொண்டாடுகின்றனர். இவர்கள் தங்கள் தொழிற் கருவிகளைத் தசராவிற்குப் பதிலாகப் பக்ரீத் பண்டிகையின் போது வழிபடுகின்றனர். பொழுது சாயும்போது முகமதியர் தொழுகைக்காக விடுக்கும் அழைப்புக் குரலினை எழுப்புவர். முகமதிய அருளாளர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடங்களில் வழிபாடு நடத்துகின்றனர்." விசாகப்பட்டினம் மாவட்டத்தில் தூதேகுலர் பஞ்சு கொட்டுவதாகவும் கொம்புகள் முழக்குவதா கவும் கூறப்படுகிறது.

தூதேகுலர் பற்றிய பின்வரும் குறிப்புக்கு நான் திரு ஹாஜி காஜா ஹுசைன் அவர்களுக்குக் கடப்பாடு உடைய வன். தூதேகுலர் அனந்தப்பூர் மாவட்டத்திலுள்ள கொண்டா வைச் சேர்ந்த பாவா பக்ருதீன் பீர் அவர்களைத் தங்கள் பிரிவின் முதல்வராகக் கொள்வர். தூதேகுலர் உள்ளிட்ட பெரும் எண்ணிக்கையிலான முகமதியர்கள் ஆண்டுதோறும்

அவருடைய கோயிலில் கொண்டாடப் பெறும் விழாவில் கூடி படிஹ ஓதி வணக்கம் செலுத்துவர். இது தொடக்கம் எனப் பொருள்பட்டுக் குரானின் முதல் அத்தியாயத்தைக் குறிக்கும். இறந்துபோனவர்களின் ஆன்மா அமைதியுறுவதற்காக அந்த முதல் அத்தியாயம் திரும்பத் திரும்ப ஓதப்படும். இந்தச் சடங்கு தொடர்பாக அரிசி, ஊன், நெய் ஆகியவை கலந்த ஒரு புலவு தயாரிக்கப்படும். அது காஜியால் படைக்கப்பட்டு அந்த அத்தியாயம் திரும்பத் திரும்ப ஓதப்படும்.

பக்ருதீன் பீர் அவர்களின் வரலாறு வருமாறு:- கி.பி. 1122 -இல் (ஹிஜ்ரீ- 564) பிறந்த இவர் பெர்சியாவில் செய்ஸ்டானில் அரசராக இருந்தார். ஒரு நாள் இவர் நீதி வழங்கிக் கொண்டிருக்கும் போது ஒரு வணிகன் சில குதிரைகளை விற்பனைக்காக இவர் முன் கொண்டு வந்து நிறுத்தினான். அதனால் சிந்தை தடுமாறி ஒரு கணம் அவர் அந்தக் குதிரைகளின் ஒன்றின் அழகில் மனம் மயங்கினார். தன்னுடைய மயக்கத்திலிருந்து விடுபட்ட அவர் தன் சிந்தையினைக் கடமையாற்றும்போது அதுபோலத் தடுமாற விட்டதற்காகத் தன்னையே நொந்து கொண்டார். தன் நாட்டிலிருந்த கற்றறிந்த மௌலிகள் அனைவரையும் அழைத்துத் தன்னுடைய அந்த நடத்தைக்குரிய தண்டனை என்ன என்று கேட்டார். அவர்கள் அனைவரும் ஒரு மனதினராகப் பட்டம் துறப்பதுதான் அதற்கான தண்டனை என்றனர். அதன்படி அவர் தன் தம்பிக்கு அரசுரிமையை நல்கியபின் கடுநோன்பு மேற்கொள்ளும் துறவியாக இந்தியாவிற்கு வந்து காடுகளில் அலைந்து திரிந்தபடி இருந்தார். இறுதியாகத் திருச்சிராப்பள்ளியை அடைந்த அவர், புகழ்பெற்ற அருளாளரான தபிரி ஆலாம் அவர்களை அடைந்து அவருடைய சீடரானார். அவரைத் திருக்கூட்டத்தில் சேர்த்துக் கொண்டபின் தபிரி ஆலாம் அவரை நாடெங்கிலும் சுற்றித் திரியும் படியும், தங்கும் இடங்களில் மிசுவாக்கை (பல் குச்சியை) நட்டு வைத்து வரவேண்டும் எனவும், எங்கே அது தளிர்க்கின்றதோ அந்த இடத்தை நிலையாகத் தங்கும் இடமாகக் கொள்ள வேண்டும் எனவும் கட்டளை இட்டார். மிசுவாக் என்பது பீலு (*Salvadora persica*) மரத்தின் வேரான முகமதியத் துறவிகள் பல் துலக்கப் பயன்படுத்தும் பல்குச்சியாகும். பாவா

பக்ருதீன் பெனுகொண்டா மலைக்கு வந்து அடைந்தபோது வழக்கம்போல் பல்குச்சியை நட்டுவைக்க, அது அங்கே தளிர்ப்ப தாயிற்று. எனவே அவர் அதனைத் தன்னுடைய நிலையான இருப்பிடமாகக் கொள்ள முடிவு செய்தார். அந்த இடத்தருகே இந்துக்களின் முக்கியமான ஒரு கோயில் இருந்ததால் முகமதி யரான அவர் அங்கே தங்க முற்பட்டது இந்துக்களின் கோபத் தைக் கிளறிவிட்டது. அவர்கள் அவரை வெளியேறும்படி கூறினர். அவர் வெளியேற மறுத்ததோடு தனது சீடர்களுக்கு- அதற்குள்ளாகப் பலர் அவரைப் பின்பற்றி வருவாராயினர்- அந்த இந்துக் கோயிலுக்குரிய காளை ஒன்றினைக் கொல்லவும் அனுமதி வழங்கினார். அதனால் இந்துக்கள் பக்ருதீனையும் அவருடைய சீடர்களையும் கொல்ல முடிவு செய்தனர். அரசன் பெரிய படையுடன் வந்து இறந்த காளையினை உயிர்ப்பிக்கும் படி வேண்டினான். பக்ருதீன் தன் சீடர்களில் ஒருவனிடம் கொல்லப்பட்டுப் பாதுகாக்கப்பட்டதான காளையின் தோல், தலை, கால், வால் ஆகியவற்றைத் தன் முன் கொண்டுவந்து வைக்கும்படி கட்டளையிட்டார். காளையின் தோலினைத் தன் கைத்தடியால் தட்டி, "காளையே! இது கடவுளின் ஆணை, எழுந்திரு!" என்றதும் அது உடனே முழு உருவினதாக உயிர்பெற்று எழுந்து தனக்கு உயிர்தந்தவரை விட்டகலாது நின்றது. இதனால் அச்சமுறற இந்துக்கள், வாளையும், வேலையும் வீசியபடி முகமதியர்கள் மீது பாயத் தலைப்பட்ட போது ஒரு புழுதிப் புயல் தோன்றி அவர்கள் கண்களைக் குருடாக்கியது. குழப்பத்தில் அவர்கள் ஒருவரை ஒருவர் வெட்டிக் கொன்றவர்களாக அவ்விடத்தை விட்டு அகன்றனர். அந்த அரசன் அதன்பின் முகமதியர்களை நஞ்சிட்டுக் கொல்ல முடிவு செய்தான். அவன் நஞ்சு கலந்த சில பணியாரங்களைத் தயாரித்து அவற்றைப் பக்ருதீனுக்கு அவருடைய சீடர்களுக்குக் கொடுக்கும்படி அனுப்பி வைத்தான். அந்த அருளாளர் அவை நஞ்சு கலக்கப்பட்டவை என்பதனை அறிந்திருந்தும் தானே அவற்றை உண்டதும் அன்றித் தன் சீடர்களுக்கும் கொடுத்தார். அதனால் அவர்களுக்கு எந்தத் தீங்கும் நிகழவில்லை. சில நாள்களுக்குப்பின் அந்த அரசனுக்கு வயிற்றுவலி உண்டாயிற்று. நம்பிக்கையில்லை எனக் கூறி அரண்மனை வைத்தியர்கள்

அரசனைக் கைவிட்டனர். வேறு வழியின்றி அவனைப் பக்ரு தீனிடம் கொண்டு வந்தனர். அவர், அவனுக்கு அவன் முன்பு அனுப்பி வைத்த நஞ்சு கலந்த பணியாரங்களில் ஒன்றினைத் தர அதுவே அவன் நோயைக் குணப்படுத்தியது. அரசன் அவர் அடிகளில் விழுந்து வணங்கி மன்னிப்புக் கேட்டதோடு பெனு கொண்டா ஊரினை அவருக்கு ஜாகீராக வழங்க முன்வந்தான். அவர் அதனை மறுத்து விட்டுக் கோயிலை மசூதி ஆக்கும்படி வேண்டினார். அரசன் அந்த வேண்டுகோளுக்கு உடன்படப் பெரும் அளவில் இந்துக்கள் முகமதியர் ஆயினர் எனக் கூறப் படுகிறது. அவ்வாறு மதம் மாறியவர்களே தூதேகுலரின் முன் னோர்கள்.

தூதேகுலர் இந்துக்களைப் போல வழிபாட்டுக்குரிய அடையாளம் ஒன்றினை வைத்துக் கொள்வதில் ஆர்வம் உடையவர்கள். இறந்துபோன பெரியோர்களுக்குச் சமாதிகள் அமைத்து இவர்கள் வழிபட்டு வருகின்றனர். இவ்வாறு சமாதி களில் வழிபாடு செய்வது இன்றியமையாததாக ஆகிவிட்டதால் அத்தகைய சமாதிகள் இல்லாத ஊர்களில் சமாதிகள் அமைக்கப் படுகின்றன. இது போன்ற ஒரு நிகழ்ச்சி அண்மையில் பங்கனப் பள்ளியில் நிகழ்ந்தது. கர்நூலில் அல்லா பக்ஷ் என்ற துறவி உயிர் நீத்தார். பங்கனப்பள்ளியைச் சேர்ந்த ஒரு தூதேகுலர் அங்குச் சென்று அவரைப் புதைத்த இடத்திலிருந்தும் ஒரு பிடி மண்ணினைக் கொண்டுவந்து அதனைப் பங்கனப்பள்ளி யிலிருந்து பத்தாவது மைலில் ஒரு ஊரில் புதைத்து, அந்தத் துறவியின் பெயரால் ஒரு சமாதியும் எழுப்பியுள்ளார். அங்குப் பல அற்புதங்கள் நிகழ்வதால் அது மிகப் புகழ்பெற்றதாக விளங்குகின்றது. ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழாவில் முகமதியர்களும் தூதேகுலருமாகப் பெரும் எண்ணிக்கையில் மக்கள் கூடுகின்றனர்.

சில தூதேகுலருடைய பெயர்கள் மேலோட்டமாகப் பார்க் கும்போது இந்துக்களின் பெயர்கள் போல் தோன்றினாலும் அவை உண்மையில் முகமதியருக்கான பெயர்களே. எடுத்துக் காட்டாகக் கம்பண்ணா, கமால் சாஹிப் என்பதன் திரிந்த வடிவமாகவும், சாகாலி என்ற வண்ணாரைக் குறிக்கும் தெலுங்

குச்சொல் சேக் அலி என்பதன் திரிந்த வடிவமாகவும் வழங்குகின்றன. தூதேகுலர் தாங்கள் ஷேக் பிரிவினைச் சேர்ந்தவர்கள் எனக் கூறிக் கொண்டாலும் ஷேக் ஹுசைன், ஷேக் அலி என்பது போல ஷேக் என்ற முன் இணைப்பை எப்பொழுதாவது தான் பெயருக்கு முன் பயன்படுத்துகின்றனர். ஆண்களின் பெயர்கள் ஹுசைன் ஷா, பஷீர் ஷா, காசிம ஷா என்பன போல அமையும். ஷா என்பது ஷாகேப் என்பதன் சுருங்கிய வடிவமாகும். ஒரு வயதான தூதேகுலர் ஷாகேப் என்ற பட்டப் பெயர் 'புக்கா' முகமதியர்களுக்கு உரியதெனவும், தூதேகுலர் அந்தப் பட்டத்தை முழுவதுமாக அப்படியே வைத்துக் கொள்ளத் தகுதியற்றவர்கள் என்றும் கூறினார். ஷா என்பதற்குப் பதிலாக உடன்பிறந்தவன் எனப் பொருள்படும் பாய் என்ற பின் இணைப்பையும் குதுபாய் என்பது போலப் பயன்படுத்துகின்றனர். குது என்றால் சாம்பல் குவியல் எனப் பொருள்படும். பிறக்கும் குழந்தைகள் சிறுவயதிலேயே இறந்து போகின்றபோது குழந்தை தக்க வேண்டிப், பிறந்த ஒரு குழந்தையை உடனே சாம்பல் குவியல் அருகே எடுத்துப் போய்ச் சிறிது சாம்பலை அதன் மீது தூவுவர். தூதேகுலத்தவர் சிலர் இந்துக்களின் பெயரின் பின் இணைப்பான அப்பா, அண்ணா, கடு என்பனவற்றைப் புல்லண்ணா, நாகண்ணா, யெர்கலப்பா, ஹுசைன்கடு, ஹுசன்னப்பா என்பது போல இணைத்துக் கொள்வர். பெண்களின் இத்தகைய பெயர்களுக்கு ரொஷம்மா, ஜமலம்மா, மடரம்மா என்பன மாதிரிகளாம். பீபி, பீ என்ற பட்டங்களை விட்டுவிட்டு இவர்கள் அம்மா என்ற இந்துக்களுக்கான பட்டங்களை வைத்துக் கொண்டுள்ளனர்.

ஒரு குழந்தை பிறந்த ஆறாம் நாள் அதற்குப் பெயரிடும் சடங்கு நிகழ்வது வழக்கம். குடும்பத்தைச் சேர்ந்த மூதாட்டி ஒருத்தியே குழந்தைக்கான பெயரைத் தேர்ந்தெடுப்பாள். சில போது இறந்துபோன–மிக வயதாகும்வரை இருந்து இறந்து போன–பெரியவர்களின் பெயரும் தேர்ந்தெடுக்கப்படும். ஒரு குழந்தை சிறுவயதில் இறந்து போக நேரிட்டால் அதனைத் தீ நிமித்தமாக நம்பி அந்தக் குழந்தையின் பெயரை அக்குடும்பத்தில் மீண்டும் வைக்கமாட்டார்கள். தந்தையும் மக்களும்

குடும்பத்தில் ஒரே பெயருடையவர்களாக இருத்தலை அடிக்கடி காணலாம். அச்சமயங்களில் குழந்தைகளை வேறுபடுத்தி அறியப்பெத்த (பெரிய), நடுபி (நடு), சின்ன (சிறிய) என்ற முன் இணைப்புக்கள் அவர்கள் பெயர்களோடு சேர்க்கப்படும். சில சமயங்களில் ஒருவரே இரு பெயர்களுக்கு உரியவராக இருப்பார். அவற்றுள் ஒன்று அன்றாட வழக்கிற்கான இந்துப் பெயராகவும், மற்றொன்று சடங்குகளின்போது பயன்படுத்தப்படும் முகமதியப் பெயராகவும் அமைந்திருக்கும்.

தூதேகுலர் தங்கள் சடங்குகளை நடத்தக் காஜிகளையே பெரும்பாலும் நம்பியுள்ளனர். குடும்பத்தில் பயன்படுத்துவதற்கான கோழியை அறுப்பதுகூட அவரே செய்ய வேண்டும். மற்ற முகமதியர்களைப் போலவே இவர்களும் உரிய சமயச் சடங்குகளின்றி உயிர்களைக் கொல்வதை விரும்புவதில்லை. அவ்வாறு கொல்பவர் முதலில் பற்கள், வாய், முகம், கைகள், முன் கைகள், தலை, பாதங்கள் ஆகியவற்றை வசு என்ற சடங்கின்படி தூய்மை செய்து கொள்ள வேண்டும். அதன்பின் அவர் மேற்கு நோக்கி நிற்க அவருடைய உதவியாளர் கொல்வதற்குரிய விலங்கினைத் தலைகீழாக அதன் முகம் மேற்குப் பக்கமாக இருக்கும்படி பிடிக்க வேண்டும். அதன் வாயில் கொஞ்சம் நீரூற்றிய பின், பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர் என்று கூறியபடி அந்த விலங்கின் கழுத்தினை அதனுடைய கழுத்தில் உள்ள குருதிக் குழாய்கள் துண்டாகும்படியாகக் கொலை செய்பவர் வெட்டுவார். காஜிகள் இல்லாத நெடுந்தொலைவினவான ஊர்களில் காஜியினால் புனிதப் படுத்தித் தரப்படும் வெட்டுவாள் ஒன்றினைத் தூதேகுலர் வைத்திருப்பர். அந்த வெட்டுவாளினைக் குரானில் கூறப்பட்டுள்ள வார்த்தைகளைப் பல முறை கூறி காஜி புனிதப்படுத்தியிருப்பார். தொழுகைக்காக விடுக்கப்படும் அழைப்பே பிறந்த ஒரு குழந்தை முதன்முதலில் கேட்பதற்கு உரிய சொற்களாம். அது பிறந்தவுடன் அதன் காதுகளில் அச்சொற்கள் ஓதப்படும். பெரிய நகரங்களிலும் ஊர்களிலும் உள்ள தூதேகுலரும் காஜிகளை வைத்துக் கொள்ளும் வசதி படைத்தவர்களும் இச்சடங்கினை நடத்துவர். தூதேகுலர் பொழுது சாயும்போது அழைப்புக் குரல் கொடுப்பர்

எனத் திரு பிரான்சிஸ் குறித்துள்ளார். மதராச பள்ளியில் சமயக் கல்வி பயின்ற சிலர் இதனை விடுக்கும் தகுதி படைத்தவர்கள் ஆவர். சூரியன் உதிக்குமுன், நண்பகலுக்கும் பிற்பகல் மூன்று மணிக்கும் இடையில், பிற்பகல் நான்கு மணிக்கும் ஆறு மணிக்கும் இடையில், பொழுது விழும்போது, இரவு எட்டு மணிக்கும் நள்ளிரவுக்கும் இடையில் என நாளும் ஐந்துமுறை ஒவ்வொரு முகமதியனும் அசான் குரல் எழுப்ப வேண்டும் என விதிக்கப்பட்டுள்ளது.

ஆறாம் நாள் குழந்தைக்குப் பெயரிடும்போது தூதேகுலர் மற்ற முகமதியர்களைப் போலக் குழந்தையின் தலையை மழிக்கும் அகுனைகா சடங்கையோ, ஆட்டுக் கடா பலியிடுதலையோ நிகழ்த்துவதில்லை. குழந்தைகளுக்குப் பத்தாம் வயது நிரம்பு முன் சுன்னத்துச் சடங்கு நிகழ்த்துகின்றனர். அச்சமயத்தில் முகமதியர் நண்பர்களை அழைத்து இனிப்பும் வெற்றிலை பாக்கும் வழங்குவது பொதுவான வழக்கம். தூதேகுலரோ ஒரு நாவிதனை - அவன் இந்துவாகவோ முகமதியனாகவோ இருக்கலாம் - வரவழைத்து காஜியின் முன்னிலையில் சுன்னத்தினைச் செய்து முடிப்பர். பெண்கள் பூப்படையும்போது தூதேகுலர் நண்பர்களை அழைத்து விருந்து வைப்பர். இதற்கு மாறாக மற்ற பிரிவு முகமதியர்கள் இந்த நிகழ்ச்சியை ஒரு ரகசியமாகக் காப்பர்.

நிச்சயதார்த்தச் சடங்கிற்காக வருங்கால மணமகனும் அவனைச் சேர்ந்தவர்களும் பெண் கேட்க விரும்பும் இல்லத்திற்கு இனிப்பும் வெற்றிலை பாக்கும் கொண்டு வந்து வைக்கும்போது மணமக்கள் குடும்பங்களைச் சேர்ந்த பெண்களும், மணமகளும் உடன் இருப்பர். இது தூதேகுலரிடம் முகமதியரைப் போல முகத்திரை இடும் பழக்கம் இல்லை என்பதனைத் தெளிவுபடுத்துகின்றது. முகமதியர் மணச் சடங்குகள் ஐந்தாறு நாட்கள் வரை நீட்டிக்கும். தூதேகுலர் மண நிகழ்ச்சி இருபத்தி நான்கு மணி நேரத்தில் முடிவுறும். நிக்கா நாளுக்கு முந்திய இரவு மணமகன் இல்லத்தில் புலவு தயாரித்து அனைவருக்கும் விருந்து வைப்பர். மறுநாள் காலையில் இருள் விலகும் முன்பே தன் உறவினர்கள் உடன்வர மணமகன் குதிரை மீது அர்ந்து ஊர்வலமாகக் கொட்டு

மேளம், வாண வேடிக்கை ஆகியவற்றோடு மணமகள் இல்லத்திற்குப் பொழுது புலருமுன் சென்று சேர்வான். காஜி அழைத்து வரப்பட்டு மகர் பற்றிய உடன்பாடு காணப்படும். மகர் என்பது மணமகன் மணத்திற்கு முன்பே மணமகளுக்கு என ஏற்படுத்தும் இனாம் ஆகும். கணவன் இறந்து போக நேர்ந்தால் கைம்பெண்ணாகும் அவன் மனைவி அவன் சொத்தில் ஏற்பாடு செய்யப்பட்ட மகருக்கு உரிய பங்கினை உரிமை கொண்டாடலாம். இரண்டு ஆண் சாட்சிகள் மணமகளிடம் அனுப்பப்பட்டு மணத்திற்கும் மகர் தொகைக்கும் அவள் உடன்பாடு பெறப்படும். சமய நெறிப்பட்ட முகமதியரான காஜி, தூதேகுலர் மணமகளையும் கோஷா அணிந்தவளாகவே பாவித்து அவளுடைய நெருங்கிய உறவினரான ஆண்கள் இருவரையே சாட்சியாக அனுப்பி வைப்பார். லுட்சா எனப்படும் தாலி ஒன்று அல்லது இரண்டு பாசிமணி மாலைகளைக் கொண்டது. அதனைச் சந்தனம் நிறைந்த குவளை ஒன்றில் வைத்துக் கொணர்வர்.

காஜி மணத்திற்குரிய மந்திரங்களைச் சொல்லி லுட்சாவை வாழ்த்தி மணமகள் இருக்கும் இடத்திற்கு அனுப்பி வைப்பார். அதனை மணமகன் இல்லத்தைச் சேர்ந்த பெண்கள் மணமகள் கழுத்தில் அணிவிப்பதோடு மணச் சடங்கு முடிவுறும்.

முகமதியர்கள் தங்களுக்குள்ளே வணக்கம் செலுத்திக் கொள்ளும் போது கூறப்படுவது. "அமைதி உன்னிடம் நிலைக்கட்டும்" "உன்னிடமும் அமைதி அவ்வாறே நிலவுக" என்பவைகளாகும். ஒரு தூதேகுலர், முகமதியன் ஒருவனை வாழ்த்தும் போது அவன் வேறெதும் கூறாமல் தலை மட்டுமே தாழ்த்துவான். அவன் தன்னுடைய பிரிவினரைச் சந்திக்கும்போது 'நிகு மொக்குதாழு' என்ற தெலுங்கு வடிவிலான வணக்கத்தைக் கூறுவான்.

தூதேகுலர் ஆண்களும் பெண்களும் இந்துக்களைப் போலவே உடை அணிவர். ஆனால் ஆண்கள் எல்லோருமே தாடியை மழித்துக் கொள்வதில்லை.

இவர்கள் சச்சரவுகளையும், சமூகம் சார்ந்த பிரச்சினை களையும் காஜியே தீர்த்து வைக்கிறார்.

பருத்தி அரவைச் சாலைகள் அதிகரித்துக் கொண்டிருப்ப தாலும், கைத்தறி நெசவுத் தொழில் நலிந்து வருவதாலும், பருத்தித் துப்புரவு செய்யும் பணிக்கான வாய்ப்புக் குறைந்து வருகிறது. தூதேகுலர் சிலர் இதனால் பயிர்த்தொழிலை மேற் கொண்டுள்ளனர். இவர்களிடையே நிலவுடைமையாளர்கள் மிகச் சிலரே. சிலர் மதுக்கடை ஏலம் எடுத்து நடத்துபவர்களாகவும், சிலர் பள்ளி ஆசிரியர்களாகவும், வேறு சிலர் அரைகுறை மருத்துவர்களாகவும் பணிபுரிகின்றனர். ஒப்புவிக்கப்பட்ட மாவட்டங்களில் பஞ்சுத் துப்புரவு செய்யும் தொழில் முழுதும் தூதேகுலர்கள் வசமே உள்ளது.

தூதேகுலர் என்பதற்குரிய வேறு பெயர்கள் லடாப், நூர் பாஷா எனக் கணக்கெடுப்பில் பதியப்பட்டுள்ளது. இவை முறையே நாட்டாப் (பஞ்சுத் துப்புரவாளர்) நூர் பாஃப் (நெய் தல்) என்பதன் திரிந்த வடிவங்களாகும்.

**தூதி - Dūdi**

ஊர்த் தெய்வங்களின் கோயில்களில் பூசாரிகளாகப் பணி யாற்றும் குருமொக்களின் பட்டப்பெயர்.

**தூதி பலிசர் - Dūdi (cotton) Balija**

தெலுங்குப் பகுதிகளில் பருத்தி வணிகர்களைக் குறிக்கும் பெயர். கோமட்டிகளின் தொழில் காரணமாக அமைந்த உட் பிரிவுக்குரிய பெயருமாகும்.

**துர்க்கம் - Durga (fort)**

கோட்டை எனப் பொருள்படும். இது குருணிகளின் ஒரு கோத்திரப் பெயர்.

**தூடன் - Dūtan**

திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் ஆரி என்பதற்குரிய மற்றுமொரு பெயராகப் பதியப்பட்டுள்ளது.

**தயவன - Dyavana (tortoise)**

ஆமை எனப் பொருள்படும் இது மோகேர் சாதிகளின் புற மணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலப் பெயர்.

**எத்தலு - Eddulu (bulls)**

பார்க்க: யெத்தலு: (See: Yedulu)

**எடியன்னாய - Ediannāya (hornets nest)**

பண்டர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். குளவிக் கூடு எனப் பொருள்படும்.

**எகடாவன் – Egadāvan**

கணக்கெடுப்பின் போது அனப்பர்களின் புறமணக்கட்டுப் பாடு உடைய குலமாகப் பதியப்பட்டுள்ளது. தமிழ்நாட்டில் கால் நடைகள் மேய்ப்பவர்களான இவர்கள் கன்னடம் பேசுபவர்கள். இது குருபர்களின் பட்டப்பெயர்களுள் ஒன்றான ஹெக்கடெ என்பதின் சிதைந்த வடிவம் ஆகலாம்.

**எகாட்சரர் - Ekākshara**

சாதானிகளின் ஓர் உட்பிரிவின் பெயர். இப்பெயர் ஏக + அட்சரம் (ஓர் + அசை) என்பதிலிருந்து வந்ததாதல் வேண்டும். ஓம் என்ற மந்திரமே அந்த அசையாம்.

**ஏகாரி - Ēkāri**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் இச்சாதி ஏகாரி, ஏகாலி, யாகாரி, யாகார்லு என்ற பெயர்களின் கீழ் முத்ராசா சாதியின் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. 1891 சென்னை மாநிலக்கணக்கெடுப்பு அறிக்கையிலும்,வடஆர்க்காடு மாவட்டக் கையேட்டிலும் திரு எச். எ. ஸ்டுவர்ட் எழுதியுள்ளது வருமாறு:- "வட ஆர்க்காடு மாவட்டத்தின் வடபகுதி வட்டங்களிலும் அதனை ஒட்டியுள்ள கடப்பை மாவட்டத்திலும் ஏகாரிகள் அல் லது யாகாருலு பயிர்த்தொழிலாளராகவும், ஊர்க் காவலர்க

ளாகவும் பதியப்பட்டுள்ளனர். ஏகாரி, முத்ராசா இரண்டும் ஒன்றே என்பது ஐயத்திற்கு இடமானதே. இவ்வாறு ஒரே சாதியாகக் கொள்வதற்குக் கணக்கெடுப்புப் புள்ளி விவரங்களில் எத்தகைய அடிப்படையும் காணப்படவில்லையென நான் கருதுகிறேன். இவ்விரண்டில், எந்த ஒரு பெயரும் மற்றதன் உட்பிரிவாகப் பதியப்படவில்லை என்பது இவை ஒன்று மற்றொன்றுக்கு உரிய பெயரன்று என்பதனை வற்புறுத்துவதாகும். இவற்றின் உட்பிரிவுகளாகப் பதியப்பட்டுள்ளவைகளிடையேயும் எத்தகைய ஒற்றுமையும் இல்லை. நெல்லூர் மாவட்டக் கையேட்டில் ஏகாரிகள் வேட்டையாடுபவர்களாகவும், கூலிப்படையினராகவும் பதியப்பட்டுள்ளனர். கடப்பை மாவட்டத்தில் இவர்களைச் சிலர் போயர் எனவும், திராடர் எனவும் அழைக்கின்றனர். இவர்கள் காடுவாழ் பழங்குடியினராகவும் கருதப்பட்டு வந்துள்ளனர். இவர்களில் சிலர் பாளையக்காரர்களாக உயர்ந்துள்ளதனை வைத்துப் பார்க்கும்போது இவர்கள் ஆட்சிப் பொறுப்பினையும் வகித்திருக்கக் கூடும் என எண்ண இடம் ஏற்படுகின்றது. கல்லூர் தும்ப, புலிச் சேரல, பங்காரி, குடிபாதி ஆகிய பாளையக்காரர்கள் இச்சாதியினரே. இச்சாதியினரில் பலர் ஊர்க்காவல் வீரர்களாகவும் உள்ளனர். இவர்கள் பூணூல் அணிவதில்லையாயினும் சடங்குகளை நடத்தப் பிராமணர்களை அமர்த்துகின்றனர். இவர்களுடைய சடங்குகள் பெரிதும் காபுகளின் சடங்குகளை ஒத்தனவே. ஊன் உண்ணும் இவர்கள் நாயுடு, துரை என்ற பட்டப்பெயர்களைப் புனைந்து கொள்கின்றனர். 1891 கணக்கெடுப்பில் 15-க்கும் 39-க்கும் உட்பட்ட வயதினை உடைய பெண்களில் இச்சாதியிலேயே கைம்பெண்களின் எண்ணிக்கை மிகுதியாக உள்ளதாகப் பதியப்பட்டுள்ளது. இச்சாதியின் வரலாறு பற்றிய செய்திகள் ஏதும் தெரியவில்லை. இவர்கள் முன்பு பருத்தித் துப்புரவு செய்பவர்களாக இருந்ததாகவும் இவர்கள் சாதிப் பெயர் பருத்தியைச் சுத்தம் செய்தல் எனப் பொருள்படும் 'யெகுட' என்ற வினைச் சொல்லில் இருந்து வந்ததாகவும் கூறுவர். இச்சாதியில் 74 உட்பிரிவுகள் இருப்பதாகப் பதியப்பட்டுள்ளது. அவற்றுள் தொட்ட (பெரிய), பல என்பன முக்கியமானவை.

ஏகாரிகளுக்கும் முத்ராசர்களுக்கும் இடையே மண உறவுகள்

நிகழ்வதில்லை. இவர்கள் ஒருவர் வீட்டில் ஒருவர் உண்ணும் பழக்கமும் இல்லை. சிலரால் கம்பின், நகிரிபிள்ளா காயது என்பன இதன் உட்பிரிவுகளாகவும் மற்றவர்களால் கம்மி, யெர்ரை ஆகியன இதன் உட்பிரிவுகளாகவும் பதியப்பட்டுள்ளன.

தமிழில் வண்ணாருக்குரிய பெயர்கள் பலவற்றுள்ளும் ஏகாலி என்பதும் ஒன்று.

**எலகயன் – Elagayan**

இது நாயர்களின் ஓர் உட்பிரிவின் பெயர். 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில், "எலகயன்களின் பரம்பரைத் தொழில் சிரக்கல் அரசர் செலுக்குனு கோயிலில் நாள்தோறும் பயணிகளுக்கு உணவிடத் தேவையான இலைகளைக் கொண்டு தருவதாகும்" எனப் பதியப்பட்டுள்ளது.

**இளயாடு - Elayad**

எளயாடு அல்லது இளயாடர் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு என். சுப்ரமணி அய்யருக்குக் கடப்பாடுடையேன். இளயாடர் என்பதன் நேர் பொருள் இளையவன் என்பதாகும். இப்பெயர் மலபாரைச் சேர்ந்த பிராமணர்களின் பல்வேறு உட்பிரிவுகளுள் தாழ்ந்ததான ஒரு சாதியைக் குறிக்கின்றது. இச்சாதியைச் சேர்ந்தவர்கள் இளையது, நம்பியட்டிரி என்ற இரண்டு பட்டப்பெயர்களைப் புனைவர். இவற்றுள் இரண்டாவது பட்டப்பெயர் நம்பூத்ரி என்ற பெயரைப் போலவே தொழத் தக்கவன் என்ற பொருள் தருவதாம். பெண்கள் பொதுவாக இளையம்மா என அழைக்கப்பட்டாலும், வட திருவாங்கூரில் சில பகுதிகளில் குஞ்சம்மா என்றும் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் தங்கள் வீட்டுப் பெண்களை அகத்துள்ளவர் என வீட்டின் உள்ளே இருப்பவர் என்ற பொருளில் வழங்குவர். குழந்தைகள் குஞ்சுன்னிகள் என அழைக்கப்படுகின்றனர். இளையாடர் நாயர்களைப் பார்த்துச் சிற்றப்பனை இளையச்சன் என அழைக்கின்றனர்.

பரசுராமரால் இயற்றப்பட்டது என வழங்கி வரும் சாதி

நிர்ணயத்தில் சொல்லியுள்ளபடி, இளையாடர் ஒரு காலத்தில் கலப்படமில்லாத தூய பிராமணராக இருந்தனர் என்றும், தங்கள் வீட்டில் பணிபுரிந்த ஒரு நாயருக்குப் புரோகிதராகப் பணி செய்த காரணத்தால் சாதியில் தாழ்ந்தவராயினர் என்றும் கூறப்பட்டுள்ளது. ஆழ்வாஞ்சேரி தம்புராக்கள் இல்லத்தைச் சேர்ந்த இரண்டு உடன்பிறந்தவர்களில் இளையவன் வெளிநாட்டுக்குப் பயணம் செல்ல முடிவு செய்தான். அவனோடு உடன் வர யாரும் உடன்படாததால், தன் தாயாருக்கு சிரார்த்தம் செய்ய வேண்டியிருந்த நாயர் வேலைக்காரனை, அவன் தாயாருக்கு வழியில் சிரார்த்தம் செய்து வைப்பதாகக் கூறி உடன் அழைத்துச் சென்றான் அந்த இளையவன். அவன் தான் வாக்களித்த படி அந்த நாயருக்கு வழியில் சிரார்த்தம் செய்து வைத்ததோடு, அந்த நாயர் தயாரித்த உணவை உண்டதாகவும் மற்றவர்கள் நம்பினர். இச் செய்தி அவனுடைய அண்ணனுக்குத் தெரிய வந்த போது, அவர் வைதிக பிராமணர்கள் அனைவரையும் கூட்டி வைத்துத் தம்பியைச் சாதி விலக்கம் செய்து விட்டார். மலபாரில் வழங்கும் பிற கதைகளைப் போலவே இதனையும் கூட்டிக் கழித்தே ஏற்றுக் கொள்ள வேண்டும். தளவாய் இராமய்யனுக்கு செய்த அவமானத்தின் காரணமாக அவர் தங்களை விலக்கி வைக்கும்வரை தாங்களும் நம்பூத்ரிகளுக்குச் சமமானவர்களாக இருந்ததாக இளையாடர் கூறுகின்றனர். எனினும் இராமய்யனின் ஆணை செல்லாத பகுதிகளான கொச்சி மாநிலத்திலும், ஆங்கிலேயர் ஆட்சியிலுள்ள மலபாரிலும் இளையாடர் தங்கள் உயர் தகுதியை இழந்தவர்களாகவே காணப்படுகின்றனர். இவர்களுள் உயர்சாதி நாயர்களுக்குச் சடங்குகளைச் செய்து வைப்பவர்கள் ஒன்றாம் பரிஷத்தாராகவும், மற்றவர்களுக்குச் சடங்கு செய்பவர்கள் இரண்டாம் பிரிவினராகவும் கருதப்படுகின்றனர். பின்னவர் முன்னவர்களை விடச் சமூகப் படிநிலையில் தாழ்ந்தவராகக் கருதப்படுகின்றனர். இந்த இரு பிரிவினரும் தங்களுக்குள் மண உறவு கொள்வதில்லை. ஒரு பிரிவினைச் சேர்ந்த ஆண்கள் மட்டுமே இன்னொரு பிரிவினர் வீட்டில் உண்பர்.

இளையாடர் மனம் சோர்ந்தவர்களாகவே பெரும்பாலும்

காட்சி தருவர். இவர்கள் வறுமையில் உழல்பவர்கள் என்பது உலகம் அறிந்த ஒன்று. தங்கள் பரம்பரைத் தொழிலின் மூலம் இவர்களுள் பெரும்பாலோர் ஒரு சிறிதே வருவாய் பெறு கின்றனர். எனினும் இவர்கள் வேறு எந்தத் தொழிலையும் மேற்கொள்வதில் சிறிதும் ஆர்வங் காட்டாதவர்களாகவே உள்ளனர் என்பதும் பலரும் அறிந்த ஒன்றே. ஆங்கிலக் கல்வியை இவர்கள் விரும்பி ஏற்பதில்லை. சமஸ்கிருதத்தைக் கூட உறுதி யான, ஆர்வ உள்ளங்கொண்ட சிலர் மட்டுமே கற்று வருகின் றனர். இளையாடர் இயற்கையாக அறிவுத் திறம் வாய்க்கப் பெற்ற மதி நுட்பம் வாய்ந்த பிரிவினர். உரிய வாய்ப்புக் கிடைக்கும்போது சமூகத்தில் மிகச் சிறப்பான இடத்தினையும் அடையக்கூடிய ஆற்றல் வாய்ந்தவர்கள்.

இளையாடர்கள் வீடும் நம்பூத்ரிகளின் வீட்டினைப் போல இல்லம் என்றே அழைக்கப்படுகின்றது. பக்தி சிரத்தை மிக்க நாயர் ஒருவனால் அன்பளிப்பாகத் தரப்பட்டதாக இருக்கும் அது பொதுவாக இடம் அகன்றதாகவே இருக்கும். ஒவ்வொரு இளையாடர் இல்லத்திலும் பாம்புப் புற்று இருக்கும். அதற்கு அவ்வப்போது வழிபாடு நிகழ்த்துவர். இளையாடர் ஆடை அணிகள் நம்பூத்ரிகளின் ஆடை அணிகளைப் பெரிதும் ஒத்தன வாம். மணத்திற்கான அணி கட்டுத் தாலி எனப்படும். அன் னம் ஊட்டும் சடங்கின்போது கயிற்றில் கோத்துக் கழுத்தில் கட்டப்பட்ட மோதிரத்துடன் குழந்தைகள் காட்சி தருவர். இளையாடர்கள் மரக்கறி உணவு மட்டுமே உண்பர். இவர் களுடைய கோயில்கள் சிலவற்றில் தெய்வத்திற்கு மது படைக் கப் பட்டாலும் இவர்கள் மது அருந்துவதைச் சாதிச் சட்டம் அனுமதிப்பதில்லை.

நாயர்களுக்குப் புரோகிதம் செய்வதே இளையாடர்களின் முக்கிய தொழில். முதல் பிரிவினைச் சேர்ந்தவர்கள் இல்லக்கார் எனப்படும் உயர்ந்த சாதி நாயர்களுக்கு மட்டுமே புரோகிதம் செய்வர். இரண்டாம் பிரிவைச் சேர்ந்தவர்கள் நாயர் சாதி யினர் அனைவருக்கும் அழைக்கும் போது சென்று புரோகிதம் செய்வர். அவ்வாறு புரோகிதம் பார்க்கும் இளையாடர்கள்

பலவகைச் சுவடிகளிலிருந்தும் மனப்பாடம் செய்தவற்றை ஒப்பு விப்பர். பெரும்பாலும் அவை வேதங்களாக இருப்ப தில்லை. வட திருவாங்கூரில் உள்ள பல கோயில்களில் இளை யாடர்கள் பூசாரிகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளனர். காணிக்கரை பகவதர் கோயில், பய்யப்பர சாஸ்தா கோயில், குட்டாட்டுக் குளத்திலுள்ள பரகோவு சிவன் கோயில் ஆகியன அவற்றுள் குறிப்பிடத்தக்கன. மலபாரில் வழி பாட்டுக்கு உரியதாக இருக்கும் ட ம்புப் புற்றுக்களுக்கு இளை யாடர்களே பூசாரிகளாக உள்ளனர். அவற்றுள் மன்னார் சாலை யில் உள்ள புற்றிடம் மிக்க செல்வாக்கும் புகழும் உடையது.

சமர்த்தவிசாரம் எனப்படும் கள்ள ஒழுக்கத் தொடர்பு போன்ற சாதி வழக்குகளை வைதிகர்களின் உதவியோடு நம் பூத்ரிகளே தீர்த்து வைப்பர். வைதிகப் பிராமணர்களே இளையா டர்களுக்குப் புரோகிதம் செய்கின்றனர். வேதங்களை இவர்கள் அறியார் ஆயினும், மலபாரில் உள்ள பழக்க வழக்கப்படி சடங் குகளைச் செய்து வைக்க இவர்களுக்குத் தெரியும்.ஈசுவர சேவை, சரபப்பலி முதலிய சமயச் சடங்குகளைச் செய்ய இவர்கள் நம்பூத்ரிகளை அழைப்பதும் உண்டு. தீட்டுக் கழிக்கும் சடங்கு களைச் சாதிக்குரிய புரோகிதர்களே செய்து வைப்பர். அதற்கு நம்பூத்ரிகளின் உதவி நாடப்படுவதில்லை. இளையாடர்கள் இல்லங்களில் பிராமணர்கள் சமையல் பணி செய்வதில்லை.

இளையாடர் விசுவாமித்ரர், பரத்வாஜர் என்றழைக்கப் படும் இரு குலங்களாகவே பெரும்பாலும் பிரிவுபட்டுள்ளனர். பெண்கள் பன்னிரண்டு வயதிலிருந்து பதினெட்டு வயதுக்குள் ளாகப் பூப்படையும் முன்போ பூப்படைந்த பின்போ மணம் செய்விக்கப்படுகின்றனர். மணமகளுக்கு விலையாகப் பொருள் தரப்படுவதில்லை. மணமகனுக்கு ரூ.140-க்கும் குறையாத அளவு தொகை வழங்கப்பட வேண்டும். இளையாடர் குடும்பங்களி லும் நம்பூத்ரி குடும்பங்களைப் போலவே குடும்பத்தில் மூத்தவன் மட்டுமே மணம் புரிந்துகொள்ள அனுமதிக்கப்படுகின்றான் என்பதே இவ்வாறு தொகை தரப்படவேண்டியதற்கான கார ணம் ஆகும். மூத்தவனைத் தவிர குடும்பத்தின் மற்ற ஆண் உறுப்பினர்கள் அனைவரும் நாயர் அல்லது அம்பலவாசிப் பெண்

களுடன் வாழ்க்கை நடத்துவர். கணவனை இழந்த கைம்பெண்கள் தங்கள் கூந்தலை மழித்துக் கொள்வதில்லை. தன்னுடைய தாலியை அவள் ஈமத் தீயில் கழற்றி எறிவாள். இது சதி செய்வதின் ஓர் அடையாள நிகழ்ச்சி ஆகலாம். சொத்துரிமை பற்றிய பழக்க வழக்கங்களில் இளையாடர்கள் நம்பூத்ரிகளையே பின்பற்றுகின்றனர்.

பிராமணர்கள் மேற்கொள்ளும் பதினாறு வகைச் சமயச்சடங்குகள் அனைத்தையுமே இளையாடர்களும் நடத்துகின்றனர். பெயர் வைப்பதற்கான விதி முறைகளின்படி மூத்த பிள்ளைக்குத் தந்தை வழிப்பாட்டன் பெயரும், இரண்டாவது பிள்ளைக்குத் தாய்வழிப் பாட்டன் பெயரும், மூன்றாவது பிள்ளைக்குத் தந்தையின் பெயரும் இடப்பெறும். பெண்கள் இவற்றிக்கு இணையான விதிகளின்படி பெயரிடப் பெறுவர்.

இளையாடர்கள் வெள்ளை மற்றும் கறுப்பு யஜுர் வேதத்தைச் சேர்ந்தவர்கள். போதாயனர், அசவலாயனர் சூத்திரங்களை இவர்கள் பின்பற்றுகின்றனர். நாள்தோறும் மும்முறை இருபத்தி நான்கு காயத்ரி மந்திரங்களைச் சொல்கின்றனர். குழந்தை பிறந்தபின் பெண்கள் ஒன்பது நாள்கள் தீட்டுப் பட்டவர்களாகக் கருதப்படுகிறார்கள்.

1901 கொச்சி மாநிலக் கணக்கெடுப்பில் இளையாடர்களைப் பற்றித் தரப்பட்டுள்ளவை வருமாறு:- "இவர்களுக்கு என்றே தனியாக இவர்கள் சாதியிலேயே புரோகிதர்கள் உள்ளனர். நாயர்கள் இளையாடுகளின் இல்லங்களில் வந்து தங்கள் சிரார்த்தங்களைச் செய்வதால் நம்பூத்ரிகள் இவர்கள் வீட்டில் சமைப்பதோ உணவுகொள்வதோ இல்லை. சத்திரியர்களும் நம்பிடிகளும் இவர்களிடம் தண்ணீர் வாங்கிப் பருகமாட்டார்கள். முன்பு நாயர் இல்லங்களில் நாயர்களின் சிரார்த்தச் சடங்கை நடத்தி வைக்கும் இளையாடர்கள் அப்போது நாயர்களின் இல்லங்களிலேயே அது போன்ற சமயங்களில் வழக்கமாகப் பிராமணர்கள் உணவு கொள்வது போல உணவு உண்பது வழக்கம். இப்பொழுது இவர்கள் செல்வமும் செல்வாக்கும் உள்ள ஒரு சில நாயர் இல்லங்களைத் தவிர மற்றவர்கள்

இல்லங்களுக்குச் சென்று அதுபோல உணவுகொள்ள மறுத்து விடுகின்றனர். முத்தாடர்களும் இளையாடர்களும் பூணூல் அணிகின்றனர். பல நெறிகளில் இளையாடர்கள் முத்தாடர் களைவிடப் பிராமண நெறிப்பட்டவர்களாக இருப்பினும் அம்பலவாசிச் சாதிகளில் பெரும்பாலான சாதியைச் சேர்ந்த வர்கள் இளையாடர்கள் சமைத்த உணவையோ தொட்ட உணவையோ உண்பதில்லை.இவர்கள் தலைமைக் குருக்களாகப் பணியாற்றும் சில கோயில்கள் உள்ளன. முத்தாடர், இளை யாடர் குடும்பங்களைச் சேர்ந்த பெண்கள் முகத்திரை அணி கின்றனர். இவ்விரு பாலாரும் பல மனைவியரை மணப்பதோடு கூட நம்பூத்ரிகளைப் போலச் சர்வஸ்வதானம் மணங்களையும் செய்து கொள்கின்றனர்.

**எல்லா - Ella (boundary)**

முத்ராசாக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம் எல்லை எனப் பொருள்படுவது.

**எலுகொதி - Elugoti (assembly)**

தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கூட்டம் எனப் பொருள்படுவது.

**எலுகு - Elugu (bear)**

கரடி எனப் பொருள்படும் இது ஏனாதியரின் புறமணக் கட்டுப்பாடுடைய ஒரு குலத்தின் பெயர்.

**எழுத்தச்சன் - Eluttacchan**

எழுத்தச்சன் என்பது ஆசிரியர், கற்றவர் எனப் பொருள் தருவது. மலபாரைச் சேர்ந்த கல்வியறிவு பெற்ற கதுப்பட்டன் களுக்குரிய பெயர். இவர்கள் பள்ளி ஆசிரியர்களாகப் பணி யாற்றுகின்றனர்.

**எமான் - Emān**

எஜமானன் என்பதன் சிதைந்த வடிவம். நாயர்களின்

பட்டப் பெயர்களில் ஒன்றாக 1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் பதியப்பட்டுள்ளது.

**எம்பிராண்டிரி - Embräntiri**

"எம்பிரான்டிரி அல்லது எம்பிரான் என்பது மலபாரில் குடியேறிய துளுப் பிராமணர்களுக்குரிய மலையாளப் பெயராகும். இவர்களுள் சிலர் தங்களை நம்பூத்ரிகள் என அழைத்துக் கொள்கின்றனர். எனினும் இவர்கள் நம்பூத்ரிகளோடு மண உறவு கொள்வதில்லை" என 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிகை கூறுகின்றது. "இவர்கள் புரோகிதர்களாகப் பணியாற்றும் துளு பிராமணர்கள். சூத்திரர்கள் சடங்குகளை நடத்தி வைப்பவர்கள்" என விக்ரம் (*Wigram*) குறித்துள்ளார்*. இது துளுச் சிவாலி பிராமணர்களுக்குரிய பெயர்.

**எம்மே – Emme (buffalo)**

பார்க்க: யெம்மே (See: yemme)

**என குறவர் - Ena Korava**

பார்க்க- குறவர் (See: korava)

**ஏனாதி- Enädi**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் இது "சைவ நெறி சார்ந்த நாயன்மார்களுள் ஒருவரான ஏனாதி நாயனாரின் பெயரிலிருந்து வந்த சாணார்களுக்கு உரிய பெயர். அம்பட்டன் என்ற பொருளையும் இது தரும்" எனக் குறிக்கப்பட்டுள்ளது. இச் சொல் தலைவன், நாவிதன், அமைச்சன், ஆகியோரையும் குறிக்கும்.

**இணங்கன் - Enangan**

எணங்கன் அல்லது இணங்கன் இனத்தவர்கள் பற்றித் திரு கே. கண்ணன் நாயர்† தந்துள்ள விளக்கம்

---

* மலபார் சட்டங்களும் மரபுகளும். (Malabar Law and Custom.)
† மலபார் க்வார்ட்டர்லி ரெவ்யூ, தொகுதி. VII, 3, 1908. (Malabar Quarterly Review, VII, 3, 1908.)

வருமாறு:- "பல தார்வாடுகள் கொண்ட இணங்கு சாதியைச் சேர்ந்தவர்கள் தங்களுக்குள்ளே மண உறவு கொள்வதும், ஒன்றாக இருந்து உண்பதும் செய்வதோடு, சமூக, சமயத் தொடர்பான சடங்குகளில் ஒருவருக்கு ஒருவர் உதவவும் செய்கின்றனர்." மலபார் மாவட்ட விவரக் குறிப்பில் இவர்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளதாவது:- "எணங்கன் அல்லது இணங்கன் என்பவன் தனது சாதி, அல்லது உட்பிரிவு அல்லது குலத்தைச் சேர்ந்தவன் எனப் பொருள்படும். இதனை வழக்கமாகப் பங்காளி என மொழி பெயர்ப்பர். எனினும் அப் பொருளிலும் பரந்துபட்ட அதே போது வரையறைக்குட்பட்டதுமான பொருளினை உள்ளடக்கியது இச்சொல். என் இணங்கன் யாரென்றால் நான் யார் யாரை மணக்கலாமோ அவர்களை மணக்கக் கூடியவன். இணங்கத்தி என்பது இணங்கன் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களுக்கு உரிய பெயராகும்."

**ஏனேடி - Ēneti**

கமல்லர்களிடமிருந்து பிச்சை எடுத்து வாழும் இரவலர்கள் எனக் கூறப்படுகிறது. (பார்க்க: ஏனாதியர்)

**எண்தமர - Entamara**

பார்க்க: ஏனாதியர் (See: Yānāti)

**இற - Era**

இற செறுமான் அல்லது இறாளன் செறுமான்களின் உட்பிரிவு ஒன்றின் பெயர்.

**எராடி - Erādi**

"எராடி, இடையன் எனப் பொருள்படும் சொல். மலபாரில் உள்ள எரநாடு வட்டத்தை முன்பு ஆண்டு வந்த நாயர் சாதியின் உட்பிரிவினர் இவர்கள்."* மலபார் கையேட்டில் எரநாடு

* விக்ரம், மலபார் சட்டங்களும் மரபுகளும். (Wgiram, Malabar Law and Custom)

என்பது எருதுகளின் நாடு எனப் பொருள்படும் என்பதகாக் கூறப்பட்டுள்ளது. 1891 கணக்கெடுப்பு அறிக்கையின்படி, "எர நாடு ஒரு குடியிருப்பு எனக் கூறப்பட்டுள்ளது. கள்ளிக்கோட்டை 'சாமோரின்' அரசருக்குரிய சாமந்தர் சாதிக்குரியது இது."

**எரவாளர் – Eravallar**

கோயமுத்தூர், மலபார் மாவட்டங்களில் உள்ள காடுகளில் வாழும் சிறு அளவிலான பழங்குடிகள் எரவாளர்கள். கொச்சி மாநிலத்தைச் சேர்ந்த எரவாளர்கள் பற்றிய பின்வரும் குறிப்பு களுக்கு நான் திரு எல். கே. அனந்த கிருட்டிண அய்யருக்குக் கடப்பாடுடையேன்.*

கொச்சி மாநிலத்தில் சித்தூர் வட்டத்தில் மட்டும் காணப் படும் அமைதியாக வாழ்க்கை நடத்தும் பழங்குடியினரான மலைவாசிகள் எரவாளர்கள். இவர்கள் வில்லு வேடர் எனவும் அழைக்கப்படுவர். ஒரு சிலர் மலையாளம் பேசினாலும் இவர்கள் பொதுவாகப் பேசும் மொழி தமிழே. சாதியைச் சேர்ந்த வயதான பெரியவர்களை முத்தன் (மூத்தவன்), பட்டன் (பாட்டன்) என விளித்து அழைப்பர். ஆண்களுக்குக், கண்ணன், உடுக்கன் கோதண்டன், கெச்சரன், அட்டுக்கரன் போன்ற பெயர்களும், பெண்களுக்குக் கன்னி, கேயி, கைகயி, ஒடுக, ராமாயி போன்ற பெயர்களும் வழக்கில் உள்ளன. இந்து சமயத் தொடர்புடைய இப்பெயர்கள், உயர்சாதி இந்துக்களோடு அண்மைக் காலத்தில் இவர்கள் தொடர்பு கொண்டதன் காரணமாக இவர்களால் மேற்கொள்ளப் பட்டனவாகும்.

தங்கள் சாதியின் தோற்றம் பற்றி எரவாளர் ஏதும் அறி யார். முரட்டு இயல்பும், திருந்தாத பண்புகளும் கொண்டவர்க ளாக மற்ற காட்டுவாசிகளைப் போலவே தோற்றம் தரும் இவர்கள், அண்மையில் தங்கள் நிலையில் சிறிதளவு முன்னேற் றம் கண்டுள்ளனர். இதற்குக் காரணம் இவர்கள் பணியாற்றும்

---

* தனிக்கட்டுரை: கொச்சி இன இயல் கண்டாய்வு, எண். 9, 1906 (Monograph. Eth. Survey of Cochin, No. 9, 1906.)

முதலாளிகளின் செல்வாக்கு ஆகலாம். காடர்களையும், மலயர் களையும் போல அலைந்து திரியும் பழக்கம் இவர்களிடம் இல்லை. குடியிருப்பைப் புதிதாக அமைக்கும் முன்பும், தொழிலைத் தொடங்கும் முன்பும் இவர்கள் முல்லை நிலத்திற்குரிய தங்கள் தெய்வங்களை வழிபடுகின்றனர். விதைப்பதற்கும், மணம் புரிவதற்கும் திங்கட்கிழமைகளையும், கட்டிடப் பணிக்குப் புதன் கிழமைகளையும், அறுவடைக்கு வெள்ளிக்கிழமைகளையும் ஏற்ற நல்ல நாள்களாக இவர்கள் கருதுகின்றனர்.

எரவாளர் உரிமையுள்ள தனித்த சிறிய சமுதாயமாக வாழ் வதில்லை. மாறாக இவர்கள் நாளொன்றுக்கு இரண்டு இடங் கழி நெல்லுக்குக் கூலி வேலை செய்யும் பண்ணையார்களோடு பிணைக்கப்பட்ட பிணையாள்களாகவே வாழ்க்கை நடத்து கின்றனர். பெண்களும் அதே போல அந்த அளவு கூலிக்கே வேலை செய்தாலும் நிலைத்து ஒரு பண்ணையாரின் கீழ் பிணைப் பட்டவர்களாக இருப்பதில்லை. நிலவுடைமையாளர்களுக்குரிய ஊர்க் கோயிலில் கதிர்த் திருவிழா நடைபெறும் சமயம், நெற்கட்டுகள் கொண்டு வரப்படும்போது ஒவ்வொரு ஆணும் இரண்டு வேட்டிகளையும், ஒவ்வொரு பெண்ணும் ஒரு சேலையையும் தங்கள் முதலாளியிடமிருந்து பெறுவர். ஓணம், விசு விழாக்களின்போது ஒரு பறை நெல், இரண்டு தேங்காய், கொஞ்சம் நல்லெண்ணெய், கொஞ்சம் தேங்காய் எண்ணெய் ஆகியனவும் பெறுவர். திருமணம், சாவு முதலான செலவுகளுக் கும் இதே போல நில உடைமையாளர்கள் சில பறை நெல், உப்பு, மிளகாய் முதலியன தருவர். சிலபோது இவர்கள் ஆண்டு ஒன்றுக்கு இருபது வள்ளம் (பெரிய தானிய அளவு) ஊதியத்திற்கு ஒருவரின்கீழ் படிஆளாக வேலை செய்வர். தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ளத் தங்கள் பண்ணையாரிடமிருந்து பணம் கடன் வாங்கி எருமை அல்லது எருதுகள் வாங்கித் தங்கள் பண்ணையாருக்குச் சொந்தமான காட்டு நிலத்தின் ஒரு பகுதியைச் செப்பம் செய்து, அதில் பயிரிட்டு அதிலிருந்து வரும் வருமானத்தைக் கொண்டு கடனை அடைக்கப் பார்ப்பர். இந்த முயற்சியில் அவர்கள் எதிர்பாராது தோல்வி அடைய நேரிடின் கடன் கொடுத்த முதலாளிக்கே தங்களைப் பிணை ஆட்களாக்கிக்

கொள்வர்; அல்லது வேறொருவருக்குப் பிணை ஆளாகிக் கடன் பெற்று, முன்னவர் கடனைத் தீர்ப்பர். பெண்கள் இதுபோல என்றும் பிணையாக அடிமைகள் ஆவதில்லை. அவர்கள் நாள் கூலிக்கே வேலை செய்வர். எரவாளர்களின் முதலாளிகள் இவர்களை உண்மையும், நேர்மையும், நன்றியும், கடவுளிடம் அச்சமும் கொண்ட பணியாளர் என்று எப்பொழுதும் பாராட்டுவர். மாநிலத்தின் வடபகுதி சார்ந்து வாழும் புலையர்களைப் போல முதலாளிகளுக்கு நன்றியில்லாதவர்களாகச் சொல்லிக் கொள்ளாமல் ஓடிவிடும் பழக்கம் இவர்களிடம் இல்லை என்பர்.

ஒரு சிறுமி பருவம் அடைந்தவுடன், அவளைச் சுமார் ஒரு பர்லாங் தூரத்தில் அமைக்கப்படும் முட்டுச் சாலை எனப்படும் தனிக் குடிசையில் இருத்துவர். அச்சமயம் அவளுடைய சில தோழிகள் மட்டுமே அவளோடு தொடர்பு கொண்டு உடன் இருக்கலாம். இவ்வாறு தனித்து இருக்கச் செய்யும் ஏழு நாள்களும் அவள் தொலைவிலிருந்தவாறே தனக்கு அளிக்கப்படும் உணவினைப் பெற்றுக் கொள்ள வேண்டும். பெரியவர்கள் தீட்டு ஏற்படும் என அஞ்சி அவளை நெருங்குவதில்லை. ஏழாம் நாள் காலையில் குளித்த பின் அவளைத் தங்கள் குடிசைக்கு அழைத்துக் கொள்வர். அப்பொழுது அவளுடைய தோழிகளுக்கும் உறவினர்களுக்கும் விருந்து வைப்பர். அவளுக்கு முன்பே மணம் முடிக்கப்பட்டிருப்பின் அவளுடைய கணவன் இந்த விருந்துச் செலவுக்காகக் கொஞ்சம் பொருள் தருவான். ஒருத்தி திருமணம் ஆகும் முன்பே ஒருவனோடு உடல் உறவு கொண்டு கர்ப்பம் அடைய நேரின் அவளைக் கொன்றுவிடும் பழக்கம் முன்பு இருந்தது. இப்போது அத்தகையோர் சாதி விலக்கம் பெறுகின்றனர். இது போன்ற நிகழ்ச்சிகள் மிகச் சிலவே என இவர்கள் கூறுகின்றனர்.

தன் மகனுக்கு மணம் செய்விக்க விரும்பும் ஓர் எரவாளன் தன் மைத்துனனையும், சில உறவினர்களையும் அழைத்துக் கொண்டு பெண் கேட்கச் செல்வான். பெண்ணின் பெற்றோர் உடன்பாடு தெரிவித்தால் மண நாள் முடிவு செய்யப் படுவதோடு மண நிகழ்ச்சிக்கான எல்லா ஏற்பாடுகளும் மணமகள் குடிசையில் செய்யப்படும். அங்கு வந்துள்ள உறவினர்கள் அனைவருக்கும்

விருந்து வைப்பர். பெண்ணிற்குத் தரப்படும் பரிசப் பணம் ஒரு ரூபாய் ஆகும். மணமக்களின் பெற்றோர் தாங்கள் பணி புரியும் பண்ணையார்களை வெற்றிலை பாக்கு, புகையிலையுடன் சென்று கண்டு மண ஏற்பாடு பற்றிக் கூறுவர். திருமணச் செலவினைச் சரிக்கட்டப் பண்ணையார் சில பறை நெல் தருவார். இவர்கள் மணத்தினைத் திங்கட்கிழமைகளிலேயே நடத்துவர். மணம் நடைபெற உள்ள திங்கட்கிழமைக்கு முந்திய திங்கட்கிழமையன்று மணமகனின் உடன்பிறந்தவள் சில தோழிகளோடும், உறவினர்களோடும், மணமகள் குடிசைக்குச் சென்று மணமகள் பெற்றோருக்குப் பரிசப் பணமான ஒரு ரூபாயையும் மணமகளுக்குப் பரிசாக ஒரு பித்தளை மோதிரத்தையும் தருவாள். மணம் நடைபெற உள்ள திங்கட்கிழமையன்று மீண்டும் இவர்களே இன்னும் சில உறவினர்களுடன் மணமகள் குடிசைக்குச் சென்று, தாங்கள் கொண்டு செல்லும் புதுச் சேலையை மணமகளுக்குத் தந்து உடுத்தச் செய்வர். அவர்களுக்கு அங்கு முன்பு போலவே விருந்தளிக்கப்படும். பின்னர் அவர்கள் மணமகளை மணமகன் குடிசைக்கு அழைத்து வருவர். அங்கும் கூடியுள்ள இரு வீட்டாருக்கும் விருந்து அளிக்கப்படும். இதற்கு அடுத்த திங்கட்கிழமை மணமக்களைப் பெண்ணின் குடிசைக்கு அழைத்துச் செல்வர். அங்கு அவர்கள் ஒரு வாரம் தங்கியிருந்து மணமகன் குடிசைக்குத் திரும்புவர். இந்த நிகழ்ச்சியோடு மணம் முடிந்ததாகக் கருதப்படும். இவர்களிடையே தாலி கட்டும் பழக்கம் இல்லை. இதே மணமுறையையே சித்தூர் வட்டத்தைச் சேர்ந்த ஈழுவர்களும் கடைபிடிக்கின்றனர். மணநிகழ்ச்சியின் போது மணமகனுக்கு எத்தகைய அன்பளிப்புகளும் வழங்கப் படுவதில்லை. இதனைக் கர்கடகச் சங்கராந்தியின்போது வழங்குவர். அப்பொழுது மணமகனின் மாமனார் அவனை அழைத்து இரண்டு வேட்டிகளையும் ஒரு தலைப்பாகையையும் அன்பளிப்பாகத் தருவதோடு நல்ல விருந்தும் வைப்பான். கைம்பெண் ஒருத்தி மனைவியை இழந்த ஒருவனையே மணக்க முடியும். இது முண்டைகட்டுதல் என்று வழங்கப்படும். இருவருக்கும் முதல் மணத்தின் வழிப் பிறந்த குழந்தைகள் இருப்பின் சாதியைச் சேர்ந்தவர்களிடம் கைம்பெண்ணை மணக்க இருப்பவன் தன்னுடைய இரண்டு மணங்களின் வழிப் பிறந்த குழந்

தைகளையும் ஓரவஞ்சனையின்றி நடத்துவதாக உறுதி கூற வேண்டும். இந்த மணத்திற்கும் பித்தளை மோதிரமும், சேலையும் மணமகளுக்குப் பரிசளித்தாக வேண்டும். ஒருவன் தன் மனைவியை அவளைத் தனக்குப் பிடிக்கவில்லையாயின் மணமுறிவு செய்து கொள்ளலாம். இவ்வாறு மணமுறிவு செய்யப் பட்டவள் மனைவியை இழந்த ஒருவனையே மீண்டும மணக்கலாம். இத்தகைய மணமுறிவுகள் தங்களிடையே மிக அருமையாகவே நடப்பதாக இவர்கள் கூறுகின்றனர்.

ஒருத்தி கருவுற்ற ஐந்தாம் அல்லது ஏழாம் மாதத்தில் எத்தகைய சடங்கும் நடத்தப்படுவதில்லை. கருவுற்றவள் நாய், பூனை, காட்டு விலங்குகள் ஆகியன கனவில் வந்து தன்னை அச்சுறுத்துவதாகக் கூறினால், அது அவளைப் பேய் பிடித்திருப்பதாகக் கொள்வதற்குரிய அடையாளமாக நம்புவர். அப்போது அச்சாதிக்குரிய அல்லது வேறு சாதியைச் சேர்ந்த பேய் ஓட்டுபவன் அழைக்கப்படுவான். அவன் தரையில் அரிசி மாவு மஞ்சள், கரிக்கட்டை ஆகியவற்றால் ஓர் அஞ்சத்தக்க உருவத்தைக் கோலமாக வரைந்து, அதன்முன் அப்பெண்ணை அமரச் செய்வான். உடுக்கை அடித்தபடி பாடவோ, மந்திரங்களை முணுமுணுக்கவோ செய்வான். ஒரு விளக்கு ஏற்றப்பட்டுச் சாம்பிராணி புகைக்கப்படும். ஒரு 'கைபலி' அந்தப் பெண்ணின் முகத்தின் முன் சுற்றப்படும். அவள் தன்னுணர்வு இழந்தவளாக ஆடி அசைவாள். பொங்கல், அவல், வாழைப்பழம், தேங்காய், கோழி முதலியன பேய்க்குப் பலியாகத் தரப்படும். இதனால் திருப்தியுற்ற அது, அவளை விட்டு விலகும் அல்லது அவளைவிட்டு நீங்கச் சில நிபந்தனைகளைக் கூறும். இந்தச் சடங்கின்போது அந்தப் பெண் ஆடாது அசையாது அமைதியாக இருந்தால், அது அவளைப் பேய் பிடிக்கவில்லை என்பதற்கான அறிகுறி ஆகும். அடிக்கடி மந்திரம் எழுதப்பட்ட பனையோலையைச் சுருட்டி நூலில் கோத்துப் பேய் அணுகாதிருக்கக் கழுத்தில் அணிவிப்பர்.

குழந்தை பெறப்போகும் ஒருத்தியைத் தனியே ஒரு சிறு குடிசையில் அவளுடைய குடிசைக்குச் சற்று தள்ளிபுள்ள

இடத்தில் இருத்துவர். அவளுக்கு உதவியாக அவளுடைய அன்னையும் வேறு சில வயதான பெண்களும் மட்டுமே இருப்பர். குழந்தை பிறந்தவுடன் தாயையும் சேயையும் குளிப்பாட்டுவர். அவள் தீட்டுக்கு உரியவளாகையால் ஏழு நாள்கள் தனிக் குடிசையிலேயே இருக்க வேண்டும். ஏழாம் நாள் குளித்த பின் குடிசைக்குப் பக்கத்தில் அமைக்கப் படும் தனிக் குடிசைக்கு இடம் பெயர்வாள். அங்கும் தீட்டுக்குரியவளாகவே தொடர்ந்து ஐந்து மாதங்கள் தனியே இருப்பாள். இச்சமயம் எளிய உணவையே உண்ணத் தருவர். ஊன் உணவு விலக்கப்படும். அவளுக்கு மருந்தாகத் தரப்படுவ தெல்லாம் கள்ளில் கலக்கப்பட்ட மிளகு, சுக்கு, பனைவெல்லம் ஆகியனவே. ஐந்து மாதங்களுக்குப்பின் குளித்துவிட்டுத் தீட்டு நீங்கியவளாக அவள் மீண்டும் தன் குடிசையில் நுழைவாள்.

எரவாளர் இறந்தவர்களைப் புதைக்கின்றனர். சாவுத் தீட்டினை ஐந்து நாள்கள் மட்டுமே இவர்கள் மேற்கொள் கின்றனர். ஆறாம் நாள் காலை துக்கம் கொண்டாடுபவன்— இறந்து போனவனுடைய மகன் அல்லது உடன் பிறந்த இளை யவன் - முகம் மழித்த பின், குளித்துவிட்டு இறந்து போன வரின் ஆவிக்குப் பொங்கல், வறுத்த அரிசி, வாழைப்பழங்கள், கோழி ஆகியன படைப்பான். கையில் சேமிப்புத் தொகை இருக்கும்போது, சாதியைச் சேர்ந்தவர்களுக்கு ஆண்டுக்கு ஒரு முறை விருந்து வைப்பர். அப்போது இறந்து போன முன் னோரின் நினைவாகப் படையலிட்டு வழிபாடும் நிகழ்த்துவர்.

ஆவிகளை வழிபடும் இவர்கள், காடுகளிலும் மலைகளிலும் தங்களுக்குத் தீமை செய்யும் பேய்கள் நிறைந்திருப்பதாக நம்பு கின்றனர். பேய்கள் மரங்களில் வாழ்வதாகவும், காட்டு விலங்கு களை அவை தம் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கின்றன என்றும் இவர்கள் நம்புவதோடு, சில உள்ளூர் பேய்கள், பாறைகள், மரங்கள், சிகரங்கள் ஆகியவற்றில் குடி இருந்தபடி சில குடும்பங்கள் அல்லது ஊர்களைத் தம் வசப்படுத்தியபடி உள்ளதாகவும் நம்புகின்றனர். அவைகளுக்குச் செய்யப்படும் வழிபாடு அவற்றின் பசியைப் போக்கச் செய்யப்படுவதே

அன்றி அவற்றின் அருளைப் பெறச் செய்யப்படுவதன்று. காளி, முனி, கன்னிமார், கறுப்பராயன் ஆகியன இவர்கள் வழிபடும் தெய்வங்கள். காட்டில் வாழும்போது, தங்களுக்கும் தங்கள் குடும்பத்திற்கும் பாதுகாப்பைப் பெறவேண்டிக் காளியை இவர்கள் வழிபடுகின்றனர். முனியைக் கால்நடைகளைக் காக்கவும் நல்ல விளைவினைப் பெறவும் வழிபடுகின்றனர். கன்னிமாரும் கறுப்பராயனும் இவர்கள் நலத்தைப் பேணும் குல தெய்வங்கள். பொங்கல், வாழைப்பழம், தேங்காய், அவல் ஆகியவற்றை இத்தெய்வங்களைத் திருப்திப்படுத்தப் படைக்கின்றனர். காளியையும் முனியையும் காட்டில் சென்று வழிபடும் இவர்கள், பிற தெய்வங்களை வீட்டிலேயே வழிபடுவர்.

புஞ்சை நிலத்தினை உழுது சாமை, சோளம், துவரை, எள் ஆகியவற்றை மே மாதத்தின் நடுப்பகுதியில் விதைத்து, நவம்பரில் அறுவடை செய்வர். அந்தப் பருவத்தில் முழுவதுமாகத் தங்களை உழவுத் தொழிலில் ஈடுபடுத்திக் கொள்ளும் இவர்கள், பிற மாதங்களில் தோட்ட வேலை, வேலி போடுதல், கூரை வேய்தல் ஆகியவற்றை மேற்கொள்வர். உழும்போதும், விதைக்கும் போதும், அறுவடையின் போதும் இவர்கள் காளியையும் முனியையும் வழிபடுவர். தங்களுடைய பயிரைக் காட்டு விலங்குகளிடம் இருந்து காப்பதற்காகவே இவர்கள் இவ்வாறு வழிபாடு செய்கின்றனர். எரவாளர் திறமையான வேட்டைக்காரர்கள். காடுகளோடு கொண்டுள்ள நெருக்கமான தொடர்பு காரணமாகக் காட்டு விலங்குகள் அடிக்கடி நடமாடும் இடங்களை மோப்பம் பிடித்து அறியக் கூடிய திறமை படைத்தவர்கள். பயணிகளை எச்சரிக்கவும் வேட்டைக்காரர்களுக்கு வேட்டை விலங்குகள் இருக்கும் இடத்தைக் காட்டவும் இவர்கள் உதவுவர். இவர்கள் பத்துப்பதினைந்து பேர்கள் ஒன்று கூடிக் கத்தி, வில், அம்பு ஆகியன தாங்கி விலங்குகளை அவை பதுங்கியிருக்கும் இடங்களிலிருந்து விரட்டி, முன்பே கட்டி வைத்துள்ள பெரிய வலைகளில் விழச் செய்து கொல்வர். முயல், முள்ளம் பன்றி, காட்டுப் பன்றி ஆகியனவற்றை இவ்வாறு வேட்டையாடுவர். குறி தவறாது அம்பெய்யும் ஆற்றல் வாய்ந்த இவர்கள் பறவைகள் பறக்கும் போதே அவற்றை அம்பெய்து வீழ்த்துவர்.

புளி, உப்பு, மிளகாய் ஆகியன சேர்த்து முதல் நாள் இரவே தயாரித்து வைக்கப்படும் சாமை அல்லது சோளக் கஞ்சி தான் இவர்களுடைய வழக்கமான உணவு. பகல் உணவிற்கும் இதே போன்ற கஞ்சியினைத் தயாரித்துக் கொள்ளுப் பருப்பும் காய்கறிகளும் சேர்த்து உண்பர். தங்கள் பண்ணையார் நிலத்தில் விளையும் இவர்கள் காவல் காக்கும் பிற தான்யங்களையும் உண்பர். ஆடு, பன்றி, கோழி, முயல், காடை, புறா முதலானவற்றின் ஊனினையும் இவர்கள் உண்பர். பிராமணர், நாயர், கம்மாளர், ஈழுவர் ஆகியோருடைய கையால் சமைத்த உணவை உண்ணும் இவர்கள் மண்ணார், பாணர், பறையர், செறுமார் ஆகியோர் சமைத்தவற்றை ஏற்க மறுப்பர். சக்கிலியன், பறையன், செறுமான் ஆகியோர் மீது முட்ட நேர்ந்தால் உடனே குளிப்பர். பிராமணர், நாயர் ஆகியோரை நெருங்காதவர்களாகத் தூரவே நிற்பர்.

ஆண்களும் பெண்களும் செம்மையாக உடை அணிவர். ஆண்கள் வேட்டியின் ஒரு முனையைத் தொங்கவிட்டு, மறு முனையைக் கால்களுக்கு இடையே விட்டு பின்னால் சொருகிக் கொள்வர். மேல்துண்டு போட்டுக் கொள்ளும் இவர்கள் சில போது அதனைத் தலையில் முண்டாசாகக் கட்டிக் கொள்வர். தலைமுடியை நீள வளர்க்கும் இவர்கள் வசதியில்லாத காரணத்தால் அதற்கு எண்ணெய் பூசுவதில்லை. மலையர்களிலிருந்து தங்களை வேறுபடுத்திக் காட்டுவதற்காக இவர்கள் மீசை வளர்ப்பர். வெள்ளிப் பாசி மாலையினைக் கழுத்தில் அணிவர். மலையர்கள் எப்பொழுதும் இவர்களிடம் அச்சம் உடையவர்கள். சிலர் பித்தளை மோதிரங்கள் அணிவதுண்டு. பெண்கள் புடவையின் ஒரு பாதியை இடையில் சுற்றி மறு பாதியைக் கொண்டு உடம்பைப் போர்த்துக் கொள்வர். தலைக்கு எண்ணெய் தடவும் பழக்கம் இவர்களிடமும் இல்லை. அதனைப் பின்னால் கொண்டையாக முடிந்துவிட்டுக் கொள்வர். பெண்கள் வாரம் ஒருமுறை எண்ணெய் குளியல் எடுப்பதாகக் கூறப்படுகிறது. காதில் நீண்ட பனை ஓலையினைச் சுருட்டிக் காதணியாக அணிந்து கொள்வர். காதின் மடல் அதனைக் கொள்ளும் அளவிற்குத் துளையுடையதாக நீண்டு தொங்குவதாக இருக்கும்.

**எரகொல்லர் – Erkollar**

தெலுங்கு யெரகொல்லர் சாதிக்குரிய தமிழ்ப் பெயர். இது தொட்டியன் சாதியின் ஓர் உட்பிரிவு ஆகும்.

**எர்நாடன் - Ernādan**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில், அரநாடர் மலபாரைச் சேர்ந்த மலைவாழ் பழங்குடிகள் எனவும், இவர்கள் மலைப்பாம்பினைக் கொன்று அதிலிருந்து ஓர் எண்ணெய் எடுத்து அதனைச் சமவெளியில் வாழும் மக்களுக்குத் தொழு நோயைத் தீர்க்கும் மருந்தாக விற்பவர்கள் எனவும் கூறப்பட்டுள்ளது. இக் குறிப்பு எரநாடர்களைப் பற்றியது என்பதில் எனக்கு ஐயமில்லை. எரநாடர் பற்றித் திரு ஜி. ஹேட்பீல்டு எனக்குப் பின்வருமாறு எழுதியுள்ளார். இவர்கள் சிறு எண்ணிக்கையிலான மலபார் மாவட்டத்தில் மட்டும் காணப்படும் காடுவாழ் பழங்குடிகள். மலபார் மக்கள் இவர்களைக் காடு வாழ் பழங்குடிகள் அனைவரிலும் தாழ்ந்தவர்களாகக் கருதுகின்றனர். இவர்கள் நூறு கஜத்திற்கும் உள்ளாக நெருங்குவார்களாயின் தீட்டுப்படுத்துகின்றவர்களாகக் கருதப்படுகின்றனர். பணியன், பறையன் சாதிகளைச் சேர்ந்தவர்கள் கூட இவர்கள் தங்களை நெருங்கி வர அனுமதிப்பதில்லை. ஊரெல்லையிலிருந்து நானூறு கஜ தூரத்திற்கு அப்பாலே இவர்கள் நிற்க வேண்டும் என்பது விதி. ஒருவன் தன்னுடைய மூத்த மகளையே இரண்டாவது மனைவியாக மணந்து கொள்வது இவர்களிடையே மட்டும் காணப்படும் தனித்த வழக்கமாகும். இவ்வழக்கம் முன்பு நடைமுறையில் இருந்து தற்போது அருகி விட்டதாகக் கருதப்படுகிறது. குரங்குகளை வேட்டையாடும் இவர்கள் அதற்கு வில், அம்புகளைப் பயன்படுத்துகின்றனர். குரங்குகளின் ஊனில் இவர்களுக்கு விருப்பம் அதிகம். உண்ணும் உணவு பற்றி எத்தகைய கட்டுப்பாடும் இன்றி நரியைப் போல கண்டதைத் தின்னும் பழக்கம் உடைய இவர்கள், பாம்புகளையும் மற்றும் பலவகை விலங்குகளின் அழுகிய ஊனையும் தின்பர். இவர்கள் பாம்புகளைப் பிடித்து அதன் ஊனினை விற்பதில் விருப்பம் உடையவர்கள். மரம் வெட்டவும், பயிர்த்தொழில் செய்யவும் முகமதியர்களால் அமர்த்தப்பட்டுள்ள இவர்கள்

மிகக் குறைந்த அளவினதான ஆடைகளையே உடுப்பர். மானத்தை மறைக்க போதிய துணி கிடைக்காதபோது காட்டு வாழையின் இலைகளையும் ஆடையாகப் பயன்படுத்துவர்.

திரு ஹேடீல்டு அவர்கள் இந்த இனத்தவர்கள் மீது கொண்டுள்ள செல்வாக்கினைப் பயன்படுத்தித் திரு எப்.பாவ்-செட் இவர்களுள் சிலரின் அளவுகளை எடுத்துள்ளார். அப்போது இவர்களுடைய மாப்பிள்ளா முதலாளிகளும் இவர்களுடன் உடன் இருந்தனர். அவர்கள் சைகை காட்டியவுடன் வயலில் வேலை பார்க்கத் திரும்பவும் முயல்களைப் போல இவர்கள் ஓடினர். இவர்களின் முக்கியமான அளவுகள் வருமாறு:-

| | மேலளவு | கீழ் அளவ | சராசரி |
|---|---|---|---|
| உடல் வாகு (செ.மீ.) | 156. 6 | 150. 6 | 154. 5 |
| தலையின் விகிதத் தகவு அளவு எண் | 85 | 77 | 81 |
| மூக்கின் விகிதத் தகவு அளவு எண் | 108. 8 | 711 | 88. 4 |

இந்த அளவுகளின்படி எரநாடர்கள் குள்ளமான உடல் வாகும், தடித்து அகன்ற மூக்கும், வழக்கத்திற்கு அதிகமானதான தலையின் விகிதத் தகவு அளவு எண்ணும் கொண்டவர்களாக உள்ளனர் எனலாம்.

**ஏர்ரா - Ērrā**

பார்க்க - யெர்ரா (See:Yerra)

**எருதாண்டி - Erudandi**

பார்க்க - கங்கெத்து (See:Gangeddu)

**எருதுக்காரன் – Erudukkāran**

பார்க்க – கங்கெத்து (See:Gandgeddu)

**எருமை - Erumāi (buffalo)**

தொரையர்களின் புறமணக் கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**எருமான் - Erumān**

கோலாயன்களின் ஓர் உட்பிரிவு.

**எட்டரை - Ettarai (eight and a half)**

தமிழ்நாட்டுப் பொற்கொல்லர்களின் புறமணக் கட்டுப் பாடுடைய ஒரு குலத்தின் பெயர்.

**ஏட்டுவீடன் - Ettuvidan**

1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் நாயர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**யூரேசியர் - Eurasian**

'ஹாப்சன் - ஜாப்சன்' கொடுத்துள்ள விளக்கத்தின்படி* யூரேசியன் (யூரோ + ஏசியன்) என்பது ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும் இடையே ஏற்பட்ட கலப்பின் காரணமாகப் பிறந்த கலப்பினத்தவர்களுக்கு உடையதான அரைச் சாதி என் பதைவிட மரியாதைக்கு உரியதாகவும், கிழக்கிந்தியன் என்பதை விடத் தெளிவான விளக்கம் தருவதாகவும் உள்ள புதியதொரு பெயர் எனலாம். 17 ஆண்டுகளுக்கு முன் ஐரோப்பியர் மற்றும் ஆங்கிலோ இந்தியர் பாதுகாப்புக்கூட்டமைப்பு ஏற்படுத்தப்பட்ட போது நன்றாகச் சிந்தித்துப் பார்த்தபின் ஆங்கிலோ - இந்தியன் என்ற பெயர் இந்தச் சமூகத்தவரைக் குறிக்க ஏற்ற பெயராக ஏற்றுக் கொள்ளப்பட்டது. 1854-இல் வெளியான பிரிட்டிஷ் இந்தியா பற்றிய கையேட்டில்† ஸ்டொக்யுலெர் யூரேசியன் என்ற பெயரைப் படைத்தவர் மார்க்யுஸ் ஆப் ஹேஸ்டிங்ஸ் ஆவார் என்று கூறப்பட்டுள்ளது. கிழக்கிந்தியர் பற்றிப் பல்போர் (Balfour)‡ பின்வருமாறு விளக்கம் தருகிறார். "கிழக்கிந்தியன் என்ற பெயர் இந்தியாவைச் சேர்ந்த எல்லா வகுப்பாராலும், ஐரோப்

---

* யேலெயும் பர்னலும், இரண்டாம் பதிப்பு. 1903. (Yule and Burnell, 2nd ed. 1903.)

† Handbook of British India 1854, Stocqueler

‡ இந்திய கலைக் களஞ்சியம். (Cyclopaedia of India.)

பியர்கள் இந்தியாவைச் சேர்ந்த பெண்களுடன் கொண்ட உற வால் பிறந்தவர்களுக்குரிய பெயராக வழங்கப்படுகிறது. அரைச் சாதி, சட்டைக்காரர், ச்சிச்சி ஆகியன இவர்களை இழித்துக் கூறும் பட்டப்பெயர்களாம். 'கால்சட்டை அணிபவன்' என்ற பொருளில் சட்டைக்காரன் என்ற பெயர் வழங்கப்படுகிறது. முகமதியர்களும் கால்சட்டை அணிகின்றனர். அதனை அவர் களுடைய நீண்ட மேல் சட்டை மறைத்துக் கொள்கின்றது. கிழக் கிந்தியர் ஐரோப்பாவைச் சேர்ந்தவன் என்ற பொருளில் பரங்கி (Frank) எனவும் அழைக்கப் படுகின்றனர். பணிவு மிக்கவரான கிழக்கிந்தியரை, அவர்களுடைய இனம் எது எனக் கேட்டால் வாலண்டைஸ் அல்லது ஓலண்டெ என்பர். இது ஹாலண்டியர் என்பதின் திரிபாகும். பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டு களில் வந்து சேர்ந்த டச்சுக்காரர்களின் தொடர்பால் இப் பெயர் அமைந்தது எனலாம். இந்தியாவில் கிழக்கிந்தியர்களுக்கு ஐரோப்பியர்களுக்குரிய எல்லாவித உரிமைகளும் சலுகைகளும் வழங்கப்படுகின்றன. ஐரோப்பிய ஆசிய குருதிக் கலப்பால் பிறந்த இனத்தவர்கள், தன் மதிப்பும், எதனையும் ஏற்கும் மனப் பான்மையும் உடையவர்களாக உள்ளனர்'' உதகமண்டலத்தி லுள்ள லாரன்சு காப்பகம் தொடர்பான விதிகளில் கிழக்கிந்தி யன் என்பது ஐரோப்பிய ஆணுக்கும் கிழக்கிந்திய அல்லது இந்தி யப் பெண்ணுக்கும் பிறந்தவர்களையும், கிழக்கிந்திய ஆணுக்கும் கிழக்கிந்தியப் பெண்ணுக்கும் பிறந்தவர்களையும் மட்டுமேகுறிக் கும் எனக் கூறப்பட்டுள்ளது. இவ்விரு சாராரும் ஐரோப்பியத் தந்தையருக்குப் பிறந்த குழந்தைகளே ஆவர்.*

சில ஆண்டுகளுக்கு முன் இந்திய அரசு ஏற்படுத்திய விதி களின்படி இந்தியாவில் பணி மேற்கொள்ள, இங்கிலாந்தில் பதவி யில் அமர்த்தப்படும் யூரேசியர்கள், அவர்கள் இந்தியக் குடிமக்க ளாகப் பதிவு பெறாது இருப்பார்களே ஆனால் நாணயமாற்று ஈட்டிழப்பு உதவித் தொகை பெற இவர்கள் ஐரோப்பியர்க ளாகவே கருதப்படுவார்கள் என முடிவு செய்யப்பட்டுள்ளது.

யூரேசியர் சிலர் விருதுகள் பெற்றுச் சிறப்புற்றவர்களாகத்

---

* இவ்விதி மனுவின் அனுலோம பிரிதிலோம விதியினை ஒத்தது. (மொ.கு.)

திகழ்கின்றனர் என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். மேலும் அரசுப் பதவிகளில் மிக உயர்ந்த தகுதியை உடைய பதவிகளையும் வகித்து அரசின் பாராட்டினை இவர்கள் பெற்றுள்ளனர். சட்டம், மருத்துவம், கல்வி, சமயம் ஆகிய துறைகளில் மற்றும் பலர் பெரும் பொறுப்புக்களை வகித்ததோடு இன்றும் அப்பொறுப்புகளில் உள்ளனர்.

போர்த்துகீசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர், பிரெஞ்சு நாட்டவர் ஆகிய பல ஐரோப்பிய நாட்டவரும் இந்தியத் தீபகற்பத்தில் பல சமயங்களில் நிலப் பகுதிகளைப் பிடித்து ஆண்டு வந்துள்ளதன் செல்வாக்கினைக் கதம்பக் கலவையாகக் காணப்படும் பின்வரும் குடிப்பெயர்கள் தெளிவுறுத்துவன ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| கோம்ஸ் | — Gomes | மென்டொசா | — Mentoza |
| த செளரா | — Da Souza | ரொட்ரிகசு | — Rodriquez |
| கான்சால் வெஸ் | — Gonsalvez | சல்தான | — Saldana |
| ரொஜாரியோ | — Rozario | அல்மெய்ட் | — Almeyda |
| காபரல் | — Gabral | ஹெல்தட் | — Heldt |
| தகர்ஸ் | — Da Curz | வான் ஸ்பால் | — Van Spall |
| த கொஸ்ட | — Da Costa | ஜன்சென் | — Jansen |
| த சில்வ | — Da Silva | அகஸ்டைன் | — Augustine |
| பெர்னான் டஸ் | — Fernandoz | பிரிஸ்சன் | — Brisson |
| பான்செகா | — Fonseca | கர்னெல்லெ | — Corneille |
| லஜாரொ | — Lazaro | ல கிரேஞ்செ | — La Grange |
| ஹென்ரிக்வ்ஸ் | — Henriquez | லவொகேட் | — Lavocat |
| சேவியர் | — Xavier | பாஸ்கல் | — Pascal |
| ஆயுபெர்ட் | — Aubert | டெ வைன் | — De Vine |
| மெக்கெர்டிஸ் | — Mckertish | ரயான் | — Ryan |
| ஹாரிஸ் | — Harris | மெக்பெர்ஸன் | — Macpher-son |
| ஸ்மித் | — Smith | ஜான்சன் | — Johnson |

பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் முதன்முதல் இந்தியாவிற்கு வருகை புரிந்த முன்னோடி வீரர்கள், தாங்கள்

இந்தியப் பெண்களுடன் கொண்ட உறவின் காரணமாக மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின் பென் ஜான்சனுக்கும், அலெய்ஸ் அல்மெய்டாவிற்கும்; இமானுவல் ஹென்ரிகஸக்கும், மேரிஸ் மித்துக்கும்; அகஸ்டஸ் ரொஜாரியோவிற்கும், மின்னெ போன்சி காவிற்கும்; ஜான் ஹாரிஸ்க்கும், க்ளாரா கார்னெய்லெயிற்கும் திருமணம் நடைபெறப் போவதாக வாராவாரம் அறிக்கைகள் வெளியாகும் என எதிர்பார்த்திருக்கமாட்டார்கள்.

தொடக்க கால யூரேசிய சமூகத்தவர்களின் தோற்ற மரபு வழி தெளிவற்றதாகவே உள்ளது வலிமை வாய்ந்த ஐரோப்பிய முன்னோடிகள் முதன் முதல் இந்தியப் பெண்களோடு உறவு கொண்டு பலவகைக் கலப்பின சாதியினரைத் தோற்றுவித்த முறை தொடக்க நாட்களில் பின்வரும் வகையில் குருதித் தொடர்பு உடையனவாக இருந்திருத்தல் வேண்டும்.

| | | |
|---|---|---|
| க. (கலப்பில்லா) ஐரோப்பியன் | ... | ங. (கலப்பில்லா) இந்தியப் பெண் |
| ச. க+ங கலப்பால் பிறந்த ஆண் (முதல் கலப்பு) | ... | ஞ. இந்தியப் பெண் |
| ட. க+ங கலப்பால் பிறந்த பெண் (முதல் கலப்பு) | ... | ண. ஐரோப்பிய ஆண்<br>த. இந்திய ஆண் |
| ந. ச+ஞ கலப்பால் பிறந்த ஆண் | ... | ய. கலப்பு – க+ங கலப்பால் பிறந்த பெண்<br>ப. இந்தியப் பெண் |
| ம. ச+ஞ கலப்பால் பிறந்த பெண் | ... | ய. கலப்பு க+ங கலப்பால் பிறந்த ஆண்<br>ர. ஐரோப்பிய ஆண்<br>ல. இந்திய ஆண் |

இவ்வாறு உருவான யுரேசிய கலப்பினம் பின்வரும் பல்வேறு கூட்டுறவுகளின் கலப்பினால் நிலைத்ததொரு தன்மையைப் பெற்றிருக்க வேண்டும்.

| | | |
|---|---|---|
| ஐரோப்பிய ஆண் | ... | யூரேசியப் பெண்<br>இந்தியப் பெண் |

| | | |
|---|---|---|
| யூரேசிய ஆண் | ... | இந்தியப் பெண்<br>யூரேசியப் பெண்<br>ஐரோப்பியப் பெண் |
| இந்திய ஆண் | ... | யூரேசியப் பெண்<br>ஐரோப்பியப் பெண் |

சென்னையை ஆங்கிலேயர் கைப்பற்றியிருந்த தொடக்க நாள்களில் வணிகர்களும், படைவீரர்களும் போதுமான பெண்களை உடன் அழைத்து வராமல் வந்த காரணத்தால் இந்திய நாட்டுப் பெண்களோடு முறையாகவும், முறைகேடாகவும் தொடர்பு கொள்ளலாயினர். நமது எல்லைகள் ஐரோப்பிய, இந்தியப் பகைவர்களின் தீவிரமான தாக்குதலுக்கு உட்பட்டிருந்த அந்த நாள்களில், மேலிடத்திலிருந்து ஆங்கிலேயப் படைவீரர்களைக் கொண்டு கலப்பு இனப் பெருக்கத்தின் மூலம் ஓர் இனத்தின் ஆற்றலைப் பெருக்கிக் கொள்வதோடு, அதனைப் புதிய குருதிக் கலப்பின் காரணமாக வீரமிக்க ஓர் இனமாகவும் உருவாக்கி, படைக்குத் தேவையான வீரர்களைப் பெற்றுக் கொள்வதற்கான முயற்சியும் மேற்கொள்ளப்பட்டது எனலாம். பின்னர் இங்குக் குடியேறிய ஆங்கிலேயர்களின் எண்ணிக்கை அதிகரித்தபோது தாய் நாட்டோடான தொடர்பில் உள்ள சிக்கலால் போதுமான எண்ணிக்கையில் ஆங்கிலேய மணப் பெண்கள் கிடைக்காத காரணத்தால் இந்தியப் பெண்களுடனோ அண்மைக் காலக் கலப்பினமாக உருவான யூரேசியப் பெண்களுடனோ மண உறவு ஏற்படுத்திக் கொண்டனர். சென்னையில் உள்ள பெரும் பரப்பிலான நிலங்களில் அமைந்துள்ள தனித்த அல்லது ஓரளவு தனித்ததான தனிப்பட்டவர்களின் பங்களாக்கள் ஆங்கிலேயரின் இந்தத் தன்னிச்சைப் போக்குடைய பழைய நாள்களின் நினைவுச் சின்னங்களாக இன்றும் காட்சி தருகின்றன. கப்பல் போக்குவரத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் காரணமாக இந்தியாவில் வாழும் ஆங்கிலேயர்களின் வாழ்க்கைப் போக்கு இன்று அன்றைய நிலையினைக் காட்டிலும் முற்றிலும் மாறுபட்டதாகவும் முழுமை பெற்றதாகவும் உள்ளது. யூரேசிய இனத்தவன் இன்று தன்னுடைய இனத்தைச் சார்ந்த பெண்ணையே மணக்க முற்படுவதால் இந்த இனம் தொடர்ந்து இருந்து வருகின்றது.

1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பின்படி சென்னை மாநிலத்தில் வாழும் யூரேசியர்களின் எண்ணிக்கை 26,643 எனப் பதியப்பட்டுள்ளது. இந்தப் புள்ளி விவரம் தொடர்பாகக் கணக்கெடுப்பு ஆணையரான திரு எச். எ. ஸ்டுவர்ட் அவர்களோடு நான் கருத்து மாறுபாடு கொள்ளவேண்டியவனாக உள்ளேன். "யூரேசியர்களின் எண்ணிக்கை 26, 643. இது 1881 கணக்கெடுப்பின் போதான எண்ணிக்கையைக் காட்டிலும் 20. 76 சதவீதம் அதிகம்" என அவர் எழுதியுள்ளார். சென்ற மூன்று கணக்கெடுப்புக்களின் புள்ளி விவரங்கள் வருமாறு:-

| ஆண்டு | மொத்த எண்ணிக்கை | ஆண்கள் | பெண்கள் |
|---|---|---|---|
| 1871 | 26, 640 | 13, 091 | 13, 359 |
| 1881 | 21, 892 | 10, 969 | 10, 923 |
| 1891 | 26, 643 | 13, 141 | 13, 502 |

"1871-ஆம் கணக்கெடுப்பிற்கும் 1881-ஆம் கணக்கெடுப்பிற்கும் இடைப்பட்ட காலத்தில் எண்ணிக்கை மிகத் குறைந்துள்ளதையும் 1891-ஆம் ஆண்டில் அது இருபது ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததை விடச் சற்றே கூடியுள்ளதையும் காணலாம். புள்ளிவிவர எண்ணிக்கைகள் சிறிதும் நம்ப முடியாதனவாக உள்ளன. இதற்கான காரணம் மிகத் தெளிவானதாகும். இந்தியர் பலர் தங்களை யூரேசியர் எனவும், யூரேசியர் பலர் தங்களை ஐரோப்பியர் எனவும் பதிந்துள்ளமையே இதற்கான காரணமாகும். இவ்வாறு ஏற்படும் தவறுகள் ஒரே சீரானவையாக இருக்கலாம் எனச் சொல்ல இடமில்லை என்பதனை மாவட்டங்களுக்கான புள்ளி விவரங்கள் தெளிவு படுத்துகின்றன. எடுத்துக்காட்டாக மலபார் மாவட்டத்தைப் பார்ப்போம். சென்னை நகருக்கு அடுத்தபடியாக இங்குதான் எண்ணிக்கையில் மிகுதியான யூரேசியர்கள் உள்ளனர். இங்கு ஐரோப்பியர்களின் பெயர்களைத் தாங்கிக் கிறித்தவர்களாக மதம் மாறியுள்ள இந்தியர்களுக்கும், கலப்பின மக்களுக்கும் இடையேயான வேறுபாட்டினை எளிதில் கண்டறிய முடியாது. இம் மாவட்டத்தில் 1871-இல், 5,413 யூரேசியர்கள் இருந்துள்

ளனர். 1881-இல் இந்த எண்ணிக்கை 1,676 ஆகக் குறைந் துள்ளது. 1891-இல் இது 4,193 ஆக உயர்ந்துள்ளது. இம் மாவட்டத்தோடு தென்கிழக்கில் உள்ள வயநாட்டவர்களின் எண்ணிக்கையையும் முறைப்படி கூட்டிக் கொண்டால் மொத்த எண்ணிக்கை 4,439 ஆகும். உண்மையான யூரேசியர்கள் எண்ணிக்கையில் கூடி வருகின்றனரா அல்லது குறைந்து வருகின்றனரா என்பது அறிவியல் நோக்கிலும் ஆட்சி நல நோக்கிலும் கணித்து அறியப்பட வேண்டியதாக உள்ள நிலை யில் நம்பத் தகுந்த புள்ளி விவரங்களைப் பெற இயலாதிருப்பது வருந்தத்தக்க ஒன்றாகும். சென்னை மாநிலத்தின் மொத்த, மக்கள் தொகையில் யூரேசியர்களின் எண்ணிக்கை 1,337 பேருக்கு ஒருவராக, சமூகத்தின் மிகக் குறைந்த விகிதமுடைய தாகவே உள்ளது. யூரேசியர்களாகப் பதிந்துள்ளவர்களுள்ளும் பலர் ஆங்கிலேய அல்லது போர்த்துகீசியப் பெயரைத் தாங்கிக் கிறித்தவ சமயத்தினைத் தழுவியபின் ஐரோப்பியர்களின் நடையுடை பாவனைகளை மேற்கொண்ட இந்தியர்கள் ஆதல் கூடும். இவ்வாறு மதம் மாறியவர்கள் மற்ற சமூகத்தவரைக் காட்டிலும் கல்வி அறிவு-குறைந்தது தொடக்கப் பள்ளிக் கல்வி யாவது - பெற்றவர்களாக உலகின் மற்ற நாடுகளின் மக்களைக் காட்டிலும் முன்னேற்றம் பெற்றவர்களாக உள்ளனர். இவர் களுள் பெரும்பாலோர் நகரங்களிலேயே வாழ்கின்றனர். கிட்டத் தட்டப் பாதியளவிலான எண்ணிக்கையினர் சென்னை நகரில் வாழ்கின்றனர்.''

கணக்கெடுப்பின்போது ஆங்கிலேயர் உடையில் காட்சிதரும் இந்தியக் கிறித்தவர்களும், பறையர்களும் தங்களை யூரேசியர் எனவும், இந்தியர் எனவும் இனத்தை மாற்றிப் பதிந்துள்ளனர். தன்னுடைய தேசிய இனத்தை மறைப்பதனால் அவ்வாறு மறைப்பவர்களுக்குச் சில நன்மைகள் விளைகின்றன என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். செய்தித்தாள் விளம் பரங்களின்படி உறுதிப்படுத்தப்படுவதான ஓர் உண்மையும் எனக்குச் சுட்டிக்காட்டப்பட்டது. ஐரோப்பிய அதிகாரிகளின் மனைவியர் பலரும் யூரேசியச் செவிலியரை விடவும் இந்திய ஆயாக்களையே செவிலியராக வைத்துக் கொள்ள விரும்பினர். சில வணிகர்கள், தங்கள் பணியில் இந்தியக் கிறித்தவர்களுக்குப்

பதிலாக யூரேசிய எழுத்தர்களையே அமர்த்திக்கொள்ள விரும்பினர். எத்தகைய கலப்பும் இல்லாத, ஐரோப்பியப் பெயரும் உடையும் தாங்கிய இந்தியன், தன்னை யூரேசியன் எனக் கூறிக் கொள்வதில் வெற்றி பெற்றவனாக யூரேசியர்களோடு சமமாகக் கருதப்பட்டு ரொட்டி, வெண்ணை, காபி முதலான விலை மிகுந்த உணவு வகைகளைப் பெறும் வாய்ப்பினைப் பெறுகின்றான்.

யூரேசியர் மேற்கொள்ளும் தொழில் பற்றிய சிறப்பான புள்ளி விவரங்கள் எதுவும் திரு ஸ்டுவர்ட் அவர்கள் வைத்திருக்கவில்லை. இவர்களுள் பெரும்பாலோர் எழுத்தர்களாக இருப்பதாகவும், ஒரு சிலரே பயிர்த்தொழிலை மேற்கொண்டவர்களாக உள்ளனர் எனவும் அவர் கூறியுள்ளார். நான் என் ஆய்வினைச் சென்னை நகரில் மேற்கொண்ட போது யூரேசியர்கள் பின்வரும் தொழில்களை மேற்கொண்டவர்களாக இருப்பதாகப் பதிந்துள்ளேன்.

| | |
|---|---|
| கணக்கர் | ஒப்பந்தக்காரர் |
| ரொட்டிக் கடைக்காரர் | செம்புக் கொல்லர் |
| இசைக் குழுவாளர் | உருவரைவர் |
| வரி வசூலிப்பவர் | மின்சாரம் ஓட்டுநர் |
| கருமார் | மின் டிராம் ஆய்வர் |
| தங்கும் விடுதி நடத்துபவர் | அராவுபவர் |
| கப்பல் பணியாளர் | தீயணைப்பவர் |
| கொதிகலக் கொல்லர் | பொருத்துபவர் |
| தச்சர் | சம்மட்டியடிப்பவர் |
| மருந்தாளர் உதவியாளர் | சேணம் செய்பவர் |
| அரசு எழுத்தர் | பொற்கொல்லர் |
| வணிக நிறுவன எழுத்தர் | இணைப்பவர் |
| தரகு முகவர் | அச்சுக் கோப்பவர் |
| மருந்து கலப்பவர் | விவிலிய சமயப்பணியாளர் |

பைத்தியக்கார மருத்துவ மனை உதவியாளர்
துறைமுகப் பாரந்தூக்கியின் உதவியாளர்
ஐஸ் நிலையப் பொறி இயக்குநர்

| | |
|---|---|
| தொழிலாளி | விண்ணப்பம் எழுதுபவர் |
| குதிரை லாயக்காரர் | காவல்துறை ஆய்வர் |
| கம்மியர் | மண்பாண்டம் வனைபவர் |
| வார்ப்படம் செய்பவர் | அச்சக உரிமையாளர் |
| வண்ணம் அடிப்பவர் | பிழைதிருத்தம் செய்பவர். |

இருப்புப்பாதை நிறுவனத்தில்:-

| | |
|---|---|
| கணக்கு ஆய்வாளர் | பயண வண்டி ஆய்வர் |
| பணியாட்குழுத் தலைவர் | செய்தி சேகரிப்பவர் |
| இயந்திரம் ஓட்டுபவர் | ஆணி தறைபவர் |
| பொறியாளர் | பள்ளி ஆசிரியர் |
| சரக்கு நிலைய எழுத்தர் | சுருள் கொல்லர் |
| காப்பாளர் | பாள அச்சுத் தட்டாளர் |
| தொடர்வண்டி ஆய்வர் | தந்தி அலுவலக எழுத்தர் |
| சிப்பப் பகுதி எழுத்தர் | கடிகாரத் தயாரிப்பாளர் |
| குற்றம் சாட்டும் ஆய்வர் | காவல்காரர் |
| பக்கப் பாதைக்கு மாற்றுபவர் | நேரப் பதிவாளர் |
| அடையாள அறிவிப்பாளர் | |
| பயணச் சீட்டுத் தொகுப்பவர் | |
| பகுதி அடையாள அறிவிப்பாளர் | |
| குதிரைத் தளவாடப் பணியாளர் | |
| திருக்கோயில் மணிப்பணியாள் | |

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் 5718 யூரேசியர்கள் தொழில் பற்றிய பின்வரும் புள்ளிவிவரங்கள் தரப்பட்டுள்ளன. இவர்களுள் 4083 பேர் சென்னை நகரிலும் 1149 பேர் மலபாரிலும், 486 பேர் செங்கல்பட்டு மாவட்டத்திலும் வாழ்பவர்கள். இறுதியாகக் குறிக்கப்பட்டுள்ளவர்களில் பெரும்பாலோர் சென்னை நகர எல்லைக்குப் புறத்தே பெரம்பூரில் வாழ்பவர்கள்.

| | தொழில் புரிவோர் எண்ணிக்கை |
|---|---|
| அறக்கட்டளைகளின் உதவி, கல்வி உதவித் தொகை முதலியன பெறுவோர் | 813 |
| ஓய்வு ஊதியம் பெறுவோர் | 438 |

| | |
|---|---|
| இருப்புப்பாதை நிறுவனத்தில் எழுத்தர், நிலைய அலுவலர், காப்பாளர் | 427 |
| தையல்காரர் | 378 |
| வணிகர், கடைக்காரர்களிடம் எழுத்தர் | 297 |
| இருப்புப்பாதைப் போக்குவரத்தில் செயலாற்றுவோர் | 262 |
| ஆசிரியர் | 243 |
| அரசுப் பணியாளர் | 212 |
| தனிப்பட்ட எழுத்தர், பணியாளர் | 211 |
| கம்மியர் (இருப்புப் பாதை நிறுவனம் நீங்கலாக) | 203 |
| தச்சர் | 167 |
| தந்தித் துறை அலுவலர் | 136 |
| மருத்துவத் துறையினர் | 136 |
| சமையல்காரர், துப்புரவாளர் முதலியோர் | 132 |
| அச்சக ஊழியர், பணியாளர் | 106 |
| வாழ்க்கை நடத்தப் போதுமான வருவாய், உள்ளோர் | 75 |
| காப்பாளர், நண்பர், உறவினர் ஆகியோரிடம் உதவித் தொகை பெறுவோர் | 72 |
| பொதுப்பணித்துறை மற்றும் நில அளவீட்டுப் பணியாளர் | 66 |
| காபி தேயிலைத் தோட்ட எழுத்தர், கூலிகள் | 60 |
| பைத்தியகார மருத்துவ மனைகளில் உள்ளோர் | 58 |
| இரயில் நிலையத்தில் சுமை தூக்குவோர் முதலியவர் | 57 |
| இசைக் கலைஞர், நடிகர் | 54 |
| துறைமுகப் பணியாளர் | 50 |
| துப்பாக்கி வண்டித் தொழிற்சாலைப் பணியாளர் | 48 |
| அஞ்சல் துறையினர் | 48 |
| படைப் பிரிவில் பதவி வகிக்காத அலுவலர் | 46 |
| இரவலர் | 45 |
| மருத்துவச்சியர் | 42 |

| | |
|---|---|
| பாதிரிமார், சமய அலுவலர் முதலியோர் | 41 |
| டிராம் வழி அலுவலர் | 35 |
| தோல், எலும்பு விற்பனையாளர், செருப்பு, காலணி செய்வோர் | 33 |
| உள்ளூராட்சி அலுவலகம், நகராட்சி அலுவலகம் | 30 |
| கப்பல் ஏற்று துறை எழுத்தர் முதலியோர் | 29 |
| முகவர், தரகர் | 28 |
| வழக்குரைஞரின் எழுத்தர் | 26 |
| வணிகர், கடைவைத்திருப்போர் | 24 |
| நிலவுடைமையாளர் | 24 |
| கைக்கடிகாரம், கடிகாரம் செய்வோர் | 23 |
| வட்டிக்கடை நடத்துவோர் முதலியோர் | 22 |
| படைப்பணியில் எழுத்தர் | 21 |
| இரும்புக் கொல்லர் | 18 |
| மருந்து கலப்பவர், விற்பவர் | 16 |
| கைதிகள் | 15 |
| வழக்குரைப்போர் | 12 |
| பித்தளை, செம்புக் கொல்லர் | 12 |
| கன்னி மாடத்தில் வசிப்போர் முதலியோர் | 11 |
| கப்பல் அதிகாரிகள் | 10 |
| பரத்தையர் | 10 |
| எழுத்தாளர், பத்திரிக்கையாளர் | 10 |
| குத்தகைக்குப் பயிரிடுவோர் | 8 |
| பொழுது போக்கு நிலைய மேலாளர் முதலியோர் | 8 |
| உணவு விடுதி நடத்துவோர் முதலியோர் | 7 |
| வேறு சிறுபணிகள் பார்ப்போர் | 363 |

யூரேசியர்களினுடைய திருமணங்கள் தொடர்பாக, இரயில்வேயைச் சார்ந்த மதகுரு ஒருவருடைய உதவியோடும், சென்னை நகரத்தில் உள்ள முக்கியான தேவலாயத்தைச் சேர்ந்த மதகுரு ஒருவரின் உதவியோடும் பதிவேடுகளின் சுருக்கமாகத் திரட்டிய பின்வரும் புள்ளிவிவரங்களைத் தருகிறேன். அவற்றுள் 'க' என்பது மணமகனையும் 'ம' என்பது மணப்பெண்ணையும்

'வி' என்பது கணவனையோ மனைவியையோ இழந்தபின் மறுமணம் செய்து கொள்பவர்களையும் குறிக்கும்

(அ) இரயில்வே

| க | ம | க | ம | க | ம |
|---|---|---|---|---|---|
| 25 | 18 | 34 | 19 | 24 | 18 |
| 21 | 15 | 27 | 16 | 35 | 21 |
| 24 | 19 | 20 | 21 | 24 | 9 |
| 21 | 14 | 22 | 18 | 22 | 18 |
| 22 | 19 | 25 | 16 | 21 | 20 |
| 23 | 17 | 22 | 18 | 32 | 19 |
| 23 | 14 | 25 | 16 | 26 | 21 |
| 23 | 18 | 23 | 21 | 25 | 18 |
| 25 | 16 | வி42 | 18 | 33 | 19 |
| வி45 | 19 | 37 | 28 | 20 | 15 |
| 25 | 23 | 25 | 19 | 25 | 18 |
| 24 | 17 | 24 | 17 | 24 | 20 |
| 22 | 17 | 26 | 16 | 32 | 19 |
| வி42 | 18 | 24 | 19 | 27 | 18 |
| 40 | 16 | 23 | 18 | | |
| 23 | 22 | 23 | 15 | | |

(ஆ) சென்னை நகரம்

| க | ம | க | ம | க | ம |
|---|---|---|---|---|---|
| 33 | 26 | 28 | 19 | 27 | 18 |
| வி40 | 18 | 29 | 10 | வி39 | 19 |
| 23 | 26 | 23 | 21 | 27 | 31 |
| 23 | 23 | 26 | 21 | 23 | 14 |
| 25 | 21 | 22 | 18 | 33 | 24 |
| 29 | வி24 | 25 | 17 | 25 | 18 |
| 31 | 19 | 28 | வி35 | 25 | 18 |
| 28 | 25 | 24 | 18 | 21 | 19 |
| 26 | 17 | 26 | 19 | 24 | 20 |

| க | ம | க | ம | க | ம |
|---|---|---|---|---|---|
| 23 | 15 | 32 | 26 | 26 | 19 |
| 23 | 18 | 26 | 18 | வி46 | வி39 |
| 23 | 19 | 27 | 18 | 23 | 23 |
| 30 | 24 | 25 | 21 | 22 | 20 |
| வி38 | 17 | 23 | 16 | 32 | 17 |
| 21 | 17 | 27 | 19 | 21 | 16 |
| 26 | 21 | 40 | 16 | 21 | வி30 |
| வி53 | வி43 | 28 | 15 | வி40 | 17 |
| 28 | 20 | 31 | 24 | 25 | 24 |
| 29 | 21 | 27 | 25 | 30 | 20 |
| வி43 | வி36 | 43 | 17 | வி43 | 23 |
| 20 | 16 | 24 | வி30 | 28 | 18 |
| 25 | 18 | வி42 | வி34 | | |

மறுமணம் செய்து கொண்டவர்களை நீக்கிவிட்டு இப் புள்ளி விவரங்களை நாம் பகுத்து ஆராயும் போது பின்வரும் முடிவுகள் கிடைக்கப் பெறுகிறோம்.

(அ) இரயில்வே

| | மணமகன் | மணமகள் |
|---|---|---|
| சராசரி வயது | 25 - 26 | 18 - 19 |
| சராசரிக்கு மேற்பட்ட இடைநிலை | 28 - 29 | 19 - 20 |
| சராசரிக்குக் கீழான இடைநிலை | 23 - 24 | 16 - 17 |
| வயது வீச்சு | 40 - 20 | 28 - 14 |

(ஆ) சென்னை நகரம்

| | மணமகன் | மணமகள் |
|---|---|---|
| சராசரி வயது | 26 - 27 | 19 - 20 |
| சராசரிக்கு மேற்பட்ட இடைநிலை | 28 - 29 | 21 - 22 |
| சராசரிக்குக் கீழான இடைநிலை | 23 - 24 | 17 - 18 |
| வயது வீச்சு | 40 - 20 | 31 - 14 |

சென்னையைச் சேர்ந்த 21 வயது முதல் 50 வயது வரை உள்ளவர்களான சராசரி 35 வயதுடைய நூறு ஆண்கள் பற்றிய மண வாழ்க்கை தொடர்பாக நான் கேட்டறிந்த விவரங்களைப் பகுத்து ஆராய்ந்ததில் நான் கண்ட உண்மைகள் வருமாறு. அவர்களுள் 74 பேர் மணமானவர்கள். சராசரியாக 25 வயதுடைய 26 பேர் மணம் ஆகாதவர்கள். மணம் முடித்துக் கொண்ட சமயத்தில் அவர்களுடைய வயது வரம்புகள் 32-க்கும் 16-க்கும் உட்பட்டனவாக இருந்தன. அவர்களுடைய மனைவியரின் வயது வரம்புகள் 25-க்கும் 13-க்கும் உட்பட்டன. ஒரு சோடி மணமக்களுக்குப் பிறந்துள்ள அதிக எண்ணிக்கையிலான குழந்தைகள் 10. எழுபத்திநான்கு பேர்களில் மூவரே மகப்பேறு இல்லாதவர்கள். சராசரி வயது 34-ஐ உடைய ஐம்பது பேரை ஆராய்ந்ததில் அவர்களுக்குப் பிறந்த குழந்தைகள் 207. அவற்றுள் 91 குழந்தைகள் இளமைப் பருவத்திலேயே காய்ச்சல் முதலிய காரணங்களால் இறந்து போயின.

யூரேசியருடைய குருதியில் கலந்துள்ள கறுப்பினக் குருதியின் விகிதத்தை வெள்ளையர் நீக்ரோக்கள் ஆகியோரிடையே ஏற்படும் கலப்பின் அளவைப் போல முலட்டோ, கவாட்ரூன், ஆக்டோரூன், சாம்போ என்ற அளவுகளால் குறிப்பிடாமல் ரூபாயினுடைய விகிதாசாரத்தை அடிப்படையாகக் கொண்டே குறிப்பிடுகின்றனர். குருதிக் கலப்பில்லாத தூய ஐரோப்பியன் ரூ 0-0-0. குருதிக் கலப்பில்லாத தூய இந்தியன் ரூ. 1-0-0 (அதாவது 16 அணா). கலப்பின் தன்மை இந்த அடிப்படையில் நிறத்தையும் மற்ற ஆய்வுகளையும் அடிப்படையாகக் கொண்டு கணிக்கப்படும். கறுப்புக் குருதியின் லேசான கலப்பு முதல், கிட்டத்தட்ட ஐரோப்பியப் பாங்கை நெருங்குவதாக இதன் கலப்பளவு கொள்ளப்படும். எட்டணாக் கலப்பு பாதி கறுப்புக் குருதி, பாதி வெள்ளையன் குருதி என்ற வகையினது. பதினைந்து அணாக் கலப்பு கறுப்பு இனத்தவன் குருதி மேலோங்கிக் கிட்டத்தட்ட இந்தியனாகி விட்ட நிலை என்பது போலக் கணக்கிடப்படும்.

யூரேசியர்கள் சட்டை அணிந்தவர்களாக இருப்பதால் என் முன் மனித இன இயல் தொடர்பான அளவுகளை எடுக்கச் சட்டையினைக் கழற்றியவர்களாக வந்தபோதுதான் இந்த

வகுப்பாரிடையே ஆண்கள் பச்சைக் குத்திக் கொள்ளும் வழக்கம் பேரளவினதாக உள்ளது என்பதனை அறிந்து கொண்டேன் நான் ஆய்வினை மேற்கொண்ட தாழ்ந்த பிரிவினரான நூற்றி முப்பது ஆண்களில் கிட்டத்தட்ட அனைவருமே மார்பு, கை, முன் கை, மணிக்கட்டு, பின் கை, தோள்ப் பட்டை ஆகியவற்றில் சிறிய அளவிலோ அல்லது பேரளவிலோ பச்சைக் குத்திக் கொண்டிருந்தனர். நீலம் அல்லது சிவப்பு நிறத்தில் அவர்கள் உடம்பில் கண்டனவாக நான் என் ஆய்வேட்டில் குறித்துள்ள உருவங்களின் விவரங்கள் வருமாறு:–

நங்கூரம்
கொடி, நட்சத்திரங்கள், பட்டைகள் ஆகியவற்றோடு கூடிய நடனமாடும் பெண்
மணிக்கட்டுக்களைச் சுற்றி வளையல்கள்
குடை பிடித்தவளாகப் போகும் பர்மியப் பெண்
பறவை
ஊது கொம்பு
வழக்கமான கலைத் தொழிலுக்கான கருவிகள்
சிலுவையும் நங்கூரமும்
முடியும் (கிரீடம்) கொடிகளும்
எதிரெதிரான வாள்களும் கைத்துப்பாக்கிகளும்
நாட்டிய மங்கை
நாகங்களோடு விளையாடும் நாட்டிய மங்கை
யானை
மரஞ்செடி கொடிகள்
தொட்டியில் உள்ள மலர்கள்
இதயத்தின் நடுவே இணைந்த கரங்கள்
இணைந்தனவாக ஒரு மலரைப் பற்றியுள்ள கரங்கள்
இதயம்.
இதயமும் சிலுவையும்
பூவளையங்கள் அல்லது இதயத்தில் தங்கள் பெயரின் தலை எழுத்துக்கள் அல்லது நண்பர்கள், உறவினர்கள் காதலியர் ஆகியோர் தலை எழுத்துக்கள்
பல்லி

'இரக்கம்' என்ற சொல் இடது மார்பில்
நீர் அர மங்கை
காதலன் காதலி ஆகியோர் உருவப் படங்கள்
அரசி அலெக்சாண்டிரிய
அரசின் படைக்கலச் சின்னங்களும் கொடிகளும்
நீரில் செல்லும் படகு
தேள்
நீராவிக் கப்பல்
சாலமனின் முத்திரை
சுவஸ்திக் சின்னம் (பௌத்தர்களின் அடையாள முத்திரை)
வாட்டேயூ இடைர்சி

விரிவான வடிவங்களிலான பச்சைகுத்தும் பணியினைப் பர்மிய பச்சை குத்துபவர்கள் செய்துள்ளனர். தங்களுடைய பெயருக்கும், குடும்பப் பெயருக்குமான தலை எழுத்துக்களையே பெரும்பாலோர் உடம்பில் பச்சைகுத்திக் கொண்டிருந்தனர். இவை பொதுவாக ரோமன் எழுத்து வடிவிலேயே குத்தப் பட்டிருந்தாலும், ஒரு சிலர் தமிழ் எழுத்து வடிவினையும் பயன் படுத்தி இருந்தனர்.

யூரேசியர்களின் உடல் நிறம் பல படித்தாக உள்ளது. பழுப்பும் மஞ்சளுமாகிய நிறம் தொடங்கி வெளிறிய வெள்ளை நிறம்வரையான பல சாயல்கள் கொண்ட இவர்களுள், இளஞ் சிவப்பு வண்ணம் வாய்க்கப் பெற்றவர்களும் ஓரிருவர் காணப் பட்டனர். நான் பார்த்த வரையில் அனைவரும் ஒரே சீராகக் கறுத்த தலைமுடி கொண்டவர்களே. விழிப் படலத்தின் நிறம் தோலின் நிறத்தினைப்' போல வண்ண வேறுபாடுகள் கொண்ட தாயிருந்தது. நல்ல கறுப்பிலிருந்து மங்கலான கறுப்பு வரையான நிறங்களை அவை பெற்றிருப்பினும் கறுப்புக் கறை படிந்தன போன்ற வண்ணம் உடையனவே மிகுதியாக உள்ளன. ஒருவன் மட்டும் நீல விழிப் படலம் உடையவனாய் இருந்தான்.

ஐரோப்பியர்களைவிட யூரேசியர்கள் வெயிலைத் தாங்கும் ஆற்றல் உடையவர்கள். இவர்களுள் பலர் சோலா தொப்பிகளை அணிந்தவர்களாயிருப்பினும், அவ்வப்போது நடுப்பகல் நேரத்

தில் வெறும் தலைக் குல்லாய் மட்டும் அணிந்து திரிபவர்களையும் காணலாம்.

சென்னையில் நான் அளவெடுத்த 130 பேர்களின் சராசரி உயரம் 166.6. செ.மீ. (5அடி 5 அங்குலம்). இந்த அள வினை ஆங்கிலேயர் மற்றும் சென்னையைச் சேர்ந்த பிற வகுப் பாருடைய உயரங்களுடன் கீழே ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

| | செ. மீ | | செ. மீ |
|---|---|---|---|
| ஆங்கிலேயர் | 170. 8 | பள்ளியர் | 162. 5 |
| யூரேசியர் | 166. 6 | வேளாளர் | 162. 4 |
| முகமதியர் | 164. 5 | பறையர் | 161. 9 |
| பிராமணர் | 152. 5 | | |

இவர்களுடைய உயரம் கலப்பினத்திற்குரியதாய் தந்தையர்க ளான ஐரோப்பியர் மற்றும் இந்தியர்களின் சராசரியாக அமைந் துள்ளது. நான் அளவெடுத்தவர்களுள் அளவு வீச்சின் வேறு பாடு 30. 8 செ. மீ. ஆக உள்ளது. மிக உயரமானவன் 183. 8 செ. மீ. (ஆறடி) ரும், உயரங்குறைந்தவன் 153 செ. மீ (ஐந்தடி) ரும் உடையவனாக இருந்தான்.

இவர்களின் தலையின் சராசரி நீளம் 18.6 செ. மீ. அகலம் 14. 1 செ. மீ. அளவெடுக்கப்பட்டவர்களில் 63 விழுக் காட்டினர் 14 செ. மீ. க்கும் மேற்பட்ட தலை அகலம் உடைய வர்களாக இருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. தலையின் அளவு தொடர்பான சில புள்ளி விவரங்கள் வருமாறு:-

| | நீளம் செ. மீ | அகலம் செ. மீ | தகவு அளவு எண் |
|---|---|---|---|
| பிராமணர் | 18. 6 | 14. 2 | 76. 5 |
| யூரேசியர் | 18. 6 | 14. 1 | 76 |
| முகமதியர் | 18. 7 | 13. 9 | 76. 1 |
| வேளாளர் | 18. 6 | 13. 8 | 74. 1 |
| பறையர் | 18. 6 | 13. 7 | 73. 6 |
| பள்ளியர் | 18. 6 | 13. 6 | 73 |

மேலே உள்ள ஆறு வகுப்புகளையும் சேர்ந்த நாற்பது பேர்களினுடைய தலையின் அகலங்கள் தொடர்பான கீழ்வரும் பட்டியல் யூரேசியர்களும், பிராமணர்களும், ஓரளவிற்கு முகமதியர்களும் 14 செ. மீ. மேற்பட்ட தலை அகலம் உடையவர்களாக உள்ளனர் என்பதனைத் தெளிவுபடுத்தும்.

| | 12-13 செ. மீ | 13-14 செ.மீ | 14-15 செ.மீ | 15-16 செ.மீ |
|---|---|---|---|---|
| யூரேசியர் | – | 11 | 27 | 2 |
| பிராமணர் | 1 | 9 | 27 | 3 |
| முகமதியர் | 2 | 17 | 21 | – |
| வேளாளர் | – | 24 | 16 | – |
| பறையர் | – | 27 | 13 | – |
| பள்ளியர் | 3 | 30 | 7 | – |

கலப்பினத்தவர்களின் தலை அமைப்புப் பொதுவாகத் தந்தையின் தலை அமைப்பினைச் சார்ந்தே இருக்கும் எனச் சொல்லப்படுகிறது. யூரேசியர்களின் தலையின் அகலம் ஐரோப்பிய ஆண்களின் செல்வாக்கின் தாக்கம் உடையதாக இருக்கிறது. இதனைக் கீழ்வரும் ஆங்கிலேய ஆண்களுக்கும் யூரேசியப் பெண்களுக்கும் பிறந்த கலப்பினத்தவர் தலை அளவுகள் தெளிவுபடுத்துவனவாம்.

| நீளம் செ. மீ | அகலம் செ. மீ |
|---|---|
| 19 | 14. 5 |
| 18. 4 | 14. 2 |
| 19. 2 | 14. 2 |
| 20 | 14. 6 |
| 19 | 14. 6 |
| 19. 4 | 14. 3 |

| | நீளம் செ. மீ | அகலம் செ. மீ |
|---|---|---|
| இவற்றின் சராசரி | 19.2 | 14. 4 |
| யூரேசியரின் சராசரி | 18.6 | 14. 1 |

மனித இன இயல் ஆய்வினை இந்தியாவில் மேற்கொண்ட ஆய்வாளர்கள் இனம், குடி, குலம் ஆகியவற்றின் இடையே உள்ள வேறுபாடுகளையும் பெற்றோர் யார் என்பதனையும் கணித்து அறிவதில் மூக்கின் இயல்பு முக்கியமானதொரு பங்கு பெறு கின்றது என்பதனைத் தெளிவாக உணர்ந்தவர்களாவர். "இன இயல் தொடர்பான நூல்களை மேற்போக்காகப் பார்ப்பவர்கள், அதிலும் குறிப்பாக ஆரியர்களின் வருகை பற்றிய வேதங்கள் கூறும் விவரங்களைப் படிப்பவர்கள், இந்தியச் சமவெளியில் அவர்கள் வந்து புகுந்தபோது வாழ்ந்த மக்களின் மூக்குப் பற்றியதான மிகுதியான குறிப்புகள் பற்றி வியப்படையாது இருக்க முடியாது, தங்கள் பகைவர்களின் மூக்கின் குறைபாட்டினால் வியப்புக்கு உள்ளான அவர்கள் பல இடங்களில் அவர்களை மூக்கற்ற வர்கள் என்றே குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். முனைவர் காலிங்னோன் உடல் வாகினையும் தலையின் தகவு அளவு விகிதத்தினையும் காட்டிலும் மூக்கின் தகவு அளவு விகிதமே இன இயல் ஆய்வில் முக்கியமான கூறாக விளங்கப் போகின்றது எனக் கூறியுள்ளதை உறுதி செய்வதாக உள்ளது ஆரியர்களினுடைய மூக்குப் பற்றியதான இந்த நுண்ணிய முன்னுணர்வு எனலாம்" எனத் திரு ரிஸ்லெ எழுதியுள்ளார்.*

ஒவ்வொரு வகுப்பையும் சேர்ந்த நாற்பது பேரினை அளந்து அறிந்து பெற்ற கீழ்க்கண்ட அட்டவணையில் உள்ள மூக்கின் தகவு அளவு விகித எண்கள் யூரேசியர்களும், முகமதியர்களும், வேளாளர்களும் 60 முதல் 70 வரையான தகவு அளவினை உடைய நீண்ட மூக்கினை உடையவர்கள் என்பதனைத் தெளிவு படுத்துவதால் இது பற்றி நான் கருத்து ஏதும் கூறப் போவ தில்லை:-

| | 60-70 | 70-80 | 80-90 | 99-100 |
|---|---|---|---|---|
| யூரேசியர் | 19 | 17 | 3 | 1 |
| முகமதியர் | 17 | 18 | 4 | 1 |

* இன இயல் கழகத்தின் ஆய்விதழ், 20,1891. (Journ. Anth. Inst. XX, 1891.)

| | | | | |
|---|---|---|---|---|
| வேளாளர் | 14 | 22 | 3 | 1 |
| பள்ளியர் | 3 | 25 | 9 | 3 |
| பறையர் | 2 | 17 | 19 | 2 |

அடுத்து நான் மேற்குக் கடற்கரை சார்ந்த யூரேசியர்களைப் பற்றிய செய்திகளைக் கூறப் போகிறேன். மலபார் மாவட்டத்தின் தலைநகரான கள்ளிக்கோட்டைக்கு நான் சென்றிருந்த சமயம் ஐரோப்பாவிலிருந்து இந்தியாவிற்குக் கடல் வழியினைக் கண்டுபிடித்து, வாஸ்கோட காமா கள்ளிக்கோட்டையில் வந்து இறங்கிய நானூறாவது ஆண்டு நிகழ்ச்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. போர்த்துகீசிய இந்தியக் கலப்பினம் பற்றிக் நான் அறிந்த விவரங்களிலிருந்து தெரிய வருவனப் பற்றிக் கூறுகின்றேன். அல்புகியூர்க்யூ கோவாவை மீண்டும் கைப்பற்றிய பின், போர்த்துகீசியரை அங்கிருந்து முதலில் விரட்டியபோது அவன் தான் கைப்பற்றிய பெண்களைத் திரும்பத் தன்னுடன் அழைத்து வந்தான். துறைமுகத்தில் நிலைமை ஓரளவு கட்டுப்பாட்டுக்குள் வந்தவுடன் அவன் அவர்களைக் கிறித்தவர்களாக மதம் மாற்றிப் போர்த்துகீசியருக்கு மணம் முடித்து வைத்தான். 450-க்கும் மேற்பட்ட அவனுடைய படைவீரர்கள் இவ்வாறு மணம் புரிந்து கொண்டனர். அவர்களைப் போலவே மணம் செய்து கொள்ள விரும்பிய மற்ற போர்த்துகீசியருக்குப் பெண்களைத் தேடித் தருவது அல்புகியூர்க்யூவுக்குப் பெரும்பாடாகி விட்டது. போர்த்துகீசிய ஆண்கள் இந்தியப் பெண்களை மணக்கத் தாம் மானுவல் முன்பே அனுமதி வழங்கி இருந்தாலும் நல்ல ஒழுக்கமுடைய திறமையாகப் பணியாற்றியவர்களுக்கே இத்தகைய வாய்ப்புகள் நல்கப்பட்டன. அல்புகியூர்க்யூ தனக்கு அளிக்கப் பட்டிருந்த அதிகார வரம்பிற்கு மேலாகவே இத்தகைய அனுமதிகளை வழங்கினாலும், அவ்வாறு போர்த்துகீசியருக்கு மணம் செய்விக்கப்படும் பெண்கள் அந்தப் பகுதியில் செல்வாக்குடைய பெரிய மனிதர்களின் பெண்களாகவே இருக்கும்படி பார்த்துக் கொண்டார். அத்தகையவர்களைக் கிறித்தவர்களாக மதம் மாற்றும் நோக்கத்துடனேயே அவர் அவ்வாறான நடவடிக்கை

* டான்வெர்ஸ், இந்தியாவில் போர்த்துகீசியர், 1894. (Danvers, The Portuguese in India, 1894.)

களில் ஈடுபட்டார். திருமணம் செய்து வைக்கப்பட்டவர்கள் இல்லற வாழ்வைத் தொடங்க உதவியாக அவர்களுக்கு அல்புகியூர்க்யூ நிலமும், வீடும், கால்நடைகளும் கொடுத்து உதவினார். முகமதியர்களின் மசூதிகளுக்கும், இந்துக்களின் கோயில்களுக்கும் சொந்தமாக இருந்த நிலங்கள் பறிக்கப்பட்டு அவை சண்டகாத்தெரினாவிற்காகக் கட்டப்பட்ட தேவாலயங்களுக்கு வழங்கப்பட்டன.

கள்ளிக்கோட்டையில் உள்ள யூரேசியர் சமூகத்தைச் சேர்ந்த சிலருடைய பெயர்கள், 1500-இல் கள்ளிக்கோட்டை துறைமுகத்திற்கு வந்து சேர்ந்து கொச்சியில் தொழிற்சாலை நிறுவிய பெட்ரோ அல்வரெஸ் கபெரல், முதல் போர்த்துகீசிய ஆளுநரான தாம் பிரான்சிஸ்கோ தெ ஆல்மெய்டா, கள்ளிக்கோட்டை அரசரோடு ஒப்பந்தம் ஒன்று செய்துகொண்ட ஆந்த்ரே புர்டடோ தெமெண்டோன்கா போன்ற அருஞ்செயல்புரிந்த போர்த்துகீசிய சுவடியகங்களில் காக்கப்பட்டுள்ள தீரர்களின் பெயர்களை நமது நினைவுக்குக்கொண்டு வருகின்றன. போர்த்துகீசியப் பெயர்களை இன்றும் பலர் வைத்துக் கொண்டிருந்தாலும் அவர்களுடைய குருதி போர்த்துகீசியக் குருதிக் கலப்புடையதென்று கூறுவதற்கில்லை. இவர்களுள் சிலர் கிறித்தவ சமயம் சார்ந்த இந்தியர்களின் சந்ததியினராகவோ போர்த்துகீசிய படைத்தலைவர்களின் இல்லங்களில் பணிபுரிந்த வேலைக்காரர்களின் சந்ததியினராகவோ உள்ளனர்."மலபாரில் ஐரோப்பிய வாழ்க்கை முறையை மேற்கொண்டுள்ள இந்தியக் கிறித்தவர்களில் கோவா ரோமன் கத்தோலிக்கர் சிலர் ஐரோப்பியர் நடையுடை பாவனைகளை மேற்கொண்டிருப்பதால் மாவட்டம் முழுவதிலும் யூரேசியன் என்ற சொல் கண்டிப்பான வரையறைக்கு உட்படாததாகவே வழங்கப்பட்டு வருகிறது. ஐரோப்பியர் ஆடைகளை அணிந்து கொண்டுள்ள பறையர்களும் இந்தியக் கிறித்துவர்களும் யூரேசியர் எனப் பதிந்து கொள்ள அனுமதி வழங்கப்பட்டால் அவ்வாறே பதிந்து கொள்ள முன்வருவர்" என 1881 கணக்கெடுப்பு ஆணையர் எழுதியுள்ளார்.

கள்ளிக்கோட்டையில் யூரேசியர்களுக்கும், கிழக்கிந்தியர்களுக்கும் இடையே சமூக வேறுபாடு பாராட்டப்படுகின்றது.

இந்த வேறுபாட்டிற்கிடையே உள்ள அடிப்படையினைப் புரிந்து கொள்ள நான் என் மொழிபெயர்ப்பாளரை விளக்கம் தருமாறு வேண்டினேன். அதற்கு மார்க் ட்வைன் உடைய எழுத்தோ என்று ஐயறத்தக்க வகையில் அவர் தந்துள்ள இந்தோ ஆங்கில மொழியிலான விளக்கத்தைக் கீழே அப்படியே தந்துள்ளேன்.

"இந்தியாவில் எதாவது ஒரு இடத்தில் ஐரோப்பியத் தந்தைக்கும், இந்தியத் தாய்க்கும் பிறந்த, தாங்கள் இந்தியத் தாய் தந்தையருக்குத்தான் பிறந்தவர்கள் எனச் சந்தேகத்திற்கு இடமின்றி நிருபிக்க இயலாத, தாயும் தந்தையும் ஒரே இனத்தைச் சாராதவர்களுக்குப் பிறந்த ஐரோப்பியர்களுக்கு அடுத்த நிலையில் வைத்து மதிக்கப்படுபவர்களே யூரேசியர்.

''கிழக்கிந்தியர் கீழைநாடுகளைச் சேர்ந்த கிறித்தவர்களுடைய சந்ததியினர் ஆவர். இவர்கள் சில சமயங்களில் யூரேசியர்களுடைய பிள்ளைகளைத் தங்களுடைய பெண்களுக்கு மணம் முடிக்கத் தேடிப் பிடிப்பர். இதனால் இவர்கள் கிழக்கு இந்தியர் என அழைக்கப்படுகின்றனர்.

''இந்தியக் கிறித்தவர்கள் எனப்படுவோர் கிறித்தவ சமயத்தைத் தழுவிய இந்துக்கள். இவ்வாறு மதம் மாறும் இந்துக்கள் இரண்டாவது ஞானஸ்நானம் செய்விக்கப்பட்டு இந்தியக் கிறித்துவர்கள் என அழைக்கப்படுகின்றனர்.

''கடற்கரை சார்ந்தவன். கடற்கரை சார்ந்தவன் என்ற பெயர் கடற்கரை உடைய ஒரு நாட்டிலிருந்து கடற்கரைப் பகுதி இல்லாத ஒரு நாட்டிற்கு வந்து சேர்ந்திருப்பவனை அழைப்பதற்கான நயமில்லாத பெயராகும்.''

பொதுவாகக் கூறப்போனால் யூரேசியர்கள் நல்ல உடல் வாகும் கிழக்கிந்தியரைவிட நல்ல நிறமும் வாய்க்கப் பெற்றவர்கள். கிழக்கிந்தியர்கள் இந்தியக் கிறித்துவப் பெண்களோடு மண உறவு கொள்வதால் மீண்டும் இந்தியர்களைப் போன்ற உடல் வாகினையே பெற்று விளங்குகின்றவராகின்றனர்.

நான் கள்ளிக்கோட்டையில் ஆய்வினை மேற்கொண்டவர்களான யூரேசியர்கள் பின்வரும் தொழில்களை மேற்கொண்டவர்களாக உள்ளனர். இவர்களுள் பெரும்பாலோர் ரோமன் கத்தோலிக்கராவர்.

| | |
|---|---|
| இசைக்குழுவாளர் | நகராட்சி ஆய்வர் |
| செருப்புத் தைப்பவர் | இசை வாணர் |
| எக்காளம் ஊதுபவர் | விண்ணப்பம் எழுதுபவர் |
| தச்சர் | காவலர் |
| எழுத்தர் | |
| காபித் தோட்ட எழுத்தர் | பள்ளி ஆசிரியர் |
| அச்சுக் கோப்பவர் | தையல்காரர் |
| படி எடுப்பவர் | தகரக்கொல்லர் |
| கம்மியர் | நெசவாளர் |
| இரயில்வண்டிப் பாதுகாவலர் | |

சென்னையைப் போலவே மலபாரிலும் இந்தச் சமூகத்தைச் சேர்ந்த ஆண்களிடையே பச்சை குத்திக் கொள்ளும் பழக்கம் பெரும் அளவினதாக உள்ளது. சமயத் தொடர்பான சின்னங்களையும் பாம்புகளையுமே இவர்கள் மிகுதியும் பச்சைகுத்திக் கொள்கின்றனர். பின்வரும் வடிவங்கள் பச்சை குத்தப்பட்டிருப்பதாக என் குறிப்பேடுகள் காட்டுகின்றன.

| | |
|---|---|
| மணிக்கட்டில் வளையல் | சிலுவை |
| பரிசுத்தப் பேயான பறவை | படகு |
| இயேசுவின் சிலுவை ஏற்றம் | மீன் |
| தேவாலயத் தேறல் சிண்ணம் | கொடிகள் |
| சிலுவையும் கிரீடமும் | ஏணி |
| சிலுவையும் இதயமும் | தூய நெஞ்சம் |
| சிலுவையும் ஐ. என். ஆர். ஐயும் | நீராவிக் கப்பல் |
| குறுக்காகவுள்ள வாள்கள் | சாலமனின் முத்திரை |
| இலைகளும் மலர்களும் | தலை எழுத்துக்கள் |
| வடிவியல் சார்ந்த வழக்கமான வரைவுகள் | |
| முன்கையில் வட்டமிட்டுச் சுருண்டு கிடக்கும் பாம்பு | |
| முன்கையைச் சுற்றிப் பாம்பு | |

வடக்கு மலபாரில் ஐரோப்பியத் தந்தையருக்குப் பிறந்த பலர் உள்ளனர். 1887–இல் தியர் சாதியைப்பற்றி எழுதும் போது* திரு லோகன் கூறுவது வருமாறு:- "இவர்கள் சாதிப் பெண்கள் ஐரோப்பியர்களோடு தொடர்புகொண்டு வாழ்வார்களாயின் சாதி விலக்கு செய்யப்படுவதில்லை. இதனால் இச் சாதியில் ஐரோப்பியக் குருதி கலப்பு மிகுதியும் ஏற்பட்டுள்ளது. இதனால் இச்சாதி உலகியல் தொடர்பானவற்றில் சமுதாய மேம்பாடும் உற்றுள்ளது. தோற்றத்தில் சில பெண்கள் ஐரோப்பிய பெண்களைப் போலவே அழகுடையவர்களாகவும் உள்ளனர்." இது பற்றி 1894-இல் மலபார் திருமணக் குழு சமர்ப்பித்த அறிக்கையில், "ஆங்கிலேயரின் ஆட்சியின் தொடக்க காலத்தில் தியர் சாதிப் பெண்கள் ஐரோப்பியரோடு உறவு கொண்டதால் எத்தகைய பழிப்புக்கும் உள்ளாகவில்லை. சென்ற தலைமுறை வரை சூத்திர சாதியைச் சேர்ந்த ஒருத்தி தன் பிராமண சாதிக் காதலனைப் பற்றிப் பெருமை பாராட்டிக் கொண்டுள்ளாள். தற்போது அதுபோலத் தியர் சாதிப் பெண் ஆட்சியில் உள்ள வெள்ளைக்காரனோடு தான் கொண்டுள்ள உறவால் அடைந்துள்ள பல நலங்களைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொள்கிறாள். கல்வியில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் காரணமாகவும், பொதுமக்களிடையே தோன்றியுள்ள விழிப்புணர்ச்சி காரணமாகவும் இந்த இரண்டு சாதிகளும் முழுதும் கெட்டுக்குட்டி சுவராகப் போய்விடாமல் காக்கப்பட்டுவிட்டன."

நீலகிரி மலையில் உள்ள உதகமண்டலத்துக்கு நான் சென்றிருந்தபோது லாரன்ஸ் காப்பகத்தில் உள்ள வளர்ந்த சிறுவர்களின் உடல் வாகினை ஆராயும் வாய்ப்பினைப் பெற்றேன். இந்த லாரான்ஸ் காப்பகம், "மேன்மை தாங்கிய அரசியாரின் படையில் பணிபுரியும் அதிகாரிகள், படைவீரர்களான ஐரோப்பியர், இந்தியர், மற்றும் மருத்துவப் பணி சார்ந்த ஐரோப்பிய கிழக்கிந்தியப் படைப் பிரிவையும் பொது நலத் துறையையும் சார்ந்த சென்னை மாநில எல்லையில் பணி

---

* மலபார் மாவட்டக் கையேடு. (Manual of Malabar.)

புரிபவர்கள் ஆகியோரின் குழந்தைகளுக்குக் கோடை வெப்பத்திலிருந்து காப்பகமாக அமையவும், படையாளர்குடியிருப்பில் வாழ்வதால் நலங்கெடுவதற்கானவாய்ப்பிலிருந்து அவர்களைக் காத்து நல்ல வாழ்க்கைக்குப் பயன்படுவதும் சமய உணர்ச்சி ஊட்டக் கூடியதுமான கல்வியை அளிப்பதும், அவர்கள் பல்வேறு தொழில், வணிகம், பணித்துறை ஆகியவைகளை மேற்கொள்ளப் பயிற்சி அளிப்பதுமான நோக்கத்தோடு நிறுவப்பட்டதாகும்." அங்கு முப்பத்திமூன்று யூரேசியச் சிறுவர்களை ஆராய்ந்த நான் அவர்கள் மிக நல்ல உடற்கட்டு வாய்க்கப் பெற்றவர்களாக உள்ளனர் என உறுதி கூறுவேன்.* சராசரியாக 58° மேற்படாத நல்ல கால நிலையும் தரமான உணவும் போதுமான உடற்பயிற்சியும் நல்ல ஊட்டம் பெற்றவர்களாகத் தசைவலிமை கொண்ட மார்பு, தோள், உடல் எடை கொண்ட இளைஞர் குழுவினை உருவாக்கியுள்ளது.

ஐரோப்பியர்களையும் யூரேசியர்களையும் வேறுபடுத்திக் காட்டும் நோய்கள் சிலவற்றினுக்கு ஆட்படும் போக்கினைப் பற்றிக் கொஞ்சம் கூற வேண்டுவது இன்றியமையாதது எனக் கருதுகிறேன். 1891 கணக்கெடுப்பு ஆணையர் யூரேசியருக்குப் பைத்தியம் பிடித்தலுக்கும் தொழுநோய்க்கு ஆட்படுதலுக்கும் வாய்ப்பு அதிகம் உள்ளது எனக் கூறியுள்ளார். இதனோடு யானைக்கால் வியாதியையும் சேர்த்துக் கொள்ளலாம். இது பற்றிச் சர்ஜன் மேஜர் ஜெ. மைட்லண்ட் எழுதுவதாவது†:- "யானைக்கால் வியாதி பற்றி எழுதியுள்ள பலரும் வெள்ளையரைவிடக் கறுப்பர்களுக்கே இந்த நோய்க்கு ஆளாக வாய்ப்பு அதிகம் எனக் கூறியுள்ளனர். அதனை அப்படியே ஏற்றுக் கொள்ளுதல் இயலாததாகின்றது. குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட பகுதிகளில் பரவும் இயல்புடைய இந்த நோய், எந்தெந்த நாடுகளில் காணப்படுகின்றதோ அங்கெல்லாம் இந்த நோயால் பாதிக்கப்படும் கறுப்பர்களின் விழுக்காடு வெள்ளையர்களின்

---

* பார்க்க: சென்னை அருங்காட்சியக மடல் 11, 2 அட்டவணை 26, 1898. (See Madras Museum Bulletin 11,2. Table,XXVI, 1898.)

† யானைக்காலும் அதனோடு தொடர்புடைய குறைபாடுகளும், சென்னை, 1891. (Elephantiasis and allied disorders, Madras, 1891.)

விழுக்காட்டினைவிட மிகுதியாக உள்ளது. முன்னவர்களின் பழக்க வழக்கங்கள் அவர்களை எளிதில் இந்த நோயினுக்கு ஆட்படுத்தக் கூடியனவாக உள்ளன என்பதனையும் இங்கு நினைவில் கொள்ள வேண்டும். வெள்ளையரில் பெரும்பாலனவர்கள் மிகுந்த நாகரிகமுற்றவர்களாக இருப்பதோடு நாட்டவர்களைக் காட்டிலும் குடிக்கும் தண்ணீர் தூயதாக இருக்க வேண்டும் என்பதில் கருத்துடையவர்களாக உள்ளனர். நாட்டவர்கள் நீரின் தூய்மை பற்றி அக்கறை காட்டுவதில்லை. இந்தியாவில் இந்த நோயால் பாதிக்கப்பட்ட ஐரோப்பியர்களைக் காண்பது அரிதாயினும் இந்த நோயுடையவர்கள் அவ்வப்போது பதியப்பட்டே வந்துள்ளனர். யூரேசியர்கள் ஐரோப்பியர்களை விட மிகுதியும் பாதிப்புக்கு உள்ளாகின்றார்கள் எனினும் நாட்டவர்களைப் போல இவர்கள் மிகுதியும் பாதிக்கப்படுவது இல்லை. பாஹியாவைச்* சேர்ந்த மருத்துவர்களான டாக்டர்கள் பேட்டர்கலும், ஹாலும் அப்பகுதியைச் சேர்ந்த 309 பேருடைய குருதியை ஆராய்ந்து யானைக்கால் வியாதியுடையவர்களின் விகிதம் பின்வருமாறு உள்ளது எனக் கண்டுள்ளனர். வெள்ளையர் 26 பேருக்கு ஒருவர், கறுப்பர் 10.25 பேருக்கு ஒருவர், கலப்பினத்தவர் 9 பேருக்கு ஒருவர், லெவிலே சொசைட்டி தீவுகளில் வாழும் 13 ஐரோப்பியர்கள் மற்றும் அமெரிக்கர்களுள் 11 பேர்கள் யானைக்கால் நோயினால் பாதிக்கப்பட்டிருப்பதாகக் கூறுகின்றனர். இவற்றையெல்லாம் கருத்தில் கொள்வதோடு இந்த நோய்க்குறி இயல்புகளையும் உடன்கொண்டு காண்போமானால் கறுப்பர்கள் வெள்ளையர்களைக் காட்டிலும் இந்த நோய்க்கு ஆட்பட மிகுந்த வாய்ப்பு உடையவர்கள் எனக் கூற இடமில்லை என்றே கருதுகின்றேன். இதற்கு மாறாக அவர்கள் தங்கள் பழக்க வழக்கங்கள் காரணமாக வெள்ளையர்களை விட அதிக அளவில் இந்த நோய்க்கு ஆளாகின்றனர் எனக் கூறலாம்.' 1893 முதல் 97 முடியவுள்ள ஐந்தாண்டு காலத்தில் யானைக்கால் நோயால் பீடிக்கப்பட்ட 98 யூரேசியர்கள் சென்னை பொது மருத்துவ மனையில் அனுமதிக்கப் பட்டுள்ளனர்.

---

* Veterinarian June, 1879.,

சென்னையில் உள்ள அரசினர் தொழுநோயாளர் காப்பகத்தின் கண்காணிப்பாளரான கர்னல் டபிள்யூ. எ. லீ, ஐ. எம். எஸ் அவர்களுக்கு யூரேசியர் ஐரோப்பியர் சமூகங்களும் தொழுநோயும் பற்றிய பின்வரும் குறிப்புக்களுக்குக் கடப்பாடுடையேன். "ஐரோப்பியர் எந்த வகையிலும் இந்த நோயின் தாக்குதலுக்கு உள்ளாவதில்லை எனக் கூறமுடியாது. இவர்களில் பெரும்பாலோர் தொழுநோய் உள்ளவர்களோடு உடல் உறவு கொள்வதாலேயே இந்த நோயால் பீடிக்கப்படுகின்றனர். வெப்ப, மிதவெட்ப நாடுகளுக்கே உரிய நோய்களுள் தொழுநோயும் ஒன்றாகும். இந்தியச் சமவெளியில் வந்து வாழும் ஐரோப்பியர்களும் அவர்களுடைய இந்திய உறவின் வழிப்பட்ட வழித்தோன்றல்களும், யூரேசியர்களின் சந்ததியினரும் சூழ்நிலை காரணமாக நாட்டு மக்களொடு நெருங்கிய தொடர்பு கொள்ளும் கட்டாயத்திற்கு உள்ளாவதால் இந்த நோயால் பீடிக்கப்பட வாய்ப்பு ஏற்படுகின்றது. யூரேசியர்களில் குறிப்பிடத்தக்க அளவு தொழுநோயாளிகள் உள்ளனர். இந்த நோய் ஒரு குடும்பத்தில் ஒருவருக்கு வரத் தொடங்கினால் பல குடும்ப உறுப்பினர்களையும் பாதிக்கும் இயல்பு உடையதாவதோடு தொடர்ந்து பல தலைமுறையினரை விட்டுவிட்டுப் பற்றிக் கொள்ளக் காணலாம். மூதாதையரின் பண்பாடு தலைதூக்குதல் என்ற உயிரியல் கூறுபாட்டோடு இதனை ஒப்புமைப் படுத்தலாம் எனத் துணிந்து கூறுவதற்கு இடமில்லை. புதிதாக நோய் தாக்குவதற்கும் மற்றவர்களிடமிருந்து தொற்றப்படுவதற்கும் வாய்ப்பு உண்டு என்பதனையும் இங்குக் கருத்தில் கொள்ள வேண்டும். தொழுநோய் மருத்துவமனையில் நோயாளிகளாகப் பரம்பரையாகத் தொழுநோயால் பாதிக்கப்பட்ட நாட்டவர்களும், யூரேசியர்களும் வந்து சேர்ந்த நிகழ்ச்சிகள் பலவாம். இது பையவே தொற்றும் இயல்புடையது. பெற்றோருக்கும் குழந்தைகளுக்கும் இடையே உள்ளது போன்ற மிக நெருக்கமான தொடர்புகூடப் பல சமயங்களில் நோய் தொற்ற இடமளிப்பதில்லை. எனினும் நோயுற்றவர்களோடு உடல் உறவு, நீடித்த நெருக்கம், அவர்கள் ஆடையினை அணிதல், அவர்களோடு ஒரே குடியிருப்பில் வாழ்தல், அவர்களுடைய பாத்திரத்தைச் சமைக்கவும் உண்ணவும் பயன்படுத்துதல்,

கைகளில் அம்மை குத்துவதால் ஏற்படும் தொடர்பு ஆகியன எல்லாம் இந்த நோய் தொற்றிக் கொள்ளக் காரணங்களாகின்றன என்று கூறப் போதிய சான்றுகள் உள்ளன. அம்மை குத்துவதால் இந்த நோய் தொற்றிக் கொள்ளலாம் என்ற எண்ணத்தால் முன்பு சென்னையைச் சேர்ந்த யூரேசியர்கள் அம்மை குத்திக் கொள்ள விருப்பம் இல்லாதவர்களாக இருந்தனர். மனிதர்களிலிருந்து தயாரிக்கப்படும் அம்மைப் பாலுக்குப் பதிலாக விலங்குகளிலிருந்து தயாரிக்கப்படும் அம்மைப் பால் அறிமுகப்படுத்தப்பட்டபின் அவர்களுடைய இந்தச் சந்தேகம் நீங்கியது. யூரேசியர்கள் இந்த நோயுள்ள நாட்டவர்களான ஆயாக்களைப் பால் கொடுக்கும் தாதிகளாக அமர்த்துவதாலும் இந்த நோய் தொற்றிக் கொள்கின்றது என நம்பி வந்தனர். தொழுநோய் நுண்மத்தினை வளர்த்து இந்த நோயைத் தோற்றுவிக்கச் செய்த முயற்சிகள் பெரிதும் தோல்வியிலேயே முடிந்துள்ளன. இது, இந்த நோய்க் கிருமிகளால் பாதிக்கப் பட்டவர்களைப் பிரித்து வைத்து இவர்களை மற்ற குடும்பத்தவர்களோடு மண உறவு கொள்வதைத் தடுப்பதற்கான விலக்காணை பிறப்பிக்கப்படுமானால் இந்த நோய் தானே மறைந்து விடும் என்ற நம்பிக்கையினை ஊட்டுவதாய் உள்ளது. இத்தகையவர்களிடையே எத்தகைய தடையும் இன்றி மண உறவு நிகழும் பகுதிகளில் இந்த நோய் பரந்துபட்டதாகக் காணப்படுவதை அனுபவத்தில் காண்கின்றோம். எடுத்துக் காட்டாகப் பாண்டிச்சேரியில் கலப்பின மக்களிடையே இந்த நோய் பீடித்தவர்கள் மிகுதியாக உள்ளமை இதனைத் தெளிவு படுத்தும்."

பல வகுப்பாரிடையேயும் காணப்படும் பைத்தியம் பிடித்தவர்கள் பற்றி 1891 கணக்கெடுப்பு ஆணையர் கூறியுள்ளதாவது:- "புள்ளி விவரங்களிலிருந்து மற்ற வகுப்பாரை விடவும் யூரேசியரிடையே அறிவு திறம்பியவர்கள் மிகுந்த எண்ணிக்கை உடையவர்களாக உள்ளனர் என்பது தெரிகின்றது. இத்தகையோர் 420 பேருக்கு ஒருவராக உள்ளனர். இங்கிலாந்திலும் வேல்கிலும் இத்தகையோர் 307 பேருக்கு ஒருவரே. சென்னையில் உள்ள மக்கள்தொகையில் ஐரோப்பியர்களின் குருதிக் கலப்

புடையவர்களே மிகுதியும் அறிவு திறம்பலுக்கு ஆட்படுகின்றனர் என்பதனை இது காட்டுவதாக உள்ளது. மைசூர் மாநிலத்தைத் தவிர வேறு எந்த மாநிலத்திலும் அறிவு திறம்பிய யூரேசியர் களைப் பற்றியதான விவரங்கள் எனக்குக் கிடைக்கவில்லை. மைசூரில் 306 பேரில் ஒருவர் அறிவு திறம்பியவர்களாக உள்ளனர்.

சென்னையில் உள்ள மனவியல் நோயாளிகளுக்கான மருத்துவமனையில் சேர்க்கப்பட்டவர்கள் பற்றிய பின்வரும் அட்டவணைச் செய்திக்கு நான் காப்டன் சி. எச். லீட்-பாக் ஐ.எம். எஸ். அவர்களுக்கு நன்றி சொல்லக் கடமைப்பட்டவன்.

| | யூரேசியர் | | நாட்டவர் | | ஐரோப்பியர் | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| 1893 | 6 | 7 | 110 | 55 | 15 | 4 |
| 1894 | 8 | 6 | 104 | 28 | 19 | 1 |
| 1895 | 10 | 6 | 113 | 18 | 11 | 4 |
| 1896 | 2 | 4 | 82 | 17 | 5 | — |
| 1897 | 3 | 3 | 84 | 18 | 14 | 1 |

சென்னையில் ஐரோப்பியர்கள் பெண்களைவிட ஆண்களே அதிகம் உள்ளனர் என்பதால் ஐரோப்பிய ஆண்கள் மிகுதியாக அறிவு திறம்பியவர்களாக உள்ளதற்கான காரணத்தை ஆராய வேண்டியதில்லை. நாட்டவரைச் சார்ந்த பெண் பைத்தியங் களை விட யூரேசியர்களின் பெண் பைத்தியங்கள் எண்ணிக் கையில் மிகுந்திருப்பதானது கண்ணை உறுத்துவதாக உள்ளது. 1894 - ஆம் ஆண்டு காப்பகத்தில் உள்ளவர்களின் எண்ணிக் கையை எடுத்துக் கொண்டால் யூரேசியர்களின் ஆண் பெண் விகிதம் 33 : 31 ஆகவும், நாட்டவர்களின் ஆண் பெண் விகிதம் 30. 6 : 6. 8 ஆகவும் உள்ளது. இதேபோல் மற்ற ஆண்டு களிலும் யூரேசியப் பெண்களின் எண்ணிக்கை விகிதம் அதிக

மாக உள்ளது. இது ஏன் என்பது தகுதி வாய்ந்த ஆய்வாளர்கள் தொடர்ந்து ஆய்வதற்கு உரிய ஒன்றாகும்.*

**காபிட் - Gābit**

1901 கணக்கெடுப்பில் பதியப்பட்டுள்ள பம்பாய் மாநிலத்தைச் சேர்ந்த மீனவர் சாதி இது. தென் கன்னட மாவட்டத்திலுள்ள மல்பேயுக்குப் பம்பாய் மாநிலத்தில் உள்ள ரத்னகிரியிலிருந்து அடிக்கட்டை பொருத்தப் பட்டனவும், பாய்மரக் கம்பங்களை உடையனவுமாகிய படகுகளில் மீனவர்கள் மீன் பிடிக்கும் பருவத்தில் வந்து சேர்வர். கோவாவிலிருந்தும் மீனவர்கள் இங்கு வருவார்கள். இவ்வாறு தெற்கே வருவதற்கு ரத்னகிரியைச் சேர்ந்த கடற்கரையோரங்களில் மீன் வளம் குறைவதும், மீனவர்களிடையேயான போட்டியும், உப்பு விலை மிகுதியாக இருப்பதுமே காரணங்கள் என அந்த மீனவர்கள் கூறுகின்றனர். மேலும் பம்பாயில் கிடைக்கும் உப்புப் படிகங்கள் பருமனாக இருப்பதால் அவை மீனைப் பதப்படுத்த ஏற்றனவாக இல்லை எனவும் கூறுகின்றனர். “அதனைப் பயன்படுத்தினால் அவை மீன்களைக் கறுப்பாக்கி விடுகின்றன” என்றும் குறைப் பட்டுக் கொள்கின்றனர். உப்பிடாமல் தெற்கத்தியரைப் போல மீனினை வெயிலில் உலர்த்திக் கருவாடாக்கினால் தங்கள் பக்கத்தைச் சேர்ந்தவர்கள் மீனுக்குப் பதிலாக வறட்டியைக் கொண்டு வந்திருப்பதாகக் கேலி செய்வார்கள் எனக் கூறினார்கள். ரத்னகிரியிலிருந்து வரும் படகுகள் கரையிலிருந்து தொலை தூரத்திற்கு எளிதில் சென்று சேர்ந்து செயிர், பொம்பிரெட், பூனை மீன் முதலியவைகளோடும் மற்றும் மேற்பரப்பிலான பெரிய மீன்களையும், ஆழ்கடலுக்குரியதான சுறாமீன்களையும் மிகுதியும் பிடித்து வருகின்றன. மல்பேயில் மீன் வளம் குறையும்போது

---

* நாட்டவர்கள் தங்கள் பெண்கள் அறிவு திறம்பியவர்களாக மாறும்போது மருத்துவமனையை அணுகாமல் தெய்வத்திற்கு நேர்தல், பேய் ஓட்டுதல் போன்ற வழக்கமான முறைகளை மேற்கொள்ளுதலே பழக்கம். மேலும் நாட்டவர் பெண்கள் யூரேசியப் பெண்களை விட சமூகப் பொருளாதாரக் கட்டுப்பாட்டில் முடங்கியவர்களாதலால் அவர்கள் மருத்துவமனை செல்லும் வாய்ப்புக் குறைவு. பெண்கள் ஒடுக்கப்பட்டவர்களாக வாழ்ந்தமைக்கு இதனையே சான்றாகக் காட்டலாம். (மொ.கு.)

அவர்கள் மேலும் தெற்கு நோக்கி மங்களூர் வரை வருவர். ரத்னகிரியைச் சேர்ந்த மீனவர்கள் செயிர் மீனையே சிறந்ததாக மதிக்கின்றனர். மீனவர்களிடையே போட்டியினைத் தவிர்க்க மலபே இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ரத்னகிரியைச் சேர்ந்த பெரிய படகுகள் ஆழ்கடல் பகுதியிலும், கோவாவை யும் உள்ளூரையும் சேர்ந்த சிறிய படகுகள் கரை சார்ந்த பகுதி களிலும் மீன் பிடிப்பதென உடன்பாட்டினைச் செய்து கொண் டுள்ளனர்.

## கடபர் - Gadaba

கடபர் விசாகப்பட்டினம் மாவட்டத்தைச் சேர்ந்த பழங் குடிகள். இவர்கள் பயிர்த்தொழில், கூலிவேலை, வேட்டை ஆகிய வற்றை மேற்கொண்டு வாழ்க்கை நடத்துகின்றனர். காடுகள் பாதுகாக்கப்பட்டனவாக இப்பொழுது அறிவிக்கப்பட்டதா லும், உரிமம் பெறாது வேட்டை ஆடுதல் தடைசெய்யப்பட்டுள்ள தாலும் வேட்டை வெகுவாகக் குறைந்து விட்டதாகக் கூறப்படு கிறது. ஆண்கள் சிலபோது மரம் வெட்டுதல், பறவைகள் முயல்கள் ஆகியவற்றைப் பிடித்தல், வேட்டைக்காரர்களுக்குக் கொட்டுக்காரர்களாக இருத்தல் ஆகியவற்றில் ஈடுபடுகின்றனர். மலைப்பகுதிகளில் பல்லக்குச் சுமப்பதற்கான பணியிலும் கடபர் அமர்த்தப்படுகின்றனர். செம்பிலிகுடாவிலிருந்து கொரபுட்டுக் குச் செல்லும் பெருஞ்சாலையில் இவர்களுடைய குடியிருப்பு ஒன்று உள்ளது. பல்லக்குச் சுமக்கும் பணிக்காகவே முன்பு அர சர் ஒருவர் இவர்களை அங்கு ஓர் ஊரில் குடியமர்த்தியதாகக் கூறப்படுகிறது. கடபர் குதிரையினைத் தொடுவதில்லை எனக் கூறப்படுகிறது. பல்லக்குச் சுமப்பவர்களாகப் பணிபுரிவது இதற் குக் காரணம் ஆகலாம். இதனை ஒருகுதிரை வண்டிக்காரனுக்கு மோட்டார் காரிடம் உள்ளது போன்ற எதிர்ப்பு உணர்ச்சி போன்றது எனக் கொள்ளலாம். கோதாவரி நதிக்கரையிலிருந்து இவர்கள் முன்னோர்கள் குடிபெயர்ந்து வந்து, செயப்பூர் அரசரின் முன்னாளைய தலைநகரமான நந்தபூரில் குடியேறிய தால் இவர்களுக்கு இப்பெயர் வந்ததாகக் கூறப்படுவது வழக்கம். கடபர் தங்களுக்கெனத் தனித்த மொழியினை உடையவர்கள். அதன் சொற்றொகுதி விசாகப்பட்டினம் கையேட்டில் தரப்

பட்டுள்ளது. திரு ஜி.எ. கிரியெயர்சன் இம் மொழியினை முண்டாமொழிக் குடும்பத்தில் சேர்ந்துள்ளார்.*

இந்தப் பழங்குடியினர் பொதொ(பெரிய) அல்லது குடோப், பாரெங்க, ஓலாரொ, காத்திரி அல்லது காத்தர, காபு என்ற ஐந்து பிரிவினர்களாகப் பிரிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகின்றது. இப்பிரிவினருள் இறுதியில் உள்ள இரு பிரிவினரும் சமவெளிக ளில் தங்கி வாழ்கின்றனர். இவர்கள் தாங்கள் மலைப் பகுதி யிலிருந்து வந்த பொதொ, ஓலாரொ கடபர் என்றே தங்களைக் கூறிக் கொள்கின்றனர். கடபர்களைப் போலவே சவரர்களுள் ளும் ஒரு பிரிவினர் மலைப் பகுதியிலிருந்து சமவெளியில் வந்து தங்கித் தங்களைக் காபு என அழைத்துக் கொள்கின்றனர். 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கிட்டத்தட்ட ஆயிரம் கடபர்கள் தங்களைச் செஞ்சு உட்பிரிவினர் எனப் பதிந்து கொண்டுள்ளனர். செஞ்சுகள் தெலுங்குப் பகுதியைச் சேர்ந்த தனி இனத்தவர்களான பழங்குடிகள். கடபர்களிடையே செஞ்சு என்ற உட்பிரிவு இருப்பதாக உறுதிப்படுத்த முடியா தவனாக நான் உள்ளேன்.

"கெரங் காபுகள் என்ற வகுப்பார் கடபர்களோடு மிகுந்த ஒற்றுமை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்கள் கடபர்களோடு தங்களுக்கு உறவு உண்டு என்பதனை ஏற்றுக் கொள்வதில்லை. எனினும் இந்த இருவகுப்பார் மொழியும் ஒன்று போலவே இருப்பதால் அத்தகைய மறுப்புக்கு இடமேதுமில்லை. இவர்கள் பிரிவைச் சேர்ந்த பெண்கள் கெரங்கு (*Calotropis gigantea*-வெள்ளெருக்கு) என்ற காட்டுச் செடியின் நாரிலிருந்து ஆடை நெய்கின்ற பழக்கம் உடைய காரணத்தால் இவர்கள் கெரங் காபுகள் என்ற பெயர் பெற்றிருக்கலாம்" என எச். ஜி. டர்னர் 1871 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறியுள்ளார். "காபு கடபர் திரு டர்னர் குறித்துள்ள கடபர் களோடு ஒத்த கெரங்காபுகள் ஆகலாம். நான் கெரங்காபுகள்

---

* இந்திய மொழிகளின் மதிப்பீடு, IV, 1906. (Linguistic Survey of India, IV, 1906.)

என்ற சாதிப் பெயர் தனிப் பெயராக இடம் பெற்றிருப்ப தையோ கெரங் என்பது காபுகள் அல்லது கடபர்களின் உட்பிரி வாகப் பதிந்திருத்தலையோ பார்க்க இயலவில்லை'' எனத் திரு எச். எ. ஸ்டுவர்ட் 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறியுள்ளார். கெரங் காபுகளின் எண்ணுப் பெயர் களைப் பற்றி எழுதும் திரு டர்னர் அது பின்வருமாறு அமைந் துள்ளதாகக் கூறுகின்றனர். மொய், உம்பர், ஜூசி, ஓ, மல்லொய், துரு, கூயு, தம்மர், சண்டிங், கோவா என்பன ஒன்று முதல் பத்து வரையான எண்களுக்குரிய பெயர்கள். பதி னொன்றிலிருந்து எண்ண, கோ என்ற சொல்லை ஒன்பது வரையான எண்ணுப் பெயர்களுடன் முன் இணைப்பாகச் சேர்க்கின்றனர். கோம்மொய், கோம்பரொ என்பது போலக் கெரங் காபுகள் பத்தொன்பது வரை மட்டுமே எண்ணு கின்றனர். இருபது என்ற எண் பற்றிய கோட்பாடு அவர்களுக்கு இல்லை. திரு டபிள்யூ. பிரான்சிஸ் அவர்கள் கூற்றுப்படி இதே போன்ற எண்ணுப் பெயர்களைக் கொண்டுள்ள மலை வாழ் பழங்குடிகள் பொந்த பொரொசராவர். கடபர்களும் கெரங் காபுகளைப் போன்ற எண்ணுப் பெயர்களையே முதல் ஐந்து எண்களுக்குக் கொண்டுள்ளனர். அதற்குப் பின் சாட், ஆட், நவ். தஸ் என்பது போல ஒரிய எண்ணுப் பெயர்களைப் பயன்படுத்துகின்றனர். மூயி, பார், க்கை, ஓஓ, மொலொய், த்திரி, க்கோ, தமாம் என்பன திரு பிரான்சிஸ் பதிந்துள்ள பொந்த பொரசர் எண்ணுப் பெயர்கள். இதுபோல பத் தொன்பது வரை எண்ணும் பொந்த பொரசர் அதற்கு மேல் எண்ண அறியார். இம்முறை கெரங் காபுகளுக்கு உரியதாகத் திரு டர்னர் கூறியுள்ள எண்ணுப் பெயர்களோடு ஒத்து இயல்வ தாக உள்ளது. குடோப் கடபர் பிரிவுக்கு உரியனவாகத் திரு சி. எ. ஹாண்டர்சன் குறித்துள்ள எண்ணுப் பெயர்களுள் மொய்டிட்டி (1 + ஒரு கை) மற்றும் மர் டிட்டி (2 + ஒரு கை) என்பன போன்றவை எண்ணுப் பெயர்களுள் இடம் பெற்றுள்ளன.

கடபர் பெண்கள் சிலர் இரே அல்லது கைட்டே எனப்படும் உள்பாவாடைச் சட்டத்தை அணிகின்றனர். இது தொடர் பாகப் பின்வரும் கதையொன்று வழங்கி வருகின்றது.

"ஒரு பெண் தெயவம் தனக்கு உரிய வடிவத்தை மறைத்துக் கொண்டு கடபர் ஊர்ப்பக்கமாக வந்து ஒருத்தியிடம் தனக்குக் கட்டிலில் படுத்து ஓய்வு கொள்ள அனுமதி கேட்டது. வந்தவளுடையமுகத்தில் அடித்தால்போல் பிச்சைக்காரர்கள் தரையிலே, கிடக்க வேண்டியவர்கள் என அந்தக் கடபர் பெண் கூறிவிடவே எல்லாக் கடபர் பெண்களும் இனித் தங்கள் அகம்பாவப்போக்கைக் கைவிட உரிய ஓர் அடையாளமாக ஓர் உள்பாவாடைச் சட்டகத்தை அணிய வேண்டும் என அத்தெய்வப் பெண் ஆணையிட்டாள்."* கடபர் பெண்கள் தங்களுக்கு உரிய ஆடைகளைத் தாங்களே பருத்தி நூல், சில்லொலு வாட (*Holarrhena antidysenterica*-குடசப் பாலை) பொத்த செட்டு (*Ficus glomerata* – அத்தி) நார்கள் ஆகியவற்றிலிருந்து நெய்து கொள்கின்றனர். நாரிழையினைப் பக்குவமாக உலர்த்தி நீலம் அல்லது செம்பழுப்புச் சாயம் போடுவர். துணியின் விளிம்பு வெண்மையாக இருக்கும். அதனை அடுத்து நீல நிறக் கரை வரும். துணியின் நடுப்பகுதி வெள்ளை அல்லது நீலக்கோடுகளோடு செம்பழுப்புச் சாயம் ஏற்றப்பட்டிருக்கும். கடபர் சாதிப் பெண்கள் தங்களுடைய ஆடையைத் தாங்களே நெய்து கொள்வதற்குப் பின்வரும் கதை கூறப்படுகிறது. தான் தடுத்தும் கேளாது தன்னோடு காட்டுக்குவந்த தன் மனைவி சீதையோடு இராமன் நாட்டை விட்டு வெளியேறிக் காட்டில் அலைந்து கொண்டிருந்தான். இராமனின் சிறிய தாயாராகிய கைகேயி அவனை மர உடை அணிந்து காட்டுக்குப் போகும்படி பணித்தாள். இந்துசமய நெறிப்படி கற்புடைய ஒருத்தி கணவன் இன்ப துன்பம் இரண்டிலும் பங்குபெற வேண்டும். அதன்படி சீதையும் தன் கணவன் உடையாகிய மரவுரியையே தானும் உடுத்து அவனோடு காட்டுக்குப் புறப்பட்டாள். நகர மக்கள் துயரில் மூழ்க அவர்கள் நகரைவிட்டுக் காட்டுக்குச் சென்றனர். அவர்கள் காட்டில் திரியும்போது அவர்களைக் கண்ட சில கடபர் பெண்கள் சீதையின் உடையைப் பார்த்துச் சிரித்துக் கேலி செய்தனர். அதனால் சீதை அவர்களை எப்பொழுதும் நாரால் ஆன உடைகளையே அணியும்படியாகச் சாபமிட்டாள். கடபர்கள் பற்றிய ஒரு

* விசாகப்பட்டின மாவட்ட விவரக்குறிப்பு. (Gazetteer of the Vizag patam district.)

கட்டுரையில் திரு எல். இலட்சுமிநாராயணன் பின்வருமாறு எழுதுகின்றார் -* "வீட்டில் தயாரிக்கும் துணிகளை, ஆலையில் தயாராகும் துணிகள் எங்கும் வேகமாக வழக்கு வீழச் செய்து வருகின்றதெனினும் கடபர்கள் வெளியே தயாராகும் துணிகளை அணிவதில் தீமை வரும் என்ற நம்பிக்கை உடையவர்களாக உள்ளனர். பெண்கள் அணியும் துணியைப் பொருத்த வகையில் இவர்கள் இதில் தீவிரமாக உள்ளனர். சீதை இட்ட சாபம் பற்றிய கதையைக் கடபர்கள் அப்படியே நம்புவதால், வீட்டில் நெய்யப்படும் நார்த் துணியைச் சமய உணர்வோடு போற்றி அணிகின்றனர். திருமணத்தின்போது மணமகள் இந்த நாரால் செய்த ஆடையையே தவறாது அணிய வேண்டும் என்பதும், இல்லையேல் குடும்பம் தீங்குக்குள்ளாகும் என்பதும் இவர்கள் நம்பிக்கை. நார் எடுப்பதற்குரிய மரத்தின் கிளைகள் ஒரு கட்டு ஒடித்துக் கொண்டு வரப்படும். இலைகளை நீக்கிய பின் தண்டுகளை நசுக்கி முறுக்கிப் பட்டைகளை நெகிழும்படி செய்தபின் அதனை இரண்டுமூன்று நாள்கள் உலர வைப்பர். அதன்பின் பட்டை உரிக்கப்பட்டுக் கனமான தடிகளால் அடித்து மென்மையாக்கப்பட்டுப் பட்டைகளும் நாரும் பிரித்து வேறுபடுத்தப்படும். பின்னர் நாரினைத் திரட்டித் தூய்மையாக்கி ஓரளவு மென்மையான நூலாக முறுக்கேற்றுவர். இவ்வாறு முறுக்கு ஏற்றப்பட்ட நூலினையே கடபப் பெண்கள் நாட்டுத் தறிகளில் நெய்து தங்கள் மணத்திற்கான சேலைகளைத் தயாரிக்கின்றனர். இவர்களிடையே உள்ள வழக்கப்படி கடபர் சாதியைச் சேர்ந்த பெண்கள் மணப்பதற்குத் தகுதி உடையவர்களாவதற்கு முன் துணி நெய்யக் கற்றுக் கொள்ள வேண்டும். தன்னுடைய ஆடையைத் தானே தயாரித்துக் கொள்ள அறியாதஒருத்தியை எந்தக் கடபனும் மணக்க முன்வர மாட்டான். ஆண்கள் பருத்தி முதலியவற்றால் ஆன ஆடையினை அணியலாம் எனினும் பெண்கள் சீதையின் சாபத்திற்கு ஆளானவர்கள் ஆகையால் இவர்கள் அதனை அணிவதில்லை. பெண்களுக்குப் புதியதான ஆடைகளின் மீதுள்ள விருப்பத்தால் தற்போது கடபர் பெண்களும் ஊடிழையாகப் பருத்தி நூலை

---

* சென்னை மெயில் நாளிதழ், 1907. (Madras Mail, 1907.)

யும், பாவிழையாக நாரிழையையும் பயன்படுத்திஓரளவு மெல்லிய ஆடையினைத் தயாரிக்கின்றனர். ஆனால் சில கிழவிகள் இத் தகைய கலப்பட ஆடைகள் தனி நாரால் ஆன ஆடைகளைப் போலப் புனிதமானவையாகக் கருதப்படுவதில்லை என என்னி டம் கூறினார்கள்.''

கடபர் பெண்கள் சிலர் நீண்ட பித்தளைக் கம்பிகளாலான வளையங்களைக் காதுத் துளைகளில் தொங்கவிட்டுக் கொள்கின்றனர். சிலபோது அவை தோளினைத் தொடும்படி யாகத் தொங்கும், இதற்கான பித்தளைக் கம்பிகள் கஜம் இவ்வளவு எனச் சந்தைகளில் விற்கப்படுகின்றன.பெண்கள் சிலர் 'ஒலிவ' சோழிகளாலான தலைமாலை பொருத்தப்பட்ட தலை ஆடையினைப் பல வண்ணங்களும் உருவங்களும் கொண்ட பாசிமணி மாலைகளோடு அணிவர். சிவப்பும் கறுப்புமான குன்றிமணி (*Abrus precatorius*) களைக் கோத்து நெற்றிப் பதக்கத்துடன் தலையில் அணிவர். பெண்கள் பாசிகளைக் கோத்துக் கழுத்தில் அணிவர். சிலபோது காசுகளை அப்பாசிமணி மாலைகளில் பதக்கமாகக் கோத்துக் கொள்வர். வளையல்களும் மோதிரங்களும் பெரும்பாலும் பித்தளை, செம்பு ஆகிய உலோகங்களாலானவையாகவே இருக்கும். சிலபோது வெள்ளியாலான மோதிரங்களையும் அணிவர். மெட்டிகளையும், பித்தளை மற்றும் வெள்ளியாலான கால் கொலுசுகளையும் நாகரிகமான அணிகளாக அணிகின்றனர். ஓலரொ கடபர் பெண்கள் பித்தளைக் காற்சிலம்புகளை மணம் ஆனதற்கு அறிகுறியாக அணிகின்றனர். வளர்ச்சி குன்றிய குழந்தைகள் நடந்து பழகக் கடபர்கள் ஒரு மூங்கிலைப் பிளந்து கவை உடையதாக்கி அதன் குறுக்கே ஒரு கழியினை இணைத்துப் பயன்படுத்துவர். குழந்தையின் அன்னை இந்த அமைப்பின் முனையைப் பிடித்துக் கொள்ளக் குழந்தை குறுக்குக் கழியினைப் பிடித்தபடி அடியிட்டு நடக்கும்.

கடபர்களின் பொத்தோ, ஓலாரொ பிரிவினரிடையே பின் வரும் குலப் பிரிவுகள் உள்ளன:- கோர (சூரியன்), நாக் (நாகம்), பாக் (புலி), கீர (கிளி), கோலாரி (குரங்கு). சமவெளி யில் குடியமர்ந்துவிட்ட கடபர்கள் தங்கள் குலப் பெயர்களை

மறந்துவிட்டதாகத் தெரிகின்றது. ஆனால் இவர்கள் நாகம் போன்ற சில உயிர்களைக் கொல்வதோ காயப்படுத்துவதோ செய்வதில்லை.

பெண்கள் பூப்படைந்த பின்னரே மணம் செய்விக்கப் படுகின்றனர். ஓர் இளைஞனின் பெற்றோர் தங்கள் மகனுக்கு மணப் பருவம் வந்துவிட்டதாகக் கருதினால், அவர்கள் தகுதியான பெண் இருக்கும் வீட்டிற்கு அரிசியும், சாராயமும் எடுத்துக்கொண்டுபோய்த் தந்து தாங்கள் ஓர் அருட்கொடை வேண்டி வந்திருப்பதாகக் கூறுவர். ஆனால் அது என்ன என் பதனை வெளிப்படையாகச் சொல்லமாட்டார்கள். அவர்களுக் குப் பெண் வீட்டார் உணவளிப்பர்.அதனை உண்டபின் தங்கள் இல்லம் திரும்புவர். இதற்குப் பிறகு கொஞ்ச நாள்கள் சென்ற பின், திசாரி முடிவு செய்யும் ஒரு நாளில் அந்த இளைஞனின் உறவினர்களான நான்கைந்து பெரியவர்கள் பெண் வீட்டிற்குச் சென்று மணம் பேசி முடிப்பர். இவர்களும் பெண் வீட்டில் உணவு உண்டபின் தங்கள் இல்லம் திரும்புவர். மணச் சடங்கு களுக்காக முடிவு செய்யப்பட்ட நாளன்று மணமகனின் உறவி னர்கள், மணச் செலவுகளுக்கான ஒரு ரூபாயும், மணமகளின் தாயாருக்கான ஒரு சேலையும், மணமகளின் ஊரினைச் சேர்ந்த பெண்களுக்கான அரை ரூபாயையும், தங்களுடன் எடுத்துக் கொண்டு மணமகள் இல்லம் செல்வர். மணமகள் ஊரைச் சேர்ந்த பெண்களுக்குத் தரப்படும் அரை ரூபாய் அந்த ஊரார் அப்பெண்ணினை இழப்பதற்காகத் தரப்படும் ஈட்டுத் தொகையாகும். மணமகள் தன் வலக் கையில் அணிந்து கொள்ளப் பித்தளை வளையல்களும் கழுத்தில் அணிந்து கொள்ளக் கண்ணாடிப்பாசி மணிமாலையும் வழங்குவர். அங்கு விருந்து நடைபெறும். மறுநாள் மணமகளை மணமகன் ஊருக்கு அழைத்து வருவர். மணமகன் வீட்டின் முன் நான்கு மூங்கில்களை நட்டுப் பந்தலிட்டுப் பச்சிலைக் கொத்துகளால் வேய்ந்திருப்பர். பந்தலின் உள்ளே கூகல் (*Shorea robusta* - சால்), அத்த கிரிலி, மூங்கில் ஆகிய மூன்றின் கிளைகளையும் இணைத் துப் புனிதக் கம்பம் நட்டிருப்பர். அதனருகே ஓர் அம்மி இடப் பட்டிருக்கும். அதன் மீது மணமகள் அமர மணமகன் அவள் மடி மீது அமர்வான். கூடியுள்ள பெண்கள் அவர்கள் மீது மஞ்சள்

தூளினைத் தூவுவர். பின்னர் அருகே புதிய பானையில் தயாராக வைத்துள்ள மஞ்சள் நீரில் அவர்களைக் குளிக்கச் செய்வர். பின் மணமக்கள் புத்தாடை புனைவர். சடங்கை நடத்தும் திசாரி அவர்கள் கரங்களை இணைத்து வைப்பான். அதன்பின் தாரா ளமான மதுவுடன் விருந்து நடைபெறும். அன்றைய நிகழ்ச்சி கள் நடனத்துடன் முடிவடையும். மறுநாள் பந்தலின் அருகே குவித்துவைக்கப்பட்டுள்ள சேற்றில் ஒரு கையினைத் திசாரி எடுத்துப் பந்தலினுள் வீசுவான். எஞ்சிய சேற்றினை மண மக்கள் பந்தலுக்கு வாரிச் செல்வர். பின் அதில் நீர்விட்டுக் குழம்பாக்கி அதனைக் கூடியுள்ளவர்கள் மீது வீசுவர். பின்னர் அனைவரும் ஆற்றுக்குச் சென்று குளித்து வருவர். மீண்டும் விருந்தும் நடனமும் நடைபெறும். நடனத்தில் மணமக்கள் கலந்து கொள்ளாது வேடிக்கை மட்டுமே பார்ப்பர்.

பாரெங்க கடபர்களிடையே இரு வகையான மணமுறைகள் நிலவுவதாகத் திரு ஜி.எப். பாடீசன் ஒரு குறிப்பில் கூறியுள்ளார். ‘பிபா’ எனப்படும் மணத்தில் நிறைய விருந்துகள் நடத்தப் படுவதோடு எருதுகள், கள், அரிசி, ஆகியனவும் பரிசுகளாக வழங்கப்படும். இதில் சுவையான கட்டம் மணமகளுக்காகக் கை முட்டிகளால் தாக்கிக் போடப்படும் சண்டையேயாகும். இரு பக்கத்து ஆண்களும் இவ்வாறு ஒருவரை ஒருவர் தாக்கிச் சண்டை நிகழ்த்தும்போது மணமகன் மணமகளை வலுக்கட்டா யமாகத் தூக்கிச் செல்ல வேண்டும். அதன்பின் இரு சாராரும் ஒன்றாக அமர்ந்து விருந்துண்பர். ‘லெதுலிய’ எனப்படும் மண முறையில் மணமக்கள் முதலில் காட்டுக்கு ஓடி வீடுவர். அதன்பின் திரும்பி வந்து மணமகள் தந்தைக்கு இருபது ரூபாய் அல்லது தன்னால் இயன்ற அளவு தொகையை மணமகன் மண மகளைக் தன்னுடன் கொண்டு சென்றதற்கான தண்டமாகத் தரு வான். ஓடிப்போதலும் தண்டத் தொகை செலுத்தலும நிகழ்ந்த பின் விருந்தும், வழக்கமாக நடைபெறும் மணச் சடங்குகளும் நிகழும்.

ஒருவன் தன்மாமனார் வீட்டில் ஒரு குறிப்பிட்டகாலம் வேலை செய்த பின் அவர் மகளை மணந்து கொள்கின்ற ‘கோரொஜவை

மணமுறையும் கடபர்களால் மேற்கொள்ளப்படுகிறது. தற்பொழுது அதற்குப் பதிலாக ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுத்துவிடும் முறை மேற்கொள்ளப்படுகிறது. கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ளலாம். அண்ணணின் விதவை மனைவியைத் தம்பி மணந்து கொள்ளலாம். அவள் வேறொருவனை மணந்துகொள்ளும்போது அவளுடைய இரண்டாவது கணவன் அவள் கொழுந்தனுக்கு ஒரிய மொழியில் 'ராண்ட்டொங்க' என்று கூறப்படுகின்ற தொகையினைச் செலுத்த வேண்டும். ஒருவன் தன் மனைவியை மணமுறிவு செய்யும்போது அவளுடைய உறவினரை அழைத்து, அவர்கள் முன்னிலையில் அவளுக்கு இரண்டு ரூபாய் கொடுத்து அனுப்பி வைப்பான். இத்தொகையில் ஒரு ரூபாய் அவளுடைய நடத்தையைத் தான் ஐயுற்றதற்கான 'புச்னி' என்னும் குற்றப் பணம். இன்னொரு ரூபாய் 'சட்னி' எனப்படும் அவளைத் துரத்துவதற்கான தொகை. கணவனால் மணமுறிவு செய்யப் பட்டவள் மறுமணம் செய்து கொள்ளலாம்.

மலைப் பகுதிகளில் ஊர்த் தலைவன் ஐன்னி அல்லது நாயகோ எனவும், சமவெளிப் பகுதிகளில் நாய்தாதோ எனவும் அழைக்கப்படுகிறான். ஊர்த் தலைவனுக்கு சீரசானி என்ற உதவியாளன் உளன். இவன் சாதிப் பூசாரியும் ஆவான்.

கடபர்களின் சமயம் பற்றித் திரு எச்.டி. டெய்லர் எழுதுவதாவது:—* இவர்கள் சமயம் எளிமையானதும் குறிப்பிட்ட இடைவெளிகளில் விருந்துகள் வைப்பதையும் நடைமுறையாகக் கொண்டது. மார்ச், ஏப்ரல் மாதங்களில் நடத்தப்படும் வேட்டை விருந்தாகிய 'இட்டக பர்வ' குறிப்பிடத்தக்கது. இச்சமயம் ஆண்கள் அனைவரும் வேட்டைக்காகக் கூடுவர். வேட்டையில் வெற்றிபெறாது திரும்புவார்களாயின் பெண்கள் அவர்கள் மீது சாணத்தை வீசி எறிவார்கள். வெற்றிப் பெற்றுத் திரும்பும் சமயத்தில் ஆண்கள் பெண்கள் மீது சாணத்தை எறிவர்.

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, *1891*. (Madras Census Report, 1891.)

முக்கிய தெய்வங்களைத் தேவதா மகாபிரபு என அழைப்பர். அவை கங்காதேவி அல்லது தாகுராணி, ஈசுவர அல்லது மௌலி, பைரவர், ஜகன்கர என்பனவாம். ஜகன்கர பூமி, மழை, பயிர் ஆகியவற்றுக்கான தெய்வம். அவருக்கு ஒரு பசுவினைப் பலியிடுவர். இத்தெய்வத்திற்கு எனக் கோயில்கள் இல்லை. புனிதமான ஒரு தோப்பிலேயே வழிபாட்டினை நிகழ்த்துவர். அதனைச் சுற்றிக் கற்கள் அமைந்திருக்கும். வழிபடு தெய்வமான ஜகங்கர என்பதே அக்கற்களுக்கான பெயருமாகும். கங்கா தேவி ஈஸ்வர, மௌலி ஆகியவர்களுக்குச் சில இடங்களில் கோயில் கள் உள்ளன. எனினும் கோயிலுக்காகக் கட்டிடங்கள் எவையும் அமைக்கப்படுவதில்லை. குறிப்பிட்ட மரங்களின் அடியிலும், கற்களின் பக்கங்களிலுமே பூசை நடத்தப்படுகிறது. ஈசுவரருக்குக் சித்திரை மாதத்தில் எருமைகளைப் பலியிடுவர். மற்ற தேவ தாக்களுக்கு ஆடுகளும், கோழிகளும் பலியாகத் தரப்படும். கங்கா தேவி எனப்படும் தாகுராணி மனிதர்களையும், கால் நடைகளையும் நோயிலிருந்து காப்பவள். அவளுக்குப் பன்றி கள், ஆடுகள், புறாக்கள் ஆகியன பலியிடப்படும். இவர்களி டையே ஓரிரு விசித்திரமான மூடநம்பிக்கைகள் வழக்கில் உள்ளன. சாதியைச் சேர்ந்த ஒருவருக்குப் பேய் பிடித்திருப்பதாக இவர்கள் கருதினால் அவனையோ அவளையோ சாதியைச் சேர்ந்த மற்றவர்கள் எல்லோரும் பேய் அவர்களை விட்டுப் போகும் வரை வைது அடிப்பர். காட்டெருமை ஒன்றின் கொம்பின் ஒரு துண்டினைப் புதைத்து வைத்தால் அது கால்நடைகளுக்கு நோய்வராது தடுக்கும், வந்த நோயினைத் தீர்க்கும் என்பதும் இவர்கள் நம்பிக்கை.'' சில சமயம் சால் அல்லது கோசங்கி மரத்தினை நட்டு அதற்கு மூங்கிலால் வேலியிட்டு வளர்ப்பர். அறுவடை சமயத்தில் அதற்கு விலங்குகளைப் பலியிடுவர். அப்போது கீரசானி பூசாரியாகப் பணியாற்றுவான்.

''கடபர்களிடையே ஊர்த் தேவதை தொடர்பாக விசித்திர மான ஒரு பழக்கம் உள்ளது. கோயிலின் அருகே ஓர் ஊஞ்சல் தொங்கும். ஆண்டுக்கு ஒரு முறை அக்கோயிலில் நடைபெறும் திருவிழாவின்போது அதன்மீது முட்களை இட்டுப் பூசாரியோ பூசாரிச்சியோ எத்தகைய துன்பமும் அடையாதவர்களாக

அமர்வர். பூசாரி ஆணாக இருப்பின் அலியாக வேடம் இடப்படுவான். அந்த ஊரில் ஓர் அலி இல்லையாயின் ஒருத்தி அலிக்குப் பதிலாக அதில் அமர்வாள். (கஞ்சம் மாவட்டத்தில் உள்ள நுவக்கோடு என்ற இடத்தில் தீமிதி விழாவின்போது பூசாரி ஊஞ்சலில் முள்ளின் மீது அமர்ந்து எதிர்காலம் பற்றிய கேள்விகளுக்குப் பதிலிறுக்கும் ஆற்றல் பெறுகின்றான்.) ஊரில் பெரியம்மை பரவுமானால் ஒரு சிறு சக்கர வண்டியினைப் பெட்டி போலச் செய்து அதில் களிமண் உருவச் சிலையையோ புனிதமான வேறொரு பொருளையோ வைத்து அதனை ஊரெல்லைக்கு அப்பால் தூர இழுத்துச் சென்று அங்கேயே விட்டுவருவர். அங்கு ஒரு வெள்ளைக் கொடியினை ஏற்றி வைப்பர். அது தொற்று எல்லையினை உணர்த்துவதுபோல் இருந்தாலும், உண்மையில் அது கிராம தேவதையைத் திரும்பக் கோயிலுக்கு அழைக்க ஏற்றப்படும் கொடியாகும். கடபர்கள் அம்மை குத்துவதைச் சமயச் சடங்காகக் கருதுகின்றனர் என நான் நினைக்கிறேன். அம்மை குத்துபவருக்குப் பூசாரிக்குத் தருவது போல அரிசியினைப் பரிசாகத் தருவர்'' எனத் திரு ஜி. எப். பாடீசன் எழுதியுள்ளார்.

மற்ற மலைவாழ் பழங்குடிகளைப் போலவே கடபர்களும் குழந்தை எந்தக் கிழமையில் பிறக்கிறதோ அந்தக் கிழமையின் பெயரையே குழந்தைக்கு இட்டுவிடுகின்றனர். சமவெளியில் சிலர் ராமுடு, லட்சிகடு, அர்ச்சுனா என்பது போன்ற பெயர்களையும் வைக்கின்றனர்.

இறந்தபின் ஆண்களை எரிக்கின்றனர். இரவிலோ மழை நாளிலோ இறப்பவர்கள் புதைக்கப்படுவதும் உண்டு. பெண்களும் குழந்தைகளும் புதைக்கப்படுகின்றனர். அவர்களை எரிக்க ஈம விறகினைப் பயன்படுத்தல் வீண் செலவு எனக் கருதுகின்றனர் போலும். உறவினர்களே பிணத்தைத் தொட அனுமதிக்கப்படுவர். சாவுத் தீட்டு மூன்று நாள்கள் மேற்கொள்ளப்படும். அப்போது சாதிக்குரிய தொழிலைச் செய்ய மாட்டார்கள். இறந்தவர் நினைவாகக் கல் நிறுத்தலும் அவர்களுக்கு அவ்வப்போது படையல் இடுவதும் உண்டு.

கடபர்கள் ஒருவகைப் பேய் நடனம் ஆடுவர். ஒரு சிறிய அன்பளிப்பினை வழங்கினால், அவர்கள் வெளியார் முன் அந்த ஆட்டத்தை ஆடிக் காட்டுவர். இதனைக் காப்டன் கிளாஸ்பார்டு விசாகப்பட்டின மாவட்டக் கையேட்டில் பின் வருமாறு விளக்கி உள்ளார்:- "தசரா, ஹோலி முதலிய விடுமுறை நாள்களின்போது ஆண்களும் பெண்களும் குழல், கொட்டு இசைக்கு ஏற்ப ஆடுவர். சிலபோது அவர்கள் கைகளைக் கோத்து வட்டமாக நின்று தாவிக் குதித்து வட்டத்தின் மையத்தை நோக்கி வருவர். பின் தங்கள் கைகளின் இடைவெளி அளவுக்குப் பின்னோக்கித் தாவிக் குதித்து வட்டத்தை மீண்டும் பெரிதாக்குவர். இவ்வாறு குதித்து ஆடும் போது வட்டமாகச் சுற்றி வந்தவர்களாகவே இருப்பர். வேறு சமயங்களில் பெண்கள் இருவர் சேர்ந்தும், தனித்தும் ஆடுவர். இருவர் ஆடும்போது ஒருவர் மணிக்கட்டை மற்றவர் பற்றிய படி இருப்பர். களைப்பு ஏற்படின் ஆட்டத்தை நிறுத்திப் பாடத் தொடங்குவர். கூட்டத்தில் உள்ள ஒரு ஆண் தனியே வந்து ஓரிரு பாடல்களைப் புனைந்து பாடுவான். அவனோடு பெண்களில் ஒருத்தியும் சேர்ந்து கொள்வாள். அவர்கள் ஒருவரையொருவர் பாட்டாலேயே பழித்துக் கொள்வர். பெண் ஆணின் அழகற்ற தோற்றத்தையும், பயிர்த்தொழிலிலும் வேட்டையிலும் அவன் கையாலாகாதவனாக இருப்பதையும் பழித்துரைப்பாள். ஆண் அந்தப் பெண்ணின் அழகற்ற தோற்றத்தையும், ஒழுங்கற்ற நடத்தையையும் பழித்துரைப்பான்." இவர்கள் நடனம் தொடர்பாகத் திரு ஹாண்டர்சன் கூறுவதாவது:- "நான் பார்த்த கடபர்கள் நடனங்கள் அனைத்தும் பொரசர் நடனங்களையே ஒத்திருந்தன. இவை பெண்கள் அணிவகுத்துச் செல்வது போல இருக்கும். அவர்களைச் சுற்றிச் சில சமயங்களில் ஆண்களும் திரிவர். சிலபோது ஒரு வட்டத்தை ஆண்கள் அமைக்கப் பெண்கள் அதன் வழியே நுழைந்து செல்வர். ஆண்கள் ஒருவர் தோள் மீது இன்னொருவர் ஏறி அமர்ந்து கொள்ளவும் செய்வர். அது பார்க்க இரண்டு அடுக்குக் கூர்ங்கோபுரம் போலக் காட்சி தரும். பெண்களின் பாட்டு ஓரளவு நல்ல இன்னோசை உடையதாக இருக்கும்."

சென்ற சில ஆண்டுகளில் கடபர் சிலர் அசாம் தேயிலைத

தோட்டங்களில் குடியேறித் தொழில் புரிந்து வருகின்றனர். இப்பொழுது அத்தகைய குடியேற்றம் தடை செய்யப்பட்டு ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது.

இக்கட்டுரையில் இடம் பெற்றுள்ள செய்திகளுக்கு நான் திருவாளர்கள் சி. எ. ஹாண்டர்சன், டபிள்யூ. பிரான்சிஸ், சி. ஹயவதன ராவ், பொப்பிலி இளவரசர் ஆகியோருக்குக் கடப்பாடுடையேன்.

**காடி - Gādi (cart)**

மாலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**காடிதே கண்டல - Gādidhē Kandla (donkey's eyes)**

போயரின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலம். கழுதையின் கண்கள் எனப் பொருள்படுவது.

**காடு - Gādu**

தெலுங்கு வகுப்பார் பலர் தங்கள் பெயருக்குப் பின் இணைப்பாகக் காடு என்பதனை ராமகாடு, சுப்பிகாடு என இணைத்துக் கொள்வர்.

**கடுகெ - Gaduge (throne)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். அரியணை எனப் பொருள் படும்.

**கெய்ட - Gaita**

கொண்ட ராசுக்களின் ஓர் உட்பிரிவு.

**கஜ்ஜல் - Gajjal (a small bell)**

தொரையர்களின் ஓர் உட்பிரிவு. சலங்கை எனப் பொருள் படும்.

**காலி - Gāli**

காலி அல்லது காலொல்லு என்னும் இது காற்று, பேய் அல்லது ஆவியைக் குறிக்கும். இது கம்மர், குருபர், மாலர் ஆகிய சாதிகளுக்குரிய புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர்.

**கமலலர் - Gamalla**

கமல்லர் தெலுங்கு நாட்டைச் சேர்ந்தோர். கள் இறக்கியும், சாராயம் காய்ச்சியும் விற்றும் வரும் சாதியார். ஈதிகர்களாக இருந்த இவர்கள் தங்களை உயர்த்திக் கொண்டு அந்தச் சாதியிலிருந்து பிரிந்தவர்களாதல் வேண்டும். கமல்லரும் ஈதிகரும் காட்டம்மைய என்ற தெய்வத்தை வழிபடுகின்றனர். 1891 கணக்கெடுப்பில் சிலர் ஈதிகர் என்பதனைத் தங்கள் உட்பிரிவாகப் பதிந்துள்ளனர். கடப்பை மாவட்டத்தில் கள் இறக்குவோர் சிலர் தங்களை அசிலிவாண்டுலு எனக் கூறிக்கொள்கின்றனர். ஈதிகர், கமல்லர், அசிலி ஆகிய கள் இறக்கும் வகுப்பார் ஒரு சாதியின் மூன்று அகமணக்கட்டுப் பாடு உடைய பிரிவினராதல் வேண்டும். நெல்லூர் மாவட்டத்தில் கள் இறக்குவோர் தங்களைக் கமண்டல அல்லது கவண்டல வாண்டுலு என அழைத்துக் கொள்வதோடு தங்களிடையே கவு மண்டலபு அல்லது கௌமண்டலபு என்ற கோத்திரமும் உள்ளதாகக் கூறிக் கொள்கின்றனர். கமண்டல அல்லது கவண்டல என்ற பெயர் பிராமணப் பூசாரிகளால் புனையப்பட்டிருக்கலாம். இது இந்தச் சாதியைப் புராணங்களில் கூறப்பட்டுள்ள கௌமண்டல மகரிஷியோடு தொடர்பு படுத்துவதாகச் செய்யப்பட்டதாதல் வேண்டும். கமல்லர் தாங்கள் கள் இறக்குவதற்காகக் கவுண்டிண்ய முனிவரால் படைக்கப் பட்ட கௌண்டல வருணத்தைச் சேர்ந்தவர்கள் எனக் கூறிக் கொள்கின்றனர். கமுதி அல்லது கமண்டல புராணம் என்ற பெயரில் ஒரு புராணம் இயற்றப்பட்டுள்ளதாகவும் கேள்விப் பட்டேன். தமிழ் நாட்டைவிடத் தெலுங்கு நாட்டில் கள் இறக்குபவர்கள் சமூகப் படிநிலையில் உயர்ந்தவர்களாக உள்ளனர். இவர்கள் சில சமயங்களில் தெலகர் அல்லது பலிசர் எனவும்

அழைக்கப்படுகின்றனர். அச்சாதிகளைச் சேர்ந்த இவர்கள் கள் இறக்கும் தொழிலை மேற்கொண்டுள்ளனர். இந்தச் சாதியில் மிகுந்த செல்வ வளம் மிக்கவர்கள் கள், சாராயக் கடை வைத்திருப்பவர்களே. ஏழைகள், தென்னை, பனை மரங்களிலிருந்து கள் இறக்குகின்றனர்.

நெல்லூர் மாவட்டத்தைச் சேர்ந்த காபுகள் கமல்லரைத் தங்கள் இல்லங்களில் சமையல்காரராகவும், வீட்டு வேலைக்கார ராகவும் அமர்த்திக் கொள்கின்றனர். திருவிழாக்களின்போதும், திருமணங்களின் போதும் காபுகளின் வீட்டில் எடுபிடி வேலைகள் உட்பட சமையல் வேலை செய்பவர்கள கமல்லர்களே.

கமல்லரின் தோற்றம் பற்றிப் பின்வரும் பழங்கதை ஒன்று வழங்கி வருகின்றது. உணவு ஏதும் உண்ணாமல் பச்சோந்தியைப் போலக் காற்றையும், ஒளியையுமே உணவாகக் கொண்டவராக ஒரு முனிவர் தலைகீழாக நின்றபடி தவம் செய்து கொண்டிருந்தார். சிலர் அவர் பெயர் கௌமண்டல என்பர். சிலர் அவர் பெயர் எதுவெனத் தெரியாது என்பர். ஈதிகர் குலத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தி கள் நிறைந்த பானையோடு அந்த முனிவர் தவம் செய்து இடத்தைக் கடந்து சென்றாள். கள்ளின் நாற்றத்தால் தவத்திலிருந்த முனிவர் விழிக்கலானார். அந்தப் பெண்ணின் அழகில் மயங்கிய அவர் அவளைத் தொடர்ந்து சென்று அவள் இல்லம் அடைந்து அவளால் தனக்கு நேர்ந்ததை அவளிடம் எடுத்துக் கூறித் தன்னை மணந்து கொள்ளும்படி அவளை வேண்டினார். அவள் தான் திருமணமானவள் என மறுத்தாள், எனினும் இறுதியில் அவர்கள் இருவரும் ரகசியமாக உடலுறவு கொண்டனர். இதனால் அந்த ஊரே தீப்பிடித்து எரிந்தது. கொஞ்சம் கள்ளோடு வீடு திரும்பிய அந்தப் பெண்ணின் கணவன் அந்தக் காட்சியினைக் கண்டு திகைத்தவனானான். அவள் அந்த முனிவனைப் காப்பாற்ற அவனை ஒரு தொட்டியினுள் மறைத்து வைத்தாள். அந்தத் தொட்டியுள் அவள் கணவன் தான் கொண்டு வந்த கள்ளினை ஊற்றவே முனிவருக்கு மூச்சு முட்டியது. கள் அப்போதுதான் முதன் முறையாக நுரை தள்ளிற்று. இதைக் கண்ட அவள் கணவன் ஒரு

லிங்கமாக மாறிவிட்ட முனிவரை அதனுள் கண்டான். இந்த லிங்கம் கமண்டலர்களால் வழிபடப்பட்டது. இன்றும் அவர்கள் சைவர்களாகவே உள்ளனர்.

பிற தெலுங்குச் சாதியாரிடையே உள்ளது போலவே கமல் லர்களிடையேயும் புறமணக்கட்டுப்பாடு உடைய பல குலங்கள் உள்ளன. பர்வதால (மலைகள்), குடுமாறு (பணியாரவகை), அன்னம், பன்றி என்பன அவற்றுள் சில. கோத்திரப் பெயர் களுள் கவுண்டின்யா காருண்ய, வாசல்ய, சுரா பாண்டேசுவர (கள் பானை) என்பன குறிப்பிடத்தக்கவை.

வயது வந்த பின்னரே பெண்களுக்குப் பொதுவாக மணம் முடிக்கும் இவர்கள் கைம்பெண்களின் மறுமணத்தையும் அனுமதிக்கின்றனர். இப்பொழுது அப்பழக்கம் கைவிடப் பட்டு வருகின்றது. கைம்பெண்கள் திருமணத்தில் அவர்கள் கழுத்தில் இரவு நேரத்திலேயே தாலி அணிவிப்பர். மணச் சடங் குகள் தொடங்குமுன் பெண் மூதாதையர்களுக்கு வழிபாடு நடத்துவர். ஒரு புதுச் சேலை, வெற்றிலை, பூ ஆகியவற்றை ஒரு தட்டில் வைத்து மணமக்களின் அம்மாக்கள் அந்த வழிபாட்டி னைச் செய்வர். அந்தச் சேலை மணமகன் அல்லது மணமகளுக்கு உறவினரான ஒருத்திக்கு அன்பளிப்பாகத் தரப்படும்.

இறந்தவர்களை இவர்கள் எரிக்கின்றனர். கணவனை இழந் தவள் தன் கை வளையல்களில் ஒன்றிரண்டினை உடைப்பாள். இறந்து போனவனுடைய தந்தை உயிருடன் இருந்தால் சுடு காட்டுக்கு அவனே தீச் சட்டியினைத் தூக்கிச் செல்ல வேண்டும். பிணத்தை எரித்த மறுநாள் தணல் அணைக்கப்பட்டுச் சாம்ப லினைத் திரட்டி ஓர் உருவம் அமைப்பர். அதன் தலை அருகே சேற்றாலும், சாம்பலாலும் மூன்று உருவங்கள் இயற்றுவர். இவை உருத்திரன், எமன், இறந்து போனவரின் ஆவி ஆகிய வற்றைக் குறிப்பன. மூன்று இலைகளில் இவற்றிற்குச் சோறும், காய்கறியும் படைக்கப்படும். ஓர் இலையில் உள்ள தைச் சடங்கை நடத்தும் ஜங்கமும், இன்னொரு இலையில் உள்ளதை வண்ணானும் பெறுவர். மூன்றாவது இலையில் உள்ளனவற்றைக் காக்கைகள் தின்னும்படியாக வைப்பர்.

காக்கைகள் கூடி உண்ணும் வரை அனைவரும் காத்திருப்பர். இறுதியில் சாம்பலினை ஒரு மரத்தின் மீது தூவுவர். பெத்த தினம் என்ற சடங்கினை ஒன்பது,பத்து அல்லது பதினொன்றாம் நாளில் நடத்துவர். வீட்டினுள் ஓர் இலையில் சோறு, கறி, ஊன் முதலியன படைக்கப்படும். அந்த இலையின் அருகே கணவனை இழந்தவள் அமர்ந்து அழுது புலம்பிய பின் தன் கை வளையல்களில் ஒன்றிரண்டினை உடைப்பாள். அந்த உணவு பின்னர் ஆறு அல்லது குளக்கரைக்கு எடுத்துச் செல்லப்படும். பங்காளிகள் அங்கே முகம் மழித்துக் குளித்துப் புனிதர்களான பின் தரையில் இறந்தவரின் உருவம் ஒன்றினை எழுதுவர். அதனருகே மூன்று இலைகளில் சோறு, கறி முதலியன படைக்கப் படும். கணவனை இழந்தவளின் எஞ்சியுள்ள வளையல்கள் உடைக்கப்பட்ட பின் 'முண்டகொக்' எனப்படும் விதவைகளுக் குரிய புதிய சேலையினை அவளுக்குத் தருவர். அச்சமயம் ஏழை எளியவர் உட்பட எல்லா கமல்லர்களும் மால பம்பலர்களையும், பைநேடுகளையும் (இசை வாணர்களும் கதை சொல்பவர்களும்) அங்கம்மா தேவியின் கதையினைச் சொல்ல அமர்த்துவர். இந் நிகழ்ச்சி அங்கம்மா கொலுபு என அழைக்கப்படும். மாலர்களில் சிலர் தரையில் முக்கு எனப்படும் உருவத்தை வரைய, மற்ற வர்கள் இசையும் கதையும் நடத்தியபடி இருப்பர். முக்கு உருவம் தீட்ட, ஐந்து வண்ணங்கள் பயன்படுத்தப்பட வேண்டும். இதற்குப் பச்சைக்கு ஆவாரம் இலைகளையும், வெள்ளைக்கு அரிசி மாவையும், சிவப்பிற்கு மஞ்சளும் எலுமிச்சையும், மஞ்ச ளுக்கு மஞ்சளும், கறுப்புக்கு நெல் உமிக்கரியும் பயன்படுத்தப் படும். இந்த முக்கு உருவம் பெத்த தினம் கொண்டாடப்படு பவரின் வீரவழிபாட்டுக்குரிய உருவமாகக் கருதப்படும். அத னோடு எதிர்ப்பாலினைச் சேர்ந்த மூதாதையரான ஆணோ பெண்ணோ இடம் பெறுவர். சடங்கு நடத்துபவர்கள் வசதி யுள்ளவர்களாயின் அங்கம்மா போன்ற பிற உருவங்களும் தீட்டப்படும். முக்கு வரைந்து முடித்த பின், தேங்காய், அரிசி, வெற்றிலை ஆகியன படைத்து ஒரு கோழியையும் பலியிடுவர்.

மற்றத் தெலுங்குச் சாதியார் பலரையும் போலக் கமல்லர் களும் தங்கள் சாதிக்கென்று உரிய ஏனேதி என அழைக்கப்படும்



கமல்லர் முக்கு

இரவலர்களைப் பெற்றுள்ளனர். இவர்கள் ஊர்ப்பக்கம் வரும்போது இவர்களுக்காக ஒரு தொகை திரட்டுவர்.

கமல்லர்களில் பெரும்பான்மையோர் சைவர்களே. லிங்காயத சமயத்தைச் சேர்ந்த தெலுங்குப் பிராமணர்களான ஆராத்திய பிராமணர்களே இவர்களுடைய பூசாரிகள் ஆவர். பொத்தராசு, காடமய்ய, கங்கம்மா, மத்தம்மா, தல்லம்மா எனப்படும் தாதலம்மா, உள்ளிட்ட பலவகைத் தெய்வங்களை இவர்கள் வழிபடுகின்றனர். ஆண்டுக்கு ஓரிரு முறை ஒவ்வொருவர் வீட்டிலிருந்தும் தல்லம்மா கோயிலுக்கு ஒரு பானையில் கள் கொண்டு வரப்படும். சில பானைகளில் உள்ள கள்ளினைத் தரையில் ஊற்றியபின், எஞ்சிய கள்ளைச் கூடியுள்ள அனைத்துச் சாதியினருக்கும் வழங்குவர்.

தீபாவளித் திருவிழாவின்போது அதனைக் கொண்டாடுபவர்கள் அதிகாலையில் குளித்தபின் ஈர ஆடையுடன் ஒரு புற்றின் முன் சென்று தரையில் விழுந்து வணங்கிப் புற்றில் உள்ள துளை ஒன்றில் கொஞ்சம் தண்ணீர் ஊற்றுவர். புற்றைச் சுற்றி ஐந்து சுற்றுக்கள் பருத்தி நூலினைச் சுற்றிவிட்டு வீட்டுக்குத் திரும்புவர். அதன்பின் மாவிளக்கினை ஏற்றியவர்களாக மறுபடியும் புற்றினை அடைந்து அதனை விளக்கை ஏந்தியபடி மூன்று முறையோ ஐந்து முறையோ வலமாக வந்தபின் புற்றினுள் உளுத்தம் பருப்பினை இடுவர். அன்று முழுதும் உண்ணாது விரதம் இருக்கும் இவர்கள் மறுநாள் புற்றிடம் சென்று அதில் பால் ஊற்றிய பின் அதனைச் சுற்றிக்கட்டிய நூலினை அறுப்பர்.

சங்கராந்தித் திருவிழாவின்போது ஒவ்வொரு குடும்பத்தின் தலைவனும் முன்னோரை வழிபடுவான். வழிபாடு செய்பவன் குளித்தபின் ஓர் அறையில் மூதாதையரைக் குறிக்கும் இலைகளில் பலவகை உணவுப் பொருள்களையும் படைப்பான். ஒவ்வொரு இலையிலிருந்தும் கொஞ்சம் உணவினை எடுத்து வேறொரு இலையில் வைத்து அதனை வணங்கியபின் கொண்டு சென்று வாசலில் காக்கைகள் தின்னும்படியாக வைப்பான். எஞ்சிய உணவினைக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் உண்பர்.

1901 கணக்கெடுப்பில் கமல்லர் சிலர் தங்களைச் செட்டி காடு எனப் பதிந்துள்ளனர்.

**கம்ப - Gampa (basket)**

இது கம்மர், தெலகர்களின் உட்பிரிவு. ஒட்டேகளின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலப் பெயரும் ஆகும். கம்மர் களிடையே வழங்கும் இப்பெயர் கண்டிக்கோட்டையில் நடை பெற்ற கடும்போரினைக் குறிப்பதாகும். அதில் சிலர் கூடை களில் ஒளிந்தபடி தப்பிச் சென்றனர். கம்ப தொம்பிடி மாதிகர் களின் ஓர் உட்பிரிவுக்கு உரிய பெயராகும். மாதிகர் தெய்வத் திற்குத் திருமணத்தின்போது இடும் படையலைக் கூடையிலேயே படைப்பர்.

**கணாயத - Ganāyata**

நெல்லூர், கடப்பை, கர்நூல், மாவட்டங்களில் கணக் கெடுப்பின்போது லிங்காயத ஜங்கமர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. வட சொல்லான கணம் என்பது சிவனு டைய பணியாளர் குழுவினைக் குறிக்கும்.

**கந்தம் - Gandhem (sandal paste)**

பலிசர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலத்தின் பெயர். இதன் ஓர் உட்பிரிவினர் கந்தவாலு அல்லது கந்தப் பொடி (சந்தனப் பொடி விற்பவர்) என அழைக்கப்படுவர். சந்தனக் கட்டையைக் (*Santalum album*) கல்லில் தண்ணீர்விட்டு உரைத்துப் பெறப்படும் குழம்பு இந்துக்களின் சடங்குகளில் பெரும் அளவில் பயன்படுத்தப்படுகின்றது. ஒரு பிராமணன் தன் வழிபாட்டை முடித்துக் கொண்ட பின் உடம்பில் சந்தனத் தைப் பூசிக் கொள்வான். திருவிழாக்களின்போதும மற்ற மங்கலச் சடங்குகளின்போதும் வருகை தரும் விருந்தினருக்கு வெற்றிலை பாக்கோடு சந்தனமும் வழங்கப்படுகிறது. கந்தப் பொடி போயர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலம் ஒன்றின் பெயரும் ஆகும்.

**கண்டிகோட: Gandikota**

கமல்லர்களின் ஓர் உட்பிரிவு. 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "கண்டிக்கோட, காபு அல்லது ரெட்டிகளின் உட்பிரிவாக மதுரை, திருநெல்வேலி மாவட்டங் களில் மட்டுமே காணப்படுகிறது. இது கோட்டை ரெட்டி என் றும் அழைக்கப்படுகிறது. கோட என்ற கோட்டையைக் குறிக் கும் தெலுங்குச் சொல்லிற்கு நேரான தமிழ்ச் சொல் கோட்டை. இவர்கள் சாதியைச் சேர்ந்த குடும்பப் பெண்கள் வீட்டை விட்டு வெளியே வருவதில்லை" எனக் கூறப்பட்டுள்ளது.

**காண்டல: Gāndla**

பார்க்க - காணீகர் (See: Gāniga)

**கங்கதிகாரர் - Gangadikāra**

கங்கைக் கரையில் வாழ்ந்தவர்கள் எனப் பொருள்படும். இதன் பொருளை அப்படியே ஏற்றுக் கொள்வதற்கில்லை. ஹொலையர், ஒக்கிலியர், வக்கலிகர் ஆகியோருடைய உட்பிரி வாக இது பதியப்பட்டுள்ளது. இப்பெயர் முன்னாளில் மைசூரினை ஆண்ட கங்கர்களின தலைநகரான கங்கவாடி யினைக் குறிப்பதாகலாம்.

**கங்கெத்து – Gangeddu**

கோயில் மாடுகளில் வேடிக்கை காட்டியபடி நாடோடி களாக அலையும் இரவலர்கள் கங்கெத்துகள். "கங்கெத்துலு (கங்கையின் எருதுகள்) எனக் கூறப்படும் இப்புனித எருதுகள் தென்னிந்தியாவின் நகரங்கள், சிற்றூர்கள் ஆகியவற்றில் எங்கும் திரியக் காணலாம். சாமி மாடு என அழைக்கப்படும் இக்காளை ஒரு வட்டாரத்தில் இருப்பதை இதனை வைத்திருப் பவன் முழக்கும் பூம்பூம் ஒலியிலிருந்து தெரிந்து கொள்ளலாம். சிறிய உறுமி மேளத்தினைப் பூம்பூம் என முழக்கும் இவன், இடையிடையே தன் ஊமை மாட்டை நோக்கி உரத்த குரலில் பேசுவான். வீடுவீடாக ஓட்டிச் செல்லப்படும் இந்த எருதினைப் பல தந்திரங்களைச் செய்யும்படி மாட்டுக்காரன் கூற, அதுவும்

சுறுசுறுப்பாக அவன் சொற்படி கேட்கும். இவன் இடையிடையே அதனைக் கேட்கும் கேள்விகளுக்கு அது தலையசைத்துத் தன் பதிலினைத் தெரிவிக்கும். அது தன் முன்னங்கால்களை ஊன்றித் தரையில் தலை சாய்த்து வணக்கம் தெரிவிப்பது போல நிற்கும். அல்லது உங்களை நெருங்கி லேசாக மூக்கால் உங்கள் கைகளை உராசும். வழக்கமாக ஒரு சின்னஞ்சிறு மாடு கோயில் மாட்டின் பின் வரும். அதற்கும் கோயில் மாட்டினைப் போல அலங்காரம் செய்வித்து மணிகளும் கட்டப்பட்டிருக்கும். இதனைக் காளையினுடைய வீட்டுக்காரி என்று சொல்லிச் சாமி மாட்டுக்காரன் அறிமுகம் செய்து வைப்பான். பின்னர் அவற்றிடையே ஒரு குட்டிக் குடும்ப நாடகம் நடைபெறும். வீட்டுக்காரனான அது தன் வீட்டுக்காரியோடு கோபித்துப் பேச மறுக்கும். இந்தச் சண்டையின் காரணமாக அது கோபங்கொண்டு அவளைவிட்டு வீறாப்பான நடையிட்டுச் செல்லும். சாமி மாட்டுக்காரன் அவற்றிடையே சமாதானம் செய்து வைக்கப் பார்ப்பான். இதனால் கோபங் கொண்ட காளை அவனைக் கொம்பால் மோதிக் கீழே தள்ளும். அந்தக் காளையின் கொம்புகளில் அணைசு போடப்பட்டிருப்பதால் அவனுக்கு எத்தகைய ஆபத்தும் ஏற்படாது. கீழே விழுந்த அவன் எழுந்து, மண்ணைத் தட்டிவிட்டுக் கொண்டு தனக்குத் தரப்பட்ட மரியாதை குறித்துக் குறைபட்டுக்கொள்வான். நெடுநேரம் கெஞ்சிக் கேட்டுக்கொண்டபடி அதனை அவன் சுற்றிச் சுற்றி வந்து, கடைவீதியில் கிடைக்கும் எல்லாவகையான பணியாரங்களையும் இனிப்புக்களையும் வாங்கித் தருவதாக உறுதி கூறிய பின்பே அந்தக் காளை மறுபடியும் சமாதானம் அடையும்.

பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு சி. ஹயவதன ராவ் அவர்களுக்குக் கடப்பாடுடையேன்:- கங்கெத்துலு, எருதாண்டி அல்லது பெருமாள்மாட்டுக்காரன் எனப்படுவோர் உடற்குறையுடைய காளைக் கன்றுகளை வாங்கிப் பழக்குவர். அத்தகைய குறையுடைய காளைக் கன்றுகளை வைத்திருப்பது குடும்பத்திற்குத் தீங்குத்தேடிக் கொள்வதாகும் என்ற பரவலான நம்பிக்கை மக்களிடையே உள்ளது. எனவே அத்தகைய கன்றுகள் போடப்பட்டவுடன் ஒரு கங்கெத்துக்குத் தகவல் அனுப்பப்படும். கங்கெத்து வந்தவுடன் அவருக்கு வயிறு நிறையச் சாப்பாடு

போடுவார்கள். பின்னர் கன்றுக் குட்டியைக் குளிப்பாட்டி அதன் தலையில் ஒரு புதுத் துணியைச் சுற்றிக் கொஞ்சம் பணமும் வைத்துக் கொடுத்துக் கன்றினைக் கங்கெத்து ஓட்டிக் கொண்டு போகச் செய்வர். கோயிலைச் சேர்ந்த குறையுடைய கன்றுகளும் சிலபோது இதே போலத் தரப்படுவதுண்டு. பழக்கப்பட்ட காளைகளை வைத்து வேடிக்கை காட்டும்போது தொடக்கத் திலோ இடையில் பார்வையாளர்கள் விரும்பும்போதோ காளையின் உடற்குறை வெளியே தெரியும்படி காட்டப்படும். அவ்வாறு மறைத்து வைக்கப்பட்டுள்ள குறை காட்டப்பட்ட பின்னரே பழைய துணியோ சில்லறையோ தானியமோ பெருமாள் மாட்டுக்காரனுக்குத் தருவர். இத்தகைய காளைகள் தங்கள் இல்லங்களைக் கடந்து செல்லும்போது ஊர் மக்கள் அதனைத் தொழுது வணங்குவர். அது ஓர் ஊரில் வந்து சேர்ந்தவுடன் பெண்கள் அதன் கால்களைப் பாலாலும், நீராலும் கழுவுவர். பின்னர் அதன் நெற்றியில் குங்குமமும் மஞ்சளும் இட்டுக் கர்ப்பூர ஆரத்தி காட்டுவர். தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு, காசு ஆகியனவற்றைத் தட்டில் வைத்துக் கங்கெத்துவுக்கு முதலில் தர வேண்டும். சிவனின் வாகனமான காளை இவ்வாறு பசவன்னராகப் பாலிக்கப்பட்டுப் பக்தியோடு வழிபடப்படுகின்றது.

கங்கெத்துலுவர் பேசுவது தெலுங்கே எனினும் தமிழ் நாட்டில் வந்து குடியமர்ந்து உள்ளவர்கள் தெற்கத்திய மொழி யாகிய தமிழையும் பேசுகின்றனர் வைணவ சமயத்தைக் கடை பிடிக்கும் இவர்கள் தென்கலைப் பிரிவைச் சேர்ந்தவர்கள். இவர்களுடைய குருக்கள் பிராமணர்கள். அவர்கள் ஸ்ரீரங்கத் திலும், திருப்பதியிலும் தங்கி வாழ்கின்றனர். அவர்கள் கங்கெத்துலுவர் தோளில் சங்கு சக்கர முத்திரையிட்டு இவர் களைத் தாசரிகளாக மெய்ஞ்ஞான வழிப்படுத்துவதற்கான உபதேசத்தையும் செய்து வைக்கின்றனர். எனினும் மண உறவோ வேறு தொடர்புகளோ வைத்துக் கொள்வதில்லை. சாமி மாட்டினைப் பழக்கி வேடிக்கை காட்டும் தொழிலோடு பயிர்த் தொழிலிலும் ஈடுபட்டுள்ள இவர்கள், புரட்டாசி மாதத்தில் தாசரிகளாகப் பணிபுரிகின்றனர். இவர்கள் தங்களுடைய

சின்னங்களுள் முதன்மையானதான சங்கினை முழக்கித் தங்கள் வருகையை அறிவிப்பர். கருடக் கம்பம் எனப்படும் இரும்பு விளக்கினை எரியவிட்டபடி இருப்பர். அது திருப்பதியில் கோயில் கொண்டிருக்கும் வேங்கடேசப்பெருமானைக் குறிக்கும் சின்னமாகும். தாசரிகளான இவர்கள் தெய்வத்திற்குப் பழங் களைப் படைக்கும் அளவிலான சிறு பணியினையே புரிகின்றனர் சாவுச் சடங்குகளை நடத்துவதில் உதவுகின்றனர். இவர்களைப் பற்றிய வழக்கில் உள்ள பின்வரும் பழமொழிகள் இவர்களுடைய வாழ்க்கையில் இவர்கள் செய்யும் இத்தொழில் தொடர்பான கூறுகளை அறிவிப்பனவாம்:-

1. தாசரி தப்புச் செய்தாலும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டவுடன் பொறுத்துக் கொள்ளப்படுகிறது.

2. தாசரியின் பாட்டு, கடவுளுக்குத்தான் புரியும். (அதாவது அது பொருளற்ற உளறல்.)

3. தாசரியின் பாட்டுக்குப் பிச்சைதான் விலை. (அதாவது அவன் பாடும் எல்லாப் பாட்டும் தரமானதே.)

4. தாசரியே! நீ பாடின பாட்டை உன் அழுக்குப் பல்லைக் காட்டியபடி மறுபடியும் பாடு.

5. ஒரு பிச்சைக்காரனை அவன் தாசரியா ஜங்கம்மா என்று கேட்டால், அவன், அது தான் போகும் அடுத்த ஊரைப் பொறுத்தது என்பான். (அதாவது சமயத்திற்கேற்ப வேடம் போடுபவர்கள் என்பது பொருள்.)

கங்கெத்துலுவான இரவலர் அவன் வைத்திருக்கும் காளை யைப் போலவே தன்னையும் கவர்ச்சியாக அலங்கரித்துக் கொள் வான். நெற்றியில் தவறாது சமயச் சின்னம் தரிக்கும் இவன், பெரும்பாலும் தலைப்பாகையுடனேயே காட்சி தருவான். உடலில் நீண்ட வெள்ளை அங்கி தொங்கியபடி இருக்கும். பெருமாள் மாட்டில் வித்தை காட்டியபடி செல்லும் சமயங்களில்

இவர்கள் இரண்டு பேர் சேர்ந்தே செல்வர். ஒருவன் உறுமி மேளத்தை வைத்திருக்க மற்றவன் சேகண்டியை வைத்திருப்பான். ஒருவன் ஒரு கையில் மாட்டின் மூக்கணாங் கயிற்றோடு இணைத்த கயிற்றையும், மற்றொரு கையில் சாட்டையையும் வைத்திருப்பான். காளைகள், பல துண்டுத் துணிகள் இணைத்துத் தைக்கப்பட்ட, கண் பகுதிக்குரிய துளைகளோடு கூடிய துணியால் போர்த்தப்பட்டனவாய் இருக்கும். அவை பெரும்பாலும் இராமன், இலட்சுமணன் என்ற பெயரை உடையனவாயிருக்கும். அவை நன்கு பழக்கப்பட்ட அப்பாவித் தன்மையுடையவை என்பதனைச் 'சாமி மாடு போலச் சாது' என்ற பழமொழி விளக்கும்.

பெருமாள் மாட்டுக்காரன் அல்லது பெருமாள் எருத்துக்காரன் என்ற இரு பெயர்களும் ஒருவனையே குறிப்பன. காளைகளை வைத்திருக்கும் இவர்களைப் பெரும்பாலும் செங்கல்பட்டு, வட, தென் ஆர்க்காடு மாவட்டங்களிலேயே காணலாம். இவர்களைப் பற்றித் திரு. எஸ். எம். நடேச சாஸ்திரி எழுதியுள்ளதாவது:-* "சென்னை மாநிலம் முழுவதும் கோமாளி போல உடை அணிந்தவனாக, ஒருவன் காளையினை ஓட்டிக் கொண்டு தன்னைச் சோழிகளாலும் பல வண்ணக் கந்தல் ஆடைகளாலும் அலங்கரித்துக் கொண்டு வீட்டுக்கு வீடு சென்றபடி இருப்பதை அடிக்கடி பார்க்கலாம். இந்தக் காளை தமிழில் பெருமாள் எருது எனவும் தெலுங்கில் கங்க எத்து எனவும் முறையே பெருமாளுக்குரியது, கங்கைக் குரியது எனப் பொருள் தரும்படியான பெயரினைப் பெறும். பெருமாள் எருது என வழங்குவதற்கான ஒரு பழங்கதை கூறப் படுகிறது. கங்க எத்து என்பது ஏன் என்று புரியவில்லை. இந்தக் காளைகளை ஓட்டிச்செல்பவர்கள் பூ இடையன் என வழங்கப்படும் உயர் சாதியைச் சேர்ந்தவர்கள். இவர்கள் வட, தென் ஆர்க்காடு மாவட்டங்களைச் சேர்ந்தவர்கள். எளிமையும் வஞ்சகமும் அற்ற பண்புடைய கூட்டத்தினரான இவர்கள் வட ஆர்க்காடு மாவட்டத்தின் அருகே உள்ள திருப்பதியில் குடி

* இந்தியத் தொல்லியல் தொகுதி, 18, 1889. (Ind. Ant. XVIII, 1889.)

கொண்டிருக்கும் வேங்கடாசலபதியின் கட்டளைக்கு இணங் கவே தாங்கள் இத்தொழிலை மேற்கொண்டிருப்பதாக உறுதி யாக நம்புகின்றனர். அவர்கள் இது தொடர்பாகப் பின்வரும் பழங்கதையினைக் கூறுகின்றனர். திருப்பதி வேங்கடாசலபதி கோயிலுக்கு வழக்கமாகத் தரப்படும் அன்பளிப்புகளுள் கால் நடைகளின் இயல்புக்கு மாறுபட்டனவாக இரண்டு வால் பசுக்கள், ஐந்துகால் காளைகள், நான்கு கொம்புகள் கொண்டவை என்பன போன்றவையாகவே இருக்கும். கோயிலில் பூக்கட்டும் தொழிலை முதலில் மேற்கொண்டிருந்தவர்களான பூ இடையர் களுக்கு இந்தக் குறையுடைய கால்நடைகளை மேய்க்கும் பணி தரப்பட்டது. நல்ல பசுக்களை மேய்ப்பது புண்ணியம் தருவது. ஆனால் குறையுடைய இப்பசுக்களை மேய்ப்பது பாவமானது என இவர்கள் கருதினர். எனவே இவர்கள் வேங்கடாசலபதி யிடம் எப்படி அந்தப் பாவத்தைப் போக்கிக் கொள்வது என வேண்டிக் கொண்டனர். இதனைக் கேட்ட அவர் தன் பெயரைக் கொண்டதான பெருமாள் மாட்டினை அவர்களுக்குத் தந்து, 'என் மக்களே! நீங்கள் இந்தக் காளையினை உங்கள் குழந்தையைக் காப்பது போலக் காத்து அதனை வீடுவீடாக ஓட்டிப் போய் அதற்கான உணவினைப் பெறுவீர்களாயின் உங்கள் பாவம் நீக்கப்படும்' எனக் கூறினார். அப்போதிருந்து அவர்கள் தங்கள் பாவத்தைப் போக்கியபடி உள்ளனர். இவர் கள் செயல்படுவது எப்படியெனில் காளை ஓட்டிச் செல்பவன் அதனை வீடுவீடாக ஓட்டிக் கொண்டு சென்று அதனிடம் சில கேள்விகளைக் கேட்பான். அதற்குப் பதிலாக அக்காளை அதன் தலையை ஆட்டும். அவனைக் கேள்வி கேட்டவர்கள் தங்கள் எண்ணப்படி காரியம் நடக்கும் என்பதற்கு இதனை ஆதார மாகக் கொள்வர். இக்காளைகள் கன்றுகளாக இருக்கும் போது சிறுதொகைக்கு வாங்கப்பட்டு இவ்வாறு பழக்கப் படுகின்றன என்பதே உண்மை. நீண்ட அனுபவம் காரண மாக இவர்கள் எளிதில் பழக்கக் கூடிய கன்றுகளை இனங்கண்டு விலைக்கு வாங்குகின்றனர். விலைக்கு வாங்கிப் பழக்கத் தொடங்கும் போது அதற்குத் தவிட்டினைத் தரும் போதெல்லாம் அதன் காதுகளைக் கிள்ளுவர். விரைவில் அது அதனால் தவிட்டைக் கண்டவுடன் தலையாட்டக் கற்றுக்

கொண்டு விடுகின்றது. பெருமாள் மாட்டுக்காரன் அதனிடம் கேள்வி கேட்கும்போது தன் கையில் ஒரு பிடி தவிடு வைத்துக் கொண்டிருப்பான் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை. அதனிடம் கோபமாகப் பேசுபவர்களை முட்டித் தள்ளவும் அதற்குக் கற்றுத் தரப்படுகிறது. இவர்களுக்குத் தரப்படும் தானியத்தில் ஆறில் ஒரு பகுதி மாட்டுக்கும் எஞ்சிய ஐந்து பங்கு இவர்களுக்கும் உரியது. இவர்கள் இதனை நல்ல தொழிலாகவே கருதுகின்றனர். ஊர்ப்புறத்தைச் சேர்ந்த சிறுவர்களும் சிறுமிகளும் பெருமாள் மாட்டின் செயலினைச் சிறந்த வேடிக்கையாகக் கருதுகின்றனர். விட்டுணுவின் காளையின் வருகையை அவர்கள் மிகுந்த மகிழ்ச்சி ஆரவாரத்துடன் எதிர்கொள்கின்றனர்.''

**கங்கை மக்களு - Gangimakklu**

கங்கை மக்களு அல்லது கங்கை புத்திரர் என்பது நீர்த் தெய்வமான கங்கையின் பிள்ளைகள் எனப் பொருள்படும். இது கப்பேரர்களின் ஓர் உட்பிரிவினருக்கு உரிய பெயர். இதனோடு தொடர்புடைய கங்கை வம்சம் அல்லது கங்கைக் கூட்டத்தார் என்பது ஜாலாரிகளுக்கு உரிய பெயர்.

**காணீகர் அல்லது காண்டலர் – Gāniga or Gāndla**

காணீகர் என்ற இச்சொல் எண்ணை ஆட்டும் செக்குக்கு உரிய தெலுங்கு பெயரான காணுக என்பதிலிருந்து வந்ததாகும். காணீகர்பற்றித் தென் ஆர்க்காடு மாவட்டக் கையேடு கூறுவதாவது:- ''தெலுங்கர்களான காண்டலர்களையும் தமிழர்களான வாணியர்களையும் ஒத்த கன்னடம் பேசும் எண்ணெய்ச் செக்கார் காணீகர். ஒருவரோடு ஒருவர் உடன் உண்ணாத மற்றும் திருமண உறவு கொள்ளாத மூன்று உட்பிரிவினராக இச்சாதியார் உள்ளனர். ஹெக்காணீகர் எனப்படும் இரண்டு எருதுகள் பூட்டிச் செக்கு ஆட்டும் கல் செக்கார், கிகாணீகர் எனப்படும் மரச்செக்கில் எண்ணெய் ஆட்டுபவர்கள், ஒண்டியெத்து காணீகர் எனப்படும் ஓர் எருது பூட்டிச் செக்காட்டுபவர்கள் என்பனவே அம் மூன்று உட்பிரிவுகள். இவர்களை மொத்தமாக ஜோதிப்பன் அல்லது ஜோதிநகரத்தார்

என வழங்குவர். எண்ணெய் ஆட்டுவதோடு பனை ஓலைக் குடைகள் செய்தல், பயிர்த்தொழில் மற்றும் கூலி வேலை ஆகிய பணிகளையும் இவர்கள் மேற்கொள்கின்றனர். தங்கள் சடங்குகளை நடத்தி வைக்க இவர்கள் பிராமணர்களை அமர்த்துகின்றனர். ஆனேகுண்டியில் இருக்கும் வியாசராய மடத் தலைவரே இவர்களுடைய சாதிக் குருக்கள். குழந்தை மணத்தை மேற்கொள்ளும் இவர்கள் கைம்பெண்களின் மறு மணத்தை அனுமதிப்பதில்லை. மீன், ஆடு, கோழி ஆகியவற்றின் இறைச்சியை உண்ணும் இவர்கள் மதுவினைக் குடிப்ப தில்லை. செட்டி என்பது இவர்கள் பட்டப் பெயர்.'' 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் காணீகர்களின் சாதிக் குரு சிருங்கேரி மடத் தலைவர் எனவும் இவர்கள் சடங்குகளைச் செய்ய ஹவிக் பிராமணர்களை அமர்த்துவர் எனவும் கூறப்பட்டுள்ளது. தஞ்சாவூர், கும்பகோணம் போன்ற பல ஊர்களில் இருக்கும் ஸ்மார்த்தர்களின் சைவ மடங்கள் சிருங்கேரி மடம் என அழைக்கப்படுகின்றன. மைசூரில் இதே பெயரி லுள்ள ஓர் ஊரிலிருந்தே இந்த மடம் இப்பெயர் பெற்றது.

1891 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் மைசூர் மாநிலத்தைச் சேர்ந்த காணீகர் பற்றித் திரு வி.என். நாராயணசாமி அய்யங்கார் பின்வருமாறு எழுது கின்றார்:- ''இந்த வட்டாரத்தின் வழக்கு இச்சாதியினை நகர்டாக்களோடு தொடர்புபடுத்துவதோடு இடங்கைப் பிரிவின ருள் இவர்களை முக்கியமான பிரிவினர் எனவும் கூறுகின்றது. வலங்கைப் பிரிவினரான லிங்காயதரருக்கும் மற்றவர்களுக்கும் எதிரணியினராக உள்ளவர்கள் இவர்கள். சாதி உயர் வினை எப்பொழுதும் இந்தியர்கள் இயற்கைக்கு அப்பாற்பட்ட தான புராண இதிகாசங்களோடு தொடர்பு படுத்தும் பழக்கம் உடையவர்கள். பிராமணன் புருஷ சூக்தத்தின்படி தான் பிரம் மாவின் முகத்திலிருந்து தோன்றியவன் எனக் கூறுவானாகில் மற்ற சாதிப் பிரிவினரும் அது போன்றதொரு உயர்வான தோற்றத்திற்குரியவர்களாக அற்புத நிகழ்ச்சிகளோடு தங்கள் சாதியினைத் தொடர்புபடுத்திக் கூறிக் கொள்வர். காணீகர், தாங்கள் நினைவு கூற இயலாத நெடுங்காலத்திற்கு முன்பு

வட நாட்டிலிருந்து வந்தவர்கள் எனக் கூறிக் கொள்கின்றனர். காணீகர் வடக்கே இருந்து வந்தபோது மைசூரைச் சேர்ந்த மல்லராஜ் அர்ஸ் என்ற பெருமகன், பெங்களூரிலுள்ள பேட்டையில்அவர்களைக் குடியமர்த்தினாரெனவும் அடுத்து அவர்களோடு வந்த நகர்டார்கள் அங்குக் குடியமர்த்தப்பட்டனர் எனவும் அந்த இரண்டு சாதிகளையும் சேர்ந்த முக்கியமான புள்ளிகளை அச்சாதிகளுக்குரிய சட்டிகளாகவும் எஜமானர்களாகவும் ஆக்கியதோடு அவர்களுக்கு வீட்டுவரி செலுத்துவதிலிருந்து விலக்கு அளித்தாரெனவும் கூறப்படுகிறது. காணீகருள் வைணவர், சைவர், ஆகிய இரு பிரிவினரும் உள்ளனர். சென்னை மாநிலத்தில் இவர்கள் சாதிக் குரு தர்மசிவாச்சார் சுவாமி என அழைக்கப்படுகிறார். காணீகர், நகர்டார்கள் ஆகிய இருவருக்கும் பொதுவான சில குடும்பப் பெயர்கள் உள்ளன. எனினும் இவர்கள் ஒருவர் வீட்டில் மற்றவர் உண்பதோ, ஒருவரோடு ஒருவர் மண உறவு கொள்வதோ இல்லை. காணீகர்கள் விட்டுணு கோயில் உற்சவர் ஊர்வலமாகச் செல்லும்போதும் தேரோட்டத்தின்போதும் அனுமான், கருடன் ஆகியோர் சின்னங்கள் தாங்கிய கொடிகளையும் தீப்பந்தங்களையும் உடன்கொண்டு செல்லும் தனி உரிமை பெற்றுள்ளனர். இச் சின்னங்கள் சிரியாளச் சட்டி என்பவர் ஒருவர் இராமபிரானுக்கு அரிய மணியொன்றினைத் தந்த காரணத்தால் இராமபிரானால் முன்பு அளிக்கப்பட்டவை எனக் கூறுகின்றனர். காணீகர்கள் தங்களைத் தர்ம சிவாச்சார் வைசியர் என நகர்டார்கள் போலக் கூறிக் கொள்வதால் இப் பிரிவினர் இருவருள்ளும் ஏற்படும் மோதல்கள் மிகுந்த கசப்பு உணர்வினையும், எரிச்சலையும் இறுதியில் எஞ்சியிருக்கச் செய்கின்றன. சத்ஜனம் (நல்லோர்) எனப்படும் லிங்கம் அணியும் எண்ணெய் வணிகரும் இப்பிரிவில் அடங்குவர். இச்சாதியில் இவர்கள் மிகக் குறைந்த சதவீதத்தினரே எனினும் இவர்கள் மற்ற உட்பிரிவினரோடு எத்தகைய சமூக உறவுகளையும் வைத்துக் கொள்வதில்லை.

மராட்டிய அரசான சாண்டூரைச் சேர்ந்த காணீகர்கள் எண்ணெய், கல்லு என்ற இரு உட்பிரிவினர் தங்களுள் இருப்பதாகப் பதிந்துள்ளனர். இந்தக் காணீகர்களின் சராசரி தலையின்

விகிதத் தகவு அளவு மிக உயர்ந்ததாக 80.5 ஆக உள்ளது. மைசூர் நகரைச் சேர்ந்த காணீகர்களின் தலையின் விகிதத் தகவு அளவு 77.6 தான்.

"காணீகர்களின் செக்கு, பெரும்பாலும் பெரிய புளிய மரத்தின் அடி மரத்தினாலான கல்வமாகும். இது தரையில் ஆழமாகப் புதைக்கப்பட்டிருக்கும். அதன் குழியில் இரும்புப் பூணிடப்பட்ட மரத்தாலான கூம்பு பொருத்தப்பட்டிருக்கும். இதனோடு, ஒரு முனை தரையையொட்டி அமைவதான நீண்ட விட்டம் பொருத்தப்பட்டிருக்கும். இதனோடேயே செக்கினைச் சுற்றி இழுக்கும் எருதுகளையோ எருமைகளையோ பூட்டுவர். இழுப்பு விசைகளின் உதவியால் செக்கின் நடுவில் சுழலும் கூம்பின் அழுத்தத்தை விருப்பம்போல் குறைக்கவோ கூட்டவோ செய்யலாம். எருதுகள் செக்கினைச் சுற்றி வரும்போது கூம்பின் அழுத்தத்தால் எண்ணெய் வித்துக்கள் நசுக்கப்பட்டு எண்ணெய் அடியில் தங்க அழுக்கும் புண்ணாக்கும் கல்வகத்தின் பக்கங்களில் படிகின்றன.''*

ஒண்டெத்து காணீகர் பற்றிய குறிப்பு வருமாறு:- இவர்கள் செக்கில் இரண்டு எருதுகள் பூட்டும் காணீகர்களை விடத் தங்களை உயர்ந்தவர்களாகக் கருதுகின்றனர். ஒண்டெத்து காணீகர் வலங்கைப் பிரிவைச் சேர்ந்தவர்கள். இரண்டு எருதுகள் பூட்டுவோர் இடங்கைப் பிரிவைச் சேர்ந்தவர்கள். இவர்களிடையே பல உட்பிரிவுகள் உள்ளன. அவற்றுள் தேவ பிரிவினரும் ஒண்டெத்துப் பிரிவினரும் மண உறவு கொள்கின்றனர். காசி, தெளி, சந்தனபு ஆகிய பிரிவுகள் அகமணக்கட்டுப்பாடு உடையவை. பிற தெலுங்குச் சாதியாரைப போலவே இவர்களிடையேயும் பல உட்பிரிவுகள் உள்ளன. இவற்றுள் சில விசித்திரமான தடைகளுக்கு உட்படுவனவாம். சான்றாகப் பத்ரனொல்லு, பலனொல்லு கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் செம்புளிச்சம் (*Erythroxylon monogynum*) மரத்தினை வெட்டமாட்டார்கள். வீரனொல்லு, வித்தனொல்லு கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் கருவிளம் (*Feronia elephantum*) மரத்தையும், வேதனொல்லு

---

* பெல்லாரி மாவட்ட விவரக் குறிப்பு (Gazetteer of Bellary district.)

கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் பவளமல்லிகை(*Nyctanthesarbor-tristis*) மரத்தையும் வெட்ட மாட்டார்கள். சில கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் மஞ்சள், கரும்பு, சாமை ஆகியவற்றைப் பயிரிடுவதில்லை.

ஒண்டெத்து காணீகர் சைவர்கள். இவர்களுக்கு லிங்காயத பிராமணர்களான ஆராத்தியர்களே குருமார்.சிலர் பூணூல் அணிவர். வேறு சிலர் வைணவர்களுக்குரிய நாமமான சிவப்புக் கோட்டினை நெற்றியில் இடுவர். சில இடங்களில் நெசவாளர்களின் தெய்வமான சௌடேசுவரரைச் சிறப்புத் தெய்வமாக வழிபடுகின்றனர். கிருட்டிணா மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள் மல்லிகார்ச்சுனரைத் தங்கள் தெய்வமாகக் கொண்டுள்ளனர்.

இவர்களுடைய முக்கிய தொழில் எண்ணெய் ஆட்டுதலே. எனினும் சிலர் பருத்தி, எண்ணெய் வித்துக்கள் ஆகியவற்றை வாங்கி விற்கும் வணிகர்களாகவும், வேறுசிலர் பயிர்த்தொழிலாளராகவும் உள்ளனர். சில வட்டாரங்களில் செக்கில் பூட்டப்படும் எருதுகளின் கண்கள் கட்டப்படுவதில்லை. பிற இடங்களில் அவற்றின் கண்களைக் கட்டுகின்றனர். அவ்வாறு கட்டவில்லையானால் அவை சில சுற்றுக்கள் வந்தபின் விழுந்துவிடும் எனச் சொல்லப்படுகிறது. சாஸ்திரங்களில் சொல்லியுள்ளபடி எள்ளினைச் செக்கிலிட்டு ஆட்டுவது பாவச் செயலாகும். தேவதாக்கள் இதனை விளக்கேற்றப் பயன்படுத்துவதாலும், மக்கள் இதனைக் கோயிலில் விளக்கேற்றப் பயன்படுத்துவதாலும் அப்பாவத்திற்கு அவை பரிகாரம் ஆகின்றன. புண்ணாக்கை வெளியே எடுக்கவும், செக்கில் எண்ணெய் விதைகளைத் தள்ளிவிடவும் இடக் கையினையே பயன்படுத்த வேண்டும். குற்றம் இழைத்தவர்களின் நாக்கினைப் பொன் கட்டியால் சுடுவது அவர்களைத் தூய்மைப்படுத்துவதாகக் கருதப்பட்டு வருகிறது.

காணீகர் மணச் சடங்குகள் தெலுங்கர்களுடைய மணச் சடங்குகளையே பெரிதும் ஒத்துள்ளன. கையில் கங்கணம் கட்டும்பொழுது உப்பினைக் கையில் வைத்துக் கொள்வது இவர்கள் வழக்கம். மணமகனிடம் அப்போது ஒரு குத்து வாளினைத் தருவர். அவன் அதனை மணச்சடங்குகள் முடியும்வரை

தன்னுடனேயே வைத்திருப்பான். மண நாளன்று மணமகன் பூணூல் அணிந்து கொள்வான். தாலி சாதாரணப் பொட்டாக இல்லாமல் 101 மெல்லிய நூலிழைகளால் ஆனதாக இருக்கும். அதனை மணச் சடங்கின் இறுதி நாளன்று அகற்றிவிட்டு அதற்குப் பதிலாகப் பொட்டினை அணிவிப்பர். மணச் சடங்கின் மூன்றாம் நாளன்று மணமக்கள் ஒரு வன்னி (*Prosopis spicigera*) மரத்தை வழிபட்டு அதற்கு மலர்மாலை அணிவிப்பர். பால தாசலு என அழைக்கப்படும் ஐந்து சிறுவர்களும் உடன் சென்று அம்மரத்தை வழிபடுவதோடு தாங்கள் பூணூல் அணிந்திருப்பின் அதனையும் அம்மரத்தின் மேலிடுவர். இறந்தவர்களைப் புதைப்பதே வழக்கம். இறந்தவர் சமய நெறிப்பட்ட ஒழுக்கம் மேற்கொள்ளும் சைவராயின் உட்கார்ந்த நிலையில் புதைக்கப்படுவார். மணமாகாது இளமையிலேயே இறந்து போகும் இளைஞர்களின் பிணத்துக்கு ஓர் எருக்கஞ்செடியினை மணம் செய்விப்பர். அப்பிணத்திற்கு எருக்கம் பூ மாலை அணிவிக்கப்படும். சாவுச் சடங்கின் இறுதி நிகழ்ச்சி பதினொன்றாம் நாள் நடைபெறும். காக்கைகளுக்கு உணவு வழங்குவதோடு ஒரு மரக் கொம்பினுக்கு ஆடைகள் அணிவித்து அதனை இறந்து போனவருடைய ஆவியாகப் பாவித்து அதற்கும் படையலிடுவர். கைம்பெண்களின் வளையல்கள் அந்தக் கட்டையின் முன் உடைக்கப்படும். அதனை இறுதியாக ஆற்றிலோ குளத்திலோ கொண்டு விடுவர்.

லிங்காயதர்களான எண்ணெய் வணிகர்களும் எண்ணெய் ஆட்டும் தொழிலாளியாக அமர்த்தப்படும் மோகெர்களும் காணீகர் எனத் தொழில்காரணமாகப் பெயர் பெற்றுள்ளனர்.

**கண்ட - Ganta**

மணி எனப் பொருள்படும் இது கம்மர், பலிசர் ஆகியோரின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலமாகப் பதியப்பட்டுள்ளது. தொங்க (திருட்டு) தாசரி, குற்றமிழைப்போரான இவர்கள் பிரிவில் சென்று சேரும் கப்பேரர் ஆகியோரின் குடும்பப் பெயராக கண்டலவாரு உள்ளதெனத் திரு எஸ். எம். நடேச சாஸ்திரி

தெரிவித்துள்ளார்.* 1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கண்டு காசுல என்பது கொறசர்களின் ஓர் உட்பிரிவாகக் கூறப்பட்டுள்ளது. விசாகப்பட்டினம் மாவட்டக் கையேட்டில் திரகடி கண்டலவாலு சிறிய இயந்திரங்களைப் பழுதுபார்ப்பவர்களாகவும் இரலை மானைப் பிடித்து அதன் தோலினை விற்பதில் ஈடுபடுபவர்களாகவும் கூறப்பட்டுள்ளது.

**கண்டி - Ganti (a hole pierced in the car-lobe)**

காது மடலில் இடப்படும் துளை எனப் பொருள்படும் இது கூடலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலப் பெயராகும்.

**காரடி - Gāradi**

காரடி அல்லது காரடிகர் தெலுங்கு, மைசூர் பகுதிகளைச் சேர்ந்த பாம்பாட்டிகளுக்குரிய பெயர். இரவலர்களான இவர்கள் கைச்சால வித்தைகளைக் காட்டுவதோடு போலி மருத்துவர்களாக ஏமாற்றுக்களையும் நிகழ்த்துவர்.

**கரப்ப - Garappa (dry land)**

சல்ல ஏனாதியருக்கான மற்றுமொரு பெயர். புன்செய் எனப் பொருள்படும்.

**கட்டி - Gatti**

தென் கன்னட மாவட்டத்தில் உள்ளகாசர்கோடு வட்டத்தில் கும்பல, சோமேசுவரம் ஊர்களைச் சுற்றியே பெரும்பாலும் காணப்படும் பயிர்த்தொழிலாளர். பொலதவ, ஹொலதவ என்பன இச்சாதியைக் குறிக்கும் வேறு பெயர்களாகும். இவை நிலத்தில் உழைப்பவர் எனப் பொருள்படுவன. பண்டர்களைப் போலவே இவர்களும் அளிய சந்தானச் சொத்துரிமை (பெண் வழிச் சொத்துரிமை) மரபினை மேற்கொள்வதோடு பலிகள் எனப்படும் புறமணக்கட்டுப்பாடு உடைய பிரிவுகளையும் பெற்றுள்ளனர். சமூகத்தைச் சேர்ந்த பெரிய மனிதர் இறந்தால்

---

* கல்கத்தா ரெவ்யூ, 1905. (Calcutta Review, 1905.)

பண்டரைப் போலவே சாவுச் சடங்கின் இறுதி நாளன்று தேர் கட்டுவர். கண்டர்களும் கட்டிகளும் ஒருவர் வீட்டில் மற்றவர் உண்பர் எனினும் இவர்களிடையே மண உறவு நிகழ்வதில்லை. கட்டிகளின் சாதித் தலைவன் குரிக்காரன் எனப்படுவான். சோமேசுவரத்தில் இருக்கும் கடவுளே இவர்கள் சாதித் தெய்வம். ஒவ்வொரு குடும்பமும் ஆண்டுதோறும் இக்கோயிலுக்கு நான்கணா வரியாகச் செலுத்த வேண்டும். இதனைச் செலுத்தாதவர்கள் சாதி விலக்குச் செய்யப்படுவார்கள்.

**கட்டு - Gattu (bank or mound)**

தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலத்தின் பெயர். கரை எனப் பொருள்படும்.

**கவுட் - Gaud**

சாதர்களின் பட்டப்பெயர்களுள் ஒன்று.

**கவுட - Gauda**

கவுட அல்லது கவுடொ என வழங்கப்படும் பெரும் எண்ணிக்கையினரான இச் சாதியார் கன்னடம் பேசும் பயிர்த் தொழிலாளரும் கால்நடை வளர்ப்போரும் ஆவர். "கவுட, கவுடொ என்பன உண்மையில் இரு வேறு சாதிகள். முன்னவர் கன்னடம் பேசுபவர்கள். பின்னவர் ஒரிய மொழி பேசுபவர்கள். இந்த இரண்டு பெயர்களையும் ஒன்றுக்குப் பதிலாக மற்றதை மாற்றி மாற்றிச் சொல்லும் வழக்கம் உண்டு. இந்த இரு பெயர்களும் பசு எனப் பொருள்தரும் வடமொழியான 'கோ' என்ற சொல்லடியாகப் பிறந்தனவென்றே நான் கருதுகின்றேன். ஆனால் முனைவர் கெஸ்டவ் ஒப்பெர்ட்* மலை எனப் பொருள்படும் திராவிட வேர்ச்சொல்லே கௌட என்பதின் அடிச் சொல்லாதல் வேண்டும் என்பார். கன்னடியர்களிடையேயும், சிறு அளவில் ஒரியர்களிடையேயும் இது மரியாதைக்குரிய பெயராகவும் வழங்கப்படுவதால் முனைவர் ஒப்பெர்ட் அவர்களின் விளக்கம்

---

* பாரத தேசத்துத் தொல்குடிகள். (Original Inhabitants of Bharata-varsha.)

அதற்கு எப்படிப் பொருந்தும் என்பது புரியவில்லை'' என 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் திரு எச். எ. ஸ்டுவர்ட் எழுதியுள்ளார். அவரே மேலும் தென் கன்னட மாவட்டக் கையேட்டில் எழுதியுள்ளது வருமாறு:- கவுடொக்கள் ஹால்வாக்குலுமக்களு (பால் வகுப்பார் குழந்தைகள்) எனவும் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் தென் கன்னட மாவட்டத்தில் எண்ணிக்கையில் மிகுதியாக உள்ளனர். இவர்களிடையே விரிவான சாதிக் கட்டுப்பாட்டு நடைமுறைகள் வழக்கத்தில் உள்ளன. ஒவ்வொரு ஊரிலும் கிராம கவுடொ, வட்டு அல்லது கட்டு கவுடொ எனப்படும் இரண்டு சாதித் தலைவர்கள் உள்ளனர். எட்டு அல்லது ஒன்பது ஊர்களுக்கு உரிய மாகணே கவுடொ என்ற தலைவரும், ஒன்பது மாகணே தலைவர்களுக்கு மேலே அதிகாரம் செலுத்தும் கட்டேமனேயவர் என்ற தலைவர்களும் உள்ளனர். இச்சாதி பதினெட்டுப் பலிகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. இப்பலிகள் புறமணக்கட்டுப்பாடுடைய குலங்களின் இயல்பின எனலாம். இந்த பலிகள் சிலவற்றின் பெயர்கள் வருமாறு:- பங்கார (பொன்), நந்தர, மலார (வளையல்கட்டு), சாலு, ஹெம்மன (போலிப் பெருமை), கப்ரு, கோளி (*Portulaca oleracea* - பருப்புக் கீரை), பசறு வொகாரு (பசறு-வயிறு), பல சண்ண, கர்மன்னாய. வயது வந்தபிறகே பெண்கள் மணம் செய்விக்கப்படுவது வழக்கம். திருமணத்திற்கு முன் சாதியைச் சேர்ந்தவர்களோடு உடலுறவு கொள்வது பெயரளவில் கண்டிக் கப்பட்டாலும் பெருங்குற்றமாகக் கருதப்படுவதில்லை. தாரெ மணமுறை (பார்க்க : பண்டர்) யையே இவர்கள் மேற்கொள் கின்றனர். எனினும் மணமக்கள் தாரெ சடங்கின்போது தம் கைகளில் வெற்றிலை, ஒரு பாக்கு, நான்கணா ஆகியவற்றை வைத்திருப்பர். தாரெ நீர் வார்த்தபின் மணமகன் மணமகள் கழுத்தில் தாலி கட்டுவான். மணமுறிவு உரிமை தாராளமாக வழங்கப்படுவதோடு, மணமுறிவு செய்துகொண்ட பெண் களும், கைம்பெண்களும் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக் கப்படுகின்றனர். குழந்தைகளை உடைய கைம்பெண் தன் கணவனின் அண்ணனையே மணந்து கொள்ள வேண்டும் என் பது விதி. அவள் வேறொருவனை மணப்பாளாயின் அவளு டைய முந்தைய கணவனின் குடும்பத்தார் அவள் கையால்

தண்ணீர் கூட வாங்கிப் பருகமாட்டார்கள். இறந்தவர்களை இவர்கள் எரிக்கின்றனர். மூன்றாம் நாள் எரிக்கப்பட்ட சாம் பலைத் திரட்டி ஒரு மனித உருவினை அமைப்பர். அதனை இரண்டாக வெட்டிப் புதைத்தபின் அதன்மீது மேடை இடுவர். வீட்டில் தரையில் இரண்டு பலகைகளை இட்டு அவற்றின் மேல் துணியிட்டு மூடுவர். அப்பலகைகளில் ஒன்றின் மேல் பாலுள்ள பாத்திரம் ஒன்றை வைப்பர். மற்றொன்றின் மேல் விளக்கேற்றி வைத்து அரிசி, தேங்காய், பூசணி ஆகியனவற்றை வைப்பர். இறந்தவரின் பங்காளிகளும் சில சிறுவர்களும் அந்தப் பலகையை மும்முறை வலம் வந்தபின் அவற்றின் மீதுள்ளனவற்றை ஒரு துணியில் எடுத்துக் கொண்டு சுடுகாட்டில் இடப்பட்டுள்ள மேடையை அடைவர். அதன் முன் மூன்று இலைகளிட்டுச் சோறு முதலியனவற்றைப் படைப்பர். மேடையின் நான்கு மூலைகளி லும் நான்கு கால்கள் நட்டு, அவற்றின் மேலும் சுற்றிலும் துணிகளைக் கட்டுவர். பதினாறாம் நாள் பதினாறு இலைகள் ஒரே வரிசையாகப் போடப்படும். ஒரு இலை மட்டும் தனியே இடப்படும். பணியாரங்கள், கோழிக்கறி, சாராயம், கள் ஆகியன சிறு தொன்னைகளில் இலையில் படைக்கப்படும். கூடியுள்ள பங்காளிகள் அப்போது, 'நாங்கள் செய்ய வேண்டிய அனைத் தையும் செய்து விட்டோம். இறந்து போன எங்கள் முன்னோர் கள் இப்போது இறந்துபோன இவரையும் தங்கள் வாழ்விடத் திற்கு அழைத்துக் கொள்ள வேண்டும். அவருக்கான இலை பதினாறு இலைகளின் வரிசையைவிட்டுத் தனியே போடப் பட்டுள்ளது'' எனக் கூறுவர்.

''ஆண்டுக்கு ஒரு முறை ஆனி மாதத்தில் கவுடொக்கள் இறந்துபோன தங்கள் மூதாதையர் அனைவரையும் திருப்திப் படுத்த ஒரு சடங்கினை நடத்துகின்றனர். ஆண்டுக்கு ஒருமுறை புரட்டாசி மாதத்தில் வேங்கடரமணசாமிக்குச் சிறப்பான பூசை கள் நடத்துவதோடு காணிக்கைகளையும் செலுத்துகின்றனர். தங்கள் தீட்டினைப் போக்கத் தீர்த்தம் வழங்க மட்டுமே இவர் கள் பிராமணர்களை அமர்த்துகின்றனர். மற்ற சாதாரணச் சடங்குகளுக்கு இவர்கள் பிராமணர்களை அமர்த்துவதில்லை. இவர்களில் பெரும்பாலோர் பயிர்த்தொழில் செய்வோர். ஒரு

சிலர் கூலிகளாகவும் தொழில் செய்கின்றனர். இவர்கள் ஒரு நாளைக்கு மூன்று அல்லது நான்கு சேர் நெல்லினைக் கூலி யாகப் பெறுகின்றனர். சில இடங்களில் வீட்டில் துளு பேசுகின்றனர். மற்ற இடங்களில் கன்னடம் பேசுகின்றனர். எனினும் அனைவரும் மக்கள் வழிச் சொத்துரிமை முறையையே பேணுகின்றனர். அளிய சந்தான முறை பின்பற்றப்படுவ தில்லை. கவுடொ என்பது இவர்களுக்குரியப் பட்டப்பெயர்.''

தென் கன்னட மாவட்டத்தைச் சேர்ந்த மக்களின் மூட நம்பிக்கை தொடர்பாக 1908-இல் மாவட்ட நீதி மன்றத்தில் நடைபெற்ற பின்வரும் வழக்கினை எடுத்துக் காட்டலாம். தன் னுடைய சகோதரியின் கணவனோடு கொண்ட உறவால் கவுடொசாதியைச் சேர்ந்த ஒரு இளமங்கை கருவுற்றாள். மூன்று நாள் மகப்பேறு வலிக்குப் பின் அவளுக்குக் குழந்தை பிறந் தது. அந்தப் பெண்ணின் தாயான வழக்கில் குற்றம் சாட்டப் பட்டவளே மருத்துவச்சியாக மகப்பேறுபார்த்தவள். குழந்தைப் பேறு தொல்லையானதாக இருப்பதைக் கருத்தில் கொண்டு அவள் கொரப்புல்லு என்பவளை உதவிக்காக அழைத்துள்ளாள். அவர்கள் எதிர்ப்பார்த்தபடியே குழந்தை இறந்தே பிறநதது. அதன் நெற்றியில் பந்து போன்ற சிவந்த புடைப்பு இருந்த தோடு, அதன் முன் கைகளிலும் இரண்டு மூன்று சிவப்பு வளை யங்கள் காணப்பட்டன. கண்களும் காதுகளும் வழக்கத்திற்கு மாறாகத் தலையில் உயர்ந்த இடத்தில் அமைந்திருந்தன. கண்கள். காதுகள், வாய் ஆகியன வழக்கத்தைவிட மிகப் பெரியனவாக இருந்தன. கொரப்புல்லுவும் அந்த பெண் ணின் தங்கையும் உடனே மகப்பேறு நிகழ்ந்த புற அறை யிலிருந்து பிள்ளைப் பெற்றவளை அந்தப் பிசாசுக் குழந்தை அதன் தாய்க்குத் தீங்கு செய்யவோ கொல்லவோ கூடும் என அஞ்சி வேறிடத்திற்குத் தூக்கிச் சென்று விட்டனர். புறக் கடை வாசலில் நின்றிருந்த ஈசுப் சாய்ப என்பவனைக் குற்றம் சாட்டப்பட்டவள் அழைத்தாள். அவன் உள்ளே வந்ததும் அவள் என்ன செய்வது என முடிவெடுக்கப் பக்கத்து வீட்டுக் காரர் சிலரை அழைக்கும்படி அவனிடம் கூறினாள். அந்தக் குழந்தை பிசாசுக் குழந்தை என்றும் வெட்டிக் கொல்லா

விட்டால் அது அதன் தாயைத் தின்றுவிடும் என்றும் அவள் அவர்களிடம் கூறினாள். அனைவரும் அதனைப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அக்குழந்தை அசையத் தொடங்கிய தோடு கண்களையும் உருட்டிப் பார்த்துத் தரையில் கவிழ்ந்தது. அத்தகைய பேய் குழந்தைகள் பிறந்தபின் அதனை வளர்த்தால் அது காற்றோடு தொடர்பு கொண்டபின் மிக வேகமாக வளர்ந்து பெருந்தொல்லைகள் தந்து, பெற்ற தாயைக் கொல்வ தோடுகூடக் குடும்பத்தில் உள்ள அனைவரையும் கொன்று விடும் என்ற நம்பிக்கை உடையவர்கள் சிற்றூர் மக்கள். குற்றம் சாட்டப்பட்டவள் கேட்டுக்கொண்டபடி ஈசுப் சாய்ப அந்தக் குழந்தையை ஒரு பானையால் மூடினான். அதன்பின் அதனுள் இருந்து குழந்தை அசைவதாலோ அழுவதாலோ ஓசை வெளிப்பட்டது. உடனே குற்றம் சாட்டப்பட்ட வள் பானையின் அடியில் கையை விட்டுக் குழந்தையைப் பாதி வெளியே இழுக்க ஈசுப் சாய்ப அந்த மண்பானையின் விளிம் பினைக் குழந்தையின் வயிற்றின் மீது வைத்து அழுத்தக் குற்றம் சாட்டப்பட்டவள் ஒரு கத்தியால் குழந்தையை இரு துண்டு களாக வெட்டினாள். குற்றம் சாட்டப்பட்டவள் இரண்டு பாக்கு மட்டைகளைக் கொண்டு வந்து அந்தத் துண்டங்களைத் தனித் தனியே அவற்றில் வைத்தபின் ஒரு மண் வெட்டியைக் கொண்டு வந்து அவற்றைப் புதைக்கும்படி ஈசுப் சாய்பாவிடம் கூறினாள். அவர்கள் வீட்டிற்கு அருகே உள்ள காட்டிற்குச் சென்றனர். ஈசுப் சாய்ப சிறு குன்றின் மீது ஒன்றும், மற்றொரு சிறு குன்றின் மீது ஒன்றுமாக அரைக்கெசம் ஆழமுள்ள இருகுழிகளைத் தோண்டி னான். அந்த இரு துண்டங்களும் புதைகுழியினைவிட்டு வெளி வந்து மீண்டும் ஒன்று சேர்ந்து தன் தாயினைக் கொன்றுவிடக் கூடும் என்பதாலேயே இவ்வாறு தூரத்தூரக் குழிகள் தோண்டப் பட்டன. அந்த இரண்டு குழிகளிலும் தனித்தனியே இரு துண் டங்களும் புதைக்கப்பட்டன. இதுபோல ஒரு பிசாசுக் குழந்தை பிறந்ததும் பின் இறந்ததும் இரகசியமாக வைக்கப்படவில்லை. அதனை ஊரார் அனைவரும் அறிந்து இருந்தனர்.

கவுட அல்லது கவுடு என்பது ஈதிகர், குருபர், வக்கலிகர் ஆகிய சாதியாரின் பட்டப் பெயராகவும் குருபர், குர்ணி சாதி

யாரின் புறமணக்கட்டுப்பாடுடைய குலப் பெயராகவும், கோல்லர் சாதியின் உட்பிரிவாகவும் வருகிறது.

## கவுடி - Gaudi

*1901* மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் மலெரு (கோயிற் பணிப்பெண்) ஒருத்தி தன் சாதியை விடத் தாழ்ந்த ஒருவனோடு உடல் உறவு கொள்ளின் அவள் கவுடியாக தாழ்த்தப்படுகிறாள் எனப் பதியப்பட்டுள்ளது.

## கௌடோ - Gaudo

*1891, 1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கைகளில் கௌடோக்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளதாவது:- "இவர்கள் கஞ்சம் மாவட்டத்தைச் சேர்ந்த ஒரிய மொழி பேசும் முல்லை நிலச் சாதியார். மாடு மேய்க்கும் மற்ற இனத்தவர்களைப் போலவே இவர்களும் தங்களைக் கண்ணன் பிறந்த யாதவ குலத்தைச் சேர்ந்தவர்கள் எனக் கூறிக் கொள்கின்றனர். (பார்க்க: இடையர்). வட மாவட்டங்களைச் சேர்ந்த கௌடோக் களில் பெரும்பான்மையானவர் இப்பொழுது பயிர்த்தொழி லிலேயே ஈடுபட்டுள்ளனர். எனினும் இவர்களுடைய பரம்பரைத் தொழில் கால்நடைகளைப் பெருக்குவதும் வளர்ப்பதும்தான் என்பதற்கான சான்றுகள் உள. இச் சாதியின் மிக முக்கியமான உட்பிரிவினர் சொல்லொ கொண்டியர். இவர்களில் பலர் ஆடு மாடு மேய்ப்பவர்களாகவும், பால் விற்பவர்களாகவும் உள்ளனர். அபொடொ, பேகரர், பொலொடியர், தொங்க யட்டொ, துமாலொ, கோபொபுரியர், கொலாடர், கொமிரியர், கௌசில்யர், லாடியர், மதுராபுரியர், மகொதொர், பட்டிலியர், சொல்லொகொண்டியர் என்ற பதினான்கு உட்பிரிவினர் இச்சாதியில் இருப்பதாகக் கூறப்படுகிறது." *1871* கணக் கெடுப்பு அறிக்கையில், "கால்நடை வளர்ப்பினால் பெருஞ் செல்வம் சேர்த்துச் சமூகத்தில் உயர்நிலை பெற்றுள்ள கௌ டோக்கள் பலர் உள்ளனர். இவர்களில் பலர் பெரும் எண்ணிக் கையிலான எருமைகளைப் பெற்றுள்ளனர். அவை பெரும்

பரப்பிலான மலைப்பகுதிப் புல்வெளிகளில் மேய்ந்து நன்கு வளர்ந்துள்ளதால் சமவெளிப் பகுதிகளில் உள்ள வண்டியோட்டிகள் அவற்றைச் சுமை வண்டிகள் இழுக்க ஏற்றவையாகக் கருதி வாங்குகின்றனர்'' எனக் கூறப்பட்டுள்ளது.

மேலே கூறப்பட்டுள்ள உட்பிரிவுகளில் பேகரர் என்பது வெறும் பட்டப்பெயர்தான் எனத் தெரிகின்றது. பொலொடியர் தான்யம் சுமந்து செல்லப் பொதி மாடுகளைப் பயன்படுத்தும் தெல்லிகள் பிரிவிற்குரிய பெயராகும். பச்சிலியர் என்பது தவறாகப் பட்டிலியர் எனக் குறிக்கப்பட்டிருக்க வேண்டும். கஞ்சம் மாவட்டத்தில் உள்ள எல்லாச் சாதியாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கௌடோக்களின் உட்பிரிவுகள் சொல்லொகொண்டியர், மதுராபுரியர், மொகொதொர், அபொட்டொர், பச்சிலியர் என்பனவாம். இவற்றுள் கோபாபுரியர், மதுராபுரியர் ஆகிய இரு பிரிவினரையும் தவிர எஞ்சிய பிரிவினர் அகமணக் கட்டுப்பாடுடைய உட்பிரிவினராதல் வேண்டும். பட்ட கௌடோக்கள் சில இடங்களில் கோபொபுரியர் எனவும் வேறு சில இடங்களில் மதுராபுரியினர் எனவும் வழங்கப்படுகின்றனர். இந்த இரண்டு பிரிவுகளின் பெயர்களும் இச்சாதியின் தோற்றம் தொடர்பான பரம்பரை வரலாற்றோடு தொடர்புடையன. அபொட்டொ கௌடோக்களும் பட்ட கௌடோக்களும் பல்லக்குச் சுமப்பவர்களாகவும் சிலபோது அமர்த்தப்படுகின்றனர். மலைப் பகுதிகளில் வாழும் மொகொதொகௌடோக்கள் பிரிவினர் கோழிக்கறி தின்பதால் தாழ்ந்த பிரிவினராகக் கருதப்படுகின்றனர். சொல்லொகொண்டிய பிரிவினர் உயர்ந்த சாதியினராகக் கருதப்படுவதால் பிராமணர்,பிராமணரல்லாதர் ஆகிய அனைவரும் இவர்களிடம் நீர் வாங்கிப் பருகுவர். சமய நெறிப்பட்ட ஒரியரான பிராமணரல்லாதார் மற்றும் ஒரிய பிராமண வகுப்பார் அனைவரும் தெலுங்கு அல்லது தமிழ்ப் பிராமணரிடம் தண்ணீர் வாங்கிப் பருகார். தெலுங்கு, தமிழ்ப் பிராமணர்களை இவர்கள் கொம்ம பிராமணர் என்பர். கொம்ம என்பது கர்ம என்பதன் சிதைந்த வடிவமாகும். அதாவது இவர்கள் கர்மங்களைக் கடைப்பிடிப்பதில் கண்டிப்பானவர்கள் என்பது பொருள்.

சொலொகொண்டிய கௌடோக்கள் பயிர்த்தொழிலையும் கால்நடை வளர்த்தலையும் மேற்கொண்டுள்ளனர். சிலபோது வண்டியோட்டியும் வாழ்க்கை நடத்துகின்றனர். இவர்களிடையே கோத்திரங்கள் உள்ளன. மொய்ரொ (மயில்), நாகசிரொ (நாகப் பாம்பு), கொச்சிமோ (ஆமை) ஆகிய கோத்திரங்களைச் சேர்ந்தவர்களே மிகுதியானவர். மகாகுடோ என்ற பரம்பரைச் சாதித் தலைவனே சாதிக் கூட்டங்களுக்குத் தலைமை ஏற்கிறான். இவனுக்குப் பொல்லொபைய, திசிய, கொர்சொதா அல்லது தொண்டிய என்ற உதவியாளர்கள் உளர். கொர்சொதா சாதிக்குரிய அடிமைப் பணியாள் ஆவான். பஞ்சாயத்தாரால் விசாரிக்கப்பட்டவனை மீண்டும் சாதியில் சேர்த்துக் கொள்ளும்போது அவனோடு கொர்சொதா உடன் உண்பான். சொலொகொண்டியர் பெரிதும் சைதன்யர் போதித்த வைணவமாகிய பரமார்த்திகர்களாகவே உள்ளனர். சகன்னாதசுவாமியிடத்து இவர்கள் தனிப்பட்ட பற்று உடையவர்கள். தாகுராணிகள் எனப்படும் ஊர்த்தெய்வங்கள் பலவற்றையும் இவர்கள் வழிபடுகின்றனர். பைராகிகளே இவர்கள் சாதிக்குரிய பூசாரிகள்.

மற்ற ஒரிய சாதியாரிடையே காணப்படும் திருமணக் கட்டுப்பாடுகள் இவர்களிடையேயும் உள்ளன. மேநரிகம் எனப்படும் தாய்மாமன் மகளை மணத்தலைச் சிலபோது மேற்கொள்கின்றனர். மண நாளுக்கு முந்தியநாள் மாலை மணமக்களைச் சேர்ந்த உறவினர்கள் விருந்து உண்டபின், மணச் சடங்கில் பயன்படுத்துவதற்குரிய பொருள் அனைத்தையும் எடுத்துக் கொண்டு ஒரு கோயிலுக்குச் செல்வர். அங்கிருந்து திரும்பும் வழியில் மணமான ஏழு பெண்கள், ஏழு இல்லங்களுக்குச் சென்று, ஏழு பாத்திரங்களில் தண்ணீர் கேட்டுப் பெற்று வாங்கி வருவர். அத் தண்ணீரை மறுநாள் மணமக்கள் குளிக்கப் பயன்படுத்துவர். மண நாளன்றோ அதற்கு முந்திய நாளோ மணமகனுக்கு முகம் மழிக்கப்படும். மணமக்களின் நகங்கள் வெட்டப்படும். சிலபோது அவள் தலையின் முன் மயிர் சிறிது களையப்படுதலும் உண்டு. இவர்கள் மணச் சடங்குகள், பொந்தாரியர் மணச் சடங்குகளிலிருந்து நடப்பில் எவ்வகையிலும் வேறுபட்டதாக இல்லை. (பார்க்க; பொந்தாரியர்)

குழந்தைகள் தவிர இறந்து போனவர்கள் எரிக்கப்படுகின்றனர். மூத்த மகன் சுடுகாட்டிற்குத் தீச் சட்டியைத் தூக்கிச் செல்வான். பிணம் எரிக்கப் பட்ட மறுநாள் துக்கம் கொண்டாடுபவர்கள் அங்கு மீண்டும் சென்று, தணலை அணைத்தபின் பிணம் எரித்த சாம்பலைக்கொண்டு ஒரு மனித உரு அமைப்பர். இந்த உருவத்திற்குச் சோறு படைக்கப்படும். மஞ்சள் நீரில் தோய்க்கப்பட்ட ஏழு சிறிய கொடிகளை அந்த உருவின் தோள்கள், வயிறு, கால்கள், தலை ஆகிய இடங்களில் நடுவர். நெருப்பில் வெந்த எலும்பு ஒன்றினை எடுத்து மாட்டுச் சாணத்தில் வைத்து அதனை இறந்து போனவர் வீட்டருகிலோ குளக் கரை அருகிலோ சேர்ப்பர். ஒன்பதாம் நாள் மாலையில் ஒரு மூங்கிலின் ஒரு முனையினை நான்காகப் பிளந்து அதன் மறு முனையினை வீட்டு வாசலின் கூரையின் கீழ் நட்டுப் பிளந்த முனையில் தண்ணீர் வைப்பர். வீட்டினுள் இறந்தவர் உயிர் துறந்த இடத்தில் விளக்கேற்றி வைப்பர். அதன்பின் பானையில் அடியில் துளை இடப்பட்டு இறந்தவருக்குச் சோறு படைக்கப்படும். இறுதியில் பானையினைத் தூக்கி ஒரு குளத்தில் எறிவர். பத்தாம் நாள் குளக்கரையில் ஒரு சடங்கு நடத்தப்படும். பசுஞ்சாணத்தில் புதைத்து வைக்கப்பட்ட எலும்பினை வெளியே எடுத்து அதற்குச் சோறு, பழம் முதலியன படைப்பர். அங்கிருந்து அந்த எலும்பினை வீட்டருகே கொண்டு போய்ப் புதைப்பர். பன்னிரண்டாம் நாள் வரை அதற்குச் சோறு படைக்கப்படும். பதினொன்றாம் நாள் பங்காளிகள் அனைவரும் குளிப்பர். தீட்டு நீக்கும் அடையாளமாக நெய் பூசப்படுவர். ஆண்டுக்கு ஒருமுறை சங்கராந்தி தினத்தன்று சிரார்த்தம் நடத்தப்படும். அப்போது சோற்றினை உருண்டையாகப் பிடித்து வீட்டின் புறக்கடையில் இலையில் படைப்பர். கொஞ்சம் சோறு ஆகாயத்திலும் வீசப்படும்.

கௌடோக்களின் எல்லாப் பிரிவினரும் குழந்தை மணத்தையே பேணுகின்றனர். ஒரு பெண் பருவம் அடையும் முன் கணவனைப் பெறத் தவறுவாளாயின் அவள் 'தர்மபிபாஹ்' என்னும் சடங்கினைச் செய்துகொள்ள வேண்டும். சொலொ கொண்டியர் பிரிவில் இச் சடங்கில் அந்தப் பெண்ணின்

பாட்டனாரே மணமகன் இடத்தை வகிப்பார். வேறு பிரிவினருள் அப்பெண் ஒரு பிரச (*Streblus asper*) மரத்திற்கோ ஓர் அம்பிற்கோ மணம் செய்விக்கப்படுவாள்.

பிற ஒரிய சாதியினரைப் போலவே கௌடோக்களும் நவம்பர் மாதத்தில் வியாழக்கிழமைகளில் (ஐப்பசி – கார்த்திகை) லட்சுமி தேவியை வழிபடுகின்றனர். அந்த நாள் லட்சுமி வாரம் எனச் சிறப்பிக்கப்படுகிறது. கூடை நிறையத் தானியத்தை நிரப்பி அதனையே லட்சுமி தேவியாகப் பாவிக்கின்றனர். சிலர் அக் கூடையின் மீது பசுமாடு கக்கிய மயில் உருண்டையை வைப்பர். 'காய பங்குல' எனப்படும் இந்த உருண்டை சுமார் ஒன்று அல்லது இரண்டங்குல விட்டம் உடையதாக இருக்கும். பசுமாடு இத்தகைய மயிர் உருண்டையைக் கக்கினால் அந்த மாட்டுச் சொந்தக்காரருடைய குடும்பத்தில் எல்லா நலங்களும் சிறக்கும் என நம்புகின்றனர். இவ்வாறு பசுமாடு மயிர் உருண்டையினைக் கக்கும் நாளில் விருந்து நடத்தி அந்த உருண்டையினை வழிபடுவர். அந்த உருண்டையினைப் பாதுகாப்பாக ஒரு பெட்டியில் வைத்திருந்து வழிபாடு நடத்தும் போது எடுத்துக்கொள்வர். இந்த உருண்டை ஆண்டுதோறும் அளவில் பெருத்து வரும் என்றும் சிலர் நம்புகின்றனர். அவ்வாறு பெருத்து வருவது நலம் பயக்கும் அடையாளம் எனவும் கருதுகின்றனர். காளைகள் இவ்வாறு மயிர் உருண்டையைக் கக்குவதில்லை, ஒரு சில மாடுகளே அவ்வாறு கக்குகின்றன.

**கௌலியர் - Guliar**

லிங்காயத கோல்லர் அல்லது கன்னடியருக்கான மற்றொரு பெயர்.

**கௌண்டலர் – Gaundala**

கமல்லருக்குரிய வேறு ஒரு பெயர்.

**கௌரி - Gauri**

சிவனின் மனைவியான கௌரியின் பெயரை உடைய ஒக்கிலியர் பிரிவு. இதற்குச் சமமாகக் கௌர என்பது கோமட்டி

சாதியிலும், கௌரிக என்பது மேதரர் சாதியிலும் உள்ள பிரிவு களாம். கப்பேரர்களின் ஒரு பிரிவினர் கௌரி மக்களு எனக் கௌரியின் பிள்ளைகள் என்ற பொருளில் அழைக்கப்படுகின் றனர்.

**கௌதம - Gautama**

பிராமணர்களின் ஒரு கோத்திரம். இதனைப் பட்டராசுக் கள், கத்திரிகள், கொண்டையங் கோட்டை மறவர்கள் ஆகி யோரும் தங்கள் குலப் பிரிவுகள் ஒன்றின் பெயராகக் கொண் டுள்ளனர். கௌதம முனிவர் இந்திரனால் கற்பிழக்கச் செய்யப் பட்ட அகலியையின் கணவர்.

**கவல – Gavala (cowry shell)**

மாதிகர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலத்தின் பெயர். மாதிக மாதங்கி சோழிகள் கோக்கப்பட்ட ஒரு நூலினைத் தனது சின்னமாக அணிந்திருப்பாள்.

**கவல்ல - Gavalla**

கமல்லருக்கு உரிய மற்றும் ஒரு பெயர்.

**கவரர் - Gavara**

1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "இந்தச் சாதி விசாகப்பட்டினம் மாவட்டத்தில் மட்டுமே காணப்படுகிறது. மாவட்டக் கையேட்டில் கூறியுள்ளதன் அடிப் படையில் இவர்கள் பயிர்த்தொழில் செய்யும் வகுப்பாராகக் கொள்ளப்பட்டுள்ளனர். எனினும் கவர என்பது கோமட்டி களின் முக்கியமான உட்பிரிவு ஆகும். இந்த கவரர்கள் உண் மையில் கவர கோமட்டிகள் ஆகலாம். இவர்கள் இவ்வாறு அழைக்கப்படுவதற்குக் காரணம் கௌரி தேவியை இவர்கள் தங்கள் குலதெய்வமாகக் கொண்டிருப்பதுதான்" எனக் கூறப் பட்டுள்ளது.

பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு ஹயவதன ராவிற்கு கடப்பாடுடையேன். கவரர்கள் முன்னாளில் கீழைச் சாளுக்கியர்

களுக்குரிய வேங்கியில் வாழ்ந்தவர்கள் என ஒரு வழக்கு நிலவு கின்றது. அந்த வேங்கியின் அழிபாடுகள் கோதாவரி மாவட்டத் தில் எல்லூர் அருகே உள்ளது. அந்த நாட்டு அரசன் தனித்துக் கோஷாவாக இருக்கும் இவர்கள் சாதிப் பெண்களுள் ஒருத்தி யைப் பார்க்க விரும்பினான். அதற்கு இவர்கள் உடன்பட வில்லை. அரசன் ஆணைப்படி இவர்கள் வீடுகளுக்கு நெருப்பு இடப்பட்டது. சிலர் வீட்டின் கதவுகளைத் தாழிட்டவர்களாக வீட்டுக்குள்ளேயே வீர மரணம் எய்தினர். மற்றவர்கள் தங் கள் பெண்டிரைப் பெரிய பெட்டிகளில் வைத்துப் பூட்டித் தூக்கிக் கொண்டு கடற்கரைப் பக்கம் தப்பி ஓடினர். அங்கி ருந்து. உடனே கலம் ஏறி அனகாபள்ளி மாவட்டத்தில் இருக் கும் பூதிமதகாவில் கரை சேர்ந்தனர். அங்கிருந்து அவர்கள் கொண்டகிர்லா வரை நடந்து, அதன் அருகே ஓடத்தில் வந்த வர்கள் என்பதனைக் காட்டும் வகையில் ஓடப்பள்ளி என்ற ஊரினை அமைத்துத் தங்கினர். பின்னர் கவரல அனகாபள்ளி என்ற ஊரையும் அமைத்தனர். அனகாபள்ளியைத் தோற்று வித்த அரசனான பாயகராவ் இடமிருந்து ஓர் அழைப்பினைப் பெற்ற இவர்கள் வடக்கு நோக்கிச் சென்று அனகாபள்ளியில் இன்று கவரபேட்டை என வழங்கப்படும் பகுதியில் தங்கி வாழலாயினர். அந்த ஊரில் நல்லவேளையில் வீட்டுக்கு மனைக்கால் நிறுத்தும் போது வழக்கமாக அதற்காகப் பயன் படுத்தப்படும் பாலை (*Mimusops hexandra*) மரத்தினைப் பயன்படுத்தாமல் கரையான் அரிக்காது நிலைக்கும் என்ற காரணத்தால் கருங்கழி (*Acacia sundra*) மரத்தைப் பயன்படுத் தினர். இதனால் அனகாபள்ளி பெருகலாயிற்று.

கவரர் தெலுங்கு மொழியே பேசுகின்றனர். மற்ற தெலுங் குச் சாதியாரிடையே காணப்படுவது போலவே இவர்கள் சாதியிலும் புறமணக்கட்டுப்பாடுடைய பல குலப் பிரிவுகள் (இல்லப் பெயர்கள்) உள்ளன.

பெண்கள் பூப்படையும் முன்போ பூப்படைந்த பின்போ மணம் செய்விக்கப்படுகின்றனர். மேநரிகம் எனும் தன் உடன் பிறந்தவள் மகளை மணக்கும் வழக்கமும் இவர்களிடையே உள்ள தாகக் கூறப்படுகின்றது. கைம்பெண்கள் மறுமணம் செய்து

கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். ஏழு கணவர்களை மணந்த ஒருத்தி பெத்தம்மா எனப் போற்றவும்படுகிறாள்.

கவரர்களில் சிலர் வைணவர்கள். மற்றவர்கள் சைவர்கள். எனினும் இவ்வேறுபாடு திருமண உறவு கொள்ளத் தடையாய் இருப்பதில்லை. இரு பிரிவினரும் ஊர்த் தேவதைகளை வழிபடுவதோடு அவர்களுக்கு உயிர்ப்பலியும் தருகின்றனர். வைணவர்கள் பூரி சகன்னாதரிடம் மிகுந்த பக்தி உடையவர்கள். சிலர் அக்கோயிலுக்குச் செல்கின்றனர். மற்றவர்கள் அக் கடவுளுக்கு நேர்ந்து கொள்வர். பூரியில் தேர்த் திருவிழா நடை பெறும்போது கவரர்கள் தங்கள் ஊர்க் கோயிலில் தேரோட்டம் நடத்துவர். அப்போது பெண்கள் தங்கள் நேர்த்திக் கடன்களைச் செலுத்துவர். தன் தீராத நோய் தீர வேண்டுமென்றோ தனக்குக் குழந்தை பிறக்க வேண்டும் என்றோ நேர்ந்து கொண்ட ஒருத்தி தண்ணீரோடு கூடிய ஒரு பெரிய பானையைத் தலையில் வைத்துக் கொண்டு வேகமாகத் தேரில் வரும் தெய்வத்தின் முன் ஆடுவாள். பானையிலிருந்து துளும்பி வெளியே சிதற வேண்டிய தண்ணீர் கீழே விழாமல் மீண்டும் பானையின் உள்ளேயே விழும் அதிசயம் நிகழ்கின்றது.

வைணவர்கள் இறந்து போனவர்களை எரிக்கின்றனர். சைவர்கள் இறந்தவர்களை உட்கார்ந்த நிலையில் புதைப்பர். வழக்கமான சின்ன, பெத்த ரோசு சாவு நாள் சடங்குகள் நடத்தப்படும்.

ஆண்கள் வலது, இடது மணிக்கட்டுகளில் தங்கக் காப்பு அணிவர். பெண்கள் வலது மணிக்கட்டில் வெள்ளிக் காப்பும் இடது மணிக்கட்டில் திருமணத்தின்போது அணிவிக்கப்படும் பவளக் காப்பினையோ அல்லது பவளம் போலத் தோற்றம் தரும் காப்பினையோ அணிவர். இவர்கள் சேலைத் தலைப் பினை இடது தோளில் இடுவர். விசாகப்பட்டினம் மாவட் டத்தைச் சேர்ந்த மற்ற பிராமணரல்லாத பெண்களைப் போல இவர்கள் சுருட்டுப் பிடிப்பதில்லை.

இந்தச் சாதியின் பரம்பரைத் தொழில் வணிகமே.

இதனாலேயே புறமணக்கட்டுப்பாடு உடைய பல குலங்கள், செட்டிகள் என்ற பெயர்பெற்றனவாக உள்ளன. இன்று கவரார் பயிர்த்தொழில் செய்வதோடு கடின உழைப்புக்குப் பெயர் போன விசாகப்பட்டின மாவட்ட உழவர்களாகவும் கருதப்படு கின்றனர். காய்கறி, பால், தயிர் முதலியவற்றை விற்கப் பெண் கள் நெடுந்தொலைவு நடந்து செல்வர்.

அண்ணா, அய்யா என்பன இந்தச் சாதிக்குரிய பட்டப் பெயர்கள். நாயுடு என்பதையும சிலபோது பட்டப்பெயராகத் தரிப்பர்.

**காய - Gaya (cow)**

கொந்தரர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலப் பிரிவு.

**கயிண்ட - Gayinta**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் ஒரிய, தெலுங்கு மொழி பேசும் மலைப் பகுதிகளில் பயிர்த்தொழிலில் ஈடுபட்டி ருக்கும் சிறிய எண்ணிக்கையிலான சாதியார் எனப் பதியப்பட் டுள்ளது. கயிண்டி என்ற குழிதோண்டும் இரும்புக் கருவிக்கு உரிய பெயர் இச்சாதிக்குரிய பெயராக உள்ளது எனக் கூறுகின் றனர். கயிண்ட என்பது ஏனேதிகள் அல்லது எண்டகிரருக்கு உரி யதான கயிண்டிய என்ற பெயரே தான் என்றும் கூறப்படுகிறது.

**காசுல - Gāzula**

காசுல அல்லது காசுல் என்பது கண்ணாடி வளையல் எனப் பொருள்படும். பலிசர், காபு, தொரெயர் ஆகிய சாதிகளின் உட்பிரிவாக இது பதியப்பட்டுள்ளது. காசுல பலிசர் கண்ணாடி வளையல்கள் செய்பவர்கள். அத்தினாபுரத்தை ஆண்ட சந்தனு மன்னனை மணந்து கொண்ட யமுனைக் கரையில் வாழும் மீன வன் மகளான மச்சயகந்தி என்பவளுடைய வளையல்களிலிருந்து தாங்கள் தோன்றியதாகத் தொரெயர் ஒரு வழக்கு வரலாற்றி னைக் கூறுகின்றனர்.

**கேத - Gēdala (buffaloes)**

பொந்துக் சவரர்களின் ஒரு குலப் பிரிவு. எருமை என்று பொருள்படுவது.

**கெத்தம் – Geddam (beard)**

போயர், பத்ம சாலேக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய தலத்தின் பெயர். தாடி என்னும் பொருளுடையது.

**கெஜ்ஜல – Gejjala**

பலிசர், கொறவர் சாதிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய தலத்தின் பெயர். சலங்கை எனப் பொருள்படுவது.

**கெஜ்ஜேகாரர் – Gejjēgāra**

கன்னடம் பேசும் பாஞ்சாலர்களின் ஓர் உட்பிரிவு. 1891 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் குங்குரு எனப்படும் வட்ட வடிவமான சிறிய சலங்கைகளைச் செய்பவர்கள் எனப் பதியப் பட்டுள்ளது. இச்சலங்கை காளைகளின் நெற்றியிலும் கழுத்திலும் அலங்காரமாக அணியப்படுவதோடு நாட்டியமாடும் மகளிரின் கால்களிலும் நாட்டியத்தின்போது கட்டிக் கொள்ளப் படுகிறது.

**ஜென்னீரு – Genneru (sweet - scented oleander)**

போயர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**ஜெண்டோ – Gentoo**

ஜெண்டோ அல்லது ஜெண்டு என்பது கணக்கெடுப்பின் போது பலிசர்களுக்கும் தெலுங்கு பேசும் சூத்திரர்களுக்கும் உரிய பெயராகப் பதியப்பட்டுள்ளது. "போர்த்துகீசியச் சொல்லான ஜெண்டியோ (Gentio) என்பதன் திரிந்த வடிவமான இச்சொல் உருவ வழிபாட்டினரான இந்துக்களை, மூர் (முகமதியர்கள்) களிலிருந்து வேறுபடுத்தப் பயன்படுத்தப்படுகிறது. இது சிறப்பாகத் தெலுங்கர்களைக் குறிக்கப் பயன்படுத்தப்படுவதற்கான காரணம் போர்த்துகீசியர் இங்கு வந்தபோது விசயநகரத்

தைத் தெலுங்குப் பேரரசர்கள் ஆட்சி புரிந்து கொண்டிருந்ததே யாகும்'' என யூலும் பர்னலும் கூறுகின்றனர்.* சர் பிலிப்பி ரான்சிஸ்க்கு ராசா நன்கொமர் சிறையிலிருந்து எழுதிய கடிதத்தில் "ஆங்கிலேய நற்குடி மக்களான ஆர்மினியர்கள், மூர்கள், ஜெண்டோக்கள் ஆகியோருள் எனக்கு எதிரானவர்களாக இல்லாதவர்கள் ஒரு சிலரே'' எனக் குறித்துள்ளார். சென்னையிலிருந்து வெளியாகும் காலாண்டு அரசு ஊழியர் அட்டவணையில் 1906 - ஆம் ஆண்டிலும் ஜெண்டோ என்பது சாதிப் பெயராக இடம் பெற்றுள்ளது.

**கயர் - இ - மஹதி - Ghair - i - Mahdi**

இந்தப் பெயர் மஹதி இல்லாமல் எனப் பொருள்படும். இமாம் மஹ்தி வந்து போய்விட்டார் என நம்பும் முகமதியர் பிரிவினருக்குரிய பெயராகும் இது. சமய மரபு வழிப்பட்ட முகமதியர்கள் அவர் இனிமேல்தான வருவதற்குரியவர் என நம்புகின்றனர்.

**காசி – Ghāsi**

பார்க்க – ஹட்டி (See: Haddi)

**கொண்டொரொ – Ghontoro**

மலைப் பகுதிகளில் வாழும் மக்களுக்காக வெண்கல மோதிரங்களையும் வளையல்களையும் தயாரிக்கும் ஒரிய மொழி பேசும் சிறு எண்ணிக்கையினரான சாதியார். இப்பெயர் கொண்டொ என்னும் வெண்கலத் தகடுக்கு உரிய பெயரிலிருந்து வந்ததாகும்.

**கித்தா - Gidda (vulture)**

பொரொசர்களின் ஒரு குலப் பிரிவு. கழுகு எனப் பொருள்படுவது.

**கிக்கிலி - Gikkili (rattle)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். கிலுகிலுப்பை எனப் பொருள்படுவது.

---

* ஹாப்சன் – ஜாப்சன். (Hobson – Jobson.)

**கிரி ராசு – Giri Rāzu**

புரகிரி ராசு அல்லது புரகிரி சத்திரியர் என்பதன் சுருக்கம். பெரிகெயர் சிலர் தங்களை இப்பெயரால் சிறப்பித்துக் கொள்வர்.

**கோவா - Goa**

குடுபிகளின் ஓர் உட்பிரிவு. இவர்கள் கோவாவிலிருந்து தென் கன்னடத்திற்குக் குடிபெயர்ந்தவர் எனக் கூறப்படுகின்றது.

**கோ பிராமணர் - Gō Brāhman**

தங்களை விசுவப் பிராமணர்கள் எனக் கூறிக் கொள்ளும் கம்மாளர்கள் பிராமணர்களை அழைக்கும் பெயர்.

**கூடகுலம் - Gōdagula**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூடகுலம் தெலுங்குச் சாதியாரான கூடைகள் செய்யும் கூடலர் களேதான் எனப் பதியப்பட்டுள்ளது. எனக்குப் பின் வரும் குறிப்புகளைத் தந்து உதவிய திரு சி. ஹயவதன ராவ் கருத்துப் படி இவர்கள் கூடலர்களிலும் வேறான ஒரிய மொழி பேசுபவர்களாவர். சிலபோது இவர்கள் தங்களை ஒட்டே (ஒரிய) மேதரர் எனவும் அழைத்துக் கொள்வதுண்டு. மேதரர்களைப் போலவே இவர்களும் மூங்கில் தப்பைகளைக் கொண்டு அதனைப் பயன் படுத்தி வேறு சாதியார் செய்யாத பல்வேறு பொருட்களைச் செய்கின்றனர். கூடலர்களைப் போல இவர்கள் சாதியில் உயர்ந்தவர்களாகக் கருதப்படாமல், தீட்டு உண்டாக்கும் சாதியாராகக் கருதப்படுகின்றனர். இவ்வாறு சாதியில் தாழ்ந் தமைக்குக் காரணமான இவர்கள் கூறும் கதை வருமாறு:- தெய்வம், தெய்வ வழிபாட்டுக்குப் பயன்படும் முறங்கள் முதலான பொருள்களைச் செய்யும்படியாக இவர்களைப் பணித்தது. அதனைச் செய்து ஒப்படைத்தபின் இவர்கள் ஒரு திருமண விருந்தில் கலந்து கொண்டு ஊனினை உண்டதோடு, மதுவையும் பருகினர். இவர்கள் திரும்பிய பின் தெய்வம் இவர்களை அழைத்து, அந்த

விருந்தில் உண்டதைக் கக்கும்படி கேட்டது. அதன்படி இவர்கள் அவ்றறை வெளிப்படுத்தினர். அதைக் கண்ட தெய்வம், "நீங்கள் தடை செய்யப்பட்டதை உண்டதால் உங்களுக்கு இடமில்லை சென்று ஒழியுங்கள்'' எனச் சாபமிட்டது. இவர்கள் மன்னிக்கும்படி தெய்வத்திடம் வேண்ட தெய்வம் இவர்களை இனி மூங்கிலால் பொருள்கள் செய்து பிழைப்பு நடத்துங்கள் எனக் கூறிவிட்டது. ஒருவன் தன்னுடைய தாய்மாமன் மகளை மணந்து கொள்ளும் மேநரிகம் எனும் உரிமை மணமுறை இவர்களிடையே கண்டிப்பாகப் பின்பற்றப்படுகிறது. அவ்வாறு தாய் மாமன் தன் மகளை மணம் செய்து தர மறுத்தால் அவன் அவளைத் தூக்கிச் செல்லும் உரிமையும் பெற்றுள்ளான். இக் குற்றத்திற்காக அவன் பஞ்சாயத்தார் முடிவு செய்யும் ஒரு தண்டத் தொகையைச் செலுத்துவது போதுமானது. அத் தொகையில் ஒரு பகுதி மணமகளின் பெற்றோருக்குத் தரப்படும். எஞ்சியதைச் சாதியைச் சேர்ந்தவர்களுக்கான விருந்துக்குச் செலவிடுவர். தாய்மாமனுக்கு மகள் இல்லையாயின் எதிரு மேநரிகம் என்ற பழக்கப்படி அவன் தன் அத்தை மகளை மணந்து கொள்ளலாம். மணம் நடைபெறுவதற்கு ஆறுமாதங்களுக்கு முன்பு பசுபு (மஞ்சள்) சடங்கு நடைபெறும். மணமகள் மஞ்சள் பூசிக் கொள்வதற்காக ஆறு ரூபாயினை மணமகன் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மணமகள் குடும்பத்தினருக்குத் தருவர். மணம் முடிவு செய்யப்பட்ட நாளன்று மணமகன் பெற்றோர், சில பெரியவர்களுடன் மணமகள் இல்லம் சென்று ஒன்பது ரூபாயும் புதிய சேலையும் கொடுத்தபின், மணமகளைத் தங்களுடன் அழைத்துச் செல்ல அனுமதி வேண்டுவர். அத்தொகையில் எட்டு ரூபாய் மணமகள் பெற்றோரையும் ஒரு ரூபாய் சாதியாரையும் சேரும். மணமகள் மணமகன் இல்லத்திற்கு அழைத்துச் செல்லப்படுவாள். வீட்டின் முன் அமைக்கப்பட்டுள்ள பந்தலில் மணமகன் மணமகளை எதிர்கொள்வான். அவர்களை மஞ்சள் நீரில் குளிக்கச் செய்த பின், பூசாரியாகப் பணியாற்றும் குல மேஸ்திரி அவர்கள் தோளில் பூணூலை அணிவிப்பான். மணமக்கள் அதன் பின் ஏழு சோழிகளை உருட்டி விளையாடுவர். சோழிகள் தலைகுப்புற விழுமானால் மணமகள் வெற்றி பெற்றவளாக

அறிவிக்கப்படுவாள். அதற்கு மாறாக விழின் மணமகன் வென்றவனாவான். இதனை அடுத்து மூன்று வகை இலைகள் பலியிடல் எனப்படும் 'மூடு ஆகுலு ஹோமம்' நிகழும். மண மக்கள் முன் ஏற்றப்பட்ட திரியோடு கூடிய புதிய பானை வைக்கப்படும். அதன்மீது அரசு (*Ficus religiosa*), ஆல் (*Ficus Bengalonsis*), கல் இச்சி (*Ficus Tsiela*) ஆகியவற்றின் இலைகள் போடப்படும். மணமகள் வீட்டாரைச் சேர்ந்தவனான குல மேஸ்திரி அந்த பானையின் வாய் மீது தன் வலது கையினை விரித்து வைப்பான். அதன்மீது மணமகள் தன் கையினை வைப்பாள். அவள் கையின் மீது மணமகன் தன் கையினை வைப்பான். மணமகள் ஊரைச் சேர்ந்த குல மேஸ்திரி தன் கையினை மணமகன் கையின்மீது வைப்பான். அதன்பின் கூடியுள்ள பெரியவர்கள் உரத்த குரலில், "வத்தாதி மாதுகுல சாதிக்காரர்களே கேளுங்கள். கிமேதியைச் சேர்ந்த சாதிக் காரர்களே கேளுங்கள். குணுபுரத்தையும் கோதைரியையும் சேர்ந்த சாதிக் காரர்களே கேளுங்கள். பன்னிரண்டு நாட்டைச் சேர்ந்த சாதியார் அனைவரும் கேட்டுக் கொள்ளுங்கள். இவனும் இவளும் கணவனும் மனைவியுமாகிவிட்டனர். இச்சடங்கிற்குப் பெரியவர்கள் தங்கள் ஒப்புதலைத் தந்து விட்டனர்" எனக் கூறுவர். மணமக்கள் ஒருவர் தலைமீது ஒருவர் அரிசியினைத் தூவிக் கொள்வர். அதற்கு மறுநாள் காலை சரகதாச் சடங்கு நடைபெறும். மணமகன் வீட்டார் அருகே உள்ள சிற்றோடையின் கரைக்குச் செல்வர். அங்கே அவர்களைச் சாதியினைச் சேர்ந்தவர்கள் எதிர்கொள்வர். அங்குச் சாதியைச் சேர்ந்தவர்களுக்கு வெற்றிலை, சுருட்டு, ஒரு பானை யில் வெல்லப் பானகம் ஆகியன வழங்கப்படும். மணச் சடங்கின் இறுதியில் மணமக்கள் அணிந்து கொண்டிருக்கும் பூணூல் அகற்றப்படும். கைம்பெண்களின் மறுமணம் அனுமதிக்கப்படு கிறது. இளையவன், இறந்துபோன அண்ணன் மனைவியையும், மூத்தவன் இறந்துபோன தம்பியின் மனைவியையும் மணப்பர். மணமுறிவு அனுமதிக்கப்படுவதோடு மணமுறிவு பெற்ற வர்கள் மறுமணம் புரிந்துகொள்ளும் உரிமையும் உடையர் மறுமணம் செய்து கொள்பவளின் புதிய கணவன் ஒரு தொகை யினைச் செலுத்த வேண்டும். அதில் ஒரு பகுதி அவளுடைய

முதல் கணவனைச் சேரும். மீதி உள்ள தொகைக்குச் சாதி யாருக்கு விருந்து வைப்பர். இறந்தவர்கள் எரிக்கப்படுவதோடு சின்னரோசு (சிறுநாள்) சாவுச் சடங்கும் நடத்தப்படும்.

**கோட சாதி - Gōda - jati (wall people)**

கம்மர்களின் ஓர் உட்பிரிவினர். இப்பெயர் கண்டிக் கோட்டையில் நடைபெற்ற அஞ்சத்தக்க போரில் சுவருக்குப் பின்னால் மறைந்து தப்பிய சிலரைக் குறிப்பதாகும்.

**கோட பூசெ - Gōda – poose (wall polishing)**

தாசகலரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கோதாரி - Gōdāri**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கஞ்சம், விசாகப்பட்டினம் பகுதியைச் சார்ந்த தோல் தொழிலாளர்களாகப் பதியப்பட்டுள்ளது. இவர்கள் செருப்புகள் தயாரித்து விற்பவர்கள் என விசாகப்பட்டினம் மாவட்டக் கையேடு கூறுகின்றது. கோதாரி, மாதிகருக்குரிய இன்னுமொரு பெயரேயன்றி தனிச் சாதியன்று என எனக்குக் கூறப்பட்டது.

**கோடலி - Goddali (spade or axe)**

ஒட்டே, பண்டரெட்டி சாதிகளின் புறமணக் கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர்.

**கோடொமாலிய - Gōdomālia (belonging to, or a group of forts)**

பொந்தாரியரின் ஓர் உட்பிரிவு. இவர்கள் கோட்டைகளில் வாழும் அரசர்களுக்கு நாவிதர்களாகப் பணிபுரிபவர்களாவர்.

**கோலகர் – Gōlaka**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் வேசி மகன் எனப் பொருள்படுவதாகக் கூறப்பட்டிருப்பதோடு, தென் கன்னடத்தைச் சேர்ந்த நாட்டிய மகளிருக்குப் பிறந்தவர்களான கோயிற் பணியாளரான மொய்லியரைக் குறிக்கும் சொல்லா

கவும் இது பதியப்பட்டுள்ளது. 1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், இது பிராமணர்களுக்கு மலெருவரான கோயிற் பணியாளர் வழிப் பிறந்த பிள்ளைகளுக்கு உரிய பெயரெனக் கூறப்பட்டுள்ளது.

**கோளி - Goli (*Portulaca Oleracea*)**

பசலைக் கீரை எனப் பொருள்படும் இது கௌடர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கோல்கொண்டா – Golkonda**

தாசகலரின் ஓர் உட்பிரிவு.

**கோல்லர் – Golla**

வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் திரு எச்.எ. ஸ்டுவர்ட் கோல்லர் பற்றி எழுதியுள்ளதாவது:- "கோல்லர்கள் முல்லை நிலஞ்சார்ந்த தெலுங்கு பேசும் இடைக்குலச் சாதியார். இச்சாதியார் பற்றிய மரபு வழக்குப்படி இவர்கள் தங்களை இடைக்குல மாதர்களோடு காதல் களியாட்டங்களில் மூழ்கிய கண்ணனுடைய மரபில் வந்தவர்கள் எனக் கூறிக் கொள்கின்றனர். ஆடு மாடுகளை மேய்த்தலும் பால் விற்றலும்தான் கோல்லர்களின் குலத்தொழில் என்றாலும் இன்று இவர்களில் பலர் நிலங்களை வாங்கிப் பயிர்த்தொழிலில் ஈடுபட்டிருப்பதோடு சிலர் அரசுப் பணிகளிலும் ஈடுபட்டுள்ளனர். அமைதி நெறிப்பட்ட இவர்கள் பெரும்பாலும் நேர்மையான வழியில் நடப்பவர்கள். நவாப்பின் ஆட்சிக் காலத்தில் இவர்களுடைய நேர்மையின் காரணமாகக் கருவூலத்தைக் காக்கும் பணியும் பணப்பைகளை எடுத்துச் செல்லும் பணியும் இவர்களுக்குத் தரப்பட்டதன் காரணமாகப் பொக்கிஷ கோல்லர் என்ற ஓர் உட்பிரிவும் இவர்களிடையே தோன்றியது. இன்றும் மாவட்டக் கருவூலங்களில் பணப்பைகளைக் கட்டுவதும், எடுத்துச் செல்வதுமான பணிகளில் ஈடுபட்டுள்ளவர்கள் வேறு சாதிகளைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் கொல்லர்கள் என்றே அழைக்கப் படுகின்றனர். ஏழைகளாக இருப்பினும், சமூகத்தில் உயர்ந்த

தகுதியுடையவர்களாய் இல்லாவிடினும், இவர்கள் புனிதப் பசுக்களைப் பாதுகாத்து வருவதால் யாரும் இவர்களைத் தாழ்ந்தவர்களாகக் கருதுவதில்லை. சிலபோது இவர்கள் தங்களைக் கோ–வைசியர் பிரிவினைச் சார்ந்தவர்கள் எனவும் கூறிக்கொள்கின்றனர். மந்தாரி என்பது இவர்கள் பட்டப் பெயர் எனினும் பொதுவாக இவர்கள் இதனைப் பயன்படுத்து வதில்லை." இவர்களைப் பற்றி மேலும் திரு ஸ்டுவர்ட் கூறுவ தாவது.* "கோல்லர்கள் சமூகப்படிநிலையில் ஓரளவு உயர்ந்த வர்களாகவே உள்ளனர். காபு, கம்மர், பலிசர் ஆகிய சாதியா ரோடு கலந்து பழகும் உரிமை உடையவர்கள் இவர்கள். பிராமணர்கள் இவர்களிடமிருந்து மோரினைப் பெற்றுப் பருகு வர். இவர்கள் சாதானிகர்களைத் தங்கள் புரோகிதர்களாக அமர்த்துகின்றனர். இவர்களுடைய சடங்குகளுக்கும், காபுக் களின் சடங்குகளுக்கும் அதிக வேறுபாடு இல்லை. கோல்ல என்ற பெயர் வடமொழிப் பெயரான கோபால என்பதன் சுருங்கிய வடிவமாகக் கருதப்படுகிறது. (பசுவைப் பாதுகாப் பவர்)." கோல்லர் தங்களைக் கோனானுலு, கோனார்லு என அழைத்துக் கொள்வதோடு சிலபோது தமிழ்நாட்டு இடையர் களைப் போலக் கோனார் என்ற பட்டப்பெயரையும் தரித்துக் கொள்கின்றனர். இவர்கள் பொதுவாக வைத்துக்கொள்ளும் பட்டப்பெயர்கள் அண்ணா, அய்யா என்பனவாம். சில போது நாயுடு என்றப் பட்டப்பெயரைச் சூடிக் கொள்வதும் உண்டு.

கர்நூல் மாவட்டக் கையேட்டில், "கோல்லர் ஆடுகளை வளர்ப்பதோடு பால், நெய் ஆகியவற்றையும் விற்கின்றனர். இவர் கள் பலிசர்களோடும் மற்ற உயர்சாதிச் சூத்திரர்களோடும் ஒன் றாக இருந்து உண்ணும் உரிமையுடையவர்கள். தெரு ஊர்வலங் கள் நடத்திச் செல்வதில் இவர்களைச் சேர்ந்த தெற்கத்திய சாதி யாரைப் போலக் கருதப்படாமல், பொற்கொல்லர்களோடு சமமானவர்களாகவோ, இடங்கைப் பிரிவினராகவோ கருதப்படு

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, 1891, (Madras Census Report, 1891.)

கின்றனர். இவர்களில் ஒருவன் ஏழ்மை நிலையை அடைவானா யின், மற்றவர்கள் தங்கள் ஆடுகளில் ஒவ்வொன்றை அவனுக் குத் தந்து அவைகளை அவனுடைய கிடையாக்குவர். இவர்கள் எப்போதாவது தங்கள் பெண்களை வேங்கடேசுவரருக்குப் பசவிகளாக (பரத்தையராக) நேர்ந்து கொள்வது உண்டு'' எனக் கூறப்பட்டுள்ளது.

"மாதெகோலெயைச் சுற்றியுள்ள வட்டாரங்களில் கோல் லர்கள் வழிவந்த தலைவர்களைப் பற்றிய வழக்கு வரலாற்றில் கோல்லர்களுடைய பெயராலேயே கோல்கொண்டாக் கோட்டை அமைந்ததாக இன்றளவும் கூறி வருகின்றனர். அதனுடைய இடி பாடுகளின் அடையாளங்களை இன்றும் அங்குக் காணலாம்'' என விசாகப்பட்டினம் மாவட்ட விவரக் குறிப்பில் குறிக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு தெலுங்குப் புத்தாண்டு நாளின் போதும், கோல்லர் கோதாவரிக்கு அப்பாலிருந்து வந்து, அங் குள்ள கோல்லர்களின் ஊர்களை முன்பு அங்கு அரசாண்ட முன்னோர்களின் பெயர்களைக் கூறியபடியும் அவர்களின் ஆட் சியின் வீழ்ச்சியின் சித்திரங்களை காட்டியபடியும் சுற்றிவருவ தாகக் கூறப்படுகின்றது.

''வஜ்ரகாடவில் அழிந்துபோன பெரியதொரு கோட்டை யின் இடிபாடுகள் காணப்படுகின்றன. அதனைச் சுற்றி அதற் குப் பாதுகாப்பாக அமைந்த ஏழு கோட்டைகளின் பெயர் களை இன்னமும் அப்பகுதியில் கூறிவருகின்றனர். அவை கோல் லர் சாதியைச் சேர்ந்த அரசர்களால் கட்டப்பட்டனவாகக் கூறப்படுகிறது. மாதெகோலெயை ஆண்ட அரசனின் மகளை இவர்கள் கடத்தி வந்து அங்குப் பல மாதங்கள் கோட்டைக்குள் அந்த அரசனின் முற்றுகையைத் தாக்குப்பிடித்தபடி, வைத்தி ருந்ததாகவும், இவர்கள் சாதிப் பெண்களில் ஒருத்தி எதிரிக்குக் கோட்டைக்கு நீர் வரும் வழியைக் காட்டிக் கொடுத்ததால் கோட்டை வீழ்ச்சியுற்றதாகவும் கூறப்படுகிறது. அதன்பின் இவர்கள் கோட்டையில் உள்ள தங்கள் சாதிப் பெண்கள் அனைவரையும் கொன்றுபோட்டபின், ஒருசேர முற்றுகையிட் டிருந்தவர்களைத் தாக்கி இறுதிவரை போராடி மடிந்தனர் என்பது கதை வழக்கமாகும்.''

1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையிலிருந்து மைசூரைச் சேர்ந்த கோல்லர்களைப் பற்றி நான் திரட்டிய விவரங்கள் வருமாறு:- "கோல்லர்களுள் ஊரு, காடு என்ற இரு பெரும் பிரிவுகள் உள்ளன. இவர்கள் தங்களுக்குள் மண உறவு வைத்துக் கொள்ளாததோடு ஒன்றாக இருந்து உண்பதும் இல்லை. பணப் பெட்டிகளுடன் பாதுகாப்பாளர்களாகச் செல்லும் கோல்லர் பிரிவினர் தனபாலர் என்ற பெயரைப் பெற்றுள்ளனர். அரசுக் கருவூலங்களில் கடைநிலை ஊழியருக்கான இடங்களில் ஒன்று இன்றும் கோல்ல என்றே வழங்கப் படுகிறது. கண்ணன் குலத்தில் பிறந்தவர்களான இவர்கள் கண்ணனையே வழிபடுகின்றனர். காடு கோல்லர் பிரிவினர் வடநாட்டிலிருந்து இங்கு வந்தேறியதாகக் கருதப்படுகின்றனர். இவர்கள் இன்றளவும் நாடோடிகளாக ஊருக்குப் புறத்தே தடுக்குகளால் வேயப்பட்ட குடிசைகளிலேயே வாழ்ந்து வருகின்றனர். இவர்களின் பழக்கங்களில் சில காடு குருபர்களின் பழக்கங்களை ஒத்தனவாக உள்ளன. மகப்பேற்றின்போது தாயும் சேயும் யாருடைய உதவியும் இன்றி ஊருக்குப்புறத்தே ஏழிலிருந்து முப்பது நாள் வரை தங்கி இருந்து திரும்பிய பின்னரே வீட்டுக்குள் சேர்த்துக் கொள்ளப்படுவர் எனக் கூறப்படுகிறது. அவள் அப்போது நோயுற நேர்ந்தால் சாதியைச் சேர்ந்த யாரும் அவளுக்கு உதவச் செல்ல மாட்டார்கள். பேடர் சாதியைச் சேர்ந்த நாயக் பெண்ணொருத்தியை உதவிக்காக அமர்த்துவர். இவர்களுடைய திருமணங்களும் இதேபோல ஊருக்கு வெளியே அமைக்கப்படும் பந்தல்களிலேயே நிகழ்கின்றன. ஐந்து நாள்கள் நடைபெறும் மணச் சடங்குகள் முடிந்த பின்னரே மணமக்கள் ஊருக்குள் அழைத்து வரப்படுவர். கோல்லர்கள் பல மனைவியரை மணந்து கொள்கின்றனர். பெண்கள் பூப்படைந்த பின்னர் மணம் செய்விக்கத் தடையேதும் இல்லை. ஊன் உண்ணும் இவர்கள் மது வகைகளையும் பருகுவர். தவறான ஒழுக்கம் காரணமாக மட்டுமே மனைவியரை மணவிலக்குச் செய்ய முடியும். இவர்கள் சாதிப் பெண்கள் அப்பக்கத்தைச் சார்ந்த மற்றப் பெண்களைப் போல ரவிக்கை அணியும் பழக்கம் இல்லை. அதே போல இவர்கள் கைம்பெண்களாவார்களாயின் மற்ற சாதியாரைப் போல கையில் உள்ள கண்ணாடி வளையல்களை உடைக்கும்



கோல்லர் சாதி வித்தை காட்டுபவன்



கோல்லரின் கங்க முக்கு

பழக்கத்தையும் மேற்கொள்வது இல்லை. கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. இக்கோலர்களுள் 98 பேர் மட்டுமே தங்கள் கோத்திரங்களைப் பதிந்துள்ளனர். அவற்றுள் யாதவர், கரவு, ஆத்ரேய, இம்சவாச என்பன குறிப்பிடத்தக்கவை. இவற்றுள், முன்னவை இரண்டும் சாதியின் உட்பிரிவுக்கான பெயர்கள். ஆத்ரேய என்பது பிராமண முனிவர் ஒருவரின் பெயர்.'' கண்ணனின் மூதாதையான யாது அரசனின் பெயரான யாதவ என்பதும் தமிழ் நாட்டில் ஆடு மேய்ப்பவர்களான இடையர் சாதிக்குரிய மற்றொரு பெயராக வழங்கி வருகின்றது.

அடவி கோல்லர் எனப்படும் காடு கோல்லர் பற்றித் திரு எப். பாவ்செட் பின்வருமாறு எழுதுகின்றார்.* "ஊரிலுள்ள ஒவ்வொரு வீட்டாரும், ஒரு மறியினை அதன் விருப்பப்படி பலிக்கெடாவாகத் திரிய விடுகின்றனர். ஒரு பெண்ணுக்குப் பேறுகால வலி தோன்றியவுடன், ஊருக்கு வெளியே இருநூறு கச தூரத்தில் அமைக்கப்பட்டிருக்கும் தழை அல்லது தடுக்கு வேய்ந்த குடிசைக்கு அவள் அனுப்பப்படுகிறாள். இந்தக் குடிசையில் அவள் யாருடைய உதவியும் இன்றியே தன் குழந்தையைப் பெற்றுக் கொள்ள வேண்டும். சிலபோது குழந்தைப் பேற்றுக்கு முன்பாக ஒரு மருத்துவச்சி உதவிக்கு வந்து சேருவதும் உண்டு. தொண்ணூறு நாள்கள் அவள் தன் குழந்தையுடன் அக்குடிசையிலேயே தனித்து இருப்பாள். அவளை யாரேனும் தொட நேர்ந்தால், அவர்களும் அவளைப் போல மூன்று மாதங்கள் தீட்டுப்பட்டவர்களாக ஊருக்குப் புறத்தே இருத்தப்படுவர். அப்பெண்ணின் கணவன், அவள் இருக்கும் குடிசையிலிருந்து சுமார் ஐம்பது கசதூரத்தில் ஒரு குடிசை அமைத்துக் கொண்டு அவளைக் கண்காணித்து வருவான். தன்னையும் மூன்று மாதங்கள் ஊருக்கு வெளியே தீட்டுப்பட்டவனாகத் தள்ளி வைப்பார்கள் என்ற அச்சத்தால் அவன் அவளை நெருங்குவதில்லை. அவள் குடிசைக்கு அருகே அவளுக்குச்

---

* பம்பாய், மனித இனவியல் கழக இதழ், 1, 1888. (Jounr. Anth. Soc., Bombay, 1, 1888.)

சோறு வைக்கப்படும். அதனை அவள் எடுத்துக் கொள்வாள். பிள்ளைப் பெற்ற நான்காம் நாள் ஊரைச் சார்ந்த பெண் ஒருத்தி அவள் இருக்கும் இடம் சென்று அவள் தலையில் நீர் கொட்டுவாள். எனினும் அவள் பிள்ளைப் பெற்றவளைத் தொடுவதில்லை. ஐந்தாம் நாள் ஊரைச் சேர்ந்த சிலர் சென்று அவள் குடிசைக்குப் பத்துக் கசம் இப்பால் ஓரிடத்தினை முள்ளும் கல்லும் நீக்கித் துப்புரவு செய்து வைப்பர். பிள்ளைப் பெற்றவள் அந்த இடத்தில் தன் குடிசையினைப் பிரித்து அமைத்துக் கொள்வாள். இதற்காக அவளுக்கு யாரும் உதவவோ இதனை அவளுக்குப் பதிலாக வேறொருவர் செய்வதோ கூடாது. இதே போல ஒன்பதாம், பதினைந்தாம் முப்பதாம் நாள்களில் அவர் தன் குடிசையினைப் படிப்படியே ஊரினை நோக்கி நெருக்கமாக மாற்றி அமைத்துக் கொள்வ தோடு, அடுத்த இரண்டு மாதங்களிலும் இதே நாள்களில் குடிசையினை மேலும் ஊரை நோக்கி நெருக்கமாக மாற்றி அமைப்பாள். தொண்ணூறாவது நாளன்று ஊர்த் தலைவன் அவளைக் குடிசையிலிருந்து வெளியே வருமாறு அழைப்பான். வண்ணான் அவளுடைய ஆடைகளைத் துவைப்பான். துவைத்த ஆடைகளை அவள் அணிந்தபின் ஊர்த் தலைவன் அவளை ஊர்க் குலதெய்வத்தின் கோயிலான அஞ்சப்பர் கோயிலுக்கு அழைத்துச் செல்வான். சாதியைச் சேர்ந்த பூசாரி அங்கே தேங்காய் உடைத்து வழிபாடு செய்தபின் அவளை அவள் வீட்டில் கொண்டுவிடுவான். அங்கு அவளுக்குத் தீட்டுப் போக்கும் சடங்கும் நடத்துவர். அஞ்சப்பர் தாயையும் சேயையும் நல்லபடியாகக் காப்பவரெனவும் அதனால் இப்பேறு காலத்தில் சாவு நிகழ்வதில்லை என்றும் கூறப்படுகின்றது.''

''மைசூரைச் சேர்ந்த சிதல்துர்க் மாவட்டத்தில் ஒவ்வொரு குடும்பத்திலும் மூத்த மருமகள் காலைக்கடன்களைக் கழித்தபின் தன்னைத்தூய்மைப்படுத்திக்கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. அவ்வாறு அவள் தூய்மை செய்து கொண்டால் அது குடும்பம் தழைக்க உதவாது என அவர்கள் நம்புகின்றனர்'' என 1891 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் புச்சனன் தன் பயணக்

குறிப்புகளில் கோல்லர்களைப் பற்றித் தெரிவித்திருப்பது வருமாறு:- "இச்சாதியார் அரசுக்கு உரியதும் தனிப்பட்டவர்களுக்கு உரியதுமான பணப்பைகளைப் பாதுகாப்பாகக் கொண்டு செல்லும் தனிப்பட்ட பணியாளர்களாகப் பணியாற்றுகின்றனர். இவர்களை நம்பி எவ்வளவு தொகையை வேண்டுமானாலும் ஒப்படைக்கலாம். ஒவ்வொரு ஆளும் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொண்டு செல்வர். குழுவாகச் செல்லும் இவர்களின் எண்ணிக்கை கொண்டு செல்லும் தொகைக்கு ஏற்றபடியான அளவுடையதாக இருக்கும். தங்களிடம் மற்றவர்கள் கொண்டுள்ள நம்பிக்கை காரணமாக இவர்கள் ஒப்படைக்கப்பட்ட தொகையைக் காப்பதில் உயிர்விடவும் துணிவர். ஆயுதங்கள் ஏந்திய இவர்கள் தங்களைக் காத்துக் கொள்ளத் தீவிரமாகப் போரிடவும் செய்வர். இதன் காரணமாகக் கொள்ளையர் இவர்களை நெருங்க அஞ்சுவர். கொடுகாரர் என்ற பரம்பரைச் சாதித் தலைவன் இவர்களுக்கு உளன். பஞ்சாயத்தாரோடு கூட இருந்து எல்லாச் சாதிப் பிணக்குகளையும் தீர்த்து வைப்பதோடு சாதி விதிகளை மீறுபவர்களை இவன் தண்டிக்கவும் செய்வான். குற்றங்களுள் மிகக் கடுமையானவையாகக் கருதப்படுவது தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட தொகையினைக் கையாடல் செய்வதேயாகும். இக் குற்றம் நிரூபிக்கப்பட்டால் கொடுகாரன், அமேல்தார் அல்லது குற்றவியல் நடுவரின் அனுமதி பெற்றுக் குற்றம் புரிந்தவனைச் சுட்டுக் கொல்வான். சிறு குற்றம் புரிபவர்கள் சாதிக்காரர்களுக்கு விருந்து கொடுத்து மன்னிப்புப் பெறலாம்."

கோல்லர் சாதியில் பல உட்பிரிவுகள் உள்ளன. அவற்றுள் மாதிரிக்குச் சில வருமாறு:-

எர்ர அல்லது யெர்ர (சிவப்பு)- இவர்கள் பிராமணர்களுக்கு கோல்லர் சாதிப் பெண்கள் வழிப்பிறந்தவர்கள்.

ஆல அல்லது மேகல - மறிகளும் ஆடுகளும் மேய்ப்போர்.

பூசா அல்லது பூனை.

கங்கெத்து - சாமி மாட்டினை ஓட்டித் திரிவோர்.

கௌட - இவர்கள் கோடைப் பருவத்தில் விசாகப்பட்டினம் மாவட்டத்தின் மேற்குப் பகுதிக்குச் சென்று ஊருக்குப் புறத்தே தங்குபவர்கள். கால்நடைகளை மேய்க்கும் இவர்கள் பாலையும் தயிரையும் ஊராருக்கு விற்பர்.

கர்ண.

பாகனாடி.

ராச்சா (அரசர்).

பெத்தெடி -இவர்களில் பெரும்பாலோர் பிச்சைக்காரர். சமூகப் படிநிலையில் தாழ்ந்தவர்களான இவர்களைப் பற்றிய விவரம் கேட்டால் இவர்கள் தங்களை யெர்ர கோல்லர் என்பர்.

1901 கணக்கெடுப்பின்படி பின்வருவன கோல்லர்களின் உட்பிரிவுகளாகப் பதியப்பட்டுள்ளன.

தய்யாலகுலத்தர் - மற்போர் புரிவோர்.

பெரிகே மக்களு அல்லது முஷ்டிகோல்லர் - பிச்சைக்காரர்களும் பேய் ஓட்டுபவர்களும்.

பொதபோத்துலர் - கோல்லர்களிடம் இரப்போர்.

காவடிவடுகாயன் - தெலுங்குப் கோல்லர்களுக்குத் திருநெல்வேலியில் வழங்கும் வேறு பெயர்.

பொக்கிஷ வடுகர் - பண்டாரக் காப்பாளருக்கான மற்றொரு தமிழ்ப் பெயர்.

கோல்லர் - என்பது தாசரிகள் அல்லது சக்கலியர் சாதியின் உட்பிரிவினராகவும் பதியப்பட்டுள்ளது.

கோல்ல ஒட்டேர் - தெலுங்குப் பகுதியில் திருடர் சாதிக்குரிய ஒரு பெயர்.

கோதாவரி மாவட்டத்திலுள்ள தும்மகூடத்திற்கு அருகிலுள்ள ஓர் ஊரில் உள்ள கோல்லர்கள் பற்றி மறைத் திரு ஜெ. கெயின் பின்வருமாறு எழுதுகின்றார்:-* "அந்த ஊரில் பசவ

* இந்தியத் தொல்லியல், VIII, 1879. (Ind. Ant. VIII, 1879.)

கோல்லர் குடும்பங்கள் சில உள்ளன. இவர்கள் உண்மையில் கோயிகளே. இவர்களுடைய பாட்டன்மார் அண்டை அயலாருடன் சண்டை சச்சரவு செய்து கொண்டதால் பிரிந்து தனியே வந்தவர்கள். இக்குடும்பங்களைச் சேர்ந்த சிலர் இன்று மீண்டும் கோயிகள் சாதியில் சேர்ந்து அதனால் அயலாரான கோயிகள் அடைந்துவரும் சலுகைகளைத் தாங்களும் அடைய விரும்புகின்றனர். பசவ என்ற பெயர் பாஷா என்ற ஒரு மொழியின் பெயரிலிருந்து வந்ததாகக் கருதப்படுகின்றது. இந்தப் பிரிவைச் சேர்ந்த கோல்லர்கள் அவ்வாறு அழைக்கப்படுவதற்குக் காரணம் மற்ற கோல்லர்கள் பேசும் மொழியிலிருந்து வேறுபட்ட மொழியினை இவர்கள் பேசுவதேயாகும்.''

பிற தெலுங்குச் சாதியாரைப்போலக் கோல்லர்களிடையேயும் புறமணக்கட்டுப்பாடுடைய பல குலப்பிரிவுகளும் (இல்லப் பெயர்களும்) கோத்திரங்களும் உள்ளன. அவற்றுள் குலப் பிரிவுகளுக்குப் பின்வருவன மாதிரிகளாம்:-

| | | | |
|---|---|---|---|
| அக்னி | — நெருப்பு | குர்ரம் | — குதிரை |
| ஆவுல | — பசுக்கள் | கொரெல்ல | — மறியாடு |
| சிந்தள | — புளி | கோகல | — சேலை |
| செவ்வுல | — காதுகள் | கட்டாரி | — குத்துவாள் |
| குண்டல | — கற்கள் | சத்திகூடு | — பழையசோறு |
| மூகி | — ஊமை | சேவல | — பணி |
| நக்கல | — நரி | வெங்காயல | — கத்திரிக்காய் |
| உள்ளிப் போயல | — வெங்காயம் | கோரண்டல | — மருதாணி |

இவர்கள் குலப் பெயர்களுள் வேறு சாதிகளுள்ளும் காணப்படுபவையாக உள்ளவை சில வருமாறு:-

| | |
|---|---|
| ஆவுல | — பலிசர், காபுகள், யெருக்கலர் |
| சிந்தல | — தேவாங்கர், கோமட்டி, மாலர், மாதிகர் |
| கோரண்டல | — கம்மர், காபு |
| குர்ரம் | — மாலர், பத்ம சாலே, தோகடர் |
| நக்கல | — காட்டு மராத்தியர், ஏனாதியர் |

ரகிண்டல (*Ficus religiosa*) கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் அத்தி, அரசு ஆகியவற்றின் இலைகளாலான தையல் இலையை உண்ணும் கலமாகப் பயன்படுத்த அனுமதிக்கப்படுவதில்லை. பாலாவிலி கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் இல்லங்களுள் வழிபாட்டுக்கென அமையும் சிறு அறைகளான பாலாவிலிகளைக் கட்டுவதில்லை. அட்சத்தைய கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் மஞ்சள் தோய்ந்த அல்லது வேறு பொடிகளில் தோய்க்கப்பட்ட அரிசியினைப் பயன்படுத்துவதில்லை. கொம்மி, ஜம்மி, மூஸ்தி கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் வன்னி (*Prosopis spicigera*), எட்டி (*Strychnos Nux - Vomica*), மரங்களைப் பயன்படுத்துவதில்லை.

பல உட்பிரிவினர்களுள்ளும் பூச கோல்லர் தங்களை உயர்ந்தவர்களாகக் கூறிக் கொள்கின்றனர். இவர்கள் முன்னோரின் கால்வழியின் தொடக்கம் மகாபாரதத்தில் கூறப்பட்டுள்ள யயாதி ராஜாவின் மரபில் வந்த சிம்ஹாத்ரிராசுவி லிருந்து தொடங்குவதாகக் கூறப்படுகிறது. யயாதிக்கு ஆறு பிள்ளைகள். அவர்களுள் இளையவன் கரியாவல. அவன் வழி வந்தவர்கள் பரம்பரை வருமாறு.




கோல்லர்கள், மேலே கூறப்பட்டுள்ள அரசர் மரபினரில் இறுதி நான்கு அரசர்களின் வழிவந்தவர்கள் என நம்பப் படுகிறது.

மற்றுமொரு கதை வழக்கின்படி போளிராசு, எர்ரெனொகு ராசு, காடமராசு, பெத்திராசு, எர்ரய்ய ராசு என்ற ஐந்து

உடன்பிறந்தவர்கள் எல்லமன்சிலியினைத் தோற்றுவித்து, அங்கு வாழ்ந்து வந்ததோடு சர்வசித்தி என்ற நகரையும் தோற்று வித்தனர். நெல்லூரை ஆண்ட அரசர்கள் இவர்கள் மேல் படையெடுத்துச் சென்று இவர்களைக் கொன்றனர். போரில் இவர்களுடைய ஆட்டு மந்தைகளும் இறந்துவிட்டன. பெத்தி ராசுவின் மகனான ஜனகமய்ய இந்தப் படுகொலைக்கு ஆளா காமல் தப்பியபின் காசிக்குச் சென்று தன் தந்தைக்கும் அவர் உடன்பிறந்தவர்களுக்கும் இறுதிச் சடங்கினைச் செய்ய நினைத் தான். அதனை அவ்வாறே அவன் செய்து முடிக்க, அதனால் மனம் நெகிழ்ந்த தெய்வங்கள் அவனை வான் வழியே அவனு டைய ஊருக்குக் கொண்டு சேர்த்தன. இவனை அடுத்து மூவர் அம்மரபில் தோன்றினர். அவர்களைப் பற்றிய விவரம் வருமாறு:-

1. குலஜெண்டடு - இவன் வழிவந்தவர்கள் இன்னமும் சாதிக்குரிய முன்னோர் பரம்பரையின் பெயர்களைப் பாடி வருகின்றனர்.

2. பொதபொட்டு (வித்தைக்காரன்) – இவன் வழிவந்த வர்கள் உலோகத்தாலான மணிகளோடு ஊர் ஊராகத் திரிந்து பாடிவருவதோடு,மாய வித்தையால் பாம்புகளையும் வரவழைப்பர்.

3. தேவசியடு - இவன் வழிவந்தவர்கள் கோல்லர் அரச பரம்பரை அழிவிற்குள்ளானதற்கான நிகழ்ச்சிகளைப் பெரிய துணியில் சித்திரமாகத் தீட்டி ஆண்டுக்கு ஒருமுறை அதனைக் கோல்லர்களுக்குக் காட்சிக்கு வைப்பர்.

ஜனகமய்யா வானுலகம் சென்று சேர்ந்தபோது மேற்கூறிய மூவரும் அவ்னிடம் தாங்கள் எப்படி வாழ்க்கை நடத்திப் பிழைப்பது எனக் கேட்டனர். அவன் இவர்களை மேற்கூறிய கடமைகளைச் செய்து வருவதோடு சாதியாரிடம் இரந்து உண்ணு மாறும் பணித்துச் சென்றான். இன்றும் இவர்களின் பரம்பரை யில் வந்தவர்கள் ஆண்டுக்கு ஒருமுறை தெலுங்குப் புத்தாண்டு நாளுக்கு மறுநாள் கோல்லர் ஊர்களுக்குச் சென்று தங்களுக் குரியதை வசூலித்து வருகின்றனர்.

கோல்லர்கள் வைணவம்(வல்லமுலு),சைவம்(சிட்ரிரமந்துலு) ஆகிய இரு நெறிகளைப் பின்பற்றுபவர்களாயினும் இவர்களுக்குள் மண உறவு மேற்கொள்ளத் தடையேதும் இல்லை. அங்கம்மா என்ற தெய்வத்தை வழிபடும் சாதியினருள் இவர்களும் அடங்குவர். இவர்கள் வழிபாட்டின் சிறப்பான பண்பு யாதெனில் மூங்கில் அல்லது பிரம்பால் பின்னப்பட்ட ஒரு பெட்டியில் மூன்று அல்லது நான்கு சாட்டைகளையொத்த நூலால் அல்லது ஆனைக் கற்றாழைமஞ்சியாலான கயிறுகள், வாட்கள், சந்தனம், தெய்வ உருவங்கள் ஆகியனவற்றை வைப்பதுதான். இக்கயிறுகள் வீரதாடுலு (விரர் கயிறுகள்) என வழங்கப்படுகின்றன. இப் பெட்டியில் உள்ளவை மூங்கில் பிளாச்சுகளாலான பந்தலின் அடியில் வைக்கப்பட்டு, மாவிலை தோரணங்களாலும் மலர்களாலும் அலங்கரிக்கப்படும். பல சிறு மண்பானைகள் உள்ளே வைக்கப்பட்ட பெரிய பானை ஒன்றும், சோழிகளும், பொலி ஆவு எனப்படும் காளையின் உருவமும், உலோகத்தாலும் மண்ணாலும் செய்யப்பட்ட செருப்புகளும் அங்கு அப்பந்தலில் வைக்கப்படும். பூசைக்குத் தேவையில்லாத போது இந்த உருவங்கள் ஓர் அறையில் தொங்கவிடப்பட்டிருக்கும். தீட்டுக்கு உள்ளானவர்கள் அந்த அறையில் நுழைய மாட்டார்கள்.

கர்ண கோல்லர் என்ற பிரிவினர் கோழிகளை விற்று வாழ்க்கை நடத்துகின்றனர். அத்துடன் சிலைகளையும், வீர தாடுலு எனப்படும் கயிறுகளையும் கூடையில் வைத்துத் தலையில் சுமந்தபடி ஊர் ஊராகச் செல்வர். இக் குடையினை ஒரு தெருக்கோடியில் இறக்கி வைத்து அதற்குப் பூசை செய்தபின், ஒரு கயிற்றால் தங்கள் உடம்பில் அடித்துக் கொண்டவர்களாகத் தெருவில் அங்கும் இங்குமாகச் சென்று வருவர். இவர்கள் தெய்வங்களைச் சுமந்து திரிவதால் தேவருலு எனவும் அழைக்கப்படுகின்றனர்.

கோல்லர்கள் இடங்கைப் பிரிவினராதலால் பெத்த கோல்ல எனப்படும் சாதித் தலைவனுக்கு மாதிகன் ஒருவன் மட்டுமே உதவியாளனாக இருப்பான்.

முத்ராசர், மாதிகர் உள்ளிட்ட சில சாதியாரின் திருமண நிகழ்ச்சியின்போது முன்னோர்களான வீரர்களை வழிபடும் வீராளர் பூசை எனப்படும் வழிபாடு நிகழ்த்தப்படுகின்றது. கங்கா பூசை எனப்படும் சாதியாருக்கு உரிய சடங்கினையும், நூறு ரூபாய் அளவில் தொகை செலவிட்டு கோல்லர்கள் செய்கின்றனர். இந்தக் கங்கா பூசை மூன்று நாள்கள் வரை நீடிக்கும். அப்போது தரையில் முக்கு எனப்படும் ஒன்பது வகையான வடிவங்கள் ஐந்து வண்ணங்களில் வரையப்படும். தாமரைப்பூ, பூசைப் பந்தல், சூலம், ஆடும்பாம்பு, சக்தியின் சிம்மாசனம், வீரனும் அவன் இல்லாளும், ராணி வாசம், உணவுகள், கங்கா என்பனவே வரையப்படும் வடிவங்கள். இறுதியாக உள்ளது கங்கா தேவியின் பெண் உருவமாகும். கோல்லர்களின் முன்னோர் ஒருவர் கங்கராசு என ஆணாகவே கூறப்பட்டுள்ளார் என்பது இங்கு நினைத்தற்குரியது. இந்த வடிவங்களை வரைபவர்கள் மாலர் அல்லது மாதிகர் சாதியார் ஆவர். இத்துறையில் வல்லவர்களான மூன்று மாதிகர் அல்லது பம்பலர் பல தெய்வங்கள், தேவதைகள் ஆகியவற்றின் கதைகளைப் பாடியபடி வழிபாட்டின் மூன்றாம் நாள் பிற்பகலில் இவ்வுருவங்களை வரையத் தொடங்குவர். அரிசி, மஞ்சள் தூள், குங்குமம், ஆவாரம் இலை, உமிக்கரி ஆகிய வண்ணப் பொருட்களே இந்த உருவங்கள் வரையப் பயன்படுத்தப்படுகின்றன. என்னுடைய உதவியாளன் முன்னிலையில் கூரை இடப்பட்ட ஒரு வீட்டு முற்றத்தில் இந்த உருவங்கள் வரையப்பட்டன. உருவங்கள் வரையும் சமயத்தில் யாரும் அதனைப் பார்க்க அனுமதிக்கப்படுவதில்லை. இளகிய மனம் உடையவர்களும், சிறுவர்களும் உருவங்கள் வரைந்து முடிக்கப்பட்டுக் கண்படுவதைத் தடுக்கும் சடங்கு நிகழ்த்தப்படும் முன் அவைகளைப் பார்ப்பார்களாயின் நோய் வாய்ப்படுவர் அல்லது கெட்டது நிகழும் என நம்பப்படுகிறது. உருவங்கள் வரைந்து முடித்தபின் கங்கா தேவியின் உருவின் தலையருகே சிலைகள், கயிறுகள், வெற்றிலை, பூ, சிறியவாள் ஆகியன அடங்கிய மூங்கில் கூடை வைக்கப்படும். அப்பெட்டியின் அருகே அந்த உருவத்தின் வலப்பக்கத்தில் நெய் விளக்கினை ஏற்றி வைப்பர். இடப்பக்கத்தில் சிவனைக் குறிக்கும் ஒரு கலசம் வைக்கப்படும். சோற்றுக் கலங்கள் எனப்படும் போனலு சொம்புகள்

வரிசையாக வைக்கப்படும். மஞ்சளில் தோய்த்த துணியால் கட்டப்பட்ட பிரமய்யா என அழைக்கப்படும் சிறிய பெட்டி ஒன்று வைக்கப்படும். இந்தப் பொருள்களுக்கும் உருவத்திற்கும் இடையே வாளொன்று வைக்கப்படும். உருவத்தின் மேல் சோறு பல இடங்களில் குவிக்கப்படும். உருவத்தின் தலைமாட்டிலும் கால்மாட்டிலும் சோறு பெருங்குவியலாகக் குவிக்கப்படும். இத்தோடு அந்த உருவத்தின் வலப்பக்கத்தில் சோறு பெருங்குவியலாகக் கூருருளை வடிவில் அமைக்கப்பட்டு, அதில் பணியாரங்கள் ஆங்காங்கே சொருகப்படும். இதனைச் சுற்றிலும் சிறு சோற்றுத் திரள்கள் வைக்கப்படும். அவற்றில் வெற்றிலைகளால் அலங்கரிக்கப்பட்ட ஈர்க்குக் குச்சிகள் சொருகப்படும். பல இடங்களில் சோற்று விளக்குகள் அமைக்கப்பட்டு அந்த உருவத்தின் மீது ஆங்காங்கே வெற்றிலை பாக்குத் தூவப்படும். உருவத்தின் காலடியில் நீர் நிறைந்த சொம்பும், குங்குமத்தில் தோய்க்கப்பட்ட சோற்றுத்திரளும், சாம்பிராணித் தூபமும் வைக்கப்படும். ஏற்பாடுகள் அனைத்தும் முடிந்தவுடன் மூன்று கோல்லர்கள் அவ்வுருவத்தின் காலடியில் சென்று நின்று குங்குமத்தில் தோய்க்கப்பட்ட சோற்றின் மீது நீர் தெளித்துத் தூபம் காட்டிக் கோழியையும் காட்டுவர். சோறும் தூபமும் உருவத்தின் முன் காட்டப்பட்டபின் கோழிக்கும் தூபம் காட்டி அதன் கழுத்தை முறிப்பர். அதன் பின் தேங்காய் உடைக்கப்பட்டுப் பழம் முதலியன படைக்கப்படும். பின் அவர்கள் மூவரும் அந்த உருவத்தின் முன் விழுந்து வணங்குவர். அவர்களுள் வயதான ஒருவன் காலில் சலங்கை அணிந்தவனாகச் சற்று நேரம் மௌனமாக நிற்பான். மெல்ல மெல்ல அவன் உடல் வியர்க்கத் தொடங்கும். கூடியிருப்பவர்கள் அவன் மீது முன்னோர் ஒருவரின் ஆவி வந்து ஏறுவதாகக் கூறுவர். உருவத்தின் மீது வைக்கப்பட்டுள்ள வாளினை எடுத்து அவன் தன்னையே வெட்டிக் கொள்வான். பெரும்பாலும் முதுகிலேயே வாளினால் வெட்டிக் கொள்வான். வாளின் கூர்மையற்ற பக்கத்தால் தன் உடம்பில் போட்டுக்கொள்வான். கூடியுள்ளவர்கள் அவனிடமிருந்து வாளினைப் பிடுங்கி மீண்டும் உருவத்தின் மீது வைப்பர். அந்த முதியவன் அதன் பின் தன் உடலின் பல உறுப்புக்களையும் சிலிர்த்துக் குலுக்கியபடி முக்குவினைப் பல முறை சுற்றி வரு

வான். அவ்வாறு அவன் வரும்பொழுது மணமகன் அங்கே வந்து அந்த உருவத்தின் காலடியில் அமர்வான். தன் தலைப் பாகையினையும் மேல் துண்டினையும் வீசி எறிந்த பின், அவன் தரையில் விழுந்து கால்களை உதைத்துக் கொள்ளத் தொடங்கு வான். அவன் பெயர் என்ன என்று கேட்கப்படும். அவன் தான் காரியவள ராசு எனக் கூறுவான். தொடர்ந்து அவனிடம் கேட்கப்படும் கேள்விகளுக்கு அவன் பதில் உரைக்காமல் அழுத படி இருப்பான். தூபமும் விளக்கும் அதன்பின் உருவத்தினைச் சுற்றி எடுத்துச் செல்லப்படும். முதியவன் அப்பொழுது அந்தத் திருமணம் மங்களமான நிகழ்ச்சி எனக் கூறி, மணமக்களையும் கூடியுள்ளவர்களையும் வாழ்த்துவான். கர்ப்பூரம் கொளுத்து வதோடு சடங்கு முடிவுறும். அங்கு குவிக்கப்பட்டுள்ள சோற்றுத் திரளைப் பூணி கோல்லர் உண்பர்.

கோல்லர் சாதி மணமகன் தன் மாமியார் வீடு நோக்கி புறப்படும்போது அவனுடைய தோழர்கள் அவனைப் பிடித்து வைத்துக் கொள்வர் எனவும் ஒரு தங்கத் தகட்டுத் துண்டினை அவன் அவர்களுக்குக் கொடுத்தாலன்றி அவர்கள் அவனை விடமாட்டார்கள் எனவும் நெல்லூர் மாவட்டக் கையேட்டில் கூறப்பட்டுள்ளது.

காபுகள் முதலிய வேறு சில தெலுங்குச் சாதியாரிடையே இருப்பதைப் போலவே இலத்தோம் என்னும் மருமகனை வாரிசாக வரித்துக் கொள்ளும் பழக்கம் கோல்லர்களிடையேயும் உள்ளது.*

சாவுச் சடங்குகளில் பிணத்தைக் குளிப்பாட்டும்போது அதனை ஓர் அம்மியின் மீது சாயும்படி செய்வதோடு, அதன் இருபுறமும் உலக்கையினைப் போட்டுவைப்பர். அதன் தலை மாட்டில் விளக்கு ஒன்றையும் ஏற்றி வைப்பர்.

---

* நாட்டிய மகளிர், இல்லத்தோம் முதலியவர்கள் தொடர்பான உயர்நீதி மன்றம், மேல் முறையீட்டு அவை ஆகியவற்றின் முடிவுகள் - சி.ராமச்சந்திர அய்யர், சென்னை-1892. (See: C. Ramchendrier-Collection of decisions of High Court and the Privy Council Applicable to dancing girls, illatoms, etc, Madras, 1891.

தன் தந்தைக்கு விற்கும் பாலில் கூடத் தண்ணீரைக் கலக்க ஒரு கோல்லன் தயங்கமாட்டான் என இவர்களைப் பற்றி ஒரு பழமொழி வழங்குகின்றது. மற்றொரு பழமொழி இவர்கள் தங்கள் தாய்மொழியினை எவ்வளவு கொச்சைப்படுத்துகின்றார் கள் என்பது தொடர்பானது.

வெள்ளியாலான தயிர் கடையும் மத்தே இச்சாதிக்கு உரிய தாகக் காஞ்சிவரத்தில் வைக்கப்பட்டிருக்கும் சின்னம்.*

**கொல்லாரி - Gollāri (monkey)**

கடபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கொம்ம - Gommā**

இதனை மறைத்திரு ஜெ. கெயின் அவர்கள் கோதாவரி ஆற்றின் கரையோரம் வாழும் கோயிகளுக்குரிய பெயர் எனப் பதிந்துள்ளார். ஆற்றங்கரையில் உள்ள ஊர்கள் கொம்மு உள்ளு என வழங்கப்படும்.

**கோணபல - Gōnapala (old plough )**

தேவாங்கரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கொண்டலிக - Gondaliga**

1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கொண்டலிகர் பற்றிக் கூறப்பட்டுள்ளதாவது:- "இவர்கள் புடபுடுக்கெக்காரர்களைப் போல மராட்டியப் பகுதிகளிலிருந்து வந்த இரவலர்கள். அவர்களுடைய சாதியின் உட்பிரிவினரா தலும் கூடும். துர்க்கையை வழிபடும் இவாகள் அம்பா பவானி யினைச் சிறப்பிக்கத் தீவட்டி ஆட்டம் ஆடும் வழக்கத்தை மேற் கொண்டவர்கள். இந்த ஆட்டம் தேசஸ்த பிராமணர் இல்லங் களில் திருமணங்களின் போதும் அல்லது நேர்த்திக் கடனை நிறைவேற்றுவதற்காகவும் நிகழ்த்தப்படும்.

---

* ஜெ. எஸ். எப். மெக்கன்சி, இந்தியத் தொல்லியல். (J. S. F. Meckenzie, Ind. Ant. IV, 1875.)

**கோணீ - Gonē (a sack)**

மாலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கோணீ பெரிகெயர் தமிழ் நாட்டுச் சணப்பர்களோடு ஒத்த தெலுங்குப் பகுதி சார்ந்த கோணிப்பை நெசவாளர்களாவர். இந்தியர்களின் வாணிபத்திற்கு இன்றியமையாததான சணல் நாரால் நெய்யப்பட்ட முரட்டுச் சாக்காலான பையினையே கோணிப்பை என்ற வணிகப் பெயரால் அழைப்பர்.* கோமட்டிகளில் ஓர் உட்பிரிவினர் தொழில் தொடர்பால் கோணீ எனப் பெயர் பெற்றுள்ளனர்.

1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கோணீகர் கோணிப்பை நெசவாளர்களாகவும், பயிர்த்தொழிலாளராகவும், பெங்களூரில் மூட்டை சுமப்போராகவும் கூறப் பட்டுள்ளனர். இவர்களுடைய எண்ணிக்கை 66 சத வீதம் திடீரெனப் பேரளவினதாகக் குறைந்து போனதற்கான காரணம் இவர்களின் சாதிப் பெயர் காணீகர் சாதிப் பெயரோடு தவறாக மயங்கிக் கொள்ளப்பட்டதுதான் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

**கொஞ்சாகாரி - Gojākāri**

ஹட்டிகளினுடைய பட்டப் பெயர்களுள் ஒன்று.

**கொஞ்சி - Gonji (*Glycosmis Pentaphylla*)**

மாலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர். கொஞ்சி என்ற இச்செடியின் தமிழ்ப் பெயர் குலப் பண்ணை என்பதாகும்.

**கோபாலம் - Gōpālam (alms given to beggers)**

தோகடர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர்.

---

* யேலும் பர்னலும், ஹாப்சன் – ஜாப்சன். (Yule and Burnell. Hobson – Jobson.)

**கோபாலன் - Gōpālan (those who tend cattle)**

இடையர்களுக்கான மற்றுமொரு பெயர்.

**கோபொபுரியர் - Gōpopuriya**

கௌடொக்களின் ஓர் உட்பிரிவு.

**கோரண்டலர் - Gōrantla (*Lawsonia alba*)**

கோல்லர், பத்ம சாலேக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். இந்தியர்கள் தங்கள் நகத்திற்கான சாயப் பூச்சுக்காகவும், முகமதியர்கள் கூந்தலைச் செம்மை யாக்கிக்கொள்ளவும் இந்தச் செடியின் இலைகளைப் பயன் படுத்துகின்றனர். இதற்கான தமிழ்ப் பெயர் மருதோன்றி.

**கொரவ - Gorava**

குருபர்களுக்கான மற்றுமொரு பெயர்.

**கொரவரு - Goravaru**

கன்னடத்து இரவலர் வகுப்பார்.

**கோரே - Gōrē**

கணக்கெடுப்பின்போது லம்பாடிகளுக்குரிய மற்றுமொரு பெயராகப் பதியப்பட்டுள்ளது. கோர என்பது வணிகர் அல்லது கடைக்காரர் எனப் பொருள்படும். வணிகத்தில் ஈடுபடும் லம்பாடிகள் இப்பெயரினைத் தரிப்பர்.

**கொரிகெ - Gorige (*Cyamopsos psoralioides*)**

கொத்தவரைச் செடிக்குரிய தெலுங்குப் பெயர். தேவாங் கர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர்.

**கொரெல்ல - Gorrela (sheep)**

கோல்லர், கம்மர், காபு ஆகிய சாதிகளுக்கு உரிய புறமணக் கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். கொண்டகொர்ரி என்ற

மலை மறியினைக் குறிக்கும் பெயர். ஜடப்புகளின் புறமணக் கட்டுப்பாடுடைய குலத்தின் பெயருமாகும்.

**கோசங்கி - Gosangi**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கோசங்கி, மாதிகர்களுக்கு உரிய மற்றுமொரு பெயராகப் பதியப் பட்டுள்ளது. 1869-இல் விசாகப்பட்டினம் கையேட்டில் கோசங் குலு பற்றித் தரப்பட்டுள்ள விவரங்கள் வருமாறு:- "இராவ ணனைக் கொல்வதற்காக இராமருக்கு உதவப் பிரம்மாவின் அவதாரமாகத் தோன்றிய ஜாம்பவானின் வழியில் வந்தவர் களாகத் தங்களைக் கூறிக் கொள்ளும் பிச்சைக்காரர்கள் இவர் கள். கோசங்கிகள் மாதிகர்களுக்கு அவர்களுடைய புற ஒழுக்கத் தொடர்பால் பிறந்தவர்கள் எனக் கருதப்படுகிறார்கள். கோசங் கிகள் சாதியைச் சேர்ந்த பெண்கள் ஆண்களைப் போல உடை அணிந்து பாட்டுப் பாடிப் பிச்சையெடுப்பர். இவர்கள் மாதிகர் சாதியோடு முறையாக இணைக்கப்பட்ட இரவலர்கள்.

**கோசாயி அல்லது கோசுவாமி - Gosāyi or Goswami**

இந்தியாவின் வடக்கு மேற்குப் பகுதிகளிலிருந்து தெற்கே குடிபெயர்ந்து வந்த சமயநெறிப்பட்ட இரவலர்கள் கோசாயி கள். மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையிலிருந்து நான் இவர்களைப் பற்றித் திரட்டிய செய்திகள் வருமாறு:- "இவர் களில் பெரும்பாலோர் தண்டி உட்பிரிவினைச் சேர்ந்தவர்கள். கோசாயி ஒரு தனிச் சாதியன்று. பக்தி நெறிப்பட்ட ஒருவன் பொதுவாகக் கோசாயி என அழைக்கப்படுகின்றான். அவன் பிர மச்சரியத்தை மேற்கொண்டவனாக இருந்தாலும் அல்லது இல் வாழ்வினனானாலும், ஊர் ஊராகச் சுற்றி அலைந்தாலும் அல் லது மற்றவர்களைப் போல நிலையாகத் தங்கி வாழ்ந்தாலும், எத்தொழிலும் செய்யாமல் சும்மா இருப்பதே சுகம் என்றிருந் தாலும் அல்லதுஒரு தொழிலை மேற்கொண்டு செய்தாலும் கோசாயி என்ற பெயரை மேற்கொள்ள அவன் சமய நெறிப் பட்ட வாழ்க்கையினை மேற்கொண்டிருந்தால் அதுவே போது மானதாகும். இவர்களில் சிலர் உடம்பு முழுதும் திருநீறு பூசிச்

கொண்டு பரட்டைத் தலையர்களாக இருப்பர். ஒரு சிலர் தலை முடியைச் சடையாக்கிக் கயிறு போலச் சுற்றிக் கொண்டிருப்பர். நாடு முழுதும் எங்கும் அலைந்து திரிந்தபடியுள்ள இவர்கள் புகழ்பெற்ற கோயில்களுக்குச் செல்வதோடு சமூகத்தின் ஒட்டுண்ணிகளாகவும், திருத்தமுடியாத போக்கிரிகளாகவும் உள்ளனர். சிலர் படிக்கத் தெரிந்தவர்கள். மிகச் சிலர் நன்கு கற்றவர்கள் எனினும் பெரும்பாலானவர்கள் மூடர்களே. தங்களுக்குரிய தனி அடையாளமாகப் பெரும்பாலானவர்கள் மஞ்சள் வண்ண ஆடை அணிவர். சமயநெறிப்பட்ட சாதியாராக இவர்கள் இருப்பினும் பெருவணிகர்களாகவும் தொழிலில் ஈடுபட்டவர் களாகவும் உள்ளனர். வணிகர், வட்டிக் கடைக்காரர், தொழில் முனைவர் போன்ற துறைகளில் இவர்கள் மிகவும் மதிக்கப் படுகின்றனர். இவர்கள் திருமணம் செய்துகொள்வதில்லை. பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகியவர்களுள் அதி லும் சிறப்பாக முதல் இரு பிரிவினருள் விருப்பம்போல் யாரும் கோசாயி பிரிவினரோடு சென்று சேர்ந்து கொள்ளலாம். இப் பிரிவீனரோடு சேர்ந்த பின் இவர்களுடன் கலந்து பழகி ஒன்றாக உண்டு உறையும் வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் அவர்க ளுடைய சொந்தச் சாதியிலிருந்து விலக்கப்பட்டவர்களாவர். இவ்வாறு விலக்கி வைக்கப்படுவதாலேயே கோசாயிகள் ஒரு தனிச் சாதியாகக் கருதப்படுகின்றார்களேயன்றி அவர்கள் சமயக் கடைபிடி காரணமாக அவர்கள் தனித்தவர்களாகக் கருதப்படுவ தில்லை. இவர்கள் இறந்தபின் ஒரு கொடூரமான வழக்கம் மேற் கொள்ளப்படுகிறது. இறந்தவர்களின் தலையில் ஒரு தேங்காயை அது சிதறித் துண்டுகளாகும்படியாக அதற்கென்றே ஏற்பாடு செய்யப்பட்டுள்ளவர்கள் உடைக்கின்றனர். பின்னர் உடல் சிவப்புத் துணியில் சுற்றப்பட்டுக் கங்கையில் வீசி எறியப்படு கின்றது. தென்னிந்தியாவில், இப்பழக்கத்திற்கான அடிப்படைக் காரணமாகக் கூறப்படும் விளக்கம் வருமாறு. இந்துக்களின் சமய வாழ்வின் குறிக்கோள் முக்தி பெறுவதேயாகும். சமய நெறிப்பட்ட வாழ்க்கை வாழ்பவர்கள், அடுத்துவரும் பிறவிக்கு ஆட்படாது முக்தி பெற வேண்டுமானால் அவர்களுடைய உட லில் உள்ள ஆன்மா உச்சந் தலையினைப் பிளந்துகொண்டு அங்கே அமைந்திருக்கும் சூட்சுமநாடி வழியாக வெளியேற

வேண்டும். இறக்கும் தருவாயிலுள்ள அல்லது இறந்த ஒரு அற நெறிப்பட்ட துறவியின் உயிர் இவ்வாறு பிரிந்து போனதாகவே நம்பப்படுகிறது. இந்த நம்பிக்கையினை நிலை நிறுத்தவே இறந்து போனவர்களான கோசாயிகளின் தலையில் தேங்காய் உடைக்கும் இப்பழக்கம் ஏற்பட்டதாதல் வேண்டும். இதே வழக்கப்படி தென்னிந்தியாவினைச் சார்ந்த இறந்துபோகும் பிராமணத் துறவிகளின் உடலும் சடங்குகளுக்கு உட்படுத்தப் பட்டுப் புதைக்கப்படுகின்றதேயன்றி, எரிக்கப்படுவதோ ஆற்றில் எறியப்படுவதோ இல்லை."

மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் சில கோசாயிகள் கோத்திரங்களையும் பதிந்துள்ளனர். அச்சுத, தரித்திர என்பவை அவற்றுள் குறிப்பிடத்தக்கவை. 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் மந்துல (மருத்துவர்), பாவாஜி என்பன கோசாயி சாதியின் உட்பிரிவுகளாகவும், அதற்குரிய வேறு பெயர்களாகவும் பதியப்பட்டுள்ளன. கூசெ அல்லது குசெய் என்ற பெயர், குடும்பங்களைச் சார்ந்த ஒரிய பிராமணர்களான புரோகிதர்களுக்குரிய பெயராகும்.

**கோசு - Gosu (pride)**

தேவாங்கரின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலப்பெயர். பெருமை என்ற பொருள் உடையது.

**கவுண்டன் – Goundan**

"பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ள சில பிரிவினர் வழக்கமாகக் கவுண்டன் என்ற பட்டப் பெயரைத் தங்கள் பெயருக்குப் பின் தங்கள் சாதியைக் குறிக்கும் பெயராகத் தரித்துக் கொள்கின்றனர். எனினும் ஊர்த் தலைவனை ஊர்க் கவுண்டன் எனக் குறிக்கும் சிறப்புப் பெயராகவே இதனைக் கொள்ள வேண்டும்" எனச் சேலம் மாவட்டக் கையேட்டில் கூறப்பட்டுள்ளது.பள்ளி, ஒக்கிலியன், வேளாளன் ஆகிய சாதியைச் சேர்ந்தவர்களைக் கவுண்டன் என்ற பட்டப் பெயரைத் தரிக்கின்றவர்களுக்கு உதாரணமாகக் கூறலாம். சேரவராயன் மலையைச் சேர்ந்த மலைத் தோட்டக்

காரர்களும் மற்றவர்களும் ஒரு மலையாளியை எப்பொழுதும் கவுண்டா என்றே கூப்பிடுவர்.

**கொயி - Goyi (lizard)**

பொட்டாதர் சாதியின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கிராமணி - Grāmani**

சாணர்களுக்குரிய பட்டப்பெயர். சத்திரியர்களின் சாதித் தலைவனுக்கும் இப் பெயர் உரியது. மலபாரில் கிராமம் என்பது பிராமணர்கள் குடியிருப்பைக் குறிக்கும் பெயராகத், தமிழ்நாட்டு அக்ரகாரத்திற்குச் சமமானதாக வழங்கி வருகின்றது.

**கூடலர் - Gūdala**

விசாகப்பட்டினம், கஞ்சம் மாவட்டங்களைச் சேர்ந்த கூடைகள் செய்யும் தெலுங்குச் சாதியார் கூடலர். இப்பெயர் நீர் இறைக்கும் கூடையிலிருந்து வந்ததாகும். பின்வரும் குறிப்பு களுக்கு நான் திரு சி. ஹயவதன ராவிற்குக் கடப்பாடுடையேன் இச்சாதியார் முதலில் நாட்டு வைத்தியர்களுக்கும், நோயாளி களுக்கும் தேவைப்படும் மூலிகைகளையும், வேர்களையும் தேடித்தரும் பணியினையே செய்து வந்ததாகக் கூறப்படுகிறது. சாலூரு நகரைச் சேர்ந்த கூடலர் சிலர் இன்றும் அத்தொழிலைச் செய்து வருகின்றனர். எனினும் மூங்கில் கூடைகளை முடை தலும் நன்னீரில் மீன் பிடித்தலுமே இவர்களுடைய முக்கிய தொழிலாகும்.

பிற தெலுங்குச் சாதியாரைப் போலவே இவர்களிடை யேயும் பல புறமணக்கட்டுப்பாடுடைய இல்லப் பெயர்கள் உள்ளன. குர்ர (தினை), பத்தி (பருத்தி), நக்க (நரி), கண்டி (காதுத்துளை) என்பன அவைகளுள் சிலவாம். மேநரிகம் எனப் படும் தாய்மாமன் மகளை மணக்கும் பழக்கம் இவர்களால் கடைபிடிக்கப்படுகிறது. ஒரு சிறுமி பூப்படையும் முன்பே மணம் செய்வித்தலே பொதுவான வழக்கம். பிராமணர் ஒருவர் புரோகிதராக மணத்தை நடத்தி வைப்பார். மணப் பெண்ணுக்கு

உரிய பரிசத்திற்கான விலை (வோலி) யாக மணப்பெண்ணுக்கு ஒரு புதுச் சேலையும், அவள் பெற்றோருக்கு ஏழு ரூபாயும் தரப் படுதல் வேண்டும். இதனை மணமகன் உறவினர்கள் எண்ணெய், மஞ்சள், சத்தமானம் எனப்படும் தாலி ஆகியவற்றோடு மணமகள் வீட்டுக்குக் கொண்டு செல்வர். விருந்துக்குப் பின் சத்தமானம் மணமகள் கழுத்தில் கட்டப்படும். மணமக்கள் மணமகன் இல்லத்திற்கு அழைத்து வரப்படுவர். இங்கும் விருந்து நடைபெறும். அதன்பின் அவர்கள் மணமகள் இல்லம் திரும்பி அங்கு மூன்று நாள்கள் தங்கி இருப்பர். கைம்பெண்கள் மறுமணம் செய்துகொள்ள மும்முறை வாய்ப்புப் பெறுகின்றனர். ஒவ்வொரு மறுமணத்தின்போதும் பரிசத் தொகை (சோலி) ரூ. 3, ரூ.2,ரூ- 28-0 ஆகக் குறையும். ஒரு கைம்பெண்ணின் மறுமணத்தில் அவளை ஓர் அம்மிக் கல்லின் அருகே நிறுத்தியே சத்தமானம் அணிவிப்பர்.

எக்கலதேவடு எனும் தெய்வத்தை இச்சாதியார் வழிபடு கின்றனர். இவரை இவர்கள் தங்கள் பிறப்பிடத்திலேயே விட்டு வந்துவிட்டதாகக் கூறுகின்றனர். இறந்தவர்களை எரித்தபின் சின்னரோசு சாவுச் சடங்கினை மேற்கொள்கின்றனர். மூன்றாம் நாள் பிணத்தைச் சுட்ட இடத்தில் சோற்றினைப் படைப்பர்.

## கூடவாண்டலு - Gūdavandlu

நெல்லூர் மாவட்டக் கையேட்டில் பிச்சையெடுத்துப் பிழைப்பு நடத்தும் வைணவர்கள் என இவர்கள் பதியப் பட்டுள்ளனர். இப்பெயர் கூடைக்காரர் எனப் பொருள்படுவது. இது பிச்சையெடுக்கும்போது கூடையை உடன்கொண்டு செல்லும் சாதானிகளைக் குறிப்பதாகலாம்.

## குடி – Gudi (temple)

ஒக்கிலியர்களின் ஓர் உட்பிரிவு. ஜோகிகளின் புறமணக் கட்டுப்பாடுடைய குலத்தின் பெயர். கோயில் தாசரிகளைக் தொங்க தாசரிகளிலிருந்து வேறுபடுத்தவும் இப்பெயர் பயன் படுத்தப்படுகிறது.

## குடிகாரர் - Gudigāra

தென் கன்னட மாவட்டக் கையேட்டில் குடிகாரர் பற்றித் தொகுத்துக் கூறப்பட்டுள்ள செய்திகள் வருமாறு:- "இவர்கள் மரத்தில் செதுக்கு வேலையும், வண்ணப் பூச்சுத் தொழிலும் செய்யும் கன்னடம் பேசும் சாதியார். சைவ நெறி சார்ந்த இந்துக்களான இவர்கள் பூணூல் அணிகின்றனர். சிவாலி பிராமணர்கள் இவர்களுக்குப் புரோகிதர்களாகப் பணிபுரிவர். இவர்களுள் சிலர் அளிய சந்தானத் தாய உரிமையை மேற் கொள்கின்றனர். மற்றவர்கள் சாதாரணத் தாய உரிமை வழிப் பட்டவர்கள். தங்கள் சாதிக்குள்ளாகவே மணந்து கொள்ளும் இவர்கள் தங்கள் கோத்திரத்தில் அல்லது குடும்பத்தில் மண உறவு கொள்வதில்லை.* குழந்தை மணம் கட்டாயம் இல்லை. தாரெ மணமுறை இவர்களால் மேற்கொள்ளப்படுகின்றது. அளிய சந்தானத் தாய முறையைப் பின்பற்றும் பிரிவினருள் கைம்பெண்களும் மணமுறிவு செய்து கொண்ட மகளிரும் மறுமணம் புரிந்து கொள்கின்றனர். மற்ற பிரிவுகளுள் இது அனுமதிக்கப்படுவதில்லை. இறந்தவர்களைப் புதைத்தல், எரித்தல் ஆகிய இருவகைப் பழக்கங்களும் உள்ளன எனினும், எரிக்கும் பழக்கமே பெருவழக்கினதாக உள்ளது. செட்டி என்பது இவர்கள் சாதாரணமாகச் சூட்டிக் கொள்ளும் பட்டப் பெயராகும்."

திரு டி-குருஜ் (D'cruz) எழுதுவதாவது:-* "குடிகாரர் அல்லது சந்தன மரத்தில் சிற்பச் செதுக்கு வேலை செய்பவர்கள் கோவாவிலிருந்து மைசூருக்கும், கன்னடத்திற்கும் போர்த்துகீசிய வந்தேறியவர்களின் கிறித்தவர்களாக்கும் நெருக்கடி முயற்சியின் காரணமாகக் குடிபெயர்ந்தவர்களாவர். இவர்கள் கொங்கணத்தைச் சேர்ந்தவர்கள் என்பதனை இவர்கள் முதலில் பேசி வந்த கொங்கண மொழியே உறுதிப்படுத்துகின்றது. குடிகார என்ற பெயர் கோயிலைக் குறிக்கும் குடி என்ற சொல்லிலிருந்து

---

* தர்ஸ்டன், தென்னிந்தியாவில் மரச் சிற்பத்தொழில் பற்றிய தனிவரைவு, 1903. (Thurston. Monograph of Wood-Carving in Southern India, 1903.)

வந்தது என இவர்கள் கூறுகின்றனர். இவர்கள் தங்கள் பகுதியில் கோயில்களை அழகு செய்யும் மரச் சிற்பங்கள் செதுக்குவோராகவும், வண்ணங்கள் தீட்டுவோராகவும் இருந்தமையே தங்களுக்கு இப்பெயர் வரக் காரணம் என்பர். குட்டக (குடைபவர்) என்ற வடமொழிச் சொல்லும் அப்பெயருக்கு வேர்ச்சொல் ஆகலாம் என்ற கருத்தும் நிலவுகின்றது. தங்கள் சாதியைச் சேர்ந்தவர்கள் கோவாவில் இன்னமும் கடைசல், வண்ணம் தீட்டல், பிற நுண்கலைப் படைப்புக்கள் செய்தல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டவர்களாக இருப்பதாக இவர்கள் கூறுகின்றனர். சித்திரக்காரர் (புனைகலை வல்லோர்) போல இவர்களும் தங்களைச் சத்திரியர்கள் எனக்கூறிக் கொள்வதோடு, சத்திரியர் அனைவரையும் பூண்டோடு ஒழிப்பதாகச் சபதம் மேற்கொண்ட விட்டுணுவின் அவதாரமாகிய பரசுராமனுக்கு அஞ்சியே தாங்கள் மரச்சிற்பப் பணியினையும், தேர் வேலையையும் மேற்கொண்டதாகக் கூறுகின்றனர். தந்தத்தில் செதுக்கு வேலை செய்வதிலும் இவர்கள் கைதேர்ந்தவர்கள். வங்காளத்தைச் சேர்ந்த தந்தச் செதுக்கு வேலை செய்யும் கொண்டிகாரர்களுக்கு இவர்கள் தூரத்து உறவினர்களாதல் கூடும் என்று கருதப்படுகிறது. சந்தன மரத்தில் செதுக்கு வேலை செய்யும் கலையினைச் சிமோகா மாவட்டத்தின் வடமேற்குப் பகுதியைச் சேர்ந்த சோரப், சாகர் வட்டங்களில் வாழும் சில குடும்பங்களே மேற்கொண்டுள்ளன. சாகரில் இரண்டு மூன்று குடும்பங்களும், சோரப்பில் ஆறு குடும்பங்களும் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளன. மொத்தத்தில் சுமார் முப்பது பேரே இந்தக் கைத்தொழிலில் ஈடுபட்டவர்களாக உள்ளனர். ஹொனவர், கும்ப்ட, சிர்சி, சித்தாப்பூர், பில்லிசி, பணவாசி, ஆகிய வட கன்னட மாவட்டத்தினைச் சேர்ந்த ஊர்களில் வாழும் மேற்கூறிய முப்பது பேர்களின் உறவினர்களும் இக் கைத்தொழிலை மேற்கொண்டுள்ளனர். எனினும் இவர்களின் தொழில் நுட்பம் சோரப், சாகர் கலைஞர்களின் தொழில் நுட்பம் போலச் சிறந்ததாக இல்லை. வட கன்னட மாவட்டத்தைச் சேர்ந்த இக் கலைஞர்கள் நெட்டியினைக் கொண்டு பல பொருட்களையும் நேர்த்தியாகச் செய்வதில் கைதேர்ந்தவர்களாக உள்ளனர். திருமணங்களின்போது தலையில் அணிந்து கொள்ளும் பாசிங்கம்

என்னும் நெற்றிப்பட்ட அணியினை, முத்துக்களை இடையே பதித்து இவர்கள் அழகுபட அமைப்பர். மரத்தில் செதுக்கு வேலை செய்வதற்கான நுட்பமான கருவிகளை ஐரோப்பியக் குடைக் கம்பிகளைக் கொண்டும், துப்பாக்கி துப்புரவு செய்யும் கம்பியைக் கொண்டும், நாட்டு உருக்குக் கம்பிகளைக் கொண் டும் அமைத்துக் கொள்கின்றனர். இந்தக் கைத்தொழில் அரசு, பொதுத்துறை நிறுவனங்கள், மன்னர்கள் ஆகியோர் வாழ்த்து இதழ்கள், வரவேற்பு இதழ்கள் வைத்துத் தருவதற்கான பெட்டிகள் செய்ய அவ்வப்போது தரும் பணி ஆணையினைக் கொண்டும் பொருட்காட்சி, பரிசளிப்புகள் ஆகியனவற்றுக்காகத் தரப்படும் சிறப்புப் பணி ஆணையினைக் கொண்டுமே ஊக்கம் பெற்று வளர்ந்து வருகின்றது. இவ்வாறு பணி ஆணை தருபவர்கள் அதற்காக நல்ல விலையும் தருகின்றனர்." மேன்மை தங்கிய மைசூர் அரசனின் அரண்மனையினைக் கட்டும் பணியில் ஈடுபட்டுள்ள சோரப், சாகர் பகுதிகளைச் சேர்ந்த கைவினைஞர்களோடு நேரில் பேசியதிலிருந்து கிடைக்கப் பெற்ற தகவல்களின்படி, சில குடிகாரர்கள் இத்தொழிலில் ஆர்வம் இன்மை காரணமாக இதனைக் கற்றுத் தேர்ச்சி பெறாது, தச்சுத் தொழிலாளராகப் பணி மேற்கொள்வதாக வும், மற்றவர்கள் நிலத்தை விலைக்கு வாங்கிப் பயிர்த்தொழிலில் ஈடுபட்டவர்களாக இக்கலையினை மறந்தவர்களாகி விட்டதா கவும் கூறினர். தென் கன்னடத்தில் இருக்கும் உடுபியில் சில குடிகாரர்கள் பெரிய உருவினை உடைய எருமைகளையும், மனிதர்களையும் மரத்தால் செய்து விற்பனை செய்கின்றனர். அவை ஹிரியத்காபில் உள்ள சிவன் கோயிலில் வேண்டுதலின் படி கொண்டு வைக்கப்படுவதற்குரியவை. இவர்களே மரத்தா லான பொம்மைகளையும், வண்ணம் தீட்டிய மண் உருவங் களையும் செய்து வருகின்றனர்.

திரு எல். ரைஸ் அவர்கள் மைசூர் விவரக் குறிப்பில் குடி காரர் பற்றித் தந்துள்ள பின்வரும் செய்திகளை இங்கே எடுத்துக் கூறுவது பொருத்தமாக இருக்கும் எனக் கருதுகின் றேன். "பெட்டிகள், எழுதும் மேசைகள், மற்ற பொருட்கள் ஆகியவற்றில் குடிகாரர்கள் செதுக்கும் கதை நிகழ்ச்சி அமைப்

புக்கள் நுட்பமான வேலைப்பாடுகளையும், விரிவான அமைவு களையும் உடைய திருக்குமறுக்கான பின்னிப் பிணைந்த இலை வடிவங்களையுடைய சுருள் ஒப்பனைகளாம். அவை பக்க இடங்கள் முழுவதையும் போர்த்து அமைக்கப்பட்ட, இந்து கடவுளர்களையோ, புராணக் கதைகள் தொடர்பான உருவங் களையோ கொண்டு விளங்குவதோடு இடையிடையே விலங்கு உருவங்களையும் கொண்டனவாக இருக்கும். இவற்றின் நுட்ப அமைவு மிகவும் முரண் அமைவுடையனவாயினும், அவை மிகத் திறமையாக வகைப்படுத்தப்பட்டு, ஒருங்கிணைவுடையன வாகக் கீழ்த்திசைக் கலை அணி நலன்களின் மேம்பாட்டினை வெளிப்படுத்தும் வகையில் மரத்தில் ஒரு சிறு பகுதியினைக் கூட வெற்றிடமாக விடாமல் விரிவான வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருக்கும். தொழில் செய்யப்படும் மரமோ மிக உறுதியானது. அதில் பணிபுரிய மிகப் பொறுமையும், கருத்து டைமையும் தேவைப்படும். எனவே ஒரு பெட்டி அல்லது சாய்வு மேசையினைச் செய்து முடிக்கப் பல மாதங்கள் உழைக்க வேண்டியதாகின்றது. இதன் காரணமாக இக் கைவினைஞர் வயதாகும் முன்னர் இளமையிலேயே தங்கள் பார்வையினை இழந்து விடுவதாகக் கூறப்படுகிறது. மேற்கத்திய வடிவு அமை வுகளை இவர்கள் அப்படியே பார்த்து அமைக்கும் திறன் பெற்றவர்கள்.'' மேலும் இவரே எழுதியுள்ளதாவது:– ''பெட்டி கள், இழுப்பறைப் பெட்டிகள், பேழைகள் ஆகிய பொருள்களே குடிகாரர் கைவினைஞர்களால் மிகுதியாகச் செய்யப்படுபவை. இவற்றின் மேற்பரப்பு முழுதும் நுட்பமான சுருள் புனைவு ஒப்பனை செய்யப்பட்டு இடையிடையே இந்து சமயத் தெய்வ உருவங்கள் செதுக்கப்பட்டுப் பார்க்க நிறைவு தரும் வளமான தோற்றமுடையனவாக அமைந்திருக்கும். காண்டோன் மற்றும் பம்பாய் செதுக்கு வேலையைவிட சோரப் செதுக்கு வேலை உயர்ந்ததாகக் கருதப்படுகிறது. மிகவும் கருத்துச் செலுத்திச் செய்யப்பட வேண்டிய கடினமான பணியாகையால் விலை அதிகம் தரப்பட வேண்டியதாகின்றது. குடிகாரர்கள் அவர் களிடம் தரப்படும் எந்த உருவ அமைவுகளையும் அப்படியே பார்த்து அமைக்கும் திறன் கைவரப் பெற்றவர்கள். ஆல்பங் களுக்கான மேற்பலகைகள், ஜெரோக்கின் வேட்டைக் காட்சிகள்

சுற்றிலும் உருவங்களோடு கூடிய இழுப்பறைப் பெட்டிகள் ஆகியனவற்றை ஐரோப்பியர்களுக்காக நல்லபடியாகச் செய்து தந்துள்ளனர்.'' 1903-இல் டெல்லியில் நடைபெற்ற தர்பார் தொடர்பான பொருட்காட்சியில் வைக்கப்பட்ட வேட்டைக் காட்சிகள் செதுக்கப்பட்ட சந்தனப் பேழைக் காகக் குடிகாரர்களுக்குத் தங்கப் பதக்கம் ஒன்று பரிசளிக்கப்பட்டது. அப்பேழை இப்பொழுது சென்னை அருங்காட்சியகத்தில் காட்சிப் பொருளாக உள்ளது.

இருவரிடையே திருமண உறவு செய்யக் கருதும் பெற்றோர், மணமக்களுக்கான சாதகக் குறிப்பு இல்லையாயின் ஒரு கோயிலுக்குச் சென்று பூசாரியிடமிருந்து கொஞ்சம் பூக்களைப் பெறுவர். அவற்றை எண்ணிப் பார்த்தால் இரட்டைப் படையாக இருக்குமேல் அந்த மண உறவு உறுதி செய்யப்பட்டு வெற்றிலை பாக்கு மாற்றிக்கொள்வர். மண நாளன்று மண மகன் தன் சுற்றத்தாருடன் மணமகள் இல்லம் செல்வான். அவர்கள் மணமகளுக்கான சேலை, ரவிக்கை, பொன்னாலான சிறு அணிகோக்கப்பட்ட கறுப்புப் பாசிமணி மாலை ஆகியன வற்றை உடன் எடுத்துச் செல்வர். மணமகள் இல்லத்தார் அவர்களை வழியில் எதிர்கொள்வர். ஒவ்வொருவரிடமும் அரிசி, தேங்காய், முகம் பார்க்கும் கண்ணாடி ஆகியன அடங்கிய ஒரு தட்டுக் இருக்கும். ஒரு கூட்டத்தைச் சேர்ந்த பெண்கள் மற்றொரு கூட்டத்தைச் சேர்ந்த பெண்களுக்குக் குங்குமம் வைத்து விடுவதோடு ஒருவர் மீது ஒருவர் அரிசியினையும் தூவிக் கொள்வர். மணப் பந்தலை நெருங்கியவுடன் மண மகளின் உடன்பிறந்தவன் மணமகனின் கால்களை கழுவு வான். மணமகளின் தந்தை மணமகனை மணப் பந்தலுக்கு அழைத்துச் செல்வார். புதிய ஆடைகள் முதலியன வீட்டி னுள்ளே அனுப்பப்படும். மணமகனின் அன்னையோ, உடன்பிறந்தவளோ சாதித் தலைவன் அனுமதியுடன் மண மகள் கழுத்தில் கறுப்புப் பாசிமணியாலான மாலையினை அணி விப்பாள். மணமகளின் தாய்மாமன் அவளைக் கைகளால் தூக்கி வந்து மணப் பந்தலில் அமர்த்துவார். மணமகளின் உடன்பிறந் தவன் மணமகனை அங்கு நடத்திச் செல்வான். மணமக்

களிடையே ஒரு திரைச் சீலை தொங்கவிடப்படும். அவர்கள் மாலை மாற்றிக் கொண்டபின் திரைச்சீலை விலக்கப்படும். பாலும், தண்ணீரும் கொண்ட ஒரு சிறு பாத்திரம் மாவிலையால் அலங்கரிக்கப்பட்டு மணமக்களின் முன் வைக்கப்படும். மணமகளின் அன்னை மணமகளின் வலக் கையினை எடுத்து மணமகன் வலக் கை மீது வைப்பாள். மணச்சடங்கை நடத்தும் பிராமணன் மணமகள் கரத்தின் மீது ஒரு வெற்றிலையையும், தேங்காயையும் வைப்பான். மணமகளின் பெற்றோர் ஒரு பாத்திரத்திலிருந்து அதன் மீது நீர் வார்ப்பர். பிராமணன் அதன் பின் மணமக்களுக்குக் கங்கணம் அணிவித்த பின் புனித நெருப்பினை மூட்டுவான். சுற்றத்தார் மணமக்களுக்குப் பணம் பரிசளிப்பர். முதிய மகளிர் மணமக்களின் முன் விளக்கினை ஆரத்தி எடுப்பர். மணமகன், மணமகளின் கரத்தைப் பற்றி அவளை வீட்டினுள்ளே அழைத்துச் செல்வான். அவர்கள் இருவரும் ஒரு பாயில் அமர்ந்து ஒரே கலத்திலிருந்து பாலைப் பருகுவர். ஒரு படுக்கை ஏற்பாடு செய்யப்பட்டு மணமக்கள் அதில் அமர்ந்தபின் மணமகள் மணமகனுக்கு வெற்றிலை மடித்துத் தருவாள். இரண்டாம் நாள் அவர்களுக்குக் காலையிலும், மாலையிலும் விளக்கு ஆரத்தி எடுப்பர். மூன்றாம் நாள் ஒரு பாத்திரத்தில் சிவப்பு நிறமாக்கப்பட்ட தண்ணீர் வைத்து, அதில் ஒரு மோதிரம், ஒரு பாக்கு, அரிசி ஆகியன போடப்படும். மணமக்கள் அதனுள் மோதிரத்தைத் தேடுவர். அதனைத்தேடி எடுத்தவுடன் மணமகன் மணமகளுடைய விரலில் அதனை அணிவிப்பான். பின்னர் அவர்கள் குளிப்பர். அப்போது துணியில் மீனினைப் பிடிக்கப் பார்ப்பர். குளித்தபின் அவர்கள் கையிலுள்ள கங்கணம் அவிழ்க்கப்படும்.

### குடிசை - Gudisa (hut)

போயர், காபு சாதியாரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர்.

### குடிய - Gudia

ஒரியாவைச் சேர்ந்த இனிப்புப் பலகாரங்கள் விற்பவர்கள் குடியர். சமூகப்படி நிலையில் உயர்ந்த நிலையில் உள்ள இவர்

களிடம் சில ஒரிய பிராமண வகுப்பார் தண்ணீர் பெற்றுக் குடிப்பர். இவர்கள் தயாரிக்கும் இனிப்புப் பலகாரங்கள் திருமண விருந்துகளுக்காகப் பிராமணர் உள்ளிட்ட எல்லாச் சாதியா ராலும் வாங்கப்படுகிறது. இச் சாதியின் பெயர் வெல்லம் எனப் பொருள்படும் 'குடு' என்பதிலிருந்து வந்ததாகும். இரண்டு பிரிவினராக உள்ள இச்சாதியாரில் ஒரு பிரிவினர் இனிப்புப் பலகாரங்களும், வெல்லச் சர்க்கரையும் விற்கும் தொழிலினைச் செய்ய, இன்னொரு பிரிவினர் பயிர்த்தொழில் செய்தலை மேற்கொண்டுள்ளனர். முன்னவர் குடியர் என வழங்கப்பட, பின்னவர் கொலாடர், ஹொலொடிய, அல்லது பொலாசிகுடிய என ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு பெயரிட்டு அழைக்கப் படுகின்றனர். இச் சாதிக்குரிய சாதித் தலைவன் சசுமல்லொ என அழைக்கப்படுவான். அவனுக்குக் கீழ் பேகரா, பொல்லொபய என்ற உதவியாளர்கள் உளர். தங்கள் மணம், சாவு முதலான வற்றுக்கான சடங்குகளை நடத்துவதில் குடியர் கௌடோக்கள் நெறியினையே பெரிதும் பின்பற்றுகின்றனர். சைதன்யரின் பரமார்த்த வைணவம் இவர்களுக்குரிய சமயமாகும். கிராம தேவதைகளான தாகுராணிகளையும் இவர்கள் வழிபடுகின்றனர்.

சமயச் சின்னங்களைத் தரித்துக் கொள்வதிலும், சடங்குக் கான பலி முதலியன தருவதிலும் குடியர் பிராமணர்களையே பின்பற்றுகின்றனர். காலைக் கடன்கள் முதலியன கழிக்கச் செல்லும்போது அணியும் ஆடைகளை இவர்கள் தீட்டுக்கு உட் பட்டதாகக் கருதுவர். எனவே அதற்கெனத் தனித்த உடைகளை இவர்கள் எப்பொழுதும் உடன்கொண்டு சென்று அச்செயலின் போது அவற்றை அணிந்து பின் களைந்து வைத்துக் கொள்வர். குடியர்களைப் போலவே ஒரியப் பிராமணர்கள் இதற்கெனச் சிறியதொரு உடையினை உடன்கொண்டு செல்வர்.

பேகர, சாகு, சாசுமல்லொ என்பன இவர்களுக்குரிய பட்டப் பெயர்கள். 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் இச்சாதி யின் பெயர் கோடிய எனப் பதியப்பட்டுள்ளது.

**குடுகுடுப்பாண்டி - Gudugudupāndi**

பூடுபுடுக்கலக்காரனுக்கான தமிழ்ப் பெயர்

## குக வேளாளர் - Guha Vellāla

இலங்கைக்குச் செல்ல இராமனுடைய படகினைச் செலுத்திய குகனோடு தங்களைத் தொடர்பு படுத்திக் கொள்ளும் சில செம்படவர்கள் சூடிக் கொள்ளும் பெயர். வேளாளர் எனக் கூறிக் கொள்வதால் இவர்கள் சமூகப் படிநிலையில் உயர்வு அடையவும் முடிகின்றது. மறவர்களும் தங்களைக் குகனது மரபினர் எனக் கூறிக் கொள்வர்.

## குசராத்தி - Gujarāti

குசராத்திலிருந்து வந்தவர்கள் என்பதனைக் குறிக்கும் நிலப் பகுதி தொடர்பான பெயர். இவர்களுள் சிலர் தெற்கே குடியேறி வளமான வாழ்க்கையுடையவர்களாக வணிகத்தில் ஈடுபட்டுள்ள னர். 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் குஜ்ஜர் என்பது குசராத்திக்குரிய மற்றுமொரு பெயரார்கப் பதியப்பட்டுள்ளது. 1906-இல் சென்னையில் விலங்குகளுக்கான ஒரு மருத்துவமனை தொடங்குவது தொடர்பாகக் கூட்டப்பட்ட ஒரு பொதுக் கூட்டத்தில் இந்து சமயத்தைச் சேர்ந்த அனைத் துப் பிரிவினரிடம் இருந்தும் அதற்கான நன்கொடை திரட்ட வேண்டும் என முடிவெடுக்கப்பட்டது. நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள், குசராத்தி போன்ற வணிக சமூகத்தவர்களைச் சிறப்பாக அணுகுவது எனவும், முடிவு எடுக்கப்பட்டது. இந்த முடிவினை முன்மொழிந்தவர் தங்கள் சமய நெறியில் கொண்ட பற்றுக் காரணமாகக் குசராத்திகாரர் விலங்குகளின் துன்பத்தை நீக்க மிக ஆர்வம் உடையவர்களாக உள்ளனர் எனவும், விலங்கு களுக்கான 'பிஞ்சரபோல்' எனப்படும் மருத்துவ நிலையம் இல் லாத ஊரில் வாழ்வது பாவச் செயல் என அவர்கள் கருதுகின்ற னர் எனவும் கூறினார். 'பிஞ்சரபோல்' என்பது சிவனுக்காக வேண்டிக் கொண்டு விடப்படும் காளை தங்குவதற்கான கூண் டாகும்.* குசராத்திகளிடையே முடிவு செய்யப்படும் ஒவ்வொரு திருமணமும் வணிக ஏற்பாடும் அவை பேசி முடிக்கப்பட்டவுடன் விலங்குகளின் மருத்துவமனைக்கான ஒரு வரி வெளிப்படை

---

* யூலும் பர்னலும் - ஹாப்சன் ஜாப்சன். (Yule and Burnell, Hobson - Jobson.)

யாகவே கேட்டு வாங்கப்படுகிறது எனத் திரு டிரம்மாண்ட் குறித்துள்ளார்.* 1901-இல் பரோடாவில் கெய்க்குவார் அரசரின் வெள்ளி விழாக் கொண்டாட்டத்தின் நினைவாக சென்னையில் ஒரு குசராத்தி நூலகமும், படிப்பகமும் நிறுவுவதற்கான முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன.

**குலிமி - Gulimi (pickaxe)**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கொந்தாளம் என்று பொருள்படும்.

**குல்லு - Gullu *(Solanum ferox)***

குர்ணிகளின் ஒரு கோத்திரம்.

**குல்தி - Gulti**

போயர்களின் ஒரு பிரிவு. இவர்கள் சென்னையில் சூளைப் பகுதியில் வசிக்கக் காணலாம்.

**கும்மடி - Gummadi *(Cucurbita maxima)***

தசாகலரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர். இவர்கள் இந்தக் காயினைப் பயிரிடவோ, உண்ணவோ மாட்டார்கள். இது கும்மட்டிக்காய்.

**கூன - Gūna**

கூன அல்லது கூனி என்ற இது வெலமர்களின் ஓர் உட்பிரிவு. இப்பெயர் சாயம் போடுபவர்கள் பயன்படுத்தும் பெரிய பானை (கூன) யிலிருந்து வந்தது.

**கூன தசாகலர் - Gūna Tsakala (hunchbacked warherman)**

வெலமர்களை இழிவுபடுத்தப் பலிசர்கள் வழங்கும் பெயர் எனக் கூறப்படுகிறது.

---

* குசராத்தி, மராட்டி மற்றும் ஆங்கில மொழிகளின் விளக்கங்கள் - 1808. (Illustrations of the Guzarattee, Maharattee and English language, 1808.)

**குண்டலர் - Gundala (stones)**

கோல்லர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**குண்டம் - Gundam (pit)**

செஞ்சுக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். குழி எனப் பொருள்படும்.

**குண்டு - Gundu (cannon-ball)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். பீரங்கிக் குண்டினைக் குறிக்கும்.

**குணி - Guni**

ஒரிய நாட்டிய மகளிருக்கும், பரத்தையருக்கும் உரிய பெயர். தகுதியைக் குறிப்பதான 'குண' என்ற வடமொழிச் சொல்லிலிருந்து வந்ததான இப்பெயர் இவர்கள் சிறு பருவத்திலிருந்தே ஆடல் பாடல்களில் பயிற்சி பெற்றுத் தகுதியுடையவர்களான பரத்தையராக உள்ளனர் என்பதைக் குறிப்பது.

**குண்ட - Gunta (well)**

அனந்தப்பூர் மாவட்டத்தில் காணப்படும் போயர்களின் உட்பிரிவினருக்கான பெயர். இவர்கள் கிணறு தோண்டும் பணியினை மேற்கொள்பவர்கள்.

**குண்டக - Guntaka (harrow)**

பரம்புக் கட்டை எனப் பொருள்படும் இது காபுகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர்.

**குண்டல - Guntala (pond)**

போயர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம். இது குளம் எனப் பொருள்படும்.

**குப்தா - Gupta**

வைசியர்களுக்குரிய பட்டப்பெயர். மலபாரைச் சேர்ந்த

மூட்டான்களில் சிலரும் தமிழ்நாட்டுப் பள்ளிகளில் சிலரும் இப் பட்டத்தைச் சூடிக் கொள்கின்றனர்.

**குறி - Guri**

விசாகப்பட்டினம் கையேட்டில் பைக் (போரிடும் பிரிவினர்) சாதிப் பெயராகப் பதியப்பட்டுள்ளது. குறிகலன் (குறி இடுபவன்) என்பது 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் பத்ரர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**குர்ரம் - Gurram (horse)**

செஞ்சு, கோல்லர், மாலர், பத்ம சாலே, தொகடர் சாதிகளுக்குரிய புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். குர்ரம் தொகடர் குதிரை ஏறிச் சவாரி செய்வதில்லை. குதிரெ என்பதும் குர்ணிகள், வக்கிலிகர் சாதியின் கோத்திரமாக அல்லது புறமணக்கட்டுப்பாடு உடைய குலமாகப் பதியப் பட்டும் உள்ளது.

**குருக்கள் – Gurukkal**

திருவாங்கூரைச் சேர்ந்த குருக்கள்கள் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு என். சுப்ரமணி அய்யருக்குக் கடப்பாடுடையேன். இளயாடர் சமயச் சடங்குகள் செய்விக்கும் வழக்கம் உடைய சாதிகளைத் தவிர மற்ற சாதியாருக்குச் சமயச் சடங்குகளை நடத்தி வைப்பவர்கள் குருக்கள் பிரிவினரே. இவர்கள் தமிழ்ப் பகுதியிலிருந்து வந்தவர்களாதல் வேண்டும். ஆண்கள் நயினார் எனவும், பெண்கள் நாச்சியார் எனவும் பொதுவாக அழைக்கப்படுகின்றனர். இவையே தமிழ்நாட்டுக் குருக்கள்களுக்குரிய பட்டப்பெயர்களுமாம். கேரளோற்பத்தியில் இச்சாதி ஆண்கள் சிலம்பண்டிகள் எனவும், திருவனந்தபுரத்திலுள்ள பத்மனாப சுவாமி கோயிலில் அடியாராகப் பரம்பரையாகப் பணிபுரிந்து வருபவர்கள் எனவும் கூறப் பட்டுள்ளது. ஒரு காலத்தில் இவர்கள் மடங்களின் தலைவர்கள் என்ற பொருளில் மட முதலிகள் எனவும் அழைக்கப்பட்டனர். மகாராசாவின் அரண்மனையில் பிராமணப் புரோகிதருக்குச்

சமயச் சடங்குகளில் உதவியாளர்களாக இருந்த இவர்கள் தேவ ராட பண்டாரம் அல்லது பண்டாரம் எனவும் வழங்கப்பட்டு வந்தனர். மனு வகுத்த நாற்சாதிகளுள் குருக்கள்கள் முதலில் வைசியர் பிரிவைச் சேர்ந்தவர்களாக இருந்து, பின் பாண்டிய நாட்டிலிருந்து குடி பெயர்ந்து திருவனந்தபுரத்திலுள்ள குப்பக் கரக் குடும்பத்தைச் சேர்ந்த போத்திகளைச் சார்ந்து வாழ்ந்து வரலாயினர். இடைக்காலத்தில் இப் போத்திகள் சமயம், மற்றும் சமயத் தொடர்பற்ற மற்ற துறைகளிலும் மிகுந்த செல்வாக்கு உடையவர்களாக இருந்தவர்களாவர். இந்தப் போத்திகளே இவர்களுக்குக் கொல்லத்துக்குத் தெற்கே வாழும் அம்பலவாசிகள் குடும்பங்களில் புரோகிதப் பணிகள் அனைத்தையும் மேற்கொள்ளும் உரிமையை வழங்கியவர்கள். கேரளோற்பத்தியிலிருந்தும், பிற ஆவணங்களிலிருந்தும் மலபார் ஆண்டிற்குரிய எட்டாம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த உமையம்மா ராணியின் காலம் வரை இவர்கள் ஸ்ரீ பத்மனாபசுவாமி கோயிலில் கழக்கம் எனப்படும் உள் நுழை வாயிலைக் கூட்டித் துப்புரவாக்கும் பணியையும், பிற பணிகளையும் ஏற்றிருந்தார்கள் எனத் தெரிகின்றது. அவளுடைய ஆட்சிக் காலத்தில் ஒரு குருக்கள் குப்பரக்கர போத்தியோடு சதியில் ஈடுபட்டவராகத் தரநல்லூர் நம்பூத்ரிபாடுக்குக் கொடுக்கும்படி அவரிடம் கொடுத்த அழைப்பிதழை உரிய காலத்தில் சேர்ப்பிக்காது காலங் கடந்து சேர்ப்பித்ததால் அவர் கோயிலிலிருந்து பணி நீக்கம் செய்யப்பட்டார். அதன் பின் குருக்கள் பிரிவினைச் சேர்ந்தவர்களுக்கு அங்குக் கழக்கம் பணி உரிமை தரப்படவில்லை. குருக்கள்களைக் கோயில் அர்ச்சகராக ஏற்றுக் கொண்டுள்ள சில கோயில்கள் உள்ளன. தென் திருவாங்கூரைச் சேர்ந்த பெரும்பாலான கோயில்களில் இவர்கள் கழக்கம் பணிக்கு அமர்த்தப்படுகின்றனர். கொல்லத்துக்கு வடபால் உள்ள கோயில்களில் அவ்வுரிமையினை இவர்களுக்குப் பதிலாக வாரியர்களும். புஷ்பகன்களுமே அனுபவித்து வருகின்றனர். சில குருக்கள் முன் காலத்தில் களரிகள் நடத்தி இளைஞர்களுக்குப் போர்ப் பயிற்சி தந்து வந்துள்ளனர். இன்று மிகச் சிலர் பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ளனர்.

குருக்கள் பிரிவைச் சேர்ந்தவர்கள் மற்ற அம்பலவாசிப் பிரிவினரைப் போல நல்ல நிறம் வாய்க்கப் பெற்றவர்களாக

இல்லை. இவர்கள் வீடுகள் பவனங்கள் அல்லது விடுகள் என வழங்கப்பெறும். மரக்கறி உணவை மட்டுமே உண்ணும் இவர் கள் மது வகைகளைக் குடிக்க அனுமதிக்கப்படுவதில்லை. இவர் கள் வீட்டுப் பெண்கள் (குருக்கட்டியர்) நம்பூத்ரி பிராமணர் பெண்களைப் பார்த்து அவர்களைப் போல ஆடை அணிகள் புனையப் பார்ப்பர். சிறு தாலியினை ஒத்ததான அரசிலைத் தாலியைக் கழுத்தில் அணிவர். காதுகளில் சித்து அணிவர். மூக் கில் ஞட்டுவுக்குப் பதிலாக மூக்குத்தி அணிவர். மின்னு எனப் படும் மணத்தைக் குறிக்கும் அணியினைத் தாலிகட்டுக்குப் பின் தாலி கட்டியவன் இறக்கும்வரை அணிவர். பெண்கள் நெற்றி யிலும் முன்கைகளிலும் பச்சை குத்திக் கொள்வர். இப்பொழுது இந்தப் பழக்கம் அருகி வருகின்றது. பெண்கள் அணியும் சமயச் சின்னம் நம்பூத்ரிகளினுடையதைப் போன்றதே. குருக்கள்கள் ஸ்மார்த்தர்கள். ஆவணி மாதத்தில் வரும் திருவோண நட்சத் திரமே இவர்களின் மிக முக்கியமான திருவிழாவாக அமை கின்றது.

குருக்கள்கள் பிரிவினைச் சேர்ந்த வாத்தியார்கள் எனப் படுபவர்களே இவர்களுடைய சமயத் தலைவர்கள். அவர்களை அப் பொறுப்பில் முதன்முதலாக குப்பக்கர போத்தி அமர்த்திய தாக நம்பப்படுகின்றது. இன்றும் குப்பக்கர போத்தியின் அறிவுரையை நாடி இவர்கள் செல்கின்றனர்.

தாலிகட்டுக் கல்யாணம், சம்பந்தம் ஆகிய இரண்டு வகை மணமுறைகளையும் இவர்கள் மேற்கொள்கின்றனர். இப்பிரி வைச் சேர்ந்த ஆண்கள் தங்கள் சாதிக்குள்ளாகவே தொடர்பை ஏற்படுத்திக் கொள்வர். மாரான்கள், வாட்டிப் பிரிவு நாயர்கள் சாதிகளுள் ஒருத்தியோடு தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதும் உண்டு. பெண்கள் பிராமணர்களிடமிருந்தோ அல்லது தங்கள் சாதியைச் சோந்த ஆண்களிடமிருந்தோ சேலையைப் பெறுவர். தாய்மாமன் மகளோ அத்தை மகளோ ஒருவனுக்குத் தக்க மனைவியாகக் கருதப்படுகின்றாள். தாலி கட்டுச் சடங்கு ஒரு பெண் ஏழு, ஒன்பது, அல்லது பதினொரு வயதாக இருக்கும் போது நடத்தப்படுகின்றது. அதற்கான நாளினை அவள் தந்தையும் தாய் மாமனும் ஒரு சோதிடரைக் கலந்து முடிவு

செய்வர். இணங்கர்கள் அல்லது உறவினர்களுள் மணம் புரிவதற்குரிய பெண்களைப் போலவே ஆண்களும் எண்ணிக்கையில் மிகுந்தவர்களாக இருப்பதால் சாதகப் பொருத்தத்தினை வைத்தே மணமக்களை முடிவு செய்கின்றனர். மணப்பந்தலுக்கான முகூர்த்தக் காலினை நடும் சடங்கு மற்ற இந்துச் சாதியார்களிடையே கருதப்படுவதைப்போல முக்கியமான சடங்காகக் கருதப்படுகின்றது. மணச் சடங்கு பொதுவாகப் பல நாள்கள் நடப்பதற்குரியதெனினும் அந்த நாள்களைத் தக்கபடி குறைத்தும் கொள்ளலாம். மண நாளன்று மணமகன் ஒரு வாளினையும், பனை ஓலையினையும் அணிந்தவனாக மணமகள் இல்லம் நோக்கிச் செல்வான், தாலிகட்டிய பின் மணமக்கள் தீட்டுப்பட்டவர்களாகக் கருதப்படுவதால் அவர்கள் தீட்டினைப் போக்க வாத்தியார் மந்திரங்களைச் சொல்லியபடி அவர்கள் தலைமீது தண்ணீர் ஊற்றிக் குளிக்கச் செய்வார். ஒருத்தி பூப்படைந்த பின்னரே பெரும்பாலும் சம்பந்தம் சடங்கு நடைபெறும். அவள் வருங்காலக் கணவனுடைய உறவினர்கள் அவள் வீட்டுக்கு வந்து, அந்தச் சம்பந்தம் அவர்களுக்குத் திருப்தி உடையதாக இருப்பின், அதனை அவளுடைய பெற்றோருக்குத் தாங்கள் சாதகம் கேட்டுவரும் நாளினைத் தெரிவிப்பதன் மூலம் தெரிவிப்பர். உரிய நாளில் சாதகத்தைப் பெற்றபின் சோதிடரைக் கலந்து பேசி அவர் பொருத்தம் இருப்பதாகக் கூறினால் சம்பந்தத்திற்கான நாள் முடிவு செய்யப்படும். அவளை, அவளுடைய அன்னை வழி அத்தை, கூடியிருப்பவர்களிடையே அழைத்துச் சென்று அமர்த்துவாள். அவளுக்கான சேலை வழங்கப்படும். அவளுடைய தாய்மாமனுக்கும் ஆடைகள் வழங்கப்படும். மணமுறிவு, வாத்தியாரின் அனுமதியோடு சாதாரணமாக நடைபெறுகின்றது. மருமக்கள் தாய உரிமை முறையே இவர்களால் பின்பற்றப்படுகின்றது. திருவாங்கூருக்குக் குடிபெயர்ந்த சமயத்தில் இவர்கள் தங்கள் குடுமியைப் பின்னால் முடிந்து கொண்டிருந்ததோடு மக்கள் தாய உரிமை முறையினையே மேற்கொண்டவர்களாக இருந்தனர். 1752 அல்லது 1777-ஆம் மலபார் ஆண்டின்போது குப்பக்கர போத்தி இவ்விரு வழக்கத்திலும் மாற்றத்தினைக் கொண்டு வந்தார் எனக் கூறப்படுகின்றது.

பிராமணர்கள் மேற்கொள்ளும் எல்லாச் சமயச் சடங்குகளையும் இவர்கள் மேற்கொள்கின்றனர். பெயர் சூட்டும், சோறு ஊட்டும் சடங்குகளின்போது எத்தகைய மந்திரங்களையும் இவர்கள் சொல்வதில்லை, மயிர் நீக்கும் சவுளம், பூணூல் அணிவிக்கும் உபநயனம் ஆகிய சடங்குகள் ஒன்பது, பன்னிரண்டாம் வயதுகளில் நிகழ்த்தப்படும்.அச்சடங்குகளுக்கு முந்தின நாள் குடும்பப் புரோகிதர் தூய்மைப்படுத்தும் சடங்கினை நிகழ்த்திச் சிறுவனின் வலது மணிக்கட்டில் கங்கணம் அணிவிப்பார். தலை மழித்தல், இரண்டாம் நாள் நடைபெறும். மூன்றாம் நாள் சிறுவன் பூணூல் அணிவிக்கப்பட்டபின் காயத்ரி ஒப்புவிப்பான். நான்காம் நாள் நடைபெறும் பிரம்மச்சரியச் சடங்கு, சமாவர்த்தனச் சடங்கினை ஒத்த ஒரு சடங்கோடு பிரமச்சரியம் தொடர்பான சடங்குகள் முடிவிற்கு வரும். ஒரு சிறுமி பூப்படைந்தால் அவளுடைய நெருங்கிய பெண் உறவினர்கள் ஊரிலுள்ள மற்ற பெண்களையெல்லாம் வீட்டுக்கு அழைப்பர். அவர்கள் இனிப்புப் பலகாரங்களைத் தங்களுடன் கொண்டு வருவர். ஒதுங்கித் தனித்து இருக்கும் அச் சிறுமி ஐந்தாம் நாள் குளித்தபின் பொது இடங்களுக்குத் திரும்ப அழைத்துக் கொள்ளப்படுவாள். முதன் முதலாக ஒருத்தி கருவுறும்போது புளிகுடி சடங்கை மட்டுமே நாயர்களைப் போல இவர்களும் நிகழ்த்துகின்றனர். இறந்துபோனவரை எரித்தபின் எலும்புகளைச் சேகரிக்கும் சஞ்சயன எனப்படும் சடங்கு சாவுக்குப் பின் மூன்று, ஐந்து, அல்லது ஏழாம் நாள் நிகழ்த்தப்படும். சாவுத் தீட்டுப் பதினொரு நாள்களுக்குரியதாகக் கைக்கொள்ளப்படுகிறது. தெக்கட்டு மாடங்கள் இறந்து போனவரின் நினைவாக அமைக்கப்படுகின்றன. இவை சிறிய காரைக் கட்டிடங்கள். புதைகுழியின் மீது அமைக்கப்படும் இவற்றில், இறந்து போனவரின் ஆண்டுச் சடங்கின்போதும் சிறப்பான திருவிழாக்களின்போதும் விளக்கேற்றி வைத்து வழிபடுவர்.

## குடோப் – Gutob

கடபர்களின் ஓர் உட்பிரிவு.

## குட்ட கோயி - Gutta Kōyi

மறைத்திரு ஜெ. கெயின் அவர்களால் மலைக் கோயில்களுக்குரிய ஒரு பெயராகப் பதியப்பட்டுள்ளது.

## கொவ்வல்ல - Guvvala (doves)

போயர், முத்ராசர் ஆகிய சாதிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலம்.

## ஹட்டி - Haddi

தெலுங்கு மாதிகர், மாலர், தமிழ்ப் பறையர் ஆகியோரை ஒத்த ஒரிய மொழி பேசும் தாழ்ந்த சாதியார் ஹட்டிகள். ஹட்டி என்ற பெயர் கழிப்பிடம் என்பதிலிருந்தோ இவர்கள் எல்லா வகை எலும்புகளையும் பொறுக்கி விற்பதில் ஈடுபட்டிருப்பதால் எலும்பு எனப் பொருள்படும் ஹட என்ற சொல்லிலிருந்தோ வந்ததாக வேண்டும் எனக் கருதப்படுகிறது. கொண்டரர், தியொரோர், துலாபினர், சானி ஆகிய சாதியினரைத் தவிர மற்ற எல்லா ஒரியச் சாதியாருக்கும் இவர்கள் தப்பட்டை அடிக்கச் செல்வர். இவர்கள் கொண்டரரை மிகத் தாழ்ந்த சாதியினராகக் கருதுவதோடு கடைத் தெருவில் விற்கும் சோற்றினை அச்சாதியினர் தொட்டிருந்தால் அச்சோற்றினை வாங்க மாட்டார்கள். கொண்டரர், ஜக்கிலியர், ஆகிய இரு சாதியாரும் ஹட்டியரைவிடத் தாழ்ந்த சாதியினர். இவர்களுள் ஜக்கிலியர் கஞ்சம் மாவட்டத்தின் தென் பகுதியில் குடியேறி ஒரிய மொழி பேசக் கற்றுக் கொண்ட தெலுங்கு மாதிகராவர்.

ஹட்டியரை, ஹட்டிப் பிரிவிற்கே உரியவர், ரெல்லியர், சச்சாடியர் என்ற அகமணக்கட்டுப்பாடு உடைய மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஹட்டி பிரிவிற்கே உரியவர்கள் துப்புரவு செய்தல், கழிப்பிடப் பொருள்களை அப்புறப்படுத்துதல் ஆகிய பணிகளைச் செய்வதில்லை. சிலவிடங்களில் ரெல்லியரே இதனைச் செய்கின்றனர். கழிப்பிடப் பொருள்களை அகற்றும் ரெல்லிகள் பகட்டா அல்லது கருவ ஹட்டியர் என அழைக்கப்

படுவதே பெரு வழக்கு. ஹட்டி பிரிவிற்கே உரியவர்கள் சுத ஹட்டி கோடொமாலிய ஹட்டி முதலிய பெயர்களால் பல பகுதிகளிலும் பலவாறாக அழைக்கப்படுகின்றனர். ஹட்டியர் கூலிகளாகவும், வயல்வேலை செய்பவர்களாகவும் இருப்பதோடு மா, புளி, இலந்தை முதலிய பழங்களை விற்பனை செய்வதில் தனி ஆர்வம் உடையவர்களாகவும் உள்ளனர். சிலவிடங்களில் கருவாடு விற்பனை ரெல்லியர்களால் மட்டுமே மேற்கொள் ளப்படுகின்றது. சிலபோது ஹட்டிகள் – அதிலும் சிறப்பாகக் கருவ ஹட்டிகள் – பெண்களுக்குரிய தலை அலங்காரப் பொரு ளான சௌரி, கவரிமான் மயிர் ஆகியவற்றை விற்பர். ஹட்டி களிடையே வம்சம் எனப்படும் பல குலப் பிரிவுகள் உள்ளன. அவற்றுள் ஒன்று யானை எனப் பொருள்படும் பிரிவாகும். ஒரு யானையின் காலடிச் சுவட்டினைப் பார்க்க நேர்ந்தால் அந்த இடத்திலிருந்து மண் துளியினை எடுத்து நெற்றியில் அணிந்து கொள்வது இவர்களிடம் காணப்படும் குறிப்பிடத்தக்க பழக் கமாகும். சிரார்த்தச்சடங்கின் போதும், மற்ற சடங்குகளின் போதும் ஒரு யானையின் உருவத்தை வரைந்து வழிபடுவர்.

ஹட்டியர் சமூகத்தில் பேகரா, நாயகொ என்ற இரு சாதித் தலைவர்கள் உள்ளனர். சிக்கலான வழக்குகள் வரும்போது பல ஊர்களைச் சேர்ந்த சாதித் தலைவர்கள் ஒன்றாகக் கூடி அவற்றைத் தீர்த்து வைப்பர். சிலபோது சாதியைச் சேர்ந்த ஒருவன் ஏதேனும் குற்றம் புரிந்ததாகத் தெரிய வந்தால், ஊர்த் தலைவர்கள் அந்தக் குற்றவாளியின் ஊரைச் சேர்ந்த சிலரை ஊர் அவைக்கு வரும்படி அழைத்து, அவர்களிடம் பணத்தைக் கடனாகப் பெற்றுக் குடிப்பதற்காக அத்தொகையைச் செல வழிப்பர் எனக் கூறப்படுகிறது. அவைக் கூட்டம் முடிந்தபின் அத் தொகை குற்றம் இழைத்தவனிடமிருந்து வசூலிக்கப்படும். அவன் உடனே தன் குற்றத்தை ஒப்புக் கொள்ள மறுப் பானாகில் சச்சரவு மூளும். அதன் பின் மேலும் அதிகத் தொகை கடன் பெறப்படும். இதனால் குற்றம் இழைத்தவன் கடன் சுமை பெருகும். பேகரா, நாயகோ ஆகிய தலைவர் களோடு சில இடங்களில் அதிகாரி அல்லது சௌத்ரி பொடொ பொரிச்ச, பொல்லொபைய என்ற அலுவலரும் இருப்பார். இச்

சாதிக்குரிய பட்டப்பெயர் நாயகோ. உயர்சாதியினைச் சேர்ந்தவர்கள் ஹட்டி சாதிப் பெண்களோடு தகாத புற ஒழுக்க உறவில் ஈடுபடுவார்களாயின் அவர்கள் ஹட்டி சாதியில் சேர்த்துக் கொள்ளப்படுவர்.

பெண்கள் பூப்படைந்த பின்னரே மணம் செய்விக்கப் படுகின்றனர். ஓரியர்களிடையே காணப்படும் வழக்கத்திற்கு மாறுபட்டதாக இவர்களிடையே மேநரிகம் எனும் தாய் மாமன் மகளை மணந்து கொள்ளும் பழக்கம் உள்ளது. தன் மகனுக்குத் திருமணம் செய்ய நினைக்கும் ஒரு தந்தை, தன் உறவினர் களுடன் தான் பெண் கொள்ள விரும்பும் பெண்ணின் இல்லம் செல்வான், அப் பெண்ணின் பெற்றோர் அந்த மணஉறவிற்கு உடன்படுவார்களாயின் அந்த வீட்டின் முன் கொஞ்சம் இடத் தைச் சுத்தம் செய்து அதில் பசுஞ்சாண நீர் தெளிப்பர். அந்த இடத்தில் பெண் கேட்க வந்தவர்கள் ஒரு பானை கள்ளினை வைப்பர். அதன் மீது பெண்கள் 'உலு உலு' எனக் குலவை இட்டபடி இலந்தை (*Zizyphus Jujuba*) இலைகளையும் அரிசி யினையும் தூவுவர். ஊர்த் தலைவர்களும் சாதியைச் சேர்ந்த பெரிய மனிதர்கள்சிலரும்,அங்குக் கூடிமணத்தினை உறுதி செய்த பின் கள்ளினைக் குடித்துக் களிப்பர். ஒரு நல்ல நாளில் மணமகன் வீட்டார் மணமகள் இல்லம் சென்று, ஒரு புதிய துணியினைத் தரையில் விரித்து மணமகளுக்கான பரிசப் பணம் (வழக்கமாக இது ரூபாய் இருபதாகத் தரப்படும்) ஏழு வெற்றிலை, கடுக்காய் (*Terminalia fruits*) பாக்கு, பணியாரம் ஆகியனவற்றை அதன் மீது வைப்பர். கடுக்காயில் இரண்டு மூன்றினை எடுத்துத் துண்டித்து அங்கு கூடியுள்ள பெரியவர்களிடையே வழங்குவர். மணநாளினை உறுதி செய்தபின் அனைவரும கள்ளுக்கடை நோக்கிச் செல்வர். சிலவிடங்களில் மணச்சடங்குகள் மிக எளிமையானவையாக அமையும். மணமகளை மணமகன் இல்லம் அழைத்துச் சென்று அங்கு விருந்து வைப்பதோடு சரி. விரிவான சடங்கு நடத்துபவர்கள மணமக்களை ஒரு மேடை யில் அமர்த்துவர். புரோகிதராக இருக்கும் பேகரனோ நாயகோவோ ஓமத்தீ மூட்டி அதில் இலந்தை (*Zizyphus jujuba*) நாவல் (*Eugenia Jambolana*) குச்சிகளை இடுவர். மொக்கூடு

எனப்படும் நெற்றிப்பட்டயமும், கைகளில் கங்கணமும் மணமக்களுக்கு அணிவிக்கப்படும். அவர்கள் கரங்களைச் சடங்கினை நடத்துபவன் மஞ்சள் தோய்த்த நூலால் இணைத்துக் கட்டுவான். பின் அதனை மணமாகாத சிறுமி ஒருத்தி பிரித்து அவிழ்ப்பாள். மணமகளின் உடன்பிறந்தவன் பெண்வேடந்தாங்கியவனாக வந்து மணமகனை அடிப்பான். 'சொலபித்த' எனப்படும் இச்சடங்கினை ஒரியச் சாதியார் பலரும் மேற்கொள்கின்றனர். மணமக்களின் ஆடைகளின் முனையினைச் சேர்த்து முடிச்சிட்ட பின் அவர்கள் வீட்டினுள் அழைத்துச் செல்லப்படுவர். மணமகனின் மாமியார் அவர்கள் மீது இலந்தை இலைகளையும், அரிசியையும் தூவுவாள்.

ஒரு சிறுமி பூப்படையும்போது மற்ற ஒரிய சாதியாரைப் போலவே ஹட்டியரும் ஏழுநாள் தீட்டு மேற்கொள்கின்றனர். முதல் நாள் பூப்படைந்தவளை அமரச் செய்து எண்ணெயும் மஞ்சளும் பூசிய பின் ஏழு பெண்கள் அவள் மீது இலந்தை இலைகளையும், அரிசியினையும் தூவுவர். அவளை வீட்டின் ஒரு மூலையிலோ தனித்த ஒரு குடிசையிலோ தங்கச் செய்வர். அவளருகே ஓர் இரும்பையும் அம்மிக் கல்லையும் துணியில் சுற்றிக் கட்டி வைப்பர். எட்டிக் (*Strychnos Nux-vomica*) கொத்துக்கள் கிடைக்குமேல் அவையும் குடிசையின் ஓரமாக வைக்கப்படும். அவள் இருக்கும் அறையில் அல்லது குடிசையில் ஈர்க்குக் குச்சிகளாலும் பனை ஓலைகளாலும் செய்யப்பட்ட ஒரு சிறு சட்டக வடிவ உருவமோ அல்லது ஒரு வில்லோ வைக்கப்பட்டு அது நாள்தோறும் வழிபடப்படும். அவளுக்கு மணம் உறுதி செய்யப்பட்டிருப்பின் அவள் வருங்கால மாமனார் ஏழாம் நாளன்று அவளுக்கு ஒரு புதுச் சேலை வழங்கக் கடமைப்பட்டவராவார்.

கறுமுகி, சத்தபவுணி, பைதரொ போன்ற பல தாகுராணிகளை (ஊர்த் தெய்வங்கள்) ஹட்டிகள் வழிபடுகின்றனர். இறந்தவர்களைப் புதைப்பதைவிட எரிப்பதே பெருவழக்காக உள்ளது. இறந்தவருக்குச் சாவுக்கு அடுத்த நாளும், பத்தாம் நாளும், பதினொன்றாம் நாளும் சோறு படைப்பர். ஹட்டியர் சிலர் பத்தாம் நாள் பிணத்தை எரித்த அல்லது புதைத்த

இடத்திற்குச் சென்று அங்கே தரையில் ஓர் உருவம் அமைத்துச் சோறு படைப்பர். அன்று இரவில் வீட்டை விட்டுக் கொஞ்ச தூரம் சென்று ஒரு துணியினைத் தரையில் பரப்பி அதில் சோறு பழங்கள் ஆகியவற்றைப் படைப்பர். அவ்வாறு படைத்தபின் இறந்து போனவரைப் பெயர் சொல்லி அழைத்தபின் ஒரு பூச்சி வந்து அத்துணியில் அமரும்வரை ஆவலோடு காத்திருந்து, அவ்வாறு அது அமர்ந்ததும், அத்துணியைச் சுருட்டி எடுத்துக் கொண்டு வீட்டிற்கு வந்து வீட்டில் குடும்பத்தார் வழிபடும் தெய்வங்கள் வைக்கப்பட்டுள்ள இடத்தில் அத்துணியை உதறுவார். அப்பூச்சி தரையில் ஊர்ந்து செல்லும். மணல் பரப்பப்பட்ட இடத்தில் அதன்பின் ஒரு விளக்கேற்றி வைத்து அதனை ஒரு புதுப் பானையால் மூடுவர். சிறிது நேரம் சென்ற பின் பானையை அப்பால் எடுத்து மணலில் ஏதேனும் சுவடு களின் அடையாளம் உள்ளனவா எனப் பார்ப்பர். இச் சடங்கு மற்ற சாதியாரின் ஜொல ஜொல ஹண்டிச் (துளையிட்ட பானை) சடங்கினை ஒத்தது, (பார்க்க: பொந்தாரி)

"ரெல்லிகள் கஞ்சம், விசாகப்பட்டினம் மாவட்டங்களிலேயே மிகுதியும் காணப்படும் தோட்ட வேலைக்காரர்களும் கூலிகளு மாவர். ரெல்லி என்ற தெலுங்குச் சொல் புல் எனப் பொருள் படும். இதற்கும் இந்தச் சாதியின் பெயருக்கும் ஏதேனும் தொடர்பு உண்டா என்பதனை நான் அறியேன். மலையடி வாரங்களில் வாழும் இவர்கள் மலைகளில் பயிராகும் காய்கறி களை விற்றுப் பொதுவாக வாழ்க்கை நடத்துகின்றனர்" எனத் திரு எச். எ. ஸ்டுவர்ட் எழுதுகிறார்.*

விசாகப்பட்டினத்தைச் சார்ந்த ரெல்லியர் பற்றிய பின் வரும் குறிப்புகளுக்கு நான் திரு சி. ஹயவதன ராவிற்குக் கடப் பாடுடையேன். ரெல்லியர் சச்சாரிகள் என அழைக்கப்படுவ தோடு அவர்கள் தங்களைச் சபிரி எனவும் அழைத்துக் கொள் கின்றனர். இச்சாதி மேநரிக மணமுறையான தாய்வழி மாமன் மகளை மணக்கும் வழக்கினை ஏற்றுக் கொள்கின்றது.

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, *1891*, (Madras Census Report, 1891.)

சிறுமியர் பூப்படைந்த பின்னரே மணம் செய்விக்கப் படுகின்றனர். மணப் பெண்ணிற்கான பரிசப் பணம் மண நாளுக்கு முன்பே செலுத்தப்பட்டு விடுதல் வழக்கம். மண நாளன்று மணமகள் தன் பெற்றோருடன் மணமகன் இல்லம் செல்வாள். சபிரி தெய்வம் எனப் பொதுவாக வழங்கப்படும் சாதித் தெய்வமான ஒட்ட போலம்மாவையும், கனக துர்காலம் மாவையும் பெரியவர்கள் எழுந்தருளச் செய்து ஒரு பன்றியையும், மறியினையும் பலியிடுவர். மணமகன் ஒரு கறுப்புப் பாசிமணி மாலையினை மணமகள் கழுத்தில் அணிவிப்பான். அதனை அடுத்து நடைபெறும் விருந்தில் பலியிடப்பட்ட விலங்குகளைச் சமைத்துப் பரிமாறுவர். நிறைய மதுவும் வழங்கப்படும். மறு நாள் காலையில் ஒரு கூடை அல்லது முறத்தில் ஒரு புதிய சேலை, குங்குமம், சில துண்டு மஞ்சள் ஆகியனவற்றை வைத்து இசைக் குழுவினர் இசை தொடர மணமகள் தெருக்கள் வழியே கொண்டு செல்வாள். மணமகனும் அவளுடன் செல்வான். மணச் சடங்குகள் முடிவுக்கு வரும் மூன்றாம் நாளன்றும் இத்தகைய ஊர்வலம் நடைபெறும்.

கஞ்சம் மாவட்டத்தைச் சேர்ந்த ரெல்லியர் பற்றித் திரு எஸ். பி. ரைஸ் எழுதுவதாவது*, "ஊர்த்தலைவனுடைய அனுமதியுடன் மணமகன் நேரே மணமகள் இல்லம் சென்று சேர்வான். அவன் மணமகள் கழுத்தில் ஒரு தாலியினை அணி விப்பான். சாதியைச் சேர்ந்தவர்களுக்கு ஏழரை ரூபாயும், ஒரு பன்றியும் வழங்கப்படும். மணமகன் தந்தைக்கு ஐந்து ரூபாய் வழங்கப்படும். இத்துடன் தொடக்க காலத்ததான இச்சடங்கு முடிவுறும்."

கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப் படுகின்றனர். அப்பொழுது கழுத்தில் பாசிமணி மாலை அணி விப்பதில்லை. சாதிக்கான தெய்வங்கள் மரத்தாலான கரடு முரடான பொம்மைகளாக உள்ளன. ஆண்டுக்கொருமுறை மார்ச் மாதத்தில் அவற்றிற்குப் பன்றியும், மறியும் பலியிடுவர்.

---

* தென்னிந்தியர் வாழ்க்கை பற்றி அவ்வப்போது எழுதிய கட்டுரைகள். (Occasional Essays on the Native South Indian Life.)

இறந்தவர்கள் பெரும்பாலும் புதைக்கப்படுவர். தீட்டு ஏதும் மேற்கொள்ளப்படுவதில்லை. சில ரெல்லியர் தெலுங்கர்களு டைய சின்னதினமு சடங்கினை ஒத்த சின்னரோசு சடங்கினை மேற்கொள்ளத் தொடங்கியுள்ளனர். தோட்டம் போட்டுக் காய்கறிகளும் பழங்களும் விற்பதே இச்சாதியினரின் முக்கிய மான தொழில். 1875-76-இல் ஏற்பட்ட பஞ்சத்தின் காரண மாகப் பட்டினியால் வாடிய இவர்கள் கழிப்பிடத் துப்புரவுப் பணியினை மேற்கொண்டு வாழ்க்கை நடத்தத் தொடங்கினர். இன்று தோட்டம் போட்டு வாழும் ரெல்லியன் துப்புரவு பணி செய்யும் தன் சாதிக்காரனைத் தாழ்ந்தவனாகவே மதிக் கின்றான். எனினும் வாழ்க்கை வளமுடைய ஒரு துப்புரவுப் பணி மேற்கொண்டுள்ள ரெல்லி கொஞ்சம் தொகையும் ஒரு விருந்தும் நடத்தித் தோட்டக்காரர் சாதிக்காரனாக உயர்ந்து விடலாம். துப்புரவுப் பணிசெய்பவர்களுக்கே தீட்டு உள்ளது. தோட்டம் போடுபவர்களுக்குத் தீட்டு இல்லை. 1901 கணக் கெடுப்பு அறிக்கையின்படி. விசாகப்பட்டினம் மாவட்டத்தி லிருந்து கோதவரி மாவட்டத்தில் சென்று குடியேறிய பாகையர் கள் எனப்படும் துப்புரவுத் தொழிலாளர் தங்கள் உட்பிரிவாக ரெல்லி என்பதனையே தந்துள்ளனர். ரெல்லியரின் வழக்கமான பட்டப்பெயர் காடு என்பதாகும்.

கஞ்சம் மாவட்டத்தின் தென் பகுதியில் வாழும் ஹட்டியர் தங்களை அவ்வாறு அழைத்துக் கொண்டாலும் பிற தெலுங்குச் சாதியார் அவர்களைக் காசியர் என்றே அழைக்கின்றனர். காசி என்ற பெயர் குதிரைகளுக்குப் புல்வெட்டும் தொழிலோடு தொடர்புடையது. யேலும பர்னலும்* புல்வெட்டுபவர்களுடைய தொழில் தொடர்பான இச்சாதிப் பெயர் பற்றி, "இது காச கொட அல்லது காஸ்காடா என்ற புல்வெட்டுபவன் அல்லது அறுப்பவன் எனப் பொருள்படும் இந்துஸ்தானிச் சொல்லின் சிதைந்த வடிவமாதல் வேண்டும். ஒவ்வொரு குதிரைக்குமென குதிரை தேய்ப்பவனுடன் புல்வெட்டுபவனும்அமர்த்தப்படுவான். வடநாட்டில் புல் வெட்டுபவர்கள் ஆண்களே. தென்னாட்டில்

---

* ஹாப்சன் - ஜாப்சன். (Hobson - Jobson.)

குதிரைக்காரனான குதிரை தேய்ப்பவன் மனைவியே இந்தப் புல் வெட்டும் பணியினைச் செய்கின்றான்" எனக் குறித்துள்ளனர். 'சென்னையிலிருந்து எழுதப்பட்ட கடிதங்களில்'* "ஒவ்வொரு குதிரைக்கும் அதனைப் பார்த்துக்கொள்ள ஓர் ஆணும் பெண்ணும் அமர்த்தப்பட்டுள்ளனர். குதிரைக்குரிய புல்லினை வெட்டிக் கொண்டு வருவது பெண்ணின் வேலை. நாய்களைப் பார்த்துக் கொள்ள ஒவ்வொரு நாய்க்கும் ஒரு சிறுவன் அமர்த்தப்பட்டுள்ளான். நான் பூனைகளைப் பார்த்துக்கொள்ள இது போன்ற பணியாள் உண்டா என விசாரித்தேன். அது தன்னைத் தானே பார்த்துக் கொள்ள வேண்டியதாக உள்ளது என்பதாக எனக்குத் தெரிய வருகின்றது" எனக் குறிக்கப் பட்டுள்ளது. புல்லினை அறுத்து விற்பதோடு காசிகள் கழிப் பிடத் துப்புரவுப் பணியிலும் அமர்த்தப்படுகின்றனர். ஜக்கிலியர் (மாதிகர்), பைதிகள், பாணொக்கள் ஆகிய சாதியைச் சேர்ந்த வர்களும் காசியர் சாதியில் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர்.

காசிகளின் சாதித் தலைவன் பிஸ்ஸொயி என அழைக்கப் படுகிறான். இவனுக்குப் பேகரா, கொஞ்சரி என்ற உதவி யாளர்கள் உளர். கொஞ்சரி சாதிக்குரிய பணியாளனு மாவான். குற்றம் புரிபவர்கள் முதுகில் புளியம் மிலாறினால் வெளுப்பதும் இவன் பணிகளில் ஒன்றாகும்.

காசிகளிடையே பம்சங்கள் எனப்படும் பல குலப்பிரிவுகள் உள்ளன. நாகம், குதிரை, புலி, வறுத்த அரிசி ஆகியவற்றுக்கு முறையே உரிய நாக, அஸ்வோ, சிந்தல, லியரி என்பன அவை. பெண்கள் பூப்படைந்த பின் மணம் செய்வித்தலே இவர்கள் வழக்கம். மணத்தை உறுதி செய்யும் சடங்கின்போதே மண மகளுக்குரிய பரிசப் பணம் செலுத்தப்படும். அப்போது நடை பெறும் விருந்தில் பன்றிக்கறி பரிமாறப்பட வேண்டும். மண மகளின் ஊரைச் சேர்ந்த சாதித் தலைவனான பிஸ்ஸொயி, தங்கம் அல்லது வெள்ளியாலான கொண்டி எனப்படும் தாலியை மணமகள் கழுத்தில் கட்டுவான். மணச் சடங்குகள்

* சென்னையிலிருந்தான கடிதங்கள் - ஒரு பெண்மணியிடமிருந்து - 1843. (Letters from Madras, By a Lady - 1843.)

பிற இடங்களில் வாழும் ஹட்டியர் மணச் சடங்குகளை ஒத்தன எனினும் தெலுங்கர்களின் செல்வாக்கால் அவை சில மாறுதல் களை அடைந்துள்ளன. திரு எஸ். பி. ரைஸ் குறித்துள்ள நீர் நிறைந்த மண்பானையினை மணப்பந்தலில் தொங்கவிடும் பழக்கம் பொதுவாகப் பல சாதியாருக்கும் உரியது. இது காசி யர்களுக்கு மட்டும் உரியதன்று. உயர்சாதி ஒரியர்களைப் பார்த்து இவர்கள் மேற்கொண்டுள்ள பழக்கம் ஆகும் இது. மணமகள் உடன்பிறந்தவன் மணமகனை முதுகில் அடிக்கும் பழக்கமான 'சொலபிதா' சடங்கும், மணமகன் போலியாகக் கோபித்துக்கொண்டு போகும் 'ருசாய்னொ' சடங்கும் மற்ற சாதியாரைப் பார்த்து மேற்கொண்டனவாகும். இவற்றுள் பின்னது தெலுங்குச் சாதியாரின் 'லேகி பொவடம்' சடங்கை ஒத்தது.

பூப்படையும் காசிச் சிறுமியை நான்கு அம்புகளுக்கு நடுவே யான சதுரத்தில் அமர்த்தி அதனைச் சுற்றி ஏழு சுற்று நூலி னைச் சுற்றி முதற் சடங்கினைச் செய்வர்.

ஒரியத் தோட்டி என்பது நகர சபைகளில் துப்புரவுப் பணி யாளர்களான ஹட்டியருக்கான தமிழ்ப் பெயராகும்.

**ஹசாம் – Hajām**

நாவிதர்களுக்குரிய இந்துஸ்தானிப் பெயர். பல பிரிவு களைச் சேர்ந்த நாவிதர்களும் இதனைத் தொழில் முறையி லான பெயராகப் பயன்படுத்துகின்றனர். தென் கன்னடததில் கொங்கணி கெலசியரான மராத்தியர் வழிவந்த ஹசாம்களாகப் பதிந்துள்ள இரண்டாயிரம் பேர்களுள் பதினைந்து பேர்களே மகமதியர்கள்.

**ஹலப - Halaba**

பார்க்க: பெண்டிய (See: Pentiya)

**ஹலவக்கி - Halavakki**

பூடுபுடுக்கலருக்கு உரிய கன்னடப் பெயர்.

**ஹலேபைக் - Halepaik**

தென் கன்னட மாவட்டத்தின் வடபகுதி வட்டங்களில் காணப்படும் கன்னடம் பேசும் கள் இறக்குபவர்களே ஹலே பைக்கர். இந்தப் பெயர் பழைய எனப் பொருள்படும். ஹலே என்பதும், வீரன் எனப் பொருள்படும் பைக்க என்பதும் இணைந்து முன்புப் படைவீரர்களாக இருந்தவர்களைக் குறிக்கும் வகையில் அமைந்துள்ளது என்பர். இவர்களுடைய முன்னோர் களில் ஒருவன் விசய நகரப் படையில் தளபதியாய் இருந்தா னெனவும், அவன் பின்னர் ஒரு மாநிலத்தின் ஆட்சியாளனாக உயர்ந்தானெனவும், பின்னர் ஹலேபைகசு என்ற ஊர் அவனுக் குச் சாகிராகத் (பரம்பரைபரம்பரையாக அனுபவிக்க உரிமை தருவது) தரப்பட்டதாகவும் ஒரு வழக்கியல் வரலாறு கூறப் படுகிறது. சில ஹலேபைக்கர் தங்களைத் தெங்கின (தென்னை) பிரிவினர் எனக்கூறிக்கொள்கின்றனர். தென்னை மரத்திலிருந்து கள் இறக்கும் தொழிலினை மேற்கொண்டிருப்பதே இவர்கள் இவ்வாறு கூறிக் கொள்ளக் காரணமாகும்.

கன்னடம் பேசும் ஹலேபைக்கரும், துளு பேசும் பில்லவர் களான கள் இறக்குவோருக்கும் இடையே மணஉறவுகள் நிகழ் கின்றன. மேலும் சில இடங்களில் பில்லவர் தங்களை ஹலே பைக்கர்எனவும் கூறிக்கொள்கின்றனர். ஹலேபைக்கரிடையே மகளிர் தாய உரிமை வழிப்பட்ட புறமணக்கட்டுப்பாடு உடைய பலிகள் எனப்படும் குலப் பிரிவுகள் உள்ளன. அவற்றுக்கு மாதிரியாகக் கீழ்வருவனவற்றைக் கொள்ளலாம்.

செண்டி (கடமா) *Cerbera Odollum*
ஹொன்னே (புன்னை) *Calophyllum inophyllum*
தொலர் (நரி) Wolf
தேவன் (தெய்வம்) God
கங்கா (கங்கை) Ganga

பம்பாய் மாநிலததில்உள்ள கன்னட மாவட்டத்தைச்சேர்ந்த ஹலெபைக்கர் பற்றிப் பதியப்பட்டுள்ளதாவது:-* "பலி (இதன்

---

* பம்பாய் மாநில இன இயல் கணக்கீடு பற்றிய தனி நூல், 12, 1904.
(Monograph, Eth. Survey of Bombay, 12, 1904.)

பொருள் கொ்டி) எனப்படும் புறமணக்கட்டுப்பாடுடைய ஒவ்வொரு குலமும் ஏதாவது ஒரு விலங்கு அல்லது மரத்தின் பெயரை உடையதாக இருக்கும். ஒவ்வொரு பலியினைச் சேர்ந்தவர்களும் தங்களுடைய பலிக்குரிய விலங்கு அல்லது மரத்தைப் புனிதமானதாகக் கருதுவர். இந்த விலங்கோ, மரமோ பூ முதலியனவோ அந்தப் பலிக்குரிய முன்னோர்களோடு இணைந்து பொதுப்பட இருந்ததாதல் வேண்டும். எனவே அவர்கள் இன்றுவரை அதனை வழிபட்டு வருவதோடு அதனைப் புனிதமானதாகக் கருதி அதற்குத் தீங்கு ஏதும் செய்யமாட்டார்கள். எடுத்துக்காட்டாக நாக் பலியினைச் சேர்ந்தவர்கள் தங்கள் பலி நாக்சண்பக மலரின் பெயரைக் கொண்டதாக இருப்பதால் இந்த மலரைக் கூந்தலில் சூடுவதில்லை. அவ்வாறு சூடுவது அச்செடிக்குக் கேடு சூழ்வதாகக் கருதப்படுகிறது. கடவே பலியினைச் சேர்ந்தவர்கள் கடமானை அது அவர்களுடைய பலிப்பெயருக்குரியதாகையால் கொல்லமாட்டார்கள்." தென் கன்னடத்தைச் சேர்ந்த ஹலேபைக்கர் தங்கள் குலப் பெயருக்கு மிகுந்த சிறப்புத் தருகின்றனர். சீனிவாச என்ற பெயருடைய 'மீன் வைணவர் நெற்றியில் தரிக்கும் நாமம் போன்ற வெள்ளைக் கோட்டை உடையதாகையால் அதனைச் சிலர் உண்பதில்லை.

குண்டப்பூர் வட்டத்தைச் சேர்ந்த ஹலேபைக்கர் அனைவரும் வைணவர்களாக இருப்பதோடு அந்த வட்டத்தில் வாண்ட் செயுக்கு அருகிலே உள்ள சங்கரப்ப கோடுலு என்னும் ஊரில் தங்கி வாழும் வைணவப் பிராமணரின் சீடர்களாகவும் உள்ளனர். இவர்களுடைய முக்கிய தெய்வம் வேங்கடரமணராயிருப்பினும் இவர்கள் பைதெர்குல, பஞ்சூரி முதலிய பூதங்களையும் வழிபட்டு வருகின்றனர். பூசாரிகளாகப் பணிபுரிபவர்கள் புதிதாக விளைந்த தானியம், பாக்கு, கரும்பு, வெள்ளரி, பூசணி போன்ற காய்கறிகளைக் கைத பூசை எனப்படும் விருந்தை நடத்தி முடிக்கும் வரை உண்ணமாட்டார்கள் இந்தப் பூசை நவம்பர் - டிசம்பர் மாதங்களில் நடைபெறும். அப்போது 'பைதெர்குலு' தெய்வத்திற்கு உணவு முதலியன படையலிடப்படும். அப்போது யாரேனும் ஒருவர் மீது பூதம் ஆவேசம்

செய்ய அவன் தன் வயிற்றை ஒரு அம்பினால் கிழித்துக் கொள் வான்.

திருமணம், சாவு ஆகியவற்றுக்கான சடங்குகளை நடத்து வதில் ஹலேபைக்கர் பில்லவர்களையே பெரிதும் பின்பற்றுகின் றனர். சாவுச் சடங்கின் இறுதி நாளன்று இவர்கள் தேர் கட்டும் வழக்கத்தைப் பில்லவர்களைப் போல மேற்கொள்வதில்லை. வைணவர்களான இவர்கள், சாவுத் தீட்டிலிருந்து சாதிக்குரிய நாவிதனைக் கொண்டு தீட்டினைப் போக்கிக் கொண்டபின், தாசய்யா எனப்படும் வைணவ இரவலனை வீட்டிற்கு அழைத் துப் புனித நீரினைத் தெளிக்கும்படி கேட்டுக் கொண்டும், நெற்றி யில் நாமம் தரித்துவிடும்படி கேட்டுக் கொண்டும் தங்களைப் புனிதப்படுத்திக் கொள்வர்.

கள் இறக்கும் முறையில் ஹலேபைக்கர்களுக்கும், பில்லவர் களுக்கும் இடையே சில வேறுபாடுகள் உள்ளதாகக் கூறுகின் றனர். ஹலேபைக்கர் விரல்கள் மேல் நோக்கிப் பார்த்தபடி இருக்கக் கத்தியை விரல்களுக்கிடையே தாங்கிப் பெருவிரல் வலதுபுறம் அமையப் பணி செய்வர் என்றும், பில்லவர்கள் விரல் கள் கீழ்நோக்கி இருக்க விரல்களுக்கிடையே கத்தியைத் தாங்கி பெருவிரல் இடதுபுறமாக இருக்கப் பணி செய்வார்கள் என்றும் கூறப்படுகிறது. தென்னம்பாளைகளின் உள்ளே இருக்கும் பூவினை நசுக்கப் பில்லவர்கள் பொதுவாகக் கல்லையும், ஹலே பைக்கர் எலும்பையும் பயன்படுத்துவர். தென்னம்பாளையின் உள்ளே இருக்கும் பூவினைப் புலியினால் கொல்லப்பட்ட எருமை யின், தரையில் படாததொரு எலும்பைக் கொண்டு தட்டி நசுக் கும்போது கள் மிகுதியாகக் கிடைக்கும் என்பதானதொரு பொது வான நம்பிக்கையும் உள்ளது. பில்லவர்கள் கள் சேகரிக்க நீண்ட சுரைப் புரடையைப் பயன்படுத்துவர். ஹலேபைக்கர் மண் பானையில் கள் சேகரிப்பர்.

ஹலிகே – Haligē (plank)

பலகை எனப் பொருள்படும் இது குர்ணிகளின் ஒரு கோத் திரத்தின் பெயர்.

## ஹல்லிக்கார – Hallikāra (village man)

1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் வக்கலிகரின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. ஊர்க்காரன் என்பது இதன் பொருளாகும்.

## ஹாலு – Hālu (Milk)

ஹொலியர், குர்ணி ஆகிய சாதிகளுக்குரிய புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். குர்ணிகளின் ஓர் உட்பிரிவின் பெயராக இருப்பதோடு, பால் எனப் பொருள்படும் இது, கால் நடைகளை மேய்த்துப் பால் விற்கும் வக்கலிகருக்கு உரிய பெயராகவும் வழங்குகின்றது. ஹாலு மத (பால் சாதி) என்பது குருபர் சாதிக்குரிய மற்றுமொரு பெயருமாகும். 1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் ஹாலு வக்கலிக மக்களு (பால் சாதிக்கார மக்கள்) என்பது ஹாலு வக்கலிகருக்குரிய மற்றுமொரு பெயராகத் தரப்பட்டுள்ளது. தென் கன்னட மாவட்டக் கையேட்டில் ஹாலுவக்லுமக்களு, கௌட சாதிக்குரிய மற்றுமொரு பெயராகத் தரப்பட்டுள்ளது. மாதிகர், கள்ளினைப் பால் கள் என வழங்குவர்.
(பார்க்க – பால்)

## ஹன்பலி – Hanbali

ஹிஜ்ரி 168 (கி. பி. 780) இல் பாக்தாத்தில் பிறந்த இமாம் அபூ அப்தி இல்லா அகமத் இபென் ஹன்பல் என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட சுன்னிகளின் சமயநெறிப்பட்டதான நான்காவது பிரிவினைச் சேர்ந்த முகமதியப் பிரிவினர் இவர்கள். "குரானுடைய இயல்பு பற்றிய கருத்து வேறுபாடுகள் தீவிரமடைந்திருந்த சமயத்தில் ஹன்பலின் புகழ் பரவத் தொடங்கியது. சிலர் ஆதியிலிருந்து இருந்து வருவது குரான் என்று கூற வேறு சிலர் அது படைக்கப்பட்டது என்பதனை நிலைநாட்ட முற்பட்டனர். முடி[illegible]ாசிமிலிருந்து ஆண்ட கலிபா இரண்டாவது கருத்தை [illegible]ன்பட்டவராக இருக்க அக்கருத்தை ஏற்றுக் கொள்ளாத மருத்துவரான ஹன்பல் சிறையிலிடப்

பட்டுக் கலிபாவின் ஆணையின்படி கடுமையான கசையடிகளுக் கும் உட்படுத்தப்பட்டார்."*

**ஹண்ட - Handa**

கன்னட கும்பாரர்களின் பட்டப்பெயர்.

**ஹண்டிசிக்கா - Handichikka**

1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் "ஹண்டிசிக்கார் பொதுவாக ஹண்டி ஜோகியர் எனவும் அழைக் கப்படுவர். இச்சாதி, ஜோகியரின் பகநாடி உட்பிரிவிலிருந்து தோன்றியது. ஐந்து தலைக்கட்டுக்களுக்கு முன், எருமைகளை வளர்த்து விற்பதில் இவர்கள் ஈடுபட்டபோது பகநாடி எனப் பெயர் பெற்றனர். காலப் போக்கில் இவர்கள் பன்றி வளர்க்கத் தொடங்கியபின் இவர்கள் ஹண்டி சிக்கா எனப் பெயர் பெற்றனர். ஹண்டி என்பது கன்னடத்தில் பன்றியைக் குறிக் கும்" எனக் கூறப்பட்டுள்ளது.

**ஹனிபி - Hanifi**

அபூ ஹனிபா அன் ஹீப்மானினைப் பின்பற்றும் முகமதியப் பிரிவினருக்கான பெயர். சுன்னிப் பிரிவைச் சேர்ந்த சான்றோரும் நீதிமானுமான இவர் ஹனிபி பிரிவினைத் தோற்றுவித்தவர். ஹிஜ்ரி 80 (கி.பி.700)இல் இவர் பிறந்தார்.

**அனுமான் - Hanumān**

குரங்கு இனத்தைச் சேர்ந்த தெய்வமான அனுமான் அல்லது இனுமந்த என்ற இப்பெயர் தோம்பர் உட்பிரிவு ஒன்றுக்குப் பெயராகவும், மேதரர் கோத்திரம் ஒன்றின் பெயராகவும் வழங்குகின்றது.

**ஹரி செட்டி - Hari Shetti**

கொங்கண மொழி பேசும் வணிகருக்கான ஒரு பெயர்.

---

* டி.பி.ஹியூக்ஸ். இஸ்லாமிய அகராதி. (T.P Hughes. Dictionary of Islam.)

**ஹாருவர் – Haruvar**

நீலகிரி மலையைச் சேர்ந்த படகர்களின் ஓர் உட்பிரிவு.

**ஹசலர் – Hasala**

ஹசலர் அல்லது ஹசுலர் பற்றித் திரு லூாயிஸ் ரைஸ் பின் வருமாறு எழுதுகின்றார்:– "இப்பழங்குடிகள் சோழிகர் அல்லது சோழகரை ஒத்தவர்கள். மைசூரின் வடமேற்கு எல்லையில் அமைந்த கணவாய்ப் பகுதிகளில் இவர்கள் வாழ்கின்றனர். சுருண்ட முடியும், கறுத்த உடல் நிறமும், தடித்த தோலும், குள்ளமான உருவமும் உடையவர்கள் இவர்கள். மரம் வெட்டு தலே இவர்களின் முக்கிய தொழில் எனினும் கமுகந்தோப்புக் களில் தொழில் செய்வதோடு இயற்கையில் விளையும் ஏலம், மிளகு ஆகியவற்றையும் சேகரிப்பர். கன்னடத்தின் கிளைமொழி ஒன்றினை இவர்கள் பேசுகின்றனர்."

1891 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறப் பட்டுள்ளதாவது:- "ஹசலரு, மலேரு எனப்படுபவர்கள் மேற்கு மலை நாட்டிற்கு மட்டுமே உரியவர்களாக உள்ளனர். சாதிப் படிநிலையில் இவர்கள் ஹொலயர், மாதிகர் ஆகியவர்களுக்கு உயர்ந்தவர்களாகக் கூறப்படுகின்றனர். உயரத்தில் குள்ள மானவர்களாயினும் நல்ல உடற்கட்டு வாய்க்கப் பெற்றுள்ள இவர்கள் சுருண்ட முடியும் நீண்ட தலையும் உடையவர்கள். இவர்கள் தாய்மொழி துளு. இவர்கள் எண்ணிக்கையில் மிகக் குறைந்தவர்களாக இருப்பதால் இவர்களைப் பற்றித் தனியே விளக்கம் ஏதும் கூறப்பெறவில்லை. தென் கன்னடத்திலிருந்து குடிபெயர்ந்து வந்துள்ள இவர்கள் தொடக்க காலக் காட்டு மிராண்டி வாழ்க்கையிலும் சற்றே மேம்பட்ட நாகரிக முற்றவர்களாக உள்ளனர். இவர்கள் ஒதுக்கமாக இருக்கும் சிறிய குடிசைகளிலேயே வாழ்கின்றனர். ஹசலர் குடிசை களில் வழக்கமான நுழைவாயில் இருந்தாலும், அதன் வழியாக ஒருவன் கூனிக் குறுகியே உள்ளே நுழைய முடியும். அக் குடிசைகளின் பின்புறம் மறைவாகப் புழக்கடைக் கதவு எனச் சொல்லும்படியான துளை இருக்கும். ஆபத்து வருகிறது

என்று ஐயுறும் சமயங்களிலும், அயலார் நெருங்கி வருகின்றார் கள் என்று தெரிந்தவுடனும் கூச்சப்படும் இயல்புடைய இவர்கள் அந்தத் துளை வழியே தவழ்ந்து காட்டினுள் சென்று மறைவர். காடுகளில் இயற்கையாகக் கிடைக்கும் ஏலம் முதலான காடுபடு பொருள்களைத் தங்களை வழக்கமாக வேலைக்கு வைத்துக் கொள்ளும் பண்ணையார்களுக்காகச் சேகரிக்கும் இவர்கள் அவர்களுடைய பண்ணை அடிமைகளாகவே ஆகிவிட்டனர். இவர்களுடைய குடிசைகள் ஆண்டுதோறும் அல்லது குறிப்பிட் பருவங்களில் அடர்ந்த காட்டுப் பகுதிகளின் நடுவே இடம் மாற்றி அமைக்கப்படும். கள், சாராயம் ஆகியவற்றின் மீது இவர்கள் மிகுந்த விருப்பம் உடையவர்கள். மாநிலத்தைச் சார்ந்த மலைக்காடுகளிலிருந்து இவர்கள் பெரும் அளவில் மிளகு, ஏலம், ஆகியவற்றை கடத்திச் செல்வதாகக் கருதப்படுகிறது. இவர்கள் திருமணச் சடங்குகள் மிக எளிமையானவை. அதில் சோதிடருக்குக் குறிப்பிடத் தக்க இடம் இல்லை. பேய்கள் வழி பாட்டை விட வேறு சமய நெறியினை இவர்கள் அறியார். இறந்தவர்களை இவர்கள் புதைக்கின்றனர். ஹசலரிடை விசித் திரமானதொரு சாவுச் சடங்கு வழக்கில் உள்ளது. இவர்களுள் யாரேனும் இறந்துபோனால் அதற்கு யாரோ ஒருவருடைய ஆவி தான் காரணம் எனக் கருதி அந்த ஆவியினை அடையாளம் கண்டுகொள்ளச் சோதிடம் கேட்கப்படும். சோதிடர் சோழிகளை வீசிப்போட்டு அருகே வசிக்கும் ஒருவர் தான் அந்த ஆவித் திருடர் எனக் கூறுவார். அதன்பின் இறந்து போனவருடைய ஆவி அவருடைய வழித்தோன்றல்களாலோ உறவினர்களாலோ ஒரு பன்றி, கோழி அல்லது வேறு உயிரைப் பலியிட்டு மீட்கப் படும். அதன்பின் அந்த ஆவி விடுதலைப் பெற்றதாகக் கருதி அதனை ஒரு பானையிலிட்டு மூடி அவ்வப்போது அதற்கு நீரும் சோறும் வழங்குவர். நாகரிகமடைந்த இந்து சமூகத்த வரிடையே பெரும் அளவிலான ஆடம்பரத்துடன் சிரார்த்தம் என்ற பெயரால் நடத்தப்படும் சாவுச் சடங்குகளின் மூல வேரினை இவர்களுடைய இந்தச் சடங்கிலே கண்டு கொள்ள முடிகின்றது. ஹசலரு தீர்த்தஹள்ளி, மூடிகெரெ பகுதிகளில் மட்டும் தங்கி வாழ்கின்றனர்.''

மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் மேலும் கூறப்

பட்டிருப்பதாவது:- ''முற்றும் மலைநாட்டினதான மலை சார்ந்த வட்டங்களில் வர்க்தார் எனப்படும் மலைத் தோட்ட உரிமை யாளர் ஹுட்டாளு அல்லது ஹுட்டு ஆளு என்பவர்களையும், மண்ணாளு அல்லது மண்ணு ஆளு என்பவர்களையும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையில் பணியில் வைத்துள்ளனர். முன்ன வர் பண்ணையார்களிடம் பரம்பரை அடிமைகளாக இருக்கும் குடும்பத்தில் அடிமையாகவே பிறந்து தந்தை மகனென வழி வழிப்பண்ணைத் தொழில் புரிபவன். மண்ணாளு என்பவன் நிலத்தோடு பிணைக்கப்பட்டவன். நில உரிமை மாற்றப்படும் போது இவனும் மாற்றப்படுவான். இவர்களுள் பெரும்பாலோர் ஹொலெயர்கள் எனினும் சில இடங்களில் ஹசலரும் இதுபோல அடிமைகளாக நடத்தப்படுகின்றனர்.

ஹசலருவர் பற்றித் திரு எச். வி. நஞ்சுண்டய்யா எனக்கு எழுதித் தெரிவித்துள்ள விவரங்கள் வருமாறு:- ''இவர்கள் மணச் சடங்கு இரவிலேயே நடைபெறும். இவர்கள் சாதியைச் சேர்ந்த ஒரு பூசாரி தங்கத் தகட்டாலான தாலியை மணமகள் கழுத்தில் அணிவிப்பான். சுற்றுப் புறத்தில் வாழும் பிற சாதி களின் செல்வாக்கால் மணச் சடங்கிற்குச் சோதிடரையும் அழைத்து நடத்தும் பழக்கம் இவர்களிடையே பரவி வருகின் றது. சமுதாயப் படிநிலையில் இவர்கள் மாதிகர், ஹொலெ யர்களுக்குச் சற்றே உயர்ந்தவர்களாக மதிக்கப்படுகின்றனர். இவர்களும் அச்சாதியாரைப் போலவே ஊருக்குப் புறத்தேயே தங்கி வாழ்கின்றனர். இவர்கள் மாட்டுக் கறியினை உண்ப தில்லை. பிராமணர்களை இவர்கள் நெருங்கினால் அவர்களைத் தீட்டுப்படுத்துகின்றவராகின்றனர். எனினும் இவர்கள் வக்கிலி யர், குருபர் போன்ற பிராமணரல்லாதார் வீடுகளில் நுழைவ தில்லை. இவர்கள் சாதிக்கெனத் தனியே வண்ணாரும், நாவி தரும் உள்ளனர். இவர்களுக்கு நீரெடுக்கத் தனிக் கிணறுகள் உள்ளன.''

## ஹஸ்பெ - Hasbe

ஹஸ்பெ அல்லது ஹசுபெ என்பது இரட்டைப் பொதிச் சாக்கினைக் குறிக்கும். இது வக்கலிகர், ஹொலையர் சாதி

களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலமாகப் பதியப் பட்டுள்ளது.

**ஹஸ்தம் – Hastham (hand)**

போயர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**ஹடிகார் – Hatagar**

தேவாங்கர்களின் ஓர் உட்பிரிவு. இவர்கள் கொடெகல் ஹடகார் என்றும் அழைக்கப்படுவர்.

**ஹத்தி – Hathi (elephant)**

ஒரிய ஹட்டிகளின் ஒரு குலம். இப் பிரிவினைச் சேர்ந்த வர்கள் யானையின் காலடிச் சுவட்டைக் காண நேரிட்டால் அதிலிருந்து கொஞ்சம் தூளியை எடுத்து நெற்றியில் தரித்துக் கொள்வர். இறந்தவர்களுக்காகச் செய்யப்படும் சிரார்த்தச் சடங்கின்போது ஒரு யானையின் உருவத்தை வரைந்து அதனை வழிபடுவர்.

**ஹதினெண்டு மனையவாரு - Hathinentu Manayavaru**

பதினெட்டு வீட்டார் எனப் பொருள்படும் இது தேவாங் கர்களின் ஓர் உட்பிரிவின் பெயர்.

**ஹட்டி – Hatti (hut or hamlet)**

கப்பிலியர், குருபர் ஆகிய சாதிகளின் புறமணக்கட்டுப் பாடு உடைய குலத்தின் பெயர்.

**ஹட்டிகங்கண – Hattikankana (cotton wrist-thread)**

குருபர்களின் ஓர் உட்பிரிவு. மணச் சடங்கின்போது இவர் கள் பருத்தி நூலினாலான கங்கணம் தரிப்பர்.

**ஹெக்கடெ – Heggade**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் ஹெக்கடெக்கள் கன்னடப் பயிர்த்தொழிலாளரும் கால்நடை

வளர்ப்போரும் ஆவர் எனத் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது. தென் கன்னடத்தைச் சேர்ந்த ஹெக்கடெக்கள் பற்றித் திரு எச்.எ. ஸ்டுவர்ட் தென் கன்னட மாவட்டக் கையேட்டில் எழுதியுள்ளதாவது:-"ஹெக்கடெக்கள் ஆட்டிடையர் பிரிவினைச் சேர்ந்தவரெனக் கூறப்பட்டிருப்பினும் இன்று பெரும்பாலானவர்கள் பயிர்த்தொழிலிலேயே ஈடுபட்டுள்ளனர். இவர்கள் சமுதாயப் படிநிலையில் பண்டர்களை விடச் சற்றுத் தாழ்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். தங்களுடைய புரோகிதர்களாக இவர்கள் பிராமணர்களை அமர்த்துகின்றனர். பணக்காரரான ஹெக்கடெக்கள் சடங்குகளில் பிராமணர்கள் நெறியைப் பின் பற்றுகின்றனர், திருமணத்தின் இரண்டாம் நாள் மணமகளிடமிருந்து நகையைப் போலியாகத் திருடும் ஒரு சடங்கு நடத்தப்படும். பொழுது புலரும் முன் மணமகன் நகையோடு ஓடிவிடுவான். அன்று மாலை மணமகள் வீட்டார் மணமகன் பதுங்கி இருக்கும் வீட்டினை நாடிச் செல்வர். அந்த வீட்டு உரிமையாளரிடம் மணமகள் வீட்டில் ஒரு திருட்டு நடந்திருப்பதாகக் கூறி அந்தத் திருடன் அந்த வீட்டில் ஒளிந்திருக்கிறானா எனக் கேட்பர். அந்த வீட்டார் இல்லை எனக் கூறினாலும் மணமகள் வீட்டார் அந்த வீட்டில் புகுந்து தேடுவர். இதற்கிடையே ஒரு சிறுவன் மணமகன் போல வேடம் இடப்படுவான். தேடுபவர்கள் அச்சிறுவனை மணமகன் எனக் கருதி அவனைப் பிடித்துக் கூடியுள்ளவர்கள முன் குற்றவாளி எனக் கூறி நிறுத்துவர். மணமகனாக வேடம் தரித்துள்ள அச் சிறுவன் தன் ஒப்பனைகளைக் களைந்து தான் மணமகன் அல்லன் என உணர்த்துவான். கூடியுள்ள அனைவரும் அதனால் ஏற்பட்ட பரபரப்பில் மகிழ்வர். மணமகள் கூட்டத்தார் தங்களால் மணமகனைக் கண்டுபிடிக்க இயலவில்லை எனக் கூறி அந்த வீட்டுக்காரரிடம் மணமகனை அழைத்து வரும்படி வேண்டுவர். அதன்பின் மணமகன் அழைத்து வரப்பட்டு மணமகள் இல்லத்திற்கு ஊர்வலமாக அழைத்துச் செல்லப் படுவான்."

குடகில் தங்கி வாழும் ஹெக்கடெக்கள் பற்றி மறைத்திரு ஜி. ரிட்ச்டெர்* கூறுவதாவது:- "மூட நம்பிக்கைகளிலும்,

* குடகு மாவட்டக் கையேடு. (Manual of Coorg.)

திருவிழாக்களைக் கடைப்பிடிப்பதிலும் இவர்கள் குடகு மக்களின் பழக்க வழக்கங்களையே பின்பற்றுகின்றனர். எனினும் குடகு சமூகத்தவர்களால் இவர்கள் ஒதுக்கப்பட்டவர்களாகவே நடத்தப் படுகின்றனர். அவர்கள் முன்னிலையில் இவர்கள் தரையில் அமரவே அனுமதிக்கப்படுவர். அவர்களோ நாற்காலியில் உட் காருவர். அவர்கள் தரையில் பாயில் அமர்ந்திருப்பார்களாயின் ஹெக்கடெக்கள் அப்பாயினை விட்டுவிலகி அமர வேண்டும்.'' குடகு மாவட்ட விவரக் குறிப்பில் திரு எல். ரைஸ் ஹெக்க டெக்கள் ஊர்த் தலைவர்கள் எனவும், ஊர்க்காவலர்களுக்குத் தலைவர்கள் எனவும் கூறியிருப்பதோடு இதற்காக மாநிலத்தின் சில பகுதிகளில் இவர்களுக்கு வரியிலியாக நிலம் வழங்கப்பட் டுள்ளதாகவும் குறித்துள்ளார்.

ஹெக்கடெ என்பது சில சமயங்களில் குருபர்களால் சாதிப் பெயராகப் பயன்படுத்தப்படுகிறது. இது ஸ்தானிகர் சாதியின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு சாதியின் பெயருமாகும்.

**ஹெக்காணீக- Heggāniga**

காணீகர்களின் ஓர் உட்பிரிவு. இவர்கள் செக்கில் இரண்டு எருதுகளைப் பூட்டுபவர்கள்.

**ஹெலவ - Helava**

ஹெலவ என்பது முடவன் எனப் பொருள்படும். இது இரவலர் பிரிவு ஒன்றின் பெயராகும். பெல்லாரி, மைசூர் முதலிய இடங்களில் ஊர்களின் வரலாறுகளைப் பேணிக் காப் பவர்கள் இவர்கள். தங்கள் கால்களைக் கம்பளியால் போர்த்து மறைத்தபடி எருதுகளின் மீது அமர்ந்து இவர்கள் ஊர் ஊராகப் பயணம் செய்வர். வீடுவீடாகச் சென்று ஒவ்வொரு குடும்பங் களின் வரலாறுகளையும் அக் குடும்பங்களைச் சார்ந்த போரில் உயிர் துறந்த வீரர்களின் பெயர்களையும் கூறுவர்.

**ஹிஜ்ர – Hijra (eunuchs)**

பார்க்க: கோஜா - (See: Khoja)

**ஹைரே - Hire (big)**

குர்ணிகளின் ஓர் உட்பிரிவு.

**ஹிட்டு - Hittu (flour)**

மாவு எனப் பொருள்படும் இது குர்ணிகளின் ஒரு கோத்திரம்.

**ஹொலதவ - Holadava**

கட்டிகளுக்கான மற்றுமொரு பெயர்.

**ஹொலையர் - Holeya**

சென்னை மாநிலத்தில் தென் கன்னடத்திலேயே ஹொலையர் எண்ணிக்கையில் மிகுதியாகக் காணப்படுகின்றனர். கோயமுத்தூர் மாவட்டத்திலும், நீலகிரியில் சிங்கோனா, காபி, தேயிலைத் தோட்டங்களிலும் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையினராக இவர்கள் காணப்படுகின்றனர். தென் கன்னட மாவட்டக் கையேட்டில் இவர்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளவை வருமாறு:- ''ஹொலையர்கள் தென் கன்னடத்தில் முன்னாளில் மண்ணொடு பிணைக்கப்பட்ட அடிமைகளாக இருந்தவர்கள். இன்று வயல்களில் கூலிக்காரர்களாகப் பணிபுரியும் இவர்கள், மலையாளத்தில் புலையர்களெனவும் தமிழில் பறையன்களெனவும் வழங்கப்படுபவர்களுக்கு இணையானவர்கள். தீட்டினைக் குறிக்கும் ஹொலே என்ற சொல்லிலிருந்து இப்பெயர் வந்ததாகப் பிராமணர்கள் கருதுகின்றனர். மற்றவர்கள் நிலம் எனப் பொருள்படுவதான ஹொல என்ற சொல்லிலிருந்து இப்பெயர் வந்ததாகக் கருதுவர். பறையன்களைப் போலவே ஹொலையர்களும் நிலத்திற்கு உரியவர்களாக இருந்துள்ளனர் என்பதனை இது குறிப்பதாகும். இச்சொல்லின் பிறப்பு எத்தகையதாயினும் இது பறையன், புலையன் என்ற சொற்களுக்கான கன்னடச் சொல் என்பதில் ஐயம் ஏதுமில்லை. ஹொலையர் பல உட்பிரிவுகளைக் கொண்டுள்ளனர். மாரி, மேர, முண்டல, பாகுட என்பன அவற்றுள் குறிப்பிடத்தக்கவை. மேர ஹொலையர்களே எண்ணிக்கையில் மிகுதியானவர்கள். சொத்துரிமை பாராட்ட இவர்களிடம் சொத்துக்கள் ஏதும் இல்லையெனினும்,

இவர்கள் பொது மரபினதான மக்கள் வழிப்பட்ட சொத்துரிமை முறையினையே மேற்கொள்கின்றனர். பூதங்களின் வழிபாடு ஹொாலையர்களுக்கே உரியதான வழிபாட்டு முறையாகும். மேற்கூறிய ஒவ்வொரு உட்பிரிவினரும் தங்களுக்கென நான்கைந்து பூதங்களை உடையவர்களாக உள்ளனர். இவற்றிற்குக் கோழிகள், அவல், தேங்காய், கள் ஆகியன மாதந்தோறும் மற்றும் ஆண்டுதோறும் படைக்கப்படும். தென் கன்னடத்தைச் சேர்ந்த மற்ற சாதியாரிடையே காணப்படுவதைப் போல ஹொாலெயர்களிடையேயும் புறமணக் கட்டுப்பாடுடைய பலிகள் எனப்படும் பல குலப் பிரிவுகள் உள்ளன. இப்பிரிவினர் தங்களுக்குள் மண உறவு கொள்வதில்லை. மணப் பிணைப்பு தென் இந்தியாவைச் சார்ந்த பிற தாழ்ந்த சாதியாரிடையே இருப்பதைப் போல இவர்களிடையேயும் மிக நெகிழ்ச்சியுடையதாக இருப்பினும் இவர்களுடைய மணச் சடங்குகள் ஓரளவு மிகவும் விரிவானதாகவே உள்ளன. மணமகனைச் சேர்ந்தவர்கள் குறிப்பிட்ட ஒரு நாளில் அரிசி, வெற்றிலை, சிறிது பாக்கு ஆகியவற்றுடன் மணமகன் இல்லம் சென்று இரவு முழுக்க அவள் வீட்டுக் குடிசையின் முன் காத்திருப்பர். மணமகன் மணமகளால் பின்னப்பட்ட பாயில் அமர்ந்திருப்பான். மறுநாள் காலையில் மணமகள், மணமகனுக்கு எதிரே உட்கார வைக்கப்படுவாள். அவர்களுக்கிடையே வெற்றிலை முதலியன அடங்கிய முறம் இருக்கும். அப்போது கூடியிருப்பவர்கள் அவர்கள் தலை மீது அரிசியினைத் தூவுவர். அதன் பின் மணமகள் மணமகனோடு அவனுடைய குடிசைக்கு அந்தப் பாயினைத் தன்னுடன் எடுத்துக் கொண்டு செல்வாள். மணச் சடங்கின் இறுதி நாளன்று மணமக்கள் அந்தப் பாயினை மீனுள்ள ஓர் ஆற்றுக்கோ, குளத்திற்க்கோ எடுத்துச் சென்று அதனை நீரில் அமிழ்த்தி மீன்களைப் பிடிப்பர். அவற்றை அவர்கள் முத்தமிட்டபின் மீண்டும் நீரில் செல்ல விட்டுவிடுவர். நல்லதொரு விருந்தோடு மணச்சடங்குகள் முடிவுறும். மணமுறிவினை எளிதில் பெறலாம். கைம்பெண்கள் மறுமணம் செய்துகொள்ளும் உரிமை உடையவர்கள். ஹொாலையர்கள் மாட்டிறைச்சி உட்பட எல்லாவகை ஊனினையும் உண்கின்றனர். சாராயம் முதலிய மதுவகைகளை எத்தகைய

சாதித் தடைகளும் இன்றித் தாராளமாகப் பருகுகின்றனர். ஆண்களும் பெண்களும் கமுகம் இலையாலான (பாக்கு மட்டை) சிறிய தலைக் குல்லாயினை அணிகின்றனர்.'' நாங்கள் நேரில் பேட்டி கண்ட ஹொலையர் அனைவரும் தாங்கள் மணச் சடங்கில் மீன் பிடிக்கும் சடங்கினை மேற்கொள்வதில்லை என்று கூறியதோடு அதனைச் சிவாலி பிராமணர்களும் அக்கசாலெக் களுமே மேற்கொள்வதாகக் கூறினர்.

தென் கன்னட மாவட்டக் கையேட்டில் திரு எச். எ. ஸ்டுவர்ட் எழுதுவதாவது:- ''துளு பிராமணர்கள் எழுதியுள்ள வரலாறுகள் அனைத்தும் மலபார், கன்னடம், கேரளம், துளுவம், ஹைக்க ஆகியவற்றின் தோற்றத்திற்குப் பரசுராமனே காரணம் எனக் கூறுகின்றன. மேற்கு மலைத் தொடரின் சிகரத்திலிருந்து தன் கோடலியை எவ்வளவு தூரம் வீசி எறிய முடியுமோ அவ்வளவு தூரம் அவன் கடலில் அதனை வீசி எறிந்து கடலி லிருந்து நிலப்பகுதியை மீட்டான் எனக் கூறுவர். வேறுபட்ட தான ஒரு கதை வழக்குப் பரசுராமன் தான் கடலிலிருந்து மீட்ட நிலத்தை நாகர்களுக்கும், மச்சிப் பிராமணர்களுக்கும் அளித்தார் எனக் கூறும். அவர்கள் உண்மையில் பிராமணர்கள் அல்லர். அவர்களை மீனவர்களும் ஹொலையர்களும் விரட்டியோ அழித்தோ ஓட்டி விட்டு மயூர வர்மன் துளு பிராமணர்களை அங்குக் குடியேற்றும் வரை, அவர்களே அப்பகுதிக்கு உரியவர்களாக ஆண்டுகொண்டு இருந்தனர். வழங்கும் வழக்கு வரலாறுகள் அனைத்தும் துளு பிராமணர்களைக் குடியமர்த்தி யவன் மயூர வர்மன் என்பதில் ஒன்றுபட்டனவாகவே உரைக் கின்றன. அவர்கள் துளு நாட்டில் வந்து குடியேறிய முறை பற்றிக் கூறுவதில் அவை மாறுபட்ட கருத்துடையனவாக உள்ளன. ஒரு வரலாற்றுப்படி கொறகர்களின் தலைவ னான ஹபாஸ்கிக முதலில் மயூர வர்மனை விரட்டினான் எனவும், பின்னர் மயூர வர்மனால் அல்லது கோகர்ணத்தை ஆண்ட அவன் மருமகனான லோகதித்யனால் ஹபாஸ்கிக விரட்டப்பட்டு அகிக்ஷேத்திரத்திலிருந்து பிராமணர்கள் கொண்டு வரப்பட்டு முப்பத்திரண்டு ஊர்களில் குடியமர்த்தப் பட்டனர் எனவும் கூறப்படுகிறது. இன்னொரு வரலாற்றின்படி

பரசுராமனால் பிராமணராக்கப்பட்ட மீனவர்களுக்கும், ஹொலையர்களுக்கும் உரியதாக இருந்த நாட்டினைப் படையெடுத்துக் கைப்பற்றியவன் மயூர வர்மனே ஆவான். மயூர வர்மனும் அவனால் குடியேற்றப்பட்ட பிராமணர்களும் ஹொலெயர் தலைவனான நந்தனால் விரட்டபட்டனரெனவும், நந்தனுடைய மகன் சந்திரசயனன் கோயில் நாட்டியக்காரியான தன் தாயின் அறிவுரைப்படி பிராமணர்களை மதித்துப் போற்றினான் எனவும் கூறப்படுகிறது. அவன் ஆட்சியில் பிராமணர்கள் மீண்டும் அழைத்து வரப்பட்டு ஆட்சிப் பொறுப்புக்களின் அதிகாரம் முழுவதும் அவர்களிடமே ஒப்படைக்கப்பட்டது. அவன் தன் சாதியைச் சேர்ந்தவர்களை அடிமைகள் நிலைக்கு ஆளாக்கிவிட்டான். மூன்றாவதான வரலாற்றுக் கதை, சந்திர சயனன் ஹொலெய அரசனின் மகனல்லன் எனவும், அவன் மயூர வர்மன் மரபில் வந்தவனெனவும், ஹொலெய அரசனை வெற்றி கொண்டவன் எனவும் கூறும்.''

மறைத்திரு ஜி. ரிட்ச்டெர் குடகு கையேட்டில் எழுதுவதாது:- ''குடகு முழுவதும் ஹொலையர், குடகர்கள், வீட்டில் காணப் படுகின்றனர். எல்லா வகையான துப்புரவுப் பணிகளையும் இவர்களே செய்து வருகின்றனர். பிரிட்டனின் அரசின் கீழ் இவர்கள் மேற்போக்காகப் பார்க்கும்போது உரிமையுடைய மக்களாகத் தோன்றினாலும், அண்மைக் காலம்வரை இவர்கள் உரிமையற்றவர்களாகக் குடும்பங்களோடு இணைக்கப்பட்ட அடிமைகளாகவே இருந்து வந்துள்ளனர். ஐரோப்பிய மலைத் தோட்டக்காரர்கள் வருகைக்குப் பின் இந்த அடிமைத்தனம் பற்றி வெளிப்படையாக விவாதிக்கப்பட்டுக் குடும்பத்தோடு பிணைக்கப்பட்ட அடிமை முறை நடைமுறையிலிருந்து அகற்றப் பட்டது. ஹொலையர்கள் உடைகள் அணிவதில் கருத்துச் செலுத்துவதில்லை. இவர்கள் கெட்ட பழக்க வழக்கங்களை மேற்கொண்டிருப்பதோடு மாட்டிறைச்சி உட்பட தங்களுக்குக் கிடைக்கும் அனைத்தையும் உண்பர். ஐயப்பதேவரு, சாமுண்டி, காளி ஆகிய தெய்வங்களை மாதம் ஒரு முறை வழிபடுவர். ஆண்டுக்கு ஒரு முறை பன்றி அல்லது கோழியைப் பலியிடுவர்.''

1891, 1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கைகளில்

மைசூர் மாநிலத்தைச் சேர்ந்த ஹொலையர் பற்றித் தரப்பட்டுள்ள விவரங்கள் வருமாறு:- "502, 492 எண்ணிக்கையினரான ஹொலெயர்கள் மொத்த மக்கள் தொகையில் 10.53 சதவீதத்தினர் ஆவர். இவர்களுடைய பெயரே புலப்படுத்துவதைப் போல இவர்கள் நாட்டின் பயிர்த்தொழிலின் முதுகெலும்பாய் உள்ளனர். ஹொல என்பது புஞ்சைத் தானியங்கள் விளையும் நிலத்தைக் குறிக்கும் கன்னடச் சொல்லாகும். ஹொலெயர் என்பது அத்தகைய நிலத்தையொத்த மனிதனைக் குறிக்கும் இச் சாதியில் பல உட்பிரிவுகள் உள்ளன. அவற்றுள் கன்னட, கங்காதிகார, மக்கட (பாவு), மொரசு என்பன அடங்கும். ஹொலையர் பயிர்த்தொழிலுக்கு உதவும் கூலிகளாகவும், ஏழைகள் வாங்கி அணியும் முரட்டுக் கைத்தறித் துணிகள் தயாரிப்பில் உதவும் கூலிகளாகவும் முக்கியமாக அமர்த்தப்படுகின்றனர். மலிவான வெளிநாட்டு துணிகளின் இறக்குமதியால் கைத்தறித் துணிகள் வேகமாகச் செல்வாக்கு இழந்து வருகின்றன. மைசூர் மாவட்டத்தின் சில பகுதிகளில் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையிலான ஹொலையர்கள் வெற்றிலைக் கொடிக்கால்களில் பணி புரிகின்றனர். உழைப்பு மிகுதியும் தேவைப்படும் பல தொழில்களிலும் இவர்கள் அமர்த்தப்பட்டிருக்கக் காணலாம். அலேமன் உட்கோட்டத்தைச் சேர்ந்தவர்கள் குடியிருப்பில் தங்கியிருக்கும் போர்வீரர்களாக அமர்த்தப்படுகின்றனர். மைசூரில் உள்ள சில முதல்தரமான கோயில்களில் தீண்டப்படாதவர்களுக்குத் தரப்பட்டதான சமய உரிமைகள் காரணமாகத் தோன்றியுள்ள நல்ல விளைவுகள் பற்றி இங்கே எடுத்துரைப்பது பொருத்தமானதாகவே இருக்கும்.மைசூர்மாவட்டத்திலுள்ள மேல்கோட்டையில் தீண்டப்படாதவர்களான ஹொலையர்களும் மாதிகர்களும் அங்குத் தேரோட்டம் நடைபெறும் சமயத்தில் ஆண்டிற்கு மூன்று நாள்கள் பிராமணர்களோடு கூடக் கோயிலின் கருவறை வரை சென்று வழிபடலாம் என விசிஷ்டாத்வைதத்தைத் திருத்தி அமைத்த பெரியாரான இராமானுசர் அனுமதி வழங்கினார். புச்சனன் பதிந்துள்ளதான பின்வரும் செய்திகள் இவர்களுடைய முன்னோர்கள் இத்தகைய உரிமையைப் பெறவும், அக்கோயில் தெய்வத்தின் காப்பாளர்களாக விளங்கவுமான காரணத்தை விளக்குவதாகும். மேல்கோட்டையிலுள்ள புகழ்

பெற்ற கோயிலுக்கு வழிபாட்டிற்காக இராமானுசர் சென்ற போது டெல்லித் துருக்கர் அப்பகுதியைத் தாக்கிக் கோயிலுள்ள சிலையினையும் தூக்கிச் சென்று விட்டனர் என அவரிடம் கூறப்பட்டது. உடனே அவர் துருக்கர் தலைநகரான டெல்லி நோக்கிப் புறப்பட்டார். அவர் அங்கே வந்ததும், அச்சிலை மிக அழகாக இருப்பதாகக் கூறித் தனக்கு விளையாடத் தரும்படி கேட்ட தன் மகளுக்கு அதனை அந்த அரசன் தந்து விட்டிருப்பதை அறிந்தார். பகல் முழுதும் இளவரசி அச்சிலை யுடன் விளையாடுவாள். இரவில் அத்தெய்வம் தன் அழகிய வடிவத்தினை எடுத்துக் கண்ணனுக்கே உரிய அத்தகைய லீலை களின் ஈடுபாட்டினை மேற்கொண்டு படுக்கையில் அவளோடு கலந்து மகிழ்வதாயிற்று. இராமானுசர் சில மந்திரங்களின் மகிமையால் அச்சிலையினைப் பெற்றார். அதனைத் திரும்ப எடுத்துவர விரும்பிய அவருக்குப் பிராமணர்கள் யாரும் உதவ முன்வரவில்லை. ஹொலையர்கள் தங்களுக்குக் கோயிலினுள் நுழையும் உரிமை வழங்கினால் அவருக்கு உதவுவதாகக் கூறினர். அவர்கள் வேண்டுகோளினை இராமானுசர் ஏற்றுக்கொள்ளவே ஹொலையர்கள் டெல்லிக்கும் மேல்கோட்டைக்கும் இடையே பலவிடங்களில் காத்து நின்று தெய்வத்தின் சிலையினை இருபத்து நான்கு மணி நேரத்திற்குள்ளாகக் கொண்டு சேர்த்தனர். இப்பணியினைச் செய்த காரணத்தால் தீண்டத்தகாதவர்களான இவர்கள் திருக்குலத்தார் எனப் போற்றப்படும் சிறப்பினையும் பெற்றனர். 1799-இல் திவான் பூர்ணய்யா மேல்கோட்டைக்கு வந்தபோது இவர்கள் கோயிலினுள் நுழையும் உரிமை துவஜ ஸ்தம்பம் வரையுமே ஆகும் என வரையறை செய்யப்பட்டது. இப்பொழுது இவர்கள் அங்கிருந்தே தெய்வத்தை கண்டு வணங்குகின்றனர். தேர்த் திருவிழா நடைபெறும் அன்று திருக் குலத்தவர்கள் ஆண், பெண், குழந்தைகள் உட்பட மொட்டை அடித்துக்கொண்டு, உயர்சாதியாரோடு ஒருங்கே கல்யாணி தெப்பக்குளத்தில் குளித்தபின், தங்கள் தலையில் அரிசியும் எண்ணெயும் நிறைந்த சிறிய பானைகளைச் சுமந்தவர்களாக மேலே குறிப்பிட்ட கொடிக்கம்பம்வரை கோயிலினுள் சென்று தங்கள் காணிக்கைகளைச் செலுத்துவர். இச்சமயத்தில் கோயிலில் வந்து கூடியுள்ள தாசய்யாக்கள் அவற்றை உரிய

வகையில் பயன்படுத்திக் கொள்வர். திருக்குலத்தவரான ஹொலையரும், மாதிகரும் கோயில் தேரினை இழுக்கும் உரிமை யினையும் பெற்றுள்ளனர். இதற்காக அவர்கள் கோயிலிலிருந்து இருநூறு சேர் ராகியும், ஓர் அளவினதான வெல்லமும், தேரோட் டத்திற்காகப் போடப்பட்டுள்ள பந்தல் அலங்காரத்திற்குப் பயன்படுத்தப்பட்ட துணிகளில் சில துண்டுகளையும் பெறு வதற்குரியர். தேரோட்டம் முடிவிற்கு வந்தபின் மேற்கூறிய குலத்தைச் சேர்ந்தவர்களின் சார்பாளர்கள் ஒவ்வொருவரும் ஸ்தானிகரிடமிருந்து ஆளுக்கு ஒரு மாலை பெறுவர். அவர்கள் ஏந்தி நிற்கும் தட்டுக்களின் ஸ்தானிகர் ஒரு சேர அந்த மாலை கள் ஒரே சமயத்தில் விழும்படியாகப் போட்டு விடுவார். சிலருக்குத் தனிச் சலுகை காட்டப்பட்டது எனக் கூறப்படும் குற்றச் சாட்டிலிருந்து தப்பவே இவ்வாறு மாலை வீசப்படுகிறது. இந்தத் தனி உரிமைகளுக்கு நன்றி பாராட்டும் வகையில் திருக் குலத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள் கோயிலைச் சுற்றியுள்ள தெருக்களை நாளும் கூட்டித் துப்புரவு செய்யும் பணியினையும், தேரோட்டத்தின்போது முரசினை முழக்கியபடி இரவு வேளை களில் தெருக்களில் காவலாக வரும் பணியையும் மேற்கொள் கின்றனர். காவல் துறை, நகர சபை ஆகிய அமைப்புக்கள் தோன்றிவிட்ட காரணத்தால் இன்று இத்தகைய பணிகள் தேவையற்றனவாகிவிட்டன. ஹஸன் மாவட்டத்திலுள்ள பேளூர் விட்டுணு கோவிலினுள் தேரோட்டத்தின்போது. கோயிலினுள் செல்லும் உரிமையையும் தீண்டத்தகாதவர்களான இவர்கள் பெற்றுள்ளனர். எனினும் இந்த இரண்டு கோயில் களிலுமே தேரோட்டத் திருவிழா முடிவுற்ற பத்தாம் நாள் இந்தத் தனி உரிமைகள் நிறுத்தப்படுவதோடு கோயில்களைப் புனிதப்படுத்தும் சடங்கினையும் மேற்கொள்கின்றனர்.

"அளவை முறைகள் (சர்வே) வழக்கத்திற்கு வராத முன் நாள்களில் ஹொலையர் அல்லது மாதிக குலவாதி மைதா னத்தைச் சார்ந்த பகுதி அல்லது கிழக்குப் பகுதியில் நிலங்களின் உரிமை பற்றி முழுவதும் அறிந்தவனாகக் கருதப்பட்டான். காண்பவரைத் திகைக்க வைக்கும் சடங்குகளோடு கூடிய அவன் சத்தியம் செய்து கூறும் வார்த்தைகள் தீர்க்கப்படாத மனக்கசப் புக்குரிய பல எல்லைத் தகராறுகளைத் தீர்த்து வைத்துள்ளன.

ஊரின் உள்ளூர் பொருளாதாரத்தை நிலைப்படுத்துவதில் குலவாதியின் குரலுக்குத் தனி மதிப்பு உண்டு. அடிக்கடி அவனே ஊர்ப்படேலின் அதிகாரங்களைச் செயற்படுத்துவான். எனினும் மலைநாட்டில் ஹொலையர்கள் பண்ணை அடிமைகளாகத் தாழ்ந்த நிலை எய்திவிட்டனர். பிரிட்டனின் ஆட்சியின் கீழுங் கூடச் சில தலைமுறைகளுக்கு முன்வரை இவன் தன் சொந்த உடலுக்குக் கூட உரிமை உடையவனாக இருக்கவில்லை. வர்க தார் எனப்படும் பண்ணையார் இவனைப் பரம்பரை அடிமை யாக வைத்திருந்தார். பிரிட்டனின் ஆட்சித் திறத்தால் அடிமைத் தனத்திலிருந்து மீட்கப்பட்ட இவன், மலைத் தோட்டத் தொழி லில் உரிமையுடைய காபித் தோட்டத் தொழிலாளியாக நல்ல ஊதியம் பெற்று இன்று தன்னுடைய உரிமையினை நிலை நிறுத்திக் கொண்டுள்ளான். மலைநாட்டில் தீண்டத்தகாதவர் களுக்காகச் செய்யப்பட்டிருக்கும் உதவிகள் முழுவதுமே ஆக்க வழிப்பட்டன எனக் கூறுவதற்கில்லை. இவர்கள் மலைத் தோட் டப் பணியைத் தேடிச் சென்றமையால் வெற்றிலைக் கொடிக் கால்களின் வளம் நலிவதாயிற்று. எது எப்படியாயினும் இன்று மாநிலத்தின் மேற்குப் பகுதிகளில் ஹொலையர்கள் செல்வாக்கு மிக்க பண்ணையார்களின் கொத்தடிமைகளாகவே தொடர்ந்து இருந்து வருகின்றனர். அப்பகுதிக்குரிய ஹொலையர்களின் பின்வரும் பழக்க வழக்கங்கள் இந்த அடிமைத்தனத்தினை உறுதிப்படுத்துவனவாகும்.

பெரும்பாலான மலை நாட்டு வட்டங்களில் வர்கதார் எனப்படும் ஒவ்வொரு பண்ணையாரும் ஹூட்டாளு அல்லது ஹூட்டு-ஆளு என்பவர்களையும் மண்ணாளு அல்லது மண்ணு-ஆளு என்பவர்களையும் தங்கள் கீழ் பணியில் வைத்திருப்பர். இவர்களுள் முன்னவர்கள் பரம்பரை பரம்பரையாக மகன், தந்தை என அடிமைகளாகப் பிறந்து பண்ணையாருக்கு உழவுத் தொழிலில் உழைத்து வருபவர்கள். மண்ணாளு என்பவர்கள் நிலத்தோடு பிணைக்கப்பட்டு நிலம் கைமாறும் போது அதனோடு கூடவே விற்கப்படும் அடிமைகள். இவர்களில் பெரும்பாலானவர்கள் ஹொலையர்களே. சிலவிடங்களில் ஹசலர்களும் இது போல அடிமைகளாக வைக்கப்பட்டுள்ளனர்.

சில பண்ணைகளில் ஹுட்டு - ஆளுகள் மட்டுமே இருப்பர். மண்ணு - ஆளுகள் மற்றவர்களுக்காக உழைப்பர். இன்று எல்லோரும் தனி மனித உரிமையினை அனுபவிக்கின்றார்கள் எனினும் நில வருவாய்க்கான அளவீடுகள் செய்யப்பட்டு, மாநிலத்தில் நில வரியும், உடமை உரிமையும் நேராக்கப்பட்டுள்ள போதிலும், பிறப்பினால் ஏற்பட்ட மரபுரிமை தொன்றுதொட்டு மேற்கொள்ளப்பட்டு வரும் பழக்கம், அறியாமை, என்றும் தீர்க்க முடியாத கடன் சுமை ஆகியவை இன்னமும் இந்தப் பண்ணைக் கூலிகளைப் பாதி அடிமை நிலையிலேயே பிணைத்து வைத்துள்ளன. முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையேயான தொன்றுதொட்டு வருவதான இந்த உறவைச் சீர்குலைத்தல் அறிவுடைமையாகாது எனக் கூலிபாட்கள் எளிதில் கிடைக்காத ஒதுக்கமாக உள்ள காட்டுப் பகுதிப் பண்ணையார்கள் கருது கின்றனர். இந்த மரபு மாற்றப்படுமேல் வளமான வெற்றிலைக் கொடிக்காலகளின் பயிரிடுகை பாழாகும் என அவர்கள் கருது கின்றனர். இந்தப் பரம்பரை அடிமைகள் தாங்கள் உழைக்கும் நிலத்தோடு கொண்டுள்ள பிணைப்பினை மேலும் இறுக்கும் வகையில் அப்பகுதியைச் சேர்ந்த முதலாளிகள் அவர் களிடையே ‘கிரெடன கிரீன்’ மணமுறையை ஏற்படுத்தி யுள்ளனர். சட்டப்படியான வழக்கமான திருமணத்தில் கணவன் ஒரு ஹுட்டாளாகவோ, மண் ஆளாகவோ இல்லை யாயின் ஒரு பெண் வேலைக்காரியை அக்குடும்பம் இழக்க வேண்டி நேரலாம். இத்தகைய இழப்பினைத் தவிர்ப்பதற்காக ஒருத்தி ஹுட்டாளு அல்லது மண்ணாளு மணிக்கட்டு என அவ்வட்டாரத்தில் வழங்கும் முறைப்படி ஒருவனுக்கு மனைவியாக்கப்படுவாள். இது கிட்டத்தட்ட ஒருவன் ஒரு காமக்கிழத்தியை வைப்பாக வைத்துக் கொள்வதற்குச் சம மானதென்று கூறலாம். சாதியாருக்கு ஒரு சிறுதொகையைத் தண்டமாகச் செலுத்திய பின் ஒருவன் அவளைக் கொஞ்ச காலத்திற்குப் பின் கைவிட்டு விடலாம். வேறொருவன் அவளை இதே முறையில் தனக்கு உரியவளாக்கிக் கொள்ளலாம். இத னால் அவள் அந்தக் குடும்பத்தின் அடிமையாகத் தொடர்ந்து இருப்பதோடு அவள் குழந்தைகளும் பண்ணையாரின் அடிமை களாக ஆகிவிடுகின்றனர். இவர்களுக்கு நாள்தோறும் உரிய

கூலியாக நெல்லோ சோறோ வழங்கப்படும். ஆண்டுக்கு ஒரு முறை வேட்டி, சேலை கம்பளியாகியனவற்றைப் பெறுவர். தேரோட்டம் போன்ற சிறப்பான திருவிழா நிகழ்ச்சிகளின் போது கூலியோடு கூடச் சிறுதொகையினையும் உதவித் தொகையாகப் பெறுவர்.

''பிராமணர் அமைப்புக்கள் ஹொலையர்களையும், மாதிகர்களையும் ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு அப்பால் நெருங்கி வராமல் ஒதுக்கி வைத்திருக்கும் ஊர்ப்புறங்களில், இந்தத் தீண்டத்தகாதவர்களும் ஓரளவு சமயத் தொடர்புடையனவான சில விதிகளைக் கடைப்பிடிக்கின்றனர். அதன்படி பிராமணர்கள் யாரும் ஹொலையர் குடியிருப்புக்களுள் புனிதப் படுத்தும் சடங்கை நிகழ்த்தாமல் அனுமதிக்கப்படுவதில்லை. அவ்வாறு அனுமதித்தால் அவர்களுக்கோ, தங்களுக்கோ பெரிய கேடு சூழலாம் என்பது இவர்கள் நம்பிக்கை. தாழ்ந்த சாதியாரைச் சூத்திரர்கள் எனப் பெயரிட்டு அழைத்தாலும், எதிர்காலத்தில் எப்பொழுதாவது அவர்கள் தங்களோடு சமூகத்தில் ஒத்தவர்களாக உயர்வார்கள் என்றதொரு தொலைநோக்கு நம்பிக்கை பழமை நெறியில் கண்டிப்பான பிடிப்புடைய இந்து சமயவாதிகள் கருத்தில் இருந்திருத்தல் கூடும். ஆனால் அவர்கள் எதிர்பார்த்ததை விட விரைவாக உயர்ந்த சாதியாரை தாழ்ந்த சாதியார் உலகியல் தொடர்பான சமூக நிலையில் எட்டிப் பிடிக்கும் காலம் நெருங்கியதாக விரைந்து கொண்டுள்ளது. செங்கல்பட்டு அல்லது சென்னையில் வழக்கிலிருக்கும் நில உரிமை முறையினும் மாறுபட்டதாக மைசூர் முறை அமைந்துள்ளமையால் ஹொலையர், மாதிகர் ஆகியோர் தங்கள் உரிமையாக நிலங்களை இங்கு அனுபவிக்க இயலும். மேலும் இவர்கள் குத்தகைக்காரர்களாக எல்லாப் பகுதிகளிலும் காணப்படுகின்றனர். பெங்களூர் மாவட்டத்தில் ஒரு ஹொலையன் அதிகப் படியாகச் செலுத்திய நில வரி ரூபாய் 270 ஆகும். குறைந்த அளவினதாக ஆறு பைசாவினை கோலாரிலும் மைசூரிலும் செலுத்தியுள்ளனர். தீண்டப்படாதவர்கள் நிலவரியாகச் செலுத்திய தொகை மூன்று லட்சம் ரூபாயுக்கும் மேற்பட்டதாகும். இதில் மூன்றில் இரண்டு பங்கிற்கு மேற்பட்டதை

ஹொலையர்களும், எஞ்சியதை மாதிகர்களும் செலுத்தியுள்ள னர் இந்தப் புள்ளிவிவரங்கள் இப்பிரிவினரின் நல வாழ்வு பற்றித் தெளிவுபடுத்தும் சான்றாக அமைகின்றன. சில தனிப் பட்ட ஹொலையர்கள் பணம் கடன் கொடுக்கும் வட்டிக் கடைக்காரராக உயரும் அளவிற்கு வளம்படைத்தவர்களாக இருக்கின்ற நிலையினையும் எடுத்துக் காட்ட முடியும். காபித் தோட்டங்களும் அது தொடர்பான தொழில்களும் இவர் களுக்கு நல்வாய்ப்பை ஏற்படுத்தி உள்ளன. இங்கும் அங்குமாக இவர்கள் பஜனை மடங்களை ஏற்படுத்தி அவ்வப்போது அங்குக் கூடித் தங்கள் தெய்வங்களின் மீது பக்திப்பாடல்களைப் பாடி வருகின்றனர். தாழ்த்தப்பட்ட பிரிவினரான இவர்களுக்குக் கல்விக்கான வாய்ப்புக்கள் எளிதில் கிடைப்பதற்கான வசதி களைச் செய்து தரத் தொடக்க முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன.

தென் கன்னட மாவட்டக் கையேட்டில் தென்கன்னட மாவட்டத்தினைச் சார்ந்த ஹொலையர்கள் பற்றிப் பதியப் பட்டுள்ள செய்திகள் வருமாறு:- "இந்த மாவட்டத்தைச் சேர்ந்த பண்ணை வேலை செய்யும் கூலிகள் ஹொலையர்கள் எனப் படும் பறையன்களே. மூலத ஹொலையர், சாலத ஹொலையர் என இவர்கள் இரு பிரிவினராக உள்ளனர். முன்னவர் பரம் பரை பரம்பரையாகப் பண்ணையோடு பிணைக்கப்பட்ட அடிமைகள். பின்னவர் தங்கள் பண்ணையாரிடம் கடன் பட்டுள்ள காரணத்தால் அவருக்கு அடிமையாகப் பிணைக்கப் பட்டுள்ளனர். இன்று இந்த இரண்டு பிரிவினருக்கும் இடையே அதிக வேறுபாடு பாராட்டப் படுவதில்லை. இரு பிரிவினரும் தங்கள் பண்ணையாரை மாற்றிக் கொள்கின்றனர். மூலத பிரிவினர் இப்பொழுது அடிமையாக இல்லாவிடினும் சாலத ஹொலையர் போலவே கடன்பட்டவர்களாக உள்ளனர். தன் னுடைய புதிய பண்ணையார் அவனுடைய கடனை ஏற்றுக் கொண்டால்தான் இவன் பழைய பண்ணையாரை விட்டு விலக முடியும். இக் கூலிகள் என்றும் கூலியினைப் பணமாகப் பெறுவ தில்லை. சாலத ஹொலையர் மட்டும் சில சமயங்களில் கடனுக் கான வட்டிக்காக ஒரு சிறு தொகை பெறுவர். மற்றவர்களைப்

பொறுத்தவரை வட்டியானது முதலினைவிடப் பெருகியதாகவே இருக்கும். இவர்களுக்கு நெல்லோ, அரிசியோ கூலியாகத் தரப் படும். இப்பகுதியில் ஒரு சேர் எனப்படுவது 80 தோலா அளவினுக்குப் பக்கமாக இருக்கும். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகியோர் ஒரு நாளைக்குக் கூலியாகப் பெறும் அரிசியின் அளவு வருமாறு:-

ஆண்கள் 1 முதல் 2 சேர் வரை;

பெண்கள் 0.65 சேர் முதல் 2 சேர் வரை;

குழந்தைகள் 0.40 சேர் முதல் 1 சேர் வரை.

"எல்லாப் பகுதிகளிலும் தரப்படும் நாள்கூலி,மதியம் சோறு ஆகியவற்றோடு கூட ஆண்டுதோறும் இவர்கள் மேலும் சில வற்றைப் பெறும் உரிமை உடையவர்கள். மங்களூர் வட்டத்தை யும், கொண்டப்பூர் வட்டத்தையும் தவிர மற்ற இடங்களில் ஒவ்வொரு ஹொலையனுக்கும் குத்தகை ஏதும் இன்றி அரைக் கால் அல்லது மூன்றிலொரு பங்கு ஏக்கர் நிலம் அளிக்கப் படுகிறது. ஓரிரு தென்னை அல்லது பனை மரங்களையும் அவன் அனுபவிக்கலாம். சிலபோது ஒரு மா அல்லது பலா மரம் கூட அவனுக்கு உரிமையாக விடப்படுவது உண்டு. இவை அவனுக்கு ஆண்டொன்றுக்கு ஒரு ரூபாயிலிருந்து ஐந்து ரூபாய் வரையான வருமானத்தை ஈட்டித் தரலாம். மாவட்டம் முழுவதும் எல்லாப் பண்ணை அடிமைகளுக்கும் ஆண்டுக்கு ஒரு முறை வேட்டி, சேலை வழங்கப்படுகிறது. இதனுடைய பண மதிப்பு பெரியவர் களுக்கு ஒரு ரூபாயாகவும், குழந்தைகளுக்கு 6 அணாவாகவும் இருக்கும். குளிரும், ஈரமுமான மலைப் பகுதிகளினை அடுத்து வாழ்பவர்களுக்குக் குளிரிலிருந்து பாதுகாத்துக் கொள்ளக் கம்பளி வழங்கும் வழக்கமும் உள்ளது. மூன்று, நான்கு முக்கிய மான திருவிழாக்களின்போது ஒவ்வொரு பண்ணையாளுக்கும் அரிசி முதலிய உணவுப் பண்டங்களும், எண்ணெய், உப்பு ஆகியனவும் வழங்கப்படும். இதனை ஒரு குடும்பத்திற்காக ஒன்றாகத் தந்து விடுவதும் உண்டு. இவற்றினுடைய சராசரி மதிப்பு ஒருவருக்கு 1 ரூபாயாகவும் ஒரு குடும்பத்திற்கு 4 ரூபாய்

அளவிலுமாக இருக்கும். பிறப்பு, மணம், சாவு போன்ற நிகழ்ச்சிகளின்போதும் இவர்களுக்குப் பொருட்களைத் தருவர். இதன் மதிப்பு இடத்திற்கிடம் வேறுபடும். ஒரு குடும்பம் முழுவதுமே ஒரு பண்ணையோடு இணைக்கப்பட்டிருக்கும். அவர்களுடைய பணி தேவைப்படாத சமயங்களில் பண்ணையார் இவர்களை வேறு எங்கே வேலை உள்ளதோ அங்கே சென்று வேலை செய்ய வேண்டுமென எதிர்பார்ப்பார். உள்நாட்டுப் பகுதிகளில் எல்லாப் பருவங்களிலும் வெளியே சென்று வேலை செய்ய வாய்ப்பு இருக்காது. இவர்கள் பணி செய்ய வேலை ஏதும் இல்லை எனினும், இவர்களுடைய பண்ணையார் இவர்களுக்குக் கூலியினைத் தந்தேயாகவேண்டும். ஏதாவது ஒரு வேலையினைப் பண்ணையார் இவர்களுக்காகக் கண்டுபிடித்துக் கொடுத்து ஆண்டு முழுதும் இவர்களிடம் அவர் ஏதேனும் வேலை வாங்கியபடியேதான் இருப்பார்."

மைசூரிலுள்ள ஹசன் மாவட்டத்தைச் சேர்ந்த குல்வ்வாதியர், (குல்வாதியர்) அல்லது சாலவாதியர் பற்றிய குறிப்பில் காப்டன் ஜெ.எஸ்.எப் மெக்கென்சி எழுதியிருப்பதாவது*:- "ஒவ்வொரு ஊரிலும், ஊரின் எல்லைக்கு வெளியே ஹொலையர்குடியிருப்பான ஹொலிகிரி அமைந்திருக்கும். தொட்டால் தீட்டினை உண்டாக்கும் தாழ்ந்த சாதியாராக அவர்களை மற்றவர்கள் கருதுவதே இதற்குக் காரணமாகும் என நான் நினைக்கிறேன். ஹொலையர் கைகளிலிருந்து நேரே எதையும் பெற்றுக் கொள்ள விரும்பாத பிராமணன் அதற்கும் இதனையே காரணமாகக் கூறுகின்றான். எனினும், ஹொலைகிரியினுள் நுழைந்து அதன் வழியாக ஒரு செயலை மேற்கொண்டு எத்தகைய துன்பத்திற்கும் ஆட்படுத்தப்படாமல் சென்றால் அது தங்களுக்கு நல்ல அதிர்ஷ்டத்தைத் தரும் எனப் பிராமணர்கள் நம்புகின்றனர். இதற்கு ஹொலையர் எப்பொழுதும் கடுமையான எதிர்ப்பினைத் தெரிவிப்பர். அவர்களுடைய குடியிருப்பினுள் ஒரு பிராமணன் நுழைய முற்பட்டால் அவர்கள் கூட்டமாகக் கூடி அவனைச் செருப்பால் அடிப்பர். முன்பெல்லாம் இவ்வாறு

* இந்தியத் தொல்லியல். II, 1873. (Ind. Ant. II, 1873.)

அடிபடுபவர்கள் இறந்து போவதும் உண்டு. வேறு சாதியைச் சேர்ந்தவர்கள் ஹொலையர்கள் வீட்டு வாசற்படி வரையே அனுமதிக்கப்படுகின்றனர். அவர்கள் வீட்டினுள் நுழைய அனுமதிக்கப்படுவதில்லை. அப்படி நுழைந்தால் அது தங்களுக்குக் கெட்ட அதிர்ஷ்டத்தைக் கொண்டு வரும் என ஹொலையர் கருதுகின்றனர். எதிர்பாராது ஒருவன் அவர்கள் வீட்டிற்குள் நுழ்ழந்துவிட்டால் அந்த வீட்டிற்கு உரியவன் அவ்வாறு நுழைந்தவனுடைய துணியைக் கிழிப்பதோடு, அதன் ஒரு முனையில் கொஞ்சம் உப்பினை முடிச்சிட்டு அவனை வீட்டைவிட்டு வெளியேற்றுவான். இது அவ்வாறு நுழைந்தவனுக்கு வர இருக்கும் நல்ல அதிர்ஷ்டம் முழுவதையும் தடுத்து விடுவதோடு, அந்த வீட்டுக்காரனுக்கு வர இருக்கும் தீங்கிலிருந்தும் அவனைக் காப்பாற்றும் என நம்புகின்றனர். ஓர் ஊரில் வீடுடையவர்களாக வாழும் பல சாதியினரும் குல்வாதியினை அந்த ஊருக்கு உரிமை உள்ளவனாக ஏற்றுக் கொள்கின்றனர். அவன் அன்றும் இன்றும் ஒருவகையில் ஊராருடைய தலைவனாகவே கருதப்படுகின்றான். ஊர் எல்லைகள் பற்றிய பூசல்கள் மூளும்போது அது எங்கு எவ்வாறு அமைய வேண்டும் என சத்தியம் செய்து கூறுபவன் குல்வாதியே. அத்தகைய பூசல்களுக்குத் தீர்வு காணும் பழைய வழக்கம் வருமாறு:- அந்த ஊர் மண்ணினை உருண்டையாக்கி அதன் நடுவில் கொஞ்சம் தண்ணீரைத் தேக்கி அதனைத் தலையில் சுமந்தபடி ஊரெல்லைக் கோட்டின் வழியே குல்வாதி நடந்து செல்வான். அவன் சரியான எல்லைக் கோட்டில் நடப்பானாகில் அனைத்தும் நல்லபடியாக முடியும். அவன் எதிர்பாராத விதமாகத் தன் ஊர் எல்லையினைத் தாண்டி நடக்க நேரிட்டால் கூட, அவன் தலையில் உள்ள மண் உருண்டை தானே சிதறி உடையும். அவன் பதினைந்து நாள்களுக்குள்ளாக இறக்க நேரிடும். அவன் இல்லம் பாழ் மனையாகும். இவ்வாறு மக்கள் அனைவரும் பொதுவாக நம்புகின்றனர். ஊரெல்லையில் இறந்துவிடும் விலங்குகளின் தோல்கள் அனைத்தும் குல்வாதிக்கே உரியன. இதனால் அவன் ஒரு பெருந்தொகையை ஈட்டுகின்றான். இன்றுவரை ஊர்களின் இடையேயான எல்லைத் தகராறுகள் இவ்வாறாகத்தான் பெரும்பாலும் தீர்க்கப்பட்டு வருகின்றன. இரண்டு ஊர்களின்

குலவாதிகள் தங்களுக்குள் ஒன்றுபட்டு ஒரு முடிவு காண்பரேல் ஊரார் அதனைப் பற்றி எந்தக் குறையும் கூறமாட்டார்கள். தங்கள் முன்னோர் காலத்தில் ஒரு ஊரினை முதன் முதல் அமைக்கும்போது, கரு கல்லு எனப்படும் கல்லினை அமைப்பர் எனவும், ஊர்ப் படேல் ஆண்டுக்கு ஒருமுறை இக் கல்லுக்குப் படையல் இடுவான் எனவும் இவர்கள் கூறுகின்றனர். படையலுக்குப் பின் படையலிடப்பட்ட அரிசி முதலியப் பண்டங்களை எடுத்துச் செல்லும் உரிமை உடையவன் குல்வாதியே. படேல் இல்லாத ஊர்களில் குல்வாதியே இச்சடங்கினை நிகழ்த்துவான். ஹொலையரே இந்த மண்ணில் முதலில் குடியேறியவர்களாதல் வேண்டும் என நான் உறுதியாக நம்புவதற்கான காரணமாக இருப்பது ஊரில் யார் இறந்தாலும், அவனுடைய நண்பர்களிடமிருந்து ஒரு தொகையினைக் குல்வாதி பெற்று வருவதுதான். இதனை எனக்கு ஒருவர் வேறுவிதமாக, அழுத்தம்பட, இறப்பவர்களைப் புதைப்பதற்கான நிலத்தை அவர்கள் குல்வாதியிடமிருந்து பெறுகின்றனர்'' எனக் கூறினார். இத்தொகை இன்றும் கன்னட மொழியில் 'நெல ஹாக' என்றே கூறப்படுகிறது. நெல என்றால் பூமி, ஹாக என்பது ஓர் அணா இரண்டு பைசா. முசராபாத்தில் ஊர்த் தலைவனுடைய உறவினர்கள் இறப்பார்களேயானால், அவர்களிடமிருந்து குல்வாதி இத்தொகையினை வசூலிப்பதில்லை. இங்குக் குல்வாதி சமூகப்படிநிலையில் உயர்ந்தவனாக மதிக்கப் படுகிறான். அவன் படேலின் குடும்பத்தில் ஒருவனாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளான். படேலின் குடும்பத்தில் சாவு நிகழுமானால் குல்வாதியும் தன் தலையை மொட்டையடித்துக் கொண்டு துக்கம் கொண்டாடுவான். குல்வாதி இறந்துபோனவன் அணிந்திருந்த ஆடைகளையும், பித்தளைக் குண்டா ஒன்றினையும் அவனுடைய உறவினரிடமிருந்து பெறுவான். புதைப்பதற்கான கட்டணத்தொகையைப் பெறுவதை மேற்பார்ப்பவனாக குல்வாதிக்குத் தலைவனாக ஒருவன் உள்ளான். சுடுகாட்டுச் சித்தர் என்பவரின் முகவருக்கு இவன் ஆண்டு தோறும் ஒரு கோழி, ஒரு பணம், ஒரு பிடி அரிசி ஆகியனவற்றைச் செலுத்த வேண்டும். (முந்து நூல்).''

நான் நேரில் சநதித்த ஒரு குல்வாதி, காளையின்

உருவமும், பல தலை நாகத்திற்குக் கீழ அமைந்த லிங்க உருவமும் கொண்ட ஒரு பித்தளை அகப்பையினைக் கையில் வைத்திருந்தான். அந்தச்சாதிகளில் திருமணங்கள் நடைபெறும்பொழுது இந்த அகப்பை அவர்களிடையே சுற்றி எடுத்துக் கொண்டு செல்லப்பட அதில் அரிசி, காசு, வெற்றிலை ஆகியவற்றை நிரப்புவர். அதற்குரிய முத்திரை அடையாளம் அதன் கைப்பிடியில் பொறிக்கப்பட்டிருக்கும். இதற்கான ஒவ்வொரு சாதிக்கும் உரிய முத்திரை அடையாளங்கள் வருமாறு:-

| | | |
|---|---|---|
| நெசவாளர்கள் | — | ஓடக்கட்டை, தூரிகை |
| பெஸ்தர் | — | மீன் |
| உப்பாரர் | — | மண்வெட்டி, உப்பு அள்ளும் கூடை |
| கொரமர் | — | கூடை, மூங்கில் பாக்கும் கத்தி |
| ஈதிகர் | — | கத்தி, தென்னை மரம் ஏற உதவும் கருவிகள் |
| ஹசாம் | — | கத்தரிக்கோல், சவரக்கத்தி, தீட்டுக்கல் |
| காணீகர் | — | செக்கு |
| மதவாலி | — | வண்ணான் பானை, அடுப்பு, கொட்டாப்புளி, கல் |
| வக்கலிகர் | — | கலப்பை |
| செட்டி | — | தராசு, கூடை |
| குருபர் | — | கம்பளி வெட்டும் கத்தரி |

கொலசிங்கநாத எனப்படும் தங்கம், வெள்ளி அல்லது செம்பால் செய்யப்பட்ட சிறிய சீழ்க்கையைக் கம்பளி மயிர்க் கயிற்றால் பதினாலு சுற்றுச்சுற்றி ஹொலையர், வக்கலிகர் பெஸ்தர், அகசர், குருபர் ஆகிய சாதியார் கழுத்தில் அணிந்து கொள்வர். இச் சாதியார் அனைவரும் பைரா எனப்படும் தெய்வத்தின் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள். நாகமங்கலத்திற்கு அருகே உள்ள சுஞ்சின் கிரியில் அத்தெய்வத்தின் பெயரால் ஒரு பைராகியால் இச் சீழ்க்கை இச்சாதியார் கழுத்தில் அணிவிக்கப்படுகிறது.

குழந்தைகளின் பெற்றோர் தங்களுடைய வேண்டுதலை நிறை வேற்றிக் கொள்ளவே இச் சடங்கினைச் செய்கின்றனர். இதற் காகச் சுமார் நூறிலிருந்து இருநூறு ரூபாய் வரை செலவழிக் கப்பட வேண்டியிருக்கும். இந்த வேண்டுதலை நிறைவேற்றும் வரை ஒருவன் மணம் முடித்துக் கொள்ளக் கூடாது. இச் சடங்கில் அதனை மேற்கொள்பவனுடைய வலக் காதின் மடலில் பைராகி, தீட்சாசூரி எனப்படும் ஊசியால் ஒரு துளை இடுவான். அதனால் ஏற்படும் காயத்திலிருந்து பத்துச் சொட்டுக் குருதி தரையில் விழும். (பார்க்க: ஜோகி புருஷ) அதன்பின் கழுத்தில் சீழ்க்கை அணிவிக்குமுன் அவனைக் குளிக்கச் செய்வர். இவ்வாறு சீழ்க்கை அணிவித்ததன் பயனாக அவன் தன் சாதியினுள் ஒரு பூசாரியின் நிலைக்கு உயர்த்தப் பட்டவனாகின்றான். திருவிழாக்கள், சடங்குகள் ஆகியவற்றின் போது விருந்தில் உணவு உண்ணவும், பிச்சை வாங்கவும் அவனுக்கு இதனால் உரிமை ஏற்படுகின்றது. உணவு உண்ணும் முன்னும், நாள்தோறும் செய்யும் வழிபாட்டின் முன்னும் இவன் மெல்லிய ஒலி எழுப்பும் தன் சீழ்க்கையை ஊதுவான்.

1901 மைசூர் கணக்கெடுப்பு அறிக்கையில் ஹொலையர் மணம் பற்றி, "விருந்து ஏற்பாட்டைத் தவிர அதில் வேறு சடங்கு ஏதும் இல்லை. அப்போது மணமகன் மணமகள் கழுத்தில் பொட்டினை (தாலி) அணிவிப்பான். ஒருவன் தன் மனைவியை ஒழுக்கம் தவறிய நடத்தைக்காக மட்டுமே மண முறிவு செய்யலாம். கைம்பெண்களின் மறுமணம் அனுமதிக்கப் படுவதில்லை. எனினும் கைம்பெண் ஒருத்தி ஓர் ஆடவனோடு சேர்ந்து வாழ்வதைச் சாதியைச் சேர்ந்தவர்கள் கண்டும் காணாமலும் இருப்பர்" எனக் கூறப்பட்டுள்ளது. கங்கதிகார ஹொலையர் மணம் பற்றி எனக்குத் தெரிவிக்கப்பட்ட செய்தி களின்படி ஒரு சிறுமி மணம் முடிக்கும்முன் பூப்பு அடைவாளா யின் அவள் தன் விருப்பம் போல் எந்த ஆடவனுடன் வேண்டு மாயினும் வாழ்க்கை நடத்தலாம் என அறிந்தேன். அதன்பின் அந்த ஆடவன் பரிசப் பணமான பன்னிரண்டு ரூபாயினைச் செலுத்துவானாயின் அவர்கள் உறவு முறைப்படியானமண வாழ்க்கையாக ஏற்றுக் கொள்ளப்படும். இச் சடங்கின் முதல்

நாள் மணப் பெண்ணை அவள் தேர்ந்தெடுக்கும் கணவன் இல்லத்திற்கு அழைத்துச் செல்வர். மணமக்களின் இல்லங்களைச் சேர்ந்தவர்கள் இன்னிசை முழங்க ஒவ்வொரு குழுவும் நான்கு மண்பானைகள், அரிசி, வெற்றிலை, பாக்கு முதலியனவற்றை உடன் எடுத்துக் கொண்டவர்களாக ஓர் ஆற்றினுக்கோ குளத்திற்கோ செல்வர். கமுகம்பாளையால் அலங்கரிக்கப்பட்ட பானைகளில் நீரெடுத்து வந்து, ஒன்றாக இணையப் போகும் மணமக்கள் இல்லத்தில் வைப்பர். இது தெய்வத்தை அழைக்கும் சடங்கு எனப்படும். இரவில் மஞ்சள் துண்டும், இரும்பு மோதிரமும் இணைக்கப்பட்ட வெள்ளை, கறுப்புக் கம்பளி நூலாலான கங்கணத்தை மணமக்கள் கரங்களில் அணிவிப்பர். மறுநாள் காலை மணமகன் கைகளில் வெற்றிலையைத் தந்து அதனோடு கைகூப்பியவனாக அவனை மூன்றுப் பித்தளைக் குடங்களின் முன் அமரச் செய்வர். அக் குடங்களின் கழுத்தையும் அவன் தலையினையும் பருத்தி நூல் கொண்டு சேர்த்துச் சுற்றுவர். மணமான பெண்கள் அவன் தலையில் எண்ணெய், மஞ்சள் ஆகியன வைத்தபின அவனைக் குளிக்கச் செய்வர். அதன்பின் அவனை ஒரு மரத்தடியில் நிறுத்தி நாவல் மரத்தின் (*Eugenia Jambolana*) இலைக் கொத்து ஒன்று பால் கம்பத்தோடு இணைக்கப்படும். மணமகளுக்கும் இதனை ஒத்த சடங்கு நடத்தப்படும். அதன்பின் மணமகன் மணப் பந்தலுக்கு அழைத்துச் செல்லப்படுவான். அங்கு மணமக்கள் மாலை மாற்றிக் கொள்வதோடு எள், சீரகம், ஆகியனவற்றை ஒருவர் தலையில் மற்றவர் தூவிக் கொள்வர். தாலியினைக் கூடியுள்ளவர்கள் வாழ்த்தும் படியாகச் சுற்றிலும் காட்டியபின் மணமகன் மணமகள்கழுத்தில் அதனைக் கட்டுவான். அதன்பின் மணமக்களின் இணைந்த கரங்களின் மீது பால் வார்க்கப்படும். மூன்றாம் நாள் கங்கணங்கள் அவிழ்க்கப்பட்டபின் பால்கம்பம் தூர எறியப் படும்.

ஹொலையர்களிடையே புறமணக்கட்டுபாடு உடைய குலப் பிரிவுகள் மிகுதியாக உள்ளன. அவற்றுள் மாதிரிக்குச் சில வருமாறு:-

| | |
|---|---|
| ஆனெ - யானை | ஹசபு - பொதி சாக்கு |
| மாலே - மாலை | மலிகெ - மல்லிகை |
| நேரளி - நாவல் | தினெ - தினை |
| ஹுட்ட - புற்று | சத்ரி - குடை |
| ஹாலு - பால் | முல - முயல் |
| கவணெ - கவண் | ஜேனு - தேன் |

1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் "577, 166 ஹொலையர்களில் 351 பேர் தங்கள் கோத்திரங்களைப் பதிந்துள்ளனர் எனக் கூறப்பட்டுள்ளது. அரிச்சந்திரா, காளி, யெக்கெ, கரடி என்பன அக்கோத்திரப் பெயர்களுள் சிலவாம். இவ்வாறு கோத்திரங்கள் பதிந்து கொள்வதன் வழி இவர்கள் சமூகத்தில் உயர்ந்த சாதியாரைப் பார்த்து தங்களைத் தாங்களே உயர்த்திக் கொள்ளக் கற்றுக் கொண்டனர்" எனக் கூறப்பட்டுள்ளது.

சில ஹொலையர் குடும்பங்கள் ஹலே மக்களு எனக் கங்கதிகார வக்கலிகரின் குழந்தைகள் எனப் பொருள்படும்படி அழைக்கப்படுகின்றன. இக் குடும்பங்கள் கங்கதிகார வக்கலியருக்குத் திருமணத்தின்போது மணமகன் செருப்பைத் தூக்கிச் செல்லுதல், பல இடங்களுக்கும் சென்று செய்தி தெரிவித்தல், சுடுகாட்டிற்கு நெருப்பினை எடுத்துச் செல்லுதல், எரியும் பிணத்தைப் பார்த்துக் கொள்ளுதல் போன்ற பல பணிகளைச் செய்கின்றன. இத்தகைய பணிகளை ஹொலையர் செய்ய அவர்களுடைய குலமும் வக்கலிகர் குலமும் ஒரே குலமாக இருக்க வேண்டும் எனக் கூறப்படுகின்றது.

1901 கணக்கெடுப்பு அறிக்கையில் பலகை (வலக்கை), பாகுட, பொகர அல்லது பையாகார, குச அல்லது உப்பாரர், மாய்ல, ராணிவய (அரசிக்குரியது) என்பன ஹொலையர்களின் உட்பிரிவுகளாகப் பதியப்பட்டுள்ளன. இவற்றுள் பலகை, வலக்கைப் பிரிவினைச் சேர்ந்தவர்கள் என்பதனைக் குறிக்கும் பொருளுடைய சொல்லாகும். பாகுடர் தங்களை மற்றவர்கள் அப்பெயரால் அழைப்பதனை விரும்புவதில்லை. அவர்கள் தங்களை ஐம்பதுகுலத்தவரு என ஐம்பது குடும்பத்தவர் என்ற பொருளில்

அழைத்துக்கொள்கின்றனர். இவர்கள் ஐம்பதுபலிகளாக அல்லது குடும்பங்களாகப் பிரிக்கப்பட்டவராதல் கூடும். இந்தப் பலிகள் இந்தக் குடும்பங்களைச் சேர்ந்த இறந்துபோன பெண் மூதாதையர்களின் பெயரால் அமைந்தவை. பேகரர் அல்லது பையாகாரர் என்பது ஹொலையரை அழைக்கக் கன்னட லிங்காயதரர்கள் பயன்படுத்தும் மற்றொரு சொல்லாகும். மாய்ல குப்பை எனப் பொருள்படும். இது மாலர்களிடையே உள்ள வண்ணாருக்கான மைலாரி என்ற பிரிவினை ஒத்தவர்களான ஹொலைய வண்ணாரைக் குறிப்பதாகலாம்.

துளு மொழி பேசும் ஹொலையர்களைக் கன்னடம் பேசும் ஹொலையர்களோடு குழப்பிக் கொள்ளக் கூடாது. தென் கன்னடத்தில் ஹொலையர் என்ற சொல் தீட்டுப்படுத்துபவரைக் குறிக்கும் பொதுச் சொல்லும் ஆகும். நல்கெயர், கொறகர் மற்றும் தங்களுள் வேறுபாடுகளை உடைய மூன்று ஹொலையர் பிரிவினரையும் இது ஒரு சேரக் குறிக்கும். அந்த மூன்று ஹொலையர் பிரிவுகளாவன:-

1. பாகுட அல்லது முண்டல - வேற்று மனிதன் ஒருவன் ஒரு பெண்ணைப் பார்த்து, அவளுடைய கணவன் வீட்டிலிருக்கின்றானா எனக் கேட்க விரும்பினால் அவளுடைய பாகுடர் வீட்டிலிருக்கிறாரா எனக் கேட்க வேண்டுமேயன்றி அவளுடைய முண்டலர் வீட்டில் இருக்கிறாரா எனக் கேட்டல் கூடாது.

2. மேரா அல்லது முகயரு, இதனைக் கைபுட எனவும் அழைப்பர்.

3. மாரி அல்லது மாரி மனுசரு.

இவற்றுள் முதல் இரு பிரிவினரும் மாட்டிறைச்சியை உண்பதில்லை. ஆகையால் அவர்கள் தங்களை மாரி பிரிவினரைவிட உயர்ந்தவர்களாகக் கருதுகின்றனர்.

பாகுடர் அளிய சந்தானதாய உரிமை முறையினை(பெண்கள் வழி உடமை உரிமை போதல்) மேற்கொள்கின்றனர். ஒருவன் ஏதேனும் சொத்தினை விட்டுச் செல்லின் அது அவனுடன்

பிறந்தவள் மகனுக்குரியதாகும். இவர்கள் இறந்த பசுக்கள், கன்றுகள் ஆகியவற்றைத் தொடமாட்டார்கள். கன்று ஈன்ற பசுவின் நச்சுக் கொடியையும் இவர்கள் தொடமாட்டார்கள். செருப்புக்கான தோலினையும் இவர்கள் தொடுவதில்லை. நான்கு கால்களை உடைய நெல் அடிக்கும் கட்டில், நாற்காலி முதலிய வற்றையும் இவர்கள் தூக்கிச்செல்ல மாட்டார்கள். அவ்வாறு தூக்கும்படி கட்டாயப்படுத்தினால் நான்கு கால்களில் ஒரு காலினை உடைப்பார்கள். அல்லது ஒரு கட்டையினைக் கட்டிலோடும் நாற்காலியோடும் சேர்த்துக் கட்டி ஐந்து கால் உடையனவாகச் செய்வர். பெண்கள் ஒரே நீண்ட சேலையினை அணிவார்களே அன்றி மற்ற ஹொலியரைப் போலச் சேலையினை இரண்டு துண்டுகளாக அணியமாட்டார்கள். பிலிமக்கள், ஜாதர், பரவர், நல்கெயர் ஆகிய சாதியார் தயாரித்த உணவினைப் பாகுடர் உண்ணமாட்டார்கள். இவர்கள் சாதித் தலைவன் முக்கரி என அழைக்கப்படுவான். இப்பதவி பரம்பரையாக மேற்கொள்ளப்படுவதாயினும் பண்டர்களின் குட்டிணய பதவியைப் போலச் சாதித் தலைவன் வாழும் வீட்டோடு தொடர்புடையது. அவன் உரிய அந்த வீட்டினை விட்டுக் குடி பெயர்ந்தால் பதவியை இழப்பான். ஊரார் அனைவரும் ஒரு மனதாக முடிவு செய்து வேறிடத்திற்குக் குடிபெயர்ந்த ஒருவனைத் தொடர்ந்து பதவியில் வைக்கும் உரிமை உடையவர்கள். சில விடங்களில் முக்கரிக்கு ஐம்மண, பொந்தாரி என்ற இரு உதவியாளர்கள் இருப்பர். இவர்களுள் பின்னவன் சாதிக் கூட்டங்களில் கள்ளினை அனைவரும் தரும் பணியினைச் செய்வதற்குரியவன். முக்கியமான சடங்குகளின்போது முக்கரியை மிகுந்த மரியாதையோடு நடத்த வேண்டும். பேய் ஏறிய சாமி ஆட்டக்காரன்கூடத் தன்னுடைய வாளால் அவனைத் தொட்டு மரியாதை தெரிவிக்கக் கடமைப்பட்டவனாவான். ஒழுக்கம் தவறிய நடத்தை தொடர்பான வழக்குகளில் குடி சுத்தம் எனப்படும் தூய்மைபடுத்தும் சடங்கு மேற்கொள்ளப்படும். தவறிழைத்த பெண்ணின் உறவினர்கள் ஏழு குடிசைகளைக் கட்டுவர். அவள் அவற்றினுள் நுழைந்து சென்றபின் அவை எரியூட்டப் பெறும். இத்தகைய குடிசுத்தம் சடங்கு நடைபெற உள்ளதைப் பற்றிப் பொந்தாரி, சாதியார் அனைவருக்கும்.

தெரிவிக்க வேண்டும். இச்சடங்கு நடக்கும்போது குறைந்தது 280 பேராவது கூடவேண்டும் என்று சொல்லப்படுகிறது. அவள் குடிசைக்குள் நுழையத் தொடங்குமுன் அவர்கள் கோயில் களிலும் பூதஸ்தானங்களிலும் இருந்து கொண்டுவரப்பட்ட புனித நீரையும் கோமயத்தையும் அவள் மீது தெளிப்பர். அவள் தலைமுடியில் ஒரு சிறு கொத்து, கண் இமை மயிர்களில் சில, விரல் நகங்கள் ஆகியன அக் குடிசையில் இடப்படும். சில இடங்களில் குற்றம் இழைத்தவள் உப்பு நீரையும் சாணித் தண்ணீரையும் சற்று அதிகமாகவே குடிக்கும்படி வற்புறுத்தப் படுவாள். அவள் உறவினர்கள் ஊர்க் கோயிலுக்கு ஒரு சிறு தொகையினைத் தண்டமாகச் செலுத்த வேண்டும். குடிசை களில் நுழையும் இந்தக் கடுமையான நடைமுறை தென் கன்னடத்தைச் சேர்ந்த கொறகர்களாலும் மேற்கொள்ளப்படு கிறது. "இத்தகைய சடங்கு, சாதி விலக்குப் பெற்றவர்கள மீண்டும் சாதியில் சேர விரைவாக ஏழு பிறவிகளைக் கடந்து மீண்டும் தங்கள் தகுதியினைப் பெறுவதன் அடையாளமாகக் கொள்ளப்படுவதாகக் கருதலாம். ஒரு குலத்துக்குள் மணம் புரிந்து கொண்டவர்கள் அந்தப் பாவத்தினைப் போக்க ஏழு பிறவிகள் எடுக்க வேண்டும் என மனு விதித்துள்ள விதியோடு ஒப்புமை உடையதாக ஏழு குடிசைகளின் வழி நுழையும் இச்சடங்கைக் கொள்ளலாம்" எனத் திரு ஆர்.இ. என்தொவன் கருதுகின்றார்.

கொடபப்பு, கம்பெர்லு (அல்லது கண்கிலு) என்பனவே பாகுடர் சிறப்பாக வழிபடும் தெய்வங்கள் (பூதங்கள்). ஜுமாதி, பஞ்சுருளி, தனிமணியய்யா ஆகியனவற்றையும் இவர்கள் வழிபடு கின்றனர். கொடபப்புவிற்கு வழிபாடு இயற்றும்போது அந்த பூதத்தின் வேடம் தாங்க நல்கெயர் அமர்த்தப்படுகின்றனர். ஆனால் கம்பெர்லு தெய்வ வழிபாட்டின்போது பாகுடர் தாங்களே தலையிலும், இடையிலும் தென்னோலைகளைக் கட்டிக்கொண்டு அப்பூதத்தின் வேடத்தைத் தரிக்கின்றனர். இவ்வாறு வேடந்தாங்கித் தெருக்கள் வழியே சென்று பிச்சை கேட்பது இவர்கள் வழக்கம். கம்பெர்லுவே பெரியம்மை, காலரா முதலான தொற்று நோய்களைப் பரப்புவதாக நம்புகின்றனர்.

பாகுடர்களின் மண உறுதிச் சடங்கில் இரு வீட்டையும் சேர்ந்த ஒரு சிலர் மணமகளாவதற்குரியவள் இல்லத்தில் கூடிய பின் இரு சாராரையும் சேர்ந்த முக்கரியர், வெற்றிலை பாக்கை மாற்றிக் கொண்டபின், நங்கள் உள்ளங்கைகளைத் தட்டி, எல்லாச் சச்சரவுகளும் தீர்ந்து திருமணம் நல்ல முறையில் நடைபெற வேண்டும் எனக் கூறுவர். கூடியுள்ளவர்களுக்குக் கள் வழங்கப்படும். மணமகளைச் சேர்ந்தவர்கள் சிலர் மணமகன் பெற்றோர் இல்லம் சென்று அவர்களிடமிருந்து அப்போதோ அல்லது அதன் பின்னரோ ஒரு வெள்ளைச் சேலையையும், நான்கு ரூபாயினையும், மூன்று கட்டு அரிசியினையும் பெறுவர். மண நாளன்று கூடியுள்ள உறவினர்கள் வீட்டின் முன் அமர்வர். அவர்கள் வெற்றிலை போட்டுக் கொள்ள வெற்றிலை வழங்கப் படும். ஒரு புதிய பாயினை விரித்து அதில் மணமக்கள் நிற்பர். அந்தப் பகுதியில் ஒரு கொடபப்புதானம் (கோயில்) இருக்கு மாயின் அந்த கோயிலுக்குரிய அணிகளை மணமகன் அணிந்து கொள்வான். வழக்கமாகக் கோயிலில் வைக்கப்பட்டிருக்கும் சிவப்புக் குல்லாயை அவன் தன் தலையில் அணிந்து கொள் வான். கையில் கோயிலுக்குரிய வாளையும் ஏந்துவான. முக்கரி அல்லது சம்மண்ணா பர்கூர், மங்களூர், சிவாலி, சித்பாடி, முதனிதம்பூர், உதயவரம் ஆகிய ஊர்களைச் சேர்ந்த ஐந்து குழுவினரும் அங்கு உள்ளனரா எனக் கேட்பான். உடனே ஐவர் முன் வந்து அவ்வாறு வந்திருப்பதாகக் கூறுவதோடு, "சமூகத் தால் தடை செய்யப்பட்ட எல்லாத்தவறான உறவுகளும் துண்டிக் கப்பட்டு அழிந்தொழியட்டும்" என்றும் கூறுவர். ஒரு தட்டில் அரிசியும் விளக்கும் மணமக்கள் முன் வைக்கப்படும். கூடியிருப் பவர்கள் மணமக்கள் மீது அரிசியினைத் தூவுவர். பின் அனை வரும் கள்ளுக்கடைக்குச் சென்று கள் குடிப்பர். பின் வீட்டுக்குத் திரும்பி விருந்துண்பர். அப்போது மணமகனும் அவன் மணத் தோழனான மாமன் மகனும் மட்டும் உட்கார வைக்கப்படுவர். மணமகன் முன் இலையில் சோறு குவிக்கப்படும். அதன்மீது ஐந்து வரிசையில் மீன் கறி வைக்கப்படும். முதலில் மணமகன் அதில் ஒரு பகுதியை உண்பான். எஞ்சியதை அவன் தோழன் உண்டு முடிப்பான். மணமக்கள் மீண்டும் ஒரு முறை பாயில் நிற்பர். முக்கரி அவர்கள் கரங்களை இணைத்து வைத்து

"ஒழுக்கந் தவறிய மணஉறவு எதனையும் இனி நீங்கள் மேற் கொள்ள கூடாது. தடைசெய்யப்பட்ட உறவுகளைத் தவிர்க்க வேண்டும்" எனக் கூறி இணைக்கப்பட்ட கரங்களின் மீது அருகம்புல்லினைக் கொண்டு (*Cynondon Dactylon*) தண்ணீர் தெளிப்பர்.

இறந்துபோன பாகுடன் உடலை மாமரப் (*Mangnifera indica*) பட்டைகள் ஊற வைக்கப்பட்ட வெந்நீரில் குளிப் பாட்டுவர். இறந்தவர்கள் புதைக்கப்படுகின்றனர். சாவுக்குரிய இறுதிச் சடங்குகளை நிகழ்த்துவதற்கான நாள் முக்கரி அல்லது சம்மண்ணாவால் முடிவு செய்யப்படும். அன்று இறந்து போன வருக்குச் சோற்றினைப் படைத்து அனைவரும் 'முரியோ, முரியோ' எனக் கூக்குரலிடுவர். இறந்தவருடைய மகன் முகம் மழித்துக் கொண்டபின், முகத்தினை ஒரு துணியால் மூடியவ னாகச் சோற்றினைத் தலையில் சுமந்தபடி அதற்காக அமைக் கப்பட்ட குடிசைக்குக் கொண்டு செல்வான். அதனைக் கீழே வைத்து அனைவரும் கொஞ்சம் சோற்றினை எடுத்து அக் குடி சையுள் வீசுவர்.

மேர அல்லது முகயரு ஹொலையர் பாகுடரைப் போலவே மாட்டிறைச்சியைத் தின்பதை விலக்குவர். தோலினை எந்த நிலையிலும் தொட மறுப்பர். இவர்கள் நான்கு கால்கள் உள்ள பொருள்களைத் தூக்கிச் செல்ல மறுப்பதில்லை. இவர்கள் தாய் மொழி துளுவாயினும் இவர்கள் மக்கள் வழித் தாய உரிமை முறையினையே (ஆண்கள் வழி) பின்பற்றுகின்றனர். சாதித் தலைவன் குருனெரு என அழைக்கப்படுவான். அவன் தன் பதவியின் சின்னமாக வெள்ளிப் பூணிட்ட பிரம்பு ஒன்றினை வைத்திருப்பான். இவனுடைய பதவி இவனுக்குப் பின் இவன் உடன்பிறந்தவள் மகனைச் சேராது இவனுடைய மகனையே சேரும். திருமணம் பததான என அழைக்கப் படுகிறது. மணச்சடங்குகள் மாரி ஹொலையர் மணச் சடங்கு களை ஒத்தவை. இறந்தவர்கள் புதைக்கப்படுகின்றனர். இறுதிச் சாவுச் சடங்குகள் (பூசா அல்லது சாவு) பன்னிரண்டு அல்லது பதினாறாம் நாள் நிகழ்த்தப்படும். சாதியைச் சேர்ந்த சிலருக்கு விருந்து அளிப்பதோடு இறந்து போனவருக்காக வீட்டிலும், புதைகுழியிலும் சோறு படைக்கப்படும்.

மாரி அல்லது மாரி மனுசரு ஹொலையரைப் பாகுடர் சிலபோது காரதி என அழைப்பர், சில மலையாளச் சாதியாரைப் போல ஹொலையர்களும் தங்கள் இல்லங்களுக்கெனச் சிறப்பான தனிப் பெயரை உடையவர்களாக உள்ளனர். மாரி ஹொலையர் குடிசைகள் இதன்படி கேலு எனவும், மேர ஹொலையர் குடிசைகள் பட்டா எனவும் வழங்கப்படும். மாரி ஹொலையர் சாதித் தலைவர்கள் மூளிய, ரூபால்டியாடி, கல்லாடி என அழைக்கப்படுவர். சாதித் தலைவனின் பதவி உரிமை பெண்கள் தாய வழிப்பட்டது. பஞ்சாரி, ஜும்மாதி போன்ற பல பூதத் தெய்வங்களுடன், மாரி ஹொலையர் கட்டாதே, காணாதே என்ற இரண்டு சிறப்புப் பூதங்களையும் வழிபடுகின்றனர். இந்த இரண்டையும் இவர்கள் தங்கள் மூதாதையர் எனக் கருதுகின்றனர். அவர்கள் பூமியில் வந்து சாதியைச் சேர்ந்த யார் மேலேனும் சாமியாக ஏறித் தங்கள் வருகையினை உணர்த்துவார்கள் என இவர்கள் நம்புகின்றனர். இவ்வாறு சாமி ஏறப் பெறுபவர்கள் தாரிபூணெயி என அழைக்கப்படுவதோடு, அச் சமயத்தில் பூதக்கோயிலில் உள்ள வாளினையும் மணியினையும் எடுத்துக் கொள்ளும் உரிமையினையும் பெறுவர்.

மாரி ஹொலையர் திருமணங்கள் ‘பொறதாவு’ எனப்படும். மண உறுதிப்பாட்டுச் சடங்கில் இரு வீட்டாரையும் சேர்ந்த சாதித் தலைவர்கள் வெற்றிலை பாக்கு மாற்றிக்கொள்வர். பெண்ணுக்கான பரிசத் தொகை இரண்டு சிப்பம் அரிசியும், ஒரு சிப்பம் நெல்லும் ஆகும். மணநாளன்று மணமகனும் அவனைச் சேர்ந்தவர்களும் மணமகள் இல்லம் செல்வர். அவர்கள் தங்களோடு ஐந்து சேர் அரிசி, இரண்டு உலோக வளையல்கள், ஓரிரு தேங்காய், ஒரு சீப்பு, ஒரு வெஉளைச் சேலை ஆகியன அடங்கிய கூடையை எடுத்துச் சென்று அதனைப் பெண் வீட்டினைச் சேர்ந்த சாதித் தலைவனுக்குக் காட்டுவர். இரு வீட்டினைச் சேர்ந்த சாதித் தலைவர்களும் வெற்றிலை பாக்கினைக் கூடியுள்ளவர்களுக்கு வழங்கும்படி கூறுவர். எல்லோரும் உண்டு முடித்தபின் குடிசையின் வாயிலில் ஒரு பாய் விரித்து மணமக்கள் அதன்மீது நிற்பர். மணமகன் தன் கையில் ஒரு வாள் வைத்திருப்பான. அவர்கள் தலைமீது அரிசி தூவியபின்

அவர்களுக்குப் பணம் வைத்துத் தருவர். இரண்டு வீட்டிற்கும் உரிய சாதித் தலைவர்களும் மணமக்கள் கரங்களை உயர்த்தி ஒன்று சேர்ப்பர். மணமகள் மணமகனைவிடச் சற்று உயரமாகத் தோன்றும்படி உயரத் தூக்கப்பட்டு பின்வீட்டினுள்ளேகொண்டு செல்லப்படுவாள். மணமகன் அவளைத் தொடர்ந்து செல்ல முற்படும்போது அவனுடைய மைத்துனனால் தடுத்து நிறுத்தப் படுவான். அவனுக்கு மணமகன் வெற்றிலைப் பாக்குத் தந்த பின் அவனைத் தள்ளியபடி குடிசையுள் நுழைவான்.

மாரி ஹொலையர் சாதிச் சிறுமி ஒருத்தி பூப்படைந்தால் அவள் ஒரு குடிசையினுள் பன்னிரண்டு நாள்கள் தங்கியிருக்க வேண்டும். அதன்பின் சாதியைச் சேர்ந்தவர்களை அழைத்து விருந்து வைப்பர். தரையில் வரையப்பட்ட ஒரு வடிவ உருவின் மீது அவள் அமர்த்தப்படுவாள். அதன் நான்கு மூலைகளிலும் நீர் நிறைந்த பாத்திரங்கள் வைக்கப்படும். அந்தச் சிறுமியின் அன்னை அவள் தலையின் மீது ஒரு வாழையிலையினைப் பிடிக்க நான்கு வேறு வேறு பலி (குலங்கள்) களைச் சேர்ந்த பெண்கள் அதன்மீது பாத்திரங்களில் இருக்கும் நீரினை ஊற்று வர். அந்தச் சிறுமியும், அப்பெண்களும் பின்னர் ஒன்றாக அமர்ந்து ஒரே இலையிலிருந்து உணவு கொள்வர்.

மாரி ஹொலையர்கள் இறந்தவர்களைப் புதைப்பதே பெரு வழக்கு. இறுதிச் சாவுச் சடங்கு பன்னிரண்டாம் நாள் நிகழ்த்தப் படும். புதைகுழி அருகே ஒரு குழி தோண்டி அதனுள் வைக் கோலால் செய்த இறந்தவருடைய உருவினை வைத்து அதற்கு அவருடைய மகன் அல்லது அண்ணன் மகன் நெருப்பு மூட்டு வான். அந்தச் சாம்பல் குவிக்கப்பட்டு அதனைச் சுற்றி மூன்று குச்சிகளை நட்டு ஒரு துணியால் மூடி, ஒரு குடிசை போன்ற அமைப்பினை ஏற்படுத்துவர். அதன் முன் இலையில் சோறு படைத்து இறந்து போனவரை அதனை உண்ணும்படி வேண்டி அழைப்பர்.

குச ஹொலையர்கள் கன்னடம் பேசுகின்றனர். இவர்கள் நான்கு கால்கள் உள்ள பொருட்களைத் தூக்கிச் செல்ல மறுப் பர். அவற்றின் கால்கள் குறுக்குமறுக்காக இருக்குமானால்

மறுப்பேதும் இன்றித் தூக்கிச் செல்வர். இவர்களும் மாட்டி றைச்சியை உண்ணுவதில்லை. அதோடு தோலினையும் தொடு வது கிடையாது. மற்றப் பிரிவினைச் சேர்ந்த ஹொலையர்களை விட இவர்கள் தங்களை உயர்ந்தவர்களாகக் கருதுகின்றனர். இதனை வலியுறுத்த இவர்கள் தங்கள் சாதிப் பெயர் உப் பாரர் எனவும், ஹொலையர் அன்று எனவும் கூறுவர். இவர்கள் ஏன் உப்பாரர் என அழைக்கப்படுகிறார்கள் என்பது தெளிவாக விளங்கவில்லை. சிலர் இவர்கள் மைசூரைச் சேர்ந்த உப்பு எடுக்கும் பணியாளர்களே என்றும், தென் கன்னடத்தில் இச்சாதியார் சமூகப் படிநிலையில் தாழ்ந்தவர்களாக மதிக்கப் படுகிறார்கள் என்றும் கூறுகின்றனர். உப்பாரரின் பரம்பரை தொழில் உப்பு மண்ணிலிருந்து உப்பு எடுப்பதாகும். (கு–மண்). குச ஹொலையர்களின் சாதித் தலைவன் புத்திவண்ட் என அழைக்கப்படுகிறான். மைசூரில் உள்ள குடிலியைச் சேர்ந்த லிங்காயத சமயத்தைச் சேர்ந்த குரு ஒருவனின் சீடர்கள் இவர் கள். சைவமே இவர்கள் மேற்கொண்டுள்ள சமயநெறி. அந்தக் குரு பயணம் வரும்போதெல்லாம் ஒவ்வொரு குடும்பமும் அவருக்கு எட்டணாக் காணிக்கை செலுத்த வேண்டும். குச ஹொலையர்கள் சிறப்பாக வழிபடும் பூதங்கள் மாஸ்தி, ஹாலெமனெதெய்யா என்பனவாம். திருப்பதியில் உள்ள வேங்கடரமணசாமியைச் சிலர் தங்கள் குலதெய்வமாக வழிபடு கின்றனர். குழந்தையாக இருக்கும்போதும், வயது வந்த பிறகும் மணம் செய்விக்கின்ற இருவகைப் பழக்கமும் இவர்களிடம் உள்ளன. குழந்தைகள் இல்லாத கைம்பெண்கள் மட்டுமே மறு மணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர்.

மைசூர் மாநிலத்தில் உள்ள தும்கூரில் தீகல ஹொலையர் எனப்படும் ஹொலையர் பிரிவினரின் குடியிருப்பு ஒன்றினை நான் காண நேர்ந்தது. இவர்கள் மற்ற ஹொலையர்களோடு மண உறவு கொள்வதில்லை. இவர்களிடையே குலப் பிரிவு களைச் சுட்டும் இல்லப் பெயர்களும் இல்லை. இவர்களுடைய மண்டையோட்டின் அளவுகள் ஹொலையர்களின் தலையள வினைப் போல நீளங்குறைந்ததாக இல்லாமல் தமிழ்ப் பறையர் களுடையதைப் போல நீளம் மிகுந்ததாக உள்ளது. இவர்கள்

நீண்ட காலத்திற்கு முன் மைசூரில் வந்து குடியேறிய தமிழ்ப் பறையர்களாதல் கூடும்.

| | தலையின் நீளம் | தலையின் அகலம் | தலையின் நீள அகலத் தகவின் விகித எண் |
|---|---|---|---|
| | செ. மீ | செ. மீ | |
| தமிழ்ப் பறையன் | 18. 6 | 13. 7 | 73. 6 |
| தீகல ஹொலையர் | 18. 5 | 13. 9 | 75. 1 |
| ஹொலையர் | 17. 9 | 14. 1 | 79. 1 |

**ஹொலொடிய குடியர் - Holodia Gudia**

ஒரிய குடியர்களுள் பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ள பிரிவினருக்கான பெயர்.

**ஹொலுவ - Holva (holo, plough)**

பெண்டியருக்கான மற்றுமொரு பெயர். இது நிலத்தை உழும் ஒரிய பிராமணப் பிரிவினருக்கும் உரிய பெயராகும்.

**ஹொன் - Hon**

ஹொன், ஹொன்னு, ஹொன்னெ என்பவனவெல்லாம் பொன் எனப் பொருள்படும். இது குர்ணி, ஒட்டே, குருபர் ஆகிய சாதிகளின் புறமணக்கட்டுப்பாடுடைய குலமாகப் பதியப் பட்டுள்ளது.

**ஹொன்னே - Honne** (*Calophyllum inophyllum or Petrocarpus Marsupium*)

புன்னை அல்லது வேங்கை எனப் பொருள்படும் இது மொகேர், ஹலேபைக்கு சாதிகளின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலத்தின் பெயர். ஹலே பைக்குகள் இக் குலத்தவரைச் சுரஹொன்னே என அழைப்பர்.

**ஹொன்னுங்காரர் - Honnungara (gold ring)**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். மோதிரம் எனப் பொருள்படுவது.

**ஹுலி - Huli (tiger)**

கப்பிலியன்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஓர் உட்குலம். புலி எனப் பொருள்படுவது.

**ஹுல்லு - Hullu (grass)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். புல் எனப் பொருள்படுவது.

**ஹுணிசே - Hunise (tamarind)**

காப்பிலியன்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஓர் உட்குலம். புளி எனப் பொருள்படுவது.

**ஹுட்ட - Hutta (ant - hill)**

கங்கதிகார ஹொலையர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கரையான் புற்று எனப் பொருள்படுவது.

**ஹுவ்வின்ன - Huvvinna (flowers)**

ஒட்டே, வக்கலிகர் சாதிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலம். பூக்கள் எனப் பொருள்படுவது.

**ஈச்சம் - Īchcham (date-palm : *phoenix sylvestris*)**

ஈச்சம் அல்லது ஈச்சஞ்சாணார், சாணாரின் ஒரு பிரிவின ரெனத் தஞ்சாவூர் மாவட்டக் கையேட்டில் பதியப்பட்டுள்ளது. இதற்குச் சமமான ஈச்சங்கு என்பது கொண்டையங்கோட்டை மறவர்களின் ஒரு கொது அல்லது மரம் (குலம்) என வருகின்றது.

**இடைச்சேரி - Idacheri**

பால் பொருட்களைத் தயாரித்து விற்கும் நாயர்களுக்கு உரிய தொழில் தொடர்பான பெயர். தமிழ் இடையனோடு ஒத்தது இச்சொல்.

## இடையன் – Idayan

இடையர்கள் முல்லை நிலஞ்சார்ந்த ஆடு மேய்க்கும் தமிழ் நாட்டிற்குரிய சாதியார். எனினும் இவர்களுள் சிலர் நில உடைமை யாளராகவும், சிலர் அரசுப் பணியாளர்களாகவும் உள்ளனர். கோயமுத்தூரில் நான் நேரில் விவரங் கேட்டறிந்தவர்களுள் பால்காரர், ஆடுமேய்ப்போர், பயிரிடுவோர், தோட்டம் போடு வோர், வண்டி ஓட்டுவோர், கடை வைத்திருப்போர், காவலர், மருத்துவர்,இரவலர் ஆகிய பல தொழில் புரிவோரும் இருந்தனர்.

தஞ்சாவூர் மாவட்டக் கையேட்டில், "மறைத்திரு போப் அவர்கள் இடையர் உழவர்களுக்கும், வணிகர்களுக்கும் இடையே தொடர்பு ஏற்படுத்துபவர்களாக இருப்பதால் அவர்கள் அவ் வாறு அழைக்கப்படுகின்றனர் எனக் கூறுகிறார்" எனக் கூறப் பட்டுள்ளது. மதுரை மாவட்டக் கையேட்டில் திரு நெல்சன் மேற்கண்ட விளக்கம் கற்பனையொடு பட்டதாகக் கூறி, "இவர்கள் இவ்வாறு அழைக்கப்பட்டதற்குக் காரணம் இவர்கள் மலைகளுக்கும், விளை நிலங்களுக்கும் இடைப் பட்ட மேய்ச்சலுக்கு ஏற்ற காட்டுப் பகுதியில் முதலில் தங்கியிருந்ததால் வேண்டும். (அதாவது, தமிழ் நூல்க ளுள் கூறப்பட்டுள்ள குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்ற ஐவகை நிலங்களுள் இடைப்பட்ட நிலத்தில் வாழ்ந்தவர்கள்.)* இந்தச் சாதியில் பல குலப்பிரிவுகள் உள்ளன. எனினும் அவற்றை இரண்டு பெரும் பிரிவுகளுள் அடக்கலாம். அவற்றுள் ஒன்று நன்கு ஒழுங்குபடுத்தப்பட்டு வளர்ந்துள்ள பிரிவு. மற்றொன்று தொன்மையான இனத் துக்கு உரிய இன்றியமையாக் கூறுகளைத் தன்னகத்தே அழியாது தாங்கி நிற்கும், தொல்லினப் பிரிவு. முதற் பிரிவினைச் சேர்ந்தவர்கள் வைணவ சமயத்தை மேற்கொண்டிருப்பதோடு நாமம் தரித்தவர்களாகத் தங்களை யாதவர் எனக் கூறிக் கொள்கின்றனர். இரண்டாம் பிரிவினைச் சேர்ந்தவர்கள் ஊர்த் தேவதைகளை வணங்குவதோடு தாங்கள் யாதவ மரபில் வந்த

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, *1891*. (Madras Census Report, 1891.)

வர்கள் எனப் பெருமை பேசிக் கொள்வதில்லை. இவர்கள் தங்கள் நெற்றியில் பசுஞ்சாணத்தை நெருப்பிலிட்டு எரித்த சாம்பலினைப் பூசிக் கொள்கின்ற ஒரே காரணத்தின் அடிப் படையில் மட்டும் சைவ நெறியைப் பின்பற்றுபவர்களாகக் கூறிக் கொள்கின்றனர்" என இவர்களைப் பற்றி விளக்கி யுள்ளார்.

1871 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் பால்காரர் களும், மாடு மேய்ப்பவர்களும், சமூகத்தில் ஓரளவு முக்கியமான இடம் வகிப்பதாகக் குறிக்கப்பட்டுள்ளது. அவர்கள் தரும் பாலையும் தயிரையும் பிராமணர்கள் கூடக் குடிக்கின்றனர். மேலும் 1901 மக்கள் கணக்கெடுபபு மேறபார்வையாளர் இவர் களைப் பற்றி எழுதியிருப்பதாவது:- "இடையர்கள் கண்ணன் தங்களால் வளர்க்கப்பட்டவன் என்ற வழக்கின் அடிப்படையில் சமூகத்தில் தங்களுக்கு உரியதானதைவிட உயர்ந்ததொரு இடத்தை வகிக்கின்றனர். சமூகத்திற்கு இன்றியமையாததான பால், நெய் ஆகியவற்றை அவர்கள் வழங்கி வருவதும் அவர் களுடைய இந்த நிலைக்கு ஒரு காரணம் ஆகும். சமய நெறியில் மிகத் தீவிரமாக இருக்கும் பிராமணர்களைத் தவிர மற்ற பிராமணர்கள் அனைவரும் இவர்கள் கொண்டு தரும் மோர், வெண்ணெய் ஆகியவற்றை ஏற்றுக் கொள்வர். சில இடங்களில் கண்ணன் பிறந்தநாளான கோகுலாஷ்டமி அன்று, வெண்ணெய்ப் பானையை உடைத்து அதனை உடைப்பவர்கள் பெறும் புது வேட்டியையும் கொஞ்சம் பணத்தையும் பெற்றுக் கொள்ளும் உரிமைக்குரியவர்களும் இவர்களே. இவர்கள் வேளாளர், பள்ளியர், நத்தமான்கள் ஆகியோருடைய வீடுகளில் உண்பர்."

விசயநகர அரசரான கிருட்டிண தேவராயருடைய தலைமை அமைச்சரான, செங்கல்பட்டு மாவட்டத்தில் பல அறப் பணி களைச் செய்துள்ள திம்ம ராசா இடையர் குலத்தைச் சேர்ந்தவர் என இவர்கள் கூறுகின்றனர்.

இடையர்களுக்குள் பல பிரிவினர்கள் உள்ளதாகப் பதியப் பட்டுள்ளது. அவற்றுள் பின்வரும் பிரிவுகள் குறிப்பிடத் தக்கவை:-

**கல்கட்டி, பாசி பிரிவினர்:** இப்பிரிவினைச் சேர்ந்த பெண்கள் தமிழர் பழக்கத்திற்கு மாறாகத் தங்கள் தாலியோடு கறுப்புப் பாசிமணிகளையும் கோத்து அணிவர். இப் பழக்கத்திற்கு காரணம் தெலுங்குப் பிராமண புரோகிதர்களுடைய செல்வாக் காக இருத்தல் கூடும். தெலுங்குச் சாதியார் பலரும் தங்கள் தாலியோடு கண்ணாடிப் பாசிமணிகளைக் கோத்து அணியும் பழக்கம் உடையவர்கள். கறுப்புப் பாசிமணிகளாலான கழுத்துச் சங்கிலியை அணிகின்றனர். ஒரு கதை வரலாற்று வழக்குப்படி இப் பாசிமணிகள் ஆறுகளில் கிடைக்கும் கூழாக் கற்களிலிருந்து செய்யப்படுவதாகவும், ஆற்றங்கரையில் இடைச் சேரிச் சிறுவர்களோடு விளையாடிக்கொண்டிருந்த கண்ணன் தன்னைக் கொல்ல வந்த ஓர் அரக்கனை இந்தக் கூழாங் கற்களைக் கொண்டு தாக்கிக் கொன்றதாகவும் கூறப்படுகிறது.

**பால்:** இப்பிரிவு கன்னட குருபர்களாக இடைச் சாதியின் ஹாலு பிரிவினோடு ஒத்ததாகும்.

**பெண்டுக்குமெக்கி:** மனைவிக்கு அடங்கி நடப்பவன் என்ற பொருள் தருவது இது. இப்பிரிவினருள் ஒருவன் திருமணம் முடிந்தவுடன் தன் மனைவியின் குடும்பத்தைச் சேர்ந்தவனாகி விடுகின்றான். தன் தந்தையின் சொத்துக்களுக்குப் பதிலாக இவன் தன் மாமனாரின் சொத்துக்களுக்கு உரிமை உடையவ னாகின்றான்.

**சிவியன் அல்லது சிவாளன்:** பல்லக்குச் சுமப்பவர்களுக்கு உரிய தொழில் தொடர்பான பெயர்.

**சங்கு கட்டி:** சங்கினைக் கட்டிக் கொண்டிருப்பவர்கள் எனப் பொருள் தருவது. கண்ணன் ருக்மணியை மணந்து கொள்ள விரும்பினான். ஆனால் ருக்மணியின் குடும்பத்தினர் அவளைச் சிசுபாலனுக்கு மணம் செய்து தருவதில் பிடிவாதம் காட்டினர். அத்திருமணம் நடைபெற இருக்கும் சமயத்தில் கண்ணன் ருக்மணியைத் தூக்கிச் சென்று அவள் கரத்தில் சங்கி னாலான வளையல் ஒன்றினை அணிவித்தான்.

**சாம்பன்:** இது சிவனுக்குரிய பெயர். இப்பிரிவினைச் சேர்ந்தவர்களுள் பெரும்பாலோர் நெற்றியில் விபூதியினைச் சமயச் சின்னமாக இடுவர். யாதவர்கள் தேவேந்திரனுக்குப் படையல் இடுவதே வழக்கம். கண்ணன் அவர்களைத் தனக்குப் படையலிட்டு வழிபடும்படி கூறினான். சில யாதவர்களையும், ஆடு மாடுகளை மேய்க்கும் பணியில் அமர்த்தப்பட்டிருந்த பறையன்களையும் தவிர மற்றவர்கள் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. "முன்பு இடையர்சாதி பறையர் சாதிக்கும் சற்றே மேம்பட்டதாகக் கருதப்பட்டு வந்தது. இடைச்சேரி பறையர்கள் வாழ்விடமான பறைச்சேரியை அடுத்தே ஒவ்வொரு ஊர்ப் புறத்திலும் இடம் பெற்றிருக்கும்."*

**புதுநாட்டார் அல்லது புதுக்கா நாட்டார்:** புதிதாகக் குடியமர்ந்தவர்கள் என்பது பொருள். கண்ணன் கிட்கிந்தையில் சென்று தங்கியபொழுது அங்கே அவன் தங்கள் சாதியினரைக் குடியமர்த்தினான் என இடையர்கள் கூறுகின்றனர்.

**பெருந்தாலி, சிறுதாலி:** மணமான பெண்கள் அணியும் தாலியின் அமைப்பைக்கொண்டு ஏற்பட்ட பிரிவுகள்.

**பஞ்சரம் அல்லது பஞ்சாரம்கட்டி:** இப்பெயர் பஞ்ஜாரம் என அழைக்கப்படும் பொன்னணி ஒன்றின் பெயரிலோ பஞ்சாரம் எனப்படும் பல கதிர்களையும் நடுவில் மூன்று பொட்டுக்களையும் உடைய கதிரவன் வடிவிலான கைம்பெண்கள் அணியும் அணியின் பெயரிலோ அமைந்த பிரிவாகும். "இப்பிரிவினருள் கைம்பெண்களின் மறுமணம் தாராளமாக அனுமதிக்கப்படுகிறது. கண்ணன் தன் உள்ளம் கவர்ந்த இடையர் குலக் கைம்பெண்களின் கழுத்தில் அவர்களை மணமான பெண்களாக மாற்றப் பஞ்சரம் என்ற இந்த அணியினை அணிவிப்பான். அவர்களுக்கு இன்ப நுகர்ச்சி விலக்கன்று. இந்தக் காதல் உறவின் விளைவால் அமைந்தது இப்பிரிவு" எனக் கூறப்படுகின்றது.†

---

* மதுரை மாவட்டக் கையேடு. (Manual of Madurai District.)
† சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, 1901 (Madras Census Report, 1901.)

**மணியகாரர்:** *கால்நடைகளான ஆடுமாடுகளின் கழுத்தில் அணிவிக்கப்படும் மணியின் அடிப்படையில் வந்த பெயர்.*

**கள்ள:** *கள்ளர் சாதியார் வாழும் பகுதிகளில் இப்பிரிவினர் மிகுதியாக உள்ளனர். இப்பிரிவினர் கள்ளர் சாதியிலிருந்து பிரிந்து ஆடுமாடு மேய்க்கும் தொழிலை மேற்கொண்டவர்களாக இருத்தல் கூடும். கள்ளர்களைப் போலவே இப்பிரிவிலும் தேவன் வேந்தன் போன்ற புறமணக்கட்டுப்பாடு உடைய கிளைகள் (குலங்கள்) உள்ளன.*

**சோழியர்:** சோழ தேசத்தில் வாழ்பவர்கள் எனப் பொருள் படும் வாழ்விடத்தின் அடிப்படையிலான பிரிவின் பெயர்.

**ஆனைக் கொம்பு:** *சகடாசுரனைக் கொல்லக் கண்ணனும் யாதவர்களும் பயன்படுத்திய போர்க் கருவியின் அடிப்படையி லான பிரிவின் பெயர்.*

**கருத்தகாடு:** திருநெல்வேலி, மதுரைப் பகுதிகளிலேயே இப்பிரிவினர் மிகுதியும் காணப்படுகின்றனர். அப்பகுதிகளில் கரிசல்மண் காடுகள் பெரும்பரப்பினவாக உள்ளன.

**பெருமாள் மாட்டுக்காரன்:** *(பார்க்க: கங்கெத்து)* இவர்கள் சாமி மாட்டினை ஓட்டியபடி ஊர்ஊராகச் செல்வர். இவர்கள் பூ இடையன் என்ற இடைச் சாதியின் பிரிவைச் சேர்ந்தவர்கள் எனக் கூறப்படுகிறது. இவ்வாறு பெயர் பெறுவதற்குரிய காரணம் இப்பிரிவினர் கோயில்களில் பூக்கட்டும் பணியைப் பெரும்பாலும் மேற்கொண்டிருந்ததேயாகும். சில இடங்களில் இன்னமும் இவர்கள் இப்பணியினைச் செய்து வருகின்றனர்.

மதுரை மாவட்ட விவரக் குறிப்பில் **பொது நாட்டு (புது நாட்டு) இடையர்** என்ற பிரிவினரைப் பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகள் வருமாறு:- "பொது நாட்டு (புதுநாட்டு?) இடையர்கள் தாங்கள் திருநெல்வேலியைச் சேர்ந்தவர்களாக இருந்ததாகவும், ஒரு வட்டாரத் தலைவனின் கொடுமையைத் தாங்க இயலாது ஓர் இரவில் யாரும் அறியாதபடி திருமலை நாயக்கன் ஆட்சிக்காலத்தில் மதுரைக்கு வந்து சேர்ந்ததாகவும் கூறுகின்

றனர். திருமலை இவர்களை வரவேற்றுப் பின்னைத்தேவன் என்ற கள்ளர் தலைவன் பாதுகாவலில் இவர்களை இருக்கச் செய்தான். அவனும் அவன் வழிவருபவர்களும் தங்கள் கடமையைச் செவ்வனே ஆற்ற வேண்டும் என்ற நோக்கத்தோடு திருமலை மறவர் சாதித் தலைவனை அமர்த்தும் உரிமை ஓர் இடையனையே சாரும் எனவும் ஆணையிட்டான். அந்த ஆணை இன்று வரை பின்பற்றப்பட்டு வருகின்றது. இப்பிரிவில் ஒருவனுக்குத் தன் தந்தை வழி அத்தை மகளை மணக்கும் முன்னுரிமை கள்ளர் சாதியில் இருப்பதைப் போலவே இருக்கின்றது. எனினும் பெண்ணின் வயது, அவளை மணக்கும் உரிமை உடைய ஆணின் வயதைவிட மிக அதிகமாக இருக்குமாயின் அவன் குடும்பத்தைச் சேர்ந்த வேறு யாருக்கேனும் அவள் மணம் செய்விக்கப்படுவாள். இவர்கள் திருமணச் சடங்கைப் புனித நெருப்பு மூட்டி, ஒரு பிராமணப் புரோகிதரே நடத்தி வைக்கிறார். எனினும் மணமகனின் உடன்பிறந்தவளே மணமகள் கழுத்தில் தாலி அணிவிப்பாள். மணவிலக்கும் மறுமணமும் அனுமதிக்கப்படுவதில்லை. குழந்தைகளைத் தவிர இறந்துபோகும் மற்றவர்கள் எரிக்கப்படுகின்றனர். நாட்டாண்மைக்காரன் என அழைக்கப்படும் சாதித் தலைவனே சாதி தொடர்பான அனைத்து விவகாரங்களையும் தீர்த்து வைப்பவன். அவனுக்கு ஒரு கணக்கனும் ஒரு பணியாளனும் உதவியாளர்களாக இருப்பர். இம் மூவருமே அப்பதவிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மாவட்டத்தைச் சேர்ந்த பெரிய கோவில்களில் குறிப்பிட்ட நாள்களில் திருவிழாக் கொண்டாடுவதற்குரிய சாதிக்காரர் தரும் தொகையினைச் செலவழிக்கும் பொறுப்பு சாதித் தலைவனுடையதே. இந்தப் பொது நாட்டான் பிரிவினரிடையே வழக்கத்திற்கு மாறுபட்டதான ஒரு சொத்துரிமை முறை மேற்கொள்ளப்படுகின்றது. கணவன் இறக்கும் போது ஆண் சந்ததி இல்லாதிருக்கும் ஒருத்தி தன் சொத்துக்களைத் தன் கணவனின் உடன்பிறந்தவனிடமோ, தந்தையிடமோ மாமனிடமோ ஒப்படைக்க வேண்டும். அவளுக்கு வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையான ஒரு தொகை பஞ்சாயத்தார் முடிவுப்படி வழங்கப்படும். வலசு, பெண்டுக்குமெக்கி ஆகிய பிரிவினரிடையே மற்றொரு வகையான வாழ்க்கைத் தேவைக்

கான தொகை அளிக்கும் அரிய வழக்கு இருந்து வருகிறது. ஒருவனுடைய சொத்துக்கள் அவனுடைய மருமகனையே சேரும். அவனுக்குப் பிறந்த பிள்ளைகள் அவர்களுக்கு மணமாகும் காலம்வரை வாழ்க்கைத் தேவைக்கான உதவித்தொகை மட்டுமே குடும்பத்திலிருந்து பெறுவர்.''

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் **போந்தன் அல்லது போகண்டன்** இடையர்களின் ஓர் உட்சாதியாகப் பதியப் பட்டுள்ளது.கள்ளிக்கோட்டை சாமோரின் மன்னருக்கு இவர்கள் பல்லக்குச் சுமப்பவர்கள். இது தொடர்பாகத் திரு கே. கண்ணன் நாயர் தரும் விவரங்கள் வருமாறு*:- ''ஈரோட்டுக்கு அருகே உள்ள பூந்துறையைச் சேர்ந்த கோனார்களிடையே அவர்கள் கேரளத்தின் தென் பகுதியில் வாழும் கோபர் பிரிவினரைச் சேர்ந்தவர்களாக இருந்தவர்கள் என்ற வழக்கு வழங்கி வருகின்றது. கேரளத்தில் அக்கோபர்கள் இன்று தனித்ததொரு நாயர் பிரிவினராக இருந்து வருகின்றனர். பூந்துறைக் கோனார்களின் மணச் சடங்குகள் பெரிதும் கோபர் பிரிவு நாயர்களின் மணச் சடங்குகளை ஒத்தனவாக உள்ளன. இவர்களும் நாயர்களைப் போலவே தாலிகட்டுக் கலியாணத்தை மேற்கொள்கின்றனர். இச்சடங்கினால் பிணைக்கப்படும் மணமகனும் மணமகளும் கணவன் மனைவியாக வாழ வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. எனினும் இப்பொழுது அவர்கள் அந்தப் பழக்கத்தைக் கைவிட்டவர்களாகத் தாலி கட்டுவதை மணச் சடங்கிற்குரிய இன்றியமையாத நடைமுறையாகக் கொண்டுள்ளனர்.''

இடையர்களிடையே மற்ற சாதியாரிடையே காணப்படுவதைப் போன்ற ஊர்ப்பஞ்சாயத்து முறை வழக்கில் உள்ளது. கீத்தாரி அல்லது கீலாரி எனபவனை அது தலைவனாகப் பெற்றிருப்பது சிறப்புக்குரியதாகும். ஊரைச் சேர்ந்த ஆடுகளைப் பார்த்துக் கொள்வதும், அவற்றைப் பட்டியில் அடைப்பதும் இவன் பொறுப்பாகும். சில இடங்களில் சாதித் தலைவன் அம்பலக்காரன் என அழைக்கப்படுகின்றான். முன்பெல்லாம் மற்றவர்கள்

* மலபார் க்வார்ட்டர்லி, ரெவியூ, II, 1903. (Malabar Quart. Review, II, 1903.)

மனைவியோடு கள்ள உறவு கொள்பவர்கள் கம்பத்தில் கட்டி வைக்கப்பட்டு அடி உதை தரப்படுவர்.

ஒரு சிறுமி பூப்பெய்துவாளாகில் அவளுடைய தாய் மாமன் அல்லது அவருடைய பிள்ளைகள் பச்சைத் தென்னந்தடுக்குகளால் குடிசை கட்டும் வழக்கம் சில பகுதிகளில் உள்ளது. அதில் அவள் பதினாறு நாள்கள் தங்கியிருந்த பின் அவளுக்குத் தீட்டுப் போக்கும் சடங்குகள் நிகழ்த்தப்படும்.

இடத்துக்கு இடம் இவர்களின் மணச் சடங்குகள் வேறுபடுகின்றன. ஆகவே அவற்றுள் கோயமுத்தூர் வட்டாரத்திய மணச் சடங்குகள் நடைபெறும் முறை பற்றி இங்கு எடுத்துக் கூறுகின்றேன். இருவருக்கு மணம் செய்விக்கலாம் என முடிவு செய்வார்களாயின் ஒரு கோயிலுக்குச் சென்று வெற்றிலையில் வெள்ளை, சிவப்பு நிறமுடைய இரண்டு பூக்களைத் தனித் தனியே கட்டித் தெய்வத்தின் முன் இடுவர். ஒரு பெண் குழந்தையை அழைத்து அதனிடம் அவற்றுள் ஒன்றினை எடுக்கும்படி கூறுவர். அவள் வெள்ளை மலருள்ள கட்டினை எடுத்துத் தரின் அதனை நல்ல சகுனமாக ஏற்றுத் திருமண ஏற்பாடுகளை மேற்கொள்வர். மணம் பேசி முடிக்கும் நாளன்று மணமகளின் தந்தையும் மற்ற உறவினர்களும் புதிய சேலை, பழங்கள், அணிகள் ஆகியவற்றோடு பெண் வீட்டார் இல்லம் செல்வர். பெண்ணின் விலையான பரிசப் பணத்தைச் செலுத்திய பின் வெற்றிலை பாக்கு மாற்றிக் கொள்வர். மணமகனாக இருப்பவன் மணப் பெண்ணினை மணக்கும் உரிமை உடைய அவள் தாய்மாமனுடைய பிள்ளைகளிடம் சென்று அவர்களுக்கு வெற்றிலை பாக்கில் நான்கணா வைத்துத் தருவான். அவர்கள் அதனைப் பெற்றுக் கொள்வார்களானால் அவர்கள் அந்தத் திருமணத்திற்குத் தங்கள் ஒப்புதலை வழங்குவதாகக் கொள்ளப்படும். மண நாளன்று மணமகன் பால்கம்பம் நடுவான். அதனைப் பிராமணப் புரோகிதர் வாழ்த்தியபின் அவன் ஒரு நாவிதனிடம் முகம் மழித்துக் கொள்வான். மணமகளும் அவள் உறவினரும் கொஞ்சம் மண் கொண்டு வருவர். மணப் பந்தலில் அதனைக் கொண்டு மேடை இடப்படும். பிராமணப் புரோகிதர்

ஹோம நெருப்பு மூட்டிப் பசுஞ்சாணத்தாலான ஒரு பிள்ளை யாரைப் பந்தலில் வைப்பார். மணப்பந்தலில் மணமகள் கொஞ்சம் நெல்லினைக் குற்றுவாள். மணமக்களின் உறவினர் குயவனாரிடமிருந்து அடுக்குப் பானை எனப்படும் ஏழு பானை களையும், அரசாணிப் பானை எனப்படும் இரண்டு பெரிய பானைகளையும், ஏழு மண் தட்டுக்களையும் கொண்டு வந்து மணமேடையின் முன் வைப்பர். அப் பானைகளில் நீர் நிரப்பப் பெற்று அதனுள் சின்னஞ் சிறு தங்கத் தடுகளைப் போடுவர். மணமகன் பிள்ளையார் கோவிலுக்குச் சென்று திரும்பும்போது மணமகளின் உடன்பிறந்தவன் அவன் கால்களை அலம்பி இரண்டாம் கால் விரல்களில் மெட்டி அணிவிப்பான். மண மக்களின் கரங்களில் கங்கணம் கட்டப்படும். மணமகன் மணப் பந்தலில் அமர்ந்தபின், மணமகளை அவள் தாய்மாமன்களில் ஒருவர் தன் கைகளால் தூக்கி வந்து அவன் அருகே அமர்த்து வார். மற்றொரு தாய்மாமன் அம்மியின் மேல் வைக்கப்பட்ட விளக்கினை எடுத்து வருவார். அந்த விளக்கு மணமக்கள் முன் வைக்கப்படும். கூடியிருப்பவர்கள் தங்கள் வாழ்த்தினைத் தெரி விக்கத் தாலி மணப்பந்தலில் கூடியிருப்பவர்கள் முன் கொண்டு காட்டப்பட்டு மணமகனிடம் தரப்படும். அவன் அதனை மணமகள் கழுத்தில் அணிவிப்பான். அதன்பின் மணமக்கள் தங்கள் முன் உள்ள மண் தட்டுக்களில் கொஞ்சம் மண்ணினை இட்டு அதில் நவதான்யங்களை ஊன்றுவர். பாலும் தயிரும் உள்ள இரண்டு பாத்திரங்கள் அவர்கள் முன் வைக்கப்படும். உறவினர்கள் அவற்றில் கொஞ்சத்தை அவர்கள் தலையில் ஊற்றுவர். மணமகனின் வலக் கையினை மணமகளின் இடக் கையோடு சேர்த்து வைத்து, மணமகளின் தாய்மாமன் மார் பிள்ளைகளில் ஒருவன் அக்கரங்களை ஒன்றாகக் கட்டு வான். அதன்பின் மணமகனின் அண்ணன்களில் ஒருவன் மண மகளை வீட்டினுள் தூக்கிச் செல்வான். அவளை உள்ளே கொண்டு செல்ல விடாது அவள் தாய்மாமன் பிள்ளைகள் வாசற்படியில் நின்று தடுப்பதோடு அவளைத் தூக்கிச் செல்பவ னையும் அடிப்பர். மணமகன் அவர்கள் ஒவ்வொருவருக்கும் நான்கணாத் தந்தபின் அவனும் மணமகளும் வீட்டினுள் நுழைய அனுமதிக்கப்படுவர். மணநாளன்று இரவில் மணமக்கள் தனி

அறையில் விடப்படுவர். அடுத்துவரும் நாள்களில் மணமேடையின் அருகே வைக்கப்பட்ட பானைகளை அவர்கள் வழிபடுவர். ஏழாம் நாள் மணமக்களின் ஆடைகளின் முனையை முடிச்சிட்டு அவர்களை மஞ்சள் நீரில் குளிக்கச் செய்வர். கைகளில் உள்ள கங்கணம் அவிழ்க்கப்படும். அவர்கள் ஒருவர் தலையில் மற்றவர் எண்ணெய் தேய்த்தபின் குளத்தில் சென்று குளிப்பர். மணமகள் மணமகனுக்கு உணவு பரிமாறுவாள். இரு வீட்டைச் சேர்ந்த மணமக்களின் உறவினர்களும் தங்கள் உறவை உறுதிப் படுத்தும் வகையில் ஒரே இலையில் உண்பர். அங்குள்ள பெரிய பானைகளில் ஒன்றில் வெள்ளி, தங்கமோதிரங்களும், இன்னொரு பானையில் எழுத்தாணியும் ஓலை நறுக்கும் இடப்படும். மணமக்கள் பானையில் அவற்றைத் தேடும் சடங்கினை மேற்கொள்வர். பொன்னாலான மோதிரத்தையும் எழுத்தாணியையும் முதலில் தேடி எடுப்பவர்கள் அவர்களுள் கெட்டிக்காரர்களாகக் கருதப்படுவர். அதன் பின் மணமகன் தனது வலது காலையும் மணமகள் தனது இடது காலையும் அம்மி மீது வைத்தவர்களாக அருந்ததி பார்ப்பர். அம்மிக்கல் இந்திரனோடு தகாத ஒழுக்கத்தில் ஈடுபட்டு அதனால் தன் கணவனான கௌதம முனிவரால் கல்லாகும்படி சபிக்கப்பட்ட அகல்யாவைக் குறிப்பதாகும். அருந்ததியோ கற்பின் எடுத்துக்காட்டாகத் திகழும் வசிட்ட முனிவரின் மனைவியாவாள். புதிதாக மணம் செய்து கொண்டவர்கள் தங்கள் பாதங்களை அம்மிக் கல்லின் மீது வைத்து அருந்ததியைப் பார்க்கும் சடங்கானது ஒழுக்கத்திற்கு ஒவ்வாத தங்கள் தீய எண்ணங்களோடு கூடிய ஆசைகளைக் கட்டுப்படுத்தி ஒருவருக்கொருவர் நன்றியுடையவர்களாக நடந்து கொள்ளப் போவதான அவர்களுடைய நோக்கத்தை வெளிப்படுத்துவதாகும். மணமகள் ஒரு சிறு அம்மிக் குழவியைத் துணியாலும் அணியாலும் அலங்கரித்துக் கூடியுள்ள தன் உறவினர்கள் அனைவரிடமும் எடுத்துச் செல்வாள். அவர்கள் அவளைப் பல பிள்ளைகளைப் பெறுவாய் என நம்பிக்கையோடு வாழ்த்துவர்.

மறவர் நாட்டுப் பகுதிகளில் சிலபோது நன்கு வளர்ந்த இடையர் சாதிப் பெண்ணைப் பத்துப் பன்னிரண்டே வயதான

சிறுவனுக்கு மணம் முடிக்கின்றனர். சில இடையர் பிரிவி னருள் மணமகனுக்குப் பதிலாக அவன் உடன்பிறந்தவள் மணப் பெண்ணின் கழுத்தில் தாலி அணிவிக்கும் பழக்கம் உள்ளது. அப்போது மணமகன் அவ்விடத்தில் இருக்கவும் கூடாது.

சில இடங்களில் இடையர் சாதியைச் சேர்ந்த மணமகன் மணமகள் வீடு நோக்கிப் புறப்படும்போது கோல்லர்களிடையே உள்ளதைப் போல மணமகனின் நண்பர்கள் அவனைப் போக விடாது பிடித்து வைத்துக் கொள்ளும் பழக்கம் உள்ளதாகச் சொல்லப்படுகிறது. ஒரு சிறு பொன் தகட்டினை அவன் அவர் களுக்குத் தந்த பிறகே, அவர்கள் அவனைச் செல்ல விடுவர். "இடையர்கள் திருமணத்தில் மூன்றாம் நாள் விருந்தினர்கள் மீது மஞ்சள் நீர் தெளிக்கும் நீராட்டு விழா முடிந்தபின் எல்லோருமாக ஒரு குளத்தை நோக்கிச் செல்வர். மணமகனின் நண்பன் ஒருவன் ஒரு கொத்தினையும், கூடையையும் மணமகனி டம் கொண்டு தருவான். தன் கணவன் அந்தக் குளத்திலிருந்து வாரிக் கொடுக்கும் மூன்று கூடை மண்ணினை மணமகள் சுமந்து கொண்டுபோய் வெளியே கொட்ட வேண்டும். அதன்பின் அவர் கள் 'நாங்கள தர்மத்திற்கு ஒரு பள்ளம் வெட்டி விட்டோம்' எனக் கூறுவர். இடையர்கள் தங்கள் கால்நடைகளை மேய்க்கும் பெரும்பாலான வறண்ட பகுதிகளில் குளங்களின் இன்றியமை யாமையை வற்புறுத்துவதற்காக இச்சடங்கு ஏற்பட்டதாகலாம் என இதற்கு விளக்கம் தர முற்படலாம்" என மதுரை மாவட்டக் கையேட்டில் குறிப்பிட்டுள்ளது.

சிவியன், பெண்டுக்குமெக்கி பிரிவுகளில் கைம்பெண்களின் மறுமணம் தாராளமாக அனுமதிக்கப்படுவதால் அப்பிரிவுகள் தாழ்ந்த படிநிலையினவாக வைக்கப்பட்டுள்ளதாகச் சொல்லப் படுகிறது. மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த ராமநாதபுரம் பகுதிகளில் கைம்பெண்கள் மறுமணம் ஒரு சமீன்தாரின் கட்டாயத்தின் பேரில் புகுத்தப்பட்டதாகக் கூறப்படுகிறது. இது பற்றிய கதை வழக்கு வருமாறு. அந்த சமீன்தார் ஒரு இடையனிடம் அவன் ஒரு கைம்பெண்ணை மணந்து கொள் வானா எனக் கேட்டார். அதற்கு அவன் கைம்பெண்கள் அறுத்துக்கட்டாதவர்கள் எனக் கூறினான். அதாவது கணவன்

இறந்தபின் தாலியை அறுத்த ஒருத்தி மறுபடியும் கட்டிக் கொள்ளும் பழக்கம் இல்லை என்பது பொருள். மறவர்களிடையே கைம்பெண்களின் மறுமணம் சாதாரணமானது ஆகையால் சமீன்தார் இந்தப் பதிலைத் திமிரான பதிலாகக் கருதினார். அந்த இடையனை ஒரு கைம்பெண்ணை மணந்து கொள்ளச் செய்ய வேண்டும் என்பதற்காக அவர் அறுத்துக் கட்டாதவர் என்ற சொல்லின் மற்றொரு பொருளான வயலில் அறுத்துப் போட்டதைக் கட்டாகக் கட்டி எடுத்து வராதவர்கள் எனப் புது விளக்கம் தரலானார். அறுவடைப் பருவம் வந்தவுடன் சமீன்தார் தன் வயல் வேலையாட்களை இடையர்களோடு அனுப்பும்போது வயலில் நெற்பயிரை அறுத்துக் கட்டுக்கட்டாமலேயே தூக்கிப் போகும்படி சொல்லி அனுப்பினார். இதனால் இடையர்களுக்குப் பெரிதும் பொருள் இழப்பு ஏற்பட்டது. எனவே அவர்கள் ஒரு வழிக்கு வந்தவர்களாக கைம்பெண்களுக்கு மறுமணம் செய்விக்க ஒப்புதல் தந்தனர்.

கோயமுத்தூரில் மணமான ஓர் இடையன் இறப்பானாகில் அவன் பிணம் உட்கார்ந்த நிலையில் வைக்கப்படும். ஒரு படி அரிசியும், ஏற்றிய விளக்கொன்றும் ஒரு தேங்காயும் அதனருகே வைக்கப்படும். வீட்டு வாசலில் கொள்ளிக்கட்டை எரிந்தபடி இருக்கும். உறவினர்களும் நண்பர்களும் வந்து கூடிய பின் உடல் வீட்டிலிருந்து வெளியே எடுத்து வரப்பட்டு முதுகுப் பக்கம் ஓர் அம்மி தாங்கலாக இருக்கும்படி பந்தலில் கிடத்தப் படும். ஆண் உறவினர்கள் பூணூல் அணிந்து கொண்டவர்களாக ஊர்க் குளத்திலிருந்து ஆளுக்கு ஒரு குடம் தண்ணீர் கொண்டுவருவர். கணவனைப் பறி கொடுத்தவள் பிணத்தின் தலையில் எண்ணெய் பூசுவாள். யாரேனும் ஒருவர் பிணத்தின் கையில் எண்ணெயைத் தொட்டு அதனை அவளுடைய தலையில் பூசும்படி செய்வர். சுடுகாட்டுக்குச் செல்லும்போது நாவிதன் தீச்சட்டியையும், ஒரு பானையையும் எடுத்துக் கொள்வான். வண்ணான் இறந்து போனவன் பயன்படுத்திய பாய் பழந்துணி முதலியனவற்றை எடுத்துக் கொள்வான். சுடுகாட்டுக்குக் காவலனாக இருந்த அரிச்சந்திரன் கோயில் இருக்கும் இடுகாட்டை அடைந்தவுடன் தீட்டுப்பட்ட அப்பொருட்கள்

வீசியெறியப்பட்டபின் பாடை இறக்கி வைக்கப்படும். பாடை வைக்கப்பட்ட இடத்தின் நான்கு மூலைகளிலும் பறையன் பெருக்கல் குறியிடுவான். இறந்துபோனவரின் மகனான துக்கம் கொண்டாடுபவன் வடகிழக்குத் திசை ஒழிந்த மற்ற மூன்று திசைகளிலும் உள்ள பெருக்கல் குறிகளின் மீது காசுகளை வைப்பான். பறையன் அக்காசுகளை எடுத்துக் கொண்டு பாடையில் கட்டப்பட்டுள்ள துணியில் ஒரு சிறு துண்டினைக் கிழித்துத் தருவான். அது இறந்து போனவனுடைய மனைவிக்கு அனுப்பி வைக்கப்படும். சுடுகாட்டில் இறந்துபோனவனுடைய உறவினர்கள் பிணத்தின வாயில் காசு, அரிசி, தண்ணீர் ஆகியனவற்றை இடுவர். அக்காசுகள் பறையனைச் சேர்ந்தவை. முழுதும் தலை மழிக்கப்பட்ட இறந்துபோனவனுடைய மகன் தண்ணீர் உள்ள ஒரு பானையைத் தோளில் சுமந்தவனாகப் பாடையை மும்முறை வலம் வருவான். ஒவ்வொரு சுற்று முடிந்து அவன் தலைமாட்டுக்கு வரும்போது நாவிதன் அந்தப் பானையில் சங்கினால் ஒரு துளையிடுவான். இறுதியில் அந்தப் பானை உடைக்கப்படும். பூணூல் அணிந்து கொண்டவர்கள் அவற்றைக் கழற்றிச் சிதையின் மீது இடுவர். இறந்துபோனவரின் மகன் சிதைக்குத் தீயிட்டபின் பின்னால் திரும்பிப் பார்க்காமல் வீடு நோக்கி வருவான். இதனிடையே இறந்து போனவனின் மனைவி தன் தாலியினை அறுத்துப் பாலுள்ள ஒரு பானையில் இடுவாள். அது இறந்து போனவன் உயிர் துறந்த இடத்தில் கொண்டு வைக்கப்படும். இறந்து போனவரின் மகன் குளித்துவிட்டு வீட்டுக்குத் திரும்பி வாசற்படியில் போடப்பட்டுள்ள உலக்கையைத் தாண்டி உள்ளே வருவான். அவனுக்கு ஆரத்தி எடுக்கப்படும். வீட்டில் ஏற்றி வைக்கப்பட்டுள்ள விளக்கினை அவன் வணங்குவான். மறுநாள், கணவனை இழந்தவளின் உடன்பிறந்தவர்கள் சோறும், அகத்திக் கீரையும் சமைத்து உறவினர்களுக்கு இடுவர். அதற்கும் மறுநாள் பால், நெய், தயிர், இளநீர், நவதானியம், தண்ணீர் ஆகிய வழிபாட்டுக்கு வேண்டிய பொருள்கள் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப் படும். தண்ணீர் ஊற்றி அனல் அணைக்கப்பட்டு எலும்பு களைப் பொறுக்கி ஓர் இலையில் வைப்பர். ஒரு சின்னஞ்சிறு

கலப்பையினைச் செய்து பிணம் எரித்த இடத்தை உழுது அதில் நவதானியங்களை விதைப்பர். வீட்டுக்குத் திரும்பிய பின் கொள்ளியிட்டவனுக்கு அவன் தாய்மாமன்மார் தலைப் பாகை கட்டுவர். ஒரு புது வேட்டியினை மடித்து அதன் மீது வெற்றிலையையும் வைத்துப் பதினாறு நாள்களுக்கு வழிபடு வர். பதினாறாம் நாள் பிராமணப் புரோகிதர் தர்ப்பைப் புல்லால் ஒரு மனித உருவினை அமைப்பார். அதனைக் கொள்ளி யிட்டவன் குறைந்தது இருபத்தைந்து முறை தொழுது வணங்க வேண்டும். ஒவ்வொரு முறை தொழும்போதும் குளித்து விட்டு வந்தே தொழ வேண்டும். அதன்பின் சேகரிக்கப்பட்ட எலும்பு கள் ஒரு புதுப் பானையில் வைக்கப்பட்டு ஓர் ஆற்றில் விடப் படும். அன்றிரவு சோறு சமைத்து வேறொரு புதிய வேட்டி யினை இறந்தவருக்காக வைத்து வழிபடுவர். சோறு வீட்டு வாசலிலேயே சமைக்கப்படும். கழுகுமரம் (கழுமரம்) எனப்படும் வீட்டுக்கு வெளியே நடப்பட்ட கம்பத்தில் ஒரு சேவலினைக் கட்டிப் போடுவர். அக் கழுகு மரத்திற்கும் சோறு படைக்கப் படும். ஒரு நூலின் ஒரு முனையை அம்மரத்தில் கட்டி மறு முனையினை வீட்டினுள் வழிபட வைத்திருக்கும் புதிய வேட்டி யோடு பிணைப்பர். அந்தக் கயிறு அசையும்வரை காத்திருந்து பிறகு அதனைத் துண்டிப்பர். கதவு மூடப்பட்டுச் சேவல் வீட்டின் முன் நடப்பட்டுள்ள கம்பத்தின் கூரிய முனையில் வைத்து அழுத்தப்பட்டுக் கொல்லப்படும். வெறும் தேர் ஒன்றி னைத் தெருக்களில் இழுத்துச் செல்வதோடு பிச்சைக்காரர் களுக்குத் தானமும் வழங்குவர். கணவனை இழந்தவள் பன்னிரண்டு மாதங்கள் தனித்து இருக்கக் கடமைப்பட்டவள். வளர்ந்த மணம் முடிக்கப்பெறாத ஆணோ பெண்ணோ இறக்க நேர்ந்தால் தர்ப்பையால் ஒரு மனித உருவம் செய்து அதனை இறந்தவர்கள் பிணத்திற்குச் சில மணச் சடங்குகளுடன் மணம் செய்து வைப்பர்.

இடையர்கள் வைணவர்கள். இவர்களுள் மிகுந்த நாகரிகம் பெற்றவர்கள் வைணவப் பிராமணர்களைப் போலச் சங்கு சக்கர முத்திரை பொறித்துக் கொள்வர். சனிக்கிழமை இவர் களுக்குப் புனித நாளாகும். ஹஜயந்தி எனப்படும் கிருஷ்ணா

ஜயந்தியான கண்ணன் பிறந்த நாளே இவர்களுடைய சிறப்பான திருவிழா நாளாகும். பால் கறப்பதற்காகப் பயன்படுத்தப்படும் பாத்திரங்களை இவர்கள் புனிதமானவையாகக் கருதுவர்.

இடையனுடைய புத்தி அவன் கழுத்துக்குப் பின்பக்கம் என்பது பழமொழி. அவன் தன் பிடரியில் அடிப்பட்டே புத்தி வரப் பெற்றான் என்பது இப் பழமொழி தொடர்பாக வழங்கும் கதையாகும். "தன்னுடைய தோளில் குறுக்கே வளை கோலினை வைத்தபடி தன் வீட்டுக் கதவு வழியே நுழைய முயற்சி செய்த இடையன் அவ்வாறு நுழைய இயலாதபோது, அவன் பிடரியில் சில அடிகள் கொடுத்து உள்ளே தள்ளியவுடன் வளைகோல் கீழே விழ, வீட்டினுள்ளே நுழைந்துவிட்டான். இடையர்களிடையே ஆண்டியும் இல்லை. குயவர்களிடையே தாடனுமில்லை என்பது இன்னொரு பழமொழி. ஆண்டி சைவ சமயம் சார்ந்தவனாகவே இருப்பான். இடையர்கள் வைணவர்கள் ஆகையால் அவர்களுள் சைவ சமயம் சார்ந்த ஆண்டி இருக்க முடியாது. குயவர்கள் சைவர்களாகையால் அவர்களிடையே வைணவம் சார்ந்த தாடன் இருக்க முடியாது. மூடர்களாக இருக்கும் காரணத்தால் இடையர்கள் தங்களிடையே சச்சரவுகள் நேரும்போது ஒரு முடிவுக்கு ஒத்துப் போகமாட்டார்கள். ஆகையால் இடையர்களிடையேயான பூசல் என்றும் தீராது என்ற பழமொழி வழங்குகின்றது. ஆடு மாடுகளை வளர்ப்பதையும், மேய்ப்பதையும், அவற்றின் பாலை விற்று வாழ்க்கை நடத்துவதையும் இடையர்கள் மேற்கொண்டிருப்பதால் இவர்களால் பயிர்த்தொழிலில் திறமையுடையவர்களாக விளங்க முடியவில்லை. இதனை விளக்கும் வகையில் அமைந்த பழமொழிதான், 'இடையனும் பள்ளியும் இறைத்த புலம் சாவி' என்பது."*

மறைத்திரு எச். ஜென்சன்† எடுத்துக் காட்டியுள்ள இடையர்களைப் பற்றிய பழமொழிகள் வருமாறு:-

---

* சென்னை மெயில் நாளிதழ் 1904. (Madras Mail, 1904.)

† வகைப்படுத்தப்பட்ட தமிழ்ப் பழமொழிகள். 1897, (Classified Collection of Tamil Proverbs, 1897.)

1. இடையனுக்கும் அவன் கீழ் வேலை பார்க்க மூடனான ஒரு வேலைக்காரன் கிடைப்பான்.

2. எதையும் கொடுக்க முடியாத ஆட்டிடையன் குட்டியோடு இருக்கும் பெரிய ஆட்டைக் காட்டியதைப் போல.

3. இடையன் கெடுத்தது பாதி, மடையன் கெடுத்தது பாதி.

1904–ஆம் ஆண்டில் மதுரையில், இடையர்களுக்கான யாதவர் பள்ளி என்ற பெயரில் ஒரு தொடக்கப் பள்ளி ஏற்படுத்தப் பட்டது.

இடையர்கள் பொதுவாகச் சூடிக் கொள்ளும் பட்டப்பெயர் கோனார் என்பதாகும். கோன் என்பதன் பொருள் அரசன். 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் பிள்ளை, கரியாளன் என்ற பட்டங்களும் இவர்களுக்குரியனவாகப் பதியப்பட்டுள்ளன. 1891 கணக்கெடுப்பு அறிக்கையில், இடையன் என்பது வக்கலிகரின் உட்பிரிவாகத் தரப்பட்டுள்ளது. சேலம் மாவட்டக் கையேட்டில் இடையன் சாணான் என்பதற்கான மற்றுமொரு பெயராகத் தரப்பட்டுள்ளது.

திருவாங்கூரில் குடியேறியுள்ள இடையர்கள் பற்றிய பின் வரும் குறிப்புகளுக்கு நான் திரு என். சுப்ரமணி அய்யருக்குக் கடப்பாடுடையேன். அண்மையில் வந்து குடியேறிய தேவளம், அகஸ்தீசுவரம், செங்கோட்டை ஆகிய பகுதிகளில் மட்டும் பெருமளவில் காணப்படும் தமிழ் பேசும் இடையர்கள், மத்திய திருவாங்கூரைச் சேர்ந்த வட்டங்களிலும், கார்த்திகப் பள்ளியிலுமே சிறப்பாகக் காணப்படும் மலையாளம் பேசும், நீண்ட காலத்திற்கு முன்பே வந்து குடியேறிய இடையர்கள் என இவர்கள் தெளிவாகப் பிரித்தறியக்கூடிய இரு பிரிவினராகக் காணப் படுகின்றனர். திருவாங்கூரில் இடையர்கள் பெரும் அளவில் காணப்படாததற்கான காரணம் இடைச்சேரி நாயர் எனப்படும் இப்பகுதிக்கு உரிய சூத்திர சாதியார் இடையர்களின் அதே தொழிலைச் செய்து வருவதே எனலாம். இவர்கள் கங்காயன் (ஆட்டிடையன்), பூவண்டர் என்ற இரு பிரிவினராக உள்ளனர்.

இவர்களிடையே மண உறவோ, ஒருவரோடு ஒருவர் உண்ணும் பழக்கமோ இல்லை. பூவண்டருள் பாசி, கோபாலன், நம்பி, வளையிட்டாயன் என்ற நான்கு உட்பிரிவுகள் இருப்பதாகத் தெரிகின்றது. பூவண்டன் என்பது பல்லக்குச் சுமப்பவன் எனப் பொருள் தரும் போந்தன் என்பதன் திரிந்த வடிவமாகும். தமிழ்நாட்டில் பல்லக்குச் சுமப்பது இடையர்களின் கடமைகளில் ஒன்று என்பது அனைவரும் அறிந்ததே. அவர்களிடையே சிவி அல்லது சிவியார் என்ற உட்பிரிவு இருப்பதும் இதனை உறுதிப்படுத்தும். திருவாங்கூரின் பழைய நில உரிமை உறுதிப்பாட்டு ஆவணங்களில் இவர்கள் சிவியர் எனக் கூறப்பட்டுள்ளனர். பலர் இதனைப் பூக்களைத் திரட்டுபவர் எனக் கற்பனையாகப் பொருள் செய்கின்றனர். சிவியர் பல்லக்குச் சுமப்பதில் திறமைசாலிகள் ஆகையால் இவர்கள் தமிழ் நாட்டிலிருந்து இடைக்காலத்தில் அரசர்களுக்குப் பணிபுரிய அழைத்து வரப்பட்டவர்களாதல் வேண்டும். இன்று அவர்கள் தங்கள பரம்பரைத் தொழிலைச் செய்வதோடு பயிர்த்தொழிலிலும், வணிகத்திலும் ஈடுபட்டுள்ளனர். சமூகத்தில் பூவண்டர் நிலை தாழ்ந்ததாக இல்லை. பிராமணர்களுக்கு உரிய வண்ணாரும் நாவிதரும் இவர்களுக்குப் பணி செய்கின்றனர். கோயில்களுள் நுழையும் உரிமையுடைய இவர்கள் மத்திய திருவாங்கூரைத் தவிரப் பிறவிடங்களில் நாயர்கள் செல்லும் தூரம் வரை கோயிலினுள் செல்கின்றனர். ஊன் உண்ணும் இவர்களுக்கு மதுவகைகளைப் பயன்படுத்துவதில் கட்டுப்பாடு ஏதும் இல்லை. சடங்குகள் நடைபெறும் சமயங்களில் பெண்கள் தமிழ் இடையன்களைப் போல உடை அணிகின்றனர். மற்ற நேரங்களில் நாயர்களின் உடையினையே அணிவர். மணச் சடங்கில் அணியும் தாலி சங்குத் தாலி எனப்படும். சங்கு வடிவில் அமைக்கப்பட்ட அணியே அதில் சிறப்பான பகுதி. வழக்கமான இந்துக் கடவுளர்களோடு கூட இவர்கள் மாடம், யக்ஷி, மருதா ஆகிய தேவதைகளையும் வழிபடுகின்றனர். மணச் சடங்கின் போது இடையன சாதியைச் சேர்ந்த மணமகன் தன் இடக் கையில் ஒரு வாளினைத் தாங்கியபடி வலக் கையால் மணமகளைப் பற்றியிருப்பான். சாவுச் சடங்குகளை மேற்பார்த்து நடத்தி வைப்பவன் நாவிதனே. பிணங்களை எரிக்கவோ புதைக்கவோ செய்வர். சாவுக்குப் பின் இவர்கள்

பதினொரு நாள் தீட்டு மேற்கொண்டாலும் பதினாறாம் நாள் முடியும்வரை கோயில்களில் நுழைய அனுமதிக்கப்படுவதில்லை. கர்க்கடகம் (ஆடி) மாதத்தில் அமாவாசையன்று இறந்துபோனவரின் நினைவாக ஆண்டுக்கு ஒருமுறை சடங்கு நடத்துவர். அப்போது இச்சாதியைச் சேர்ந்த பலரும் வர்கலைக்குச் சென்று உரிய சடங்குகளைச் செய்வர். இச்சாதியில் தம்பி, சாமி, பகவதி, சாட்டு போன்ற தமிழ்ப் பெயருடைய பலரை இன்றுங் காணலாம்.

**இடகொட்டு – Idakottu (those who break)**

ஒட்டேகளின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம். சாலைப் பணியாளர்களான இவர்கள் சாலை ஓரங்களில் கல் உடைக்கின்றனர்.

**இடங்கை - Idangai (left hand)**

கணக்கெடுப்பின்போது தேவதாசிகளின் ஒரு பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. இவர்கள் இடங்கைச் சாதியாருக்குப் பணி புரிபவர்கள்.

**ஈதிகர் - Īdiga**

பனை, ஈச்ச மரங்களிலிருந்து கள் இறக்கும் தொழிலைப் பரம்பரையாகச் செய்துவரும் தெலுங்கு பேசும் இவர்கள் ஒவ்வொரு வட்டாரத்திலும் ஒவ்வொரு பெயரால் அழைக்கப்படுகின்றனர். எடுத்துக்காட்டாகச் சேலம், வட ஆர்க்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களில் இவர்கள் ஈதிகர் அல்லது இந்திரர் எனவும், வடசர்க்கார் மாவட்டங்களிலும், நெல்லூரிலும் கமல்லர் அல்லது கமண்டல் எனவும், கடப்பை மாவட்டத்தில் அதிலியர் எனவும் அழைக்கப்படுதலைக் கூறலாம்.

வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் ஈதிகர் பற்றிப் பதியப்பட்டுள்ளவை வருமாறு:- தெலுங்குப் பகுதியைச் சேர்ந்த கள் இறக்கும் சாதியாருள் ஈதிகரும் அடங்குவர். இறக்குதல் எனப் பொருள்படும் ஈதிச்சு என்ற தெலுங்கு சொல்லிலிருந்து இச் சாதியின் பெயர் அமைந்துள்ளது. பலிசர் சாதியின் ஒரு

பிரிவினரான இவர்கள் தொழில் காரணமாக அச்சாதியிலிருந்து பிரிந்து தனிச் சாதியாராக ஆனதாகக் கூறப்படுகிறது. பெரும் பாலும் வைணவர்களான இவர்கள் சாதானிகரைத் தங்கள் பூசாரிகளாகக் கொண்டுள்ளனர். தண்டு ஈதிகர்*, பலிச ஈதிகர் என இவர்கள் இரு பிரிவினராக உள்ளனர். இவர்களுள் முன்ன வர் சாராயம் காய்ச்சும் தொழிலினை மேற்கொண்டிருந்தனர். இன்று அத்தொழில் தனிக் குத்தகை உரிமையாகிவிட்டதால் இவர்கள் சாராயம் விற்கும் தொழிலை மட்டும் மேற்கொண்டுள் ளனர். பலிச ஈதிகர் கள்ளும், பதநீரும் இறக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். சில தொழில் வழக்குகளில் இவர்கள் சாணாரி லிருந்து வேறுபட்டவர்களாக உள்ளனர். தமிழர்கள் மரம் ஏறும்போது கத்தியினை இடுப்பில் பின்பக்கமாகத் தொங்க விடுவர். தமிழர்கள் தென்னை மரங்களிலிருந்தே பதநீர் இறக் குவர். அரிதாகவே ஈச்சமரத்திலிருந்து பதநீர் இறக்குவர். தெலுங்கன், பனை, ஈச்ச மரங்களிலிருந்து பதநீர் இறக்குவரே யன்றித் தென்னை மரத்திலிருந்து இறக்குவதில்லை. இவர்கள் சிறப்பாக வழிபடும் தெய்வம் எல்லம்மா. அத் தேவதையே கள், சாராயத்திற்குரிய தேவதை. ஞாயிறுக்கிழமை தோறும் கள் குடங்கள், சாராயப் பானைகள் ஆகியன மலர், குங்குமம் முதலியவற்றால் அலங்கரிக்கப்படுவதோடு அவற்றிற்குப் படையலும் இடப்படும்."

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "ஈதிகர் கோதாவரி மாவட்டத்தில் உள்ள ராசமகேந் திரத்தைச் சேர்ந்த பலிசர்களின் வழித் தோன்றல்கள் எனக் கூறப்பட்டுள்ளது. இவர்கள் தொழில் காரணமாகத் தனிச் சாதியாராக மாறிவிட்டனர். இவர்கள் அகமணக்கட்டுப்பாடு உடைய இரு பிரிவினராக உள்ளனர். அவை தண்டு, பள்ளி எனவோ பாத்த (பழைய), கொத்த (புதிய) எனவோ அழைக்கப்படும். இவர்கள் சாதித் தலைவன் கௌடு என அழைககப்படுவான். தங்கள் சடங்குகளை நடத்த இவர்கள்

* முன்பு ஈதிகர் பாளையக்காரர்களின் கீழ்ப் படைவீரர்களாக இருந்தனர் எனக் கூறப்படுகிறது.

பிராமணர்களையே அமர்த்துகின்றனர். இவர்கள் சடங்கை நடத்தும் பிராமணர்கள் மற்ற பிராமணர்களால் சமமாகவே நடத்தப்படுகின்றனர். இறந்தவர்களைப் புதைக்கும் இவர்கள் பன்னிரண்டு நாள்கள் தீட்டினை மேற்கொள்கின்றனர். அப்போது இவர்கள் ஊன் உண்பதில்லை. மது அருந்துதல் கண்டிப்பாக விலக்கப்பட வேண்டியதொன்று. அவ்வாறு மது அருந்துபவர்களைச் சாதித் தலைவன் கடுமையாகத் தண்டிப்பான். காசுல பிரிவுப் பலிசர்களைத் தவிர மற்ற எல்லாப் பிரிவுப் பலிசர்கள் வீட்டிலும் இவர்கள் உண்பர். அய்ய, அப்ப, கௌடு என்பன இவர்கள் பட்டப் பெயர்களாம்'' எனக் கூறப்பட்டுள்ளது.

''வட மாவட்டங்களில் வாழும் கள் இறக்கும் தெலுங்குச் சாதியார் எட்டு அல்லது ஒன்பது அடி உயரமுள்ள ஏணியினைப் பயன்படுத்துகின்றனர். இதனை மரத்தில் சார்த்தி வைப்பதால் மூன்றில் ஒரு பங்கு அல்லது நான்கில் ஒரு பங்கு உயரம் ஏறுவதைத் தவிர்க்கின்றனர். மரத்தில் ஏறும்போதும், இறங்கும்போதும் இவர்கள் ஒரு வட்ட வளையக் கயிற்றினை மரத்தினையும் தங்கள் முதுகினையும் சுற்றி இருக்கும்படியாகப் பயன்படுத்துவர். இந்தக் கயிற்றின் முனையில் உள்ள ஒரு தும்பினால் இதனை எளிதாக முடிச்சிட்டு இறுகக் கட்டிக் கொள்ளலாம். முதுகுப் பகுதியைக் காக்க அழுத்தமான மென்மையான தோல் அக்கயிற்றில் பொருத்தப்பட்டிருக்கும். இது மரத்தில் எளிதில் ஏறவும் இறங்கவும் பெரிதும் உதவுகின்றது. தென்மாவட்டங்களைச் சார்நத சாணார், தியயன்களிடையே இது போல ஏணியையும், வட்ட வளையத்தையும பயன்படுத்தும் வழக்கம் இல்லை. இவர்கள் தங்கள் கைகளையும், மேற்கைகளையும் பயன்படுத்தியே மரத்தில் ஏறவும் இறங்கவும் செய்கின்றனர். மரம் ஏறும்போது பாதங்கள் இணைந்திருக்கத் தென்னம் நாரால் ஆன கயிற்று வட்டினைப் பயன்படுத்துகினறனர்'' எனத் திரு எப். பாவ்செட் குறித்துள்ளார்.

ஈதிகர் மகாபாரத்ததை இயற்றிய வியாச முனிவரின் வழித் தோன்றல்கள் எனக் கூறிக் கொள்கின்றனர். கோதாவரி மாவட்டத்தைச் சார்ந்த ஈதிகர் பற்றிய ஒரு குறிப்பில் திரு. எப். ஆர். ஹெமிங்வே இவர்கள் ஆண்டுக்கு ஒரு முறை ஒரு தேவதைக்குக்

கோழிகளைப் பலியிடுவதாகவும், நாள்தோறும் முதன்முதல் மரத்திலிருந்து இறக்கப்படும் கள்ளிலிருந்து சில துளிகளை அத் தெய்வத்திற்குப் படைப்பதாகவும் கூறியுள்ளார். இந்த மாவட் டத்தில் இவர்களைப் பொதுவாகச் செட்டி என அழைப்பர்.

ஏணி ஈதிகர்களுக்கான சின்னமாகக் காஞ்சிவரத்தில் பதியப் பட்டுள்ளது.

**இடியர் - Idiya (pounder)**

1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் இவர்கள் கொங்கணிச் சூத்திரர்களின் ஒரு பிரிவினர் எனப் பதியப்பட்டுள் ளது. இடியர்கள் தனித்ததொரு முறையில் அரிசியினைத் தயா ரிப்பர். நெல்லினைத் தண்ணீரில் ஊற வைத்தபின், அடுப்பில் வறுத்தெடுத்துச் சூடாக இருக்கும்போதே உரலில் இட்டு உலக் கையால் இடிப்பர். இந்த அரிசி அவல் எனப்படும். திருவாங் கூரில் இது சுவையான உணவாகப் பயன்படுத்தப்படுவதோடு சில சமயச் சடங்குகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

இடியர் கொச்சிக்கு அருகிலுள்ள தங்கள் வாழ்விடத்தினை விட்டு முன்னாள் திருவாங்கூர் அரசர் ஒருவரின் அழைப்பின் பேரில் திருவாங்கூரில் வந்து குடியேறியதாகக் கூறப்படுகிறது. இங்கு இவர்கள் வந்து சேர்ந்தவுடன் வரியில்லாது அனுபவிக்க தென்னந்தோப்புக்களும், நெல் வயல்களும் கொடுக்கப்பட்டன. இதற்கு ஈடாக அவர்கள் மகாராசாவின் அரண்மனைக்கும், ஸ்ரீ பத்மனாபசுவாமி கோயிலுக்கும் தேவைப்படும் அவலை அவ்வப் போது கொடுத்து வர வேண்டும் என ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது.

**ஈக - Iga (fly)**

முத்ராசாகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். இதனை ஒத்த ஈகல என்ற பிரிவு ஏனாதியரின் புறமணக் கட்டுப்பாடு உடைய குலமாக உள்ளது.

**இலை - Ilai (leaf)**

இலை அல்லது எலை தீகலர், தொரையர் சாதிகளின்

உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. இவர்கள் வெற்றிலைக் கொடிக்கால் பயிரிடுகின்றனர். இலை வாணியன் என்பது திருநெல்வேலியில் வெற்றிலை விற்கும் சேனைக்குடியன் பிரிவுக்கு மற்றுமொரு பெயராக வழங்குகின்றது.

**இளையாட்டக்குடி - Ilaiyāttakudi**

நாட்டுக்கோட்டைச் செட்டிகளின் ஓர் உட்பிரிவு.

**இளங்குடியன் - Ilakudiyan**

1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் நாயர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**இளமகன் – Ilamagan**

''மதுரையில் உள்ள திருப்பத்தூர் சமீன்தாரி வட்டத்தைச் சார்ந்தே பெரிதும் காணப்படும் பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ள சாதி இளமகன். இதன் நேர் பொருள் இளைஞன் என்பதாம். எனினும் மற்ற சாதியார், இதற்கு குதி தாழ்ந்தவன் என விளக்கம் சொல்வர். ஒரு கூற்றுப்படி இவர்கள் வல்லம்பன் பெண்களுக்கும் வேளாளர் ஆண்களுக்கும் பிறந்தவர்கள் எனவும், மற்றொரு கூற்றுப்படி சாதி விலக்கம் செய்யப்பட்ட வலையர், கள்ளர், மறவர் சாதியின் கலப்பால் தோன்றியவர் எனவும், மூன்றாவதொரு கூற்றுப்படி வேளாளர். பள்ளிகள் ஆகியோரின் முறை தவறிய உறவால் பிறந்த குழந்தைகள் எனவும் கருதப்படுகிறது. இச்சாதியார் கள்ளர்களையும், வலையர்களையும் போலத் தங்கள் காது மடல்களைத் தொங்கும்படியாகச் செய்து கொள்வதோடு தலையினையும் மழித்துக் கொள்ளாது விட்டுவிடுவர். பிறந்த இடப்பகுதியின் அடிப்படையில் இச்சாதி இரண்டு அல்லது மூன்று அகமணக்கட்டுப்பாடு உடைய பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவர்கள் சடங்குகளை நடத்தப் புரோகிதர்களை அமர்த்துவதில்லை. கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ளலாம். இறந்தவர்களைப் புதைப்பதே பெருவழக்கு. பன்றி, ஆடு, கோழி, மீன் ஆகியவற்றின் ஊனினை இவர்கள் உண்பர். இக் காரணங்களால் இவர்கள் சமூகப் படிநிலையில்

உயர்ந்தவர்களாகக் கருதப்படாமல் கள்ளர்களோடு ஒத்தவர்களாகவே வைக்கப்பட்டுள்ளனர். இச் சாதிக்குரிய தலைவன் அம்பலம் என அழைக்கப்படுவான்" எனத் திரு பிரான்சிஸ் இவர்களைப் பற்றிக் கூறியுள்ளார்.* 1891 கணக்கெடுப்பில் இளமகன் மறவர் சாதியின் ஓர் உட்பிரிவாகத் தரப்பட்டிருப்பதால் இவ்விரண்டு சாதிகளும் நெருங்கிய உறவுடையன ஆகலாம் எனக் கருத இடம் உள்ளது.

**இளம்பி - Ilambi**

1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் நாயர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**இளயது - Ilayatu**

பார்க்க - இளையது. (See: Elayad)

**இல்ல - Illa (of a house)**

ஏனாதியரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**இல்லம் - Illam**

திரு விக்ரம் தனது 'மலபார் சட்டங்களும் வழக்கங்களும்' என்ற நூலில் இல்லம் என்பது சாதாரணமாக நம்பூத்ரி பிராமணன் வீட்டினைக் குறிக்கும் எனக் கூறியுள்ளார். 1901 திருவாங்கூர் மாவட்டக் கையேட்டில் இல்லம் நாயர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. தமிழ்நாட்டைச் சேர்ந்த பணிக்கன்கள் சிலர் தங்களை இல்லம் வேளாளர் எனக் கூறிக் கொள்கின்றனர். இவர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய குலங்களும் இல்லம் எனப் பெயர் பெறுகின்றன. திருவாங்கூரில் இல்லக்கார் அல்லது இல்லத்து என்பது பிராமணர்கள் வீட்டினைச் சார்ந்து வாழும் நாயர்களின் ஓர் உட்பிரிவினருக்கான தொழில் அடிப்படையிலான பெயராகக் கருதப்படுகிறது.

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை. 1901. (Madras Census Report, 1901.)

இல்லக்கார் என்பது மூவராயிரவர் எனக் கூறப்படும் மலை அரையன்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலமாகவும் உள்ளது.

**இல்லு வெள்ளனி - Illuvellani**

இல்லம் என்பதன் அடியாகத் தோன்றிய இப்பெயர் வெள்ளாணி என்பதனுடன் இணைந்து வீட்டை விட்டு வெளியே செல்லாதவர்கள் என்ற பொருளைத் தரும். இது கம்மார்களின் ஓர் உட்பிரிவு. இவர்களின் மனைவியர் வீட்டினை விட்டு வெளியே செல்லுதல் இல்லை.

**இணக முக்கு பட்ராசு - Inaka Mukka Bhatrāzu**

பத்ம சாலே சாதியோடு இணைக்கப்பட்ட இரவலர்கள்.

**இணங்கள் - Inangan**

பார்க்க: எணங்கன். (See: Enangan)

**இனப் புலையர் - Ina Pulaya**

திருவாங்கூரைச் சேர்ந்த புலையர்களின் ஓர் உட்பிரிவு.

**இண்டல - Indla (house)**

செஞ்சு, முத்ராச சாதிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**ஈந்திர - Īndra**

பார்க்க: ஈதிகர். See: Idiga

**ஈனிச்சி - Īnichi (squirrel)**

அணில் எனப் பொருள்படும் இது குர்ணிகளின் ஒரு கோத்திரம்.

**இந்ரவர் - Inravar**

இந்திரனைக் குறிப்பதான ஒரு தமிழ் வடிவம்.

**இப்பி - Ippi** (*Bassia longifolia* :mahua)

பண்ட ரெட்டிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். இந்தக் கோத்திரத்தைச் சேர்ந்த பெஸ்தர் இப்பி (இலுப்பை) மரத்தைத் தொடவோ பயன்படுத்தவோ மாட்டார்கள்.

**இரண்டெருது - Iranderudhu** (two bullocks)

வாணியரின் ஓர் உட்பிரிவு. இவர்கள் செக்கில் இரண்டு எருதுகளைப் பூட்டுவர்.

**ஈரணி - Irāni** (earthern vessel used at marriages)

குர்ணிகளின் ஒரு கோத்திரம். மணச் சடங்கின்போது பயன் படுத்தப்படும் புது மட்கலங்களைக் குறிக்கும் பெயர்.

**ஈரானி - Irāni**

சியா பிரிவைச் சேர்ந்த முகலாயக் குடிகளான முகமதியரைக் குறிக்கும் நிலப்பகுதி சார்ந்த பெயர். ஈரானியர் அல்லது பெலுச்சியர் எனப்படும் நாடோடிப் பழங்குடிகளான இவர்களைப் பற்றித் திரு பாப்பா ராவ் நாயுடு கூறியுள்ளன வருமாறு:–* "தொல்லை தரும் நாடோடிகளான இவர்கள் இந்தியா முழுவதும் பட்டப் பகலில் ஊர்ப் புறங்களிலும் நகர்ப் பகுதிகளிலும் வீடுகளிலும் கடைகளிலும் தண்டனைக்கு ஆட்படாத வகையில் பெரும்பாலும் குற்றச் செயல்களில் ஈடுபடுகின்றனர். மிக அரிதாகவே குற்றத்திற்கான தண்டனையைப் பெறுகின்றனர். இவர்கள் மட்டக் குதிரை, கத்தி, கத்தரி, தாழ்ப்பாள் போலிக் கற்கள், முத்துக்கள், பலவகைச் சிறு அணிமணிகள், பொம்மை, பாசி, பாதரசம், கள்ள நாணயம் ஆகிய இவைகளை விற்க வருபவர்களைப் போல வெளிக்கு வேடமிட்டுத் திரிவர்.

"இவர்கள் தங்கும் இடம் சில சிறு கூடாரங்களைக்

---

* இந்தியக் குற்ற நடத்தைப் பழங்குடிகள், எண். III, சென்னை, 1907. (Criminal Tribes of India, No. III, Madras, 1907.)

கொண்டதாக இருக்கும் அங்கே சில மட்டக் குதிரைகள், சமையல் பாத்திரங்களைக் கொண்டு செல்லும் பொதிகள், அழுக்குத் துணிமணிகள், வியாபாரப் பொருட்கள் அடங்கிய தோல்ப் பைகள், பொதிச்சாக்குகள், சில போர்ச் சேவல்கள், கூண்டிலடைக்கப்பட்ட பறவைகள் ஆகியன இருக்கும். சேவற் போரில் மிகுந்த ஆர்வம் உடைய இவர்கள் அதில் பத்து ரூபாய் முதல் ஐம்பது ரூபாய் வரை கூடப் பந்தயம் கட்டுவர். போரிடும் இச் சேவல்களை வளர்த்து இவர்களே பயிற்சியும் தருகின்றனர்.'' ஈரானியருடைய குற்றம் இழைக்கும் முறைகளைப் பற்றி அறிந்து கொள்ள விரும்புவோர் திரு பாப்பா ராவ் நாயுடுவின் நூலினைப் பார்க்க வேண்டுகின்றேன்.

**இரண்யவர்மா - Iranyavarma**

இது முற்காலப் பல்லவ அரசர்களில் ஒருவன் பெயர். கணக்கெடுப்பின்போது செல்வ வளமுடைய சில பள்ளியர் இதனைத் தங்கள் சாதிப் பெயராகப் பதிந்துள்ளனர். இவர்கள் சோழகனார் என்ற பட்டப்பெயரைத் தரித்துக் கொள்வதோடு தங்களைச் சோழர் பரம்பரையில் வந்தவர்களாகவும் கூறிக் கொள்கின்றனர்.

**இரட்டைச்செக்கான் - Irattai Sekkan**

வாணியர்களின் ஓர் உட்பிரிவினர். இவர்கள் தங்கள் செக்கில் இரண்டு எருதுகளைப் பூட்டுவர்.

**இறயன் - Iraya**

மலபாரைச் சேர்ந்த செறுமான்களுக்குரிய ஒரு பெயர். இவர்கள் தங்கள் பண்ணையார் வீட்டின் இறவாரம் வரை நெருங்கி வர அனுமதிக்கப்படுகின்றனர்.

**ஈர்ச்சக் கொல்லன் - Irchakkollam (timber sawyer)**

திருவாங்கூரைச் சேர்ந்த தச்சக் கம்மாளருக்கான மற்றுமொரு பெயர்.

**ஈர்கொலி - Irkuli**

ஈரத்தை அகற்றும் வேளாளர் எனப் பொருள்படும் இது ஈரத்தை அகற்றும் தொழில் செய்யும் வண்ணார் குடிக் கொள்ளும் பெயர்.

**ஈர்பிண - Irpina (comb)**

சீப்பு எனப் பொருள்படும் இது கம்மர்களின் புறமணக் கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர்.

**இருளர் (நீலகிரியைச் சேர்ந்த) - Irula of Nilgiris**

இவர்கள் நீலகிரியைச் சேர்ந்தஇருளர். மனித இன இயல் ஆராய்ச்சியாளர்களின் சொர்க்கம் எனக் கூறப்படும் கோத்தகிரிக் கடைத் தெருவில் கோத்தர், படகர், கன்னடர், இருளர், குறும்பர், சிலபோது கொடநாடு மந்தையிலிருந்து ஒரு தோடன் ஆகியோர் ஒருசேரத் திரண்டிருக்கக் காணலாம். நான் அங்கு இந்தப் பழங்குடியினரை ஓர் ஒளிப்படம் எடுத்தேன். உடனே, “கீழே கையொப்பம் இட்டுள்ள எங்களை நீங்கள் ஒளிப்படம் எடுத்தீர்கள். ஆனால் அதற்காக எங்களுக்குத் தொகை ஏதும் தரவில்லை. எனவே தாங்கள் கருணை கூர்ந்து எங்களுக்கு நியாயம் வழங்கும்படி கேட்டுக்கொள்கிறோம்” என்ற விண்ணப்பத்தோடு என்னைப் பார்க்க அவர்கள் வந்தனர். அவ்வாறு வந்த அவர்கள் மகிழ்ச்சியோடு திரும்பும்படியாக அவர்களுக்குக் காபிச் செலவுக்கான தொகை தரப்பட்டது.

நான் இருளர்களைத் தேடியலைந்து மலேரியா காய்ச்சலுக்கு ஆளானேன். அப்போது பல மலைத்தோட்ட முதலாளிகளினுடைய உதவியினைப் பெறவேண்டி வந்ததோடு விருந்தோம்பலுக்குப் பெயர்போன அவர்களுடைய விருந்தினனாகவும் தங்கியிருந்தேன். ஒரு சமயம் இருளர் கூட்டம் ஒன்று ஒரு மலைத் தோட்டக்காரருடைய பங்களாவில் எனக்காக வந்து நான் தாராளமாகத் தொகை தருவேன் எனக் காத்திருக்கின்றது எனக் கேள்விபபட்டு அங்குச் சென்றேன். அந்தக் குழுவில், தடை செய்யப்பட்ட காட்டில், ஒரு யானையினைச்

சுட்டக் குற்றத்திற்காகச் சிறிது காலமாகத் தேடப்பட்டு வந்த ஒருவனும் இருந்தான். என்னைச் சந்தேகக் கண்களுடன் பார்த்த அவன், உயரம் எடுக்கும் அளவு கருவியினைத் தூக்குப் போடும் கருவி எனக் கருதி அந்த அளவினை எடுத்துக் கொள்ள மறுத்து விட்டான். அவனை ஒளிப்படம் எடுக்கவும் அவன் என்னை அனுமதிக்கவில்லை. அவ்வாறு படம் எடுக்கப்பட்டால் அது அவனைப் பின்னர் அடையாளம் கண்டுகொள்ளப் பயன் படுத்தப்படும் என்று (அளவுகளைக் கொண்டு குற்றவாளியைக் கண்டுபிடிக்கும் பெர்டிலொனேஜ் முறையினைப் பற்றிக் கேள் விப்படடிருக்க முடியாத) அவன் அஞ்சினான். இருளர்களைச் சூன்யம் வைத்து மயக்கும் ஒரு குறும்பனும் என் உதவியா ளர்களில் ஒருவனாக உள்ளான் என்ற தவறான வருந்தத்தக்க வதந்தியும் பரப்பப்பட்டது. இவ்வாறு இருளரை மயக்குவதால் எனக்கு என்ன லாபம் என்று எவரும் எண்ணிப்பார்க்கவில்லை.

நீலகிரியைச் சேர்ந்த பழங்குடிகளுள் படகர்கள் நல்ல நிறம் வாய்க்கப் பெற்றவர்கள். இதற்கு மாறானவர்களாக இருளர்கள் மிகக் கறுத்த நிறமுடையவர்களாக உள்ளனர். அவர்களுள் சிலர் மீது கரியால் கோடிட்டால் அது வெள்ளை அடையாள மாகத் தெரியும். இருளன் என்ற பெயர் இருட்டு அல்லது கறுப்பு என்ற பொருளைத் தருவது. மலைத்தோட்டங்களில் கூலிகளாகவோ, குத்தகைதாரராகவோ பணி செய்யாது, இவர் கள் தனித்து ஒதுங்கி இருக்கும் இருண்ட காட்டைக் குறித்து இப்பெயர் அமைந்ததா அல்லது இவர்களின் தோலின் நிறத் தைக் குறித்து இப்பெயர் அமைந்ததா என்பது தெளிவாகப் புரியவில்லை. பொதுவாக இருளர் கறுத்த தோலும் அகன்ற மூக்கும் உடையவர்களாயினும், நாகரிக மக்களுடன் இந்த இனத்தவர் கொண்ட தொடர்பால் ஏற்பட்ட உருமாற்றம் காரணமாக இவர்களுள் சிலர் குறிப்பிடத்தக்க வகையில் நல்ல நிறம் வாய்க்கப்பட்ட தோலும், நீண்ட மூக்கும் வாய்க்கப் பெற்றுள்ளனர்.

இருளர்கள் கொச்சைத் தமிழையே பேசுகின்றனர். இவர் கள் ரங்கசாமி என்ற பெயரால் விட்டுணுவை வழிபடும் சமய நெறிப்பட்டவர்கள். அத் தெய்வத்திற்குத் தங்களுடைய காட்

டுக் கோயிலில் அல்லது பிராமண அர்ச்சகர்கள் பூசை செய்யும் காரமடையில் சென்று வழிபாடு செய்வர். "இருளர் இனப் பூசாரி ஒருவன் இருளரின் கோயிலருகே வாழ்கிறான். அவன் தெய்வங்களுக்குப் பூசை செய்யும்போது மணியை ஒலிப்பான். அவன் நெற்றியில் சமயச் சின்னமாக நாமம் துலங்கும். பரம்பரை உரிமையான அப்பணியினை மேற்கொள்ளும் அவனுக்கு வழிபாட்டிற்கு வரும் இருளர்கள் பழம், பால் முதலியவற்றை அன்பளிப்பாகத் தருவர். மே அல்லது சூன் மாதத்தில் ஒவ்வொரு இருளர் குடியிருப்பும் அவனுக்கு இரண்டணாத் தரும். சத்திய மங்கலம் வட்டத்தில் ரங்கசாமி மலைமுடிக்கு வடக்குப் பக்க மாகக் கள்ளம்பள்ளம் என்ற இடத்தில் ஒரு கோயில் இருப்ப தாக இவர்கள் கூறுகின்றார்கள். அது ஒரு சிவன்கோயில். அங்கு மறியாடு பலியிடப்படுகின்றது. அங்குள்ள பூசாரி சைவத் துக்குரிய சின்னத்தை நெற்றியில் தரிப்பான். இவர்கள் சிவனுக் கும் விட்டுணுக்கும் இடையே உள்ள வேறுபாட்டினை அறி யார். கள்ளம்பள்ளத்தில் இருப்பது மாரியம்மா என அழைக்கப் படும் ஒரு கற்சிலையை உடைய கூரைக் கோயிலே. பெரியம் மைக்கு உரிய தெய்வம் எனப் பெயர்போன அதனை இருளர் இவ்வாறு வழிபடுகின்றனர். இக் கோயிலுக்கு ஒரு மறியாடு இழுத்துச் செல்லப்பட்டு, அதனமீது நீர் தெளித்தபின் அதன் கழுத்தை வெட்டி அதனைப் பலியிடுவர். இச் சடங்கில் எப் பங்கும் ஏற்றுக் கொள்ளாமல் பூசாரி தனித்தே அமர்ந்திருப் பான. பலியிடப்பட்ட ஆட்டின் உடல் கூறிடப்பட்டுப் பூசாரி யுட்படக் கூடியுள்ள இருளர் அனைவருக்கும் வழங்கப்படும்" எனப் பிரீக்ஸ் கூறியுள்ளார்.*

ரங்கசாமி மலைமுடியின் மீதுள்ள கோயில் தொடர்பாக நீலகிரி மாவட்ட விவரக் குறிப்பில் கூறப்பட்டுள்ள செய்திகள் வருமாறு:- "மேட்டு நிலத்திலுள்ள கோயில்கள் அனைத்திலும் புனிதமானது ரங்கசாமி மலைமுடியில் உள்ள கோயில். மேட்டுப் பாளையத்திற்கும் கோயமுத்தூருக்கும் இடையே சமவெளியில் உள்ள காரமடைக் கோயிலில் இருக்கும் ரங்கநாதர் தன் மனை

* நீலகிரியில் வாழும் பழங்குடி இனத்தவர்கள். (Primitive Tribes of the Nilgiris.)

வியுடன் ஊடல் கொண்டு இந்த மலையில் வந்து தனித்திருக்கின்றார் என இந்துக்களிடையே ஒரு பழங்கதை வழங்குகின்றது. இந்தக் கதைக்கு ஆதாரமாக அம்மலைச் சிகரத்தின் கீழே அமைந்துள்ள ஊரான அரக்கோட்டுக்கு அருகே உள்ள பாறையில் காணப்படும் இரு பாதச் சுவடுகளைச் சுட்டிக் காட்டுவர். மலைவாழ் பழங்குடிகள் சமவெளியில் உள்ள காரமடையில் வழக்கமாக நடைபெறும் தேரோட்டத் திருவிழாவிற்குத் தொல்லை தரும் நெடும்பயணம் மேற்கொள்கின்றனர். இதனைத் தடுக்கவே இது போன்ற ஒரு கட்டுக்கதை படைக்கப்பட்டிருக்க வேண்டும். இவ்வாறு பயணம் சென்று வருவதை ஒரு காலத்தில் இவர்கள் தங்கள் கடமையாகக் கருதினர். சில இடங்களில் படகர்களும் கோத்தர்களும் இதற்கு ஒரு படி மேலே சென்று தங்கள் ஊர்களிலேயே வழிபாட்டுக்கு ரங்கசாமி பெட்டுக்களை அமைத்துக் கொண்டுள்ளனர். ரங்கசாமி மலைமுடியில் திருத்தமில்லாச் சுவர்களால் சூழப்பட்ட இரு கோயில்கள் ரங்கசாமிக்கும் அவர் துணைவியாருக்குமாக அமைந்துள்ளன. இதனுள் வேண்டுதல் செய்து கொண்ட பக்தர்கள் அளித்த இரும்பு விளக்குகளும், குறியிடப்பட்ட துலாக்கோல்களும் கிடக்கக் காணலாம். இரு கல் உருவங்கள் தெய்வங்களாக உள்ளன. இக் கோயிலில் பரம்பரையாக ஓர் இருளனே பூசாரியாக இருந்து வருகின்றான். ஆண்டுத் திருவிழாவிற்கெனக் குறிப்பிடப்பட்டுள்ள நாளில் அவன் நந்திபுரம் அருகேயுள்ள தன் குடியிருப்பிலிருந்து வந்து மலையடிவாரத்திலுள்ள குட்டையில் குளித்த பின், 'கோவிந்தா, கோவிந்தா' எனக் கூவியபடி மலை உச்சிக்கு ஏறிச் செல்வான். அங்குக் கூடியுள்ள படகர், இருளர், குறும்பர் ஆகிய அனைவரும் மிக்க ஆர்வத்தோடு அதே போலக் கூக்குரலிட்டவர்களாகக் கோயிலைச் சுற்றி நிற்பர். தன் சங்கினை ஊதியும், முழவை அடித்தும் அந்த இரு கற்களிலும் தெய்வத்தை அருளேறும்படி செய்தபின் பூசாரி அவற்றிற்கு அபிடேகம் செய்து அவைகளை மலர்களால் அலங்கரிப்பான். அன்றிரவு மலையுச்சியில் உள்ள இரண்டு கற்குழிகளில் நெய்யினை நிரப்பி விளக்கேற்றுவர். சுற்று வட்டாரத்தில் பல மைல்கள் தூரம் அந்த விளக்குகளின் ஒளி புலப்படும். மழைக்காக வேண்டியும், மக்களும் கால்நடைகளும் நலமாக வாழ வேண்டியும்

வேண்டுதல் செய்து கொண்டபின் இருளர்களின் காட் நடனமும் பாற்பொங்களிடுதலும் நிகழும். அரக்கோட் லிருந்து ஒரு மைல் தூரத்தில் குடைக்கல் எனப்படும் துருத்தி கொண்டிருக்கும் ஒரு பாறை உள்ளது. அதன் அடியில் வெ ளைக் களிமண் கிடைக்கின்றது. திருவிழாவின்போது நெற்ற யில் நாமாகத் தரிக்க இருளர்கள் இந்த வெள்ளைக் களிமண் ணைப் பயன்படுத்துகின்றனர்.

இருளர்களின் கோயில் திருவிழாப் பற்றி ஹார்க்னெஸ் தந்துள்ள விவரங்கள்* வருமாறு:- "ஆண், பெண், குழந்தை கள் ஆகிய அனைவருடைய தலைமுடியும் வைக்கோல் பிரிகளை மாலைகள் போல் வைத்து விசித்திரமாக முடிச்சிடப்பட்டி ருக்கும். இவர்கள் தங்கள் கழுத்து, காது, கணைக்கால் ஆகிய வற்றையும் வைக்கோலால் ஆன அணிகளாலேயே அலங்கரித்துச் கொண்டிருப்பர். இவர்கள் தங்களுடன் உலர்ந்த கொட்டைகள் அல்லது சிறு கற்கள் இடப்பட்ட காய்ந்த சுரக் குடுக்கையினை உடன் எடுத்துச் செல்வர். நடக்கும்போது தங்கள் நடைக் கியைந்த லயம் உண்டாகும்படி அதனை ஆட்டி ஒலி எழுப்பிய படி இவர்கள் நடப்பர். இவர்களுடைய கோயில் எனக் கூறப் படும் கூரைக் குடிசைக்கு முன் இவர்கள் நடனம் நடைபெறும். நடனம் முடிவடைந்த பின் தெய்வத்திற்கு ஓர் ஆட்டுக் கிடா யையும் மூன்று சேவல்களையும் அவற்றின் கழுத்தை வெட்டிப் பலியிட்டு அவற்றை தெய்வ உருவங்களின் காலடியில் இடுவர். அப்பொழுது கூடியுள்ள அனைவரும் தரையில் விழுந்து வணங் குவர். கோயிலினுள் ஒரு முறம் அல்லது விசிறி உள்ளது. அது 'சிரெ'யின் சின்னமாகலாம். அந்த விசிறிக்குக் கொஞ்சம் இடைவெளிவிட்டு அதற்கு முன்னால் முன்பின்னாக இரண்டு கல் உருவங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றினை மொசுகானி என்றும், மற்றதைக் கோனாடி மாரி என்றும் இவர்கள் அழைக்கின்றனர். எனினும் அவை கோயிலின் உட்பகுதியில் உள்ள விசிறிக்குத் தகுதியில் கீழ்பட்டனவே."

---

* நீலகிரி மலையில் வாழும் ஒரு தனித்த பழங்குடி இனம் பற்றிய விளக்கம் - 1832. (Description of a singular Aboriginal Race inhabiting Neilgherry Hills, 1832.)

ஒரு காபித் தோட்டத்திற்கு அருகே உள்ள சிற்றூருக்கு நான் பார்வையிடச் சென்றிருந்தபோது அங்குத் தெரு நாய்களும், அம்மணமாகக் குழந்தைகளுமே திரிந்து கொண்டிருந்தன. பெரியவர்களும் வளர்ந்த சிறுவர்களும் வேலைக்குச் சென்றிருந்தனர். இரவில் திரியும் வேட்டை விலங்குகளிலிருந்தும், மற்ற உயிருக்கு ஊறு செய்யக்கூடிய பிற விலங்குகளிலிருந்தும் ஊராரைப் பாதுகாக்க ஊரைச் சுற்றி ஒரு முரட்டு வேலி இடப்பட்டிருந்தது. ஒற்றை அடுக்குக் குடிசைகள் மூங்கில் பிளாச்சுகளாலான முன் தாழ்வாரங்களோடு கூரை வேயப்பட்டு வரிசையாக நின்றன. அவற்றைச் சூழக் கோழி அடைக்கும் கூடுகள் மிக்கிருந்தன. சுரைக்கொடிகள் கூரை மீது ஒழுங்கின்றிப் படர்ந்திருந்தன. அடர்ந்த வாழைத் தோட்டங்களும், ஆமணக்குப் புதர்களும் கால்நடைக் கொட்டில்களும் ஊரைச் சூழ்ந்திருந்தன.

மலைத்தோட்டங்களுக்கோ காடுகளுக்கோ கூலி வேலைக்குப் போகாத சமயங்களில் இருளர் தங்கள் உணவிற்கான பயிர்த் தொழிலில் ஈடுபடுகின்றனர். ராகி, சாமை, தினை, துவரை, மக்காச் சோளம், வாழை முதலியவற்றோடு எலுமிச்சை ஆரஞ்சு, பலா முதலான பழச் செடிகளையும் இவர்கள் பயிரிடுகின்றனர். கோத்தர்களைப் போலவே இவர்களும் சனி, திங்கள் ஆகிய நாள்களில் பயிர்த்தொழிலில் ஈடுபடுவதில்லை. விதைப்புப் பருவங்களில் படகர் தேங்காய், பழம், பால், நெய் ஆகியவற்றைக் கைக்கொண்டு வந்து இருளரிடம் தருவர். இவர்கள் அவற்றைத் தங்கள் தெய்வத்தின் முன் படைத்துத் திரும்பவும் படகர்களிடமே கொடுத்து விடுவர்.

"இருளர் தங்கள் ஊருக்கு அருகே உள்ள சிறு துண்டு நிலங்களுக்கு உரிமை உடையவர்களாக உள்ளனர். இவர்கள் வாழ்க்கை நடத்த மலைத்தோட்டங்களில் பெறும் கூலியையே நம்பியிருந்த போதிலும், இந்தத் துண்டு நிலங்களில் சோம்பலின்றித் தானியங்களைப் பயிரிடுவதிலும் ஈடுபடுகின்றனர். வசதி படைத்த மலைத் தோட்ட முதலாளிகளின் கால்நடைகளைப் பேணிக்காக்கும் பணியிலும் இவர்களுள் சிலர் ஈடுபடுவதோடு அத்தொழிலில் கை தேர்ந்தவர்களாகவும் உள்ளனர். இன்று அதிலிருந்து கிடைக்கும் பால் பொருள்களின் வருமானம் அம்முதலாளிகளுக்கு காபித்

தோட்டங்களில் கிடைக்கும் அற்ப வருமானத்தோடு கூடத் துணை வருவாயாய் அமைகின்றது. ஆண்களைப் போலவே இருளர் பெண்களும் களைபிடுங்குதல் முதலான தோட்டத் தொழிலில் கைதேர்ந்தவர்களாக இருப்பதோடு தமிழ்க் கூலியாட்களைவிடச் சுறுசுறுப்புடையவர்களாகவும் நம்பிக்கைக்கு உரியவர்களாகவும் உள்ளனர்'' என அண்மையில் ஒரு பார்வையாளர் இவர்களைப் பற்றி எழுதியுள்ளார்.

''தேன், தேன்மெழுகு முதலான காடுபடு பொருள்களின் விற்பனையிலிருந்து அல்லது தங்கள் தோட்டங்களில் விளையும் பழங்களின் விற்பனையிலிருந்து இருளர்கள் அன்றாட உணவிற்குத் தேவையான தானியங்கள் முதலியவற்றை வாங்கிக் கொள்கின்றனர். தங்கள் நிலத்தில் விதைத்த பிறகு அவர்கள் அதனைப் பேணுவதில்லை. காட்டினை அழித்து மண்ணைக் கொத்தால் கிளறி, ஒரு குச்சியால் உழுது விதைத் தானியத்தைத் தங்கள் மனம்போன போக்கில் விதைப்பதோடு சரி. எனவே அந்நிலங்களில், பயிர் வளர்ச்சிகுன்றியதாக, ஓரளவே விளைவு தருகின்றது. தானியம் முற்றியவுடன் நிலம் குடியிருப்புக்குச் சற்று தூரத்தில் இருக்குமாயின், இவர்கள் குடும்பத்தோடு விளைந்த நிலத்தருகே குடிசை போட்டுக் கொண்டு தானியம் தீரும் வரை தங்கி இருப்பர். ஒவ்வொரு நாளும் காலையில் தங்கள் குடும்பத்திற்கு எவ்வளவு தானியம் தேவையெனக் கருதுகின்றார்களோ அந்த அளவு அவற்றைப் பிடுங்கி அருகில் இருக்கும் பெரிய பாறையின் மீது நெருப்பு மூட்டி அது நன்கு சூடானவுடன் தணலைத் தூர ஒதுக்கித் தள்ளியபின், தானியத்தை அக்கல்லின் ட து பரப்புவர். அது விரைவில் உலர்ந்து வறுபட்டுப் பக்குவமாய் விடுகின்றது. அவற்றைப் பிசைந்து பிட்டாக்கியபின் அக்கல்லினை மீண்டும் சூடாக்கிப் பிசைந்த பிட்டுக்களை அதன் மீது வைத்து வேக விடுவர். சற்றுக் குழிந்த பாறையிடம் இருக்குமாயின் அவ்விடத்தைச் சூடாக்கி அதில் நீரினை நிரப்பி உலர்த்தப்பட்ட தானியத்தையும் அதில் இடுவர். அது நன்கு கூழ்ப்பக்குவமாகிவிடும். இவ்வாறு நிலத்தில் உள்ள தானியம் தீரும்வரை அக்குடும்பம் நட்பும் சுற்றமும் சூழ நிலத்தில் விளைந்ததை உண்டு தீர்க்கும். இச்சமயம் அனைவரும் மகிழ்ந்து

கொண்டாடுவதற்குரிய பருவமாகும். அவர்கள் மகரியைக் கொண்டாடுவதோடு அந்த வழியே செல்பவர்களை எல்லாம் தங்கள் மகிழ்ச்சியில் பங்குகொள்ள வரும்படி அழைப்பர். இவ்வாறு உண்டு மகிழ அனைவரையும் அழைக்கும் குடும் பத்தினரை அண்டை அயலார் தங்கள் நிலத்தின் விளைவில் பங்கு கொள்ள மறு விருந்தாட அழைப்பர். இதன்பின் அடுத்த ஆண்டு விளைவு காணும் வரை இவர்களில் பலர் எருலுவேர் எனக் கூறப்படும் ஒருவகைக் கிழங்கைத் தின்று வாழ்கின்றனர்." என ஹார்க்னஸ் எழுதியுள்ளார்.

இருளர் சிலர் தற்போது வனத்துறையின் கீழ் பணியாற்று கின்றனர். வனத்துறையினர் இவர்களுக்குச் சலுகை தந்து காடுக ளின் ஓரங்களில் நிலங்களை ஒதுக்கிக் குடியிருப்பினை அமைத்துக் கொள்ள அனுமதிக்கின்றனர். இவர்கள் கடுக்காய், தேன், தேன் மெழுகு, வெம்படம்பட்டை (*Ventilago Madraspatna*) ஆவாரம்பட்டை (*Cassia austculata*), மான் கொம்பு, புளி, கோந்து, சீவக்காய் (*Acacia concinna*) ஆகிய காடுபடு பொருட் களைச் சேகரிக்கின்றனர். காடுகள் பல பகுதிகளாகப் பிரிக்கப் பட்டு, ஒவ்வொரு பகுதியிலும் ஒரு குறிப்பிட்ட இடம் வனத் துறைக் கிடங்காக ஏற்படுத்தப்பட்டுள்ளது. காடுபடு பொருட் களைச் சேகரிப்பவர்கள் - பெரும்பாலும் சோலகரும் இருளரும்- தங்கள் சேகரிப்பை அங்குக் கொண்டு வருவர். பின்னர் அவை தரம்பிரிக்கப்பட்டுச் சிறப்பு மேற்பார்வையாளர்களால் உரிய விலை வழங்கப்படும்.* தேன் சேகரிப்பு மிக ஆபத்தான தொழில். ஒருவன் கையில் தீப்பந்தத்துடனும், தோளில் தொங்கும் மூங்கில் குழாய்களுடனும் உயர இருந்து கயிற்று ஏணி அல்லது கொடி களாலான நூலேணி வழியாகக் கீழே இறங்கித் தேன் கூடு இருக்கும் இடத்தை அடைவான். தீப்பந்தத்தின் ஒளியினைக் கண்டவுடன் தேனீக்கள் தூரப் பறந்து விடும். அவன் தேன் ராட்டுக்களால் தன் மூங்கில் குழாய்களை நிரப்பியபின் மீண்டும் மேலே ஏறிப் பாறையின் உச்சியை அடைவான்.

---

* இந்திய வனத்துறை இதழ் - 1902. (A.W. Lushington, Indian Forester, 1902.)

இருளர்கள் எருமைகள், மாடுகள் ஆகியவற்றின் ஊனினை உண்பதில்லை. மறியாடு, வெள்ளாடு, வயல் எலி, கோழி, மான், பன்றி (இவர்களே வேட்டையாடுவது) முயல் (திறமையாக வலை வைத்துப் பிடிப்பது) காட்டுக் கோழி, புறா, காடை (இதனைக் கல்லால் எறிந்து வீழ்த்துவர்) ஆகியவற்றின் ஊனினை உண்பர்.

"மண ஒப்பந்தம் ஏதும் இவர்களிடையே கிடையாது. ஆணும் பெண்ணும் தங்கள் மன விருப்பம் போல் யாரோடு வேண்டுமாயினும் உறவு கொள்ளலாம். அந்த உறவினைத் தொடர்ந்து நீட்டித்துக் கொள்வதும் பிரிந்து செல்வதுமான உரிமை பெண்களினுடையதே. நல்ல ஊழ் வாய்க்கப் பெற்ற சிலர், தங்கள் உறவினை நான்கைந்து ரூபாய்வரை செலவழித்து நண்பர்களுக்கும் அண்டை அயலாருக்கும் விருந்து வைத்துக் கொண்டாடுவர். அப்போது குறும்பர்களும் தங்கள் கொம்பு, தப்பட்டை ஆகியவற்றுடன் வந்திருந்து அந்த இரவை ஆடிப் பாடிக் கோலகலமாகக் கழிக்க உதவுவர். இது போன்ற நிகழ்ச்சிகள் மிக அரிதாகவே நடைபெறுவதற்குரியன" என இருளர்கள் திரு ஹார்க்னஸ் அவர்களிடம் கூறியுள்ளனர். எனக்குத் தெரிவிக்கப்பட்ட விவரங்களின்படி இவர்கள் திருமணம் ஒரு எளிய நிகழ்ச்சியே. ஒரு மறியினை அறுத்து விருந்து நிகழ்த்துவர். விருந்தினர்கள் மணமகனுக்குச் சில அணாக்களை அன்பளிப்பாகத் தருவர். அவன் அவற்றை ஒரு துணியில் முடிச்சிட்டவனாக மணமகள் குடிசைக்குச் சென்று அவளைத் தன்னுடன் அழைத்து வந்துவிடுவான். கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர்.

ஓர் இருளன் இறப்பானாயின் இரண்டு குறும்பர்கள் சாவு நிகழ்ந்த ஊருக்கு வருவர். அவர்களில் ஒருவன் மற்றவன் தலையை மழித்துவிடுவான். தலை மழிக்கப்பட்டவனுக்கு உணவிட்டு ஒரு வேட்டியும் தருவர். அவன் அதனைத் தன் தலையில் சுற்றிக் கட்டிக்கொள்வான். இத்தகைய விசித்திரச் சடங்கினைச் செய்வதால் இறந்து போனவர் நல்ல அதிர்ஷ்டத்துக்குள்ளாவார் எனக் கருதப்படுகிறது. இறந்து போனவனுடைய பிணம் கிடக்கும் வீட்டுக்கு வெளியே சாவுச் சடங்குகள்

நிகழும் வரை மேளத்திற்கு ஏற்ப ஆண்களும் பெண்களும் ஆடுவர். இறந்தவர்கள் கால்களைக் குறுக்கே இருக்குமாறு குந்தியபடி உட்கார வைக்கப்பட்டுப் புதைக்கப்படுகின்றனர். ஒவ்வொரு ஊருக்கும் தனியே புதைக்கும் இடங்கள் உள்ளன. வட்ட வடிவமான ஒரு குழி தோண்டி அதன் அடிப் பக்கத்தில் குடைந்து ஓர் அறை உண்டாக்குவர். அதில் பிணத்தை அதனுடைய வழக்கமான ஆடை அணிகளோடு ஒரு புதிய துணியும் அணிவித்து அமர்த்தி, விளக்கு, தானியம் ஆகியவைகளை உடன் வைத்துப் புதைகுழியினை மூடி அடையாளத்திற்காக மேலே ஒரு கல்லினை வைப்பர். மூன்றாம் நாள் ஒரு மறியினை அறுத்து விருந்து வைப்பர் எனக் கூறுகின்றனர். இறந்தவர்களுக்கான ஆண்டுச் சடங்கு பற்றி நான் நேரில் கேட்டவை வருமாறு:- ஒரு விளக்கும் எண்ணெயும் வாங்குவதோடு அரிசிச் சோறும் ஊரில் சமைப்பர். அவற்றைப் புதைகுழிகள் உள்ள சுடுகாட்டுக் கோயிலுக்கு எடுத்துச் சென்று அங்குள்ள கற்களின்மீது எண்ணையினைக் கொஞ்சம் கொஞ்சமாக ஊற்றியபின் பூசை நிகழ்த்துவர். சுடுகாட்டுக் கோயிலில் நெற்றியில் பட்டையாக மூன்று கோடுகள் தீட்டியுள்ள பூசாரி பூசை செய்வான். படகர் சாதித் தேவதாரியைப் போல இருளர் பூசாரியும் சிலபோது தெய்வம் ஏறப் பெறுவதுண்டு.

"குறும்பர்களும் இருளர்களும் ஒவ்வொரு சாவுக்குப் பிறகும் தெய்வ கொட்ட கல்லு எனப்படும் ஒரு கூழாங் கல்லினைக் கொண்டு வந்து நீலகிரிப் பீடபூமியில் ஆங்காங்கே காணப் படும் பழமையான வட்டக் கல்லறை மாடத்தில் இடுவர். பல தலைமுறையினர் இதுபோலக் கூழாங்கற்களை இட்டு வந்ததின் விளைவாக இவற்றுள் சில மேலே பாவப்பட்டுள்ள பாவு கல்லைத் தொடும் அளவிற்குக் கூழாங் கற்களால் நிரம்பியனவாக உள்ளன. சிலபோது மேலே குறிப்பிட்ட பழங்குடியினர் சிறிய வட்டக் கல்லறைகளைப் புதைகுழியாகப் பயன்படுத்திக் கொள் வதோடு நீண்ட கூழாங்கற்களையும் அதனுள் இடுவர்" என இவர்கள் சாவுச் சடங்குகளைப் பற்றித் திரு வால்ஹவுஸ் கூறி யுள்ளார்.*

* Ind. IV, 1877.



நீலகிரி இருளர்



நீலகிரி இருளர்

இருளர்களிடையே பின்வரும் உட்பிரிவுகள் இருப்பதாக எனக்கு விளக்கி எடுத்துரைத்தனர்:- போங்கரு, குடகர் (குடகுப் பகுதியைச் சேர்ந்தவர்), கல்கட்டி (கல்லினைக் கட்டிக் கொள் பவர்கள்), வெள்ளக, தெவாளர், கொப்பிலிங்கம். இவர்களுள் முதல் ஐந்து பிரிவினரும் பங்காளிகளாகக் கருதப்படுவதால் இவர்கள் தங்களுக்குள் மண உறவு வைத்துக் கொள்வதில்லை. இந்த் ஐந்து பிரிவினரும் கொப்பிலிங்கம் உட்பிரிவிலிருந்தே பெண்களை மணக்க வேண்டும். 1901 கணக்கெடுப்பில் காசுவ அல்லது காசுப என்பதும் இருளரின் உட்பிரிவாகப் பதியப் பட்டுள்ளது. இந்தச் சொல் காட்டு வாழ்க்கையைத் துறந்து மலைத்தோட்டங்களிலோ வேறெங்கோ வேலை தேடிச் சென்ற வன் என்பதனைக் குறிக்கும்.

"குளிர்காலத்தில் அல்லது காட்டில் உணவு தேடி அலைந்து திரியும்போது பசியின் கொடுமையால் குடும்ப உறுப்பினர் கள் ஒருவரை விட்டு ஒருவர் பிரிய நேர்வது உண்டு. இச் சமயங் களில் பெண்களும் குழந்தைகளும் தனித்தவர்களாகி விடுவர். அப்போது தன் கைக்குழந்தையின் பசியைத் தீர்க்கப் பால் ஊட்ட இயலாத தாய் அது கடைசியில் பசியால் படப்போகும் வேதனையை எதிர்பார்த்து அக் குழந்தையை உயிரோடு புதைத்து விடுவாள். இங்குத் தரப்பட்டுள்ள இந்த விவரம் ஒவ்வொரு நிகழ்ச்சியும் உண்மைதானா எனக் கேட்டறியப் பட்டு நம் உள்ளத்தில் எத்தகைய ஐயுறவும் ஏற்பட இடமின்றிச் சரியான தகவல் என உறுதி செய்யப்பட்டதாகும்" என ஹார்க்னஸ் அவர்கள் குறித்துள்ளார்.

என்னுடைய குறிப்பேட்டிலிருந்து பின்வரும் விவரங்கள் தரப்படுகின்றன:-

**30 வயதான ஆண்:-** சில சமயங்களில் காபித் தோட்டங் களில் பணிபுரிவான். தற்போது தான்யம், பூசணி, பலா, வாழை ஆகியன பயிரிடுவதில் ஈடுபட்டுள்ளான். அரிசி, உப்பு, மிள காய், எண்ணெய் ஆகியன வாங்க மேட்டுப்பாளையத்திலுள்ள கடைத் தெருவுக்குச் செல்வான். கோத்தர்களிடமிருந்து பயிரிடு வதற்கான கருவிகளைப் பெறும் இவன் அவர்களுக்கு அதற்கு

ஈடாக ஆண்டுக்கு ஒரு முறை தான்யங்களோ பணமோ தருவான். கோத்தர்களுக்குக் காய்கறியும் பழங்களும் தந்து அவர்களிடமிருந்து பித்தளைக் கடுக்கன்கள் பெற்று அணிந்துள்ளான். தலைக்குத் தலைப்பாகை அணிந்துள்ள இவன் இடுப்பில் ஓர் அரைத்துணி மட்டும் அணிந்துள்ளான். அது கணுக்கால் அளவு தொங்கும். புகையிலை, வெற்றிலை ஆகியன அடங்கிய பை அவன் தோளில் தொங்கிக் கொண்டிருந்தது. நல்ல கறுத்த நிறம் உடையவன் இவன்.

**30 வயதான பெண்:-** சுருளான தலைமுடியினைப் பின்னால் முடிச்சிட்டு ஒரு கறுப்புப் பருத்தி நூல் நாடாவால் சுற்றிக் கட்டியிருக்கிறாள். இடையில் ஒரு சாதாரணத் துணி அணிந்து மார்பிலிருந்து கணுக்கால் வரை தொங்கும்படியாகச் சதுரமான ஒரு சீட்டித் துணியை அணிந்திருக்கிறாள். நெற்றியில் பச்சை குத்தப்பட்டுள்ளது. கழுத்தில் நிறையக் கண்ணாடிப் பாசி மணிமாலைகள். மூக்கில் பொன்னால் ஆன மூக்குத்தி. காது மடல்களில் பித்தளை அணிகள். வலது மணிக்கட்டில் எட்டுப் பித்தளை வளையல்கள். பித்தளை வளையல்கள் இரண்டும் கண்ணாடி வளையல் ஆறும் இடது மணிக்கட்டில். வலக் கையில் முதல் விரலில் ஐந்து பித்தளை மோதிரங்கள். வலக் கையில் சுட்டு விரலில் பித்தளை மோதிரங்கள் நான்கும் தகர மோதிரம் ஒன்றும்.

**25 வயதான பெண்:-** சிவப்புப் பனையோலைச் சுருள் காதுகளில் தொங்கும் மடல்களில் உள்ளன. பித்தளை, கண்ணாடிப் பாசிமணி அணிகள் காதுத் தோடுகளில் தொங்கும். இடது மூக்கில் மூக்குத்தி. கறுப்புப் பாசி மணிகள் கோத்ததும், சோழிகளால் ஆன பதக்கம் கொண்டதுமான கழுத்துச் சங்கலிகள் கழுத்தில் தொங்கும். கறுப்புப் பாசி மணிமாலைகள் இருளர் பெண்களின் வழக்கமான அணிகள். வலது மணிக்கட்டில் ஒரு எஃகு வளையலும், எட்டுப் பித்தளை வளையல்களும், ஒரு சங்கு வளையலும். ஈய வளையல்கள் மூன்று, கண்ணாடி வளையல்கள் ஆறு, ஒரு கண்ணாடிப் பாசி வளையல் ஒன்று ஆகியன இடது மணிக்கட்டில். இடக் கைச் சிறுவிரலில் ஓர் எஃகு மோதிரமும் ஒரு பித்தளை மோதிரமும்.

**35 வயதான பெண்:-** இடையில்மட்டும் சேலை தரித்து மார்பினை மறைத்துக் கொள்ளாமல் தலையில் படகர் அணிவது போன்ற குல்லாய் அணிந்துள்ளாள்.

**8 வயதான சிறுமி:-** இரு காதுகளின் மடல்களிலும் உள்ள துளைகளில் நெருப்புக் குச்சி போன்ற பல குச்சிகளைச் சொருகிக் கொண்டுள்ளாள்.

*சராசரி உயரம் 159.8 செ.மீ.*
*மூக்கின் விகித அளவு 85 (மேலளவு 100)*

**இருளர் (செங்கல்பட்டு) - Irular of Chingleput**

இவர்கள் செங்கல்பட்டு, வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு மாவட்டங்களில் காணப்படும் இருளர். சென்னையிலிருந்து 50 மைல் தூரத்திலுள்ள செங்கல்பட்டு நகரில் குடியேறியுள்ள இருளர் அல்லது வில்லியர் என அழைக்கப்படும் இவர்கள் நீலகிரிக் காடுகளில் வாழும் இருளர்களைவிட நாகரிகத்தில் மிக முன்னேறியவர்களாக உள்ளனர். 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் பிராமணர்களின் செல்வாக்கிற்கு ஓரளவு ஆட்பட்டுள்ள இவர்கள் கொச்சைத் தமிழ் பேசும் பழங்குடிகள் என விளக்கப்பட்டுள்ளனர்.

இருளர்களைப் பற்றிய ஒரு குறிப்பில் மெக்கென்சி பின்வருமாறு எழுதியுள்ளார்:-* யுக பிரளயத்திற்குப் பின் ஒரு முனிவரின் வழித் தோன்றல்கள் எனக் கருதப்படும் வில்லர் எனப்படும் இருளர், மலையர், வேடர் ஆகியோர் ஒரு சாபத்தின் காரணமாகக் காடுகளில் இயற்கையின் படைப்பிற்கு இயைய வாழ்ந்து வந்தனர். இன்று இவர்கள் உடலை மறைக்க ஆண்கள் தோலையும், பெண்கள் இலைகளைத் தைத்தும் ஓரளவு ஆடையாக உடுக்கின்றனர். கிழங்குகள், காட்டுப் பழங்கள், தேன் ஆகியனவே இவர்களின் முக்கிய உணவு.சமைத்த அரிசிச் சோற்றை மற்றவர்கள் இரக்கப்பட்டுத் தந்தாலும் இவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

---

* கீழ்த்திசைச் சுவடிகள். (Oriental Manuscripts.)

தெய்வத்தைப் பற்றித் தெளிவான கோட்பாடும் இவர்களுக்கு இல்லை. மூங்கில் அரிசியை மட்டும் இவர்கள் கன்னியம்மா என்ற தேவதைக்குப் படைக்கின்றனர். பழங்கதை மரபுப்படி மலைரிஷி என்ற பெயருடைய முனிவர் இவர்களுக்குக் காட்டு விலங்குகளால் ஏற்படும் தொல்லைகளைக் கண்டு இவர்கள் மேல் இரக்கங் கொண்டு கொஞ்ச காலம் இவர்களோடு இருந்து வாழ்ந்து வரலானார். அவர் இவர்கள் இனப் பெண்களோடு உடலுறவு கொண்டமையால் பல குழந்தைகளை அப்பெண்கள் பெற்றனர் எனினும் அக்குழந்தைகளும் காட்டு விலங்குகளுக்குப் பலியாயின. இத்துயரத்திலிருந்து இவர்களை மீட்க அந்த முனிவர் இவர்களைக் கன்னியம்மாவிற்கு பூசை போடுமாறு கூறினார். வேறு பல முனிவர்களும் இவர்களோடு கலந்து பழகி இவர்களிடையே வாழ்ந்ததால் பல புதிய சாதிகள் தோன்றின. அச்சாதியினருள் ஏனாதியர் நகரங்களுக்குச் சென்று மற்ற சாதியாரிடம் உணவு பெற்று வந்ததோடு சமைத்த அரிசிச் சோற்றையும் உண்டு பழ்கித் தங்களைச் சுற்றி வாழும் மக்களைப் பார்த்து அவர்கள் பழக்கவழக்கங்களை மேற்கொள்ளத் தொடங்கினர்.'' இவ்வகைகளில் இருளர் இப்பொழுது ஏனாதியரைப் பின்பற்றி வருகின்றனர்.

செங்கல்பட்டு இருளர் நல்ல கறுத்த நிறமும் குறுகிய மார்பும், மெலிந்த உடலும், பிடிப்பற்ற தசைகளும் உடையவர்கள். எனக்கு இவர்கள் நெல்லூரைச் சேர்ந்த ஏனாதியரையே நினைவூட்டுகின்றனர். ஆண்கள் ஒரே ஒரு வேட்டி அல்லது கோவணத்தை மட்டுமே ஆடையாக உடுக்கின்றனர். அதுவும் மிகக் குறுகிய மான்செஸ்டர் மில் காடாவாக இருக்கும். தலைமுடியைச் சிக்குடையதாக நீள வளர்ப்பதோடு சிலர் முன் மயிரை மழித்து மேல் சாதியாரைப் பார்த்துக் குடுமியும் இட்டுக் கொள்கின்றனர். மீசை அடர்த்தியற்றதாகவும் தாடி வெள்ளாட்டுக் கடாவினைப் போன்றதாகவும் இருக்கும். ஆண்களில் சிலர் நெற்றிப் பொட்டில் நீல நிறத்தில் பொட்டு ஒன்றினைப் பச்சைகுத்திக் கொண்டிருப்பர் அல்லது நாமம் போன்ற கோட்டினை இட்டிருப்பர். காது

மடல் நுனித் துளையில் ஒரு குச்சி அல்லது காது மடலில் எளிய கடுக்கன் மட்டும் தான இவர்கள் அணியும் அணி.

நெற்குற்றுவதுதான் இவர்களுடைய முக்கிய தொழில். காடுகளில் குச்சி முதலியவற்றைச் சேகரித்து விறகாகக் காசுக்கோ, அரிசிக்கோ உயர்ந்த சாதியார் தங்கள் கால்நடைகளுக்கு என வைத்திருக்கும் பழைய கஞ்சிக்கோ விற்பர் இந்தப் பழங் கஞ்சியினை ஏனாதியரும் மிக விரும்பிக் குடிக்கின்றனர். நெல் குற்றும்போது தவிட்டினைத் தின்னும் இவர்கள், கவனமாக மேற்பார்த்துக் கொள்ளவில்லையாயின் முடிந்த அளவு அரிசியினையும் மென்று தீர்த்து விடுவர். தங்கள் எளிய உணவிற்குத் துணையாக உதவும்படியாக இவர்கள் வயல் எலிகளையும் தின்பர். உலர்ந்த இலைகளை ஒரு பானையில் இட்டு எரித்து அந்தப் புகையினைப் பானையில் உள்ள சிறு துளை வழியாக எலிவளைகளின் உள்ளே செலுத்தி, அவற்றை மூச்சுத் திணறி உணர்விழக்கச் செய்தபின் நீண்ட குச்சிகளால் எலி வளைகளைத் தோண்டுவர். அந்த வளையினுள் இவர்களுக்கு ஊனாக இறந்த எலிகளும், உணவாக எலிகள் சேகரித்து வைத்திருக்கும் தானியங்களும் ஒருங்கே கிடைக்கும். புற்றீசல் புறப்பட்டு வெளிவரும் பருவங்களில் இரவில் தீப்பந்தங்களின் உதவியால் பறக்கும் ஈசல்களின் உடலினைத் தேடித் தின்பர். சில ஆண்டுகளுக்கு முன்பு, ஓர் இரவில் என் வீட்டில் திருட்டு நடந்தது. இரவு பெய்த மழையால் சேற்றில் ஏற்பட்டிருந்த காலடித் தாரையின் வார்ப்பினை எடுத்துப் பார்த்தபோது, அது என் தோட்டக்காரர்களுள் ஒருவன் காலடித் தாரை எனத் தெரிய வந்தது. என் தோட்டத்தில் குடியிருக்காது வெளியே குடியிருப்பவன் அவன். அந்த இரவு நேரத்தில் அங்கே வந்தது ஏன் எனக் கேட்டபோது அன்று மாலை பெருமளவில் படையெடுத்த இறந்துவிழும் புற்றீசல்களை உணவுக்காகத் திரட்ட வந்ததாக அவன் விளக்கம் கூறினான்.

இருளர்களுள் சிலர் மூலிகைகளைப் பற்றி அறிந்தவர்களாக உள்ளனர். மூலிகைகளைக் கொண்டு சில நோய்களையும், பாம்புகள், எலிகள், பூச்சிகள் ஆகியவற்றின் கடிக்கு மருத்துவம்

செய்தும் இவர்கள் குணப்படுத்துகின்றனர் எனக் கூறப் படுகிறது.

அவ்வப்போது பலாசு (*Butea frondosa*) இலைகளையும் தாமரை இலைகளையும் திரட்டி, உண்ணும் கலமாகப் பயன் படுத்த விற்பர். எச்சில் இலைகளில், பிராமணர்களும் மற்ற உயர்ந்த சாதியாரும் மிச்சம் விட்டுச் செல்லும் உணவுகளை இவர்கள் உண்பர். பிராமணர்கள், பிராமணரல்லாத பிற சாதியார் இல்லங்களில் எந்தத் தடையுமின்றி நுழைந்து பழகும் உரிமையுடைய இவர்கள் தீட்டு உண்டாக்கும் வகுப்பாராகக் கருதப்படுவதில்லை.

ஒரு குறிப்பிட்ட இடத்தில் தங்கி வாழாமல் இவர்கள் தங்கள் குடியிருப்பை அடிக்கடி மாற்றிய வண்ணம் இருப்பர். சிலர் பனையோலை வேயப்பட்ட தாழ்ந்த குடிசைகளில் வாழ் கின்றனர். மற்றவர்கள் மரத்தடியையோ, பாழடைந்த கட்டிடங் களையோ, வீடுகளின் தெருத் திண்ணைகளையோ தங்கள் வாழ்விடமாகக் கொண்டுள்ளனர். சில மண் பானைகள், ஓரிரு முறங்கள், அரிவாள், கடப்பாரை, நெருப்பு உண்டாக்குவதற் கான சக்கிமுக்கிக்கல், உருக்குத் துண்டு ஒன்று புகையிலை, வெற்றிலை பாக்கு ஆகியன வைக்கும் அழுக்குப் பை ஆகியனவே இவர்களுடைய தட்டுமுட்டுச் சாமான்கள். நெருப்பு உண்டாக்கச் சதுரக் கருங்கல் ஒன்றினைச் சிறு நெட்டித் துண்டின் அருகே வைத்துத் தீப்பொறி அதன் மீது தெறிக்கும்படியாக ஓர் இரும் புக் கருவிகொண்டு தட்டிய பின் நெட்டியில் விழுந்த தீப்பொறி யினை வேகமாக ஊதித் தீ கொழுந்துவிட்டு எரியும்படி செய் வர். வெப்பம் 58° க்கும் 60° க்கும் இடைப்பட்டதாக இருக்கும் குளிர்காலத்தில் இவர்கள் தங்கள் குழந்தைகள் வெதுவெதுப் பாக இருக்க நெருப்பு எரியும் இடத்தின் அருகே தரையில் குழி வெட்டி அதில் அவர்களைப் படுக்க வைப்பர்.

தங்கள் பழங்குடி இனத்திற்கு உரியதான சில உட்பிரிவு களை மண உறவுகளின்போது ஓரளவு கருதிப்பார்க்கின்றனர். திருமணச் சடங்குகளில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள் எவையும் இல்லை. மணமகன் மணமகளுக்கும் தன் வருங்கால மாமியார்

மாமனார் ஆகியோருக்கும் புதிய ஆடைகள் வாங்கித் தர வேண்டும். மாமியாருக்குத் தரப்படும் சேலை பால் கூலி எனப் பெயர்பெறும். அது அவள் மணமகளைப் பால் கொடுத்து வளர்த்ததற்கான கூலியாகும். சனிக்கிழமை தவிர வேறு எந்த நாளில் வேண்டுமானாலும் மண நிகழ்ச்சி நடத்தப்படும். வசதிக்குத் தக்கபடி சிறு விருந்து நடத்துவதோடு, இயலுமானால் விருந்தினர்களுக்குக் கள்ளும் வழங்குவர். மண நாளன்று மாலை வேளையில் மணமக்கள் வீட்டின் முன் நிற்க மணமகன் மணமகள் கழுத்தில் தாலி அணிவிப்பான். நான் நேரில் சென்று கண்ட ஒரு மண நிகழ்ச்சியில் மணமகள் தனது திருமணச் சேலையை மணத்திற்கு ஒரு மாதம் முன்னதாக இருந்தே உடுத்திக் கொண்டிருப்பதாக அறிந்தேன்.

தங்கள் குல தெய்வமான கன்னியம்மாவையும், தொற்று நோய்களுக்குத் தெய்வமான மாரியம்மாவையும் இருளர் வழிபடுகின்றனர். நடுவில் ஒரு பானையை வைத்து நான்கு மூலைகளிலும் நான்கு பானைகளைச் சதுர அமைப்பில் மஞ்சள் நீர் நிரப்பிவைத்து அவற்றையே தெய்வமாக எண்ணி வழிபடுகின்றனர். இவற்றின் அருகே ஒரு விளக்கினை வைத்துப் பச்சரிசி, வெல்லம், அரிசிமாவு, வெற்றிலை, பாக்கு ஆகியவற்றைப் படைப்பர், வெள்ளைத் துணியொன்றினை மஞ்சள் நீரில் தோய்த்து மூங்கில் ஒன்றில் கொடியாக ஏற்றிக் குடியிருப்புக்கு அருகில் வெட்ட வெளியில் நிறுத்தி அதனையே மாரியாகக் கருதி அதற்குக் கோழிகள், மறி ஆகியவற்றைப் பலியிடுவதோடு பொங்கல் முதலியவற்றையும் படைப்பர்.

இறந்தவர்களை மல்லாக்காகப் படுக்க வைத்த நிலையில் தலைப்பக்கம் வடக்கே இருக்கவும், முகம் கிழக்கு நோக்கியபடி திரும்பி இருக்கும்படியாகவும் புதைப்பர். புதைகுழியைப் பாதி மூடியவுடன் நாகதாளிக் (*Opuntia Dillenii*) கள்ளியினை உள்ளேயிட்டு அதன் மேல் மண்ணிட்டு மேடை அமைப்பர். புதைகுழியின் மீது நினைவுக் கல் ஏதும் வைக்கும் வழக்கம் இவர்களிடையே இல்லை.

பின்வரும் அட்டவணையின் உதவியால் காட்டுவாசிப் பழங்குடிகளான சோலகர், நீலகிரி இருளர் ஆகியோருக்கும் நாகரிகத்

தொடர்பு ஏற்படுத்திக் கொண்ட செங்கல்பட்டு இருளர், கோயமுத்தூர் ஊராளியார் ஆகியோருக்கும் உடல்வாகு, மூக்கின் அளவு ஆகியவற்றில் உள்ள வேறுபாட்டினை ஒப்பிட்டுப் பார்த்துத் தெளியலாம்.

| | மூக்கின் நீள அகல விகிதம் | | | |
|---|---|---|---|---|
| | சராசரி உயரம் | சராசரி | மேல் அளவு | கீழ் அளவு |
| சோலகர் | 159.3 | 85.1 | 107. 7 | 72.8 |
| நீலகிரி இருளர் | 159.8 | 84.1 | 100 | 72.3 |
| செங்கல் பட்டு இருளர் | 159.9 | 80.3 | 90.5 | 70 |
| ஊராளியார் | 159.5 | 80.1 | 97.7 | 65.3 |

மேற்கண்ட அட்டவணையிலிருந்து நான்கு பழங்குடியினத்தவரும் உயரம் குறைந்தவர்களாக இருப்பதைத் தெளியலாம். மூக்கின் சராசரி விகித அளவு, மேல் அளவு, கீழ் அளவு ஆகியனவற்றில் சோலகருடையனவும், நீலகிரி இருளருடையனவும், நாகரிகத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டவர்களான செங்கல் பட்டு இருளர், ஊராளியர் ஆகியோருடையதைவிட அதிகமாக இருப்பதைத் தெளியலாம். வெளி உலகத்துடன் அதிகத் தொடர்பில்லாத முன்னைய இருவரும் தங்கள் தங்கள் இனத்துக்குரிய மூக்கின் அமைப்பினை மாற்றமின்றிப் பெற்றவர்களாக இருப்பது புலனாகும். காட்டிலிருந்து வெளியேறி வெளி உலகத்து நகரங்களோடு தொடர்பு கொள்வதால் மூக்கின் அகலம் குறைவதை இரு பிரிவினராக உள்ள இருளர் காட்டிலேயே வாழும் திருவாங்கூர் காணிக்காரர், நகரத்தோடு தொடர்புகொண்ட

| | மூக்கின் நீள அகல விகித அளவு | | |
|---|---|---|---|
| | சராசரி | மேல் அளவு | கீழ் அளவு |
| காட்டு இருளர் | 84.9 | 100 | 72.3 |
| காட்டுக் காணிக்காரர் | 84.6 | 105 | 72.3 |
| நாட்டுக் காணிக்காரர் | 81.2 | 90.5 | 70.8 |
| நாட்டு இருளர் | 80.3 | 90.5 | 70 |

காணிக்காரர் ஆகியோரது மூக்கின் விகித அளவுகளை முன் பக்கத்தில் உள்ள அட்டவணை தெளிவுபடுத்தும்.

வட ஆர்க்காட்டினைச் சேர்ந்த இருளர், செங்கல்பட்டு இருளரோடு நெருங்கிய தொடர்புடையவர்களாக உள்ளனர். வட ஆர்க்காடு மாவட்ட கையேட்டில் திரு எச்.எ. ஸ்டுவர்ட் எழுதியுள்ளது வருமாறு:- "காட்டுவாசிப் பழங்குடிகளான இருளர்களுள் பலர் சுற்றுப்புறத்திலுள்ள சிற்றூர்களில் பயிர்த் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். எனினும் இவர்களில் பெரும்பாலானவர் மலைப்பகுதிகளைச் சார்ந்தவர்களாகக் கிழங்கு வகைகளை உண்டும் காட்டு விலங்குகளை வேட்டையாடியும் காடுபடு பொருட்களைப் பழைய துணிகளுக்கோ தானியங்களுக்கோ பண்டமாற்றுச் செய்தும் வாழ்க்கை நடத்தி வருகின்றனர். வாய்ப்புக் கிடைக்கும்போது கால்நடைகளைத் திருடவும், வழிப்பறியில் ஈடுபடவும் செய்கின்றனர். ஏனாதிகளை வெறுக்கும் இவர்கள் தங்களுக்கும் அவர்களுக்கும் எத்தகைய உறவும் இல்லையெனக் கூறுவர். இவர்கள் ஏனாதியர்களின் மீது கொண்டுள்ள வெறுப்பின் ஆழத்தை இவர்கள் உண்ணும்போது ஒரு ஏனாதியன் அதனைப் பார்க்கக்கூட அனுமதிக்கமாட்டார்கள் என்பதிலிருந்து புரிந்துகொள்ளலாம். இவர்கள் சப்த கன்னியர்களை வழிபடுகின்றனர். மண் விளக்குகளை ஏற்றி அதில் அத்தெய்வங்களை ஏற்றிவைத்து விராலி (*Dodonola viscosa*) மரத்தடியில் அவ்விளக்குகளை வைத்து வழிபடுவதோடு அம் மரத்தினையும் புனிதமானதாகக் கருதுவர். இந்த விளக்குகள் ஊர்ப் புறத்துக் குயவர்களால் வனையப்படுவன எனினும், அவர்கள் இதற்கான மண்ணினை காலால் மிதிக்காது கையால் பிசைந்தே செய்வர். சிலபோது இவர்கள் கன்னிமார் தெய்வம் ஏறியுள்ளதான இந்த விளக்குகளைக் குகைகளில் வைப்பர். இவர்கள் இவற்றை எங்கு வைப்பினும் பறையரோ, ஏனாதியரோ இவற்றை நெருங்கி வர அனுமதிக்க மாட்டார்கள். ஏனாதியர்களையும், குறும்பர்களையும் போலவே இவர்களும் குழந்தைகளுக்கு மொட்டை அடிக்கும் சடங்கின் போதே இந்த வழிபாட்டினை நிகழ்த்துவர். இச் சமயத்தில் பத்து வயதிற்குக் குறைவாக உள்ள குழந்தைகள் அனைவரும் ஒன்றாகத் திரள்வர்.

அக் குழந்தைகளின் தாய்மாமன்மார் அவர்களுடைய தலை முடியில் ஒரு கொத்தினைக் கத்தரித்து அரச (*Ficus religiosa*) மர இலைக்கொத்தில் கட்டிப் போடுவர். இவர்களிடையே மண ஒப்பந்தங்கள் அரிதாகவே நிகழுகின்றன. ஆணும் பெண்ணும் தங்கள் விருப்பம்போல் மண உறவைத் துண்டித்துக் கொள்ளும் உரிமை பெற்றுள்ளனர். இவர்களுள் நாகரிகத்தில் முன்னேறியவர்கள் பயிர்த்தொழில் செய்யும் இந்து சாதியாரைப் பார்த்து ஒரு தங்கப் பாசியினை நூலில் கோத்துத் தாலியாக மணமகள் கழுத்தில் கட்டும் பழக்கத்தை மேற்கொண்டுள்ளனர். எனினும் இவ்வாறு மேற்கொள்ளும் மண உறவும் எளிதில் முறிந்துபோகக் கூடியதே. இவர்கள் எப்போதும் இறந்தவர்களைப் புதைக்கின்றனர். இருளர் சிலர் இயற்கை ஆற்றல் கைவரப் பெற்றவர்களாகக் கருதப்படுவதோடு, தாழ்ந்த சாதிச் சூத்திரர்கள் இவர்களிடம் வந்து குறி கேட்கவும் செய்கின்றனர். இவ்வாறு நல்ல வார்த்தை கேட்கும் சடங்கு சுதி அல்லது ரங்கம் என அழைக்கப்படுகிறது. தெய்வப் பெண் தன் மேல் ஆவேசம் செய்த இருளன் பொருள் புரியாத ஒலிகளை எழுப்புவதோடு அச் சமயத்தில் தன் நினைவு அற்றவனாகவே இருப்பான் எனவும் கூறுவர். அவனுடைய தோழர்களில் சிலர் அவன் எழுப்பும் ஒலிகளைச் சிரமப்பட்டுப் புரிந்துகொண்டவர்களைப் போலப் பாவனை செய்து அவற்றின் பொருளை அறிவுரை கேட்டவருக்கு எடுத்துரைப்பார்கள். தங்கள் சடங்குகளின்போது இருளர் எத்தகைய இசையினையும் அனுமதிப்பதில்லை. அச் சமயங்களில் செருப்பு அணிவதோ இடையில் ஒரு துணியைத் தவிர வேறு உடை தரிப்பதோ கூட இல்லை. குளிரும் ஈரமுமான பருவ நிலையில் கூட இவர்கள் கம்பளிக்குப் பதிலாக நெருப்பின் வெதுவெதுப்பையே நாடுவர். குழந்தைகளைக் கூடப் போர்த்திக் காக்க மறுக்கும் இவர்கள் ஒரு குழியினை வெட்டிப் புதிதாகப் பிறந்த குழந்தையைக் கூட அக்குழியில் கொஞ்சம் விராலி இலைகளைப் போட்டு அதன்மேல் கிடத்துவர்.''

வட ஆர்க்காடு மாவட்டத்தில் இரண்டு வகைப்பட்ட இருளர் உள்ளனர். ஒரு பிரிவினர் நகரங்களிலும் ஊர்ப்புறங்களிலும் வாழ்கின்றனர். மற்றவர்கள் காட்டில் வாழ்கின்றனர்.

குப்பத்திற்கு அருகே காணப்படும் காடுவாழ் இருளருள் ஈசுவரன் வகையறா, தர்மராசா வகையறா என்ற இரு தெளி வான வரையறையுடைய பிரிவுகள் உள்ளன. முன்னவர் ஒரு தற் காலிகக் குடிசையில் கல் ஒன்றினை வைத்து அதற்குச் சோற்றி னையும் தேங்காயையும் உனம் (*Lettsomia elliptica*) இலை களில் வைத்துப் படைப்பர். தர்மராசர் கல்லாக அன்றி ஒரு பாத்திரமாக வைத்து வழிபடப்படுகிறார். அவருக்குப் படையலைக் கூடையில் வைத்துப் படைப்பர். காட்டு இருளர் பிரிவில் ஒருத்தி இறந்துபோன தன் கணவனின் உடன்பிறந்த வனை மணந்து கொள்ளலாம். இறந்தவர்கள் மல்லாக்காகப் படுக்க வைத்துப் புதைக்கப்பட்டுப் புதைகுழியின் மீது மூன்று கற்களை நிறுத்துவர்.

தென் ஆர்க்காடு மாவட்ட இருளர் பற்றித் திரு பிரான்சிஸ் தென் ஆர்க்காடு மாவட்ட விவரக் குறிப்பில் கூறியுள்ளன வரு மாறு:- செஞ்சி மலைப்பகுதிகளைச் சார்ந்து காணப்படும் இவர்கள் கொச்சைத் தமிழையே பேசுகின்றனர். கறுத்த நிறமும், நன்கு சுருண்ட தலைமுடியும் உடைய இவர்கள் எப் பொழுதும் தங்கள் தலையை மழிப்பதில்லை. தலைப்பாகை, செருப்பு ஆகியன அணியும் பழக்கம் இவர்களிடம் இல்லை. ஓரிடத்தில் இரண்டு மூன்றுக்கு மேற்படாத குடிசைகளாகப் பல இடங்களில் ஆங்காங்கே இவர்களுடைய குடியிருப்புகள் அமைந்திருக்கும். வயல்களிடையே அமைந்திருக்கும் இக்குடிசை கள் சிறியனவாக, வட்டவடிவில், கூரை வேயப்பட்டனவாக உயரம் குறைந்த வாயில்களை உடையனவாக இருக்கும். ஒருவன் அதனுள் தவழ்ந்து புகுந்தே செல்லமுடியும். பயிர்களுக்குக் காவல் இருப்பதையும் கிணறுகளிலிருந்து நீர் இறைப்பதையும் தொழிலாக மேற்கொள்ளும் இவர்கள் பஞ்ச காலங்களில் திருட்டுக்களிலும் ஈடுபடுவர். விழுப்புரம், திருக்கோயிலூர் வட்டங்களிலும், செஞ்சியைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் மழையில்லாத பஞ்ச காலங்களில் வீடுகளில் புகுந்து அகப் பட்ட சிறு பொருட்களைத் திருடத் தெரியாதவர்களாகப் பசியின் கொடுமையால் தூக்கிச் செல்வர். நிலக்கடலை நன்கு விளையும் சமயங்களில் இவர்கள் ஒழுங்காக நடந்து கொள்வர்

இந்த மாவட்டத்தில் மிக ஏழைகளாகத் துன்பத்தில் உழலும் வகுப்பார் இவர்களே. இவர்களுள் ஓரிருவரே தங்களுக்கு உரிய நிலம் உடையவர்களாக உள்ளனர். அந்த நிலமும் புஞ்சை நிலமே. அவ்வப்போது முயல்களைப் பிடிக்கும் இவர்கள் இரவு நேரத்தில் பாறை முகடுகளிலிருந்து முறுக்கப்பட்ட கொடிகளைப் பிடித்தபடி கீழே இறங்கித் தேனினைச் சேகரிப்பர். பெண்கள் சிலர் மலிவான அணிமணிகளை அணிந்தவர்களாகப் பரத்தையரைப் போல கண்ணுக்கு மை தீட்டிக் கொண்டு செஞ்சிக்கு அருகே உள்ள செட்டிபாளையம் சந்தைப் பகுதியில் வெட்கத்தைவிட்டுத் தங்கள் அழகைக் காட்டி ஆண்களை மயக்கிப் பொதுமகளிராக வாழ்க்கை நடத்திவருகின்றனர். இவர்கள் மண நிகழ்ச்சிகளில் சடங்குகள் மிகமிகக் குறைவே. சாதியைச் சேர்ந்த முதியவர்கள் நல்ல நாளினை முடிவு செய்வர். மணமகன் மணமகளுக்காகச் சில அன்பளிப்புகளைக் கொண்டு செல்வான. பந்தலிடப்படுவதும், தாலிகட்டுவதும், விருந்தும் மண நிகழ்ச்சியில் இடம் பெறும். பிறப்பு, இறப்பு தொடர்பான சடங்குகளும் எளிமையானவையே. இறந்தவர்கள் மல்லாந்த நிலையில் படுக்கவைக்கப்பட்டுப் புதைக்கப் படுகின்றனர். நரிகள் புதைகுழியினைத் தோண்டாமல் இருப்பதற்காக அதன்மீது கல்லினையும் முள்ளினையும் இடுவர். சாவு நிகழ்ந்த பதினொன்றாம் நாள் இறந்தவரின் மூத்த மகன் வழக்கத்திற்கு மாறாக அன்றுமட்டும் தலையில் தலைப்பாகை கட்டிக் கொள்வான். கொஞ்சம் அரிசியினை மஞ்சளிட்டுக் கலந்தபின் தண்ணீரில் இடுவர். இது பாவத்தைப் போக்கும் சடங்கு எனவும், இதனைச் செய்யத் தவறினால் இறந்தவரின் மூத்த மகனுக்குக் கெடுதல் ஏற்படும் எனவும் கூறுகின்றனர். ஊர்த் தேவதைகள் பலவற்றினுக்கும் இருளர் வழிபாடு நிகழ்த்துகின்றனர். எனினும் ஏழு கன்னிமார்களே இவர்கள் சிறப்பாக வழிபடும் தெய்வங்கள்.''

முன்பு கூறியுள்ளபடி யெருக்கலரைப் போல இருளரும் குறி சொல்வதில் ஈடுபடுகின்றனர். யெருக்கலர் சாதியைச் சேர்ந்த குறி கூறும் பெண் தன் கூடை, சோழி, பிரம்பு ஆகியவற்றோடு பல இடங்களுக்கும் சென்று எவ்விடத்திலும், எந்த

நேரத்திலும் ஒரு நாளைக்கு எத்தனை முறை வேண்டுமாயினும் குறி கூறுவாள். இதற்கு மாறாக இருளன் தன் குடிசையில் தங்கித் தான் வழிபடும் தெய்வம் வைத்திருக்கும் இடத்திற்கு அருகில் மட்டுமே குறி சொல்வான். நோய்வாய்ப்பட்ட எல்லாச் சாதியினரும் கன்னிமார் வர்ணித்தாள் எனக் கூறப்படும் இருளனிடம் குறி கேட்க வருவர். அவன் தன்னிடம் உள்ள உடுக்கையை எடுத்து நெருப்பில் காட்டிச் சூடாக்கியோ வெயிலில் வைத்து சூடேற்றியோ அதனைப் போதுமான அளவு தன் விருப்பத்திற்கு ஏற்ப அதிரும்படியாக உலரச் செய்தபின் கன்னிமாருக்குத் தேங்காய் உடைத்து கர்ப்பூரமும்,சாம்பிராணிப் புகையும் காட்டி வழிபாடு செய்வான். அதன்பின் கண்களை மூடியபடி அவன் தன் உடுக்கையை அடித்தவனாகத் தலையை ஆட்டியபடி இருக்க, அவனருகே நிற்கும் அவன் மனைவி அவன் மீது மஞ்சள் நீரினைத் தெளிப்பாள். சில நிமிடங்களுக்குப் பிறகு அவனது வலது மணிக் கட்டில் சலங்கை கட்டப்படும். கால்மணி நேரத்திற்குள்ளாக அவன் நடுங்கத் தொடங்கிவிடுவான். அப்போது அவனுடைய உடம்பு முழுவதும் வியர்த்து வடியும். அது அவன்மீது கன்னியம்மா ஆவேசம் செய்துள்ளாள் என்பதற்கான உறுதியான அடையாளம் ஆகும். அவன் மனைவி அவனுடைய குடுமியை அவிழ்த்துவிட அவன் மேலும் வேகமாகத் தலையை ஆட்டுவதோடு, விரைந்து பெருமூச்சுவிட்டபடி ஒரு பாம்பு போலச் சீறுவான். அவன் மனைவி கன்னிமாரைப் புகழ்ந்து பாடுவாள். படிப்படியாக அவன் ஆவேசம் குறையும். சூழ உள்ளவர்களைப் பார்த்துத் தன்னைத் தேவதையாகப் பாவித்தவனாக, “ஒ என் குழந்தைகளே! நான் என் தேரில் ஏறி வந்துள்ளேன். அது மாம்பூவாலும் வேப்பிலையாலும், மல்லிகையாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளது. நான் இருக்கும் வரை நீங்கள் எதற்கும் பயப்பட வேண்டாம். நீங்கள் என்னைக் கும்பிடுங்கள். இந்த நாடு செழிக்கும். நாட்டவர் மகிழ்ச்சியாக வாழ்ந்து வருவர். என் தேர் மலை மேலிருக்கும் குளத்திலிருந்து சீக்கிரமே வெளியே எடுக்கப்படும். அதன்பின் இந்த நாடு நன்கு செழிக்கும்'' என்பது போலப் பேசியபடி செல்வான். ஆவேசம் ஏறப்பட்டவனிடம் நேரடியாகக் கேள்விகள் கேட்காமல் கேள்விகளை அவன் மனைவியிடம் கூறுவர். சிலபோது கேள்வி கேட்க

யாரும் வரவில்லையாகிலும் மாலை நேரம் வந்தவுடன் அந்த இருளன் தன் உடுக்கையை எடுத்து அடித்தபடி தன்னைச் சுற்றி லும் இருளர் கூடி அமர்ந்து கேட்டபடி இருக்க மணிக் கணக்கில் கன்னிமாரின் புகழைப் பாடுவான்.

வேட்டைக்காரன் எனப் பொருள்படும் சிக்காரி என்ற சொல் இருளனுக்குரிய மற்றுமொரு பெயராகும் எனச் சிலபோது கருதுகின்றனர். தென் ஆர்க்காட்டில் சில இருளர்கள் தங்களைத் தேன் வன்னியர் எனவும் வனப் பள்ளியர் எனவும் அழைத்துக் கொள்கின்றனர்.

**இருள – Irula (darkness of night)**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம்.

**இரும்புக் கொல்லன் – Irumbu (Iron) Kollan**

கொல்லர்களின் ஓர் உட்பிரிவு.

**இருநூல் – Irunūl (two strigs)**

திருவாங்கூர் மாரான்களின் ஒரு பிரிவு. இப் பிரிவினர் கைம் பெண்கள் மறுமணத்தை அனுமதிக்கின்றனர்.

**இறுவு – Iruvu (black ant)**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலம். கட்டெ றும்பு எனப் பொருள்படும்.

**ஈசன் – Īsan (god)**

கோளியன்களின் பட்டப்பெயருள் ஒன்று.

**ஈசுவரன் வகையறா – Īswaran Vagaira**

வட ஆர்க்காடு மாவட்ட இருளர்களின் ஒரு பிரிவு. இப்பெயர் இவர்கள் ஈசுவரன் பிரிவைச் சேர்ந்தவர் என்பதனைக் குறிக்கும்.

**ஈடெ – Īte**

ஈடெ வாண்டலு தெலுங்குப் பேசும் வித்தை காட்டும்

வகுப்பார். இவர்கள், "மற்போர், கம்பத்தில் உயர ஏறுதல் கயிற்றில் நடத்தல் முதலான வேடிக்கை நிகழ்ச்சிகளைக் காட்டுவர். இவர்கள் பிரிவினைச் சேர்ந்த பெண்கள் தொம்மரர் பிரிவினைச் சேர்ந்த பெண்களைப் போலப் பொதுமகளிராகத் தொழில் புரிவர்" என நெல்லூர் மாவட்டக் கையேட்டில் கூறப்பட்டுள்ளது.

**இடட்டாரர் – Itattara**

1901 திருவாங்கூர் மாவட்டக் கணக்கெடுப்பில் நாயர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**ஈழவர் – Izhava**

ஈழவர் அல்லது இளவர், தீய்யர் ஆகியோர் மலபார் கொச்சி, திருவாங்கூர் பகுதிகளைச் சேர்ந்த கள் இறக்கும் சாதியார். ஈழவன் என்ற சொற்பொருள் விளக்கம் தீய்யர் பற்றிய கட்டுரையில் தரப்பட்டுள்ளது.

ஈழவர் பற்றிய பின்வரும் குறிப்புகள் அனைத்துக்கும்–வேறு வகையில் தனியே சுட்டப்பட்டிருந்தால் அன்றித் – திரு என். சுப்ரமணி அய்யருக்குக் கடப்பாடுடையேன்.

இவர்கள் தென் திருவாங்கூரிலும், மத்திய திருவாங்கூரின் சில பகுதிகளிலும் ஈழவர் எனவும், மத்திய திருவாங்கூரின் எஞ்சிய பகுதிகளிலும், வட திருவாங்கூரிலும் சோவர் எனவும் அழைக்கப்படுகின்றனர். மாநிலத்தின் மொத்த மக்கள் தொகையில் இவர்கள் 17 சதவீதத்தினராக உள்ளனர். சிங்களம் என்பதன் திரிபான ஈழத்தைச் சேர்ந்தவர்கள் என இது பொருள்படும் எனக் கூறுவர். ஈழம் இலங்கைக்குரிய தொன்மையான பெயர்களுள் ஒன்றாகும். இத்தீவின் வடபகுதியதான யாழ்ப்பாணத்தையே ஈழம் என்பது சிறப்பாகச் சுட்டும் எனத் தோன்றுகின்றது. அங்கிருந்து புறப்பட்டே ஈழவர்கள் முதன்முதலாக மலபாரை வந்து அடைந்ததாகக் கருதுகின்றனர். பணியாள் என்ற பொருள் தருவதான சேவகன் என்ற சொல்லின் திரிபே சோவர் எனக் கருதுகின்றனர்.

மலபாரில் இன்று வழக்கில் இருக்கும் சில ஓடப் பாடல்களில் இச்சொல் சேவக என ஓர் அளவே சிதைந்ததாக வழங்குகின்றது. ஒரு பழங்கதை வழக்குப்படி பாண்டிய இளவரசி அல்லி, கர்நாடக அரசரான நரசிம்மரை மணந்தபின் அரச தம்பதியரான இவர்கள் இலங்கைக்குச் சென்று அந்த நாட்டில் தங்கி அரசாண்டு வந்தனர். அவர்கள் மரபில் ஆட்சி உரிமை உடையவர்கள் யாரும் இல்லாது போகவே அவர்களுடைய உறவினர்களும் அவர்களைச் சார்ந்து வாழ்ந்தவர்களும் இந்தியா திரும்பியபோது இங்கு அவர்களைச் சமூகப் படிநிலையில் தாழ்ந்தவராகவே கருதினர். இவ்வாறு வந்து சேர்ந்த இவர்களே ஈழவர்களின் முன்னோர் எனக் கூறப்படுகிறது. தென் திருவாங்கூரின் ஈழவர்கள் முதலியார் என்ற பட்டப் பெயர் தரிப்பதும், இதே பட்டத்தை யாழ்பாணத்தைச் சேர்ந்த வேளாளர் சிலர் தரிப்பதும் இக் கொள்கைக்கு ஆதாரமாகும் எனக் கூறுவர். ஈழவர்களை வட்டியரும் மண்ணான்களும் முதலியார் என்றே அழைக்கின்றனர். புலையர்களும் இவர்களைத் தொடக்கக் காலத்திலிருந்தே முதல் தம்புரான் என அழைப்பதும் இதனை வற்புறுத்துவதாகும். இந்தப் பட்டம் அரசுக்குச் சிறப்பாகப் பணிபுரிந்த சில குடும்பத்தவர்களுக்கு அரசின் சார்பில் தரப்பட்டதாகலாம் எனக் கொள்ளவும் இடம் உள்ளது. ஈழவர்கள் முதன் முதலில் ஈடுபட்டிருந்த முக்கிய தொழில்களுள் ஒன்று தென்னை மரங்களை வளர்த்தல் என்பதில் ஐயமில்லை. கி. பி. 824-இல் கொடுக்கப்பட்ட புகழ்பெற்ற பட்டயத்தில் இவர்கள் பணிக் குழுவுக்கு ஒரு தலைவன் உண்டெனவும், தரிசு நிலங்களில் மரங்களை நடுவதே இவர்கள் பணி எனவும் கூறப்பட்டுள்ளது. இவர்களுக்கே உரியதென வழங்கப்பட்டுள்ள கால்களைப் பிணைக்கும் கயிற்று உரிமையும் ஏணி உரிமையும் இவர்களுடைய தொடக்கக் காலத் தொழில்பற்றித் தெளிவுபடுத்துவனவாக உள்ளன. சிரியன் கிறித்தவர்களிடையே அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கவே ஈழவர் மேற்குக் கடற்கரையில் வந்து குடியேறியதாக ஒரு வழக்கு வழங்கி வருகின்றது. ஈழவர்கள் கேரளத்திற்கு வரும்போது கமுகு, சண்பகம், எலுமிச்சை ஆகியவற்றில் ஒவ்வொன்றிலும் ஒரு வகையினைக் கொண்டு வந்ததாகக்

கூறுகின்றனர். இவற்றின் மலையாளப் பெயருக்கு முன் பெரும்பாலும் ஈழம் என்ற அடைமொழி தந்தே இன்று வரை கூறும் வழக்கும் உள்ளது. இடைக் காலத்தில் மலபாரை ஆண்ட மன்னர்களால் இவர்கள் பெரும் அளவில் படை வீரர்களாக அமர்த்தப்பட்டிருந்தனர். இப்படைவீரருக்கெனப் பட்டங்களும், தனி உரிமைகளும் வழங்கப்பட்டிருந்தன. பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் காண்டர் விஸ்ச்செர் அம்பலபுழை அரசரைப் பற்றி எழுதும் போது* குறிப்பிடுவதாவது:- "அம்பலப்புழாவின் அரசரான பொற் காட்டிடம் நாயர்கள் மிகுதியும் இல்லை. அவர்களுக்குப் பதிலா கச் சோகொர்களே பணிபுரிகின்றனர். உள்நாட்டில் போரோ, அரசருக்கு எதிராகக் கலகமோ நிகழுமானால் சோகொர் கள் நாட்டுரிமை உடைய அரசரின் சார்பில் படைக்கலம் ஏந்தக் கடமைப்பட்டவர்கள்." அம்பலப்புழா வட்டத்திலுள்ள அம்ப நாட்டு வீட்டைச் சேர்ந்த பணிக்கர்கள் ஈழவர் படையின் தலைவர்களாவர். செண்பகச்சேரியைச் சேர்ந்த (அம்பலப்புழா) இளவரசர்கள் இந்த வீட்டாருக்குப் பல அதிகாரங்களையும், பல உரிமைகளையும் வழங்கியுள்ளனர். மலையாள ஆண்டான 973-இல் உயிர் துறந்த மகாராசா ரவிவர்மா அவர்கள் காலம் வரை கூட ஈழவர் பெரும் அளவில் அரசின் படையில் இடம் பெற்றிருந்தனர் என்பதனை எதனையும் சரியாகவே எழுதுபவ ரான பேரியர் பார்டொலொமொ கூறுகிறார். அவர் குறிப்பை ஏற்று கொள்ளத் தடையில்லையேல் இதனை அப்படியே நம்ப லாம். ஓணம் பண்டிகையின்போது தென் திருவாங்கூரைச் சேர்ந்த ஈழவர்கள் இரு பிரிவினராகப் பிரிந்து திருவாங்கூருக்கு அருகே உள்ள கைய்தெமுக்கில் போரிடுவர். இந்தப் போர் விளையாட்டில் கலந்துகொள்ளத் தவறும் இளைஞர்கள் கழுத் தில் ஒரு மரக் கட்டையினைத் தாலியாகக் கட்டி ஊரைச் சுற்றி மும்முறை இழுத்துச் சென்றபின் அவர்களைக் கடற்கரைப் பக்கமாகத் துரத்துவர்.

முறையான ஈழவ சாதியார் பச்சிலி, பாண்டி, மலையாளம்

---

* மலபாரிலிருந்து எழுதிய கடிதங்கள். (Letters from Malabar.)

என்ற மூன்று உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளனர். பச்சிலியர் நெய்யாத்தங்கரை வட்டத்தில் திருவெல்லத்திற்கும் கோவளத்திற்கும் இடைப்பட்ட பச்சாலூர் என அழைக்கப்படும் பகுதியில் வாழ்கின்றனர். இவர்கள் எண்ணிக்கையில் மிகக் குறைந்தவர்களே பாண்டிகள் திருவனந்தபுரத்திலும் சிரையெங்கிலும் பெரும் அளவில் வாழ்கின்றனர். இவர்களுள் பெரும்பாலோர் பணிக்கன் என்ற பட்டம் தருகின்றனர். மலையாள ஈழவர் பிரிவு முத்தில்லம், மாதம்பி அல்லது பழிச்சல், மயநாட்டி, சோழி என்ற நான்கு புறமணக்கட்டுப்பாடு உடைய குலங்களாகப் (இல்லங்கள்) பிரிவுபட்டுள்ளது. பழிச்சல் நெய்யாத்தங்கரை வட்டத்திலுள்ள ஓர் ஊர். மயநாடு கொல்லத்திலுள்ள ஓர் ஊர். சோழி இல்லத்தைச் சேர்ந்தவர் பின்னர் வந்து குடியேறியவர்கள் என நம்பப்படுகிறது. ஈழவர்களின் மற்றொரு பிரிவினர் படிகிராமம் என்ற ஊரின் பெயரால் பெயர் பெற்றுள்ளனர். இப்பிரிவிலும் பள்ளிக்கட்டரர், பலட்டாரர், இருங்குளம்கரை, தெங்க நாடு என்ற நான்கு பிரிவுகள் உள்ளன. இவை மேற்கூறிய வரிசைப்படியே சமூகப்படி நிலையில் மதிக்கப்படுகின்றன. பள்ளிக்கட்டரர் பிரிவினர் சிரயங்களிலும், பலட்டாரர் பிரிவினர் கொல்லத்திலும், இருங்குளக்கரையர் திருவனந்தபுரத்திலும், தெங்கநாட்டார் நெய்யாத்தங்கரையிலும் தங்கி வாழ்கின்றனர். இவர்களுள் பலட்டாரர் சமய ஒழுக்கத்தில் மிகுந்த பற்று உடையவர்களாக அகமணக்கட்டுப்பாடுடைய தங்கள் குல இயல்பைத் தீவிரமாகப் பேணிக் காத்து வருகின்றனர். எனினும் மத்திய திருவாங்கூரைச் சேர்ந்த சோவர் குலத்து உயர் அதிகாரிகள் சிலர் அவர்களோடு மண உறவு செய்து கொண்டுள்ளனர். இல்லம், படிக்கிராமம் என்ற பிரிவுகள் சோவர்களிடையே இல்லை. இவர்களிடையே ஸ்தானி எனப்படும் மேல்குடி, தனிக்குடி, கீழ்க்குடி என்ற பிரிவுகள் உள்ளன. இவற்றுள் முதலாம் பிரிவு குலத்தலைவர்களையும், இரண்டாம் பிரிவு சாதாரண வகுப்பாரையும், மூன்றாம் பிரிவு சமூகத்தில் தாழ்ந்தவர்களையும் குறிப்பதாகும். கள் இறக்கும் குடும்பத்தினர், வதுவன், நாடி ஆகியோர் மூன்றாம் பிரிவினுள்ளேயே அடங்குவர். வதுவன், ஈழவர்களுடைய அடிமைகள். முன்னாளில் இவர்கள் முறைப்படி விலைக்கு வாங்கவும் விற்கவும்படக்

கூடிய அடிமைகளாக இருந்தனர். நாடியர் கார்த்திகப்பள்ளியிலும், மத்திய திருவாங்கூரின் வேறு சில பகுதிகளிலும் வாழ்ந்து வந்தனர். சாதித் தலைவனால் பல்வகைக் குற்றங்கள் காரணமாகச் சாதியிலிருந்து விலக்கப் பெற்றவர்கள் இவர்கள். மற்ற ஈழவர்களுடைய சமையலறையினுள் நுழைய இவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. இவர்களுடைய சடங்குகளை ஈழவர்களுக்கான பூசாரிகள் நடத்தி வைப்பதில்லை. இவர்களைப் போலவே சாதி விலக்கம் பெற்ற நாடிக் குருப்பூகள் என அழைக்கப்படும் பூசாரிகளே அப்பணியினைச் செய்கின்றனர். ஈழவர்களின் புரோகிதர்களான ஈழவத்தியர் தனிப்பட்ட பழக்கவழக்கங்களையுடைய தனித்த பிரிவினராக உள்ளனர். சான்றோர் அல்லது படைத்தலைவன் என்ற சொல்லின் திரிபான சாணான் என்பது ஈழவர்களின் பட்டப்பெயர்களுள் மிக முக்கியமானதாகும். இப்பட்டம் குறிப்பிடத்தக்க வகையில் பணிபுரிந்த குடும்பத்தவர்களுக்கு முன்னாளில் நாட்டை ஆண்ட மன்னவர்களால் வழங்கப்பட்டதாகும். பணிக்கன் என்ற பட்டம் சாணானுக்கு அடுத்ததாக வைத்து எண்ணப்படுவது. பணி என்ற வேர்ச் சொல்லின் அடியாகப் பிறந்தது இது. தாதன் என்பது தண்டனையை அல்லது மேற்பார்வையைக் குறிக்கும். தாண்ட என்ற சொல்லின் அடியாகப் பிறந்த சில பகுதிகளில் வழங்கும் பட்டப்பெயராகும். ஆசிரியன் எனப் பொருள்படும் ஆச்சாரியா என்றசொல்லிலிருந்து வந்த ஆசான் என்ற பட்டப் பெயர் பெருவழக்குடையதாக உள்ளது. இந்தப் பட்டத்தைப் பெற்றவர்கள் ஈழவர், நாயர் வகுப்பைச் சேர்ந்த படைவீரர்களுக்குப் போர்ப் பயிற்சி தரும் களரிகளில் பயிற்றுவிக்கும் ஆசிரியர்களாவர். அத்தகைய ஆசான்களின் இல்லத்தைச் சேர்ந்த பாழடைந்த நிலையிலுள்ள களரிகளும் பயிற்சி மைதானங்களும் பல இடங்களில் கூர்ந்து பார்ப்பவர்களுக்குப் புலப்படக் கூடியனவாக இன்றும் உள்ளன. தென் திருவாங்கூர் ஈழவர் சிலர் முதலியார் என்ற பட்டப்பெயர் தந்து சிறப்பிக்கப்பட்டவர்களாகத் தோன்றுகின்றனர். அம்பலப்புழை, காயன்குளம், செயசிம்மநாடு (கொல்லம்) ஆகிய குடும்பங்களைச் சேர்ந்த ஆட்சியாளர்கள் கொடுத்த இத்தகைய பட்டங்களைப் பலகுடும்பத்தினர் பெற்றுள்ளனர். இன்றும் கூட இடப்பள்ளியினைச் சேர்ந்த அரசர்

இத்தகைய சில பட்டங்களை வழங்குகின்றார். இத்தகைய பட்டங்களைப் பெறும் ஈழவர்களின் மனைவியர் சாணாத்தி, பணிக்கத்தி என்பது போல மரியாதைக்கு உரியவர்களாக அழைக்கப்படுகின்றனர்.

ஈழவர்களின் இல்லங்கள் நாயர்களுடைய இல்லங்களை ஒத்தனவாக அமைந்துள்ளன. ஒவ்வொரு வீடும் பல கட்டுக்களைக் கொண்டது. இவற்றுள் அறப்புறம் என்பதே அளவில் பெரியதாக நடுவிடத்தில் அமைந்திருக்கும். அதன் இடப்புறம், வடக்குக்கட்டு எனப்படும் பெண்களுக்குரிய பகுதிசமையல் அறையை உள்ளடக்கியதாக இருக்கும். அறப்புறத்தின் முன் பெரிய முற்றம் அமைந்திருக்கும். இதனை உள்ளடக்கியதாகக் கிழக்குப் பக்கத்தில் கீழ்க்கட்டு என்ற சிறிய கட்டிடம் அமைந்திருக்கும். இல்லங்கள் பெரும்பாலும் கிழக்குப் பார்த்தனவாகவே அமையும். முக்கிய நுழைவாயில் கீழ்க்கட்டுக்கும் சற்றுத் தெற்குப் பக்கமாக அமையும். அதற்குத் தென்பால் மாட்டுத் தொழுவம் அமைந்திருக்கும். இத்தகைய கட்டிட அமைப்பினை வசதி படைத்த செல்வர் இல்லங்களிலேயே காணலாம். ஏழைகள் அறப்புறம், வடக்குக்கட்டு, தொழுவம் ஆகிய பகுதிகளை மட்டும் கொண்ட இல்லங்களை உடையவர்களாக இருப்பர். சில இல்லங்களில் தென்கட்டு என்ற பகுதி அறப்புறத்திற்குத் தென்பக்கம் அமைந்திருக்கக் காணலாம். கல்வியாலோ, பக்தியாலோ, வீரத்தாலோ சிறப்புப் பெற்ற முன்னோர்களின் நினைவாக அமைக்கப்படுவது இது. இதனுள் ஒரு பீடம், ஒரு சங்கு, ஒரு பிரம்பு, சாம்பல் நிரம்பிய ஒரு பை ஆகியன இடம் பெற்றிருக்கும். இந்த அறையினுள் தீட்டு உண்டாக்குபவர்கள் செல்லாமல் கண்டிப்புடன் கண்காணிப்பதோடு குறிப்பிட்ட நாள்களில் முன்னோருக்கான வழிபாடுகளையும் இங்கு நிகழ்த்துவர். தென்கட்டின் கிழக்குப் பக்கம் தவிர மற்ற மூன்று பக்கங்களும் முழுதுமாக மறைக்கப்பட்டிருக்கும். தென் திருவாங்கூரைச் சேர்ந்த திருவனந்தபுரம் வரையுள்ள பகுதிகளில் காணப்படும் மேற்கூறிய கட்டிட அமைப்புகள் வடக்கே கொல்லம் வரையான பகுதிகளுக்கும் பொருந்துவனவாகும். எனினும் கேரளத்தின் வட பகுதிகளில் தென்கட்டு என்ற கட்டிடம் தென் பகுதிகளில் உள்ளதைப் போல

அளவில் பெரியதாக இராது. வடக்குப் பகுதிகளில் இல்லத்தின் தென் பக்கத்து அறையே முன்னோர்களின் நினைவாகத் தனித்து ஒதுக்கப்பட்டிருக்கும். மத்திய திருவாங்கூரில் மிகப் பழமையான இல்லங்களில் அறப்புறத்தின் தென்பக்கம் பெரிய களரிகள் இடம் பெற்றிருப்பதோடு, அவற்றினுள் தொன்மையான போர்க் கருவிகளும் குலதெய்வங்களின் உருவங்களும் பாதுகாப்பாக வைக்கப் பட்டிருக்கும்.

ஈழவர் ஆடை அணிகள் நாயர்களுடைய ஆடை அணிகளையே ஒத்தனவாக உள்ளன. ஈழவப் பெண்கள் பெரும்பாலும் தட்டுக்கட்டு முறையில் சேலை அணிவதில்லை. தென் திருவாங்கூர் ஈழவப் பெண்கள் சேலை அணியும்போது வலப் பக்கத்திற்குப் பதிலாக இடப்பக்கத்தை உள் கொசுவமாக வைத்து அணிகின்றனர். இதற்கு வீதிவிலக்காக மாற்றி அணிபவர்களும் உளர். தென் திருவாங்கூர் மகளிரின் அணிகள் வடதிருவாங்கூரைச் சேர்ந்த மகளிரின் அணிகளிலிருந்து குறிப்பிடத்தக்க வகையில் மாறுபட்டனவாக உள்ளன. தமிழ் நாட்டு சூத்திரர் பிரிவுப் பெண்கள் அணியும் பம்படத்தை தென் திருவாங்கூர் பகுதிகளில் அணிகின்றனர். அதனோடு கைகளில் ஓர் இணை வெள்ளி வளையல்களையும் அணிவர். மூக்கணிகளான மூக்குத்தியையும் ஞட்டையும் அண்மையிலேயே பழக்கத்திற்குக் கொண்டு வந்துள்ளனர். இவை மத்திய, வடதிருவாங்கூர் பகுதிகளில் அவ்வளவாக விரும்பி அணியப்படுவதில்லை. தென் திருவாங்கூர் நாயர் சாதிப் பெண்களிலிருந்து இதில் மட்டும் ஈழவப் பெண்கள் மாறுபட்டவர்களாக உள்ளனர். வடதிருவாங்கூரைச் சேர்ந்த வயதான ஈழவ மகளிர் பனழய வகையினதான, 'அடுக்கம் - சம்கோ சக்கரவும்' என்னும் காதணியினையே அணிந்து வருகின்றனர். நாட்டுப் புறங்களில் வாழும் மகளிர் அண்டி மின்னு என்னும் விசித்திரக் கழுத்தணியினை அணிகின்றனர். இப்பொழுதெல்லாம் நாயர் மகளிர் அணியும் அனைத்து அணிகளையும் நாகரிகமாகத் தோன்ற விரும்பும் ஈழவப் பெண்கள் அணிகின்றனர். ஈழவப் பெண்களையும், நாயர் பெண்களையும் அவர்கள் கொண்டையிட்டிருக்கும் விதத்திலிருந்து வேறுபாடு கண்டு

கொள்ளலாம். ஈழவப் பெண்கள் தலை முடியை நெற்றியின் நடுமையத்திலிருக்குமாறு முடிப்பர். நாயர்கள் ஒரு பக்கமாக பெரும்பாலும் இடப்பக்கத்திலிருக்கும்படியாக முடியிடுவர். ஒரு காலத்தில் தென் திருவாங்கூரில் பச்சை குத்தும் பழக்கம் பெருவழக்காயிருந்தது. அது தற்பொழுது படிப்படியாகச் செல்வாக்கு இழந்து வருகின்றது. இது வட திருவாங்கூரில் வழக்கில் இருந்ததாகத் தெரியவில்லை.

ஈழவர் ஊன், மீன் ஆகியவற்றை உண்பர். முயல், மான், பன்றி, மறி, முள்ளம்பன்றி, கோழி, புறா, கினியாக் கோழி, ஆண்மயில், ஆந்தை ஆகியவற்றின் ஊனினை இவர்கள் விரும்பி உண்பதாகக் கூறப்படுகிறது. அரியுண்ட என்ற இனிப்பும் முடி ரக்கறி என்ற கறிவகையும் ஈழவர்களுக்கே உரிய ஈழவர்களே சுவையாகத் தயாரிக்கக்கூடிய உணவு வகையாகும்.

அண்மைக் காலம் வரை தென்னை வளர்ப்பும் கள், சாராயம் தயாரித்தலுமே ஈழவர்களின் முக்கிய தொழிலாக இருந்தது. ''தென்னையின மர வகைகளை வளர்த்தலே இவர்கள் முக்கிய தொழில். அவற்றின் காய்களைத் திரட்டி ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் சுமை கூலி பெற்றுச் சுமந்து செல்வர். இப் பகுதிகளில் பொதி விலங்குகளைப் பயன்படுத்தும் வழக்கம் இல்லை. அத்தகைய விலங்குகள் இப்பகுதிகளில் காணப் படுவதுமில்லை. கல்லினைக் கொத்துவதோடு, பலவகைப் பணிகளையும் மேற்கொண்டு இவர்கள் வாழ்க்கை நடத்துகின்றனர். தேவை ஏற்படும்போது இவர்களில் சிலர் படைக்கலப் பயிற்சி பெற்றுப் போர்ப் படையில் சேர்ந்து போரிடுகின்றனர். நான்கு முழ நீளமுடைய தடியொன்றினை இவர்கள் தங்கள் குல மரபைப் புலப்படுத்தும் வகையில் கையில் எடுத்துச் செல்வர்'' என ஈழவர்களைப் பற்றி பர்போசா பதினாறாம் நூற்றாண்டில் எழுதியுள்ளார். நாகரிக முதிர்ச்சியும், அறிவு வளர்ச்சியும் மிக மிகத் தென்னை மரத்திலிருந்து கள் இறக்கும் தொழிலை எவரும் விரும்பி மேற்கொள்வதில்லை. அத்தொழில் செய்து வரும் ஈழவர்கள் இன்று சோவர் எனத் தாழ்ந்த பிரிவினராகக் கருதப்படுகின்றனர். திருவாங்கூரின் சில பகுதிகளில் சோவர்கள் ஈழவர்களோடு சரிசமமாகக் கலந்து பழகும் உரிமையும் அற்ற

வர்களாக உள்ளனர். உழவுத் தொழிலே இன்று இச் சாதி யாரின் முக்கிய தொழிலாக உள்ளது. இச் சாதியில் பலர் செல் வாக்குடைய பெரிய பண்ணை முதலாளிகளாக இன்று விளங்கு கின்றனர். இச்சாதியில் பெரும்பாலான எண்ணிக்கையினர் வயலில் கூலி வேலை செய்பவர்களாகவும் உள்ளனர். விதைப் புத் தொடங்கு முன் பொழுதன விதைப்பு எனப்படும் சடங்கு நடத்தப்படும். உழவர்கள் மூன்று பிடி அரிசியினைக் கணேசர் உருவின் மேல் விசித் தங்கள் வயலில் நல்ல விளைவு ஏற்பட வேண்டுமென வேண்டிக் கொள்வர். அறுவடைக்குமுன் நல்ல நாள் ஒன்றில் காலை நேரத்தில் சில கதிர்க் கட்டுக்களைக் கொண்டு வந்து வீட்டில் முக்கியமான இடத்தில் தொங்கவிடுவர். நிற என வழங்கப்படும் இச்சடங்கு எல்லா இந்து சாதியா ராலும் மேற்கொள்ளப்படுகிறது. இச் சடங்கின் முடிவில் குடும் பத்தைச் சேர்ந்தவர்கள் புத்தரிசியினைப் பொங்கலிட்டு உண்பர்.

உழவர்கள் மேற்கொள்ளும் வேறு சில சடங்குகளும் உள்ளன. அவை வருமாறு:-

1) மெடியிட்டு வருதல் எனப்படும் முதல் கட்டிலிருந்து அடித்து உதிர்ந்த தானியங்களை வேறொரு சுமையின் மேலிட்டு அதனை வைக்கோலால் மூடுதல். இந்த நெல் அங்குள்ள வயல் வேலை செய்பவர்களின் தலைவனால் பின்னர் உரிமையாக்கிக் கொள்ளப்படும்.

2) கொய்து பிடிச்ச கட்டிக் கொடுக்குக எனப்படும் முதலில் அறுத்த நெற்பயிரின் நெல் மணிகளை எட்டி (*Strychnos-Nux-Vomica*) இலைகளில் கட்டி வயல் உரிமையாளரிடம் தருதல். அவர் இக்கட்டினை அடுத்த அறுவடைப் பருவம் வரை வைத்திருக்க வேண்டும்.

3) கொடுடி எனப்படும் சில தானிய மணிகளை கள்ளில் தோய்த்து வயலில் திரியும் ஆவிகளுக்குப் பலியிடுதல். அப் பொழுது புலையர் சாதியைச் சேர்ந்த பூசாரி 'பொளிவா! பொளிவா!' என உரக்கக் கூக்குரலிடுவான். விளைவு பெரு கட்டும் என்பது இதன் பொருள்.

திருவாங்கூரில் ஈழவர்கள் பல பொருள்களின் தயாரிப்பாளர்களாகவும் திகழ்கின்றனர். சிறப்பாக உள்ளூர்த் தேவைக்குரியதான பலவகைத் துணிகளை இவர்கள் தயாரிக்கின்றனர். பாய், ஓடு, கயிறு ஆகியவற்றையும் திறமையுடன் இவர்கள் தயாரிக்கின்றனர். திருவாங்கூரில் நார்த்தம் புல்லிலிருந்து எண்ணெய் இறக்கும் தொழிலும் இவர்கள் சிறப்பாக ஈடுபட்டுள்ளனர். மருத்துவம், சோதிடம் ஆகிய தொழிலிலும் ஈழவர் பலர் ஈடுபட்டுள்ளனர். இவர்களில் பெரும்பாலோர் நாகரிகத் தொடர்பற்றவர்களே என்ற உண்மையினை ஏற்றுக் கொள்ளலாம். இருந்தாலும் இவர்களுள் பலர் வடமொழிக் கல்வி உட்படச் சிறந்த கல்வியறிவு வாய்க்கப் பெற்றவர்களாக உள்ளனர் என்பதனையும் மறுக்க இயலாது. பொதுவாகப் பார்க்கும்போது மேற்குக் கடற்கரையைச் சார்ந்து வாழும் வளமும் சுறுசுறுப்புமுள்ள வகுப்பாருள் ஈழவர் பிரிவும் ஒன்று எனக் கூறலாம்.

ஈழவர் பக்தியும் சமயப் பற்றுமுள்ள இந்துக்கள். இவர்கள் கோயில்களின் உள்சுற்றில் நுழைய இயலாதெனினும் இவர்களில் பலர் கோயில்களுக்குச் சென்று வழிபாடு நிகழ்த்தும் பழக்கம் உடையவர்களாக உள்ளனர். நாயர்களோடு கூட்டாகத் திருவாங்கூரிலுள்ள பல கோயில்களுக்கு ஈழவர்களும் உரிமை உடையவர்களாக உள்ளனர். கருநாகப்பள்ளியில் உள்ள சக்தி குளக்கரைக் கோயில், மாவேலிக்கரையில் உள்ள செட்டி குளக்கரைக் கோயில் ஆகியனவற்றை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இக் கோயில்களின் மீதும் மற்றவற்றின் மீதும் ஈழவர்கள் கொண்டுள்ள உரிமை நினைவுக்கு எட்டாத காலம் முதல் இன்று வரை மதிக்கப்பட்டு வரப்படுகின்றது. பல இடங்களில் ஈழவர்கள் தங்களுக்கெனத் தனியே கோயில்களை உடையவர்களாக உள்ளனர். அவற்றில் அவர்கள் சாதியைச் சேர்ந்தவர்களே பூசாரிகளாகப் பணிபுரிகின்றனர். அக் கோயில்களில் நாள் வழிபாட்டுக்கான கட்டளைகள் இல்லாத காரணத்தால் அவற்றிற்கெனத் தனியே முன்பு பூசாரிகள் நியமிக்கப்படவில்லை. போரில் வெற்றி தேடித்தரும் பத்ரகாளியினையே இவர்கள் முக்கியமான தெய்வமாக வழிபடுகின்றனர்.

அத் தெய்வத்திற்கு இடப்படும் படையல்க்ளில் உயிர்ப்பலியும் அடங்கும். இக் கோயில்கள் தாழ்வாகக் கூரையோடு கூடிய கட்டிடங்களாக, முன் கூடத்தோடு சுற்றுச் சுவர் அமைப்பு உடையனவாகத் தோப்புகளால் சூழப்பட்டு இருக்கும். பல கோயில்கள் சுற்றுச் சுவர் அற்றனவாகவும் உள்ளன. நாணன் ஆசான் என்பவரின் போதனைகளின் செல்வாக்கின் காரண மாகக் காலப் போக்கில் பத்ரகாளி வழிபாடு செல்வாக்கு இழந்துவருகின்றது. மத்திய தென் திருவாங்கூர் கோயில்கள் பலவற்றில் அவருடைய கட்டளைப்படி சுப்ரமணியர் உருவம் வைக்கப்பட்டுச் சாதியைச் சேர்ந்த மணம்புரிந்து கொள்ளாத பூசாரிகளைக் கொண்டு நாள்தோறும் வழிபாடு நிகழ்த்தப்பட்டு வருகின்றது. சாதியைச் சேர்ந்தவர்களின் சமூக, பொருளா தார் ஆன்மீக வளர்ச்சி கருதி நாராயண தர்ம பரிபாலன யக் ஞம் எனப்படும் ஒரு கூட்டமைப்பும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. அதன் தலைமையிடம் நெய்யாத்தங்கரை வட்டத்திலுள்ள அரு விப்புரத்தில் அமைந்துள்ளது. அங்கு ஒவ்வொரு நாளும் காலையில் கதிரவனைச் சிறப்பாக வழிபடுவதோடு சமயப் பண் பாடு தொடர்பான வகுப்புகளும் நடத்தப்படுகின்றன. பழங் காலத்தில் அஞ்சு தம்புரான்கள் என வழங்கப்படும் ஐந்து தெய்வங்களை இவர்கள் வழிபட்டனர். இத் தெய்வங்கள் மகா பாரதத்திற்குரிய பஞ்ச பாண்டவர்களே எனத் தற்போது அடையாளங் கண்டுள்ளனர். இந்த அஞ்சு தம்புரான்கள் வழி பாடு புலையர்களிடையேயும் வழக்கில் உளளது. கொல்லத் தில் உள்ள மய்யா நாட்டில் இன்றும் இந்த ஐந்து தெய்வங் களுக்கு உரியதான ஈழவர்கள் கோயில் உள்ளது. பெண்கள் எல்லாத் திங்கள், வெள்ளிக் கிழமைகளிலும் சிவனின் துணைவி யான கௌரியை வணங்கக் கோயிலுக்குச் செல்கின்றனர். ஈழவ ஆண்கள் மாதத்தின் முதல்நாளிலும் கடைசிநாளிலும் தங்கள் பிறந்த நட்சத்திரத்தன்றும் சமய வழிபாட்டில் ஈடுபடுகின்றனர். மத்திய திருவாங்கூரைச் சேர்ந்த ஈழவர்கள் ‘காயலில் தெய்வம்'' எனப்படும் உப்பங்கழி சார்ந்த ஆவியினை வழிபடுகின்றனர். ஊரில் பெரியம்மையோ, காலராவோ பரவுமானால் அந்த வட்டாரத்தில் உள்ள பத்ரகாளி கோயிலில் படையலிடப்படும். இந்தப் படையல்களுள் குறிப்பிடத்தக்கது கலம் வைக்குக எனப்

படும் பானை வைத்தலாகும். உள்ளூரைச் சேர்ந்த பணிக்கன் ஒருவனின் மனைவியோ அல்லது குறிப்பிடத்தக்க குடும்பத்தைச் சேர்ந்த ஒருத்தியோ விரதம் இருந்து ஐந்து நாழி நெல்லுள்ள ஒரு பானையோடு ஊரில் உள்ள எல்லா ஈழவர்கள் வீடுகளுக்கும் இன்னிசை முழக்கம் பின் தொடரச் செல்வாள். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் ஒருத்தி அதே போலப் பானையில் நெல்லுடனும், ஒரு சக்கரம் (சுமார் அரையணா) காணிக்கையுடன் அவளைத் தொடர்ந்து அவளோடு கோயிலுக்குச் செல்வர். கோயில் பூசாரி அவர்களுடைய படையலை ஏற்று, நெல்லை அரிசியாக்கி, அதில் கொஞ்சம் ஒவ்வொரு பானையிலும் இட்டு மறுநாள் காலையில் அதனைக் கொண்டு வந்தவர்களிடம் தருவார். இது போன்ற சமயங்களில் மேற்கொள்ளப் படும் இன்னொரு சடங்கு தேசகுருடி எனப்படும். பெண்கள் விரதமிருந்து தேவையான உணவுப் பொருள்களுடன் கோயிலுக்குச் செல்வர். கோயில் பூசாரி ஆடு, கோழிகள் ஆகியனவற்றைப் பலியிட்டபின் தாங்கள் உண்ணும்முன் தாங்கள் கொண்டுவந்த உணவுப் பொருட்களைத் தெய்வத்திற்குப் படைப்பர். தூக்கம் அல்லது தொங்கவிடுதல் என்பது தெய்வத்தைத் திருப்திப்படுத்தச் செய்யப்படும் மற்றுமொரு சடங்காகும். 'மமச் சிறப்பு' எனப்படும் சமய வழிபாட்டு நெறியினை மத்திய திருவாங்கூர் ஈழவர்கள் கார்த்திகை மாதத்தில் மேற்கொள்கின்றனர். ஒவ்வொரு ஈழவனும் மாலையில் குளித்தபின் தெய்வங்களின் நாமவளியினைக் கூறிச் சுமார் ஒரு மணி நேரம் வழிபட்ட பின் இளநீர், பழங்கள், வறுத்த தானியம் ஆகியவற்றைப் படைப்பான். இது ஒவ்வொரு குடும்பத்தினுடைய வசதிக்கும் தக்கவாறு பன்னிரண்டிலிருந்து நாற்பதியொரு நாள் வரை நிகழ்த்தப்படும்.

தூக்கம் சடங்கு தொடர்பாகத் திரு. எல். கே. அனந்த கிருட்டிண அய்யர் எழுதுவது வருமாறு:-* கொக்கியில் தொங்கியபடி ஆடும் தூக்கம் சடங்கு, கருடத் தூக்கம், தோணித்

* இன இயல் தொடர்பான தனிக் கட்டுரைகள், கொச்சி மாநிலக் கணிப்பு, எண் 10 ஈழவர்-1905.(Monograph Ethnograph: Survey of Cochin No. 10. Izhavar, 1905.

தூக்கம் என இரண்டு வகைப்படும். இச்சடங்கு ஒரு நேர்த்திக் கடனைக் கழித்துக் காளி தேவியின் அருளைப் பெற அவள் முன்னிலையில் பெறுவதாகும். இச் சடங்கினை மேற்கொள்பவன் அதிகாலையில் குளித்து ஓராண்டு காலம் அல்லது நாற்பத்தொரு நாள்கள் பகவதியை வழிபட்டு அதற்குரியவனாகத் தன்னைத் தயார்படுத்திக் கொண்டிருப் பான். அக் காலத்தில் அவன் ஊன் உண்டலை அடியோடு தவிர்த்தலோடு கூட, மதுவகைகளையும் ஒதுக்கி மகளிரோடு உறவையும் தவிர்த்தவனாக இருத்தல் வேண்டும். சடங்கு நிகழும் அன்று காலையில் சடங்கு மேற்கொள்பவன் தன் இடுப்பில் மட்டும் ஓர் ஆடையினை இடைப்பட்டையில் நுழைத்துக் கட்டியபடி அணிந்து கொள்வான். உடம்பில் எண்ணெய் தடவிக்கொண்டு முதுகுப் புறத்தில் நன்கு எண்ணெய் பூசி நீவிக் கொள்வான். முதுகுப் பக்கததுச் சதையின் பகுதிகளே பிதுக் கப்பட்டுக் கொக்கி மாட்டப்படுதற்குரியன. அவனுக்குப் பயிற்சி தருபவர் பாயிட்ட என்ற பலவகை ஆட்டங்களை அவன் சடங்கின்போது ஆடிக் காட்ட அவனுக்குச் சொல்லிக் கொடுத் திருப்பார். அதனை அச்சடங்கு முடியும்வரை நாளும் பயின்ற படி இருப்பான். கருட ஆட்டத்தில் நான்கு சக்கரங்களின் மீது பொருத்தப்பட்ட இரண்டு இருசுகளை உடைய ஒரு வகைத் தேர் பயன்படுத்தப்படும். அதன்மீது செங்குத்தாக நிற்கும் இரண்டு நீண்ட கம்பங்களின் மீது குறுக்காக ஒரு சட்டம் பொருத்தப்பட்டிருக்கும். அந்தச் சட்டத்தில் பொருத்தப்பட்ட வளையத்திலிருந்து உறுதியான கயிறு ஒன்று முதுகில் குத்தி மாட்டப்படுவதறகான கொக்கியோடு இணைக்கப்பட்டிருக்கும். உயர உள்ள குறுக்குச் சட்டத்தின் மேலே கண்ணைக் கவரும்படி யாக ஒப்பனை செய்யப்பட்ட ஒரு கூடாரம் அமைக்கப்பட்டிருக் கும். அதனுள் இரண்டுமூன்று பேர் ஒரே சமயத்தில் ஆடக் கூடிய அளவிற்கு அது இடம் அகன்றதாக இருக்கும். சிலவிடங்களில் இந்த அமைப்பு மாறுபட்டதாக தூண்களால் தாங்கப்படும் குறுக்குச் சட்டத்திற்குப் பதிலாக ஒரு சிறிய கம்பத்தின் மீது ஒருமுனையில் உலோக வளையத்தோடு கூடிய சட்டம் அமைக் கப்பட்டிருக்கும். அந்தச் சட்டம் ஒரு நெம்புகோல் போல மேலும் கீழும் சென்று வரக்கூடிய வகையில் ஆடுபவர் இடையிடையே

ஒய்வு கொள்ள ஏற்றவகையில் பொருத்தப்பட்டிருக்கும். வளையத்தில் பொருத்தப்பட்டிருக்கும் கயிறு கொக்கியில் இணைக்கப்படுவதோடு இடைப்பட்டையோடும் இணைக்கப் படும். படகு ஆட்டத்திற்கும் இதேபோன்ற வண்டி, சக்கரங் களின்றிப் பயன்படுத்தப்படும். பருந்தாட்டத்திற்கு ஆட்டக் காரன் முகத்தில் பச்சை வண்ணம் தீட்டிக் கொள்வான். செயற்கையான உதடுகளையும், பருந்துபோலத் தோற்றம் தருவதற்கான இறக்கைகளையும் அவன் பொருத்திக் கொள்ள வேண்டும். கதகளி ஆட்டக்காரரைப் போலத் தலைமுடியை நீளமாகத் தொங்கவிட்டுக் கொள்வான். அவன் தேரில் ஆடும் போது தேரினைக் கோயிலைச் சுற்றி மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது அல்லது பதினொரு முறை இழுத்துச் செல்வர். தோணி ஆட்டத்திலும் தேர் இதே போலக் கோயிலைச் சுற்றித் தூக்கிச் செல்லப்படும். அப்போது ஆட்டக்காரன் பருந்தாட்டக்காரன் ஆடுவது போலவே தொங்கியபடி தொடர்ந்து இன்னிசைக் காரர் பின்வர ஆடுவான். இவனும் பருந்தாட்டக்காரனைப் போலவே உடை அணிந்து கொள்ள வேண்டும் எனினும் செயற்கை உதடுகளையும் இறக்கைகளையும் பொருத்திக் கொள்ள வேண்டியதில்லை. பிள்ளை எடுத்துத் தூக்கம் எனப்ப டும், குழந்தையின் நேர்த்திக் கடன் கழிக்கும், குழந்தையோடு தொங்கி ஆடும் ஆட்டத்தில் குழந்தையின் பெற்றோர் குழந்தை யைக் கோயிலுக்கு எடுத்துச் செல்வர். குழந்தையின் பெற் றோர் சடங்கு நிகழும் கோயில் திருவாங்கூரில் உள்ளதாயின் முப்பத்தி நான்கு சக்கரங்களும், கொச்சியில் உள்ளதாயின் அறுபத்தி நான்கு புத்தான்களும் கோயிலுக்குச் செலுத்த வேண்டும். அதன்பின் குழந்தையைத் தொங்கியபடி தூக்கம் ஆடுபவன் கையில் தருவர். அவன் ஆடியபடியே குழந்தையைக் கைகளில் தாங்கியபடி இருப்பான். இச் சடங்குகள் சில சமயங்களில் கோயிலின் செலவில் நடத்தப்படுகின்றன. எனினும் பொதுவாகக் கோயிலுக்கு நேர்ந்து கொள் பவர்களின் பொருள் வசதிக்கேற்பவே நடத்தி வைக்கப்படு கின்றது. இதற்காக ஒருவர் பருந்து ஆட்டத்திற்குச் செலவு செய்ய வேண்டிய தொகை ரூபாய் 150-உம் தோணி ஆட்டத் திற்குச் செலவு செய்யவேண்டிய தொகை ரூ30-உம் ஆகும். இச்

சடங்கின் போது நேர்ந்து கொள்பவர்களுக்குக் கோயிலிலேயே உணவு வழங்குவர். அவர் நேர்ந்து கொண்டவராக இருப்பதாலேயே இவ்வாறு உணவு அளிக்கப்படுகிறது. நாயர்கள், கம்மாளர், கறுப்பன்கள், ஈழவர்கள் ஆகியோரே இவ்வாறு நேர்ந்துகொண்டு தூக்கம் ஆடுகின்றனர். காளி தேவிக்கும் தரிக அசுரனுக்கும் இடையே நடைபெற்ற போரில் தரிக அசுரனைத் தோற்கச் செய்த தேவி, அவன் முதுகினைக் கடித்து இரத்தத்தைக் குடித்தே தன் கோப வெறியினைத் தணித்துக் கொண்டாள். கொக்கியில் தொங்கி ஆடுவது இச்செயலின் குறியீடாகவே மேற்கொள்ளப்படுகின்றது. முதுகில் கொக்கியினைப் பொருத்தும்போது ஒருவன் வடிக்கும் குருதி தேவிக்குரியதாகத் தரப்படும் பலியாகும்.''

திருவாங்கூரிலுள்ள கொல்லங்கோடு கோயிலில் சில ஆண்டுகளுக்கு முன்பு நடத்தப்பட்ட கொக்கியில் தொங்கி ஆடுதலைப் பற்றி மறைத்திரு டி. நொவ்லெஸ் நல்லதொரு விவரக்கட்டுரையினைத் தந்துள்ளார்.*பின்வருவது அக்கட்டுரையின் சுருக்க வடிவமாகும். ''கோயிலின் முன்னுள்ள ஒரு பந்தலில் பத்ரகாளியின் கோர உருவம் வைக்கப்பட்டிருக்கும். இத்தெய்வம் இரத்த பலியினை விரும்புவது. அந்தத் தெய்வ உருவிலிருந்து கொஞ்ச தூரத்தில் ஒரு தேர் இருக்கும். இதன் அடிப் பகுதி, யானைகள் மரக் கட்டைகளைத் தள்ளிச் செல்லும் வண்டியினை ஒத்ததாக, நான்கு சக்கரங்களைக் கொண்டதாக உறுதியுடன் அமைந்திருக்கும். இரயில் சரக்கு வண்டியினைப் போலச் சிறிய அளவில் அமைந்துள்ளதான அதில் இரண்டு கம்பிக் கயிறுகள் தொங்கும். இதன் பக்கங்களில் செங்குத்தாக இரு தூண்கள் சுமார் 15 அடி உயரமுடையனவாகத் தாங்கிகளோடும் குறுக்குச் சட்டங்களோடும் வலுப்படுத்தப்பட்டனவாக நிற்கும். அவற்றின் உச்சியில் குறுக்காக ஒரு சட்டம் துளை உடையதாக அடிப்பாகம் உருண்டை வடிவினதாக குறுக்குக் கட்டை இணைக்கப்பட்டிருக்கும். இது நீண்ட சட்டத்தில் ஆள்கள் மேலும் கீழுமாகத் தொங்கியபடி செல்லத் துணை செய்யும். இச்சட்டம்

* Wide World Magazine, September. 1899.

35 அல்லது 40அடி நீளமும் 9 அங்குலக் குறுக்களவும் கொண்டது. இது, துளை வழியாக உயரமாக இருக்கும் கம்பத்தின் மேல் முனையில் பொருத்தப்பட்டு அதன் இரு முனைகளும் மேலும் கீழும் சென்று வரக் கூடியதாக ஓர் ஊசற்கட்டையினை ஒத்ததான அமைப்புடையது. இதன் ஒரு முனை மேலே மூடப் பட்ட விதான அமைப்புக் கொண்டதாகவும் மறுமுனை தரை வரை தொங்கும் நீண்ட கயிறு பிணைக்கப்பட்டதாகவும் இருக் கும். இந்தத் தேரின் முழு அமைப்பும் நீண்ட சட்டத்தின் ஒரு முனையைத் தரையைத் தொடும்படியாகத் தொங்கவிடப்பட்டு அதனோடு ஒருவனைப் பிணைத்துக்கட்டியபின் மறுமுனையைக் கீழே இழுத்தால் அவன் சுமார் நாற்பதடியோ அதற்குமேலோ உயர்ந்து மேலே செல்லும்படியானதாக இருக்கின்றது. அதன் பின் அந்தத் தேரினை அப்படியே கம்பிக் கயிறுகளைக் கொண்டு கோயிலைச் சுற்றி இழுத்துச் செல்லலாம். ஒருவனைத் தொங்கிய படி ஆடத் தயாராக்கும் போது அவன் தலைக்கு மேல் அவ னுக்குச் சிறப்புச் செய்யவும் அவனை வெயிலிலிருந்து காக்கவும் ஆக இரு பயன்பாடுகளுக்கும் உரிய வகையில் ஒரு பாய் விரிக்கப் படும். அவன் தலை கழுத்து ஆகியவற்றில் பலவகை அணிகள் பூட்டப்பட்டிருக்கும். அவன் இடைக்குக் கீழே மயில்தோகைகள் அணிந்திருப்பான். அவனுடைய கோவணம் அவன் உடற்சுமை யில் ஒரு பகுதியைத் தாங்கிக் கொள்ளத் துணை செய்யும் படியா கக் கயிற்றோடு பிணைக்கப்பட்டிருக்கும். அதனை அதிர் ஒலி களுக்கிடையேயும் கொட்டு முழக்குடனும் குழல்களின் கிரீச் ஒலி களுடனும் கூடியுள்ளவர்கள் ஆரவாரத்திற்கிடையேயும் விதா னம் அமைக்கப்பட்ட சட்டத்தின் முனை கீழே தாழ்த்தப்படும். பக்தன் தரையில் விழுந்து வணங்கியவனாக இருக்க அந்தச் சட்டத்தோடு பிணைத்துக், கை, மார்பு ஆகியவற்றிடையே கயிறு வாங்கிக் கட்டப்படுவான். கயிறுகளில் சில கொக்கியுடன் பிணைக்கப்படும் பூசாரி அவன் முதுகில் தசையான பகுதியைப் பிடித்து இறுக்கி குறைந்தது நான்கு கொக்கிகளை முதுகில் மாட்டிவிடுவான். முரட்டு வாளொன்றும் கேடயம் ஒன்றும் அந்தப் பக்தன் கரங்களில் தரப்படும். மேலே உயர்த்தப்பட்ட அவன் தன் கைகளில் உள்ள வாளையும் கேடயத்தையும் ஆட்டிய படி தொங்கியவாறு கைகால்களை உதைத்துக்கொண்டபடி ஆடு

வான். மக்கள் மெல்ல அத்தேரினைக் கோயிலைச் சுற்றி இழுத்துச் செல்வர். கோயிலின் சுற்றளவு செயிண்ட் பால் தேவாலயத்தின் சுற்றளவினைவிடக் குறைந்ததாகவே இருக்கும். தேர் மும்முறை அல்லது நான்கு முறை சுற்றி வரும்போது அடுத்தடுத்துச் சிலர் தொங்கியபடி ஆடுவர். நான் நேரில் கண்டபோது அடுத்த பக்தனும் இதே போலத் தேரில் பிணைக்கப்பட்டான். பூசாரி வாளுக்கும் கேடயத்திற்கும் பதிலாக அவன் கைகளில் ஒரு குழந்தையைத் தந்தான். அக்குழந்தையோடு அவன் தொங்கத், தேர் கோயிலைச் சுற்றி இழுத்துச் செல்லப்பட்டது. முன்பே நேர்ந்து கொண்ட பெற்றோர்கள் மேலும் சில குழந்தைகளை முன்னே கொண்டு நிறுத்தினர். அச்சிறுவர்கள் காளியின் முன் விழுந்து வணங்கும்படி கூறப்பட்டனர். அதன்பின் அவர்கள் உடலின் பக்கத்தில் சதைப் பகுதியினை நசுக்கி அதனிடையே ஒரு கம்பி செலுத்தப்பட்டது. இவ்வாறு சொருகப் பட்ட கம்பியின் முனைகள் அச் சிறுவரின் உறவினர்களிடம் தரப்பட அச் சிறுவர்கள் கோயிலைச் சுற்றிசுற்றி அழைத்துச் செல்லப்பட்டனர். அது கயிறு கட்டி ஓட்டிச் செல்வதனை ஒத்திருந்தது. பக்தன் மிகுந்த ஆர்வம் உடையவனாக இருப்பானாகில் தேரிலிருந்து அவன் தொங்கியபடி இருக்கக் காண்போர் கூட்டம் திகைக்கும்படியாக தேர் நெடுந்தொலைவு தூரம் இழுத்துச் செல்லப்படுவதும் உண்டு என்பது பதிவில் உள்ள செய்தியாகும்."

ஈழவர்களுடைய சமயநெறி தொடர்பாக மறைத்திரு எஸ். மட்டீர் கூறியுள்ளவை வருமாறு*:- "கொடிய தேவதைகளின் வழிபாடு, அதிலும் கோபமும் குறும்பும் நிறைந்தவளான பத்ரகாளியின் வழிபாடு இச்சாதியார் வழக்கமாக மேற்கொள்ளும் வழிபாடாகும். அப்போது உயிர்ப் பலிகள் தந்து சாணரைப் போலப் பேயாட்டம் ஆடுவர். சாஸ்தா, வீரபத்திரர் ஆகிய தெய்வங்களையும் வழிபடுவதோடு முன்னோர்களின் ஆவிகளையும் இவர்கள் வழிபடுகின்றனர். கோயில்களின் அருகே மரங்கள் தோப்புகளாக நிற்கும். பாம்பு உருவங்கள் பல இடம் பெற்றிருக்கும். இவை காளியின் விருப்பத்திற்

---

* திருவாங்கூரில் இந்தியர் வாழ்க்கை, 1983. (Native Life in Travancore, 1883.)

குரியவை எனக் கூறப்படுகிறது. இவர்கள் தங்கள் மூட நம்பிக்கைகளையும், தேவதைகள் பற்றிய அச்சங்களையும் அன்றாட வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியோடும் தொடர்பு படுத்துகின்றனர். பரூர், சர்க்கரே ஆகிய ஊர்களில் இருக்கும் கோயில்களில் இவர்கள் சூத்திரர்களோடு இணைந்து வழி பாட்டில் ஈடுபடுகின்றனர். ஈழவர் கோயில்கள் தாழ்வான கூரை வேயப்பட்ட கட்டிடங்களாக முற்றத்தோடு கூடியனவாக இருக்கும். அந்த முற்றத்தில் மரச் சிற்பங்கள் தூண்களில் செதுக்கப்பட்டிருக்கும். கோயிலைச் சுற்றிச் சுற்றுச் சுவரும், அரசு, அரளி, இலுப்பை ஆகிய மரங்களோடு கூடிய தோப்பும் அமைந்திருக்கும். திருவனந்தபுரத்தின் புறத்தேயுள்ள சாக்கியில் உள்ள ஈழவர் கோயிலில் பத்ரகாளி தங்க மூலம் பூசப்பட்டுப் பாம்புகள் அணிசெய்யும் இரண்டு இறக்கைகளோடு கூடிய ஓர் உருவின் மேல் அமர்ந்த கோலத்தோடு காட்சி தருகிறாள். ஆண்டுக்கு இரண்டு முறை ஓர் ஈழவப் பூசாரி கோழிகள், மறி ஆகியன்வற்றை அத் தெய்வத்திற்குப் பலியிடுவதோடு தானியம், பழம், பூ ஆகியவற்றையும் படைப்பான். முதுகில் கொக்கி குத்தும் சடங்கும் இங்கு நடத்தப்படுகிறது. திருவனந்த புரத்துக்குத் தெற்கே பத்தாவது மைலில் உள்ள மங்கலத்துக் கோணம் கோயிலில் பங்குனி மாதத்துப் பரணி நாளில் நடை பெறும் ஆண்டுத் திருவிழாவினை நான் நேரில் பார்த்தேன். இவர்களின் கோயில் நடைமுறைக்கு அங்கு நடந்தவைகளைத் தக்கச் சான்றாக எடுத்துக் காட்டலாம். இக் கோயில் விசித்திர மான ஒரு தூணின் மீது உயரத்தில் புறாக் கூடு போன்றதொரு அமைப்பினை உடையதாயிருந்தது. இதனைத் தனி மரம் என்பர். இது மாடன் என்னும் பூதத் தெய்வம் உறையும் கோயிலாகும். புலையர்களின் குச்சிக் கோயில் எனப்படும் மாடக் கோயிலை ஒத்தது இது. இக் கோயிலின் மேற் பகுதியில் பல தலை நாகங்கள் செதுக்கப்பட்டிருப்பதோடு எண்ணெயிட்டு எரிக்க ஒரு விளக்கும் துருத்தியபடி இருக்கும். திருவிழாத் தொடர்பாகக் கோயிலைச் சுற்றியுள்ள மைதானம் குளைகள் வெட்டப்பட்டுத் துப்புரவு செய்யப்படும். புறத்தே அமைந்த வீடுகளும், கொட்டகைகளும் மலர்களால் அலங்கரிக்கப்படும். தனி மரத்தின் மீது இரண்டு வாழை மரங்கள் குலைகளோடு

கட்டப்படுவதோடு அதன் அடியில் பூத ஆட்டக் கழிகளும் வைக்கப்படும். தனி மரத்தின் அருகே தென்னை ஓலை, வாழைப் பட்டை ஆகியவற்றால் அமைக்கப்பட்டு மலர்களால் அலங்கரிக் கப்பட்ட கூட அமைப்புகள் இடம் பெறும். கூடங்களில் சில சிறு ஆவிகள் தங்கியிருப்பதாகக் கருதப்படுவதோடு இவற்றின் உள்ளே மாலை நேரம் நெருங்கும்போது மலர்கள், அரிசி, வாழைப்பழம், தேங்காய், இரத்தம் ஆகியன படைக்கப்படும். திருவிழாவிற்காக வந்து கூடும் ஈழவர்கள் நெற்றியில் பட்டை யாக விபூதியிட்டுப் பொட்டும் அணிந்திருப்பதோடு மார்பில் மஞ்சள் சந்தனக் கலவையால் குறுக்கே கோடுகளும் தீட்டியிருப் பர். நடுப்பகல் நேரத்தில் கோயிலில் கூடத் தொடங்கும் இவர்கள் இரவிலேயே இல்லங்களுக்குத் திரும்புவர். திருவிழா ஐந்து நாள்கள் தொடர்ந்து நடைபெறும். சுற்றுப் புறத் தைச் சார்ந்த சூத்திரர்களும் சாணார்களும்கூட இந்த விழா விற்கு வருகைபுரிகின்றனர். தங்கள் நேர்த்திக் கடனைச் செலுத்தச் சில புலையர்கள் ஒரு சக்கரம் செலுத்திக் கதனை களில் இரு அதிர் வெடிகள் வெடிக்கச் செய்வர். நோயிலிருந் தும், வேறுவகைத் துன்பங்களிலிருந்தும் விடுதலை பெறுதற் காகவே இங்கு நேர்த்திக் கடன்களைச் செலுத்துகின்றனர். கோயிலின் பூசாரி ஓர் ஈழவன் ஆவான். அவனுக்குப் பணம், அரிசி முதலியன அன்பளிப்பாக வழங்கப்படும். கொக்கி மாட்டிக் கொண்டு தேரில் ஆடும் சடங்கும் சிறு அளவினதாக இங்கு நடைபெறுகின்றது. அப்போது பதினைந்து அல்லது பதினாறு வயதுடைய நான்கு இளைஞர்கள் அங்கு அழைத்து வரப்படுகின்றனர். அவர்கள் அதற்கு முன் ஐந்து நாள்கள் சோறும் மரக்கறியும் மட்டுமே உண்டு விரதம் இருப்பர். இந்தச் சடங்கில் கலந்து கொள்ள இவர்கள் அச்சுறுத்தியும், அன்பளிப் புகள் தந்தும் உடன்பாடு தெரிவிக்கும்படி செய்யப்படுகின்றனர். தேவிக்கு இவர்கள் பெற்றோர் செய்துள்ள நேர்த்திக் கடனை நிறைவேற்ற இவர்கள் மறுப்பார்களாயின் அதனால் பெருங் கேடு விளையும் என்று ஒரு புறம் அச்சுறுத்துவதோடு, இவர்கள் பெற்றோர் சொற்படி கேட்டுச் சடங்கினை மேற்கொள்வார்க ளாயின் நல்ல புதிய உடைகளும், பணமும் அன்பளிப்பாகப் பெறலாம் என மறுபுறம் ஆசையும் காட்டுவர். நல்ல

ஆடைகள் அணிந்து தலைப்பாகை புனைந்தவர்களாகக் கையில் தங்கக் காப்புகள் துலங்க மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டு இந்த ஏழைச் சிறுவர்கள் அவர்களுடைய குருதியில், கொடு சத்தைத் தெய்வத்திற்குப் பலியாகத் தர அழைத்து வரப்படு கிறார்கள். மும்முறை அவர்கள் கோயிலை வலம் வந்தபின் அவர் களுடைய முதுகின் தசைகளில் இரு பக்கங்களிலும் இரும்புக் கம் பியால் துளையிட்டபின், அந்தத் துளை வழியாகச் சிறு பிரம்புக் குச்சி நுழைக்கப்படுகிறது. நான்கு பேர் அவ்வாறு நுழைக்கப் பட்ட பிரம்பின் முனையினைப் பிடித்துக் கொள்கின்றனர். இன்னிசையும், பாட்டும் கூடி உள்ளவர்களின் கைகொட்டும் தொடரக் கோயிலைச் சுற்றி ஐந்து முறையோ ஏழு முறையோ அச்சிறுவர்கள் களைப்பால் சோர்ந்து போகும் வரை அழைத் துச் செல்லப்படுவர். ஒரு பிராமணனைப்போல சரிகைக் கரை யிட்ட சிவப்பு வேட்டியைக் கட்டிக்கொண்டவனாக அப் போது பூசாரி அங்கே வந்து சாமியாடும் தண்டினைக் கையில் எடுத்துக்கொண்டு தேவியின் முன் ஆடுவான். பின் சேவல்களின் மீது நீர் தெளிக்கப்பட்டு அவை சிலிர்த்துக் கொண்டவுடன் அவற்றின் தலையை அறுத்துப் பலியிடுவான். மயநாட்டில் உள்ள ஈழவர்க்குச் சொந்தமான சிறிய கோயிலில் இருக்கும் பகவதி, பிராமணப் பூசாரி பூசை செய்யும் சூத்திரர்களுக்குரிய கோயிலில் இருக்கும் தெய்வத்தின் உடன்பிறந்தவள் எனக் கருதப்படுகிறாள். அந்தப் பெரிய கோயிலுள்ள தெய்வத்தின் தேர் ஆண்டுக்கு ஒரு முறை ஈழவர் கோயிலுக்கு இழுத்து வரப்பட்டு அக் கோயிலை மூன்று முறை சுற்றி வந்த பிறகே நிலைக்குத் திரும்பும். அந்த ஈழவர் கோயிலில் அன்றிரவு பெண்கள் புதுப் பானையில் பொங்கலிட்டு வழிபாடு செய்ய, ஆண்கள் கோழியும் ஆடுகளும் பலி இடுவர். ஈழவர்களின் மூட நம்பிக்கைக்கு எடுத்துக்காட்டாக இன்னமும் இரண்டு நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டுகிறேன். தன் குழந்தையின் உடல் நலமில்லாததால் ஓர் ஈழத்தி சோதிடர் ஒருவரிடம் சென்று சோதிடம் கேட்டாள். அவன் அந்தக் குழந்தையின் இறந்துபோன பாட்டியினுடைய ஆவியானது அக் குழந்தையின் மேல் ஏறி நோயைத் தந்திருப்பதாகவும் அதனை விரட்டப் பின்வரும் பொருள்களைக் கொண்டுவரும்படியும் கூறினான்.

ஏழு கிணறுகளிலிருந்து தண்ணீர், ஐந்து தொழுவங்களிலிருந்து பசுஞ்சாணம், முட்டைப் புழு, ஒரு நண்டு, ஒரு தவளை, ஒரு பச்சைப் பாம்பு, ஒரு விரால் மீன், வறுத்த அரிசி, அடை, தேங்காய், பச்சை மிளகாய், பச்சைத் தென்னோலை என்பனவே அப் பொருள்களாம். இரண்டாவது நிகழ்ச்சி வருமாறு: கிறித்துவ சமயத்தின்பால் புதிதாக ஈடுபாடு கொண்டிருந்த ஓர் ஈழவனிடம் அவனுடைய உடன்பிறந்தவள் நயினாமாடனுக்கு அவன் ஒரு சிறிய கோயிலைக் கட்டி உயிர்ப் பலி கொடுத்தால் அந்தப் பூதம் காத்துக் கொண்டிருக்கும் பெரிய செம்புப் பாத்திரத்திலிருக்கும் தங்கக் காசுகள் கிடைக் கும் என ஆசை காட்டினான். அந்த முட்டாளும் அதன்படியே செய்து முடித்து ஒரு பைசாவுக்கும் வழியில்லாதவனானான். அவனிடம் பொய் கூறிய அவனுடைய சகோதரன் இப்பொழுது ஒரு மனிதனைப் பலி கொடுத்தாலன்றி அந்தப் பூதம் திருப்தியடையாது எனச் சத்தியம் செய்தபடி உள்ளான். ஆனால் அதுபோல மனிதனைப் பலி கொடுப்பது நடவாத காரியம்."

ஈழவர்களின் சாதித் தலைவர்கள் சாணாரும், பணிக்கருமே. இவர்களுக்கு முன் கூறப்பட்ட அரசர்களால் இந்த அதிகாரம் வழங்கப்பட்டது. இவர்களுடைய அதிகார எல்லை இவர்களால் அந்த அரசர்களுக்கு அனுப்பப்பட்டுள்ள நில எல்லைப் படங் களில் வரையறுக்கப்பட்டிருப்பதோடு இன்றளவும் சமுதாயத் தொடர்புடைய எல்லாவற்றிலும் இவர்கள் எடுக்கும் முடிவே இறுதியானதாக உள்ளது. கோயிற் பூசாரிகளுக்கு நியாயம் வழங்கும் உரிமையில் பங்கேதும் இல்லை. சாதி விதிமுறை களுக்கு எதிரான குற்றங்களுள் தீட்டினைக் கடைப் பிடியா திருத்தல், தவறான கள்ள உறவு, பெண் பூப்படையுமுன் தாலி கட்டுச் செய்யாதிருத்தல், ஊர் நாவிதனையும், வண்ணானையும் பணிக்கு அமர்த்திக் கொள்ளாமை, தன் சொந்த ஊரில் திரு விழாக் கொண்டாடாது இருத்தல் முதலியன குறிப்பிடத்தக்கன. இக் குற்றங்களைப் பற்றி அந்த ஊராருக்குரிய நாவிதர் அல்லது வண்ணார் வாயிலாக சாதித் தலைவர்கள் தெரிந்து கொள்வார் கள். கொட்டில் பட்டுக்கார், நாலு வீட்டுக்கார் எனப்படும் ஊர்த்தலைவனுடைய உதவியாளர்களும் அவனுக்கு இத்தகைய

குற்றங்கள் பற்றித் தெரிவிப்பார்கள். ஒவ்வொரு ஊரிலும் முன் காலத்தில் நாலு குடும்பத்தவர்கள் ஆட்சியாளருக்கு வரியாக ஐம்பது நான்கு பணம் செலுத்தி இது போல ஊர்த் தலைவனுக்கு உதவியாளனாக இருக்கும் உரிமையைப் பெற்றிருந்தனர். இவர்கள் ஊர்த் தலைவனுடைய அதிகாரத்தில் நாலில் ஒரு பங்கு அதிகாரத்தை மேற்கொள்ளும் உரிமை உடையவர்கள். ஒரு வழக்கினைப் பற்றிக் கேட்டறிந்த பின் குற்றம் மெய்ப்பிக்கப்படுமானால் குற்றம் புரிந்தவனுக்கு ஒரு தொகை தண்டமாக விதிக்கப்படும். அதனை அவன் ஊர்க்கோயிலுக்குச் செலுத்தக் கடமைப்பட்டவன். குற்றம் மிகப் பெரியதாக இருக்குமானால் குற்றவாளி ஊராருக்கு ஒரு விருந்து நடத்தும்படி கூறப்படுவான். அதனைச் செய்யத் தவறுபவர்களுக்கு ஊர்ப் பூசாரி, வண்ணான், நாவிதன் ஆகியோர் பணி செய்ய மறுப்பதோடு அவர்கள் சாதி விலக்குக்கும் ஆளாவர். ஒவ்வொரு சடங்கின்போதும் ஊர்த் தலைவனுக்குப் புத்துச் சக்கரமும், நாலு வீட்டுக்காரருக்கு ஆளுக்கு நாலு சக்கரமும் செலுத்த வேண்டும். கோயில் பூசாரிகளுக்குக் கல்வி தந்து மேற்கண்ட அதிகாரங்களுள் சிலவற்றை அவர்களிடம் ஒப்படைக்க ஓர் இயக்கம் நடந்து வருகின்றது.

திருவாங்கூரைச் சேர்ந்த ஈழவர்களிடையே பின்வரும் மூன்று வகையதான தாய உரிமை முறைகள் வழக்கில் உள்ளன. 1) திருவாங்கூரின் தென் பகுதிக்குரிய மக்கள் தாயம் (தந்தையின் உரிமை மகன் வழிச் செல்லும் தாய உரிமை). 2) கொல்லத்திற்கு வடக்கே உள்ள எல்லா வட்டங்களிலும் வழக்கிலிருக்கும் மருமக்கள் தாயம் (பெண்வழி உரிமை செல்லுதல்). 3) நெய்யாத்தங்கரைக்கும் கொல்லம் வட்டத்திற்கும் இடைப்பட்ட பகுதியில் வழக்கில் இருக்கும் மேற்கண்ட இரு முறைகளும் கலந்ததான முறை. இந்தக் கலப்பு முறைப்படி ஒருவனுடைய குழந்தைகள் ஏதுமற்றவர்களாக விடப்படாமல் அவர்கள் வாழ்க்கை நடத்தப் போதுமான சொத்துத் தரப்படுகிறது. ஏனினும் இது சொத்தில் ஒரு பாதிக்கு மேல் இருத்தல் கூடாது என்பது விதி. மருமக்கள் தாய முறையைக் கடைபிடிக்கும் குடும்பங்களில் ஆண், பெண் சந்ததியினர் சம பங்கு பெறுகின்றனர். எல்லோருடைய ஒப்புதலையும் பெற்றுச் சொத்து பிரிக்கப்

படலாம் எனினும் நடைமுறையில் இது மிக அரிதாகவே மேற்கொள்ளப்படுகிறது. கொல்லத்திலும் மற்ற பகுதிகளிலும் ஒரு விதவையும் அவளுடைய குழந்தைகளும் அவளுடைய கணவன் வீட்டில் அவன் சாவுக்குப் பின் ஓராண்டு முழுமையாகத் தங்கியிருந்தபின் அவனுக்குரிய எல்லாச் சொத்துக்களையும் அனுபவிக்கும் உரிமை உடையவர்கள்.

தாய உரிமை முறை பற்றி மறைத்திரு ஏஸ். மட்டீர் பின் வருமாறு எழுதுகின்றார்:– "குருதி உறவுடையவர்கள் வழித் தாய உரிமையினை மேற்கொள்ளும் முறை இச் சாதியாரால் ஓரளவு பின்பற்றப்படுகிறது. தென் பகுதியினைச் சேர்ந்தவர்கள் தமிழ் நாட்டவர்களோடு நெருங்கிய தொடர்புடையவர்களாக இருப்பதால் தமிழர்களுக்குரிய மக்கள் வழித் தாய உரிமை முறையைப் பின்பற்றுகின்றனர். திருவனந்தபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த ஈழவர்களிடையே இவ்விரு முறைகளையும் இணைத்த ஒரு விசித்திரமான தாய உரிமை முறையினை மேற்கொள்ள முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதன்படி ஒருவன் தன் திருமணத்திற்குப் பிறகு தன் மனைவி உயிரோடிருக்கும் காலத்தில் ஈட்டிய சொத்தில் ஒரு பாதி அந்தத் திருமண உறவின் வழிப் பிறந்த அனைவருக்கும் உரியது. மறுபாதி ஆணின் குருதி வழி உறவினர்களுக்கு உரியது. 1872-இல் சதர் வழக்கு மன்றத்தில் முடிவு செய்யப்பட்ட ஒரு வழக்கில் ஓர் ஈழவனின் மகள் இறந்து போன தன்னுடைய தந்தையின் இயங்கு உடைமை, நிலை உடைமைகளில் பங்கு கேட்டும், அவன் உயிரோடு இருந்த காலத்தில் தன் பங்கு உடைமைகளை விற்றது செல்லாது எனத் தீர்ப்பு வழங்கும்படியும் கேட்டிருந்தாள். அந்த உடைமைகளுக்கு அவளைப் போன்ற மற்றொரு உரிமையாளரும் இருப்பதால் வழக்கு மன்றம் அவளுடைய பாதிப் பங்கு உடைமைகளை உரிமையாக்கியதோடு அதே அளவுக்கு அவளுடைய தந்தையின் விற்பனையைச் சொல்லாததாக்கியது. இது தொடர்பான விதிகளைத் திரு ஜி. கேரளவர்மன் திருமல்பாடு பின்வருமாறு தருகிறார்: 'ஒருவன் ஓர் ஈழத்தியை மணந்து அவளுக்குச் சேலை தருவதோடு குழந்தைகளையும் பெற்றுக் கொள்வானாயின், அப்பொழுதிருந்து அவைகள்

ஈட்டும் உடைமைகளில் பத்தில் ஒரு பங்கு கணவனின் முயற்சிக்காக அவனுடைய தனித்த ஊதியமாக ஒதுக்கப்படுகிறது. எஞ்சியுள்ளதில் பாதி அவள் மனைவிக்கும் அவள் வழிப் பிறந்த குழந்தைகளுக்கும் உரியதாகும். மறுபாதி அவள் கணவனையும் வாரிசுகளையும் சாரும். ஓர் ஈழவன் பரம்பரை உரிமையாகப் பெற்ற உடைமைகளும், தன் திருமணத்திற்கு முன் ஈட்டிய உடைமைகளும், அவன் உடைமைக்கு வாரிசு உரிமை உடையவர்களைச் சேரும். ஈழவத்தி ஒருத்தி தன் கணவனோடு தொடர்ந்து வாழும்போது அவளுக்குக் குழந்தைகள் இல்லையாயினும் அல்லது அவளுடைய குழந்தைகள் அவளுக்கு முன்பே உடைமைகளின் பங்கினைப் பெறாமல் இறந்து போய்விட்டாலும், இருவருமாக வாழ்ந்த காலத்தில் ஈட்டிய உடைமைகளை விட்டுவிட்டு அவள் கணவன் இறந்து போவானாகில் அவன் வாரிசுதாரர்களும் அவளும் அந்த உடைமைகள் பற்றித் தங்களுக்குள் ஒரு உடன்பாட்டுக்கு வரவேண்டும். அல்லது அது பற்றிச் சாதியைச் சேர்ந்தவர்கள் கூடி ஒரு முடிவு செய்து அவள் வாழ்க்கை நடத்தத் தேவையானதை அவளுக்குக் கொடுத்தது போக எஞ்சியதை அவள் கணவனுடைய வாரிசுதாரருக்கு உரிமையாக்குவர்.'

ஈழவப் பெண்களின் திருமணம் இருவகைச் சடங்குகளை உடையதாக நடைபெறுகின்றது. ஒன்று அவர்கள் பூப்படையும் முன் நடக்கும் தாலிகட்டு. மற்றது பூப்படைந்தபின் நடைபெறுவது. சில சமயங்களில் முதலாவது வகை சம்பந்தம் எனப்படும். ஒரு பெண்ணோடு ஒருவன் சம்பந்தம் வைத்துக் கொள்ளு முன் அவளுக்குத் தாலி கட்டப்பட்டிருக்க வேண்டும். தாலி கட்டுபவன், நாயர் சாதியரிடையே இருப்பதைப்போல அவளுடைய வருங்காலக் கணவனாகப் பெரும்பாலும் இருப்பதில்லை. எனினும் சில சமயங்களில் வருங்காலக் கணவனாக இருக்கப்போகிறவனும் தாலி கட்டுகிறான். அவ்வாறு கணவனாக வருகின்றவன் தாலி கட்டினாலும் விதிமுறைப்படி அவன் சேலை தரும்போதுதான் கணவனாகும் உரிமை பெறுகின்றான். ஒருவன் தன்னுடைய தாய்மாமன் மகளையும், அத்தைமகளையும் தன் மனைவியாக்கிக் கொள்ள உரிமை கொண்டாடலாம். சம்பந்தத்

திற்குப் பிறகு மணமகன் வீட்டில் நுழைவதற்கான 'கிரகப் பிரவேசம்' என்றதொரு தனிச் சடங்கும் பொதுவாக நடத்தப் படுகிறது. முதல் கணவன் இறந்தபிறகு கைம்பெண்கள் சம்பந்தம் வைத்துக்கொள்ளலாம். ஈழவர் சாதிக் கணவன் தன் மனைவியைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றுவிடுகின்றான். அவன் தன் மாமனார் வீட்டோடு தங்கி வாழ்வதைத் தன் மதிப்புக்குக் குறைவானதாகவும் கருதுகின்றான்.

தாலிகட்டுச் சடங்கு திருவாங்கூரின் ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு விதமாக நடத்தப்படுகின்றது. மத்திய திருவாங் கூருக்கு உரிய முறை வருமாறு:- ஊரிலுள்ள பெரியவர்கள் அனை வரும் மணப் பெண்ணின் வீட்டில் கூடி, அவள் வீட்டின் தென் கிழக்கு மூலையில் ஒரு பலாக் (*Artocarpus integrifolia*) கிளை யினைக் கம்பமாக நடுவர். அங்குள்ள கணியனை மூன்று முறை உரக்க அந்த வீட்டின் புனிதத் தன்மை பற்றிக் கேட்பர். அவன் அதனை உடன்பட்டுப் பதிலிறுப்பான். பெண்ணின் பாது காவலன் பொற்கொல்லனிடமிருந்து ஒரு வெள்ளி மோதி ரத்தைப் பெற்று வாத்தியிடம் தருவான். அவன் அதனை அந்தக் கம்பத்தில் சேர்த்துக் கட்டுவான். இதற்காகத் தச்சன், கணியன், பொற்கொல்லன் ஆகிய மூவரும் சிறிய தொகையினை அன்பளிக் பாகப் பெறுவர். சடங்கின் அடுத்த நிகழ்ச்சி மணத்திற்குத் தேவையான அரிசியினைத் தயாரிப்பதாகும். மணப் பெண் ஒரு குறிப்பிட்ட அளவு நெல்லினைப் பந்தலில் கொண்டு வந்து கொட்டி அதனை ஒரு பானையில் வேக வைப்பாள். பந்தல் பெரும்பாலும் வீட்டின் தெற்குப் பக்கத்தில் அமைக்கப்பட்டிருக் கும். மணமக்கள் இருவரின் பொருத்தம் குறித்தும் அந்த மணத்தை நடத்துவதற்குரிய நல்ல நாள் குறித்தும் கணியன் எழுதித் தந்துள்ள சாற்று எனப்படும் சீட்டினைப் பெண் ணின் பாதுகாவலனும், மச்சம்பிகள் எனப்படும் இணங்கன்கள் நால்வருமாகச் சாதித் தலைவனிடம் எடுத்துச் செல்வர். இந்த மச்சம்பிகள் ஊரைச் சேர்ந்த பெண்ணின் பாதுகாவலனோடு ஒத்த தகுதியுடைய ஈழவர்கள் ஆவர். மணத்திற்கான முன் ஏற்பாடுகள் அனைத்தும் இத்தோடு முடிவடைகின்றன. மண நாளுக்கு முந்திய நாள் மணமகள் குளித்தபின் மண்ணான்

(வண்ணான்) கொடுத்த துவைத்த சேலையினை உடுத்திக் கொண்டு உள்ளூர்த் தேவதையை வழிபட்டபின் மணமகன் வருகைக்காகக் காத்திருப்பாள். அன்று மாலை வாத்தியின் மனைவி அவள் தலைக்கு எண்ணெய் பூசி விடுவாள். அவள் குளித்து முடித்து வந்த பின் கனத்தி எனப்படும் சடங்குக்குத் தொடக்கமாக அவள் கரங்களில் நூலில் கோக்கப்பட்ட ஒரு வெள்ளி மோதிரம் கட்டப்படும். கனத்தி என்னும் சடங்கு, ஊரைச் சேர்ந்த பெண்கள் மணமகள் முன் பலவகைப் பாடல்களை ஒப்புவிப்பதாகும். இதனை அடுத்துக் காஞ்சிரமலை எனப்படும் அந்தப் பெண்ணைச் செதுக்கப்பட்ட மர உருவின் முன் அமர்த்தி வாத்தி வீட்டுப் பெண் பாடல்களைப் பாடும் சடங்கு நிகழும். அதற்கு மறுநாள் நல்ல முகூர்த்தத்தில் கதிர் மண்டபம் எனப்படும் கதிர்களால் அலங்கரிக்கப்பட்ட உயர்ந்த மேடையில் மணப் பெண்ணை ஏற்றி அமர்த்தும் சடங்கு நிகழும். மின்னு எனப்படும் பொற்கொல்லன் தயாரித்த மண அணியினைப் பூசாரியிடம் மணமகளும் மணமகனும் அணிந்து கொள்வதற்குரிய ஆடைகளோடு இணைத்து வைத்துத் தருவர். மணமகளின் மாமியார் இச்சமயம் வீட்டு வாசலில் காத்திருந்து மணமகன் வந்து சேர்ந்தவுடன் அவன் கழுத்தில் மலர் மாலைகள் அணிவிப்பாள். பின்னர் புத்தாடைகளை மணமகனுக்கு வாத்தியும், மணமகளுக்கு அவன் மனைவியும் தருவர். அதன்பின் வாத்தி சாதித் தொழிலின் அடையாளமாகத் தென்னங் குருத்து ஓலைகள் சிலவற்றை மணமகன் இடுப்பில் சொருகி விடுவான். முன்னாளில் இந்த ஓலைகளின் இடத்தில் வாள் இடம் பெற்று வந்தது. அதன்பின் மின்னு மணமகள் கழுத்தில் கட்டப்படும். கூடியுள்ளோர் அனைவரும் மணமக்கள் பெற்றோர் உட்பட மணமகனுக்குத் தங்கள் அன்பளிப்பினை வழங்குவர். அன்றைய சடங்குகள் அத்துடன் முடிய மணமகன் அன்று மணமகள் வீட்டில் தங்குவான். நான்காம் நாள் மணமகள் கரத்தில் அணிவிக்கப்பட்ட கயிற்றினை வாத்தி அவிழ்த்தபின் மணமகள் குளிப்பர். ஒரே சமயத்தில் பல பெண்கள் தாலி கட்டும் இச் சடங்கினை நடத்திக் கொள்ளலாம். ஆனால் ஒவ்வொருவருக்கும் தனியே மணமகன் இருத்தல் வேண்டும். மஞ்சம்பிகள் குடும்பத்தைச் சேர்ந்த இளைஞர்களே தாலி கட்டும் உரிமை உடையவர்கள்.

வடக்கு, நடுத் திருவாங்கூர் பகுதிகளில் நடைபெறும் சம்பந்தம் சடங்கு தென் திருவாங்கூர் சடங்கு முறையிலிருந்து சில புற நிகழ்ச்சிகளில் மாறுபாடுடையதாக உள்ளது. வடக்குத் திருவாங்கூரில் குறிப்பிட்ட நாளில் தாலிகட்டுபவனினும் வேறான மணமகன் தன் உறவினர்களோடும், நண்பர்களோடும் மணமகள் இல்லத்தை அடைவான். மணமகளின் பாதுகாவலன் அப்போது மணமகனின் பாதுகாவலனுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைத் தருவான். ஒரு சேலை ரவிக்கையுடன் பத்து சக்கரம் அல்லது பத்து ராசிகளை வைத்து மணமகன் மணமகளிடம் தர அவள் அதனை ஓர் அறையினுள் நின்றவளாக வாங்கிக் கொள்வாள். பின்னர் மணமகன் உடன்பிறந்தவள் மணமகளுக்கு அந்த ஆடைகளை உடுத்துவிடுவாள். அதன்மேல் வைக்கப்பட்டு உள்ள பணம் அம்மாயி பணம் என அழைக்கப்படுவது. ஆகையால் மணமகள் தாயாரிடம் அது சேர்ப்பிக்கப்படும். அதன்பின் மணமகள் மணமகனோடு அவன் இல்லத்திற்குப் புறப்படும் நேரம் நெருங்கும். அப்போது அவளுக்கு அவளுடைய பாதுகாவலன் ஒரு பாக்கு வெட்டி, சுண்ணாம்புப் பெட்டி, அரிசி நிறைந்த பாத்திரம், ஒரு பாய் ஆகியவற்றை வழங்குவான். அவள் தலையில் ஒரு சிவப்புத் துணி போர்த்தப்படும். அவளுடைய உறவினர்கள் சிலர் அவளோடு கொஞ்ச தூரம் சென்று வழியனுப்பி வைத்து வருவர். தென் திருவாங்கூரில் தாலி கட்டுக்கு மணமகனோடு செல்பவர்களுள் ஒருவனான அவன் தோழன் கூடியுள்ளவர்களிடம் பெண் வீட்டார் அந்த உறவுக்குச் சம்மதிக்கின்றார்களா எனக் கேட்பான். அவர்கள் அதற்கு இசைவான பதில் தந்தால் ஒரு குறிப்பிட்ட தொகையினை அந்த ஊர்க் கோயிலுக்கு அளிப்பான். இன்னொரு தொகை மணமகளை வளர்த்ததற்காக அவனால் தரப்படும். கூடியுள்ளவர்கள் முன்னிலையில் மணமகன் சேலைரவிக்கையை மணமகளிடம் தருவான். அவனுடைய மனைவியாகிவிட்ட அவள் மற்ற இடங்களில் நடப்பதைப் போல உடனே மணமகன் இல்லத்திற்கு அவனோடு புறப்படுவாள். குடிவைப்பு என அழைக்கப்படும் இது பிராமணர்கள் சடங்கான கிரகப்பிரவேசச் சடங்கோடு ஒப்புமையுடையது.

மலபார் மாவட்டத்தைச் சேர்ந்த ஈழவர்களுடைய மணச்

சடங்குகள் பற்றிய விவரம் மலபார் மாவட்டக் கையேட்டில் பின்வருமாறு தரப்பட்டுள்ளது:- "ஒரு சிறுமி பூப்படையும் முன்பே மணம் செய்விக்கப்பட்டு அவள் அப்போதிருந்தே தன் கணவனோடு வாழ்ந்து வந்தாலும், அவள் பூப்பெய்திய பின்பே அந்த மணம் நிறைவெய்தியதாகக் கருதப்படுகிறது. பூப்பெய்தும் முன்பே மணம் நிகழுமாயின் அச் சடங்கு தாலி கட்டுக் கல்யாணத்தோடு இணைத்து நடத்தப்படும். மணமகள் தேவ புறம் எனப்படும் குலதெய்வத்தின் கோயிலிலிருந்து தலைமீது ஒரு பட்டுத் துணியினை முகத்திரையாக இட்டு வலக் கையில் ஒரு வெற்றிலையை முகத்துக்கு எதிரே தாங்கிப் பிடித்தவளாக அழைத்து வரப்படுவாள். ஒரு பந்தலில் அரிசி பரப்பப்பட்ட பலகைமீது அவள் நிற்பாள். அவள் வலப் பக்கம் மணமகனை சேர்ந்த இணங்கன்கள் நால்வரும், இடப் பக்கம் அவள் குடும்பத் தைச் சேர்ந்த இணங்கன்கள் நால்வரும் நிற்பர். மணமகனைச் சேர்ந்த இணங்கன்கள் நால்வருள் மூத்தவன் மணமகளைச் சேர்ந்த இணங்கன்களில் ஒருவனிடம் தாலி, முண்டு, பாவா (ரவிக்கை),கொஞ்சம் அரிசி, வெற்றிலை, மீயமேல்காணம் எனப் படும் ஒரு ரூபாய் மதிப்புடைய தங்கக் காசு ஆகியன அடங்கிய கட்டினைத் தருவான். இவை அனைத்தும் மணமகனால் அனுப்பப் பெற்றவையாகும். அதனைப் பெற்றுக் கொள்பவன் அடுத்துத் தாலியை மணமகன் உடன்பிறந்தவளிடம் தர அவள் அதனை மணமகள் கழுத்தில் கட்டுவாள். அதன்பின் இணங் கன்கள் அனைவரும் மணமகள் மீது அரிசியும் மலரும் தூவுவர். இச்சாதியில் தந்தைவழி அத்தையின் மகளை உரிமை கொண் டாடும் படிக்கல் தடை எனப்படும் வாயிலை மறித்தல் அனுமதிக் கப்படுகிறது. மணமகன் மணமகளுக்கு அது போன்ற உறவுடைய வனாக இல்லாதிருப்பானாகில் இது நடக்கும். பதினொரு அண்டை வீட்டார் முறையாக இவ்வாறு வந்து தடுப்பர். அவர்கள் இரண்டு பணமும், வெற்றிலையும் கூலியாகப் பெற்று இதற்காக வருவர். அதன்பின் மணமகள் மணமகன் இல்லத் திற்கு அழைத்துச் செல்லப்படுவாள். அவள் வயதில் மிகக் குறைந்தவளாக இருப்பின் அவளோடு உறவில் ஒருத்தி தோழி யாக உடன் செல்வாள். நான்காம் நாள் மணமகள் இல்லத்தில் நாலாம் கல்யாணம் எனப்படும் விருந்து நடைபெறுவதோடு

மணச் சடங்குகள் முடிவுக்கு வரும். பூப்படைந்த பின் நடை பெறும் திருமணம் புதமறி எனப்படும். அச்சடங்கும் இது போன்றதே எனினும் அதில் படிக்கல்தடை எனப்படும் நிகழ்ச்சி இடம் பெறாது."

ஈழவப் பெண் ஒருத்தி பூப்படையும்போது அது நான்கு நாள்கள் கொண்டாடுவதற்குரிய சமயச் சடங்காகும். முதல் நாள் வாத்தி வீட்டுக்காரி அந்தப் பெண்ணுக்குத் தலையில் எண்ணெய் தடவி விட்டபின் அவள் குளித்து வண்ணாத்தி தரும் ஆடைகளை உடுப்பாள். அதன்பின் ஒரு மரப் பலகையில் இருத்தப் பெறும் அவள் நான்காம் நாள் குளிக்கும் வரை வெளியே செல்லுதல் கூடாது. அவளுக்குப் பெண் உறவினர்கள் இனிப்புப் பலகாரங்கள் கொண்டு தருவர். ஏழாம் நாள் அவள் ஊர்க்குளத்திற்கு மிகுந்த பகட்டோடு அழைத்துச் செல்லப்படுவாள். திரும்பும்போது அவள் தரையில் விரித்துப் போடப்படும் மாத்தின் மீது நடந்து வருவாள். அல்லது வயதான ஒருத்தியால் தூக்கி வரப்படுவாள். பின்னர் அவளே கொஞ்சம் நெல்லினைக் குற்றி அந்த அரிசியினைச் சமைக்க வேண்டும். இந்தச் சடங்கு சாதித்தலைவன் இல்லத்தில் நடைபெறுமானால் ஊரார் அவனுக்குச் சர்க்கரைப் பொங்கல் நிறைந்த ஒரு பாத்திரத்தை அன்பளிப்பாகத் தரவேண்டும்.

பெண்கள் கருவுற்ற ஏழாம் மாதத்தில் பிராமணர்கள் மேற் கொள்ளும் பும்சவன என்னும் சடங்கினை ஒத்த புளிகுடி என அழைக்கப்படும் இரண்டு நாள் சடங்கு வட திருவாங்கூர்ப் பகுதியில் நடத்தப்படுகிறது. தென் பகுதியில் இது வயத்துப் பொங்கல் என அழைக்கப்படும். முதலாம் நாள், மாலை மங்கும் அந்தி நேரத்தில் கருவுற்ற பெண் வாத்திச்சியின் பின்னால் வீட்டின் தெற்குப் பக்கத்திலிருக்கும் ஒரு புளியமரத் தின் அடியே சென்று ஒரு முனையில் வெள்ளி மோதிரம் பிணைக்கப்பட்ட ஏழு கெச நீளமுள்ள நூலால் அந்தப் புளிமரத் தின் அடிமரத்தைச் சுற்றிக் கட்டுவாள். ஏதேனும் ஒரு காரணத் தால் இதனைச் செய்யும்போது இந்த நூல் அறுந்து விடு மானால் கருவுற்றுள்ள அவளோ அவளுக்குப் பிறக்கும் குழந்தையோ விரைவில் இறந்து போகலாம் என நம்பப்

படுகிறது. மறுநாள் அந்த நூல் பிரித்து எடுக்கப்பட்டபின் அவளுடைய கணவன் அவளுக்கு ஒரு பிடி புளியம் கொழுந் தினைத் தருவான். வீட்டுக்குத் திரும்பியபின் கணவனின் கரங்கள் வழியாக மனைவியின் கரங்களில் புளியம்சாறு பிழிந்து ஊற்றப்பட, அவள் அதனைக் குடிப்பாள். பூசாரிச்சி அதன்பின் வெற்றிலையில் இருக்கும் கொஞ்சம் எண்ணெயினை அப் பெண்ணின் தொப்பூழ் மீது ஊற்றுவாள். அது வழிந்து செல் வதை வைத்துப் பிறக்கப்போகும் குழந்தை ஆணா பெண்ணா என முடிவு செய்து கூறுவாள். ஒரு காட்டு மா (*Spondias mangifera*) வின் கிளையின் மீது சாய்ந்தபடி அவள் புளியஞ் சாற்றினைக் குடிக்க வேண்டும். அந்தக் காட்டு மாவின் கிளை பின்னர் வீட்டின் புறக்கடையில் நடப்படும். அது நன்றாகத் தழையவில்லையானால் அவளுடைய கருவில் இருக்கும் குழந்தைக்கு அது தீமையாகக் கருதப்படும். இச் சமயத்தில் அவளுடைய கணவனுக்கு மோதிரம் முதலியன அன்பளிப்பாகத் தரப்படும். பிள்ளையைப் பெற்ற மூன்று, ஐந்து, ஒன்பதாம் நாள்களில் பிள்ளையைப் பெற்றவள் குளிப்பாள். அச் சமயங்களில் வண்ணாத்தி தரும் மாத்து எனப்படும் சேலையையே உடுப் பாள். இது தீட்டு ஏற்படாமல் காப்பதற்காகும். குழந்தைக்குப் பெயர் சூட்டும் விழா இருபத்தெட்டாம் நாள் நடைபெறும். குழந்தைக்கு இரும்பாலான சிலம்புகள் அணிவிப்பதோடு சில இரும்புத்துண்டுகளோடு கூடிய நாடாவும் அதன் இடுப்பில் கட்டப்படும். பின்னர் அந்தக் குழந்தையை அரிசி நிறைந்த பாத்திரத்தின் மீது நிற்கும்படியாகப் பிடித்துக்கொண்டு, அதன் இடக் காதை மூடியபின், வலக் காதில் அதன் பாதுகாவலன் ஒரு பெயரைக் கூறுவான். முதன்முதல் சோறு ஊட்டும் சடங்கு ஆறாம் மாதம் நடைபெறும். அப்போது குழந்தைக்குப் போடப் பட்ட இரும்பு அணிகள் நீக்கப்பட்டு வெள்ளி, பொன் அணிகள் அணிவிக்கப்படும். குழந்தைக்கு ஏழு வயதாகும் முன் ஒரு நல்ல நாளில் காது குத்தும் சடங்கு நடத்தப்படும்.

முன்னாளில் ஒரு குடும்பத்தின் மூத்த உறுப்பினர் இறந்தால் மட்டுமே எரிக்கப்படுவார். இப்பொழுது அத்தகைய விதிமுறைகள் ஏதும் பின்பற்றப்படுவது இல்லை. சாதியைச் சேர்ந்த ஒருவன்

இறப்பானாகில் வாரிசுக்கு உரியவர்களுள் மூத்தவன், குளித்த பின் பிணத்தின் வாயில் மூன்று பிடி அரிசியினை இடுவான். அடுத்து மற்றப் பிள்ளைகளும், உறவினர்களும், பேரன்களும் அரிசியினை இடுவர். ஒவ்வொரு உறவினரும் காடாத் துணியொன்றினைப் பிணத்தின் மீது போர்த்துவர். பின்னர் பிணம் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டு அங்கு வாரிசுக் குரியவன் பூசாரியிடமிருந்து நெருப்பினை வாங்கி ஈம விறகிற்குத் தீ மூட்டுவான். தச்சன் தரும் மரப் பலகையில் பிணத் தின் பாதங்களில் சந்தனத்தைத் தடவி அதில் பாதங்களின் சுவட்டினைப் பதிந்து கொள்வர். அதனை வாரிசுதாரர் இறந் தவருடைய பெயரையும் இறந்த நாளையும் குறித்துத் தன் வீட்டில் பத்திரமாகப் பாதுகாத்து வருவார். இது சிரார்த்தச் சடங்கின்போது அவரைப் பற்றிய நினைவுகளைக் கூர உதவு வதாகும். பிணம் பாதி எரிந்து முடிந்த பின் அதன் தலை மாட்டில் ஓர் இளநீரைப் படைத்துச் சில வாழ்த்துப் பாடல்கள் கூறப்படும். பின்னர்த் தண்ணீர் நிறைந்த பானையினைத் துக்கம் கொண்டாடுபவன் தோளில் சுமந்தபடி மும்முறை பிணத்தைச் சுற்றி வருவான். அப்பொழுது பூசாரி பானையினை ஓர் இரும் பால் மும்முறை பொத்தலிட்டு விடுவான். இறுதியில் பானை ஈம விறகின் மீது உடைக்கப்படும். துக்கம் கொண்டாடுபவன் பின்னால் திரும்பிப் பிணத்தைப் பார்க்காமல் வீடு திரும்புவான். இரண்டாம் நாள் இறந்தவருக்குப் பிண்டம் தரப்படும். அன்று உறவினர்கள் இறப்பு நிகழ்ந்த குடும்பத்தினருக்குக் கஞ்சி காய்ச்சித் தருவர். சஞ்சயன எனப்படும் எலும்புகள் திரட்டுதல் ஐந்தாம் நாள் நிகழும். மத்திய, வட திருவாங்கூரில் தீட்டுப் பதினைந்து நாள்கள் மேற்கொள்ளப்படுகிறது. தெற்கில் இது பத்து நாள் அளவினதே. சாதியைச் சேர்ந்த அனைவரும் கடைப் பிடிக்க வேண்டியதான கட்டாயம் இல்லாத சில சடங்குகள் நாற்பத்தொன்றாம் நாளும், முதலாம் ஆண்டு நினைவின் போதும் மேற்கொள்ளப்படுகிறது. தொற்று நோயால் இறப் பவர்களும், பிள்ளைப் பேற்றின் போது இறக்கும் பெண்களும், ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளும் புதைக்கவே படுகின்றனர். குழந்தைகள் இறந்தால் தீட்டு ஒன்பது நாள்கள் மட்டுமே மேற் கொள்ளப்படுகிறது. தொற்று நோயால் இறப்பவர்களுக்குச்

சூன்யகாரனைக் கொண்டு சில தனிச் சடங்குகள் நிகழ்த்தப் படுகின்றன. தீட்டுக்குரியவர்கள் கோயில் முதலிய புனிதமான இடங்களில் நுழைதல் கூடாது என்பதோடு படிக்கவோ எழுதவோ செய்தலுக்கும் தடை விதிக்கப்படுகிறது. மது, மோர், பால், நெய், வெல்லம் ஆகியவற்றையும் அவர்கள் உண்ணுதல் கூடாது.

**சாடா - Jāda**

சாடா அல்லது சான்ரா எனப்படும் இது பெரிய மனிதர்கள் எனப் பொருள் படுவது. தேவாங்கர், குர்னிகள் சாதிக்குரிய மற்றுமொரு பெயராக இது பதியப்பட்டுள்ளது.

**சக்காலி - Jaggāli**

கஞ்சம் மாவட்டக் கையேட்டில் சக்காலியர் கஞ்சம் மாவட்டத்தைச் சேர்ந்த தோலில் பணிபுரியும் உரியப் பணியாளர் என விளக்கப்பட்டுள்ளனர். 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் இவர்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளதாவது:- "இச் சாதியாரின் பரம்பரைத் தொழில் தோலில் பணி செய்வதாகவே தெரிகின்றது. தற்போது இவர்கள் பயிர்த்தொழிலும், வேறு சிறு தொழில்களிலும் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் ஒரியா, தெலுங்கு ஆகிய இரண்டு மொழிகளையும் பேசுகின்றனர். ஒரு சிறு தொகையைப் பெற்றுக் கொண்டு மற்றச் சாதியாரால் சாதி விலக்குச் செய்யப்படுபவர்களை இவர்கள் தங்கள் சாதியில் சேர்த்துக் கொள்கின்றனர். குழந்தை மணம், வயது வந்த பின் மணம் ஆகிய இரு வழக்குகளும் இவர்களிடையே உள்ளன. கைம்பெண்களும், மணமுறிவு பெற்ற பெண்களும் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். சாதானிகர்களே இவர்களுக்குப் புரோகிதம் செய்கின்றனர். மாடு, பன்றி ஆகியவற்றின் ஊனினை உண்ணும் இவர்கள் மது வகைகளையும் குடிக்கின்றனர். இறந்தவர்களைப் புதைப்பர். ஆங்காங்கே குதிரைக்காரர்களாகவும் விறகுவெட்டிகளாகவும் கூலிகளாகவும் இவர்கள் பணிபுரியக் காணலாம். பாத்ரொ, பேகர என்பன இவர்களுக்குரிய பட்டப் பெயர்கள்." சக்காலியர் தெலுங்கு சாதியைச் சேர்ந்த கஞ்சம் மாவட்டத்தில் குடியேறியபின்

ஒரிய மொழி பேசக் கற்றுக் கொண்ட மாதிகர் ஆதல் வேண்டும் என்றே நான் கருதுகின்றேன். இப்பெயர் காவலன் எனப் பொருள்படும் ஒரியச் சொல்லான ஜகிப என்பதிலிருந்து வந்ததா தல் வேண்டும் எனக் கருதப்படுவதற்குக் காரணம் இவர்களுள் சிலர் பயிரினைக் காவல்காக்கும் பணியினை மேற்கொண்டிருத் தலாலேயாம்.

**செய்கொண்ட - Jaikonda (lizard)**

பல்லி எனப் பொருள்படும் இது தோம்பரின் ஒரு குலம்.

**சமணர் - Jain**

"தென்னிந்தியாவில் சமணர்களும், சமண சமயத் தொடர் பான முக்கிய இடங்களும் உள்ளன என்பதனை படித்தவர்களுள் ஒரு சிலரேனும் அறிந்திருப்பார்களா என்பது கூட ஐயத்திற்கு உரியதே. சென்னை மாநிலத்தில் எங்குச் சென்றாலும் சமணர் களுடைய செல்வாக்கின் தடயங்களைக் காணலாம். பெரும்பா லான சாலைகளில் பலவிடங்களில் நின்ற கோலத்திலோ சம்மணமிட்டு அமர்ந்த கோலத்திலோ தீர்த்தங்கரின் கற்சிலை யைக் காணலாம். இன்று இந்தச் சிலைகளுக்கு மாநிலமெங்கும் ஒரே மாதிரியாக விளக்கம் தரப்படுகின்றது. சிலைகள் இரண் டாக இருக்குமானால் அவற்றுள் ஒன்று கடன் வாங்கியவனும் மற்றொன்று கடன் கொடுத்தவனுமாகக் கூறப்படுவர். இரு வரும் சாலையில் சந்தித்துத் தங்கள் கணக்கைத் தீர்த்துக் கொள் வதற்காகக் காத்திருப்பதாகவும் கூறுவர். ஒரே ஒரு சிலை மட்டும் இருக்குமானால் அது ஒரு கடன்காரன் தான் வாங்கிய கடனைத் தீர்க்காத காரணத்தால் அதற்குத் தண்டனை அனுபவிப்பதற் காக அப்படி நிற்பதாகக் கூறுவர்" எனத் திரு டி.ஏ.கோபிநாத ராவ் எழுதுகின்றார்.*

---

* மலபார் காலாண்டு ரெவ்யூ, IV 3, 1905. (Malabar Quart. Review, IV, 3 1905.)

மேலும் பார்க்க: டி. சி. ரைஸ். கருநாடகத்தில் சமணக் குடியிருப்புகள், முந்து நூல், III,4, 1904 (See also T. C Rice. Jain Settlements in Karnataka. Ibid III,4, 1904.)

1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "25716 சமணர்களுள் 22,273 பேர் தங்கள் சாதியையும் உட்பிரிவையும் சமணர் என்றே தந்துள்ளனர். எஞ்சியவர்களால் 22 உட்பிரிவுகள் பதியப்பட்டுள்ளன. அவற்றுள் திகம்பரர், சுவேதம்பரர் ஆகியனவற்றைச் சமயப் பிரிவுகளெனலாமே அன்றிச் சாதிப் பிரிவுகள் எனக் கூற முடியாது. எனினும் மார்வடி, ஓசுவல், வேளாளன் முதலியன சாதிப் பெயர்கள் என்பதில் ஐயமில்லை. பதிவுகளில், சில சமணர்கள் சமணப் பிராமணர், சத்திரியர், கௌடர், வேளாளர் எனப் பெரு வழக்கினதான சாதிகளைத் தங்களுடைய முக்கிய சாதியாகப் பதிந்துள்ளனர். எனினும் சமணரான பண்டர் அனைவரும் தங்களைச் சமணர் என்று மட்டுமே பதிந்துள்ளனர்" எனக் கூறப்பட்டுள்ளது. 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பின்படி 27,431 சமணர்கள் உள்ளதாகப் பதியப்பட்டுள்ளது. இவர்கள் மாநிலத்தின் எல்லா மாவட்டங்களிலும் காணப்பட்டாலும் பின்வரும் மாவட்டங்களிலேயே பெரும் எண்ணிக்கையினராக உள்ளனர்.

| | |
|---|---|
| தென் கன்னடம் | 9,582 |
| வட ஆர்க்காடு | 8,128 |
| தென் ஆர்க்காடு | 5,896 |

1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் 13,578 சமணர்கள் உள்ளனரெனப் பதியப்பட்டுள்ளது. அம் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "திகம்பரர், சுவேதம்பரர் எனச் சமண சமயத்தவர் இரு பெரும் பிரிவினராக உள்ளனர். திகம்பர என்ற சொல்லின் பொருள் வெளியை ஆடையாக உடையவர் என்பதாகும். சுவேதம்பரர் என்பதன் பொருள் வெள்ளாடை புனைந்தவர் என்பதாகும். சுவேதம்பரர் பெரும்பாலும் வட இந்தியாவிலேயே காணப்படுகின்றனர். மைசூர் மாநிலத்தில் இவர்கள் மிகச் சிலராகவே உள்ளனர். திகம்பரர்கள், சமூகத்துடன் எத்தகைய தொடர்பும் இன்றி எல்லா உலகப் பற்றுக்களையும் துறந்து தனித்து வாழ்பவர்கள். இவர்கள் பித்தளை, செம்புப் பாத்திரங்களின் வணிகத்தில் பொதுவாக ஈடுபட்டவர்களாக மாநிலம் முழுதும் காணப்பட்டாலும் சிமோகா, மைசூர், ஹாசன் மாவட்டங்களிலேயே பெரும்

எண்ணிக்கையினராக உள்ளனர். ஹாசன் மாவட்டத்தில் உள்ள சிரவணபௌகுளா மைசூர் மாநிலம் சார்ந்த சமணர்களுடைய முக்கியமான இடமாகும். தீர்த்தங்கரர்கள் சமண சமயத்தைச் சேர்ந்த குருக்கள். இவர்கள் பிதாம்பரர் எனவும் அழைக்கப் படுவர். இங்குள்ள சமணத் துறவிகள் திகம்பரர் பிரிவினைச் சேர்ந்தவர்களாக மஞ்சள் ஆடையால் தங்களைப் போர்த்துக் கொள்வதால் பிதாம்பரர் என அழைக்கப்படுகின்றனர்." எனப் பதியப்பட்டுள்ளது. மைசூரைச் சேர்ந்த தாச பணசிகர் தங்களைச் சமண சத்திரிய ராமானுசர்கள் எனக் கூறிக் கொள்கின்றனர்.

திகம்பரர், சுவேதம்பரர் என்ற சொற்களைப் பற்றிப் புயு ஹெலர் குறித்திருப்பதாவது:-* "வெளியினையே ஆடையாகக் கொண்டவர் எனப் பொருள்படும் திகம்பரர், சமயப் புனிதத் தன்மையைக் காக்கப் பிறந்த மேனியராக இருப்பது இன்றி யமையாதது என்ற கருத்துடையவர்களாகப் பிறந்த மேனிய ராகத் திரிந்தவர்கள். எனினும் நாகரிக வளர்ச்சியின் காரண மாக இவர்கள் இக்கோட்பாட்டினை மேற்கொள்ளும் பழக் கத்தை மாற்றிக் கொண்டனர். வெள்ளை ஆடை தரித்தவர் எனப் பொருள்படும் சுவேதம்பரர் மேற்கண்ட கோட்பாட்டினை ஏற்றுக் கொள்வதில்லை. அவர்கள் ஆடையினை உடுக்கும் பழக்கம் உடைய புனிதத் துறவிகளும் நிர்வாணம் பெற முடியும் என நம்புகின்றனர். சமண சமயத்தைத் தோற்று வித்தவரும் அவருடைய முதல் சீடரும் அவருடைய மாணவர் களும் ஆடையினைத் துறந்தவர்களாக இருந்தனர் என்பதனை இவர்களும் ஒப்புக் கொள்கின்றனர்."

மைசூரிலுள்ள சிரவணபௌகுளாவே இன்று தென் இந்தியாவில் சமணர்களின் முக்கிய குடியிருப்பாக உள்ளது. அங்கு இவர்கள் குடும்பப் பயன்பாட்டுக்கான உலோகப் பாத்திரங்களைச் செய்கின்றனர். இந்தச் சிறுநகர் இரண்டு

---

* இந்தியப் பிரிவினரான சமணர் - ஜெ. பர்கசின் மொழிபெயர்ப்பு, 1903, (On the Indian Sect of the Jainas, Translation by J. Burgess 1903.)

குன்றுகளின் அடிவாரத்தில் அமைந்துள்ளது. அவற்றுள் இந்திர பெட்ட என்ற பெயருடைய ஒரு குன்றின் முடியில் கோம தேசுவர், கௌம்மதர், கோமத ராய என்ற பெயர்களால் அழைக்கப்படும் கோதமதேசுவரின் மிகப் பெரிய உருவச் சிலை* உள்ளது. இந்தச் சிலையினைப் பற்றித் திரு எல். ரைஸ் பின்வருமாறு 1889 ஆண்டினதான மைசூர் தொல்பொருள்துறை கண்டாய்வு அறிக்கையில் சிரவணபௌகுளாக் கல்வெட்டுக் களைப் பற்றிய குறிப்பில் கூறுகின்றார். "பிறந்த மேனியாக வடக்குப் பார்த்து நின்றபடி அமைக்கப்பட்டுள்ளது இச்சிலை. இந்த உருவத்தினைத் தாங்கத் தொடைக்கு மேல் வேறெந்த ஆதாரமும் இல்லை. தொடை வரை அது புற்றுக்களால் சூழப் பட்டிருப்பது போன்ற அமைப்புடையதாக உள்ளது. அந்தப் புற்றுக்களிலிருந்து பாம்புகள் வெளிபடுவது போன்ற அமைப்புக் காணப்படுவதோடு அதிலிருந்து எழும் கொடியொன்று அந்த உருவின் இரு கால்களையும், இரு கைகளையும் சுற்றிப் படர்ந்து சென்று புயங்களில் கொத்தான பழங்களையும் காய்களையும் உடையதாக முடிகின்றது. சிலையின் பாதங்களைத் தாங்கி நிற்கும் பீடம் மலர்ந்த தாமரையின் அமைப்புடையது. தலைமுடி சுருண்ட வளையங்களாகத் தலையோடு படிந்து பொதுவான சமண உருவங்களைப் போன்றதாகவே காணப்படுகிறது. காதுகளின் மடல்கள் நீண்ட சதுரத் துளைகளையுடையனவாக நீண்டு கீழே தொங்கும் அமைப்புடையன. இந்தச் சிலை 57 அடி உயரம் உடையதெனக் கூறலாம். சிலர் இதனினும் அதிக உயரமுடையது என மதிப்பிடுகின்றனர். சர் ஆர்தர் வெல் லெஸ்லெ (பின்னர் வெல்லிங்டன் பிரபு) இதன் உயரம் 60 அடி 3 அங்குலம் எனவும், புச்சனன் 70 அடி 3 அங்குலம் எனவும் மதிப்பிட்டுள்ளனர்."

கீழைநாடுகள் மற்றும் இந்தியக் கட்டிடக் கலை வரலாறு பற்றிய தன்னுடைய நூலில்† பெர்கூசன் இந்த உருவம் பற்றிக்

---

* தீர்த்தங்கர்கள் முன்பு மிகப்பெரிய உருவும் நீண்ட வாழ்நாளும் உடையவர் களாக இருந்தனரெனவும், பின்வந்த தீர்த்தங்கர்கள் பொதுவில் அனை வருக்கும் உரிய உருவும் வாழ்நாளும் பெற்றிருந்தனர் எனவும் நம்புகின்றனர்'

† History of Indian and Eastern Architecture - Fergusson.

கூறியிருப்பது வருமாறு:- "எகிப்துக்கு வெளியே இதனையொத்த பேரளவும் பெருமிதத் தோற்றமும் கொண்ட சிலையினைப் பார்க்க முடியாது. எகிப்தில் கூட இதனை விட உயரமான சிலை இருப்பதாகத் தெரியவில்லை. எனினும் கலை நுணுக்கச் சிறப்பில் இதனை விஞ்சக் கூடிய சிலைகள் உள்ளன என்பதனை மறுப்பதற்கில்லை."

தென் கன்னடத்தில் உள்ள கர்கல், வேணூர் ஆகிய சிறு நகரங்களுக்கு வெளியே உள்ள குன்றுகளின் மீது கௌதமரின் மேலும் இரு பெரிய உருவச் சிலைகள் அமைந்துள்ளன. இவற்றுள் முன்னதைப் பற்றி முனைவர் ஈ. கியுல்ட்ச் எழுதியுள்ளது வருமாறு:-* "ஒரே கல்லில் சிலையின் உருவமும் அது சாய்ந்து நின்றுள்ள கற்பலகையுமாக இச்சிலை அமைந்துள்ளது. அது சாய்ந்துள்ள பலகை இடுப்பு வரையான உயரம் உடையதாயுள்ளது. வட்ட வடிவமான நிற்கும் பீடம் ஆயிரம் இதழ்களை உடைய தாமரை மலரில் பதிக்கப்பட்டதாக உள்ளது இந்த உருவின் கால்களையும், கைகளையும் திராட்சைக் கொடிகள் பின்னிச் சுற்றியபடியான அமைப்பும் கால்களின் இரு மருங்கும் இது சாய்ந்துள்ள பலகையில் பல பாம்புகளின் உருவங்களும் செதுக்கப்பட்டுள்ளன. அதே பலகைகளின் பக்கங்களில் காணப்படும் இரண்டு கல்வெட்டுக்கள், பாகுபலின் எனப்படும் கௌதம சமணபதியின் அச்சிலை கி.பி. 1431-32-இல் பைரவனின் மகனான வீரபாண்டியன் என்ற பெயருடைய தலைவனால் அமைக்கப்பட்டது எனத் தெரிவிக்கின்றன. அதே தலைவனுடைய மற்றுமொரு கல்வெட்டு வெளிவாயிலின் முகப்பில் உள்ள அழகிய தூணில் வெட்டப்பட்டுள்ளது. இந்தத் தூணில், மைசூரில் இன்று ஹம்ச என்ற பெயரில் விளங்கிவரும் ஊரிலிருந்து ஆட்சிபுரிந்த, வீர பாண்டியனைப் போலவே சமணதத்தர் குடும்பத்தைச் சேர்ந்த, பத்தி பொம்புச்ச என்பவனால் கி.பி. 1586-87 இல் அமைக்கப்பட்ட சதுர்முக பாஸ்தி எனப்படும் பிரமதேவரின் உருவம் உட்கார்ந்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. நான்கு முகங்கள் எனப் பொருள்படும்

* கல்வெட்டுத்துறையின் ஆண்டறிக்கை, சென்னை 1900-1901 - Dr. E. Hultzsch.



கர்கலில் உள்ள கௌதமர் சிலை



மூதபித்தூரில் உள்ள பஸ்தி (சமணர் கோயில்)

சதுர்முக என்பது இக்கோயில் நான்கு கதவுகளை உடைய தென்பதனைக் குறிக்கும். ஒவ்வொரு கதவும் அரி, மல்லி, முனிசுவரர் ஆகிய மூன்று தீர்த்தங்கர்களின் கருங்கல் சிலைகளை நோக்கித் திறக்கக் கூடியதாக அமைந்துள்ளது. இந்த உருவங்கள் ஒவ்வொன்றும் தங்கள் தலைக்கு மேல் பொன்னிற ஒளி வட்டங்களைப் பெற்றுள்ளன. திரு எம். ஜெ. வால்ஹவுஸ் இந்தியத் தொல்லியல் தொகுதி. 5, 1876* இதழில் தந்துள்ள வழக்கு வரலாற்றின்படி கர்கலிலுள்ள சிலையினைச் செய்து முடித்தபின் இரும்புச் சக்கரங்கள் பூட்டப்பட்ட வரிசையான இருபது இரும்பு வண்டிகளில் பத்தாயிரம் தேங்காய்கள் உடைக்கப்பட்டபின் பெருமளவிலான பஞ்சினால் பொதியப் பட்டு இச்சிலை ஏற்றப்பட்டு, அதன்பின் பெருங்கூட்டமான பக்தர்களால் அவ்வண்டிகளை அச்சிலை இன்று நிற்கும் குன்றின் மேலுள்ள மேடைக்குச் சாய்வான தளத்தின் வழியே இழுத்துச் செல்லப்பட்டது என்பது தெரிய வருகின்றது.

பௌகுளாவில் உள்ள மிகப் பெரிய சிலையினை அமைத்த கல்குடா என்ற சிற்பியினைப் பற்றிய வழக்கு வரலாறு இந்தியத் தொல்லியல் இதழ் தொகுதி 25,220, 1896- இல் திரு எ.சி. பர்னெல்† அவர்களால் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அந்த வரலாற்றின் சுருக்கம் வருமாறு:- சிற்பி கல்குடா பேளூரில் உள்ள கௌதமரின் உருவத்தினை விட, நான்கு முழம் உயரம் அதிகம் உள்ள ஒரு கௌதமரின் சிலையினைச் செய்தான். கர்கல் அரச னான பைரனசுதா தன் நாட்டில் பணி செய்ய அவனை வர-வழைத்தான். அவனும் கௌதமசாமியைச் செய்து முடித்தான். ஐயாயிரம் மக்கள் கூடித் தூக்கி நிறுத்த முயன்ற போதும் அவர்களால் அதனைத் தூக்கி நிறுத்த முடியவில்லை. கல்குடா தனது இடது கையினை அச்சிலையின் அடியே விட்டு அதனைத் தூக்கிப் பீடத்தில் நிறுத்தினான். அதன்பின் அவன் அரசனைப் பார்த்து, "எனக்கான ஊதியத்தையும், எனக்குத் தரவேண்டிய அன்பளிப்பையும் தா. நான் என் வீட்டைவிட்டுப் புறப்பட்டு வந்து பன்னிரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன" எனக் கேட்டான்.

---

* Ind. Ant, V. 1876 - M.J. Walhouse.
† Ind Ant, XXV, 220, Sq., 1896 - A.C. Burnell.

அதற்கு அந்த அரசன். "நான் என் நாட்டில் பணியாற்றிய கல்குடாவினை வேறு ஒரு நாட்டில் சென்று பணியாற்ற அனுமதிக்க மாட்டேன்" எனக் கூறி அவனுடைய இடக் கையினையும் வலக் காலினையும் வெட்டிவிட்டான். கல்குடா அதன்பின் ஏனூர் அரசனான திம்மனாசிய என்பவனிடம் சென்று கர்கலில் இருப்பதைக் காட்டிலும் நான்கு முழம் உயரமான சிலையினைச் செய்தான்.

சிரவணபெளகுளாவில் உள்ள உருவம் தொடர்பாகக் கீழை நாடுகள் மற்றும் இந்திய கட்டிடக்கலை வரலாறு பற்றிய தன் நூலில் பெர்கூசன்* இந்த மலை மீது உச்சியில் நின்ற ஒற்றைப் பெரும்பாறையினைச் சமணர்கள் ஒரு சிலையாக உருவமைத்துள்ளனர் எனக் கூறியுள்ளார்.

கர்கலில் உள்ள சமண மடத்தின் தலைவராக 1907-இல் விளங்கியவர் லலித கீர்த்தி பட்டரக பட்டாச்சார்ய வாரிய செய சுவாமிகளு என்பது தன்னுடைய பெயர் எனத் தெரிவித்துள்ளார். தங்கச் சரிகைகளைக் கொண்ட சிவப்பு நிறக் காசிப் பட்டால் இவர் தன்னுடைய உடலைப் போர்த்துக் கொண்டுள்ளார். சிவப்பும் தங்க நிறமுமான தலைப்பாகையும் அணிந்து, தன்னுடைய பதவிக்கு அடையாளமாக மயில் இறகுகள் பொருத்தப்பட்ட தங்கப்பிடியிட்ட விசிறியொன்றினைக் கையில் வைத்துக் கொண்டிருக்கும் கோலத்தோடு காட்சி தருகின்றார். இவர் சாதாரணமான சமயங்களில் வெள்ளிப் பிடியிட்ட மயில் தோகை விசிறியினையே கையில் தாங்கியவராக இருப்பார். கர்கலில் அபிடேகச் சடங்கு பல ஆண்டுகளுக்கு ஒரு முறையே நடைபெறுகின்றது. அப்பொழுது சிலையின் அருகே சாரம் கட்டி, அதன் மேலிருந்து அந்தப் பெரிய சிலையின் மீது தண்ணீர், பால், மலர்கள், தேங்காய், சர்க்கரை, வெல்லம், சர்க்கரை மிட்டாய், தங்கம் மற்றும் வெள்ளி மலர்கள், வறுத்த அரிசி, அவரைப் பருப்பு, சந்தனக் குழம்பு, ஒன்பது வகையான மணிகள் முதலியவற்றை அபிடேகம் செய்வர்.

---

* Op. cit.

ஏனூரில் இருக்கும் சிலையினைக் குறித்துத் திரு வால் ஹவுஸ் பின்வருமாறு எழுதுகின்றார்.* "இது கர்கலவில் இருக்கும் சிலையினை விடச் சுமார் மூன்று அல்லது நான்கு அடி உயரம் குறைவாக இருக்கும். இது இதனோடு உடன் அமைந்த பெரிய சிலையினை எல்லா விதத்திலும் ஒத்திருப் பினும், இதனுடைய கன்னங்களில் அமைந்திருக்கும் குழியானது இதன் முகத்தில் ஆழ்ந்ததொரு துயரமான புன்முறுவலைத் தோற்றுவிக்கக் கூடியதாக உள்ளது. அகன்ற சதுர வடிவிலான தோள்களும், பருத்து மிக நீண்டனவாக உள்ள கைகளும், ராப்ராயினுடையதைப் போல முழங்காலைத் தொடும் அளவுக்கு நீண்டுள்ள விரல் முனைகளுமே இந்தப் பேரளவினதாகிய சிலைகளின் குறிப்பிடத்தக்க தனித்தன்மைகளாம். (சர் தாமஸ் மன்றோவின் சிறப்பியல்புகளில் ஒன்று, அவர் கரங்கள் இராம னுடைய கரங்களைப் போல முழங்காலைத் தொடும் அளவிற்கு நீண்டிருந்ததுதான். வேறு வகையாகச் சொல்ல வேண்டு மானால் அவர் ஓர் அசானுபாகுவாக இருந்தார். தங்கள் உடம்பில் உயர்குடிக்கான குருதித் தொடர்புடையவர்களும் அரசர்களுமே இத்தகைய தோற்றம் வாய்க்கப் பெற்றவர் களாக இருப்பர்.) மற்ற சிலைகளைப் போலவே இதனுடைய கால்களையும், கைகளையும் தாமரைக் கொடிகள் சுற்றிப் படர்ந்துள்ளன. அல்லது முனைவர் பர்னெல் கூறுவது போல் ஆழ்ந்த தவத்தில் இருப்பதைக் குறிப்பதற்கு அடையாளமாக இவை துறவியின் மேல் படர்ந்திருக்கும் காட்டுக் கொடிகளும் ஆகலாம். (பாகுபலின் காட்டில் தவத்தில் ஆழ்ந்தவராகத் தன் நிலை மறந்திருந்தபோது காட்டுக் கொடிகள் அவர்மீது படர்ந் ததான ஒரு கதையும் வழங்குகின்றது.) ஒவ்வொரு கையின் அடியிலும் மூன்று தலை நாகம் தலை தூக்கி நிற்பதோடு காலடியிலும் பல நாகங்கள் உள்ளன."

"தென் கன்னடத்திலுள்ள முதபித்தூர் என்ற சிற்றூர் சாருகிருதி பண்டிதாச்சாரிய சுவாமிகள் என்ற சமணத் தலை மைத் துறவியின் இருப்பிடமாக உள்ளது. சமண சமய கையெழுத்துச் சுவடிகள் மிகுதியாக உள்ள ஒரு மடத்தில் அவர்

---

* Loc. cit.



கர்கலில் உள்ள பஸ்தி (சமணர் கோயில்)

வாழ்ந்து வருகின்றார். மூதபித்தூரில் பதினாலுக்கு மேற்பட்ட சமணக் கோயில்கள் (பஸ்திகள்) உள்ளன. அவற்றுள் பல கல்லால் ஆன கூரைகளையும், சிவப்புக் களி மண்ணால் ஆன சுற்றுச் சுவர்களையும் கொண்ட விரிவான அமைப்புடைய கட்டிடங்கள். இக் கட்டிடக் கலை அமைப்பின் சிறப்பான கூறு, இக்கோயில்களில் ஏழின் முன் மானஸ்தம்பம் எனப்படும் ஒரே கல்லால் ஆன உயர்ந்தோங்கிய தூண்கள் நிற்பதுதான். இவற்றுள் இரண்டு கோயில்களுள் மானஸ்தம்பத்திற்கும், கோயிலுக்கும் இடையே செப்புத் தகடுகளால் போர்த்தப்பட்ட மரத்தாலான துவஜஸ்தம்பங்கள் எனப்படும் கொடிமரங்கள் நிற்கின்றன. இக்கோயில்களுள் ஆறு செட்டரபஸ்தி என அழைக்கப்படுகின்றன. இவை சமண சமயம் சார்ந்த வணிகர்களான செட்டிகளால் அமைக்கப்பட்டன ஆதல் வேண்டும். இப் பதினாறு பஸ்திகளும் பின்வரும் தீர்த்தங்கர்களுக்கு உரியனவாக அமைக்கப்பட்டுள்ளன:- சந்திரநாதர் அல்லது சந்திர பிரபா, நேமி நாதர், பர்சவ நாதர், ஆதிநாதர், மல்லி நாதர், பத்ம பிரபா, அனந்த நாதர், வர்த்தமானர், சாந்திநாதர். இந்த பஸ்திகளுள் இரண்டில் எல்லாத் தீர்த்தங்கர்களுக்கும் தனித் தனிக் கோயில்கள் உள்ளன. ஒரு பஸ்தியில் இரண்டு யட்சர்களுக்கான கோயில்க்ள் உள்ளன. இவற்றுள் மிகப் பெரியதும் அழகியதுமாகக் கருதப்படுவது கி.பி. 1429-30-இல் அமைக்கப்பட்ட சந்திர நாதருக்கு உரிய ஹொசு பஸ்தி எனப்படும் புதிய கோயிலாகும் இது இரண்டு சுற்றுச் சுவர்களையும் மிக உயரமான மானஸ்தம்பத்தையும், சித்திர வேலைப்பாடுடன் கூடிய நுழை வாயிலையும் உடையது. இதன் மேன்மாடம் மரவேலைப்பாடுகள் செய்யப்பட்ட மரத்தாலான மாடமாகும். கர்ப்பக்கிரகத்தையும், தீர்த்த கர மண்டபம், கடிகை மண்டபம், சித்திர மண்டபம் என்ற மூன்று முன் பக்க அறைகளையும் கொண்டதாக இக் கோயில் அமைந்துள்ளது. சித்திர மண்டபத்தின் எதிரில் கி. பி. 1451-52-இல் அமைக்கப்பட்ட பைரதேவி மண்டபம் என்ற கட்டிடம் உள்ளது. இதன் அடித் தளத்தில் சுற்றிலும் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒட்டச்சிவிங்கி ஒன்றின் சிற்பம் குறிப்பிடத்தக்கது. இருண்ட கர்ப்பக்கிரகத்தின் உள்ளே இருக்கும் சிலை ஐம்பொன்னாலானது எனவும் அதில் வெள்ளி

யின் கலப்பே மிகுதி எனவும் கூறுகின்றனர். குருகலபஸ்தி அடுத்தபடியாகக் குறிப்பிடத்தக்கது. இதனுள் சமண சித்தாந் தங்களைக் கொண்ட பனை ஓலைச் சுவடிகள் மூன்று பூட்டு களிடப்பட்ட பெட்டியில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன. இந்த மூன்று பூட்டுக்களுக்கும் உரிய மூன்று சாவிகளையும் மூவர் வைத்திருப்பர். சிறிய பஸ்திகளில் கர்ப்பக்கிரகம், தீர்த்தங் கர மண்டபம், நமஸ்கார மண்டபம் என்ற மூன்று அறைகளைக் கொண்டவை. மூதபித்தூரில் உள்ள சமண சமயத்தவனான குறுநில மன்னன் சவுட்டர் என்பவனுடைய பாழடைந்த அரண் மனையும் காணத்தக்கது. இவன் பரம்பரையினர் அரசிட மிருந்து ஓய்வு ஊதியம் பெற்று வருகின்றனர். இந்த அரண் மனையில் நுட்பமான மர வேலைப்பாடுகள் செய்யப்பட்ட தூண்களே சிறப்பாகக் காணத் தக்கவை. இவற்றுள் இரண்டு பஞ்ச நாரிதுரக எனப்படும் ஐந்து பெண்களால் அமைந்த குதிரையும், நவநாரி குஞ்சரம் எனப்படும் ஒன்பது பெண்களா லான யானையும் ஆகும். இந்த விசித்திர விலங்குகள் கண்ண னைக் களிப்படையச் செய்ய ஆட்டிடைச்சியர்கள் ஒன்று கூடி அமைந்த உருவங்களின் படைப்பாகும். சமணர்கள் இந்திரர் (குருமார்) சிரீவகர் (சாதாரண மக்கள்) என இரு பிரிவினராக உள்ளனர். இவர்களுள் முன்னவர் தங்களைப் பிராமணர் களாகக் கருதுகின்றனர். சமணர்கள் அனைவரும் பூணூல் அணிகின்றனர். இந்திரர், சிரீவகரோடு உடன் உண்பர். எனினும் அவர்களோடு மண உறவு கொள்வதில்லை. முன்னவர் மக்கள் வழித் தாய உரிமையையும், பின்னவர் அளிய சந்தானத் தாய உரிமையையும் பின்பற்றுகின்றனர். தாழ்ந்த சாதியார் மீது படுவதால் ஏற்படும் தீட்டுண்டாக்காமல் இருப்பதில் சமணர்கள் கருத்துடையவர்களாக உள்ளனர். இவர்கள் வரும்போது சாலையில் அவர்கள் ஒதுங்கிச் செல்ல வேண்டியிருப்பதை நானே நேரில் பார்த்துள்ளேன். நான் நேரில் பார்த்த சமணர்களுடைய திருமண ஊர்வலத்தில் இந்து நடன மாதர்கள் உடன் ஆடியபடி சென்றனர். சமணர்கள் பெரும்பாலானவர்களாக வாழும் தெருவின் மேற்குக் கோடியில் நான் ஒரு விசித்திரமான காட்சியைக் கண்டேன். உயர்ந்து ஓங்கிய மரங்கள் பலவற்றில் பழந்தின்னி வௌவால்கள்

(Fruit bats-*Petropus medius*) ஆயிரக் கணக்கில் தொங்கியபடி இருந்தன. சமணர்கள் தங்களுடைய சமயக் கோட்பாடுகளின் அடிப்படையில் பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யமாட்டார்கள் என்ற காரணத்தால் அவை இந்த இடத்தைத் தேர்ந்தெடுத் துள்ளனவோ என நினைக்க வேண்டியுள்ளது. அந்தத் தெருவில் தொடர்ந்து மேற்கே சென்றால் சமணர்களுடைய சுடுகாடு வருகின்றது. அதில் சிவப்புச் சரளைக்கல் பதிக்கப்பட்ட படிக ளோடு கூடிய பெரிய தூர்ந்து போன குளமும், செல்வ வள முடைய சமண வணிகர்கள் பலருடைய கல்லறைகளும் உள்ளன. இவை பல அடுக்குகளையுடைய கூர்ங்கோபுர அமைப்புடையன வாக மேலே கல்லால் ஆன கலசம் வைக்கப் பெற்றனவாக உள்ளன. இவற்றுள் நான்கு கல்லறைகளில் இறந்தோர் பற்றிய சுருக்கமான குறிப்புக்களும் பொறிக்கப்பட்டுள்ளன. சமணர்கள் சிறு பூச்சி புழுக்களுக்கு எந்தத் தீங்கும் நேர்ந்து விடக் கூடாது என்ற காரணத்தால் இறந்தவர்களின் பிணத்தைக் கல்லின் மேல் கிடத்தியே சுட்டு எரிக்கின்றனர்.'' எனத் திரு வால்ஹவுஸ் எழுதியுள்ளார்.

தென் கன்னடத்தைச் சேர்ந்த சமணர்கள், தங்கள் மணச் சடங்குகளைப் பண்டர்கள் மணச் சடங்குகளை ஒத்தனவாக அமைத்துக் கொண்டுள்ளனர். பூதங்களை இவர்கள் வழிபடு கின்றனர். சிலருடைய இல்லங்களில் பூதங்களை வைப்பதற் கெனப் பதோலி என்ற தனி அறைகள் உள்ளன. பூதங்களுக்கு நேர்ந்து கொள்ளும் இவர்கள் விலங்குகளைப் பலியிடாமல் கோழி, ஆடு, பன்றி போன்ற விலங்குகளின் உலோக உருவங் களைப் பூதங்களுக்காகப் படைப்பர்.

வட ஆர்க்காடு மாவட்ட சமணர்களைப் பற்றி வட ஆர்க் காடு மாவட்டக்கையேட்டில் திரு எச்.எ.ஸ்டுவர்ட்டு எழுதியுள் ளது வருமாறு:-"இம்மாவட்டத்தில் உள்ள சமணர்களில் பாதிக்கு மேற்பட்டவர்கள் வந்தவாசி வட்டத்திலும் எஞ்சியவர்கள் ஆர்க்காடு, போளூர் வட்டங்களிலும் காணப்படுகின்றனர். இச் சுற்று வட்டாரத்தில் சமணர்கள் குடியிருப்புக்கள் இருப்பதற் கான காரணம் சமண சமயத்தைப் பின்பற்றியவர்களாக இருந்த அரச மரபினர் காஞ்சிபுரத்திலிருந்து பல ஆண்டுகள் ஆட்சி

புரிந்தமையேயாகும். சமணர்களின் கோயில்களும், சிற்பங்களும் பல இடங்களில் காணப்படுவது இவர்கள் ஒரு காலத்தில் எண்ணிக்கையில் மிகுந்தவர்களாக இருந்திருக்க வேண்டும் எனக் கருத இடம் தருகின்றது. இப்பொழுது அவர்கள் அந்த இடங்களிலிருந்து வேறிடங்களுக்குச் சென்றிருத்தல் வேண்டும். பிராமணர்கள் மேற்கொள்ளும் எல்லாச் சடங்குகளையும் மேற்கொள்ளும் இவர்கள் பூணூல் அணிவதோடு பிராமணர்களைத் தூய் சமய நெறியிலிருந்து பிறழ்ந்தவர்களாகக் கருதித் தாழ்வாகவே மதிக்கின்றனர். இதன் காரணமாக இவர்கள் நெய், வெல்லம் முதலானவற்றைத் தங்கள் சாதியாரைத் தவிர மற்றவர்களிடமிருந்து பெற்றுக் கொள்வதில்லை. பறையர்கள் சேரியில் நுழைய நேர்ந்தால் தீட்டிற்கு உள்ளாகும் இவர்கள் குளிப்பதோடு பூணூலையும் புதிதாக அணிவர். இவர்களின் வழக்கமான பட்டப் பெயர் நயினார் என்பதாகும். மற்ற மாவட்டங்களைச் சேர்ந்த புதியவர்கள் இவர்களை ராவ், செட்டி, தாஸ், முதலியார் என்ற பட்டங்கள் தந்து அழைப்பதும் உண்டு.''

செங்கல்பட்டு மாவட்டத்தில் உள்ள காஞ்சிவரத்தை அடுத்த பிள்ளபாளையத்தில் அழகு நயம் வாய்ந்த சமணர் கோயில் ஒன்று உள்ளது. இக் கோயிலைப் பற்றித் தனது நாட்குறிப்பில் சர் எம்.இ.கிராண்ட் டப்ஃ குறித்திருப்பதாவது:-* ''இதனைக் கட்டத் தொடங்கியவர்கள் கட்டிமுடிக்காமலேயே விட்டுச் சென்றிருக்க வேண்டும் என்பது இக்கோயிலைப் பார்ப்பவர்களுக்குத் தோன்றும் படியாக உள்ளது. இதனைப் பின்னர் சைவர்கள் தங்கள் வழிபாட்டுக் குரியதாக்கிக் கொண்டிருக்க வேண்டும். இப்பொழுது அனைவராலும் கைவிடப்பட்டு வழிபாடு ஏதுமின்றி உள்ளது. புதியதொரு வருகையின் (தொல்பொருள் துறை) அடையாளச் சின்னமாக இதன் முன் பக்கத்தில் 9-ஏ என்ற கணக்கெடுப்பு எண் குறிக்கப்பட்டுள்ளது.''

தென் ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த சமணர்கள் பற்றித் தென் ஆர்க்காடு மாவட்ட விவரக் குறிப்பில் திரு டபிள்யூ. பிரான்சிஸ் பின்வருமாறு எழுதுகின்றார். ''முன் நாளில் சமண

* Sir M.E.Grant Duff. Notes from a Diary, 1881-86.

சமயம் இம் மாவட்டத்தில் செல்வாக்கு உடையதாக இருந்தது என்பதில் ஐயமில்லை. இன்று திருப்பாதிரிப்புலியூர் என வழங்கப்படும் பாடலிபுத்திரம் என்ற பெயர் கொண்டதாயிருந்த நகரத்தில் சமணப் பள்ளியும் கல்லூரியும் இருந்ததாகப் பெரிய புராணம் கூறுகின்றது. சமணத் தெய்வ உருவங்களும், சிற்பங் களும் மற்ற மாவட்டங்களைக் காட்டிலும் இந்த மாவட்டத்தில் மிகுதியாகவே கிடைக்கின்றன. சைவ சமயத்தின் மறுமலர்ச்சி காரணமாகக் கிறித்தவ சகாப்தத்தின் முதல் நூற்றாண்டுகளில் சமண சமயத்தின் செல்வாக்குக் குன்றியது. இது தொடர்பாகப் பெரியபுராணம் கூறும் கதையினை இங்கே எடுத்துரைப்பது பொருத்தமாக இருக்கும். சைவ சமயக் குரவரான அப்பர் முதலில் பாடலிபுத்திரத்தில் இருந்த சமணர் கல்லூரியில் மாணவராயிருந்தாரெனவும், பண்ருட்டிக்கு அருகில் உள்ள திருவதிகைக் கோயிலில் உள்ள இறைவனிடம் அன்பு பூண்டு ஒழுகிய இவருடைய தமக்கையார் அத் தெய்வத்திடம் வேண்டிக் கொண்டதால் இவர் சைவ சமயம் சார்ந்தார் எனவும் பெரிய புராணம் கூறுகின்றது. சமண சமயத்தவனான நாட்டு அரசன் அவர் புதிய நெறி சார்ந்ததால் முதலில் அவர் மீது கோபம் கொண்டான். எனினும் இறுதியில் அவனையும் சைவ சமயத் தினைத் தழுவும் படியாக அப்பர் மாற்றினார். அதன்பின் பாடலிபுத்திரத்திலிருந்த சமணப் பள்ளியினை ஒரு சிவன் கோயி லாக்கியதோடு சமணர்களையும் அவன் பூண்டோடு ஒழித்துவிட் டான். இதன் பின் மறுபடியும் சமணம் தழைக்கத் தொடங்கியது என்றாலும் மீண்டும் இச் சமயத்தைச் சார்ந்தவர்கள் அரசின் வெறுப்புக்கு உள்ளாயினர். பிற்காலத்தில் இவர்கள் வெறுப் புக்கு உள்ளானது பற்றிய கதை மெக்கென்சி கையெழுத்துப் பிரதியொன்றில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. கி.பி. 1478-இல் செஞ்சியிலிருந்து அரசாண்டவன் வெங்கடாம்பேட்டை வேங் கடபதி* என்பவன் ஆவான். இவன் சமூகப் படிநிலையில் தாழ்ந்ததாகக் கருதப்படும் கவரை சாதியைச் சேர்ந்தவன். இவன் உள்ளூரைச் சேர்ந்த பிராமணன் ஒருவன் மகளைத்

---

* நாட்டுப்புறக் கதை வரலாற்றின்படி இவன் பெயர் துபால கிருட்டிணப்ப நாயக் என்பதாகும்.

தனக்கு மணம் செய்து வைக்கும்படி கேட்டான். பிராமணர்கள் சமணர் அவ்வாறு அவர்கள் பிரிவைச் சேர்ந்த ஒருத்தியை மணம் செய்து வைப்பார்களாயின் தாங்களும் செய்து தருவதாகக் கூறினர். வெங்கடபதி இதனைச் சமணர்களிடம் கூறி அவர்கள் பிரிவினைச் சேர்ந்த ஒருத்தியைத் தனக்கு மனைவியாக்கும்படி கேட்டான். அவர்கள் தங்களுக்குள் கலந்து பேசி தங்கள் குலத்தைத் சேர்ந்த ஒருத்தியை இது போலத் தாழ்ந்த சாதியைச் சேர்ந்த ஒருவனுக்கு மணம் செய்விக்கப்படாமல் தவிர்ப்பது எப்படி என முடிவு செய்துகொண்ட பின், அவனுடைய வேண்டுகோளுக்கு உடன்படுபவர்கள் போல நடித்துச் சமண சமயத்தைச் சேர்ந்த பெரிய மனிதர் ஒருவரின் மகள் அவனுடைய மனைவியாவாள் எனக் கூறினர். திருமணத் திற்காக உறுதி செய்யப்பட்ட நாளன்று வேங்கடபதி மண மகனாக அந்தப் பெண்ணின் இல்லம் சென்றான். அந்த இல்லத்தில் ஒருவரும் காணப்படாததோடு ஒரு பெட்டை நாய் வீட்டு வாசலில் கட்டிப் போடப்பட்டிருப்பதைக் கண்டு கடுஞ் சினமுற்றுச் சமணர்கள் அனைவரையும் தலையை வெட்டி வீழ்த்தும்படி ஆணையிட்டான். சமண சமயம் சேர்ந்த சிலர் வெட்டுண்டனர். சிலர் தப்பியோடினர். எஞ்சியிருந்தவர்கள் மறைவாகவே தங்கள் நெறியை மேற்கொண்டொழுகினர். சிலர் சாவிலிருந்து தப்பச் சைவர்களாயினர்.இது நடந்த கொஞ்ச காலத்திற்குபின் அரசனின் அதிகாரிகள் சிலர் திண்டிவனத் திற்கு அருகில் உள்ள வேளூரில், வீரசேனாச்சாரியன் என்ற சமணன் தன் நெறிக்கு உரிய சில சடங்குகளை மறைவாக ஒரு கிணற்றில் செய்து கொண்டிருப்பதைக் கண்டு அவனைத் தம் அரசன் முன் கொண்டு வந்து நிறுத்தினர். அரசனுக்கு அப்பொழுதுதான் ஒரு குழந்தை பிறந்திருந்ததால் நல்ல மனநிலையிலிருந்த அவன் குற்றவாளியை மன்னித்துப் போகவிட்டான். எதிர்பாராது சாவிலிருந்து தப்பிய அவன் ஒரு துறவியாக முடிவு செய்து சிரவணபெளகுளாவிற்குச் சென்று சமண சமய நூல்களைக் கற்றான். இதற்கிடையே செஞ்சியில் திண்டிவனம் வட்டத்தைச் சேர்ந்த தாயனூரில் வாழ்ந்த காங்கய்ய உடையார் திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள உடையார்பாளையம் சமீன்தாரிடம் தஞ்சம் புகுந்து அவருடைய

நட்பினையும் கொஞ்சம் நிலத்தையும் பெற்று அங்கே வாழ்ந்து கொண்டிருந்தார். தனக்கு இவ்வாறு ஒரு பாதுகாப்பு ஏற்பட்ட பின் காங்கய்ய உடையார் சரவணபெளகுள சென்று வீரசேனாச்சாரியரையும் அழைத்து வந்து இருவருமாகச் செஞ்சிப் பகுதிக்குச் சென்று அங்கு எஞ்சி இருந்தவர்களை மீண்டும் அவர்களுடைய பழைய சமயநெறியான சமணத்திற்குத் திரும்பும்படி வேண்டினர். அங்கு எஞ்சியிருந்தவர்களில் பெரும்பாலோர் சைவர்களாக மாறித் தங்கள் பூணூலை அகற்றிவிட்டு, நெற்றியில் விபூதி பூசியவர்களாக இருந்தனர். இதனால் இவர்கள் நீறு பூசிய வேளாளர் என்ற பெயரால் இன்றும் அழைக்கப்படுகின்றனர். காங்கய்ய உடையாரின் குறிக்கோள் நிறைவுறும் வகையில் சமணம் மீண்டும் தழைத்தது. வீரசேனாச்சாரியார் இறுதியில் வேலூரில் உயிர் துறந்தார். அங்கே ஒரு கோயிலில் அவர் சிரவணபெளகுளாவில் இருந்து கொண்டு வந்ததாகக் கூறப்படும் இருபத்தி நான்கு தீர்த்தங்களில் ஒருவரான பார்சவநாதரின் உலோகச் சிலை வைக்கப்பட்டுள்ளது. காங்கய்ய உடையாரின் வழிவந்தவர்கள் இன்றும் தாயனூரில் வாழ்கின்றனர். அவர்களுடைய முன்னோர்கள் சமண சமயத்திற்கு ஆற்றிய தொண்டின் நினைவாக விழாக்களின்போது அவர்களுக்கே முதலில் வெற்றிலை பாக்குத் தந்து சிறப்புச் செய்யப்படுகின்றது. திண்டிவனம் வட்டத்திலுள்ள சித்தாமூர் சமணப் பள்ளியின் தலைமைக் குருவினைத் தேர்ந்தெடுப்பதிலும் இவர்கள் சொல்லுக்கு மிகுந்த செல்வாக்கு உள்ளது. மகாதிபதி என அழைக்கப்படும் இந்தத் தலைமைக் குரு திண்டிவனம் வட்டத்திலுள்ள சித்தாமூர், வீரனாமூர், விழுக்கம், பெரமாண்டூர், அலகிராமம், வேலூர், தாயனூர் ஆகிய சமணர்கள் வாழும் ஊர் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றார். சென்னைக்கு தெற்கே உள்ள எல்லாச் சமணர்களுக்கும் இவரே தலைவர். மைசூர், தென் கன்னடம், ஆகிய பகுதிகளைச் சேர்ந்த சமணர்கள் மீது இவர் ஆட்சியுரிமை செலுத்துவதில்லை. அப்பகுதிச் சமணர்களோடு தென் ஆர்க்காடு மாவட்டச் சமணர்களுக்குத் தொடர்பும் இல்லை. இத்தலைமைக் குரு தன் குழுவினர் பின் தொடர ஒரு பல்லக்கில் மேற்கூறிய ஊர்களுக்குச் சென்று தங்குவார். இவர் தங்கும் ஊராரே இவருக்கு எல்லா வசதிகளையும் செய்து தர வேண்டும். வழக்குகளைத் தீர்த்து வைப்பதோடு,

தண்டத் தொகைவிதிப்பதும், அதனைக் கட்டாதவர்களைச் சாதி விலக்கம் செய்வதும் இவரது உரிமையாகும். இந்து சமயக் குருக்களைவிட இவர் தன் சமூகத்தவர்களை மிகுந்த கட்டுப்பாட்டுக்குள் இன்றளவும் வைத்துள்ளார். திண்டிவனம் பகுதியில் இன்றும் வளமான வணிகர்களையும், திறமையான பண்ணையார்களையும் கொண்டதாகச் சமண சமூகம் செல்வாக்கு உடையதாக உள்ளது. ஆண்கள் நயினார், உடையார் என்ற பட்டத்தைத் தரிக்கின்றனர். ஆனால் இவர்கள் உறவினர்களான கும்பகோணம் பகுதியையும், வேறு பிற இடங்களையும் சேர்ந்தவர்கள் தங்களைச் செட்டி அல்லது முதலியார் என்றே அழைத்துக் கொள்கின்றனர். ஈச்ச மர ஓலையிலிருந்து பாய் பின்னுவதில் இச் சமூகத்தைச் சேர்ந்த பெண்கள் கைதேர்ந்தவர்களாக உள்ளனர். ஆண்கள் பூணூலோடு கூட வைணவர்கள் நாமத்தினை ஒத்த ஒரு சின்னத்தை நெற்றியில் தரிக்கின்றனர். இது அடிப்பக்கம் வளைவுடையதாக இல்லாது சதுர அமைப்பு உடையதாக இருப்பதோடு கூட நடுவில் சிவப்புக் கோட்டிற்குப் பதிலாக ஒரு புள்ளியினைக் கொண்டதாக இருக்கும். மண்டையினை முழுக்க மழித்துக் கொள்வர். வேளாளர்களைப் போல இவர்கள் தோற்றம் தருவதோடு இவர்கள் சமூகத்தைச் சேர்ந்த பெண்களும் வேளாளர் பெண்களைப் போலவே சேலை, தாலி, அணிகள் ஆகியவற்றினை அணிகின்றனர். தென் ஆர்க்காட்டினைச் சேர்ந்த சமணர்கள் அனைவரும் திகம்பரர் பிரிவினரே. அதற்கேற்ப இவர்கள் கோயில்களில் உள்ள இருபத்திநான்கு தீர்த்தங்கள் உருவங்களும் ஆடையற்ற நிர்வாணக் கோலத்திலேயே உள்ளன. இந்தக் கோயில்களுள் குறிப்பிடத் தக்கது திருநீரங்கொன்றை*யும், சித்தாமூரும் ஆகும். இவை புறத்தோற்றத்தில் இந்துக்களின் கோயிலினை ஒத்தனவே. இவற்றுள் கல்லால் ஆன அல்லது களிமண்ணால் செய்து வண்ணம் பூசப்பட்ட தீர்த்தங்கர்கள் சிலைகள் இந்து சமயத் தெய்வங்களுக்குப் பதிலாக இடம் பெற்றிருக்கும். சமணர்கள் கோயில் வழிபாடு பெரிதும் பிராமணர்கள் வழிபாட்டினை ஒத்ததே. கடவுள் உருவங்களுக்குப் பால், சந்தனம் முதலியவற்றால் அபிடேகம் செய்து தீப தூபங்கள் காட்டித்,

---

* இவ்வூர் சமணத் திருப்பதி எனவும் பெயர் பெற்றுள்ளது.

தேங்காய் உடைத்து, இன்னிசை முழக்கித் தெய்வீகப் பாடல்களை ஓதி வழிபடுவர். இச் சடங்குகளை அர்ச்சகர் எனப்படும் குருக்கள் வகுப்பாரே செய்கின்றனர். தன் வீட்டிலும் ஒரு சமணன் நாளும் தீர்த்தங்கரருடைய சிறிய சிலைக்கு இது போல வழிபாடு நிகழ்த்துவதுண்டு. பிராமணர்களைப் போலவே நாளும் அதிகாலையில் மந்திரம் ஓதுதல், மும்முறை வழிபாட்டுப் பாடல்களை ஒப்புவித்தல் ஆகியவற்றைச் செய்வர். மறு பிறவியில் நம்பிக்கை உடையவர்களான சமணர்களின் குறிக்கோள் நிர்வாணம் அடைதலே. சிவராத்திரி, தீபாவளி ஆகிய நாள்களில் தொடர்ந்து விருந்து கொண்டாடும் இவர்கள் தாங்கள் இந்துக்களைப் போல அந்த நாள்களைப் புனிதமானவையாகப் பாவிப்பதில்லை எனவும் அவை இருபத்திநான்கு தீர்த்தங்களுள் முதலாம் தீர்த்தங்களும் கடைசித் தீர்த்தங்கரும் முக்தி பெற்ற நாள்கள் எனவும் கூறுவர். இதே போலப் பொங்கலையும், ஆயுத பூசையையும் இவர்கள் கொண்டாடுகின்றனர். தங்கள் சமண நெறியான கொல்லாமை அறத்தில் மிகுந்த பற்றுடைய இவர்கள் தங்களை அறியாமலேயே பிற சிறு உயிர்களுக்குத் தீங்கு நிகழலாம் என்பதால் இரவில் உணவு கொள்வதில்லை. இதே காரணத்திற்காக இவர்கள் பாலினையும், தண்ணீரையும் வடிகட்டியே பயன்படுத்துகின்றனர். அத்துடன் தங்கள் சமயத்தவர்கள் தயாரித்த தயிர், நெய், எண்ணெய் ஆகியவற்றையே பயன்படுத்துகின்றனர். கிளிஞ்சல் சுண்ணாம்பினை இவர்கள் பயன்படுத்துவதில்லை. உயிர்களிடத்து இவர்கள் கொண்டுள்ள இரக்கத்தினைத் தவறாகத் தங்கள் லாபத்திற்குப் பயன்படுத்த விரும்பும் வேட்டைக்காரர்கள் சிறு பறவைகளைப் பிடித்து இவர்கள் வீடுகளில் கொண்டு வந்து காட்டி அவற்றை உயிரோடு தப்பிப் போகவிட ஒரு தொகையினைக் கேட்டுப் பெறுவர். சமணர்களிடையே சாதாரண மக்கள் என்ற பிரிவு ஒன்றும் அர்ச்சகர்கள் பிரிவு மூன்றுமாக மொத்தம் நான்கு பிரிவுகள் உள்ளன. அர்ச்சகர் பிரிவினருள் வாத்யார்கள் எனப்படும் அர்ச்சகர்களே எண்ணிக்கையில் பலராக உள்ளனர். இவர்கள் கோயில்களில் வழிபாடு செய்பவர்கள். சாதாரணக் குடிமகனான சமணன் அர்ச்சகனாதல் இயலாது. இது தனித்ததொரு பிரிவு. ஒரு

அர்ச்சகர் அதற்கு அடுத்த உயர்ந்த படியான அன்னம் அல்லது அன்னுவிரிதி எனப்படும் துறவி நிலைக்கு உயரலாம். இத் துறவிகள் மணம்புரிந்து கொள்ள அனுமதிக்கப்பட்டாலும் சில தனித்த விதிமுறைகளின்படி நடக்கக் கடமைப்பட்டவர்கள். இவ்வாறு அன்னமாக உயர்ந்தவர்கள் மூன்று அர்ச்சகர் பிரிவி னுள்ளும் உயர்ந்ததான நிர்வாணியர் அல்லது முனிவர் என்ற உலக இன்பங்களைத் துறந்து தனித்து வாழும் உயர்நிலை யினை அடையமுடியும். இவர்களுள் ஆர்ய நங்கை எனப்படும் பெண் துறவிகளும் உளர். இப்பிரிவில் கன்னியரோடு கண வனை விட்டுப் பிரிந்து வந்து சேரும் பெண்களும் இடம் பெறுகின்றனர். இவ்விரு பாலரும் ஒழுக்க நெறியில் நிற்பதாக உறுதிமொழி எடுத்துக் கொண்ட பின்னரே இப்பிரிவில் சேர்த் துக் கொள்ளப்படுகின்றனர். துறவிகள் தலையை மழித்துச் சிவப்பு வண்ண ஆடை புனைவர். பெண் துறவிகளும் தலையை மழித்துக் கொள்கின்றனர். இவர்களுக்குரியது வெள்ளை ஆடை. இவ்விரு பாலாரும் தங்கள் சமயத் தகுதியினை மற்றவர்களுக்கு அறிவிப்பதான பித்தளைப் பிடி இடப்பட்ட மயில் தோகைக் கட்டினை எப்பொழுதும் கையில் தாங்கியபடி செல்வர். இதனால் இவர்கள் தாங்கள் உட்காரும் இடத்தைப் பெருக்கிய பின்னரே அங்கு அமர்வர். இல்லையேல் அங்குள்ள சிறு உயிர் கள் இறக்க நேரிடும் என அஞ்சுவர். சாதாரணச் சமணர்கள் அர்ச்சகர் பிரிவினரோடு ஒன்றாக உணவு கொண்டாலும் அவர்களோடு மண உறவு கொள்வதில்லை. இதனால் அர்ச்சகர் பிரிவினர் தங்கள் பிள்ளைகளுக்கு ஏற்ற மணமகளைப் பெறு வதில் மிகுந்த தொல்லைப்படுகின்றனர். தகுதியான ஒரு மணப் பெண்ணுக்கு இவர்கள் ரூ.200 அல்லது ரூ.300 என்று தர வேண்டியதாகின்றது. சமணர்கள் தங்களுக்குள் திருமண உறவு கொள்ள உட்பிரிவு ஏற்பாடுகள் ஏதும் இல்லை. சென்னைக்குத் தெற்கே உள்ள சமணர்கள் அனைவரும் தங்களுக்குள் விருப்பம் போல் மண உறவு கொள்கின்றனர். பெண்கள் பூப்படையும் முன்னரும் பூப்படைந்த பின்னும் மணம் செய்விக்கப்படு கின்றனர். கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனு மதிக்கப்படுவதில்லை. அவர்கள் நடுவயதை அடையும் வரை தலையை மழித்துக் கொள்ளும்படி வற்புறுத்தப்படுவதில்லை.

இறந்தவர்கள் எரிக்கப்படுகின்றனர். சாவுத் தீட்டு பன்னிரண்டு நாள்களுக்கு மேற்கொள்ளப்படுகின்றது. தீட்டு நீக்கும் சடங்கு நடத்திய பிறகு தீட்டுக்குள்ளானவர்கள் கோயிலுக்குச் செல்லுதல் வேண்டும் என்பது விதி. சமணர்கள் இந்துக்களுடன் உண்பதில்லை. இவர்களுடைய பிறப்பு, திருமணம், சாவு தொடர்பான குடும்பச் சடங்குகள் பிராமணர்கள் சடங்குகளை ஒத்தவை. சமண சமயத்தைச் சேர்ந்த பெண்கள் பூணூல் அணிவதில்லையெனினும் பூணூல் அணிபவர்களுக்குரிய மந்திரம் இவர்களுக்கு எட்டு வயதில் ஆண்களுக்குரிய அத்துணை சடங்குகளோடும் கற்பிக்கப்படுகின்றது.''

1906-07-ஆம் ஆண்டுக்கான கல்வெட்டுத் துறை அறிக்கையில் தென் ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த எயில் என்ற ஊரைச் சேர்ந்த சமணர்கள் தங்கள் கோயிலினைப் புதுப்பித்துக் கொள்ள அந்த ஊரில் உள்ள சிவன் கோயில் கற்களைப் பயன் படுத்திக் கொள்ள மாவட்ட ஆட்சியாளரிடம் அனுமதி வேண்டி விண்ணப்பித்துக் கொண்டதாகவும், மாவட்ட ஆட்சியர் இந்துக்களை அழைத்து அவர்களுடைய சிவன் கோயிலினை ஓராண்டுக்குள் புதுப்பித்துக் கொள்ளும்படியும் இல்லையானால் அது அரசுக்குரிய பறிமுதலான உடைமையாகக் கருதப்படும் எனவும் எச்சரித்துள்ளதாகவும் கூறப்பட்டுள்ளது.

மதுரை நகருக்கு அருகே ஆனைமலை என்று அழைக்கப் படும் மொட்டைப் பாறைக் குன்று ஒன்று உள்ளது. ''மதுரைத் தல புராணம் அதனை ஒரு யானையின் கல்லாகிவிட்ட உருவம் எனக் கூறுகின்றது. காஞ்சிவரத்தைச் சேர்ந்த சமணர்கள், மதுரையைச் சேர்ந்த சைவர்களைச் சமணர்களாக்க முயற்சி மேற்கொண்டதில் வெற்றி கிட்டாமல் போகவே மாய வித்தையில் ஈடுபட்டுள்ளனர். அவர்கள் பத்து மைல் நீளமுள்ள குழியினைத் தோண்டி, அதில் பலி கொடுக்க, அதன் பயனாய் அக்குழியிலிருந்து ஒரு பெரிய யானை எழுந்தது. இந்த யானையினை அவர்கள் மதுரைக்கு எதிராகச் செலுத்தினர். அது ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்போதும் பூமியே அதிரும்படி யா[illegible]ச், சமணர்கள் பின் தொடர மதுரையை நோக்கிச் சென்றது.

அது கண்டு பாண்டிய மன்னன் சிவனுடைய உதவியை வேண்டி வழிபட, அவர் வெளிப்பட்டுத் தன்னுடைய அம்பால் அந்த யானையினை எய்ய அது இப்பொழுது ஆனைமலை இருக்கும் இடத்தில் உயிர்துறந்து வீழ்ந்தது'' என மதுரை மாவட்ட விவரக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

நாகமலை என்ற பெயரோடு மதுரையை அடுத்து நீண்டு கிடக்கும் மொட்டைப் பாறை பற்றி மேற்கூறிய நூலில் கூறப் பட்டுள்ள செய்தி வருமாறு:- ''சமணர்களுடைய மாய வித்தை யால் உயிரூட்டப் பெற்று மதுரை மீது ஏவப்பட்ட பெரிய பாம்பின் உடலே அது எனவும் சைவர்களின் நகரமான மதுரையை விழுங்க அது நெருங்கியபோது சிவனுடைய அருளால் அது அழிக்கப்பட்டது எனவும் ஒரு கதை வழங்கி வருகின்றது.'' மதுரைக்குத் தெற்கே இரண்டு மைல் தொலைவில் பசுமலை என்ற பெயருடைய ஒரு குன்று உள்ளது. ''பசுமலை எனப் பொருள்படும் இக் குன்று பற்றி மதுரைத் தல புராணம், சமணர்கள் மதுரையைப் பாம்பை ஏவி அழிக்கும் முயற்சியில் ஈடுபட்டபோது அப்பாம்பு நாகமலையாக மாறிவிட மேலும் மாய வித்தைகள் புரிந்து மிகப் பெரிய பசு உருவில் ஒரு பூதத்தை உண்டாக்கினர். அவர்கள் பசு உருவில் பூதத்தைப் படைத்ததற்கான காரணம் புனிதமான பசுவிற்கு யாரும் தீங்கிழைக்கமாட்டார்கள் என்ற கருத்தினாலேயாகும். சிவன் தன்னுடைய வாகனமாகிய காளையினைப் பேருருவங்கொண்டு சென்று அப்பசுவினை எதிர்கொள்ளுமாறு பணித்தார். அப் பசு அக்காளையினைக் கண்ட அளவில் காமம் கொண்டு உயிரிழந்து ஒரு கல்லாக மாறி விட்டது'' என மாவட்ட விவரக் குறிப்பு கூறுகின்றது.

மதுரை மீனாட்சி கோயிலிலுள்ள பொற்றாமரைக் குளத் தினைச் சுற்றி அமைந்துள்ள மண்டபத்தில் சமணர்களைக் கழு வேற்றும் காட்சிகளைச் சித்தரிக்கும் சுவர் ஓவியங்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றைப் பற்றிய பின்வரும் விவரங்களுக்கு நான் திரு கே. வி. சுப்ரமணிய அய்யருக்குக் கடப்பாடுடையேன். சிவ பெருமான் மகனான சுப்ரமணியரின் அவதாரமான திருஞான

சம்பந்தர் சைவ சமய நாயன்மாராக வகுக்கப்பட்டுள்ள அறுபத்தி மூவருள்ளும் முதன்மையானவரும் சைவத்தைப் பரப்பத் தொண்டு புரிந்தவருமாவார். அவர் முரண் பட்ட கோட்பாடான சமண சமயத்தின் வளர்ச்சியைத் தடுத்துத் தென்னிந்தியாவில் மீண்டும் சைவம் தழைக்க இந்த உலகில் தோன்றுமாறு சிவனால் அனுப்பப்பட்டவர். அவர் தனது மூன்றாவது வயதிலேயே இந்த உலகில் தான் அவதரித்தற்கான பணியினைச் சிவனுடைய துணைவியாரான பார்வதியினால் ஞானப்பால் ஊட்டப் பெற்றுச் செய்யத்தொடங் கினார். தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள புனித ஊரான சீர்காழியில் தன் பக்தனான பிராமணர் சிவபாதஹிருதயருக் கும், அவருடைய மனைவிக்கும் சிவன் வரம் தந்தார். இவர்கள் ஞானசம்பந்தருக்குத் தாயும் தந்தையுமாய் அமைந்தனர். அடுத்த பதின்மூன்று ஆண்டுகளில் அவர் பதினான்காயிரம் தேவாரப் பாடல்களைப் பல்வேறு கோயில்களுக்கும் சென்று அங்குக் கோயில் கொண்டுள்ள இறைவன் மீது பாடியதோடு பல அற்பு தங்களையும் நிகழ்த்தினார். இவர் சென்ற இடங்களிளெல்லாம் சைவத்தைப் பரப்பியதோடு பலரைச் சைவராகவும் மாற்றினார். அப்போது கூன் பாண்டியன் என்பவன் மதுரையை ஆண்டு வந்தான். அங்கும் மற்ற இடங்களைப் போலவே சமணம் செல் வாக்குப் பெற்றிருந்ததோடு நாட்டு மக்கள் பலரும் புதிய சமயத்தை மேற்கொண்டிருந்தனர். அரசியும், முதலமைச்சரும் மறைவாகச் சைவ சமயத்தைப் பின்பற்றி ஒழுகி வந்தனர். சிவனுடைய கோயில் மூடப் பெற்றுக் கேட்பாரற்றதாகிவிட்டது. அரசியும், முதலமைச்சரும் யாரும் அறியாத வண்ணம் திருஞான சம்பந்தரைத் தலைநகருக்கு வரும்படி அழைப்பு விடுத்தனர். விரும்பத்தகாததான சமண சமயத்தை வேரறுக்க அவருடைய வருகை துணை புரியும் என அவர்கள் நம்பினர். அவர்கள் விருப்பப்படியே திருஞானசம்பந்தரும் ஆயிரக்கணக்கான தன் பக்தர்கள் புடைசூழ மதுரையினை அடைந்து வைகை ஆற்றின் வடகரையில் ஒரு மடத்தில் தங்கினார். எட்டாயிரம் எண்ணிக் கையினரான சமணத் துறவிகள் இதனை அறிந்து அவரை அழிக்க அவர் தங்கியிருந்த மடத்திற்குத் தீயிட்டனர். திருஞான சம்பந்தரின் சீடர்கள் அந்த நெருப்பினை அணைத்தனர். அருட் தொண்டரான திருஞானசம்பந்தர் இச்சூழ்ச்சிக்கு அரசனும்

உடைந்தையாயிருந்ததனை ஒப்பாதவராய் அந்த நெருப்பினை அரசனைச் சென்று வெப்பு நோயாகப் பற்றும்படி ஆணையிட்டார். அதன்படி அரசனுக்கு வந்த நோயினை மருந்தாலும் மந்திரத்தாலும் தீர்க்க முயன்ற சமணருடைய முயற்சிகள் வெற்றி பெறவில்லை. அரசியும், முதலமைச்சரும் நோயாளியான அரசனிடம் சைவத் தொண்டரின் நல்லியல்புகளை எடுத்துக் கூறி அவர் அரண்மனைக்கு வந்து அரசரின் நோயினைப் போக்க அரசனுடைய அனுமதியைப் பெற்றனர். திருஞானசம்பந்தர் திருநீற்றினைப் பூசி மன்னனுடைய நோயினைத் தீர்க்கப்போவதாகக் கூறியபோது அங்கிருந்த சமணத் துறவிகள் தங்களுக்கும் ஓர் இறுதி வாய்ப்பினை நல்கும்படி வேண்டினர். எனவே இரு சமயத்தவர்களும் மன்னரின் உடம்பில் ஒவ்வொரு பாதியின் நோயினைத் தீர்ப்பது என ஒப்பந்தம் செய்து கொண்டனர். சம்பந்தருக்கு உரிய பாதியின் நோயினை அவர் உடனே போக்கினார். சமணருக்குரிய பாதியில் நோய் இரு மடங்காகப் பெருகியது. அரசன் உடனே சம்பந்தரைத் தன் உடம்பில் மறுபாதி நோயினையும் தீர்க்கும்படி கூறியதோடு, சமணர்களைத் தன் முன்னிலையினின்றும் அகலும்படி ஆணையிட்டான். சம்பந்தர் தன் கையால் அவனுடைய உடம்பில் திருநீற்றினைப் பூசியபோது அவனுடைய நோய் நீங்கியதோடு உடம்பின் கூனும் நிமிர்ந்தது. நல்ல உடல் தோற்றத்தைப் பெற்ற பாண்டியன் அப்போதிருந்து அழகுடையவன் என்ற பொருளில் சுந்தரபாண்டியன் எனவும் அழைக்கப்பட்டான். அவன் மீண்டும் சைவ நெறியினைச் சார்ந்து, கோயிற் கதவுகளை மீண்டும் திறந்து, சிவனது வழிபாட்டினை மீண்டும் தொடங்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். தங்கள் தோல்வியினை ஒப்புக் கொள்ள விரும்பாத சமணர்கள் வேறு வழிகளில் தங்கள் சமயத்தின் பெருமையினை நிலைநாட்ட முற்பட்டனர். அவர்கள் இரண்டு சமயத்தவர்களும் தங்கள் தங்கள் சமய நெறிமுறைகள் பொறிக்கப்பட்ட பனை ஓலைகளை நெருப்பில் இடுவதென்றும் யாருடைய ஏடு எரிந்துவிடுகின்றதோ அவர்கள் தோற்றவர்களாகக் கருதப்பட வேண்டும் எனவும் கூறினர். சம்பந்தர் இதற்கு உடன்படவே இரு பாலாரின் ஏடுகளும் நெருப்பிலிடப்பட்டன. சம்பந்தர் ஏடுகள் எத்தகைய

தீங்கும் உறாதிருக்கச் சமணர் ஏடுகள் முழுதுமாக எரிந்து சாம்பலாயின. சமணர்கள் இதன் பின்னும் திருப்தியற்றவர் களாக இரு சமயத்தவர்களின் ஏடுகளையும் வைகை வெள்ளத் தில் விடவேண்டும் எனவும், யாருடைய ஏடு வெள்ளத்தை எதிர்த்துச் செல்கின்றதோ அவர்களுடைய சமயமே வென்றதாகக் கொள்ள வேண்டும் எனவும் கூறினர். இதற்குச் சம்பந்தர் ''எங்களுக்குப் பணி செய்ய எங்களிடம் பதினாறு ஆயிரம் தொண்டர்கள் உள்ளனர். பெரியோனாகிய சிவனின் பெயரை நீங்கள் இழிவு படுத்தியயோடு, அவருடைய புனிதச் சின்னங் களான திருநீற்றையும் உருத்திராட்சத்தையும் அவமதித்தீர்கள். எனவே உங்களுக்குரிய தண்டனை உங்கள் குற்றத்திற்குத் தக்கதாய் இருக்க வேண்டும்'' எனக் கூறினார். தங்கள் வெற்றி யில் தளராத நம்பிக்கை கொண்ட சமணர்கள் தாங்கள் தோல் வியுறின் தங்களைக் கழுவில் ஏற்றும்படி கூறினர். புனல் வாதம் நிகழ்ந்தது. அதில் சைவர்களின ஏடு வைகை வெள்ளத்தை எதிர்த்துச் சென்றது. சம்பந்தர் சமணர்களுக்குச் சைவ நெறியினைத் தழுவித் தப்பிப் பிழைக்க வாய்ப்பினை அளித்தார். அதன்படி சிலர் சைவராயினர். அவ்வாறு சைவரானவர்கள் எண்ணிக்கை திருநீறு முழுதும் தீர்ந்து போகும் அளவிற்கு மிகுதியாக இருந்தது. எனவே சைவர்களாக மாறாது எஞ்சி யிருந்த சமணர்கள் சூலத்தை ஒத்ததான கழுவில் ஏற்றப் பட்டனர். மகாபாரதத்தில் மாண்டவி முனிவன் மீது பொய்யாகத் திருட்டுக் குற்றம் சுமத்தப்பட்டுக் கழுவில் ஏற்றப்பட்டதாகக் கூறப்பட்டு உள்ளது. வைணவர்களின் சமயத் தலைவரான இராமானுசரும் மைசூரில் தன் கோட்பாட்டுக்கு முரண்பட்டவர் களைக் கழுவில் ஏற்றியதாகக் கூறப்படுகிறது. சம்பந்தருக்கும் சமணருக்கும் இடையே நடைபெற்றதாகக் கூறப்பட்டுள்ள நிகழ்ச்சிகள், மதுரையில் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் பன்னிரண்டு திருவிழா நிகழ்ச்சிகளில் ஐந்தில் இடம் பெற்று வருகின்றன. இச் சமயத்தில் கழுவேற்று விழா என்ற நிகழ்ச் சியில் சமணன் ஒருவனைக் குறிக்கும் ஓர் உருவம் கழுவொன்றில் அமர்த்தப்பட்டு ஊர்வலமாகத் தூக்கிச் செல்லப்படுகிறது. திருஞானசம்பந்தர் காலத்தில், சோழவந்தான் அருகே உள்ள மேலக் கழுவு, கீழ்க் கழுவு என்ற ஊர்கள் வரை மதுரையிலிருந்து

கழுமரங்கள் நடப்பட்டமையால் அந்த ஊர்கள் அப்பெயர் பெற்றன என்றதொரு வழக்கும் வழங்கி வருகின்றது.

சமணர் தொடர்பான செய்திகளை விவரமாக அறிந்து கொள்ள விரும்புபவர்களை 1901-இல் பாரிஸில் வெளியான *A. Guerinot's 'Eassai de Bibliographie Jaina'- Annales du Muse Guimet* என்ற நூலினைப் பார்க்குமாறு வேண்டுகின்றேன்.

**சமண வைசியர் - Jain Vaisya**

கொச்சியில் குடியமர்ந்துள்ள 'பாணியர்'கள் சூடிக் கொண்டுள்ள பெயர். எண்ணிக்கையில் குறைந்துள்ளவர்களான இவர்கள் வட திருவாங்கூரில் உள்ள குன்னத்தநாடு வட்டத் திலிருக்கும் கல்லுக் கோயிலுக்கு அடிக்கடி சென்று வருவதாக கூறப்படுகிறது.* அக்கோயிலுக்குப் பலமுறை சென்று வருபவர் கள் முக்தி பெறுவர் என்றும் நம்பப்படுகிறது. கோயில் அமைந் துள்ளபாறையின் மீது சில ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பிரமனின் தலை தானே தோன்றியதாகக் கூறப்படுகிறது.

**ஜக்குலர் - Jaggula**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையிலும், நெல்லூர் மாவட்டக் கையேட்டிலும் ஜக்குலர் தாழ்ந்த சாதி யினைச் சேர்ந்த பரத்தையர் எனவும் இவர்களில் பெரும்பா லோர் பலிசர் சாதியைச் சேர்ந்தவர்கள் எனவும் மாய வித்தை, நாட்டியம், நாடகம் ஆகிய தொழில்களில் இவர்கள் ஈடுபடு கின்றனர் எனவும் கூறப்பட்டுள்ளது. கிருட்டிணா மாவட்டத்தில் உள்ள தெனாலியில் ஒவ்வொரு குடும்பமும் ஒரு பெண்ணைப் பரத்தையர் தொழிலுக்கு விடுவது வழக்கம். அவள் எதிர் பாராது வரும் யாரேனும் ஒருவருக்கு வழக்கமான சடங்கு களுடன் 'மணம்' செய்விக்கப்படுவாள். சமுதாய சீர்திருத்த முயற்சிகளின் காரணமாக 1901-இல் இந்தச் சாதியைச் சேர்ந்த உறுப்பினர்கள் இனிமேல் இது போன்ற வழக்கத்தை மேற்

---

* என். சுந்தர வாரியர். இந்தியத் தொல்லியல், XXI, 1892 (Ind. Ant. XXI, 1892.)

கொள்வதில்லை என எழுத்து மூலமாக ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். ஒரு குடும்பத்தினர் இந்த ஒப்பந்தத்தை மீறி ஒரு சிறுமியைப் பரத்தையாக விட்டமையால் சாதித் தலைவன் அவர்கள் மீது வழக்குத் தொடுத்தான். பதிவுகளின்படி 1901-ஆம் ஆண்டில் இவர்கள் தங்கள் சாதிப் பெண்களைச் சிறுமியராக வீட்டில் வைத்திருக்காமல் அவர்கள் பூப்படையும் முன்பே மணம் செய்து தந்துவிட வேண்டும் எனத் தங்களுக்குள் ஒப் பந்தம் செய்து கொண்டுள்ளனர் எனத் தெரிகிறது. ''இந்தப் பெண்களின் செயல் நமக்கெல்லாம் கெட்ட பெயரைக் கொண்டு வருவதோடு அவர்கள் தொடர்பு காரணமாகத் திருமணம் புரிந்து கொண்டுள்ள பெண்களும் தவறான நடத்தையினை மேற்கொள்ள வாய்ப்பு ஏற்படுகின்றது. இப்போதிருந்து நமது சாதியைச் சேர்ந்த அனைவரும் பெண்களை மணம் செய்து தராமல் குடும்பத்தில் ஒருத்தியை இவ்வாறு பரத்தையராக விட்டுவிடும் பழக்கத்தைக் கைவிடுவதால் ஏற்படும் நன்மை தீமைகளைத் தெனாலியில் கூடி ஆலோசித்துக் கீழே கூறப் பட்டுள்ள ஓர் உடன்பாட்டிற்கு வந்துள்ளோம். நமது சாதியில் எவரேனும் பெண்கள் பூப்படையும் முன் மணம் செய்து தரத் தவறுவார்களாயின் அக் குடும்பத்தின் தலைவர்கள் நாம் சாதித் தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கும் மூவருக்கு ரூ. 500–ஐ உடன்பாட்டினை மீறி நடந்ததற்காகத் தண்டத் தொகையாகச் செலுத்த வேண்டும். இந்தத் தண்டத் தொகையினைச் சாதித் தலைவர்களுக்குத் தரத் தவறுவார்களாயின், சாதித் தலைவர் கள் வழக்கு மன்றத்தின் மூலமாக அத்தொகையினை அவர்கள் மீது வழக்குத் தொடர்ந்து வசூலித்துக் கொள்ளச் சாதித் தலைவர்களுக்கு அதிகாரம் வழங்கப்படுகின்றது. நம்முடைய இந்த உடன்படிக்கையில் பங்கு பெறாது, பெண்களை மணம் செய்விக்காது வைத்திருக்கும் குடும்பத்தினரோடு உண்ண, கூடி வாழ, மண உறவு கொள்ள நம்முள் எவரும் முன்வராது அவர்களை ஒதுக்கி வைத்தல் வேண்டும். இப்பொழுது இந்த உடன்படிக்கையில் சேர்ந்து கொண்டு பின்னர் இதனை மீறி நடப்பவர்களையும் நாம் இதுபோலவே ஒதுக்கி வைத்தல் வேண்டும். நம்மில் யாரேனும் மேலே கூறிய கடைசி இரண்டு விதிகளையும் மீறி நடப்போம் ஆனால் நாம் சாதித் தலைவர்

களுக்கு ரூ. 50ஐ தண்டத் தொகை செலுத்த வேண்டும்". என்பதே அவர்கள் செய்து கொண்ட உடன்பாட்டின் விவரம்.

## ஜலகடுகு - Jalagadugu

திரு சி.பி. பிரெளன் தெலுங்கு அகராதியில் இவர்களை, "சாக்கடைகளிலும் பொற்கொல்லர் வீட்டுக் குப்பையிலும் தங்கத்தைத் தேடும் சாதியார்" எனக் கூறியுள்ளார். ஆறுகள், ஓடைகள் இவற்றின் படுகைகளில் தங்கத்தைச் சலித்து எடுப்பதின் மூலமும் இவர்கள் வாழ்க்கை நடத்துகின்றனர். இச்சாதியின் பெயர் தண்ணீர் எனப் பொருள்படும் ஜல என்பதும் சலித்து எடுத்தல் எனப் பொருள்படும் கடுகு என்பதும் இணைந்து அமைந்துள்ளது. இதற்கு இணையான ஜலகார என்ற சாதிப் பிரிவு கப்பேரர்களின் ஓர் உட்பிரிவாகப் பெல்லாரி மாவட்ட விவரக் குறிப்பில் பதியப்பட்டுள்ளது.

சென்னை நகரத்தில் தங்கத்தைச் சலித்தெடுப்பவர்கள் நகைக் கடைக்கு முன்னுள்ள துர்நாற்றம் வீசும் சாக்கடைகளில் பணிசெய்துகொண்டிருப்பதைக் காணலாம். மாநகராட்சியின் நலத்துறை அலுவலர் பொதுச் சாக்கடைகளைத் தடுத்து வைக்கும் இவர்களைத் தான் விரட்டி அடிப்பதோடு இவர்களுடைய பானைகளையும் உடைத்துப் போடுவதாக என்னிடம் நேரில் கூறினார்.

சென்னையைச் சேர்ந்த பொன் கொழிப்பவர்களைப் பற்றிய பின்வரும் குறிப்புக்கு நான் முனைவர் கே. டி. மாத்யூ அவர்களுக்குக் கடப்பாடுடையேன். "நகரத்தில் இத்தொழிலைச் சில ஆண்டுகளுக்கு முன் வரை ஒட்டர்களே தங்கள் தனி உரிமையாக மேற்கொண்டிருந்தனர். அதன் பின் மற்ற தாழ்ந்த சாதியாரும் இதில் ஈடுபடலாயினர். சென்னை நகரத்தில் தற்பொழுது பல ஆயிரம் ஒட்டர்கள் உள்ளனர். பழுதுபட்ட சாலை, கட்டிடம் ஆகியவற்றைப் பாதுகாக்கும் கூலி வேலையே இவர்களுடைய முக்கிய தொழிலாக உள்ளது. பொன் கொழிக்கும் பணியினை வீட்டிலிருந்தபடியே பெண்கள் செய்கின்றனர். முதியவர்களும் ஆண்களும் தங்கள் ஓய்வு நேரத்தில் இப்

பணியினை மேற்கொள்கின்றனர். ஒரு மாதத்துக்கு ஒரு ரூபாய் முதல் பத்து ரூபாய் வரையான கட்டணம் செலுத்திப் பொற் கொல்லர் கடைகளிலிருந்து சாம்பல், குப்பை, கூளம் ஆகிய வற்றினை வாரிக் கொள்ளும் உரிமையினைப் பெற்று அவற் றைக் கூடையில் அள்ளிக் கொண்டு வந்து இவர்கள் தங்கள் குடிசைக்கு அருகில் அவற்றைக் குவித்து வைப்பர். நிறைய பொற் கொல்லர் கடைகள் உள்ள தெருக்களில் ஓடும் சாக்கடைச் சேற்றையும் இதே போல வாரி வந்து குவித்து வைப்பர். இதற் காக மாநகராட்சி ஊழியனுக்குச் சிறு தொகையினை அன்பளிப் பாகத் தருவது போதுமானது. இவ்வாறு சேகரிக்கப்படுபவை சில நாள்களிலிலிருந்து சிலமாதங்கள் வரை அப்படியே விடப் படுகின்றது. பொன்னைக் கொழித்து எடுக்க உதவும் வகையில் இவ்வாறு கொஞ்ச காலம் விட்டு வைப்பது இன்றியமையாதது எனக் கூறப்படுகின்றது. குப்பை கூளங்களைக் குவித்து வைக் காமல் கொண்டு வந்தவுடன் கொழித்தால் கிடைக்கக்கூடிய பொன்னின் அளவில் மிகுந்த இழப்பு ஏற்படும். இக் குவியலிலிருந்து ஒரு மண்வெட்டியால் வார முடியும் அளவு குப்பையை எடுத்துக் குவியலுக்கு அருகே படகு உருவிலான ஒரு புறம் திறப்பாக உள்ள குவியலுக்கு எதிரே கழுவும் நீர் ஓடும்படியாக வைக்கப்பட்டுள்ள கொப்பரையிலிட்டுத் தண்ணீர் விட்டுக் கழுவ, கொப்பரை வழியே ஓடும் நீர் அதன்முன் ஒரு சிறு குட்டையாகத் தேங்கி நிற்கும். அவ்வாறு தேங்கும் நீரை ஒரு மண் பானையில் சேகரித்துக் கொப்பரையிலுள்ள குப்பை மீது ஊற்றியபடி அதனை மற்றொரு கையால் தொடர்ந்து ஆட்டியபடி இருப்பர். கனமில்லாத குப்பை கூளங்கள் இவ்வா றாக அந்தக் கொப்பரையை விட்டு வெளியேற்றப்படும். கன மான கற்கள் முதலானவை அவ்வப்போது கையால் பொறுக்கி வெளியே எறியப்படும். தொட்டியில் ஒரு சில கைப்பிடி அளவு கருமணல் சேரும்வரை இவ்வாறு செய்தபடி இருப்பர். அந்த அளவு கருமணல் சேர்ந்தவுடன் அதனோடு கொஞ்சம் பாத ரசத்தை விட்டு ஒரிரு மணித்துளிகள் மிக வேகமாகத் தேய்ப்பர். இவ்வாறு பொன் கொழிக்கும் செயல் தொடர்ந்து நடைபெறும். அச்சமயம் பாதரசத் துளிகள் தப்பாதபடி பார்த்துக் கொள்வர். இறுதியில் உலோகத் துகள்கள் ஒட்டிக் கொண்டிருக்கும்

பாதரசம் ஓர் உடைந்த பானை ஓட்டில் சேகரிக்கப்படும். இவ்வாறு சேகரிக்கப்பட்ட உலோகத் துகள்களோடு கூடிய பாதரசத்தைப் பின்னர் நல்ல நீரால் கழுவித் தூய்மைப்படுத்தி இரண்டு அடுக்கினை உடைய கந்தல் துணியாலான பையில் இடுவர். அதன்பின் அதனை மெதுவாக அழுத்திப் பிழிந்து பாதரசம் தனியே பிரிந்து கீழே உள்ள சட்டியில் விழும்படி செய்வர். பையினுள் இப்பொழுது மிகச் சிறிய சப்பட்டையான கறுப்பு நிறப் பொருள் எஞ்சி நிற்கும். அதனைப் பத்திரமாக எடுத்து ஈரமற்ற ஒரு பானையில் வைத்துக் கொள்வர். மூன்றில் ஒரு பங்கு தேக்கரண்டி அளவு இத்தகைய கறுப்புப் பொருள் சேரும்வரை பொன் கொழிக்கும் பணி தொடர்ந்து நடை பெறும். பின்னர் அதனைப் பொடி செய்த உப்புடனும் செங் கல் தூளுடனும் கலந்து உடைந்த மண்சட்டி ஓட்டில் இட்டு இன் னொரு ஓட்டால் மூடுவர். இதனை ஒரு பெரிய பாத்திரத்தில் வைத்து மேலும் கீழும எருவாமுட்டியை அடுக்கி நெருப்புப் பற்ற வைத்து அந்தக் கறுப்புப் பொருள் உருகும்வரை எரிய விடுவர். அதன்பின் அதனைப் பத்திரமாக எடுத்துப் பொரி கத்தோடு கலந்து நல்ல நிலக்கரித் துண்டில் துளை உண்டாக்கி அதனுள் வைத்து நெருப்பிட்டு, நல்ல தங்கம் கறுப்புப் பொரு ளிலிருந்து உருகிப் பிரியும்வரை ஒரு மூங்கில் குழாய் கொண்டோ நாணல் குழாய் கொண்டோ ஊதுவர். பிறகு நெருப்பினைச் சட்டென அணைத்துத் தங்கத் தகட்டினைப் பிரித்துத் தனியே எடுப்பர்.

## ஜாலாரி – Jālari

ஜாலாரிகள் கஞ்சம், விசாகப்பட்டினம் மாவட்டங்களைச் சேர்ந்த தெலுங்கு பேசும் மீனவர்களும், பல்லக்குச் சுமப்பவர் களும், பயிர்த்தொழிலாளரும் ஆவர். வலை எனப் பொருள் படும் ஜால என்ற சொல்லில் இருந்து இப்பெயர் வந்ததாகத் திரு சி. ஹயவதன ராவ் கூறுகின்றார். இவர்களுள் சிலர் நன் னீரில் மீன் பிடிப்பவர்கள். மற்றவர்கள் விசிறு வலையால் கடற் கரையிலும், கடலிலும் மீன் பிடிப்பவர்கள். மீன் பிடிக்கும் சாதியாரான கப்பேரரில் ஒரு பிரிவினர் கங்கைமக்களு என அழைக்கப்படுவதைப் போல, இவர்களும் கங்கை வம்சத்தார்

என்ற பெயரைத் தாங்கியுள்ளனர். சாதி அமைப்பிலும், சடங்குகளை நிகழ்த்துதல் முதலியவற்றிலும் ஜாலாரிகள் மீலர்களைப் பெரிதும் ஒத்தவர்களாக உள்ளனர். கஞ்சத்தைச் சேர்ந்த ஒரியர்களால் இவர்கள் நொளியர் என அழைக்கப்படுகின்றனர் மற்ற தெலுங்கர்களிடையே உள்ளதைப் போலவே இவர்களிடையேயும் இல்லப் பெயர்கள் உள்ளன. இவர்கள் சாதியைச் சேர்ந்த பெண்கள் தாழ்ந்த சாதி ஒரியப் பெண்களைப் போலப் பித்தளை வளையல்களை அணியும் வழக்கம் இல்லை.

ஜாலாரிகளிடையே பன்னிரண்டு கம்பத்தார், ஏழு கம்பத்தார் என்ற இரண்டு அகமணக்கட்டுப்பாடுகள் உடைய உட்பிரிவுகள் உள்ளன. இவை இவர்கள் மண நிகழ்ச்சிகளின்போது பந்தலுக்கு நடும் கம்பங்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் அமைந்தவை. முன்னவர் பின்னவரை விடத் தங்களை உயர்ந்தவர்களாகக் கருதுகின்றனர். இதற்கு இவர்கள் கூறும் காரணம் ஏழு கம்பத்தார் முறையற்ற மண உறவுகளின் வழிப் பிறந்தவர்கள் அல்லது சாதியில் பின்னர் சேர்த்துக் கொள்ளப்பட்டவர்கள் ஆவதே ஆகும் என்பர்.

மற்ற தெலுங்குச் சாதியாரைப் போலவே ஜாலாரிகளுக்கும் சாதிப் பஞ்சாயத்தும் அதற்குப் பிள்ளா என்ற சாதித் தலைவனும் உளன். ஒரியர்களைப் பார்த்து இவர்கள் தொலொபேகரா என்ற உதவிச் சாதித் தலைவனை ஏற்படுத்திக் கொண்டிருப்பதோடு வழக்கமான சாதிப் பணியாளர்களையும் பெற்றுள்ளனர்.

பூப்பு நீராட்டல், திருமணம், சாவு தொடர்பான சடங்குகளை இவர்கள் வாதர்களையும் பள்ளேகளையும் போலவே நடத்துகின்றனர். மண உறவு தொடர்பான தடைகள் தெலுங்கர்களுடையதை ஒத்ததாக உள்ளன. எனினும் ஒரு கைம்பெண் இறந்துபோன அவள் கணவனுடைய இளையவனை மணந்து கொள்ள அனுமதிக்கப்படுகிறாள். மணச் சடங்குகள் மூன்று நாள்கள் வரை நீடிக்கும். முதலாம் நாள் பால்கம்பம் நட்டுப் பந்தல் அமைப்பர். ஒவ்வொரு மணத்திற்கும் பந்தல் அமைக்கப் பட்டவுடன் பெத்தபட்டனம், விசாகப்பட்டினம், பிம்லி படம்,

ரேவல் பட்டினம் ஆகிய நான்கு ஊர்களையும் சேர்ந்த முகவர்கள் அழைக்கப்பட்டு அவர்களுக்கு முதல் வெற்றிலை பாக்கு வழங்க வேண்டும் என்பது விதி. இந்த நான்கு ஊராருள்ளும் பெத்த பட்டினத்தைச் சேர்ந்தவர்களே முதலில் அழைக்கப்பட்டு மரியாதை செய்யப்பட வேண்டும். முகவர் வருகை தராத போது அந்த ஊரைச் சேர்ந்த யாரேனும் ஒருவருக்கேனும் அந்த மரியாதை செலுத்தப்பட வேண்டும். மற்ற நகரங்களைச் சேர்ந்த முகவர்கள் பின்வரும் குலப் பிரிவினராய் இருத்தல் வேண்டும் என்பது விதி:-

| | |
|---|---|
| விசாகப்பட்டினம் | புகுரி குலம் |
| ரேவல்பட்டினம் | ஜொன்ன குலம் |
| பிமிலிபடம் | சுந்தர குலம் |

ஜாலாரிகள் இவ்வாறு மேற்கூறிய ஊராருக்குச் சிறப்புச் செய்யப்படுவதற்கான காரணத்தை விளக்க அறியாதவர்களாக உள்ளனர். பெத்த பட்டனம் இவர்கள் முதலில் வாழ்ந்து வந்த இடமாக இருக்கலாம். அங்கிருந்து மேற்குறிப்பிட்ட குலங்கள் வேறு ஊர்களுக்குச் சென்று குடியேறி இருக்கலாம். மணச் சடங்கின் இரண்டாம் நாள் சத்தமானம் எனப்படும் தாலி அணிவிக்கப்படும் சடங்கு நிகழ்த்தப்படுகிறது. மணமகன் தெருக்களின் வழியே ஊர்வலமாகச் சென்றபின் மண நிகழ்ச்சி நடைபெறப் போகும் இல்லத்தை அடைவான். அந்த வீட்டு வாசலில் மணமகளின் தாய்மாமன் குறுக்காக நீட்டிய தன் கரங்களில் இரண்டு பாத்திரங்களை ஏந்தியபடி நிற்பான். அவற்றுள் ஒன்றில் தண்ணீரும், மற்றதில் வெல்லப் பானகமும் இருக்கும். மணமகன் வெல்லப் பானகம் உள்ள பாத்திரத்தை அடையாளங் கண்டு கூறிய பின்பே அந்த வீட்டினுள் நுழைய அனுமதிக்கப்படுவான். அவன் அதனைச் சரியாகக் கூறவில்லையாயின் ஒரு தொகையினை அபராதமாகச் செலுத்திய பின்னரே ... வீட்டினுள் நுழையலாம். மணமகன் மணப்பந்... ...ருங்கும் அவனுக்கும் போது மணம் செய்து கொண்ட பெண்... கழியினைப் பிடித்த மணப் பந்தலுக்கும் இடையே ... அந்தக் கழியினைச் சுற்றி படி நிற்பர். ஒரு புது ... ...டும். இந்நிகழ்ச்சி நடைபெறும் மும்முறை எடுத்...

போது மணமகள் வந்து மணமகனோடு சேர்ந்து கொள்வாள். மணமக்கள் மேற்கட்டிபோல் பிடிக்கப்பட்ட துணியின் கீழ் நடந்து சென்று மணப்பந்தலை அடைவர். இச்சடங்கு மாலை நேரத்தில் நடைபெறும். தாலி கட்டும் நிகழ்ச்சி அடுத்து இரவில் நிகழும். மண ஊர்வலம் தொடர்பான சுவையான நிகழ்ச்சி ஒன்று உள்ளது. தெகமெத்லு (தோள் கழி) எனப்படும் இரு பக்கமும் இரு கூடைகள் கட்டப்பட்ட கழி ஒன்று தூக்கிச் செல்லப்படும். இதில் ஒரு பக்கத்தில் உள்ள கூடையில் சில சல்லடைகளும் சில சிறு கூடைகளும் வைக்கப்பட்டிருக்கும். இன்னொரு பக்கம் உள்ள கூடையில் ஒன்றோ அதற்கு மேலோ பூனைகள் வைக்கப்பட்டிருக்கும். தங்களுடைய திருமணச் சடங்குகளுக்கு ஜாலாரிகளுடைய திருமணச் சடங்குகளுக்கும் இடையே உள்ள வேறுபாட்டினைப் பற்றி வாதர்களிடம் கேட்டால் அவர்கள் இந்த தெகமெத்லு கழியினைத் தூக்கிச் செல்லும் சடங்கு பற்றிக் குறிப்பிடுவர். மற்ற சாதியார் இச்சடங்கு பற்றிக் கேலி செய்வதால் இது மெல்லக் கைவிடப்பட்டு வருகின்றது.

ஜாலாரிகள் பெண்கள் சிறுமிகளாக இருக்கும் போதே அவர்களுக்கு மணம் செய்து விடுகின்றனர். இதற்கான ஒரு காரணமான அவர்கள் மணச் சடங்குகளின்போது மணமானவர்களுக்கு வரும் வருவாயினைக் குறிப்பிடுவர். திருமணம் நடைபெறும் இல்லங்களுக்கு இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மணமான கணவனும் மனைவியும் மணமக்களுக்கு அலங்காரம், நலங்கு, ஆரத்தி முதலிய சடங்குகளில் உதவ அழைக்கப்படுவர். இவர்களுக்கு இவர்கள் செய்யும் பணிக்காக அன்பளிப்புகள் வழங்கப்படும். குழந்தை மணத்தின் செல்வாக்குக்கு இது ஒரு காரணமாகும். சிதம்பரம் தீட்சிதர் பிராமணர்கள்... களுக்குக் ... இதே போன்ற பழக்கம் உள்ளது. மணமான ஆண் உள்ள உரிமையும் தொடர்பான நிகழ்ச்சிகளில் பங்குகொள்ள உரிமையும் காரணமாக... வருமானத்தில் பங்குபெற உள்ள உடையவர்களாக இருக்கும்போ... ஏழு அல்லது எட்டு வயதுனர். ஜாலாரிகளின் திருமணம் ஒவ்வொரு... ...விக்கப்படுகின்ற ...ச் சேர்ந்

தவர்களுக்குச் சோறு போடுவதோடுகூடப் பட்டினத்திலிருந்து வந்துள்ள முகவர்களுக்கு ஒவ்வொரு ரூபாயும், சாதித் தலைவனுக்கும் அவன் உதவியாளனுக்கும் பன்னிரண்டு 'அணாவும், மாலர்களுக்கு மூன்று ரூபாயும் வழங்கப்படவேண்டும்.

பிற தெலுங்குச் சாதியாரைப் போலவே ஜாலாரிகளிடையே இல்லப் பெயர்கள் உள்ளன. இவை வாதர்களின் இல்லப் பெயர்களை ஒத்தவை. அவற்றுள் ஜொன்ன, புகுரி என்பனவே மிகுந்த வழக்குடையவை. சமயம் தொடர்பான நடைமுறைகளில் ஜாலாரிகள் வாதர்களையே பின்பற்றுகின்றனர்.

கஞ்சம் கடற்கரையைச் சார்ந்த கோபால்பூரிலும், பிறவிடங்களிலும் மீனவர் சாதியார் வழிபடுகின்ற மண்ணாலும் மரத்தாலும் ஆன உருவங்கள் சென்னை அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன. திரு ஜெ.டி, எ.சி.ரெய்ல்லி இது தொடர்பாக எனக்குப் பின்வருமாறு எழுதியுள்ளார். இந்த உருவங்கள் மீனவர்கள் வணங்கும் முக்கியமான தெய்வங்களுடையவை. கோபால்பூர் மீனவர்களுக்காக இதனைச் செய்யும் குயவர்களையும், தச்சர்களையும் கொண்டு பெர்கம்பூர் வட்ட ஆட்சியர் இவைகளைச் செய்வித்தார். நான் பலவிடங்களில் மீனவர் கோயில்களைப் பார்த்தேன். குடும்பங்களுக்கெனத் தனித்தனியே கோயில்கள் இருப்பதாகத் தெரிகின்றது. அலங்கார வேலைப்பாடு செய்யப்பட்டுள்ள பெரிய பானைகளே சில இடங்களில் கோயில்களாக உள்ளன. ஒரு புறத்தில் மட்டும் திறப்புடையதாகத் தலைகுப்புற அவை கவிழ்த்து வைக்கப்பட்டனவாக உள்ளன. மற்றவை செங்கல்லாலும் சுண்ணாம்பாலும் அமைந்தவை. நான் பார்த்த கோயில்கள் அனைத்தின் வாயில்களும் திறப்புகளும் கடலை நோக்கியனவாகவே இருந்தன. மீன்பிடிக்கப் புறப்படுமுன் வழிபாடு செய்யப்படுவதற்கும் குறிப்பாக நோய்களிலிருந்து காத்து உதவுவதற்குமான மண் உருவங்கள் ஒரு வகை, இறந்து போன முதாதையர்களின் உருவங்களாகக் களிமண் உருவங்களைப் போலவே கற்பனை நயத்தோடு அமைந்த மர உருவங்கள் மற்றுமொரு வகை என இரண்டு வகை உருவங்கள் இக் கோயில்களில் இடம் பெற்றுள்ளன. கடவுளரின் உருவங்களையும் மூதாதையரின்

உருவங்களையும் ஒரே கோயிலில் வைத்து வழிபடுகின்றனர். நூற்றுக்கணக்கான கடவுளர்களிலிருந்து ஒருவன் தனக்கு விருப்பமான கடவுளர்களைத் தேர்வு செய்துகொள்ளலாம். தங்கள் விருப்பத்தின் அடிப்படையிலும் குடும்பத்தின் பழக்கத்தின் அடிப்படையிலுமே தேர்வுகளைச்செய்து கொள் கின்றனர். நான் அனுப்பியுள்ள உருவங்கள் கோபால் பூருக்கு அருகே உள்ள வேங்கடராய பள்ளிக் குயவனா ரால் செய்யப்பட்டு உப்புலப்பட்டி தச்சனால் வண்ணம் தீட்டப்பட்டவை. கோபால்பூர் பயணிகள் விடுதியில் நான் அனுப்பிய உருவங்களை வட்ட ஆட்சியர் பார்த்துக் கொண் டிருந்தபோது, அறுபது எழுபது மீனவர்கள் தங்கள் தெய்வங் களை அப்புறப்படுத்துவதற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர் அந்த வட்ட ஆட்சியர் அவர்களிடம் தங்கள் தெய்வங்களிடம் அவர்கள் கொண்டுள்ள பக்தியினை அரசு கேள்விப்பட்டு அத் தெய்வங் களில் சிலவற்றைச் சென்னையில் வைத்துக் கொள்ள அரசு விரும்புவதாகக் கூறி அவர்களை அமைதியடையச் செய்ததாக எனக்குத் தெரிவித்தார். அனுப்பப்பட்டுள்ள மண் உருவங் களின் விவரங்கள் வருமாறு:-

பெங்காளி பாபு - தலையில் தொப்பி அணிந்து, கறுப்புக் குதிரை மேல் வீற்றிருக்கும் உருவம். மீனவர்களை வாழ்த்தி அவர்களுக்கு நிறைய மீன் கிடைக்க அருள்வதோடு, மீன் பிடிக்கும்போது அவர்களுக்கு ஏற்படும் ஆபத்துக்களிலிருந்தும் காப்பது.

சாமளம்மா- சிவப்புப் பாவாடையும் பச்சைக் கோட்டும் அணிந்துள்ள இது மீனவர்களைக் காய்ச்சலிலிருந்து காப்பது.

ராசம்மா - வலது கையில் வாளேந்திக் கறுப்பு நிற யானை மீது வீற்றிருக்கும் பெண் தெய்வம். மலடிகளுக்கு மகப் பேற்றினை அருள்வதோடு, மீன் பிடிக்கச் செல்லும் தன் பக்தர் களுக்கு நிறைய மீன் கிடைக்கவும் அருள்வாள்.

யெரெனம்மா – வலது கையில் வாளுடன் வெள்ளைக் குதிரை மீது வீற்றிருப்பாள். மீனவர்களைக் கடலில் மூழ்கா மலும் பெரிய மீன்களுக்குப் பலியாகாமலும் காப்பவள்.

பாகீரதம்மா – எட்டு அல்லது பன்னிரண்டு கைகளோடு யானை மீது வீற்றிருப்பவள். இரவில் மீன் பிடிக்கும் மீனவர்களுக்கு உதவுகின்றாள். காலரா, வயிற்றுப் போக்கு முதலான குடல் நோய்களிலிருந்து அவர்களைக் காப்பவள்.

நூலகம்மா – சிவப்புச் சட்டையும் பச்சைப் பாவாடையும் அணிந்து மீனவர் வகுப்பாரைப் பெரியம்மையிலிருந்து காப்பவள்.

ஒரோசொண்டி அம்மவாரு - மீனவர் படகுகள் மூழ்காமலும், பழுதுபடாமலும் காப்பவள்.

பாகதேவி - புலிமீது அமர்ந்தவளாக உள்ள இவள் மீனவர்களைக் காலராவிலிருந்து காப்பவள்.

வெய்யி கண்ணுல அம்மவாரு - ஆயிரங்கண்ணுடையாள் எனப்படும் இவள் பல துளைகளை உடைய பானையினுள் எள் எண்ணெய் விளக்கேற்றி வைத்து அதனையே இவள் உருவமாக வழிபடப்படுகின்றாள். மீனவர்களுடைய நலங்களைப் பேணுகின்றவள்.

**ஜாலி - Jāli (*Acacia arabica*)**

கருவேல் எனப் பொருள்படும் இது குர்ணிகளின் ஒரு கோத்திரம்.

**ஜல்லி - Jalli**

காளைகளின் கழுத்திலும், கொம்புகளிலும் அணிவிக்கப்படும் பனையோலையால் ஆன குஞ்சரங்கள் எனப் பொருள்படும் இது ஜோகிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கெவுட்டோக்களின் ஓர் உட்பிரிவாகவும் இப்பெயர் காணப்படுகிறது.

**ஜாம்பவர் – Jāmbava**

மாதிகர்களுக்குரிய மற்றுமொரு பெயர். ஆதி ஜம்பவாடு

என்ற முனிவரின் வழியில் வந்தவர்கள் என இவர்கள் தங்களைக் கூறிக் கொள்கின்றனர்.

ஜம்பு - Jambu (*Eugenia Jambolana*)

நாவல் மரம் எனப் பொருள்படும் இது ஒட்டேக்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம்.

ஜாம்புவார் – Jāmbuvar (a monkey king with a bear's face)

கரடித் தலையோடு கூடிய குரங்கைக் குறிக்கும் இது கொண்டையங்கோட்டை மறவர்களின் புறமணக் கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

சமுக்காளவாலா - Jamkhānvāla (carpet - maker)

பட்டு நூல்காரர்களுக்கும் பட்வேகாரர்களுக்கும் உரிய தொழில் தொடர்பான பெயர்.

ஜம்மி - Jammi (*Prospopis spicigera*)

கோல்லர்களின் ஒரு கோத்திரம். இந்தப் பிரிவைச் சேர்ந்தவர்கள் இம்மரத்தை (வன்னி மரம்) பயன்படுத்துவதில்லை. இது செம்பாடிகளின் கோத்திரம் ஒன்றின் பெயருமாகும். இச்சாதியைச் சேர்ந்தவர்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கூரப்ப எனக் குலதெய்வத்தின் பெயரை வைத்து அவர்களுக்கு ஐந்தோ, ஏழோ, ஒன்பதோ வயதாகும்போது ஒரு வன்னி மரத்தடிக்கு அழைத்துச்சென்று அவர்களின் தலையை மொட்டையடித்து அம்மரத்திற்குப் பொங்கலிட்டு வழிபாடு செய்வர். ஜம்மி அல்லது சாமி மரம் என அழைக்கப்படும் இது இந்தியா முழுவதும் புனிதமானதாகக் கருதப்படுகிறது. சமயப் பற்றுடைய இந்துக்கள் இதனைக் கடக்கும்போது இதனைச் சுற்றி வலமாக வந்து, "சாமி மரம் பாவங்களைப் போக்குகின்றது. பகைவர்களை அழிக்கின்றது. இது அர்ச்சுனனுடைய வில்களையும் அம்புகளையும் தாங்கி நின்றது. இராமன் இதனைக் கண்ட அளவிலேயே மிகவும் மகிழ்ந்தான்" என்று பொருள்படும் வடமொழி மந்திரத்தைக் கூறித் துதிப்பர்.

**சணப்பர் - Janappan**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் திரு டபிள்யூ. பிரான்சிஸ் சணப்பர்களைப் பற்றி, "இவர்கள் முதலில் பலிசர்களின் ஓர் உட்பிரிவினராய் இருந்தவர்கள். இப்பொழுது ஒரு தனிச் சாதியாக வளர்ந்துள்ளனர். சணப்பர் என இவர்கள் அழைக்கப்படுவதன் காரணம் சணப்பு நாரி லிருந்து கோணிப்பை தயாரிக்கும் தொழிலில் இவர்கள் ஈடு பட்டிருப்பதுதான். தமிழில் இவர்கள் சலுப்ப செட்டிகள் என அழைக்கப்படுகின்றனர். சலுப்பன் சணப்பன் என்பதன் தமிழ் வடிவமாகும். இவர்களில் சிலர் தங்களைத் தேசாயி எனவும் தேசாதிபதிகள் (நாட்டை ஆள்பவர்கள்) எனவும் அழைத்துக் கொள்கின்றனர். இவர்கள் பூணூல் அணிவதில்லை. இவர்கள் பொதுவாகத் தெலுங்கே பேசுகின்றனர் எனினும் சென்னையில் வாழும் ஒரு பிரிவினைச் சேர்ந்தவர்கள் வீட்டுப் பெண்கள் தமிழ் பேசுகின்றனர். இப்பெண்கள் சமயச் சடங்குகளில் பங்கு கொள்ள அனுமதிக்கப்படாது விலக்கி வைக்கப்படுவதையும் இத்தோடு ஒன்றாக எண்ணிப் பார்க்கும்போது இவர்கள் முதலில் வேறு சாதியைச் சேர்ந்தவர்களாக இருந்தவர்களோ என எண்ண வேண்டியுள்ளது" எனக் கூறியுள்ளார்.

தென் ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் தென் ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த சணப்பர்களைப் பற்றித் திரு. எச்.எ. ஸ்டுவர்ட் குறிப்பிட்டுள்ளதாவது:- "நகரங்களிலும் ஊர்ப் புறங்களிலும் தலைச்சுமையாகப் பொருள்களைத் தூக்கிச்சென்று கூவி விற்பவர்கள் இவர்கள். முதலில் சணப்பிலிருந்து கோணிப் பை தயாரிப்பாளர்களாக இருந்ததால் இவர்கள் இப்பெயர் பெற்றனர். தற்போது இவர்கள் தாசரிகள் எனப்படும் சமயச் சின்னந் தாங்கிய இரவலர்களாகவும், மிட்டாய் விற்பவர்களா கவும், மேனாட்டுத் துணிகளையும் பிற பொருள்களையும் கூவி விற்பவர்களாகவும் உள்ளனர். இவர்கள் இறுதியில் கூறிய துணி வியாபாரிகள் என்ற உயர்நிலையை அடையும்போது தங்களைப் பலிசர் என அழைத்துக் கொள்கின்றனர். தெலுங்கு மொழி யினைப் பேசும் இவர்கள் செட்டி என்ற பட்டப்பெயரினைத் தரிக்கின்றனர். இவர்கள் பிரமன் செய்த யாகத்திலிருந்து

தோன்றியதாகவும், அவ்வாறு தோன்றிய இவர்கள் முன்னோனை வணிகர்கள் தங்கள் பொருட்களை எடுத்துச் செல்ல ஏற்றதொரு வழியினைக் கண்டு கூறும்படி கேட்டுக் கொண்டதாகவும், அவன் பிரமன் யாகத்திலிருந்து சில விதைகளைப் பெற்று விதைக்க அது சணப்புச் செடியாகத் தோன்றி வளர, அதிலிருந்து அவன் கோணிப்பையினைத் தயாரித்ததாகவும் இவர்களிடையே ஒரு கதை வழங்கி வருகின்றது. சணப்பச் செட்டிகள் தொழில் திறன் வாய்ந்தவர்கள். குடியாத்தம் மாட்டுச் சந்தையிலும் மற்ற இடங்களிலும் இவர்கள் மாட்டுத் தரகர்களாகப் பணிபுரிகின்றனர்.''

சணப்பர், தங்களுக்கிடையே இருபத்தினான்கு கோத்திரங்கள் உள்ளதாகக் கூறுகின்றனர். இவை பதினாறும் எட்டுமாக இரண்டு பெரும் பிரிவுகளாக அமைந்துள்ளன. ஒரே பிரிவினைச் சேர்ந்தவர்களிடையேயான மண உறவுகள் அனுமதிக்கப்படுவதில்லை. பதினாறு கோத்திரப் பிரிவினர் எட்டு கோத்திரப் பிரிவினரோடும், எட்டுக் கோத்திரப் பிரிவினர் பதினாறு கோத்திரப் பிரிவினரோடும் மண உறவுகள் கொள்ளலாம்.

இவர்களுடைய கோத்திரங்களின் பெயர்கள் சில வருமாறு:-

| | |
|---|---|
| வாசவ | பிள்ளிவங்கரவன் |
| வம்மெ | மக்கிடுவன் |
| மும்முடி | தள்ளேலன் |
| பிலிகர | செண்டகிரி |
| வதிய | மாடலவன் |
| தொண்ட | முக்கண்ட |
| கோல | |

தெலுங்குப் பகுதியைச் சேர்ந்த சணப்பர்களும் தங்களிடையே இருபத்தினான்கு கோத்திரங்கள் மட்டுமே உள்ளதாகக் கூறுகின்றனர். இவற்றுள் சில குல மரபுச் சின்னங்களின் பண்புகளைக் கொண்டவை. கப்பல (தவளை) கோத்திரத்தைச் சேர்ந்தவர்களின் குடும்பத்தைச் சேர்ந்தவர்களில் சிலர் ஒருமுறை மீனுக்குப் பதிலாக நிறையத் தவளைகளைப் பிடிக்க நேர்ந்தமையால் தவளைக் கோத்திரம் எனப் பெயர்

பெற்றனர். அதன்பின் இக்கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் தவளைகளுக்குத் தீங்கு இழைப்பதில்லை. தொண்ட (கோவை) கோத்திரத்தை அல்லது தொண்ட மகரிஷி கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் தொண்டை (*Cephalandra indica*) பழத்தையோ இலைகளையோ பயன்படுத்துவதில்லை. இந்தச் செடியின் பழம் இந்தியர்களின் காய்கறிகளுள் பெருவழக்கினது. இதே போல முக்கண்ட குலத்தவர்கள் பாகல் (*Momordica Charantia*) காயினைப் பயன்படுத்துவதில்லை. வம்மெ கோத்திரத்தினர் பாம்பாடே என்னும் மீன் வகையினைப் பயன்படுத்துவதில்லை. இக் கோத்திரத்தினர் தங்கள் முன்னோர்களில் சிலர் திருமணப் பானையில் நீரெடுக்கச் சென்றபோது இந்த இன மீன்கள் அப்பானையில் தண்ணீரோடு நிறையப் புகுந்து கொண்டதே இதற்குக் காரணம் என்பர். இதே காரணத்திற்காகக் கோல கோத்திரத்தினர் கோலசி வகை மீன்களை உண்பதில்லை.

தங்கள் திருமணச் சடங்குகளின்போது தெலுங்குப் பகுதியில் வாழ்பவர்கள் புராண வழிப்பட்ட மரபுகளையும், தமிழ்நாட்டில் தங்கி வாழ்பவர்கள் அப்பகுதிக்குரிய மரபுகளையும் பின்பற்றுகின்றனர். எனினும் இவர்களுடைய திருமணச் சடங்குகளுள் குறிப்பிட்டுக் கூறத்தக்க சுவையான சில கூறுகள் உள்ளன. மண உறுதிப்பாட்டுக்கான நாளன்று கூடியுள்ளவர்கள் பல்லி சொல்லும் பலனைக் கேட்பதற்காக அமைதியாகக் காத்திருப்பர். அவ்வாறு பல்லியின் சொல் கேட்பது நல்ல அறிகுறியாகக் கருதப்படுவதோடு பல்லி சொல்லவில்லையாயின் அந்த மண உறவினை மேற்கொள்ளாது கைவிடுவர் என்றும் கூறப்படுகிறது. பல்லி சொல்லும் சகுனம் நல்லதாக அமையின் ஒன்பது அல்லது பன்னிரண்டு வகைத் தானியங்கள் அடங்கிய ஒரு மூட்டையினை மணமகன் தந்தை மணமகள் தந்தையிடம் தருவான். இது பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு மணம் முடிந்த பல நாள்களுக்குப் பின் ஆராய்ந்து பார்க்கப்படும். தானியங்களும் பருப்பு வகைகளும் நல்ல நிலையில் இருக்குமானால் மணம் புரிந்து கொண்டவர்கள் வருங்காலம் சிறப்பாக அமையப் போவதின் அறிகுறியாக அது கருதப்படும்.

இவர்களிடையே சைவர்களும் வைணவர்களும் உள்ளன

ரெனினும் தென் மாவட்டங்களில் சைவர்களே மிகுதியான எண்ணிக்கையினராக உள்ளனர். வைணவர்களில் பெரும்பாலோர் பட்ராசுக்களின் சீடர்கள். பட்ராசு பூசாரி அவ்வப்போது சுற்றுப் பயணம் மேற்கொண்டு தனக்குச் சேர வேண்டிய கட்டணங் களை வசூலிப்பார். சைவர்களுள் சமய ஈடுபாடுடையவர்கள் மடங்களைச் சேர்ந்த பண்டாரங்களின் சீடர்களாக உள்ளனர். சேலம் மாவட்டத்தில் தங்கி வாழ்பவர்கள் தமயந்தி, காமாட்சி ஆகிய தெய்வங்களைத் தங்கள் குல தெய்வங்களாகக் கொண்டுள் ளனர். இச் சாதியைச் சேர்ந்த சிலர் இன்றும் கோணிப்பை தயாரிக்கும் பணியில் ஈடுபட்டுள்ளனர். எனினும் பெரும்பா லோர் வணிகத்தையும் பயிர்த்தொழிலையுமே தங்கள் தொழி லாக மேற்கொண்டுள்ளனர். சென்னையில் பலவகைப் பழங்க ளின் வணிகமும் சணப்பர்களின் கையகப்பட்டதாக உள்ளது.

வணிகர் கூட்டம் எனப் பொருள்படும் சாத்து வாண்டுலு சணப்பர்களின் மற்றுமொரு பெயராக தரப்பட்டுள்ளது.

*1901* மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் சணப்ப என்பது (கோணிப்பை, சாக்கு ஆகியன தயாரிக்கும்) கோணிகர் சாதியின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**சண்டாயி – Jandāyi (flag)**

ஏனாதியரின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம்.

**ஜங்க – Janga (Calf of the leg)**

கெண்டைக்கால் எனப் பொருள்படுவது. மாலர்களின் புற மணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம்.

**ஜங்கள் சாதி – Jangal Jāti**

குருவிக்காரன் அல்லது காட்டு மராத்திகளான காட்டு வாசி களுக்கான மற்றுமொரு பெயர்.

**ஜங்கம் – Jangam**

*1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில்

ஜங்கம் பற்றிக் கூறப்பட்டுள்ளதாவது:-"ஜங்கமர்கள் லிங்காயதர் களின் சமயத்திற்குரிய குருமார்கள் என்பதே பொருத்தமான விளக்கமாகும். எனினும் இருபெயர் பொதுவாக லிங்காயதர் களைக் குறிக்கவும் பயன்படுத்தப்படுவதே ஜங்கமர்களின் எண் ணிக்கை 102, 121 என மிக அதிகமாக இருப்பதன் காரணமா கும். பட்டாதிகாரிகள், சரமூர்த்திகள் என ஜங்கமர்களுள் இரு பிரிவினர் உள்ளனர். பட்டாதிகாரிகள் ஒரு குறிப்பிட்ட தலைமை இடத்திலிருக்கும் சமயக் குருமார்கள். சரமூர்த்திகள் ஊர் ஊராக லிங்காயத சமய நெறியினைப் போதித்தபடி சென்றபடி இருப்பவர்கள். ஜங்கமர்கள் பலர் லிங்காதயர் அல்லாத சூத்திரர்களின் குருக்களாக உள்ளனர். மற்றவர்கள் சமயப் போர்வையிலான இரவலர்களாகவோ வணிகர்களா கவோ உள்ளனர்." 1897 கணக்கெடுப்பு அறிக்கையில் மேலும் கூறப்பட்டுள்ளதாவது:- "ஜங்கம லிங்காயதர் என்பதே இச் சாதியின் முழுப் பெயர். இதன் பொருள் இடம் பெயரக் கூடிய லிங்கத்தை வழிபடுபவர்கள் என்பதாகும். கோயில்களில் நிலையாக உள்ள லிங்கத்தை வழிபடுபவர்களிலிருந்து மாறு பட்டவர்கள் இவர்கள். இச் சாதியில் உட்பிரிவாகப் பதியப் பட்டுள்ளவற்றுள் கண்டாயதர், ஸ்தாவரர் ஆகிய இரண்டு உட்பிரிவினரே எண்ணிக்கையில் மிகுதியானவர்கள். ஸ்தாவர ஜங்கம் என்பது முரண்பட்ட விசித்திரமான பெயராக உள்ளது. இந்த உட்பிரிவினர் இரண்டு வட மாவட்டங்களில் மட்டுமே காணப்படுகின்றனர். இது பொதுவான ஜங்கம் சாதியிலிருந்து வேறுபட்டது என்பதனை விசாகப்பட்டினம் மாவட்டக் கையேட்டில் இச் ஜங்கம் பிரிவினரைத் தையல் காரர்கள் எனக் குறித்திருப்பது உறுதி செய்கின்றது." தெலுங்குப் பகுதியில் லிங்காயதர் ஜங்காலு என்றே வழங்கப் படுகின்றனர்.

கண்ட ஜங்கமர் அவ்வாறு அழைக்கப்படுவதற்குக் காரணம் அவர்கள் எப்பொழுதும் தங்களுடன் ஒரு வெண்கல மணியினை எடுத்துச் செல்வதாலேயாகும்.

பெய்தரோ தெல்லவல்லே என்ற மேனாட்டுப் பயணி ஜங்க

மர்கள் பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.* "இக்கெரியில் நான் சில இந்தியப் பரதேசிகளைப் பார்த்தேன். இவர்கள் அவர்களுடைய மொழியில் ஜியங்கமர் என அழைக்கப்படுகின்றனர். நான் வேறிடங்களில் பார்த்த இரவலர்களை ஒத்தவர்களாகவே இவர்கள் இருத்தல் வேண்டும். இவர்கள் மனைவியை உடையவர்களாக இருப்பதோடு, முகத்தில் விபூதியினைப் பூசித் திரிந்தாலும் பிறந்த மேனியராகத் திரிவதில்லை. துறவிகளுக்கே உரித்தான செங்கல் காவி நிறத் துணியினைத் தலை மூடாக்குப் போட்டுக் கொள்ளும் பழக்கமும் இவர்களிடையே உள்ளது. இவர்கள் கைகளிலும் கால்களிலும் நிறைய வளையல்கள் அணிந்துள்ளனர். இவர்கள் நடக்கும்போது அவற்றின் உள்ளே போடப்பட்டுள்ள எவையோ கலகல ஒலியினைச் செய்கின்றன. மக்கள் பலர் இவர்களுடைய பாதங்களை வந்து முத்தமிடுவதை நான் பார்த்தேன். அவ்வாறு அவர்கள் முத்தமிட்ட பின் இவர்கள் பாதங்களில் அவர்கள் தலையினை வைத்துக் கொண்டிருக்கும் போது, இந்த ஜங்கமங்கள் அதைப் பற்றிக் கண்டுகொள்ளாதவர்களைப் போல ஆடாது அசையாது முகத்தில் கடுகடுப்புடையவர்களாக ஒரே இடத்தில் உலகப் பற்றிலிருந்து முழுதும் விடுபட்டுவிட்டதைப் போல நின்றிருப்பர்." (பார்க்க:லிங்காயதர்)

**ஜன்சபுல்: Janjapul (Sacred thread)**

புனித நூல்கயிறு எனப் பொருள்படும் இது போயர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர்.

**ஜன்மி - Janmi**

ஜன்மி அல்லது ஜன்மக்காரன் என்பதன் பொருள்,* "நிலத்திற்கு உரியவன் அல்லது உரிமையுடையவன் என்பதாகும். ஜன்மன் உரிமைப் பத்திரம் யார் மீது உள்ளதோ அவனே ஜன்மி. ஜன்மம் (1) பிறப்பு, பிறப்புரிமை, சொத்துரிமை என்பன

* கிழக்கிந்தியாவிலும் அரேபிய பாலைவனங்களிலும் பயணங்கள் - 1665. (Pietro della valle-Travels into East India and Arabian deserts, 1665.)

விக்ரம், மலபார் சட்டமும் பழக்க வழக்கங்களும். Wigram Malabar Law and Custom)

வற்றைக் குறிக்கும். (2) வரி ஏதும் செலுத்தாமல் அனுபவித்து வரும் சொத்து, இதனை உரிமை மாற்றுவது ஒருவனுக்கு இழி வினைக் கொண்டு சேர்க்கும் செயலாகும். ஜன்மபோகம் என்பது ஜன்மி நிலத்தில் விளைந்ததனை அனுபவிக்க ஒருவனுக்கு உள்ள உரிமை.'' 1805–1806-இல் மலபார் மாவட்ட ஆட்சியர் அரசு ஒப்புதல் அளித்ததான வரி விதிப்பினைச் செயற்படுத்த எல்லா நில உரிமையாளர்களிடமிருந்தும் தங்கள் நிலங்களில் விதைத்ததும், விளைந்ததுமானவைகளைப் பற்றி விவரங்களைத் தொகுத்தார். இது 981 மலையாள ஆண்டுக்கான ஜன்மி பைமாயிஸ் என வழங்கி வருகின்றது.*

இது தொடர்பான மலபாரின் இன்றைய நிலையினைப் பற்றி ஒருவர் எனக்குத் தெரிவித்துள்ளதாவது:– ''மலபாரின் ஒவ்வொரு வட்டத்திலும் தங்களை ஜன்மிகளின் அடிமைகள் என அழைத்துக் கொள்ளும் காடுவாழ் பழங்குடிகள் உள்ளனர். முன்னாளில் காடுகளை விற்கும்போது அதில் வாழும் பழங்குடிகள் பற்றிய விவரமும் ஒப்பந்தத்தின் ஒரு பகுதியாக இடம் பெறும். நில உடமையாளர் நிலத்தை விற்கும்போது அந்த நிலத்தோடு பிணைக்கப்பட்ட அடிமைகளையும் புதிய உரிமையாளருக்கு அடிமைகளாக விற்பனை ஒப்பந்தத்தில் குறிப்பிட்டு எழுதுவதைப் போல ஜன்மியும் எழுதிக் கொடுக்கப்படும் பழக்கம் இருந்தது. எனினும் ஜன்மிக்கும் அவன் உரிமையுடைய நிலத்தில் வாழும் பழங்குடிகளுக்கும் உள்ள உறவு பற்றி ஒரு வட்ட ஆட்சியர் எனக்குத் தெரிவித்த விவரங்கள் வருமாறு:- ''காடு வாழ் பழங்குடிகள் தங்கள் விருப்பம் போல் காடுகளில் சுற்றி அலைவர். ஒவ்வொரு ஆண்டும், ஐந்து ஆண்டுகளோ அதற்குமேற்பட்டதாகவோ தரிசாகக் கிடக்கும் காட்டின் ஒரு பகுதியைத் தேர்ந்தெடுப்பர். சிலபோது இவர்கள் இது பற்றித் தெரிவிக்காமலும் இருப்பர். அந்த நிலத்தினைத் துப்புரவு செய்து, அவர்கள் விதைத்து விளைவினை அறுவடை செய்யும்

* லோகன், மலபார் கையேடு. இதில் ஜன்மி பற்றி முழு விவரங்களும் உள்ளன. (Logan, Manual of Malabar, which contains full details concerning Janmis.)

போது ஜன்மியோ, அவருடைய முகவரோ ஜன்மியின் பங்கைப் பெற்றுக் கொள்ளச் செல்வர். பழங்குடிகள் என்றும் ஜன்மியை ஏமாற்ற முற்படமாட்டார்கள். இவர்களிடையே எப்போதாவது சச்சரவு நிகழ்ந்தால் அதனைத் தீர்த்து வைக்கும்படி ஜன்மியிடம் வேண்டுவர். இவர்களைத் தன் வயலில் வந்து உழைக்கும்படி ஜன்மி வேண்டும்போது விருப்பத்தோடு சென்று அவருக்காக உழைப்பர். சமவெளியிலிருந்து புதிதாகக் காட்டுப் பகுதியினைக் கவர்ந்து கொள்பவர்கள் இவர்களைக் கொடுமைப்படுத்துவது உண்டு. அதுபோலக் கொடுமைக்கு ஆட்பட நேர்ந்தால் அந்தக் காட்டுப் பகுதியை விட்டு வெளியேறி வேறொரு ஜன் மியிடம் சென்று இவர்கள் பணி செய்வர். ஓணம் திருவிழா சமயத்தில் ஜன்மியைக்காண அன்பளிப்புக்களோடு இவர்கள் வருவர். ஜன்மி அவ்வாறு வருபவர்களுக்கு விருந்தளிப்பார். காட்டு வாசிகளான பழங்குடிகளுக்கும் ஜன்மிகளுக்கும் இடையே உள்ள உறவைப் பார்க்கும்போது காடுவாழ் பழங் குடிகள் இயல்பாகவே ஒரு தலைவன் ஆதரவின் கீழ் இருக்க விரும்பும் விருப்பத்தை உள்ளூரப் பெற்றுள்ளனர் என்பது புலனாகின்றது. அவர்கள் ஜன்மியினால் எத்தகைய லாபமும் அடைகிறார்களில்லை. அவனுடைய பாதுகாப்பினை அவர்கள் என்றும் நாடியதில்லை. அவனைத் தங்கள் அன்றாட நடை முறைகளில் தலையிடும்படி அவர்கள் கேட்டுக் கொண்டதும் இல்லை. இவர்கள் ஜன்மிக்கு அவனுடைய பங்கினைத் தர மறுப்பார்களானால், அவனால் இவர்களிடமிருந்து அதனைப் பெற இயலாது. எனினும் இவர்கள் ஜன்மியினைத் தங்கள் தலைவனாக ஏற்றுக் கொண்டுள்ளனர்.'' சென்ற நூற்றாண்டின் இடைப் பகுதியில் மலபாரைச் சேர்ந்த வயநாட்டில் தோட்ட முதலாளிகள் சென்று குடியமர்ந்தபோது அவர்கள் ஜன்மிகளிட மிருந்து நிலத்தினை அதில் வாழ்ந்து வந்த பணியர்களோடு-நில உரிமையாளர்களின் அடிமைகளாக இருந்தவர்கள் - சேர்த்தே விலைக்கு வாங்கினார்கள்.

சோதிடர், தச்சர், பொற்கொல்லர், வண்ணார், நாவிதர் ஆகியோர் தங்கள் பணிக்காக அளிக்கப்பட்டுள்ள பரம்பரை உரிமையுடையதாக அனுபவித்து வரும் நிலம் செறு ஜன்மம் எனப்படுகிறது.

**சன்னி - Janni**

சாடபு சாதியின் குருமார்.

**சப்பானியர் - Japanese**

1901 மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் இரண்டு சப்பானியர்கள் பதியப்பட்டுள்ளனர். பங்களூர் அருகே பம்பாயைச் சேர்ந்த திரு டாட்டாவின் சப்பானிய முறையிலான பட்டு உற்பத்திப் பண்ணையில் இவர்கள் மேலாளர்களாக உள்ளனர்.

**சாட் - Jāt**

மைசூர் மாநிலக் கணக்கெடுப்பின்போது வடஇந்தியாவிலிருந்து வந்து வணிகத்தில் ஈடுபட்டுஉள சில முகமதிய வகுப்பார் தங்களைச் சாட் எனப் பதிந்து கொண்டுள்ளனர்.

**சாடபு - Jatapu**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "சாடபுகள் நாகரிகம் பெற்றுள்ள கோண்ட் பிரிவினர். மலைப்பகுதிகளில் வாழும் சாடபுகள் கோண்ட் மொழியினையும் சமவெளியில் வாழ்பவர்கள் தெலுங்கையும் பேசுகின்றனர். தற்பொழுது இவர்கள் தனிச் சாதியாராக வளர்ந்துள்ளனர். மாடு, பாம்பு ஆகியவற்றைத் தின்னும் கோண்ட்களைவிடத் தங்களை உயர்ந்தவர்களாகக் கருதும் இவர்கள் சமவெளியில் வாழும் மக்களின் வாழ்க்கை முறைகள் சிலவற்றை மேற்கொள்ளத் தொடங்கியுள்ளனர்" எனக் கூறப்பட்டுள்ளது.

இவர்களைப் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு சி. ஹயவதன ராவ் அவர்களுக்குக் கடப்பாடுடையேன். சாடபு என்ற பெயர் கோண்ட் சாதியாரின் தலைவர்கள் என்ற பொருளில் கோண்ட் சாடபு தொரலு என்ற பெயரின் சுருக்கம் எனப் பொதுவாக நம்பப்படுகிறது. பால்கொண்டா சமீன்தாரின் முன்னோர் இப்பிரிவினைச் சேர்ந்தவர் என்று கூறுவர். இச் சாதியில் பல குலப் பிரிவுகள் உள்ளன. அவற்றுள் சில வருமாறு:—

தோரிக அல்லது தோயிக—இப்பெயருடைய காட்டுக் கோழியினைப் போற்றுபவர்கள்.

காதிரிக—இப்பெயருடைய மற்றொரு கோழியினத்தைப் போற்றுபவர்கள்.

மம்தங்கி—காளை அல்லது பசுவைப் போற்றுபவர்கள்.

அட்டாகு—(*Bauhinia racemosa*)சமவெளியில் உண்கலமாகப் பயன்படும் இலைகள் தரும் ஆத்தி மரத்தைப் போற்றுபவர்கள்.

கொண்டகோரி—இந்தவகை மறியினைப் போற்றுபவர்கள்.

நவலிபிட்டா—மயிலினைப் போற்றுபவர்கள்.

அரிக—வரகினைப் (*Paspalum srcobiculatum*) போற்றுபவர்கள்.

1901 கணக்கெடுப்பில் பதியப்பட்டுள்ள வேறு சில குலப் பெயர்கள் வருமாறு:-

கௌலக - அம்பு

குட்ரகி - காட்டு ஆடு

விங்க - புற்றீசல்

பெண்கள் பூப்பு அடையும் முன்னும், பூப்பு அடைந்த பின்னரும் மணம் செய்விக்கப்படுகிறார்கள். ஒருவன் தன்னுடைய அத்தை மகளை மணக்கும் உரிமையைக் கொண்டாடலாம். மணச் சடங்குகள் சமவெளியில் உள்ள தெலுங்கர்களின் மணச் சடங்குகளை ஒத்தனவாக உள்ளன. மணமகளுக்கு விலையாக அவள் அன்னைக்கு ஒரு புதிய சேலை, அரிசி, பலவகைத் தானியங்கள், சாராயம் ஆகியன தரப்படவேண்டும். மணமகள் மணமகன் இல்லத்திற்கு அழைத்துச் செல்லப்படுவாள். அங்கு விருந்து நடத்தப்படும். மறுநாள் காலையில் கல்லகொல்ல சம்பிரமம் எனப்படும் கால் விரல் நகங்கள் வெட்டும் சடங்கு நிகழும். பின்னர் நல்ல வேளையில் மணமக்கள் கையில் கங்கணம் அணிவித்து, அவர்கள் கரங்களை இணைத்து வைப்பர். அதன் பின் மணமக்கள் குளிப்பர். மற்றுமொரு விருந்து நடைபெறும். கைம்பெண்கள் மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்படு

கின்றனர். இறந்துபோன அண்ணனுடைய மனைவியைத் தம்பி மணந்து கொள்ளலாம். மணமுறிவும் அனுமதிக்கப்படுவதோடு மணமுறிவு செய்து கொண்டவர்கள் மறுமணம் புரிந்து கொள்ளவும் அனுமதிக்கப்படுகின்றனர்.

இறந்தவர்கள் புதைக்கப்படுகின்றனர். பாம்பு கடித்து இறந்தவர்கள் மட்டும் எரிக்கப்படுகின்றனர். சாவுத் தீட்டு மூன்று நாள்களுக்கு மேற்கொள்ளப்படுகின்றது. அச்சமயம் இவர்கள் தங்கள் சாதித் தொழிலான பயிர்த்தொழிலில் ஈடுபடுவதில்லை. இறந்தவர்கள் நினைவாக ஒவ்வொரு குடும்பமும் ஆண்டு தோறும் சடங்கு நடத்துகின்றது. கோழி அல்லது ஆட்டினைக் கொன்று அன்று சமைப்பதோடு, அன்று சமைத்த உணவின் ஒரு பகுதியினை ஒரு தட்டில் வைத்து வீட்டுக் கூரைமீது வைப்பர். இருபது ஆண்டுகளுக்கு ஒருமுறை சாதியைச் சேர்ந்த அனைவரும் கூட்டாக ஒரு பன்றி அல்லது பசுவினை வாங்கி முன்னோருக்காகப் பலியிடுவர்.

ஜாகர தேவதா இவர்களுடைய சாதிக்குரிய தெய்வம். அவளுக்குப் பன்றி, மறி, எருமை ஆகியனவற்றை இவர்கள் பலியாகக் தருவர். அறுவடை முடிந்தபின் அதனுடைய முதற் பயனை இத் தேவிக்குப் படைத்த பின்னரே இவர்கள் அதனை உண்பர்.

சாதித் தலைவன் நாயுடு அல்லது சாமந்தி என அழைக்கப் படுகின்றான். அவனுக்குச் சன்னி என்ற உதவியாளன் உளன். சாதிக்கான பூசாரி சடங்குகளைச் செய்து வைப்பதோடு சாதிக் கூட்டங்களையும் கூட்டுவதில் உதவுவான்.

துரை, நாய்கொ, சாமந்தோ என்பன சாதிக்குரிய பட்டப் பெயர்கள்.

**சாதிகீர்த்தலு - Jātikirtulu**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கடப்பை மாவட்டத்தில் காணப்படும் இரவலர்களின் ஒரு பிரிவினர் எனப் பதியப்பட்டுள்ளது. இப்பெயர் சாதியின்

புகழினைக் கூறுபவர் எனப் பொருள்படுவது. எனவே இது பட்ராசுகளைக் குறிப்பதாகலாம்.

**சாதிப் பிள்ளை - Jāti Pillai (Chindren of Caste)**

குறிப்பிட்ட சாதிகளைச் சேர்ந்தவர்களாக உள்ள பிச்சைக் காரார்களுக்கான பெயர். தாங்கள் சேர்ந்துள்ள சாதியாரிடம் இருந்து மட்டுமே இவர்கள் இரப்பர். அச்சாதியைச் சேர்ந்தவர் களின் சடங்குகள், விழாக்கள் ஆகியவற்றில் இவர்கள் கொடி களைத் தாங்கிச் செல்வர். சாதியின் வரலாற்றைக் கதையாகச் சொல்வதோடு, அதனுடைய புகழையும் பாடிச் சாதிப் பெருமை யினை மேம்படச் செய்வதைக் கடமையாகக் கொண்டவர்கள். சாதியோடு சாதிப் பிள்ளைகள் பற்றிய உறவு முறைக்குக் கீழ்க்கண்ட சாதிகளையும் அச்சாதிகளைச் சேர்ந்த சாதிப் பிள்ளைகளையும் எடுத்துக்காட்டாக காட்டலாம்.

| சாதி | உரிய சாதிப் பிள்ளைகள் |
|---|---|
| கோமட்டி | மைலாரி |
| பேரி செட்டி | வீர முஷ்டி |
| கோமட்டி | வீர முஷ்டி |
| பள்ளியர் | நோக்கன் |
| மாதிகர் | மாஸ்திகர் |

குறவர்கள் சிலர், சாதிப்பிள்ளைக் குறவர்கள் எனத் தங்களைக் கூறிக் கொள்கின்றனர் எனத் திரு எம். பாப்பா ராவ் நாயு* குறித்துள்ளார். "சாதிப்பிள்ளைக் குறவர்கள் சென்னை மாநிலத்தின் தென் மாவட்டங்களில் மிகுதியாகக் காணப்படு கின்றனர். குழுக்களாகத் திரியும் இவர்கள் மிகுந்த தொல்லை களைத் தருபவர்கள். இவர்கள் சாதிப் பெண்கள் காசுக் காகவும், தானியங்களுக்காகவும் பச்சைக் குத்தும் பணியினைச் செய்வதோடு இவர்களுடைய ஆண்கள் திருட்டினை மேற் கொள்ள உதவியாக வீடுகளின் நிலைமைகளையும் அங்குள்ள பொருள்களையும் வேவு பார்த்து வந்து சொல்வர்."

---

* குறவர், எருக்கலர், கைகரியர் ஆகியோர் வரலாறு - சென்னை, 1905.

**ஜயுர - Jaura**

சிறிய அளவில் காணப்படும் ஒரிய சாதியார் ஜயுரர். அரக்கு வளையல்களும் பிற பொருள்களும் தயாரிக்கும் கொதூரர் சாதியாரோடு இவர்கள் நெருங்கிய தொடர்புடையவர்கள். ஏழைப் பிரிவினைச் சேர்ந்த பெண்கள் அணியும் அணிகளான வளையல், மோதிரம், பாசி, காதணி ஆகியன தயாரிக்க இந்தியாவில் அரக்கு பெருமளவில் பயன்படுத்தப் படுகின்றது. திப்பொ (விளக்கு), மொகிரொ (மயில்) ஆகியன ஜயுர சாதியாரின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலப்பிரிவு களாம். இவற்றை இவர்கள் மதித்துப் போற்றுகின்றனர். இவர்களுள் பெரும்பாலோர் சைவர்கள். சூரமங்கள், பிம்மல ஆகியவை இவர்களுடைய சாதித் தெய்வங்கள், தான்சே, சாரு, தோவ், மகாபத்ரோ என்பன சாதிக்கு உரிய பட்டப் பெயர்கள்.

**சவ்வாதி - Javvādi (civet-cat)**

புனுகு பூனை எனப் பொருள்படும் இது மேதரரின் புற மணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயராகும்.

**சலகுப்ப - Jelakuppa (a fish)**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர். இது ஒரு வகை மீனின் பெயர்.

**ஜேன் - Jān (Honey)**

குருபர்களின் ஓர் உட்பிரிவு. தேன் எனப் பொருள்படுவது.

**ஜென்ன - Jenna**

பொலாசி, காளிஞ்சி ஆகிய ஒரிய சாதிகளுக்குரிய பட்டப் பெயர்.

**ஜெர்ரி போத்துல - Jerribotula (centipedes)**

போயர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

## ஜெட்டி - Jetti

மற்போரையும், உடற்பயிற்சியையும் தொழில் முறையில் பேணும் தெலுங்கு சாதியார். தெலுங்கு மாவட்டங்களில் இவர்கள் தலைக்கு எண்ணெய் தேய்த்து விடுதலிலும், சுளுக்கு, நரம்புப் பிடிப்பு முதலான உடற் பிணிகளைப் போக்க எண்ணெய் போட்டு நீவுதலும் ஆகிய தொழில்களை மேற் கொண்டுள்ளனர். தஞ்சாவூரில் தமிழர்களிடையே வாழும் இவர்கள் தெலுங்கு மொழியினையே பேசுகின்றனர். பூணூல் அணியும் இவர்கள் தங்களை உயர்ந்த சாதியாராகக் கருது வதோடு கீழான பணிகள் எதனையும் எப்போதும் மேற் கொள்வதில்லை. தஞ்சாவூர் அரசரின் ஆட்சிக் காலத்தில் இவர்கள் கருவூலம், அணிகலன் அறைகள் ஆகியவற்றின் காவலர் களாக அமர்த்தப்பட்டிருந்தனர். முந்தைய தஞ்சாவூர் அரசர் இறந்த பிறகு இவர்கள் மைசூருக்கும் பிற இந்திய அரசர்களின் ஆளுகைக்கு உட்பட்ட மாநிலங்களுக்கும் குடி பெயர்ந்து விட்டனர். இவர்களுள் ஒரு சிலரே இன்று தஞ்சாவூர்க் கோட்டை யில் வாழ்கின்றனர்.

மைசூரில் ஜெட்டிகள் கொலைத் தண்டனையை நிறைவேற்று பவர்களாகச் சில காலம் பணியாற்றியதாகவும்.* இவர்கள் தண்டனை பெற்றவர்களைக் கழுத்தைத் திருகிக் கொல்வர் எனவும் கூறப்படுகிறது.† திப்பு சுல்தானோடு நடைபெற்ற இறுதிப் போரில் ஜெனரல் மாட்டியூவின் தலை அவன் உடலி லிருந்து "தங்கள் தலைவனைத் திருப்திப் படுத்துவதற்காகக் காண்போர் வெறுக்கத்தக்க செயல்திறன் வாய்ந்த ஜெட்டிகளின் புலிப்பிடிச் செயலால் முறித்து எடுக்கப்பட்டது."‡

விலகிய மூட்டுக்களைப் பொருத்துவதில் இன்றும் இவர்கள் திறமை வாய்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். சென்ற

---

* ரைஸ் - மைசூர், குடகு மாவட்ட விவரக்குறிப்பு. (Rice, Mysore and Coorg Gazetteer.)

† மைசூரைக் கைப்பற்றியது தொடர்பான விவரங்கள், 1800 (Narrative Sketches of the conquest of Mysore-1800)

‡ விலக்சின் வரலாற்றுச் சித்திரங்கள், மைசூர் 1810-17. (Wilks, Historial Sketches, Mysore, 1810-17.)

நூற்றாண்டின் முற்பகுதியில் இவர்களைப் பற்றிய ஒரு குறிப்பில் வில்க்ஸ் எழுதியிருப்பதாவது:- ''தனித்ததொரு சாதியினரான இவர்கள் குழந்தைப் பருவம் முதலே நாள்தோறும் மற்போர்க் காட்சிக்கென்றே பயிற்றுவிக்கப்படுகின்றனர். உலகில் வேறெங்கும் இவர்களுடைய காட்சிகளில் காண்பதனைப் போன்ற சமச் சீரான உடற்கூறு உடையவர்களைக் காண இயலாது. ஒருவகையில் இது கொடுமையான விளையாட்டே. இந்த மற்போரில் ஈடுபடுபவர்கள் தொடையின் நடுப்பகுதிவரை மறைப்பதான ஆரஞ்சு நிற அரைக்கால் சட்டைகளை அணிந்தபடி வலது கையில் ஒரு கருவி ஏந்தியபடி போரிடுவர். இவர்களுடைய இந்தக் கருவிக்கு வேறு பெயர் கூற இயலாததால் அதனை 'சியாஸ்டஸ்' என்று பெயரிட்டு அழைக்கவேண்டியதாகின்றது. இக் கருவி நான்கு கூர்மையான குமிழ்களைக் கொண்டது. கூரிய கைமுட்டியினை ஒத்திருப்பதான இதனோடு ஐந்தாவதான நீண்ட கூர்முனை மற்ற நான்கு முனைகளோடும் செங்குத்தாகச் சிறுவிரல் அருகே அமைந்திருக்கும். இது எருமைக் கொம்பாலான கருவியாகும். இக் கருவியினைத் தக்க முறையில் கையில் வைத்துக் கொண்டிருக்கும் சாதாரண உடல் வலிவுடைய ஒருவன் எதிரியின் தலையினை ஒரே சாடலில் கொத்திப் பிளந்து விட முடியும். எனினும் கை விரல்களை இந்தக் கருவியினுள் நுழைத்து விரலோடு அடியில் உள்ள முதலாவதும் இரண்டாவதுமான விரல் முளிகளுக்கு நடுவில் அது பிணைக்கப் பட்டுள்ள காரணத்தால் எதிரிக்குப் பலத்த அடி தர முற்பட்டால் விரல் முளிகளின் முதல் மூட்டுக்கள் விலகிப் போக நேரலாம் என்று கூறப்படுகிறது. இந்தக் கருவியினை ஏந்தியபடி மலர் மாலைகளை அணிந்தவர்களாக போர்க்களத் தலைவர்கள் முன் கூட்டியே எதிராளிகளாக இணைந்து ஏற்பாடு செய்தபடி, போரிடும் வீரர் அணி ஒன்றை அடுத்து ஒன்றாகப் போர் நிகழ்வதற்கு உரிய களத்தில் தோன்றும். அவ்வாறு களத்தில் இறங்குவோர் பெயரும், ஊரும் அவர்கள் களத்தில் தோன்றும் போது அறிவிக்கப்படும். இவர்கள் தந்தத்தாலான அரியணையில் அமர்ந்திருக்கும் அரசரை முதலில் விழுந்து வணங்கிய பின், மெல்லிய திரைக்குப் பின்னால் அமர்ந்திருக்கும் அந்தப்புர மகளிருக்கும் தங்கள் வணக்கத்தைச் செலுத்தித் தங்கள்

கழுத்தில் உள்ள மாலையினை அகற்றி, அதில் உள்ள மலர் களைக் களத்தில் நயம்பட வீசி எறிவர். இருவரிடையே நடை பெறும் இந்தப் போரானது மற்போரும் குத்துச் சண்டையும் இணைந்ததானது எனக் கூறத் தகும் ஒருவகைப் போராகும். இப் போரில் தலை மட்டுமே தாக்கப்படலாம் என அனுமதிக் கப்பட்ட உறுப்பு ஆகும். தாக்குதல் முடிவுறும் முன் களத்தில் இறங்கிய இருவருடைய தலையிலிருந்தும் குருதி களத்தின் மண லிடை வழியக் காணலாம். வெற்றி புலப்படும் தறுவாயில் அல்லது இரு வீரரும் ஒருவருக்கு ஒருவர் சளைக்காமல் போர் நிகழ்த்துவதாகப் புலப்பட்டால், அரசர் அருகே இருக்கும் நடு வர்கள் போரை நிறுத்தும்படியாகக் கூறுவதற்கு அடையாள மாகப் போராளிகளுக்குப் பரிசாக வழங்குவதற்குரிய தலைப் பாகைகளையும், ஆடைகளையும் வீசியெறிவார்கள். வெற்றி பெற்றவன் தான் எத்தகைய ஊனமும் இன்றிச் செல்வதைப் புலப்படுத்தும் வகையில் நான்கைந்து குட்டிக்கரணங்கள் அடித்தவனாகக் களத்தை விட்டு வெளியேறுவான். ஜெட்டிகள் ஐந்துவகைப் பிரிவினராக உள்ளனர். ஒருவன் ஒரு முறை வெற்றி பெற்றால் அதற்குச் சாதாரணமாகத் தரப்படும் பரிசு அடுத்த பிரிவிற்கு உயர்த்தப்படுவதாகும். முதல் பிரிவினை எட்டும் ஒருவன் பெறுவதற்குரிய பரிசுகள் பல உள்ளன. அத்தகையவர்கள் வயதானபின் களத்தில் போர் நடத்துவிக்கும் மேலாளர்களாகப் பதவி உயர்வு பெறுவர்."

திப்பு சுல்தானின் கைதிகளில் ஒருவனான ஜேம்ஸ் ஸ்கர்ரி சீரங்கபட்டணத்தில் திப்பு சுல்தான் முன்னிலையில் நடை பெற்ற ஒரு மற்போர் விளையாட்டு நிகழ்ச்சி பற்றித் தந் துள்ள விவரம் வருமாறு:-* அழைப்பு விடுக்கப்பட்டவுடன் ஜெட்டிகள் தங்களுடைய தலைவர்களைத் தொடர்ந்து வந்து கீழே விழுந்து வணங்கி ஒவ்வொரு முறையும் தரையைத் தொட்டுப் பணிவினைக் காட்டும் சலாம்கள் இட்டபின், ஒரு பயிற்சிப் பள்ளியினைச் சேர்ந்தவனுக்கு எதிராக இன்னொரு

---

* ஜேம்ஸ் ஸ்கர்ரியின் சிறையும் தொல்லையும் தப்புதலும் - 1824. (The captivity, sufferings and escape of James Scurry, 1824.)

பயிற்சிப் பள்ளியினைச் சேர்ந்தவனை மோதவிடுவர். இவர்கள் தங்கள் வலது கையில் நான்கு உருக்கு நகத்தோடு கூடிய மரத் தாலான வச்சிர முஷ்டி என்ற கருவியினை விரல்களின் பின் பக்கம் முளிகளோடு சேர்த்துப் பொருத்திக் கொண்டிருப்பர். கைவிரல்களை மடக்கும்போது அந்த உருக்கு நகங்கள் அச்ச மூட்டுவனவாகத் தோற்றம் தரும். தலையினை மழுங்கமழித்துக் கொண்டிருக்கும் இவர்கள் உடம்பில் எண்ணெய் தடவிக் கொண்டு இடையில் ஓர் அரைக்கால் சட்டைமட்டுமே ஆடையாக அணிந்திருப்பர். யாரோடு யார் போரிடுவது என முடிவு செய்யப் பட்டபின், திப்பு சைகை காட்டியவுடன், முதலில் தங்கள் கழுத்திலுள்ள மாலையினைப் பிடுங்கி எதிராளியின் முகத்தில் வீசியபடி போரிடத் தொடங்குவர். தாக்கப்படுபவரின் சதை யைக் கீறிக் கிழித்துக் குருதி கொட்டச் செய்யும் வலது கையி லுள்ள வஜ்ர முஷ்டியால் எதிரியினைத் தாக்கும் வாய்ப்பினை எதிர்பார்ப்பர். சில போராளி இணைகள் ஒருவரை ஒருவர் போர் தொடங்கிய உடனே நெருங்கிக் கட்டிப் பிடித்துப் போரிட்டுக் கீழே விழுந்து ஒருவர் இன்னொருவரை திமிர இய லாது அடிப்படுத்துவர். எதிரியின் உடலை மடக்கிப் பிடித்து அடிப்படுத்தும் நுட்பம் கற்றுத் தரப்பட்டுள்ள இவர்கள் உடம் பின் ஒவ்வொரு பகுதியினையும் தம் வசப்படுத்தும் ஆற்றலை நன்கு பயின்றுள்ளனர். எதிரி தன்னை விடுவித்துக் கொள்ள இயலாதபடி கட்டிப்பிடித்து அடக்குபவனே வெற்றி பெற்ற வனாவான். இவர்கள் ஒருவர் மற்றவரின் கால் கைகளை முரட் டுத்தனமாக முறித்துப் போட்டு விடுவது வழக்கம். இவர்களை ஊக்கத்தோடு போரிடத் திப்பு சில வழிமுறைகளைக் கையாளு வான். இந்தப் போராளிகள் ஒவ்வொருவரின் பின்னாலும் கையில் ஆயுதம் தாங்கியவர்களாக இரு குண்டர்களை நிறுத்தி இருப்பான். இவர்கள் தாக்கத் தயக்கம் காட்டும்போது அவர் கள் இவர்களைத் தாக்குவர். போராளிகள் திப்பு போதுமென்று சொல்லும்வரை அல்லது இயலாதவர்களாக உடல் உறுப்புக்கள் ஊனம் உறும்வரை போரிடக் கடமைப்பட்டவர்கள். ஆர்வத் தோடு போரிடுபவர்களுக்குத் தலைப்பாகை, சால்வை முதலா னவை தாராளமாகப் பரிசாக வழங்கப்படும். அவற்றின் தரம் இவர்களின் தகுதிக்கேற்றபடி அமையும்."

மைசூரைச் சேர்ந்த ஜெட்டிகள் மேலே கூறப்பட்ட விரல் முளிகளோடு இணைத்துக் கொள்ளும் கருவிகளை இப்பொழுதும் தங்களிடம் வைத்துக் கொண்டிருப்பதோடு தசராத் திருவிழாவின்போது நடைபெறும் போட்டிகளில் ஆண்டுதோறும் பங்கேற்றும் வருகின்றனர். நான் சென்ன பட்டணத்தில் நேரில் சந்தித்த காவல்துறைக் காவலனான ஜெட்டி தான் பரோடாவிலும், நேபாள மன்னரின் அவையிலும் மற்போர் புரிந்துள்ளதாகக் கூறினான். சென்னையிலிருந்து பெங்களூருக்கு வந்து சவால் விட்ட ஒரு மற்போர் வீரனுக்கு எதிராக எவ்வாறு ஒரு ஜெட்டிக்குச் சில நாள்கள் பயிற்சி தந்து இருமுறை போராட விட்டு ரூ. 500- இனை ஒவ்வொரு போரிலும் எளிதாகத் தங்களால் பெற முடிந்தது என்பதனையும் அந்தக் காவல்துறைக் காவலனே என்னிடம் விளக்கிக் கூறினான்.

மைசூரைச் சேர்ந்த ஜெட்டிகள் சிலவீடங்களில் முஷ்டிகள் என அழைக்கப்படுவதாகவும், இவர்களில் சிலர் மல்ல பாஷை எனப்படும் மற்றவர்களுக்கு விளங்காத மொழியினைப் பேசுவதாகவும் கூறப்படுகிறது *

கவரை சாதியாரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலப் பெயராகவும் ஜெட்டி என்பது உள்ளது.

**யூதர் – Jew**

''கொச்சியில் ஆங்கிலேயர் குடியிருப்புக்கு அப்பால் அமைந்துள்ள யூதர்களின் குடியிருப்பைப் போல் வேறொன்று ஒருவருக்கு ஆர்வத்தைத் தூண்டுவதாகவும், வியப்பினை ஊட்டுவதாகவும் இருக்க முடியாது. பச்சைப் பசுஞ்சோலைகளுக்கிடையே அமைந்துள்ள, கொச்சி மாநிலத்திற்கு உரிய ஆங்கிலேயரின் பேராளரின் பணிமனை அமைந்துள்ள அழகிய சிறு தீவான பொகொட்டையை விட்டு அதற்கு அப்பால் உள்ள உப்பங்கழியினைத் தாண்டிச் சென்றால், கொச்சி மன்னரின் பழைய அரண்மனை ஒன்றுக்கு எதிரேயுள்ள தென்னந்தோப்பில்

---

* பெல்லாரி மாவட்டக் கையேடு. (Manual of the Bellary District.)

சென்று இறங்கலாம். கறுத்த நிறமுடைய மலையாளிகள் கூட்டமாகத் திரியும் கடைவீதியின் வழியே சென்று ஒருவன் அதனைக் கடந்தால், குறுகிய நீளமானதொரு தெருவில் அவன் திடீரெனத் திரும்ப நேரிடும். அதில் வட ஐரோப்பிய இனத்தவர்களை ஒத்த வெண்மையான முகத்தோற்றமும் செமிடிக் இனத்தவர்களின் உடற்கூறும் வாய்க்கப் பெற்றவர்களை எதிர்ப்படும்போது தான் செருசலத்தில் உள்ள யூதர்களின் குடியிருப்பினிடையேயோ போலந்து நகரம் ஒன்றில் 'கெட்டோ' எனப்படும் யூதர்களின் தனித்த சேரியிலோ வந்துசேர்ந்து விட்டதாகவே கருதுவான்" என அண்மைக்காலத்தைச் சேர்ந்த எழுத்தாளர் ஒருவர் கூறியுள்ளார்.

பின்வரும் குறிப்புக்களைத் தயாரிக்க 1901 கோச்சி மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையும், யூதர்களின் செய்தித் திரட்டு இதழ்களில் திரு எல்கன் என். அட்லெர் எழுதியுள்ள தொடர் கட்டுரைகளும்* எனக்கு மிகவும் பயன்பட்டன. அவற்றின் தயாரிப்பாளர்களுக்கு என் நன்றி உரியது.

எந்தச் சூழ்நிலையில் எப்பொழுது யூதர்கள் மலபார் கடற்கரையில் வந்தேறினர் என்பது புரிந்து கொள்ள இயலாத புதிராகவே உள்ளது. அவர்களே அதுபற்றிய முழு விவரமும் தர இயலாதவர்களாகத் தனித்த சில நிகழ்ச்சிகளைப் பற்றி மட்டும் விவரம் தரக் கூடியவர்களாக உள்ளனர். அவர்களிடம் இருந்த ஒரு சில ஆவணங்களும் 1565 – இல் கொடுங்கோளூரில் உள்ள அவர்களது பழைய குடியிருப்பினைப் போர்த்துகீசியர் தாக்கி அழித்தபோது தொலைந்துவிட்டதாகக் கூறுகின்றனர். அதில் எஞ்சிய ஒரு சில சின்னஞ்சிறு துண்டுத் துணுக்குகளும், போர்த்துகீசியர்க்கும் டச்சுக்காரருக்கும் இடையே நடைபெற்ற போரில், யூதர்கள் டச்சுக்காரருக்கு உதவினார்கள் எனக் கருதிக் கொச்சியிலிருந்த இவர்களுடைய திருக்கோயிலினைப் போர்த்துகீசியர் கொள்ளையிட்டதில் அழிந்து போயின.

டச்சுக் கவர்னரான மோயென் பதிந்துள்ள செய்திகள்

---

* மே – 11, ஜூன் – 1, ஜூன் 29-1906. இதழ்கள்.

வருமாறு.* "ஹெர் வான் கோயென் கொச்சியினை முற்றுகை யிட்டபோது டச்சுக் குழுமத்தினைச் சேர்ந்த படைவீரர்களுக்கு உணவளிக்க யூதர்கள் ஆர்வத்தோடு முன் வந்ததுடன் அவர் களுக்குத் தங்களால் இயன்ற உதவிகள் அனைத்தையும் செய்த னர். இக் குழுமத்தின் கீழ் தங்களுக்கு மிகப் பெரும் அளவில் சமய, சமுதாய உரிமைகள் கிடைக்கும் என நம்பியே இவர்கள் மேற்கூறிய உதவிகளைச் செய்ய முற்பட்டனர். அடைமழைக் காலம் தொடங்குமுன் இக் குழுமத்தைச் சேர்ந்த படைஞர் கொச்சியினைக் கைப்பற்றாமல் முற்றுகையைக் கைவிட்டுப் பின்வாங்கியதும் போர்த்துகீசியர் யூதர்களை அவர்களுடைய செயலின் கொடிய விளைவுகளை அனுபவிக்கும்படியாகப் பழி வாங்கத் தவறவில்லை. டச்சுக்காரர்கள் பின் வாங்கியவுடன் போர்த்துகீசிய படைப் பிரிவு ஒன்று யூதர்களின் குடியிருப்புக் களுக்கு அனுப்பப்பட்டு அவை சூறையாடப்பட்டுத் தீயிட்டுக் கொளுத்தப்பட்டன. அப்போது அவ்விடத்தை விட்டு மலைப் பகுதிகளில் ஓடி ஒளிந்த யூதர்கள் கொச்சியினை டச்சுக்காரர் கள் மீண்டும் கைப்பற்றிய பின்னரே திரும்பி வந்தனர்.

"மலபாரில் உள்ள இஸ்ரேலியர் இன்னமும் செபெர்தோர (Sepher Thora) பழையபடி ஒன்றினைத் தங்களிடம் வைத்துக் கொண்டிருப்பதாக யூதர்கள் கூறுகின்றனர். அப்படியிருக்கும் போது போர்த்துகீசியர் யூதர்களின் குடியிருப்பினைத் தாக்கி அழித்தபோது தொலைந்து போனதாகக் கூறும் இந்தப் பழைய படியும், பிற ஆவணங்களும் தொலைந்து போயிருக்க வாய்ப்பு இல்லை. போர்த்துகீசியரின் தாக்குதலுக்குள்ளான யூதர்களுக்கு அவர்களுடைய மதிப்பு வாய்ந்த பொருட்களை எல்லாம் காப் பாற்றி உடன் கொண்டு செல்ல அவகாசம் இருந்ததெனத் தெரி கின்றது. அப்படியிருக்க மதிப்பிட்டு அளவு கூற முடியாததான அவர்களுடைய இந்த ஆவணங்களை அவர்கள் உடன் எடுத்துச் செல்லாமல் விட்டுச் சென்றிருக்க நியாயமில்லை. தங்கள் திருக் கோயிலில் அப்போது வைக்கப்பட்டிருந்த அவர்களால்

* டச்சிலிருந்தான இப்பகுதியின் மொழிபெயர்ப்பினைத் தந்து உதவியவர் மறைத்திரு பி. கிரொடெ (Rev, P. Grote).

மிகுதியும் மதித்துப் போற்றிப் பாதுகாக்கப்பட்ட மறை நூலின் புதியதொரு படியினைக்கூட யூதர்கள் தங்களோடு எடுத்துச் சென்று, பின்பு அவர்கள் திரும்பி வந்த சமயம் மிகுந்த ஆரவார மகிழ்ச்சியோடு பழங்காலத்தில் உடன்படிக்கைகள் அடங்கிய பேழையினைக் கொண்டு வந்து வைப்பது போல வைத்தனர் எனக் கூறும்போது இந்த ஆவணங்களை விட்டுச் சென்றனர் என்பது எப்படியும் பொருந்தாது என்றே கருத வேண்டி யுள்ளது.''

பதினெட்டாம் நூற்றாண்டில் காப்டன் ஹாமில்டன் யூதர்களைப் பற்றி எழுதும்போது,* "இவர்கள் கொச்சியில் அரசரின் அரண்மனைக்கு அருகில் தங்கள் திருக்கோயிலை அமைத்திருந்தனர். அங்கே செப்புத் தகட்டில் எரேபிய மொழியில் பொறிக்கப்பட்ட இவர்களுடைய ஆவணங்கள் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தன. அவற்றில் சில எழுத்துக்கள் பழுதுபட்டாலும் நெபுசட் நெச்சார் (Nebuchadnezzar) ஆட்சி காலத்தி லிருந்து அது வரையான யூதர்கள் வரலாற்றைப் புலப்படுத்தும் படியாக அவை மீண்டும் புதிதாக வெட்டப்படும். 1695-ஆம் ஆண்டு வாக்கில் மை ஹீர் வான் ரீத (Myn Heer Van Reeda) யூதர்களின் வரலாற்றுச் சுருக்கத்தை எரேபியத்திலிருந்து டச்சு வழக்கு மொழியில் மொழிபெயர்த்துள்ளார். இவர்கள் தங்களை மானாஷ் செபிரிவினைச் சேர்ந்தவர்களாகக் கூறிக் கொள்கின்ற னர். அவர்களின் ஒரு பகுதியினர் முரடான வெற்றி வீரன் நெபுசட் நெச்சாரின் ஆணையின்படி அவனுடைய பேரரசின் கீழ்க்கோடி மாநிலப் பகுதிக்குக் கலத்தில் கொண்டு செலுத்தப் பட்டனர். அக்கலம் கன்னியாகுமரி வரை வந்தது எனத் தெரி கிறது. அப் பயணத்தில் பாபிலோனிலிருந்து 200, 000 பேர் மூன் றாண்டுகள் பயணம் மேற்கொண்டனர்.''

கொச்சியில் உள்ள வெள்ளை யூதர்களில் முதியவர்கள், வட்டெழுத்தினால் எழுதப்பட்டுள்ள இரண்டு செப்புப் பட்ட யங்களைத் தங்களிடம் வைத்துக் கொண்டுள்ளனர். "வட்டெ

---

* கிழக்கு இந்தியா பற்றிய புதிய விவரம், 1744. (A new account of the East Indies, 1744.)

ழுத்து ஒரு காலத்தில் தமிழ்நாட்டின் பெரும்பாலான பகுதிகளிலும், தென் மேற்குக் கடற்கரைப் பகுதியிலும் வழக்கிலிருந்ததாகும். பின்னர் அது தமிழ்நாட்டில் வழக்கு வீழ்ந்துவிட்டது. தென் மேற்குக் கடற்கரைப் பகுதியில் அது திருந்தியதொரு வடிவத்தில் இந்துக்களான அரசர்களால் ஆவணங்கள் எழுத மட்டும் பயன்படுத்தப்பட்டு வருகின்றது.''* யூதர்களிடம் உள்ள இந்தச் செப்புப் பட்டயங்கள் பற்றித் திரு அட்லெர் எழுதியுள்ளதாவது:- ''வெள்ளை யூதர்கள் இச் செப்புப் பட்டயங்களை முதலிலிருந்தே தாங்கள் வைத்திருப்பதாகக் கூறுகின்றனர். கறுப்பு யூதர்களோ அது முதலில் தங்களிடம் இருந்தது என்பர். இந்த உரிமை ஆவணம் பல வகைகளில் ஆர்வத்தைத் தூண்டும் விசித்திரத் தன்மை வாய்ந்ததாக உள்ளது. மூன்று செப்புத் தகடுகளாலான இதில் ஒன்று எழுத்துக்கள் ஏதும் அற்ற வெற்றுத் தகடே. ஒரு தகட்டில் இரண்டு பக்கங்களிலும் எழுத்துக்கள் செதுக்கப்பட்டுள்ளன. மூன்றாவது தகட்டில் ஒரு பக்கம் மட்டும் எழுத்துக்கள் வெட்டப்பட்டுள்ளன. வெள்ளையாக எதனையேனும் மேலேதடவி எழுத்துக்களைப் படிப்பதற்குப் புலனாகும்படி செய்யலாம். இத்தகடுகளின் ஒரு மூலையில் வட்டமான துளைகள் உள்ளன. அதனவழியே ஒரு கயிறு செலுத்தப்பட்டு அவற்றை இணைத்துக் கட்டி முடிச்சிட்டு அதன் மேல் முத்திரையும் பொறிக்கப்பட்டிருந்தது. முத்திரை தொலைந்து போய்விட இப்பொழுது அத்துளைகள் வழியே தக்கதான ஒரு மெல்லிய செப்புக் கம்பியினைச் செலுத்தி அத்தகடுகளை ஒன்றாகப் பிணைத்து வைத்துள்ளனர்.''

முனைவர் குண்டர்ட்டும்†, திரு எல்லீசும்‡ இப்பட்டயத்தை மொழிபெயர்த்த மொழிபெயர்ப்புக்களின் அடிப்படையில் திரு பர்னெல் அதனைப் பின்வருமாறு மொழிபெயர்த்துள்ளார். #

* ஏ. சி. பர்னெல், இந்தியத் தொல்லியல். (A. C. Burnell, Ind. Ant. III, 1874.)

† சென்னை இலக்கிய அறிவியல் இதழ், 13, பகுதி. 1. (Madras Jounr. Lit. Science, XIII, Part I.)

‡ மேற்குறித்த நூல் – பகுதி II. (Ibid, Part II.)

# முந்து நூல். (Loc. cit.)

ஸ்வஸ்தி ஸ்ரீ. —அரசர்களுக்கெல்லாம் அரசனான பேரரசரான ஸ்ரீ பார்கரன் இரவி வர்மர்* அவர்கள் நூறாயிரம் பகுதிகளிலும் தன் செங்கோல் ஆட்சி செலுத்தி வரும் அவருடைய இரண்டாம் யாண்டுக்கு எதிரதான முப்பத்தி ஆறாம் ஆட்சி யாண்டில் அவர் முயரிக்கோட்டில்‡ இருந்தபோது அருளிச் செய்த ஆணை யாதெனில் யாம் ஈசுப் இரப்பான் (Yusuf Rabban) க்கு அஞ்சுவண்ணத் (என்னும் நாட்டுப் பகுதியையும்) தையும், எழுபத்திரண்டு குடிகளின் உரிமையையும் (இது ஒரு குறுநிலத் தலைவனுக்கு ஒப்பான தகுதியாகலாம்) அத்தோடு வாழ்த்தும் (?) போற்றுதலும், வரியும், அஞ்சுவண்ணத்து வருவாயும், பகலில் தீப்பந்தம் பிடிக்கும் உரிமையும், மேலாடை அணியும் உரிமையும், (மலபாரில் உள்ள வழக்கினுக்கு மாறுபட்டது இது) பல்லக்கும், குடையும், முரசும், சிறு முரசும மாலையும் தெருவில் தோரணங்கள் முதலியனவும், எழுபத்திரண்டு வரி விலக்குச் செய்யப்பட்ட இல்லங்களும் கொடுக்கின்றோம். மேலும் இச்செப்புப் பட்டய ஆணை வழி நகரத்தில் உள்ள வீடுகளுக்குக் கருவூலத்திற்கு அவர் வரி செலுத்தவேண்டியதில்லை எனவும் விலக்கு அளிப்பதோடு (முன்னர்கூறிய) உரிமைகளையும் உடையவர் (வைத்துக் கொள்ளலாம்). அஞ்சு வண்ணத்து இளவரசான ஈசுப் இரப்பானுக்கும் அவர் வழிவரும் சந்ததியினருக்கும், அவர் பிள்ளைகளுக்கும், பெண்களுக்கும், அவரோடு உடன்பிறந்தவர்களின் மக்களுக்கும் அவருடைய பெண்களோடு (உடன்பிறந்தார் பிள்ளைகளுக்கும்) பிறந்தார் பிள்ளைகளுக்கும், அஞ்சு வண்ணத்தை இந்த உலகும் திங்களும் உள்ள காலம்வரை உரிமையோடு பரம்பரையாக ஆண்டு அனுபவிக்க ஆணையிடுகின்றோம். ஸ்ரீ. இந்த பட்டயத்திற்கு உள்ளூர் பெரியோர்கள் பலர் சான்றளித்துள்ளனர்.

---

* பாஸ்கர இரவி வர்மா (Bhāskara - Ravi – Varmā.)

‡ எரேபியத்திலான மொழிபெயர்ப்பில் கொடுங்கோளூர் எனக் கூறப்பட்டுள்ள முயிரி என்பது தாலமியும் பெரிப்ளுசும் செங்கடலில் உள்ளதாகக் குறித்துள்ள முசிறியில் வேறன்று எனக் கூறப்பட்டுள்ளது. இவ்வட்டாரத்திலான வழக்குப்படி இது திருவாங்கூர் பகுதியின் எல்லை முடிந்து கொடுங்கோளூருக்கு எதிரே உப்பங்கழிக்கு அப்பால் உள்ள ஊராகும்.

இதனினும் சிறிது வேறானதொரு மொழிபெயர்ப்பினை முனைவர் ஜி. ஒப்பெர்ட்* பின்வருமாறு தருகின்றார்:-

"வெற்றியும் மகிழ்ச்சியும் நிகழட்டும்! அரசர்களுக்கு அரச ரான தன் செங்கோலாட்சியினை நூறு ஆயிரம் இடங்களில் செலுத்தும் பேரரசர் ஸ்ரீ பாஸ்கர இரவி வர்மா முசிறி கோட்டில் எழுந்தருளியிருந்தபோது, தனது முப்பத்தி ஆறாம் ஆட்சி ஆண்டில் இந்த ஆணையினைப் பிறப்பிக்கின்றார். யாம் சோசப் இரப்பன் அஞ்சு வண்ணனுக்கு எழுபத்திரண்டு உரிமைகளோடுங்கூடிய இளவரசர் என்ற தகுதியினைத் தருகின்றோம். அவர் பெண் யானைகள், ஏறிச் செல்வதற்குரிய விலங்குகள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் வரியினையும், அஞ்சு வண்ணத்தின் வருவாயையும் பெற்று அனுபவிக்க உரிமையுடையவர். பகலில் விளக்கு, அகன்ற ஆடை, தூக்கு நாற்காலி, குடை, வடக்கத்திய முரசு, எக்காளம், சிறு முரசு, வாசல் தெருத் தோரணம், மாலை முதலியனவற்றை வைத்துக் கொள்ளும் உரிமையினையும் வழங்குகின்றோம். நிலவரியும், எடைவரியும் வாங்கும் உரிமையும் அவருக்கு எம்மால் தரப்படுகின்றது. மேலும் இந்தச் செப்புப் பட்டய ஆணை வழி நகரில் உள்ள வீடுகள் கருவூலத்தில் வரி செலுத்தும்போது இவர் வரி செலுத்த வேண்டியதில்லை எனவும் அது போன்ற மற்ற உரிமைகளையும் அனுபவிக்கலாம் எனவும் நாம் அனுமதி வழங்குகின்றோம். அஞ்சு வண்ணத்தின் இளவரசான சோசப் இரப்பனுக்கும், அவன் சந்ததியினருக்கும், பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும், உடன்பிறந்தார் மக்களுக்கும், பெண்களின் மருமக்களுக்கும், பரம்பரை உரிமை உடையனவாக இந்தப் பூஉலகும் திங்களும் உள்ளவரை அஞ்சுவண்ணம் அவர் பரம்பரை உரிமை உடமையாகும் என ஆணையிடுகின்றோம்." முனைவர் ஒப்பெர்ட் அஞ்சுவண்ணம் என்பதனை ஐந்தாவது அல்லது வெளியார் சாதியாகலாம் எனக் கருத்துத் தெரிவித்துள்ளார்.

செப்புப் பட்டயங்கள் தொடர்பான ஆய்வில் அண்மைக் காலத்தில் முன்னணியில் இருக்கும் அறிஞராகக் கருதப்படும்

---

* Uber die Judischen Colonlien in Indien. Kohut Memorial Volume, Semitic Studies, Berlin, 1897.)

முனைவர் இ. கியுல்ட்ச் தந்துள்ள மொழிபெயர்ப்பு:-* "வாழ்க! நலம் சிறக்க! (பின்வரும்) கொடை (பிரசாதம்) கலை அரசருக்கு அரசரா (கோர்க்கோன்) ன உடையவரா (திருவடி) ன மன்னர் பெருமைக்குரிய பாஸ்கர இரவிவர்மர் நூறாயிரம் இடங்களின் மீது தனது செங்கோலாட்சியினைச் செலுத்தி வருகின்ற இரண்டாம் ஆண்டிற்குப் பின்னதான முப்பத்தி ஆறாம் ஆட்சியாண்டில் முசிறிக் கோட்டில் எழுந்தருளியிருந்தபோது அருளிச் செய்கின்றார். யாம் ஈசுப்ப இரப்பனுக்கு அஞ்சுவண்ணத் (இப்பெயரிலான ஊர்) தினை எழுபத்திரண்டு பொருள்களின் உரிமையோடும், பெண் யானைகள் மற்றும் ஊர்ந்து செல்வதற்கான விலங்குகளிலிருந்து கிடைக்கும் வரியோடும், அஞ்சுவண்ணத்திலிருந்து கிடைக்கும் வரியோடும், பகலில் விளக்கு, தரையில் விரிக்கும் யாத்து (நடப்பவர் முன் இடும் விரிப்பு), ஒரு பல்லக்கு, ஒரு குடை, ஒரு வடுகு (தெலுங்கு) முரசு, ஒரு பெரிய எக்காளம், ஒரு நுழைவாயில், ஒரு மேற்கட்டி, (மேல் வளைவாய் அமைந்தது), ஒரு நடை வழி, ஒரு மாலை முதலியனவற்றையும் உரிமையாக வழங்குகின்றோம். அவர் செலுத்த வேண்டிய சுங்கமும் வரியும் தவிர்க்கப் படுகின்றன. மேலும் இந்தச் செப்புப் பட்டயத்தோடு யாம் இந்த நகரத்தில் வாழ்பவர்கள் அரண்மனைக்குச் செலுத்துவது போன்ற வரியினைச் செலுத்த வேண்டியதில்லையெனவும் அவ்வாறு செலுத்தாமலே நகரத்தைச் சேர்ந்தவர் அநுபவிக்கும் உரிமைகளை அனுபவிக்கலாம் எனவும் உரிமை வழங்குகின்றோம். அஞ்சுவண்ணத்தைச் சேர்ந்த ஈசுப்பு இரப்பனுக்கும் அவருக்குப் பிறக்கும் ஆண் பெண் சந்ததியினருக்கும், அவர் உடன் பிறந்தார் பிள்ளைகளுக்கும், அவர் பெண்களை மணந்து கொள்ளும் மருமக்களுக்கும் யாம் அஞ்சுவண்ணத்தைப் பரம்பரை உரிமையாக இப்பூவுலகமும் திங்களும் உள்ளவரை அனுபவிக்கத் தருகின்றோம். வாழ்க. இதனை நான் அறிவேன், -வேணாட்டைச் சேர்ந்த கோவர்த்தன மார்த்தாண்டன். இதனை நான் அறிவேன், - ஏராள நாட்டைச் சேர்ந்த மானவேபல மானவையன். இதனை நான் அறிவேன், - நெடும்புரையூர்

* இந்தியக் கல்வெட்டியல், தொகுதி, III, 1894-95. (Epipraphia Indica III,1894-95.)

நாட்டைச் சேர்ந்த கோடை ரவி. இதனை நான் அறிவேன்,- படையின் துணைத் தளபதியாளனாக இருக்கும் மூர்க்கம் சாத்தன். நேர்முக உதவிச் செயலன் வண்டலைச் சேரியைச் சேர்ந்த கண்டன் குன்றப் போலன் எழுத்து இது. "இந்தப் பட்டயம் கொடுக்கப்பட்ட நாள் நான் முன்பே* விளக்கியுள்ளபடி இரண்டாம் ஆண்டுக்கு எதிரதான முப்பத்தி ஆறாம் ஆண்டாகும். புதிரான இந்தத் தொடரின் பொருள், அரசரின் இளவரசாக முடிசூட்டப்பட்ட இரண்டாம் ஆண்டுக்குப் பின் முடிசூடிக் கொண்ட முப்பத்தி ஆறாம் ஆண்டு என்பதாகலாம். இப் பட்டயம் அரசர் ஈசுப்பு இரப்பன் (சோசப் இரப்பான்) என்பவனுக்கு வழங்கிய கொடையைப் பற்றிப் பதிவு செய்யப்பட்ட ஆவணமாகும். இப்பட்டயத்தில் இடம் பெற்றுள்ள செமிட்டிக் பெயரோடு, இப்பட்டயம் இன்றளவும் கொச்சியில் உள்ள யூதர்களிடம் இருப்பதும் யூதர்கள் இப்பட்டயத்தின் எரேபிய மொழிபெயர்ப்பு ஆவணம் ஒன்றினைத் தங்களிடம் வைத்திருப்பதும் ஆகிய இரண்டினையும் ஒன்றாக வைத்து எண்ணிப் பார்க்கும்போது இதனைக் கொடையாகப் பெற்றவன் மேற்குக் கடற்கரையில் பழங்காலத்தில் யூதர் சேரியில் வாழ்ந்த ஒருவனாகவே இருக்க வேண்டுமென்பதனை அவை மெய்ப்பிக்கின்றன. இந்தக் கொடை முரியிக் கோட்டிலிருந்து வழங்கப்பட்டுள்ளது. பட்டயத்தின் எரேபிய மொழிபெயர்ப்பு இவ்விடத்தினை யூதர்கள் குடியமர்ந்த இடமான கொடுநல்லூர் (கொடுங்கோளூர்) எனச் சுட்டுகிறது. போர்த்துகீசியரால் தொல்லைக்கு உள்ளாகும் வரை இந்த இடத்தில் குடியிருந்த யூதர்கள் அதன்பின் கொச்சியில் சென்று குடியிருந்தனர். கொடையாகத் தரப்பட்ட பொருள் அஞ்சுவண்ணம். இந்தச் சொல் 'ஐந்து சாதிகள்' எனப் பொருள்பட்டு, இந்தச் சொல்லால் சுட்டப்படும் ஐந்து சாதியாரும் கொடுங்கோளூரில் குடியிருந்த இடத்தைக் குறிப்பதாக ஆகலாம். அங்கே ஐவகைக் கம்மாள வகுப்பார் - இவர்கள் சிறுகோட்டயம் பட்டயத்தில் ஐங்கம்மாளர் என அழைக்கப்பட்டுள்ளனர் - வாழ்ந்து வந்தனர்" என முனைவர் கியுல்ட்ச் மேலும் கூறியுள்ளார்.

---

* இந்தியத் தொல்லியல், XX, 1891. (Ind. Ant. XX, 1891.)

சிரியன் கிறித்தவர்களிடம் உள்ள வீரராகவன் அளித்த கோட்டயம் பட்டயத்தின் மீதான ஒரு குறிப்பில் ராவ் பகதூர் வி. வெங்கய்யா பின்வருமாறு எழுதுகின்றார்*:- ''வீரராகவன் மணிக்கிராமம் என்ற பட்டத்தை இரவிக்கொற்றன் என்ற வணிகருக்கு வழங்கினான். இது போன்றே அஞ்சுவண்ணம் என்ற பட்டம் கொச்சிப் பட்டயத்தால் யூதனான சோசப் இரப்பானுக்கு வழங்கப்பட்டுள்ளது. மலையாளப் பாடல்களுள் மிகத் தொன்மையானது என முனைவர் குண்டர்ட் கருதும் பய்யனூர் பாட்டோலை எனப்படும் நூல் அஞ்சுவண்ணம், மணிக்கிராமம் என்பன பற்றிக் குறித்துள்ளது. இந்த இரு பெயர்களும், அந்த நூலில் இடம் பெற்றுள்ள பொருந்து சூழலினை வைத்துப் பார்க்கும்போது, வணிகக் குழுமங்களின் பெயர்கள் என்பது குறிப்பாகப் புலனாகின்றது. தாணு ரவியின் கோட்டயம் பட்டயத்தில் அஞ்சுவண்ணம், மணிக்கிராமம் என்பன பலமுறை கூறப்பட்டுள்ளன. இவ்விரு குழுமங்களும் அறுநூற்றவர்களோடு பட்டயத்தின் பாதுகாவலர்களாக அமர்த்தப்பட்டுள்ளனர். இவர்கள் 'அன்றாடம் பெறப்படும் வணிகர் வரியினைப் பாதுகாப்பதோடு நில உரிமையாளர்களுக்குரிய பங்கான நிலவரியையும் பெற்றுக் கொள்ள வேண்டும். இவர்களுக்கு ஏதேனும் அநீதி இழைக்கப் படுமானால் இவர்கள் வணிகர்களின் சுங்க வரியினையும் நில வரியினையும் தங்களிடமே வைத்துக் கொண்டு தங்களுக்கு ஏற்பட்ட குறையினைத் தீர்வு செய்து கொள்ளலாம். இவர்களுள்ளே யாரேனும் குற்றம் இழைக்க நேர்ந்தால் அதனை இவர்களே விசாரணை செய்துகொள்ள வேண்டும். அஞ்சுவண்ணத்திற்கும் மணிக்கிராமத்திற்கும்(கொல்லம்?)நகரில் வரியிலி நிலங்கள் வழங்கப்பட்டன. இந்த மேற்கோள் பகுதிகளிலிருந்தும் பைய்யனூர் பாட்டோலை சுட்டும் குறிப்பிலிருந்தும் அஞ்சுவண்ணம், மணிக்கிராமம் ஆகியன ஒரு பகுதி தனி உரிமை உடைய வணிகக் குழுமங்கள் என்று தோன்றுகின்றது. ரவிக்கொற்றனுக்குத் தரப்பட்டுள்ளதான செட்டி (வணிகன்) என்ற அடைமொழியும்,

* இந்தியக் கல்வெட்டியல், IV, 1896-97. (Epigrahia Indica, IV, 1896-97.)

அவனுக்கு வழங்கப்பட்டுள்ள வணிக உரிமைகளும் மணிக் கிராமத்தின் தலைவன் என்ற வகையில் அவன் பெறுவதற்குரிய வருவாயும் ஆகிய இவற்றின் அடிப்படையில் பார்க்கும்போது மணிக்கிராமம் என்பது ஒரு வணிகக் கழகம் என்பது உறுதியா கின்றது. கொச்சிப் பட்டயத்திலோ அல்லது அதன் பின் தொடர்ச்சியான கல்வெட்டிலோ கூட முனைவர் குண்டர்ட் அவர்களாலும் மற்றவர்களாலும் கருதப்படுவதைப் போல அஞ்சுவண்ணமும் மணிக்கிராமுமம் முறையே யூதர்களும் கிறித் தவர்களும் தனித்து வாழ்ந்த நகரங்கள் என்பதற்கான ஆதாரங் கள் ஏதும் இல்லை. வீர ராகவனுடைய பட்டயம் மணிக்கிராமம் நகரியத்தையும், கொச்சி பட்டயங்கள் அஞ்சுவண்ணம் நகரி யத்தையும் அமைத்துத் தந்தனவென்றும் அவ்வாறு அவை உரு வாக்கப்பட்டு விட்ட காரணத்தினாலேயே தாணு ரவியின் பட்டயங்களில் அவ்வாறு அமைந்துவிட்ட அவற்றின் பெயர் கள் அடிக்கடி சுட்டப்படுகின்றன எனவும் முனைவர் பர்னெல் கருதுகின்றார். கொச்சிப் பட்டயங்கள் அஞ்சுவண்ணத்தை உருவாக்கவில்லை. அவை அந்த நகரியம் தொடர்பான சிறப் புக்களையும் உரிமைகளையும் சோசப் இரப்பன் என்ற யூதனுக் கும் உரியன என வழங்குகின்றன. அதே போல மற்றொரு நகரியக் குழுமமான மணிக்கிராமத்தின் உரிமைகளையும, சிறப் புக்களையும் பின்னொரு சமயத்தில் இரவிக் கொற்றன் என்ப வனுக்கு வழங்கப்படுகின்றன. எனவே அஞ்சுவண்ணமும் மணிக்கிராமமும் குழுமங்களாக இந்த மூன்று செப்புப் பட்ட யங்களும் வழங்கப்படுவதற்கு முன்பே இருந்தனவாதல் வேண்டும். இரவிக் கொற்றன் கிறித்தவ சமயத்தவன் எனக் கருத இடமுள்ளது. அதன் பெயரும் பட்டப் பெயரும் இவ்வாறு கொள்ளத் துணை செய்வனவாக இல்லை. அவனுக்கு வழங்கப் பட்ட பட்டயத்தை இன்று கிறித்தவர்கள் தங்களிடம் வைத்துள் ளார்கள் என்பதனைத் தவிர அப்பட்டயத்தில் வேறு கிறித்த வத் தொடர்பு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.''

'பெருமாள்களின் நாடு அல்லது கொச்சியும் அதன் சென்ற காலமும் இன்றைய நிலையும்' என்ற தன்னுடைய நூலில்

பிரான்சிஸ் டே* ஆளுநர் மொயென் (Moen) யூதர்களினுடைய செப்புப் பட்டயங்களின் மூன்று வகையான மொழிபெயர்ப்புக் களைப் பெற்றதாகவும் அவற்றுள் பெரும் அளவு சரியானதாக உள்ள மொழிபெயர்ப்பில் பின்வரும் சொற்கள் இடம் பெற் றிருப்பதாகவும் கூறுகின்றார்:- "நாம், எரவி, வான்வர, மல பார் பேரரசர் ... இந்தப் பட்டயத்தை நல்லரான சோசப் இரப் பனுக்கு உரிமையாக்குகின்றோம். அவர் ஐந்து வண்ணங்களைப் பயன்படுத்தலாம். தன்னுடைய சமயத்தை மக்களிடையே பரப் பலாம்.'' திரு பர்னெல் இதனை ஒப்புக் கொள்ளாதவராக, முனைவர் குண்டர்ட் அஞ்சுவண்ணம் (நேர் பொருள் ஐந்து வண்ணங்கள்) என்பது சில உரிமைகளைக் குறிப்பதாகாது எனக் கூறியிருப்பதோடு அது ஓர் இடத்தின் பெயரெனவும் ஐயத்திற்கு இடமின்றி உறுதிப்படுத்தியுள்ளார் என்பதனையும் சுட்டிக் காட்டியுள்ளார்.

செப்புப் பட்டயங்கள் தொடர்பாக ஆளுநர் மொயென் பின்வருமாறு எழுதுகின்றார்'- "பின்வரும் மொழிபெயர்ப்பு யூத வணிகரான எஸ்க்கியெல் ராப்பெயினால் தரப்பட்ட தாகும். இவர் தன் நாடு தொடர்பான எதனையும் நேர் மையுடன் ஆய்பவர். இதன்பின் எங்கள் இரண்டாவது மொழிபெயர்ப்பைத் தருகின்றேன். இவருக்கு மலபாரைச் சேர்ந்த ஒரு பழம்பெரும் புலவர் இம்மொழிபெயர்ப்புக்கு உதவியாளராகச் செயல் புரிந்துள்ளார். இறுதியாக மூன்றா வதான ஒரு மொழிபெயர்ப்பினை நான் தருகின்றேன். இம் மொழிபெயர்ப்பு எங்கள் முதல் மொழிபெயர்ப்பாளரான தோன்செரெனைச் சேர்ந்த சைமன் அவர்களால் தரப் பட்டது. அவருக்குக் கள்ளிக்கோட்டையைச் சேர்ந்த உள் நாட்டு இந்துவான படி எழுதும் ஒருவர் உதவி செய்துள்ளார். யூதர்களோடு தொடர்புடையதான ஐயத்திற்கு இடமான இதில் அவர்களிடமே முழுப் பொறுப்பையும் ஒப்படைக்காமல் பார்த் துக் கொள்ளவே இந்த உதவியாளர்கள் ஏற்பாடு செய்யப்பட்டுப்

---

* Francis Day - The Land of the Perumauls or Cochin, its past and its present, 1863.

படிப்பவர்கள் தாங்களாகவே முடிவினை மேற்கொள்ளத் துணை செய்யும் வகையில் மூன்று மொழிபெயர்ப்புகளும் தரப்படு கின்றன. அவற்றுள் முதல் மொழிபெயர்ப்புப் பின்வருமாறு அமைந்துள்ளது:--

"'இந்த அண்டத்தைப் படைத்து அதற்கு அரசர்களையும் படைத்தளித்தவரான கடவுளின் உதவியோடு அவரைப் போற்று பவரான மலபாரின் பேரரசரான இரவிவர்மனாகிய நான் எமது மகிழ்ச்சிக்கு உரியதான 36-ஆம் ஆட்சி ஆண்டில் கொடுங் கோளூர் என வழங்கும் மொய்திரிக் கோட்டையிலிருந்து இந்தக் கொடையினை வழங்குகின்றோம். இக்கொடையினால் யூத னான சோசப் இரபான் பின்வரும் தனி உரிமைகளை அனுப விக்கலாம். அவையாவன:-அவர் ஐந்து வண்ணங்களைப் பயன் படுத்தலாம். தன் சமயத்தை ஐந்து சாதியாரிடமும் மற்ற பரம் பரையினரிடமும் பரப்பலாம். எல்லாப் புனிதச் சடங்கு நிகழ்ச்சி களிலும் நெருப்பை வழிபடலாம். யானைகளிலும் குதிரைகளி லும் ஏறிச் செல்லலாம். அரசுலா வரலாம், கட்டியங் கூறு பவர்களைக் கொண்டு தன் பெருமையினைக் கூறிக் கொள்ள லாம். பகலில் தீப்பந்தங்கள் பிடிக்கலாம். பலவகை வாத்தியங் களோடு பெரிய முரசினையும் வைத்துக் கொள்ளலாம். சாலை யில் நடக்கும்போது வெள்ளைத் துணியை விரிப்பாக விரித்துக் கொள்ளலாம். கழிகளைக் கொண்டு விளையாட்டுப் போட்டி களை நடத்தலாம். மேற்கட்டியின் கீழ் அரசிருக்கை வீற்றிருக் கலாம். சோசப் இரபானுக்கும் அவன் குடும்பத்தைச் சேர்ந்த எழுபத்தி இரண்டு வீட்டாருக்கும் மேற்கண்ட உரிமைகளை வழங்குகின்றோம். கதிரவன் இந்த உலகினை ஒளி செய்யும் காலம்வரை சோசப் இரப்பானுக்கும் அவருடைய பரம்பரை யினருக்கும் இந்த ஆணைக்கு இணங்க நாட்டைச் சேர்ந்த மற்றவர்கள் கீழ்ப்படிந்து நடக்கக் கடமைப் பட்டவர்கள். இந்த ஆணை திருவாங்கூர், தெக்கென்கூர், பத்தென்கென் கோர், களிகோல்ன். அரின்குட், சம்மொரியன், பால்கட் செரி, கொலத்திரி ஆகிய அரசர்களின் முன்னிலையில் வழங் கப்படுகின்றது. கலியுகம் 3481-ஆம் ஆண்டு நேர் முக உதவி யாளன் களெம்பி கௌப்பனால் இது எழுதப்பட்டது.

"இரண்டாவது மொழிபெயர்ப்பு முதல் மொழிபெயர்ப்பி லிருந்து முக்கியமான அறிவிப்புகளில் மாறுபடுவதால் இந்த மொழிபெயர்ப்பின் உண்மைத் தன்மையை உறுதிப்படுத்தும் வகையில் மலபாரைச் சேர்ந்த நடுநிலையாளர்களைக் கொண்டு மேலும் ஆய்வதற்குரியதாக இது உள்ளது. அத்தகையவர்களைத் தேடுவதான என்னுடைய முயற்சி இதுவரை எந்தப் பயனையும் அளிக்கவில்லை. இரண்டாம் மொழிபெயர்ப்புப் பின்வருமாறு செல்கின்றது:-

"'இரவி வான்வர ஆகிய யாம் பல நூறாயிரம் ஆண்டுகள் நீதியும் நேர்மையுமான வழியில் நமக்கு முன் ஆண்ட பெரு மைக்கு உரியவர்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி ஆண்டு வருகின்ற அமைதியும் மகிழ்ச்சியும் நிறைந்த நமது ஆட்சியில் மொய்திரி கோட்ட நகரில் தங்கி வாழ்கின்ற 36-ஆம் ஆண்டினதான இந்த இரண்டாம் ஆட்சியாண்டில் சோசப் இரபானிட மிருந்து பெற்ற அனுபவத்தின் அடிப்படையிலான சரியான சான்றுகளின் அடிப்படையில் அவருக்குப் பின்வரும் கொடை யினை இதன் மூலம் வழங்குகின்றோம். மேலே கூறப்பட்டவர் ஐந்து வண்ணங்களோடு கூடிய நீண்ட உடைகளைத் தரிக்க லாம். வண்டி முதலான வாகனங்களை அவற்றினுக்கு உரிய உடமை உரிமையோடு இவர் பயன்படுத்தலாம். பெருமக்க ளுக்குரிய விசிறிகளும் இவருக்கு உரியன. ஐந்து சாதி யாரினும் மேம்பட்டவரான இவர், பகலில் விளக்கை ஏற்றிக் கொள்ளவும் விரிக்கப்பட்ட மாத்துத் துணி மீது நடக்கவும், பல்லக்கினை வைத்துக் கொள்ளவும் அனுமதிக்கப் படுகின்றார். பெயங்குடையும், நீண்டு வளைந்த எக்காளமும், முரசும், தண்டும், மேற்கட்டியுடைய இருக்கையும் ஆகியனவும் இவருக்கு உரியன். நாம் இவருக்கு இங்கும் மற்ற இடங்களி லும் உள்ள 72 குடும்பங்களதும் அவற்றைச் சேர்ந்த கோயில் களின் மீதான உரிமைகளையும் வழங்குவதோடு அந்த இரு வீடுகளுக்கான வரி உரிமைகளையும் சுங்கங்களையும் விட்டுவிடு கின்றோம். இவர் எங்கு வேண்டுமானாலும் தன் இருப்பிடத்தை அமைத்துக் கொள்ளலாம். இந்த ஆணையில் கூறப்பட்டதான எல்லாச் சலுகைகளையும் முதன்மை உரிமைகளையும் ஐந்து

சாதிகளின் தலைவரான சோசப் இரபானுக்கும், அவன் பரம்பரையினருக்கும், பிள்ளைகளுக்கும், பெண்களுக்கும், பேரன்களுக்கும், பெண்களை மணந்து கொண்ட மருமகன்களுக்கும் அவர்களுடைய வழித்தோன்றல்களுக்கும் சூரிய சந்திரர் உள்ள வரை அனுபவிக்கும்படி ஐந்து சாதிகள் மீதான அனைத்து அதிகாரங்களையும் அவர் பரம்பரையினர் பெயர் உள்ளவரை வழங்குகின்றோம். இதற்குச் சான்றாவார் வேணாட்டுத் தலைவன் கோதை சேரி கண்டன் என்பான். ஏரள நாட்டுத் தலைவனான மான பெப்பலமான் என்ற தலைவன். வள நாட்டின் தலைவனான தரவரென் சாத்தன். நெடுவாழூர் நாட்டின் தலைவனான கோடை த்ரவி. இவர்களோடு கூசுபதி பவகான் நிலப்பகுதியை ஆண்ட குறுநில மன்னரான மூர்கம்சாத்தன் வழிவந்தவனான கெலொகண்டனும் சான்றாவான். இதனை எழுதியவன் செயலாளனான குணவெந்தவசென் நாயர் கீசப கௌப; பேரரசரின் கையொப்பம்.

"'மூன்றாம் மொழிபெயர்ப்பு இதுபோலச் செல்கின்றது:—

"'தனது ஆனந்தத்திலிருந்து இந்த உலகனைத்தையும் படைத்து நேர்மையையும் நீதியினையும் காத்து வருகின்ற எல்லாம் வல்ல இறைவனது பெயரால் இரவி வர்மனாகிய யாம், என் கரங்களை உயர்த்திக் கொடுங்கோளுரிலிருந்து ஆளும் நான் முரிக்கோட்டையில் இருந்தபோது பெருந் தலைவனாகிய அவனுக்கு அவனுடைய கருணைக்காகவும் வாழ்த்துக்காகவும் நன்றி செலுத்துகின்றேன். நான் என்னுடைய அமைச்சனான சோசப் இரபனுக்குத் தக்க காரணத்தோடு பின்வரும் உரிமைகளை வழங்குகின்றேன். அவன் அஞ்சு வண்ணத் துணிகளையும் நீண்டு தொங்கும் உடைகளையும் அணிவதோடு தோள்களின் மீதும் சிலவகைத் துணிகளை இட்டுக் கொள்ளலாம். அவர்கள் ஒன்றாகக் கூடி மகிழலாம். முரசுகளையும் தம்புராக்களையும் பயன்படுத்தலாம். பகலில் விளக்கு எரிக்கலாம், நடந்து செல்லும் சாலைகளில் துணிகளை விரித்துக் கொள்ளலாம், பல்லக்கு, குடை, எக்காளப் பந்தம், எரியும் பந்தம் ஆகியவைகளைப் பயன்படுத்தலாம். மேற்கட்டியின் கீழ் அரியணை(?)யில் இருக்கலாம். எழுபத்தி இரண்டு

வீடுகளுக்கு உரிய யூதர்கள் அனைவருக்கும் தலைவராகச் செயல் படலாம். அவர்கள் நாட்டின் எப்பகுதியில் வாழ்ந்தாலும் இவருக்கு நாட்டுக்குரிய சுங்கமும் வரியும் செலுத்த வேண்டும். இந்தச் சலுகைகளை நான் சோசப் இரபானுக்கும் அவன் வழி வரும் சந்ததியினருக்கும் - அவர்கள் ஆண்களாயினும் பெண் களாயினும் - அவர்களுள் ஒருவன் மட்டும் உயிரோடு இருக்கும் வரையும் சூரிய சந்திரர் உலகில் ஒளி செய்யும் வரையும் உரிய தாக்குகின்றேன். இதன் காரணமாகவே நான் இந்த ஆணையை என்றும் நினைவில் நிலைக்கும்படி செப்புத் தகட்டில் பொறிக்கச் செய்துள்ளேன். இதற்குச் சான்றாகும் அரசர்கள். திருவாங்கூர் பெர்க்கென்கொரெ, சமோரின், அரன்கொல்ல பல்கட்செரி, கொல்லஸ்திரி, மற்றும் கொரம்பெநாடு. இதனை எழுதியவன் செயலர் கேளப்பன்.

'''மேற்கண்ட செப்புப் பட்டயம் பழைய கொச்சையான வடக்குப் பகுதிக்குரிய தமிழில், வடமொழியிலும் தமிழிலுமாக வேறு வகையாக எழுதப்பட்டுள்ளது. இப்பொழுது இதனை இந்து சமயத்தவனான படி எழுதும் கல்லுட்டில் அட்சுச என்பவன் மொழிபெயர்த்தான். கள்ளிக்கோட்டையில் பிறந்த இவன் போரின்போது அங்கிருந்து ஓடியவனாவான். தற் பொழுது குன்றுகளின்மீது உள்ள குடியிருப்பில் தங்கி வாழ்ந்து வருகின்றான்.

'''இந்த மொழிபெயர்ப்புக்களை ஒன்றோடு ஒன்று ஒப் பிட்டுப் பார்க்கும் போது முதல் மொழிபெயர்ப்பிலிருந்து புலனாகும் செய்தியாகச் சலுகைகள் யூதனானசோசப் இரப்பனுக் கும் 72 யூதர் குடும்பங்களுக்கும் வழங்கப்பட்டதாக அறிகின் றோம். இரண்டாவது மொழிபெயர்ப்பில் யூதன் என்ற சொல்லின் அடையாளமே காணப்படவில்லை. மூன்றாவது மொழிபெயர்ப்பில் சோசப் இரப்பன் யூதன் எனக் கூறப் படாமல் அமைச்சர் எனக் கூறப்பட்டுள்ளான். எனினும் தொடர்ந்து கூறப்பட்டுள்ள செய்திகள் அவனை ஒரு யூதன் எனக் கொள்ள இடந்தருகின்றன. அவன் 72 இல்லங்களைச் சேர்ந்த மற்ற யூதர்களுக்குத் தலைவனாக

அமர்த்தப்பட்டதால் இவ்வாறு கொள்ள இடம் ஏற்படு கின்றது. இரப்பான் என்ற பெயர் யூதர்களுக்கு மட்டுமே உரியது எனக் கொள்ள முடியாது என்பதும் தெளிவு. மேலும் முதலா வது மூன்றாவது மொழிபெயர்ப்புக்களில் மேற்கூறப்பட்ட சலுகைகள் சோசப் இரப்பனுக்கு மட்டும் வழங்கப்படாமல் 72 குடும்பத்தவர்களுக்கும் சேர்த்து வழங்கப்பட்டதாகக் கூறப் பட்டுள்ளது. இரண்டாவது மொழிபெயர்ப்பில் அவை சோசப் இரப்பனுக்கும், அவன் குடும்பத்தினருக்கும், வழித் தோன்றல் களுக்கும் மட்டுமே வழங்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. இரண்டாவது மொழிபெயர்ப்பில் இதனோடு கூட ஐந்து சாதியாரிடையே யூதர்கள் சமயத்தைப் பரப்புவதற்கான உடன் பாடும் உரிமையும் கூறப்படவில்லை. இவையெல்லாம் இந்த மொழிபெயர்ப்புகள் தம்முள் ஒத்தனவாக இல்லை என்பதனை யும்,முதலாவது மூன்றாவது மொழிபெயர்ப்புகள் பெரிதும் இரண் டாவது மொழிபெயர்ப்பை விடத் தம்முள் ஒத்துச்செல்வன என்ப தனையும் வெளிப்படையாகப் புலனாக்குகின்றன. தனித்து நிற்கும் இரண்டாவது மொழிபெயர்ப்பை விட முதலாவது மூன் றாவது மொழிபெயர்ப்புக்களே நம்புவதற்குரியனவாகின்றன. உண்மையைச் சொல்லவேண்டுமானால் மலபார் மொழியினை அறியாத நான் இதன் அடிப்படையிலே இது பற்றிய என்னுடைய கருத்துக்களைக் கூற விரும்பவில்லை. மலபாரையோ, கன்ன டத்தை (மாவட்டம்) சேர்ந்த இந்தப் பழைய எழுத்து வடிவங் களையோ நான்காவது முறையாக மொழிபெயர்க்கக் கூடிய அறிவாற்றல் வாய்ந்த இலக்கியப் பயிற்சியுடைய இந்தியத் துறவிகளை நான் இதுவரை கண்டுபிடிக்க இயலவில்லை. இந்தப் பழைய எழுத்துக்களின் உண்மை வடிவங்களைக் கண்டறிய இதன்படியினை நான் கொச்சியின் வட, தென் பகுதிகளுக்கு அனுப்பி வைத்தேன்.

"'இந்தக் கொடைக்கான பட்டயம் வழங்கப்பட்டபோது அறிவோராக உடன் இருந்தவர்களும் மொழிபெயர்ப்புகளில் வேறுபடுகின்றனர். இது தொடர்பாகவும் முதல், மூன்றாம் மொழிபெயர்ப்புகள், இரண்டாம் மொழிபெயர்ப்பிலிருந்து மாறுபட்டுத் தம்முள் இயைந்தனவாக உள்ளன. இரண்டாம் மொழிபெயர்ப்பு வேறுபட்டதாக அமையக் காரணம் அதில்

அறிவோராக இருந்தவர்களின் பெயர்கள் கூறப்படாமல் அவர்கள் அச்சமயத்தில் வகித்த பொறுப்புகள் மட்டுமே சுட்டப்பட்டிருப்பதுதான். முதல் மூன்றாம் மொழிபெயர்ப்புகளில் உள்ள தவறு இந்தச் சாட்சிகள் அரசர்களாகக் கூறப்பட்டிருப்பது தான். அவ்வாறு இவர்கள் அரசர்களாகக் கூறப்பட்டுள்ள இடங்களின் பெயர்கள் பிற்காலத்தில் அந்த இடங்களுக்கு வழங்கிய பெயர்களாகும். அவை இன்றும் அப்பெயர்களாலேயே வழங்கி வருகின்றன. இரண்டாம் மொழிபெயர்ப்பு அவர்களைப் பேரரசின் காலத்தில் அவர்கள் இருந்ததைப் போல நாடுகளின் தலைவர்கள் என்றே கூறுகின்றது. இந்நாட்டின் தலைவர்கள் அப்பொழுது அரசர்களாக இருக்கவில்லை. மலபார் பேரரசு நான்கு முக்கிய அரசுகளாகவும், வேறுபல குறுநிலங்களாகவும் பிரிவுபட்ட பின்பே இத் தலைவர்கள் அரசர்கள் என்ற பட்டத்தைத் தரிக்கத் தொடங்கினர். கொச்சி அந்த நான்கு முக்கிய அரசுகளில் ஒன்றாக இருப்பினும் அந்நாட்டின் தலைவர் முதலாம் மூன்றாம் மொழிபெயர்ப்புகளில் அப்பெயரால் கூறப்படவில்லை என்பதனை ஏற்றுக் கொள்ளவே வேண்டும். நான் தெளிவிற்காகவே இதனை இங்குக் கூறுகின்றேன். இந்தப் பட்டயத்தைப் படிக்கும்போது மலபார் பேரரசின் குறுநிலத் தலைவர்கள் தங்களை அரசர்கள் என அழைத்துக் கொண்டது பற்றி எவரும் வியப்பு அடைய வேண்டியதில்லை. அச் சமயத்தில் அந்தப் பேரரசு பிரிவுபடவில்லையாகையால் அவர்கள் அரசர்களாக இருக்கவில்லை. எனவே முதலாம் மூன்றாம் மொழிபெயர்ப்புகளின் மொழிபெயர்ப்பாளர்கள் இப்பகுதியினைப் பெரும்போக்காக மொழிபெயர்த்துள்ளனர் என்பது இரண்டாம் மொழிபெயர்ப்பினால் புலனாகிறது.

"இந்தப் பட்டயத்தில் கூறப்பட்டுள்ள பிற செய்திகளுள் சிறப்பாக ஐந்து சாதியார்களின் மேல் மேலாண்மை செலுத்துதல் தொடர்பான விளக்கம் மலபாரின் பழங்காலத்திய மரபுகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் தரப்பட வேண்டியதாகையால் அதனைப் பற்றி இங்கு ஆராய வேண்டியதில்லை. இந்தப் பட்டயம் யூதர்களுக்குத் தரப்பட்டதோ இல்லையோ அது எப்படியாயினும் ஒரு

யூதன் எந்த ஒரு காலப் பகுதியிலும் தன் சமயத்தைச் சேர்ந்தவர்கள் மீது மேலாண்மை செலுத்தியதாகக் கூற முடியாது. அத்தோடு கூறப்பட்டுள்ள ஐந்து சாதியார் மீதும் அவன் அவ்வாறு அதிகாரம் செலுத்தச் சிறிதும் வாய்ப்பு இல்லை. மேலும் யூதர்களின் உடைமைகள் என்றும் வரிவிலக்குப் பெற்றன வாக இருந்ததில்லை. அவர்கள் எந்த அரசனுடைய குடிமக்க ளாக இருந்தாலும், அந்த அரசர்கள் அவர்களுடைய நாட்டவர் களையே அவர்களின் தலைவராக அமர்த்தியபோதிலும், யூதர்கள் உடைமை வரிவிலக்குக்குரியதாக இருக்கவில்லை. முதலி யார்கள் என அழைக்கப்படும் இத்தலைவர்கள் உடைமை உரிமை தொடர்பான சிறு வழக்குகளைக் கேட்டுத் தீர்க்கவும், சிறு தொகையினைத் தண்டத்தொகையாக விதிக்கவும் மட்டுமே உரிமை பெற்றிருந்தனர்.

" 'இங்குச் சுட்டிக்காட்டப்பட வேண்டிய ஒரு தனித்தன்மை வாய்ந்த செய்தியும் உள்ளது. பட்டயத்தில் சில சலுகைகள் வழங்கப்பட்டிருந்தாலும் அவை மற்ற பிரிவினருக்கும் உரியன வாக வழங்கப்பட்டிருந்தன. எனினும் யாரும் பொழுது புலரும் நேரத்தில் மரியாதைக்கான மூன்று பீரங்கி வெடிகள் வெடித்துக் கொள்ளவோ திருமணம் புரிந்து கொள்கின்றவர்கள் மண விருந்தின்போது அவ்வாறு மரியாதைக்கான பீரங்கி வெடிகள் வெடித்துக் கொள்ளவோ விரும்பினால் முன் அனுமதி கேட்டு உரிய அனுமதி பெற்ற பின்னரே அவ்வாறு வெடிக்க அனுமதிக் கப்பட்டுள்ளனர். வெடிக்கும் இந்த உரிமை கொச்சி அரசர்களுக்கு மட்டும் உரியதாக இன்றுவரை இருந்து வருகிறது. எனினும் யூதர்கள் முன் அனுமதி பெறாமலேயே இன்றுவரை இவ்வாறு பீரங்கி வெடித்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டு வருகின்றனர். இந்தியாவை ஆளும் அரசர்கள் தங்களுடைய புறச் சடங்குகளில் மற்றவர்களும் பங்குபெற உடன்படாதவர்களாக அதனைத் தங்கள் தனியுடைமையாகவே பேணுவதில் கண்டிப்பானவர்கள். யூதர்கள் இச் சலுகையினை, உரிய ஆணையின்றிப் பொருந்தா வகையில் மேற்கொண்டால், கொச்சி அரசரின் அரண்மனைக்கு அருகே குடியிருப்பை அமைத்துக்கொண்டுள்ள இவர்களின், அர சுக்கு உரியதான இந்த உரிமைக்கு, அரசர்கள் என்றோ முற்றுப்

புள்ளி வைத்திருப்பர். ஆகையால் இவர்கள் அவ்வாறு உரிமை கொண்டாடத் துணியார் என நான் கருதுகிறேன்.''

பல வல்லுநர்கள் இந்தச் செப்புப் பட்டயத்தின் காலத்தை ஓரளவு சரியாக வரையறுக்க முயற்சி செய்துள்ளனர். திரு பர்னெல் கி. பி. 700 இதனுடைய காலமாகலாம் என்பர். மறைத்திரு ஜி. மில்னெ ரயெ திரு பர்னல் தந்துள்ள காலக் குறிப்பினை ஏற்றுக் கொண்டு யூதர்கள் தாங்கள் குடியேறிய சில தலைமுறைகளுக்குப்பின் இப்பட்டயத்தைப் பெற்றவர்களாதல் வேண்டும் எனக் கூறி, அவர்கள் இந்த நாட்டில் கி. பி. ஆறாம் நூற்றாண்டில் வந்து குடியேறியவர்களாதல் வேண்டும் என்பார். முனைவர் ஜெ. வில்சன்* பம்பாயைச் சேர்ந்த பெனி யூதர்கள் பம்பாயில் தாங்கள் வந்து சேர்ந்த காலமாக கி. பி. ஆறாம் நூற்றாண்டை ஏற்றுக் கொண்டிருப்பதால் கொச்சி யூதர்களும் இந்தியாவிற்கு இதே காலத்தில் வந்தவர்களாதல் வேண்டும் எனவும் அவர்களுடைய முதல் செப்புப் பட்டயம் இந்த காலத்திற்கு உரியதாதல் வேண்டும் எனவும் கருதுகின்றார். கொச்சியினைச் சேர்ந்த யூதர்களிடையே இவர்கள் பெனி யூதர்களோடு ஒரே இடத்திலிருந்து ஒரே சமயத்தில் இந்தியக் கரைக்கு வந்து குடியேறியதான வழக்கு வரலாறு எதுவும் இல்லை. பெனி யூதர்களுக்கும் கொச்சி யூதர்களுக்கும் இடையே சமூக உறவுகள் எதுவும் இல்லாதது இவர்கள் இது போல ஒன்றாக வந்து குடியேறியவர்கள் இல்லை என்பதனை வற்புறுத்தும் சான்றாக அமைகின்றது. டச்சு ஆளுநரான மொயென் மொழிபெயர்க்கச் செய்து பெற்றுள்ள மொழி பெயர்ப்புகளுள் ஒன்றில் பின்வரும் சொற்கள் இடம்பெற்றுள்ளன. "எழுதியது நேர்முக உதவியாளர் களம்பி கேளப்பர் கலியுக ஆண்டு 3481 (அதற்கு நேரான கி.பி. 379)." இந்தத் தேதி குண்டர்ட், எல்லீசு, பர்னெல், ஒப்பெர்ட் ஆகியோருடைய மொழிபெயர்ப்புகளில் இடம் பெறவில்லை. பட்டயம் அதனை வழங்கிய பாசுகர இரவி வர்மனின் முப்பத்தி ஆறாம் ஆட்சி ஆண்டில் வழங்கப் பட்டுள்ளது. கேரளத்தினுடைய வெளிநாட்டு அரசப் பிரதிநிதி

* இந்தியத் தொல்லியல், III, 1874, (Ind. Ant, III, 1874.)

களில் இறுதியில் இருந்தவரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கே தேர்ந்தெடுக்கப்பட்டனர். பெருமாள்களுள் இறுதியில் இருந்தவரான புகழ்பெற்ற சேரமான் பெருமாளின் தனித் தகுதி கருதி அவருடைய ஆட்சிக் காலம் முப்பத்தாறு ஆண்டு காலம் நீட்டிக்கப்பட்டதாக மலபார் வழக்கு வரலாறு கூறுகின்றது. இவரே கி.பி. 378 வரை ஆண்ட பாஸ்கர இரவி வர்மா ஆதல் கூடும் எனத் திரு டே கூறுகின்றார். திரு சி. எம். விஸ் (C.M.Whish) இவருடைய காலத்தை அதனினும் சற்று முற்பட்டதாக கி.பி. 231 எனக் கணக்கிட்டு அறுதி செய்துள்ளார். கொச்சி மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் யூதர்கள் குடியிருப்பின் தொன்மை பற்றிக் கூறப்பட்டுள்ளதாவது:- ''யூதர்கள், திராவிடர்களோடு மிகப் பழங் காலமான சாலமனின் ஆட்சிக் காலத்தில், சுமார் கி.மு. 1000-த்திலேயே தொடர்பு கொண்டவர்களாக இருந்தனர். 'மொழிநூற்படி சாலமனின் அரிய பொருள்களைச் சுமந்த கலங்கள் தொன்மை வாய்ந்த மலபார் கடற்கரையிலிருந்து வந்தன என்பது மெய்பிக்கப்பட்டுள்ளது.' அதனைத் தொடர்ந்தும் பல ஆண்டுகள் அதுபோல யூதர்கள் வணிகச் செலவினை மேற்கொண்டிருத்தல் கூடும். எனினும் யூதர்கள் அதற்கும் நெடுங்காலத்திற்குப் பின்னரே மலபார் கடற்கரையில் தங்கள் குடியிருப்பை ஏற்படுத்திக் கொண்டவர்களாதல் வேண்டும். திரு லோகன் மலபார் மாவட்டக் கையேட்டில் 'கி.மு. ஆறாம் நூற்றாண்டில் செய்ரேசுக்கு அடிமையாவதின்றும் தப்பிப் பிழைக்க மலபார் கடற்கரைக்கு தாங்கள் வந்து சேர்ந்ததாக யூதர்களிடையே ஒரு வழக்கு நிலவி வருகின்றது' எனக் கூறியுள்ளார். இதே கருத்தினைச் சர் டபிள்யூ. ஹண்டரும் தனது 'பிரிட்டனின் இந்திய வரலாறு' என்ற நூலில் சுட்டிக் காட்டியுள்ளார்.இந்தப் புகழ்பெற்ற வரலாறு ஆசிரியர் 'இந்தியப் பேரரசு' என்ற தன்னுடைய நூலில் மலபாரில் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்னதாகவே யூதர்களின் குடியிருப்புகள் இருந்ததாகக் குறித்துள்ளார். மையொஸ் ஹோர்முஸ் (Myos Hormuz) துறைமுகத்திலிருந்து செங்கடல் வழியே வழக்கமாக அரேபியா, இலங்கை, மலபார் ஆகிய பகுதிகளுக்குச் சென்று வரும் ரோமர்களுடைய வணிகக் கலம் கி.பி. இரண்

டாம் நூற்றாண்டில் மலபாரில் யூதர்களின் குடியிருப்பினைக் கண்டதான குறிப்பு உள்ளது. மலபாரில் யூதர்கள் குடியேறியது தொடர்பாகத் திரு விஸ் "இயேசுவின் கோட்பாடுகளைப் பரப்ப வந்த திருத்தொண்டரான மார் தாமஸ் இயேசுவின் 52-ஆம் ஆண்டில் இந்தியா வந்ததாகவும் யூதர்களான தாங்கள் அவரை அடுத்து 69-ஆம் ஆண்டில் வந்ததாகவும் யூதர்களே கூறுகின்றனர்' எனக் குறிப்பிட்டுள்ளார். கிறித்துவ சகாப்தத்திற்கு நெடுங்காலத்திற்கு முன்பே யூதர்களுக்கும் மலபார் கரை சார்ந்த மக்களுக்கும் இடையே இருந்த தொடர்பின் அடிப்படையில் பார்க்கும்போது யூதர்களினுடைய சமயத்தினை அடியொற்றியே கிறித்தவ சமயம் மலபாரில் புகுந்ததாதல் வேண்டும் எனக் கூற இடம் உள்ளது. மேற்கூறியன எல்லாம் யூதர்கள் மலபார் கடற்கரையில் கி.பி. முதல் நூற்றாண்டு அளவினதாகப் பழங்காலத்திலேயே குடியேறிவிட்டனர் என்பதனை வற்புறுத்துவனவாம்."

கொச்சியில் யூதர்கள் குடிமக்களுக்கு உரிய அனைத்து உரிமைகளுடனும் அவர்கள் சமயக் கோட்பாட்டின் படியான நெறிமுறைகளையும் மற்றும் சமூக உரிமைகளையும் பாதுகாத்துக் கொண்டு அவர்களை வருத்துபவர்களின் கண்களில் படாமல் பல நூற்றாண்டுகள் வாழ்ந்து வந்தனர். எனினும் 16-ஆம் நூற்றாண்டில் யூதர்கள் சமயவெறி கொண்டவர்களான மூர்கள், கிறித்துவத்தைப் பரப்புவதில் ஆர்வம் கொண்ட கிறித்துவர்கள் ஆகியோரால் அடுத்தடுத்து நிலை தாழ்த்தப்பட்டுள்ளனர். "1524-இல் முகமதியர்கள் கொடுங்கோளூரில் வாழ்ந்த யூதர்கள் மீது தாக்குதல் நடத்திப் பெரும் எண்ணிக்கையிலான யூதர்களைக் குத்திக் கொன்றதோடு எஞ்சியவர்களைக் கிழக்குப் பக்கத்திலுள்ள ஒரு சிற்றூருக்குத் துரத்தியடித்துள்ளனர். ஆனால் அந்த முகமதியர்கள் கிறித்தவர்களைத் தாக்கியபோது நாயர்கள் அவர்களுக்கு எதிராக எழுந்து முகமதியர்கள் அனைவரையும் கொடுங்கோளூரை விட்டு விரட்டியுள்ளனர். போர்த்துகீசியர் தங்களுடைய கொடுங்கோளூர் கோட்டையினை விரிவுபடுத்தி வலிவுடைய தாக்கினர். இதன் காரணமாக யூதர்கள் தங்கள் தொன்மையான

குடியிருப்பான அஞ்சுவண்ணத்தைவிட்டு வெளியேற வேண்டிய தாயிற்று.'' இவ்வாறாக வலிமையுடைத்தான கிறித்தவர்களின் ஆட்சி அப்பகுதியில் தோன்றியபோது யூதர்கள் மீண்டும் நாடுவிட்டோடுதலும், சிதறிச் செல்வதுமான துன்பத்திற்கு உள்ளாயினர். கொடுங்கோளூரின் பாழ்பட்டழிந்த நிலை ஜெருசலத்தின் பாழ்பட்டழிந்த நிலையின் ஒரு சிறிய சித்திரமாக இவர்களுக்குத் தோன்றியிருத்தல் கூடும். இவர்களுள் சிலர் இவர்கள் தங்கியிருந்த நகரைச் சுற்றியுள்ள ஊர்களுக்குத் துரத்தப் பட்டனர். மற்றவர் கொச்சியிலும் எர்ணாக்குளத்திலும் சென்று தங்கிப் பாதுகாப்புத் தேடிக் கொண்டனர். ''முகமதிய சுல்தான் அல்லது சாமோரின் 1524 - இல் கொடுங்கோளூரைக் கைப்பற்றி அதனைத் தரைமட்டம் ஆக்கினான்.அரசரான டேனியல் இதற்கு முன்பு தன் உடன்பிறந்தவனான டேவிட்டை சாமோரின்னுக்கு எதிராகப் பாதுகாப்பு உடன்பாடு செய்துகொள்ள போப் ஆண்டவருடனும் போர்த்துகீசியருடனும் பேச்சு வார்த்தை நடத்த ஐரோப்பாவிற்கு அனுப்பினான். இது எப்படியாயினும், எதிர்பாராத வகையில் தன்னை டேவிட் ருப்பெனி எனக் கூறிக் கொண்ட ஒரு புதிரான அயலான் 1524-ஆம் ஆண்டு மார்ச் மாதம் ரோம் நகருக்கு வந்து இந்தியாவில் உள்ள போர்த்துகீசியர், எகிப்தியர் ஆகியோருடைய சான்றிதழ்களைக் காட்டிய காரணத்தால் போப் ஆண்டவர், போர்த்துகீசிய அரசர் ஜான், பேரரசர் ஐந்தாம் சார்லஸ் ஆகியோரால் சிறப்பாக வரவேற்கப் பட்டுள்ளான். அவன் இந்தியாவிற்குத் திரும்பி வராததன் காரணம் அவன் எந்த நாட்டின் சார்பாகச் சென்றானோ அந்த நாடே அவன் காலங்கடந்தவனாகத் திரும்பி வர வேண்டிய காரணத்தால் இல்லாததாகி விட்டதுதான் என்று கொள்வதே பொருத்தமானதாகும். அவ்வாறு கொள்ளாமல் கிராட்ஸ் (Graets) உள்ளிட்ட எல்லா வரலாற்று ஆசிரியர்களும் கருதுவது போல அவனை ஏமாற்றுக்காரன் எனத் தக்க ஆதார மின்றிக் கூறுவது நம்பமுடியாத சிறுபிள்ளைத் தனமான கதை யாகவே ஆகும். டேவிட் ருப்பேனியின் புகழ்பெற்ற நாள்குறிப்பு உண்மையானதா இல்லையா என்பதனை உறுதியாகக் கூற இயலாது. நீண்ட காலமாக வரலாற்று ஆசிரியர்களால் ஏமாற்றுக்காரன் எனக் கூறப்படும் இந்தத் தூதுவன் பற்றிய

உண்மை நிலையினை நான் வேறொரு இடத்தில் தெளிவு படுத்தி உள்ளமையால் இங்கு அவனுடைய பெயர் டேவிட் ருப்பெனி என்பதனை மட்டும் சுட்டிக் காட்ட விரும்புகின்றேன். கொச்சியினைச் சார்ந்த யூதர்களிடையேயும் பேனேய் இஸ்ரேலியர்களிடையேயும் இன்றுவரை டேவிட் என்பது பெருவழக்காயுள்ள பெயராக உள்ளது. ரப்பானி என்பது செப்புப் பட்டயம் பெற்ற ஆட்சியாளர் குடும்பத்திற்கு உரிய பெயர். அது ருபெனி என்று மாற்றம் பெற்றது பதினாறாம் நூற்றாண்டில் யூதர்கள் கடைசிப் பத்துக் குலங்களின் மீது கொண்ட ஆர்வத்தாலும், ஆட்சி செய்த அரச குடும்பம் இஸ்ரேலியர்களின் முதல்வரான ரூபானின் வழிவந்தது என்று நிலைநாட்டவும் ஆதல் வேண்டும். ரூபென் என்பதும் பேனேய் இஸ்ரேலியர்களிடையே பெருவழக்கிலுள்ள பெயராகும். யூதர்கள் தங்கள் தலைநகரம் அழிந்தபின் அவ்விடத்தை விட்டு அண்மையில் உள்ள இடங்களுக்குக் குடி பெயர்ந்தனர். கொடுங்கோளூருக்கு 20 மைல் தெற்கே கொச்சியின் உப்பங்கழிகளைச் சார்ந்து அமைந்துள்ள நான்கு இடங்களில் சென்று குடியமர்ந்தனர். அவற்றுள் பரூர், சென்னன் மங்களம், மால ஆகிய இடங்களில் இன்றும் கறுப்பு யூதர்களுக்குரிய ஒவ்வொரு திருக்கோயில்கள் உள்ளது. எர்ணாக்குளத்தில் இரண்டு திருக்கோயில்கள் உள்ளன. கொச்சியில் உள்ள மூன்று திருக்கோயில்களுள் ஒன்று வெள்ளை யூதருக்கு உரியது. பரூரில் உள்ள யூதர்கள் நீர் தமித் (Ner Tamid) தினால் சுட்டப்பட்ட தான 400 ஆண்டுகள் தொன்மையுடைய பாழடைந்த ஒரு திருக்கோயிலையும் தங்களுடையது எனக் காட்டுவர். அங்கு அப்போது 18 பள்ளிகளும் 500 யூதர் இல்லங்களும் இருந்தன என்பர். இந்த வழக்கு வரலாறு 1524 க்கு முன் கொடுங்கோளூர் பெற்றிருந்த சிறப்பினை மேலும் உறுதிப்பட உணர்த்துவதாயுள்ளது. டச்சுக்காரர் வருகையினால் யூதர்கள் இன்னல் தீரப் பெற்றனர். டச்சுக்காரர், போர்த்துகீசியருக்கும் அவர்களுடைய புறச் சமயத்தாரை ஒடுக்கும் தண்டநெறிக்கும் எதிரிகளாக இருந்ததோடு, போர்த்துகீசியருடைய எதிரிகளைத் தங்கள் நண்பர்களாகவும் கருதினர். எனவே யூதர்கள் டச்சுக்காரரின் ஆதரவாளராகிவிட்ட அந்த மடத்தனமான துணிச்சல் காரணமாகத் தொல்லைக்கு உள்ளாயினர். 1662-இல் டச்சுக்காரர் மட்டுஞ்

சேரியிலிருந்த ராணேயினுடைய அரண்மனையைத் தாக்கிய தோடு, அதனை அடுத்திருந்த கொச்சியினையும் முற்றுகையிட்டனர். போர்த்துகீசியர் புதுப்படை வரவால் டச்சுக்காரர் பின் வாங்க வேண்டியதாயிற்று. போர்த்துகீசியர், யூதர்கள் டச்சுக் காரருக்கு ஆதரவு காட்டினர் என்ற நியாயமான காரணத்தின் அடிப்படையில் யூதர்களினுடைய திருக்கோயிலினை எரியூட்டினர். அதற்கு அடுத்த ஆண்டில் 'கொச்சியின் மீது மீண்டும் தாக்குதல் நடத்திய டச்சுக்காரர் படையினர் வெற்றி பெற்றனர். கோட்டையும் நகரமும் அவர்கள் கையகப்பட்டது. இதனோடு இந்தியாவில் போர்த்துகீசியர் வலிமையும் நலிந்தது. தொடர்ந்து நிகழ்ந்த பல உடனபடிக்கைகளின் அடிப்படையில் கொச்சி அரசும் ஹாலந்து அரசும் நெருங்கிய நண்பராயின. கொச்சியில் டச்சுக்காரரின் நிலையான குடியிருப்பு அமைந்தது.' டச்சுக்காரர், வெள்ளை யூதர்கள் தங்கள் திருக்கோயிலினை மீண்டும் கட்டிக்கொள்ள உதவி செய்தனர். கொச்சியினைச் சேர்ந்த யூதர்களிடையே இன்றளவும் டச்சுக்காரரின் காலுறை ஒப்பனை மதிப்புடையதாக இருந்து வருகின்றது.''

கொச்சியினைச் சேர்ந்த யூதர்கள் வெள்ளை யூதர் எனவும் கறுப்பு யூதர் எனவும் பொதுவாக இரு பிரிவினராக உள்ளனர். பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இதனைப் பற்றி எழுதியுள்ள பால்டெயஸ் கூறியுள்ளதாவது:* ''கொச்சியிலும் அதனைச் சார்ந்த பகுதிகளிலும் முன்பு சில யூதர்கள் வாழ்ந்தனர். இவர்கள் இன்றும் கோட்டை அமைப்பில்லாத ஒரு திருக் கோயிலினை உடையவர்களாக உள்ளனர். இவர்கள் வெள்ளை நிறத்தவர்களாகவோ, பழுப்பு நிறத்தவர்களாகவோ அல்லாமல் நல்ல கறுப்பர்களாகவே உள்ளனர். போர்ச்சுகீசிய வரலாற்றுச் செய்திகளின்படி ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியில் மீட்பருக்கு எதிராக இறைபழிப்பான செய்திகளடங்கிய தாள்களும், சேசுவிட் கிறித்துவ சங்கத்தைச் சேர்ந்தவரும் மானோபடப்பாவில் புனித உயிர்த்துறவு செய்தவருமாகிய கன்சால்வசு பெரைரா

---

* கிழக்கிந்தியாவின் மலபார், கொரமாண்டல் கடற்கரைகள் பற்றிய ஒரு விளக்கம், 1703. (Baldaeus - A Description of ye East India Coasts of Malabar and Coromandel, 1703.)

பற்றிய அவதூறான செய்திகளைக் கொண்ட தாள்களும் பெரிய தேவாலயத்தில் வைக்கப்பட்டிருந்த இரப்பு ஏற்புப் பெட்டியில் காணப்பட்டன. அவற்றை அங்கு அவ்வப்போது வந்து போகும் ஐரோப்பியரான சில யூதர்கள் போட்டிருக்க வேண்டும் என்ற எண்ணமே கோவாவில் மாற்றுச் சமயத்த வரை ஒறுத்து ஒடுக்கும் நடவடிக்கைக்குக் காரணமாயின.'' மறைத்திரு ஜே.எச்.லார்டு* குறித்துள்ளதாவது:– ''ஜேகப் சப்ஹிர் என்ற யூதப் பயணி அண்மையில் தன் சமயத்தைச் சார்ந்த கொச்சியில் உள்ள சில யூதர்களைக் கறுப்பரெனக் கூறிய அவர், அவர்கள் காக்கையைப் போலவோ நூபியன் களைப் போலவோ அண்டங் கறுப்பர்கள் அல்லர் எனவும் அவர்கள் நிறம் செம்பின் நிறத்தை ஒத்தது எனவும் கூறியுள்ளார். ஹாகிர் ஜேகப் ஹ கோகென் என்ற தற் காலத்தைச் சேர்ந்த மற்றொரு யூதப் பயணி முன்னவர் இங் குள்ள யூதர்களைக் கறுப்பர் எனக் குறிப்பிட்டதற்காகக் குறைப்பட்டுக் கொண்டதோடு, தான் இவர்களைப் பற்றி எழு தும் போதெல்லாம் வெள்ளையரல்லாதார் என்றே குறிக்கப் போவதாகவும், கடவுள் சத்தியமாகக் கறுப்பர் என எழுதப் போவதில்லை என்றும் கூறியுள்ளார்.'' கறுப்பு யூதர்கள் தாங் களே இங்கு வந்து முதலில் குடியேறியதாகவும் வெள்ளை யூதர் தங்களை அடுத்து வந்தவர்கள் எனவும் கூறுகின்றனர். ஆனால் வெள்ளை யூதர்கள் முன்னவர்களை யூதர்களாக மதம்மாறிய இந்நாட்டைச் சேர்ந்தவர்கள் எனக் கூறுவர், குடியேற்றம் பற்றிய முக்கியமான இந்தக் கருத்து வேறுபாடும். இனத் தூய்மை பற்றிய கருத்து வேறுபாடும் தொல்லியல் ஆய் வாளர்களையும், வரலாற்று ஆசிரியர்களையும் பிரிவுபட்டு நிற்கும் இவ்விரு பிரிவினரையும் தனித்தனிப் பிரிவினராகவே கருதும்படி செய்துள்ளது. மறைத்திரு சி. புச்சனன் கூற்றுப்படி† மட்டஞ்சேரி நகரில் குடியிருக்கும் வெள்ளை யூதர்கள் கறுப்பு யூதர்களுக்குப்பின்னர் வந்து குடியேறியவர்கள் ஆவர். வெள்ளை

---

* இந்தியாவிலும் தென்கிழக்கிலும் உள்ள யூதர்கள் - 1907. (Rev J. H. Lord - The Jews in India and the Far East, 1907.)

† இந்தியாவில் கிறித்துவ ஆய்வுகள் - 1840 (Rev. C. Buchanan!- Christian Researches in India,-1840.)

யூதர்களின் கோயில்களிலிருந்து பிந்திய கால அமைப்பு உடையனவான பாடம் செய்யப்பட்ட தோலில் எழுதப்பட்ட வேதாகமத்தையே பெற முடிந்ததெனவும் ஆனால் கறுப்பர் களிடமிருந்து பாடம் செய்யப்பட்ட தோல், ஆட்டுத்தோல், பருத்தித் தாள் ஆகியவற்றில் எழுதப்பட்ட அதனைக்காட்டிலும் மிகப் பழமையான கையெழுத்துப் பிரதிகளைப் பெற முடிந்தது என்றும் கூறியுள்ளார். "கறுப்பு யூதரின் புறத் தோற்றத்தைப் பார்த்த அளவிலேயே இவர்களுடைய முன்னோர்கள் வெள்ளை யூதர்களுக்குப் பலஆண்டுகளுக்கு முன்னரே இந்தியாவிற்கு வந்த வராதல் வேண்டும் என்பதனைத் தெளியலாம். இந்துக்களை ஒத்த தான அவர்கள் உடல் நிறமும் வெள்ளை யூதர்களோடு முற்றும் பொருந்தாத இவர்கள் இயல்பும் இவர்கள் மேற்கு நாடுகளில் வாழும் யூதர்களான குல முன்னோர்களிடமிருந்து பல தலை முறைக்கு முன் பிரிந்து வந்ததோடு, இஸ்ரேலியர் அல்லா தாரோடும் மண உறவு கொண்டவர்களாயும் இருந்துள்ளனர் என்பதனை மெய்ப்பிக்கின்றன." கறுப்பு யூதர்கள் பற்றி மறைத் திரு ஜெ.ஹோயுக் கூறுவதாவது*:- "கறுப்பு யூதர்கள் இந்தியர் களைப் பெரிதும் ஒத்திருப்பதால் பார்த்த அளவில் அவர்களை இந்துக்களிலிருந்தும் வேறுபடுத்தி அறிதல் கடினமானது. எனினும் சற்றுக் கூர்ந்து நோக்கினால் யூதர்களின் உடல் தோற்றத்தின் தனித்ததான வடிவங்கள் புலனாகாது போகாது." முன்பே குறிப்பிட்ட சொற்பொழிவில் முனைவர் வில்சன், "டேவிட் கஸ்டைல் (கஸ்டலியனைச் சேர்ந்த டேவிட்) என்பது போன்ற இவர்களுடைய குடும்பப் பெயர்கள் இவர்கள் ஸ்பெயி னைச் சேர்ந்த யூதர்களினுடைய (வெள்ளை யூதர்கள) பரம் பரையினர் என்பதனை மெய்ப்பிக்கின்றன. இவர்கள் அந்த நாட்டினை ஆண்ட பெர்டினாண்ட், இசபெல்லா ஆகியோர் ஆட்சிக் காலத்தில் அங்கிருந்து துரத்தப்பட்ட ஜெர்மனி, எகிப்து ஆகிய நாடுகளைச் சேர்ந்த யூதர்களாதல் வேண்டும். கொச்சி யினைச் சேர்ந்த தொன்மையான யூதர்கள் அரேபிய ஜுதேயர் களினுடையவும், மதம் மாறிய இந்தியர்களுடையவுமான கறுப்பு

---

* இந்தியாவில் கிறித்துவ சமயத்தின் வரலாறு, 1, 470-71, 1839. (Rev) J.Hough-History of Christianity in India, 1, 470-71, 1839.

யூதர்களின் வழித் தோன்றல்களே. 1173-இல் தன் கிழக்கத்திய சுற்றுப் பயணத்தை முடித்துக் கொண்டு ஸ்பெயினுக்குத் திரும்பிய துதேலவைச் சேர்ந்த பெஞ்சமின் கொச்சின், கொல்லம் ஆகிய இடங்களில் வாழும் யூதர்களைப் பற்றி அரைகுறையாகச் சிறிது கூறியுள்ளார். அவர் வெள்ளை யூதர்களை இவ்விடங்களில் கண்டதாகக் கூறவில்லை. கொல்லத்திற்கு அருகே உள்ள மிளகு நாட்டைப் பற்றி கூறும்போது இந்த நாட்டவர்கள் வாழும் நகரங்களிலும், நாட்டுப் புறங்களிலும் சுமார் நூறு யூதர்களே (திருக்கோயிலைச் சேர்ந்த உறுப்பினர்கள்) வாழ்வதாகவும். இவர்கள் மற்ற மக்களைப் போலவே கறுப்பு நிறத்தவர்களாக இருப்பதாகவும் கூறியுள்ளார். 1596-இல் ஹாலந்தில் வெளியிடப் பட்ட ஜன் லின்ஸோட்டன் உடைய 'பயணங்கள்' பற்றித் திரு அட்லெர் குறிப்பிடுகையில், "நமது பயணியின் கருத்தைக் கவர்ந்த யூதர்கள், 'செல்வர்களான வணிகர்களும், கொச்சின் அரசருக்கு அருகிருப்பவர்களும் ஆவர். இவர்கள் ஐரோப்பியர்களை ஒத்தவர்களாகப் பெரிதும் வெள்ளையர்களாகவும், நல்ல அழகிய பல பெண்களை உடையவர்களாகவும் உள்ளனர். இவர்களுள் பாலஸ்தீனத்திலிருந்தும், செருசலத்திலிருந்தும் வந்தவர்கள் பலர். இவர்கள் நல்ல ஸ்பானிய மொழியில் பிழையின்றி உரையாடக் கூடியவர்களாக உள்ளனர்.' இது அப்பகுதியில் உள்ள வெள்ளை யூதர்கள் அப்பகுதிக்குப் புதிதாக வெளிநாட்டிலிருந்து வந்து குடியேறியவர் என்பதனை உறுதிப் படுத்துகின்றது. அவர்களுடைய ஸ்பானிஸ் மொழியறிவு இன்று பழங்கதையாகிவிட்டது. எனினும் அது அவர்கள் ஸ்பானிய யூதர்கள் என்பதனைத் தெளிவுப் படுத்துகிறது."

வெள்ளை யூதர்களே உண்மையில் யூத மரபினர் என்ற கருத்துத் தொடர்பாக 1832-இல் கொச்சியில் பயணம் செய்த யூதரான இரப்பி டேவிட் தெ' பெத் ஹித்தெல் என்பரின் கருத்தை இங்கு கூறுவது பொருத்தமாக இருக்கும். "வெள்ளை யூதர்கள், கறுப்பு யூதர்களைப் பற்றி, அடிமைகளாக விலைக்கு வாங்கி யூதர்களாக மதம் மாற்றப்பட்டவர்களின் மரபில் வந்தவர்கள் எனவும் செல்வனான ஒரு யூதனால் நன்கு யூதர் சமயம் பற்றிப் போதிக்கப்பட்டுப் பின்னர் அவர்கள்

விடுவிக்கப்பட்டனர் எனவும் அந்த செல்வனுடைய பொருள் உதவியாலேயே கறுப்பர்களுடைய பழைய திருக்கோயில்கள் கட்டப்பட்டன எனவும் கூறுவர். கறுப்பு யூதர்கள் தங்களை முதலில் அடிமை கொண்டிருந்தவரின் சந்ததியில் வந்தவர்கள் தாங்கள் எனவும் அவர்களால் இந்தியாவிற்கு அழைத்து வரப் பட்டவர்கள் எனவும் இரண்டாவது கோயிலைக் கட்டியபின் தங்கள் முன்னோர்கள் இஸ்ரேலுக்குத் திரும்பவில்லை எனவும் நம்புகின்றனர். இதுசரியான தகவலாக இருக்க வேண்டும் என்றே நான் நம்புகின்றேன். கறுப்பு யூதர்கள் என அழைக்கப் பட்டாலும் வெள்ளையூதர்களைக் காட்டிலும் சற்றே நிறம் மங்கியவர்களாக உள்ள இவர்கள் இந்தியர்களைப் போல நல்ல கறுப்பர்களாக இல்லாததோடு இந்தியர்களான அடிமைகளின் வழி வந்தவர்களாகவும் தோன்றவில்லை.'' இம் மேற்கோள் பகுதி கறுப்பு யூதர்களிடையே வழக்கில் உள்ளதான சாலமன் முதலில் கட்டிய கோயிலின் அழிவிற்கு பதின்மூன்று ஆண்டுகளுக்குமுன் இஸ்ரேலிலிருந்து விரட்டப்பட்ட யூதர்களின் வழிவந்தவர்கள் தாங்கள் என்ற கருத்தின் அடிப்படையில் அமைந்ததாகும். இவர்கள் தாங்கள் முதலில் கள்ளிக்கோட்டையை அடைந்து, பின்னர் கொடுங்கோளூரில் குடியேறியதாகக் கூறுகின்றனர்.

"வெள்ளை யூதர்கள் தாங்கள் மட்டுமே கொடுங்கோளூரைச் சார்ந்த செப்புப் பட்டயத்தை பெற்ற மூதாதையர்களின் வழித் தோன்றல்கள் என்று கூறுகின்றனர். ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கொச்சி அரசர் ஹல்லெகு குடும்பத்தைச் சேர்ந்த தலைவருக்கு முதலியார் என்ற பட்டத்தைத் தந்து (அதன் சின்னமாக வெள்ளி குமிழோடு கூடிய ஒரு தண்டினையும்) சில குற்றங்களை விசாரித்துத் தண்டனை வழங்கும் உரிமையும் தந்திருந்தார் எனப் பெருமை பாராட்டிக் கொள்கின்றனர். அக்குடும்பத்தைச்சேர்ந்த ஆண்கள் இன்றும் அந்தப்பட்டத்தைத் தரிக்கின்றனர். எனினும் அவர்களுடைய குறுநில மன்னர் என்ற ஆட்சி உரிமை பறிக்கப்பட்டுவிட்டது. இன்று வெள்ளை யூதர்களின் எண்ணிக்கை 200-க்கும் குறைவாகவே உள்ளதால் அவர்களுடைய பெயர்கள் அனைத்தையும் தொகுத்துவிட முடியும். கின்தெல், ஆஸ்கெனாசி, மிஜ்ராகி, கொதெர், ரொபை,

சஸ்ஸோன் போன்ற* அவர்களுடைய வெளிநாட்டுத் தொடர்புடையதான குடும்பப் பெயர்களைக் கொண்டும், பிற காரணங்களை வைத்தும் வெள்ளை யூதர்கள் பின்னரே இந்தியாவிற்கு வந்தவர்கள் என்பதையும் கொடுங்கோளூரின் அழிவிற்குப் பிறகே இவர்கள் இங்கு குடியேறியவர்கள் என்பதையும் தெளியலாம். கொச்சிக்கு வந்த வணிகர்கள், டச்சுக்காரர் ஆகியோர் ஆட்சியில் வளம் பெற்ற இவர்கள் அங்கிருந்த கறுப்பு யூதர்களின் குடியிருப்பையும் திருக்கோயிலினையும் பின்பற்றிக் குடியிருப்பும், கோயிலும் அமைத்துக் கொண்டவர்கள். கறுப்பு யூதர்களிடம் பொறாமை கொண்டவர்களாக இன்று இவர்கள் தனித்து ஒதுங்கிவிட்டாலும் முதலில் அவர்களோடு நெருங்கிய தொடர்பும் நட்பும் உடையவர்களாகவே இருந்துள்ளனர். இந்தியச் சூழல் இங்கிலாந்து சூழல் போலப் போலந்து, செர்மனி யூதர்களையும், ஸ்பானிய யூதர்களையும் தனித்திருக்க விடாது நம்மிடையே இணைத்ததைப் போல இணைக்க இயலாததான வேறுபடுத்தும் ஆற்றல் மேலோங்கியுள்ள தன்மை வாய்ந்தது. இந்தியாவில் சாதி, வர்ணம் எனப்படும். வர்ணம் நிறம் என்று பொருள்தருவது. அந்த அடிப்படையில் இவர்களிடையே அமைந்ததான நிற வேறுபாடு இந்திய யூதர்களிடையே சாதிப் பாகுபாட்டினை உண்டாக்கியுள்ளது. வெள்ளை யூதர்கள் நல்ல நிறம் உடையவர்களேனும் அவர்களில் சிலர் நிறங்குறைந்தே காணப்படுகின்றனர். அதே போலக் கறுப்பு யூதர்கள் அனைவருமே நல்ல கறுப்பு நிறத்தவர்களாகவும் இல்லை. சில கறுப்பு யூதர்களை யூதர் சமயம் சார்ந்த வெள்ளை யூதர்களிலிருந்து வேறுபாடு கண்டு கொள்வது கூட இயலாது. பழக்க வழக்கங்கள், சமயச் சடங்குகள் அன்றாட நடைமுறைகள் ஆகியன அனைத்தும் இவ்விரு பிரிவினர்களுக்கும் ஒன்று போன்றனவே. இவர்கள் திருக்கோயில்களும் பார்வைக்கு ஒன்று போலவே தோற்றம் தரும் கட்டிடங்களே. கூர்ந்து பார்க்கும்போதே இவற்றிடையேயுள்ள வேறுபாடுகள் புலனாகும். இவற்றிடையேயான பெரிய வேறுபாடு (?) வெள்ளை யூதர்களின் அரிய பழைய காலத்திய ஓடுகள்தான். இதனைப் பற்றிச் செய்தித்தாள்

---

* Kindel, Ashkenazi, Mizrahi, Koder, Roby, Sassoon.

களின் நிருபர்கள் நிறைய எழுதியுள்ளனர். அவர்கள் இந்த ஒடு கள் பழங்கால்த்திய டச்சு ஓடுகள் என்பர். ஆனால் உண்மையில் அவை சீனதேசத்தனவே (நீலமும் வெள்ளையும் கலந்த சதுர மான சீன ஓடுகள்). இந்த ஓடுகள் தொடர்பாக ஒரு கதையும் வழங்குகின்றது.* இந்தத் திருக்கோயில் அரசரின் அரண்மனை முற்றத்தில் ஒரு மூலையில் 200 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட தாகும். அந்தச் சமயத்தில் இன்று ஆங்கிலேயருக்கு உரியதாக உள்ள கொச்சி டச்சுக்காரருக்கு உரியதாக இருந்தது. அப் போது டச்சுக்காரர் மட்டுமே சீனாவோடு வணிகம் செய்து வந்தனர். கொச்சி அரசர் தன் கூட்டாளிகளான டச்சுக்காரர் உதவியோடு தன் அரசிருக்கை மன்றத்தின் தரையில் பதிப்பதற் காகத் தரமான சீன ஓடுகளை நிறைய இறக்குமதி செய்தார். அவர் அவையில் இருந்த யூதர்கள் அந்த ஓடுகள் தாங்கள் கட்டிக் கொண்டிருக்கின்ற திருக்கோயிலுக்குப் பயன்படும் என்ற எண்ணத்தில் அரசரிடம் அவற்றின் தயாரிப்பின்போது எருதுகளின் குருதி பயன்படுத்தப்பட்டிருப்பதால் அரசருக்கு அவை உதவா எனத் தாங்கள் கருதுவதாகக் கூறி வைத்தனர் எனத் திரு தெர்ஸ்டன் கூறுகின்றார். அரசர், புனிதமான காளை களின் குருதி கலந்த அவற்றைத் தன் கண்ணில் படாதவாறு தூர அப்புறப்படுத்தும்படி ஆணையிட்டுவிடவே அவை யூதர் களின் திருக்கோயிலில் இடம் பெறலாயின. பிற திருக்கோயில் களிலும் ஓடுகள் உள்ளன. எனினும் அவை பளபளப்பும் வெண்மை நிறமும் கொண்டவை." திருக்கோயில்கள், வெள்ளை அடிக்கப்பட்ட மணிக் கூண்டோடு கூடிய சதுரமான கட்டிடங்கள். கறுப்பு யூதர்களுக்கு உரியதான கடயபாகத்தி லுள்ள திருக்கோயிலே தற்போதுள்ள திருக்கோயில்களுள் தொன்மையானது என்பதனை வெள்ளை யூதர்களும் ஒப்புக் கொள்கின்றனர். இது பன்னிரண்டாம் நூற்றாண்டில் கட்டப் பட்டது.

"கொச்சியில் உள்ள கொச்சி அரசரின் அரண்மனையினை

---

* ஜே. ஸ்பிலின்டெர் ஸ்டவொரினஸ் - கிழக்கிந்தியப் பயணங்கள், 1774-78. (C.J. Splinter Stavorinus - Voyages to the East Indies, 1774-78.)

அடுத்துள்ள யூதர் குடியிருப்பில் வெள்ளை யூதர்களுக்கு ஒன்றும், கறுப்பு யூதர்களுக்கு ஒன்றுமாக இரண்டு திருக்கோயில்கள் உள்ளன. கறுப்பு யூதர் திருக்கோயிலில் மறை நூல்களை ஓதிச் சமயச் சடங்குகளை நிகழ்த்துபவர்கள் கறுப்பு யூதர்களே. எனினும் கறுப்பு யூதர் கோயிலுக்கு ஒரு வெள்ளை ரப்பி வர நேர்ந்தால் அவற்றை நிகழ்த்தும் பொறுப்பினைக் கறுப்பு யூதர் அவரிடம் விட்டு விடுதல் வெண்டும் என்பது மரபாகும்'' என ஆளுநர் மொயென்ஸ் (Moens) எழுதியுள்ளார்.

''கறுப்பு யூதர்களின் திருக்கோயில்கள் அனைத்தும் வெள்ளை யூதர்களின் கோயில்களுக்குக் காலத்தால் முற்பட்டனவே. கொச்சி அங்காடியில் உள்ள பயன்படுத்தப்படாது பாழடைந்த திருக்கோயிலில் உள்ள சுவர்ச் சித்திரப் பலகையில் பொறிக்கப்பட்டுள்ள ஆண்டு கி. பி. 1344 ஆகும். அதாவது 563 ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்டது. கொச்சியில் உள்ள கடவம்பகம் திருக்கோயில் கி. பி. 1639-இல், அதாவது 268 ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்டது. கொச்சியில் தெற்குப் பகோமில் உள்ள திருக்கோயில் கி. பி. 1586-இல், அதாவது 321 ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்டது. வெள்ளை யூதர்களின் திருக்கோயில் கி. பி. 1666-இல், அதாவது 241 ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்டது. எனவே கறுப்பு யூதர்களின் அமைப்புகள், பழமையானவை என்பது தெளிவு. கறுப்பு யூதர்களின் கல்லறைக் கற்களின் தேதிகளும் தொன்மையனவாக உள்ளன. கறுப்பு யூதர்களின் கல்லறைக் கற்களில் மிகத் தொன்மையானது அறுநூறு ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும்'' என மறைத்திரு ஜெ. எச். லார்ட் கூறுகிறார்.

மறைத்திரு ஜே.எச். லார்ட் மேலும் கூறியிருப்பதாவது:- ''கறுப்பு யூதர்களே இன்றுவரை செப்புப் பட்டய ஆணை வழங்கிய சலுகைகளைப் பயன்படுத்தி வருகின்றார்கள். இன்றும் அவர்கள் தங்கள் குழந்தை பிறந்த எட்டாம் நாள் திருக்கோயிலுக்குச் செல்லும்போது ஒரு பட்டுக்குடையினை எடுத்துச் செல்கின்றனர். பகலில் விளக்கு ஏற்றுகின்றனர், தங்கள் மணமக்கள் மணம் புரிந்துகொள்ளச் செல்லும்போது சாலை

யில் அவர்கள் நடக்கத் தரையில் ஒரு துணியினை விரித்து அதன்மீது இலைகளாலான அணிகளை அலங்காரமாக வைப்பதோடு கதனையில் துப்பாக்கி மருந்தினையிட்டுக் கெட்டித்து வெடிக்கவும் செய்கின்றனர். எக்காளத்தினையும் பயன்படுத்துகின்றனர். மணச் சடங்குகள் முடிந்து மணமக்கள் வீடு திரும்பி வரும்போது ஒவ்வொன்றும் நான்கு கழிகள் தாங்கும் நான்கு பட்டு மேற்கட்டியினைத் தாங்கி வருவதோடு மணமக்களுக்கு முன் எரியும் விளக்குகளையும் ஏந்தி வருகின்றனர். மேற்கூறிய எதனையும் வெள்ளை யூதர்கள் பயன்படுத்துவதில்லையெனக் கறுப்பு யூதர்கள் கூறுகின்றனர். வெள்ளை யூதர்களோ தாங்கள் முன்பு இத்தகைய சலுகைகளைப் பயன்படுத்தி வந்ததாகவும் தற்பொழுது அதனைக் கைவிட்டு விட்டதாகவும் கூறுகின்றனர்.''

டச்சுக்காரரின் வருகையின் போதோ அல்லது அதற்கு முன்பு இருந்தோ கூடக் கறுப்பு, வெள்ளை யூதர்களிடையே சச்சரவுகள் நடந்துள்ளன என்பதற்கான சான்றுகள் உள்ளன. போர்த்துகீசியர் ஆட்சிக்காலத்தில் கூட இவ்விரு குழுவினரிடையேயும் மண உறவுகளும் சம உரிமைகளும் தொடர்பான பொறாமையும் பூசலும் நிலவியுள்ளன. கண்டர் விஸ்ச்செர் 'மலபாரிலிருந்தான கடிதங்களில்'* இக்குழுப் பூசல்கள் பற்றிக் கூறியுள்ளார். "கறுப்பர்கள் தங்கள் திருக்கோயிலில் கறுப்புப் பூசாரியையே (Rabbi) பணிக்கு அமர்த்தியுள்ளனர். அத் திருக்கோயிலுக்கு ஒரு வெள்ளை யூதன் வருவானாயின் சமயச் சடங்குகளை நிகழ்த்தும் பொறுப்பினைப் பூசாரி அந்த வெள்ளை யூதனிடம் ஒப்படைத்து விட வேண்டும். வெள்ளை யூதர்களின் திருக்கோயிலுக்குக் கறுப்பு யூதர்கள் செல்ல நேர்ந்தால் அவர்கள் பொறுப்பு ஏதும் ஏற்றுக் கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. அண்மையில் இவ்விரு பிரிவினருக்கிடையேயும் பெரும் பூசல் நிகழ்ந்தது. கறுப்பு யூதர்கள் தங்கள் குடும்பத்தைச் சார்ந்த பெண்களைப் போலவே வெள்ளை யூதர்களின் பெண்

---

* Canter Visscher-Letters from Malabar, Edition by Major Heber Drury, 1862, Letter XVIII.

களும் தலைக்கு முக்காடு இட்டுக் கொள்ளாமல் இருக்க வேண்டும் என வற்புறுத்தியதோடு, அரசரிடம் இதற்கானதொரு ஆணையினைப் பிறப்பிக்கும்படியும் வற்புறுத்தியுள்ளனர். ஆண்களும் பெண்களும் தங்கள் விருப்பம் போல வேண்டியதை அணிந்துகொள்ளலாம் என்ற உடன்பாட்டின் அடிப்படையில் இப் பூசல் தீர்த்து வைக்கப்பட்டது.''

சமயக் குருமார்களான யூத ரப்பியர்களிடம் பலமுறை இனத் தூய்மை பற்றி முறையீடு செய்யப்பட்டுள்ளது. அப்போதெல்லாம் அவர்கள் கறுப்பு யூதர்களும், யூதர்கள் என்றே தங்கள் தீர்ப்பை வழங்கியுள்ளனர். வெள்ளை யூதர்கள் இதனை ஒவ்வொரு முறையும் செல்லத்தக்கது ஆகாது என்றே எதிர்த்து வந்துள்ளனர். மதகுருமார்களின் ஆணை உரிமையும் நடப்பில் உள்ள பழக்க வழக்கங்களும், கறுப்பு யூதர்கள் இஸ்ரேலியர் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர் எனவும் அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்கப்பட்ட அடிமைகளின் வழிவந்தவர்கள் எனவும் கலப்பினத்தனவர் எனவும் கூறும் கூற்றுக்களை ஏற்றுக் கொள்வதற்கு உரியன அல்லாததாக்கி விட்டன. வெள்ளை யூதர்கள் கறுப்பு யூதர்களோடு மண உறவுகள் செய்து கொள்ள உடன்படாதவர்களாகத் தங்கள் இனத் தூய்மையைக் காத்து வருகின்றனர். தொடக்க கால நூற்றாண்டுகளில் முதலில் இங்கு வந்து குடியேறிய யூதர்கள் பல அடிமைகளை விலைக்கு வாங்கினர். அந்த அடிமைகள் தங்கள் தலைவர்களின் சமயத்தைப் பின்பற்றியவர்களாகச் சமய மாற்றம் பெற்றுள்ளனர். ஸ்டவொரினெஸ் இது பற்றிக் கூறுவதாவது*:- ஓர் அடிமையினை விலைக்கு வாங்கியவுடன், உடனே அவனுக்கு விடுதலை அளித்துச் சுன்னத்துச் செய்து அவனைத் தங்களைச் சேர்ந்த இஸ்ரேலியனாக ஏற்றுக் கொள்வதோடு, அதன்பின் அவனை ஒருபோதும் அடிமையாக நடத்த மாட்டார்கள்.'' கண்டெர் விஸ்க்செர், ''யூதர்கள் தங்கள் சமயத்தவரல்லாத தங்கள் அடிமைகளைப் பிற நாட்டவர்களுக்கு விற்கத் தடையேதும் கூறுவதில்லை. அவ்வாறு விற்கப்படுவர்கள் விற்கப்படும்போது அதுவரை அவர்கள் தலையில் அணிந்திருந்த யூதர்களுக்கான தலைக்

---

* முந்து நூல். (Op. cit.)

குல்லாயை எடுத்து விடும்படி கூறுவர். தங்கள் சமயத்தில், சடங்குகளின் பின் சேர்த்துக் கொள்ளப்பட்ட அடிமைகளை அவர்கள் ஆண்களாயினும் பெண்களாயினும் வெளியாருக்கு விற்கும் பழக்கத்தை மேற்கொள்வதில்லை.''* இவ்வாறு சமய மாற்றம் பெற்ற பெண்களுடன் யூதர்கள் கள்ளத் தொடர்பு கொண்டிருந்ததாகவும் அந்த உறவின் தொடர்பாகக் கலப்பினத்தவரான திராவிடர்களும், செமிட்டுகளும் தோன்ற நேர்ந்தது என்றும் கூறப்படுகிறது. கறுப்பு யூதர்கள் அனைவரும் மதம் மாறிய அடிமைகளின் சந்ததியினர் என்பதோ கலப்பு இனத்தவர் என்பதோ நேர்மைக்கு முரணானதாகும். அதேபோல அவர்கள் அனைவரும் குடியேறிய வெளிநாட்டவர்களின் வழித்தோன்றல்கள் என்பதும் பொருந்தாது. ''மறைத்திரு ஜெ. எச். லார்ட் 1892–இல் ஜெருசலத்தைச் சேர்ந்த ஹஹாம் பாசி மலபாரைச் சேர்ந்த கறுப்பு யூதர்கள் பற்றிக் கூறியுள்ள சுவையான கருத்தினை எடுத்துக்காட்டியுள்ளார். இரப்பி என்பது அலெக்சாந்திரியாவைச் சேர்ந்த ஆர். சேகப் காஸ்ட்ரோவான மகரிக்காசைக் குறிக்குமெனக் கூறியுள்ளார். 1610–இல் அவரைப் பற்றிய விவரங்கள்' ஜிச்சூஸ்' அல்லது 'மீஜீசசிம்' பற்றியதோடு பொருந்தி வருவதாக இருப்பதால் அவர் அவ்வாறு முடிவு செய்தார். அவர் தனது உறவினர்களில் ஒருவர் ஒரு பழுப்பு நிற யூதரை மணந்து கொள்ளக் கூட அனுமதிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. இன்று வெள்ளை யூதர்கள் பெரும்பாலான கறுப்பு அல்லது பழுப்பு யூதர்களிடமிருந்து பிரிந்து, தங்களைத் தனித்தவொரு சாதியாகக் கூறிக்கொள்கின்றனர். அவர்களுள் மிகுந்த புத்திகூர்மையுள்ள ஒருவர் எங்களைத் திருக்கோயிலைச் சுற்றி அழைத்துச் சென்ற போது அவ்வாறு அவர்களை வெள்ளை யூதர்கள் முழுதும் தனித்து ஒதுங்கிவிட்டதாகக் கூறப்படுவது மிகைப்பட்டதும் நேர்மையற்றதும் ஆகும் எனவும், அவருடைய சொந்தப் பாட்டன்மாரே கறுப்பு யூதப் பெண்களோடு மண உறவு கொண்டவர்களாக இருந்துள்ளனர் எனவும், கறுப்பு வெள்ளை யூதர்கள் நட்பாகவே வாழ்ந்துள்ளனர் எனவும், வெள்ளை யூதர்கள் செல்வர்களாகவும், பாதுகாப்புப் பெட்டகம் உடையவர்களாகவும் இருக்

* மேலே எடுத்துக் காட்டிய இடத்தில் (Loc. Cit.)

கிறார்கள் என்பதால் கறுப்பு யூதர்கள் தங்கள் ஆவண மூலங்களை அவர்களிடம் கொடுத்து வைத்திருப்பது ஒன்றே அவர்களிடத்துக் கறுப்பு யூதர்கள் கொண்டுள்ள நம்பிக்கையைக் காட்டும் எனவும் கூறினார்" எனக் கூறியுள்ளதாகத் திரு அட்லெர் குறித்துள்ளார். *'Revue des Deus Mondes'* இதழ் ஒன்றில்* கறுப்பு யூதர்களைப் பற்றிப் பியர்தி லொட்டி எழுதும் போது, "தன்னுடைய பிரார்த்தனைப் புத்தகத்தை வைத்துக் கொள்ள ஒருபோதும் விரும்பாத அடுத்த தெருவில் உள்ள தன் எதிராளிகளைப் பற்றி அந்த ரப்பி என்னிடம் மிகுந்த மனக் கசப்புடன் முறையிட்டான். தனது எதிரிகள் கூட்டாகத் தன் மீது ஒரு குற்றச்சாட்டினைச் செருசலத்தில் உள்ள பெரிய ரப்பிக்கு இந்தப் பிரச்சினையில் தங்கள் சார்பாகத் தலையிடும்படி அனுப்பி வைக்க, அவர் தன்னை இதில் பிணைத்துக்கொள்ள விரும்பாதவராக, அதற்குப் பதிலாகப் பின்வரும் மனம் புண்படும்படியான, 'ஒன்றாகக் கூடுகட்டிக் கொண்டு வாழ ஒரே மாதிரி இறகுள்ள ஒரே இனப் பறவைகளாக இருக்க வேண்டியது அவசியம்' என்ற பழமொழியை அனுப்பி வைத்துள்ளார் என மேலும் என்னிடம் கூறினான்."

சென்ற சில ஆண்டுகளாகக் கறுப்பு யூதர்களிடையே தங்களைப் பழுப்பு யூதர்கள், கறுப்பு யூதர்கள் எனப் பாகுபடுத்திக் கொள்ள வேண்டும் என்ற ஒரு வேறுபாட்டு உணர்வு வளர்ந்துள்ளது. பழுப்பு யூதர்கள் தங்களை மியூக்காசிம்கள் அல்லது உண்மையில் யூதர்கள் எனக் கூறிக்கொள்கின்றனர். இது தொடர்பாகத் திரு அட்லெர் எழுதுவதாவது:– "கறுப்பு யூதர்கள் நல்ல கறுப்பு நிறமுடைய குடும்பப் பெயரில்லாதவர்களான ஒரு பிரிவினராகவும், குடும்பப் பெயருடைய உயர்குடி மக்களான தங்களையே கொடுங்கோளூர் யூதர் அல்லது சிங்கிலி யூதர்களின் வழித் தோன்றல்கள் எனக் கூறிக் கொள்ளும் ஒரு பிரிவினராகவும் இருபிரிவினராகப் பிரிந்துள்ளனர்."

வெள்ளை யூதர்கள் பரதேசியர் எனவே பொதுவாக

---

* ஜூலை, 1902.

அழைக்கப்படுகின்றனர். இவர்களைக் குறிக்கும் இப்பட்டம் அரசுக் கணக்குகள் சிலவற்றிலும், இவர்களுக்கு வழங்கப்பட்ட தீட்டோரங்கள் எனப்படும் அரசரின் கொடைப் பட்டயங்களிலும் வழங்கப்பட்டுள்ளது. மிகத் தொன்மையான இஸ்ரேலியர்களிலிருந்து இவர்களை வேறுபடுத்தி அறிய முதலில் இவ்வாறு அழைக்கப்பட்டிருக்கலாம் என்றும் கூறப்படுகிறது. கொச்சி மாநிலத்திலுள்ள சென்னமங்கலத்திலும், மாலவிலும் கொடுங்கோளுருக்கு ஐந்தாறு மைல் தொலை தூரத்திலுள்ள திருவாங்கூரிலுள்ள பரூரிலும் பல நூற்றாண்டுகளாக இருந்துவரும் கறுப்பு யூதர்களின் மூன்று சிறு குடியிருப்புக்கள் மூர்கள், மற்றும் போர்த்துகீசியர் தாக்குதலினின்றும் தப்பக் கறுப்பு யூதர்கள் தஞ்சம் புகுந்த இடங்களாதல் வேண்டும். இந்த மூன்று குடியிருப்புக்களிலும் வெள்ளை யூதர்கள் காணப்படவில்லை. மாநிலத்தின் மிகத் தொன்மையான யூதர்களின் குடியிருப்பான கொடுங்கோளுரைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் வெள்ளை யூதர்கள் தங்களுக்கு ஏதும் உரிமைகளோ உறவுகளோ இருப்பதாகவும் கூறிக் கொள்ள முடியாது.

யூதர்கள் கண்ணைப் பறிக்கும் வண்ணமுடைய நீண்ட தளர்வான மேலங்கியினையும் அதன்மேல் கழுத்துவரை பித்தான்களிடப்பட்ட இடுப்பளவு சட்டையினையும், நீண்ட வெள்ளை முழுக்கால் சட்டைகளையும் அணிவர். உச்சந் தலையில் குல்லாய் அணிந்து வெளியே புறப்படும் இவர்கள் திருக்கோயிலுக்குச் செல்லும்போது தலைப்பாகை அணிந்து செல்வர். கறுப்பு யூதர்களின் உடை பெரிதும் இந்திய முகமதியர்களின் உடையினை ஒத்ததாக இருக்கும். இவர்களுள் பலர் சோனக மாப்பிளாக்களைப் போலச் சட்டை அணிந்து தலையில் சிறு குல்லாய் அணிவர். பொதுவாக இவர்கள் வண்ணம் தோய்த்த ஆடைகளையே அணிகின்றனர். மரத்தாலான செருப்புக்களையே இவர்களில் பலரும் பயன்படுத்துகின்றனர். இந்தக் கால்செருப்புகளும், காதுகளின் மேல் தொங்கவிடப்பட்டுள்ள மயிர்க்கற்றைகளும் இவர்களை மற்ற பிரிவினரிடத்திருந்து வேறுபடுத்தி அறிய உதவுகின்றன. யூத மகளிர் எப்போதும் வண்ணம் தோய்த்த ஆடைகளையே அணிவர். எரேபிய மொழியினையே இன்னமும் சமய, சமுதாயச் சடங்குகளுக்குப் பயன்

படுத்தும் இவர்களில் சிலர் அதனைச் செம்மொழியாகப் பயின்றும் வருகின்றனர். வீட்டில் இவர்கள் மலையாளத்தையே பேசுகின்றனர். வெள்ளை யூதர்கள் ஞாயிற்றுக்கிழமைகளில் திருமணத்தை நடத்துகின்றனர். கறுப்பு யூதர்கள் தங்கள் திருமணத்தைச் செவ்வாய்கிழமைகளில் பொழுது விழுந்தபின் நடத்தும் பழைய வழக்கினைத் தொடர்ந்து கடைபிடித்து வருகின்றனர். பல மனைவியர் மணம் விலக்கப்பட்டதில்லையாயினும் ஒருவனுக்கு ஒருத்தி என்ற வாழ்க்கை நெறியினையே இவர்கள் பேணுகின்றனர். ஆண்கள் இருபது வயதான பின்னரும் பெண்கள் 14 அல்லது 15 வயதான பின்னரும் மணம் செய்விக்கப்படுகின்றனர். மண நிகழ்ச்சிகள் பெரிய அளவில் நிகழும் விழாக்களாகும். வெள்ளை யூதர்கள் மண நிகழ்ச்சிகள் ஏழு நாள்களும், கறுப்பு யூதர்களின் மண நிகழ்ச்சிகள் பதினைந்து நாள்களும் நீட்டிக்கின்றன. கறுப்பு யூதர்கள் சேரமான் பெருமாள் நாயனார் தங்களுக்கு வழங்கிய பட்டயத்திலுள்ள சலுகைகள் பலவற்றை இன்னமும் தொடர்ந்து பயன்படுத்தி வருகின்றனர். எல்லாப் பிரிவு யூதர்களும் இந்துக்களின் சில பழக்க வழக்கங்களை மேற்கொண்டு வருகின்றனர். தங்கள் திருக்கோயிலுக்கு மணச் சடங்கு நிகழ்த்தப் புறப்படுமுன், மணமகனின் பெண் உறவினர்களுள் ஒருத்தி (பெரும்பாலும் மணமகன் உடன்பிறந்தவள்) மணமகளின் கழுத்தில் தாலி அணிவிப்பதும், அப்போது பெண்கள் அனைவரும் குலவையிடுவதும் அவ்வாறு இவர்கள் மேற்கொண்டுள்ள பழக்கங்களில் ஒன்றாகும். மணமுறிவினைச் சட்டப்படியாக இவர்கள் செய்துகொள்வதில்லை. மண ஒப்பந்த ஏட்டான கெத்துபாவில் குறிக்கப்பட்ட தொகையினைத் திரும்பத் தந்து மணமுறிவு பெறுவர். சாவுச் சடங்குகளின்போது பிணத்தைக் குளிப்பாட்டும் இவர்கள் அதற்கு எண்ணெய் பூசுவதில்லை. இறந்தவர்களை இவர்கள் புதைக்கின்றனர். சுடுகாடு, வாழ்பவர்களின் வீடு என்ற பொருள் தரும் பெத் ஹெய்ம் என அழைக்கப்படுகின்றது.

உலகெங்கும் வாழும் பிற யூதர்களைப் போலவே கொச்சியில் வாழ்பவர்களும் வாரத்தின் ஏழாவது நாளான சனிக்கிழமைகளில் சமயத்தோடு நெருங்கிய தொடர்புடைய விருந்துகளையும்,

விரதங்களையும் மேற்கொள்கின்றனர். குழந்தைகளுக்கு அவர் கள் பிறந்த எட்டாம் நாள் பெயரிடும்போது சுன்னத்துச் சடங்கினையும் செய்விக்கின்றனர். எகிப்தியரிடமிருந்து விடுதலை பெற்ற திருநாளைக் குறிக்கப் புளிப்பு ஏற்றப்படாத ரொட்டி யினை வழங்கி அதனைக் கொண்டாடும் இவர்கள், வெள்ளாட் டுக் குட்டியினை அதற்காகக் கொல்வதில்லை. வாயிற்கதவின் நிலை, பலகணியின் கட்டை ஆகியவற்றின் மீது குருதியினைத் தெளிக்கும் பழக்கமும் இவர்களிடம் இல்லை. பெண்டிகோஸ்ட் விருந்து, டிரம்பெட்ஸ் விருந்து, டேபர் நாகில்ஸ் விருந்து ஆகிய விருந்துகளையும் இவர்கள் கொண்டாடுகின்றனர். கழுவாய் தேடும் நாளையும், செருசலம் அழிக்கப்பட்ட நாளையும் நினைவு கூர ஆண்டுதோறும் விரதம் மேற்கொள்வர். கழுவாய் தேடும் நாளில் யூதர்கள் தங்கள் திருக்கோயிலில் காலை 5 மணி முதல் மாலை 7 மணி வரை வழிபாடு நடத்துவர். யூதர்களின் உண்ணா விரதம், விரத நாளைக்கு முந்திய நாள் மாலை 5 மணிக்குத் தொடங்கி விரத நாளன்று மாலை 7 மணிக்கு முடிவுறும். யூதர் களின் நாள், பொழுது விழும் சமயம் தொடங்கி மறுநாள் பொழுது விழும்போது முடிவுறும். மற்ற எல்லா விருந்துகளை யும் விட டேபர் நாகில்ஸ் விருந்தே மிகுந்த ஆடம்பரமாகக் கொண்டாடப்படுவது. அப்போது ஒவ்வொருவரும் தங்கள் வீட்டின் முன் வாசலில் பச்சைத் தென்னை ஓலைகளால் வேயப் பட்ட பந்தலிட்டு, அதனைக் கொடிகளால் அலங்கரிப்பர். வீட் டில் உள்ள அனைவரும் அந்தப் பந்தலில் ஒன்றாகக் கூடி விருந்து உண்பர். இந்த விருந்துத் திருவிழாவின் இறுதி நாளன்று திருக் கோயிலின் முன் பெரிய குடுவையில் எண்ணெய் நிரப்பி விளக் கேற்றுவர். அன்று அனைவரும் திருக்கோயிலில் வந்து கூடுவர். ஆண், பெண், குழந்தைகள் உள்ளிட்ட அனைவரும் அதற்காகச் சிறப்பாக அலங்கரிக்கப்பட்ட வழிபாட்டு மண்டபத்தில் திரள் வர். கூடியுள்ள ஆண்கள் திருக்கோயிலின் உள்ளே உள்ள வேத நூல்களை வெளியே கொண்டு வரும்போது மண்டப இருக்கை களில் கூடியுள்ள பெண்கள் கோயிலினுள் செல்வர். அந்த வேத நூல்கள் மீண்டும் உள்ளேகொண்டு வரப்படும்போது அவர்கள் அங்கிருந்து வெளிவந்து மீண்டும் மண்டப இருக்கைகளில் சென்று அமர்வர்.

இனக் கலப்பு இல்லாத யூதர்கள் மியூக்காசிம்கள் (குல உரிமைச் சார்பு உடையவர்கள் அல்லது பெருமகன்கள்) எனப்படுவர். தாழ்ந்த சாதியிலிருந்து யூதர்களாக மதம் மாறியவர்கள் மியூக்காசிம்மைச் சேராதவர்களாகக் கருதப்படுவர். யூத இரப்பிகளின் கருத்துப்படி தபில எனப்படும் புனிதக் குளியல் அவர்களுடைய சமூகத் தடையினைப் போக்கி அவர்களைத் தூய்மைப் படுத்துகின்றது. இத்தகைய புனிதக் குளிப்புச் சடங்கினை மேற்கொண்டவர்கள் இனக் கலப்பு இல்லாத யூதர்களோடு மண உறவு கொள்ளத் தகுதி வாய்ந்தவர்களாவர். சாதிக்குரிய மதிப்பும், இனத் தூய்மை பற்றிய தப்பெண்ணமும் இத்தகைய மணங்கள் நிகழத் தடைகளாக உள்ளன.

1907-இல் கிடைக்கப் பெற்ற ஒரு குறிப்பின்படி, "யூதர்கள் உயர்தரமான உயர்கல்வியின் இன்றியமையாமையினை நன்கு உணர்ந்து தங்கள் பாதுகாப்பினைத் தேடிக் கொள்ள இடைநிலைக்கல்வி நிலையத்தை அமைத்துக்கொள்ளமுற்பட்டுள்ளனர். ஏற்படுத்தப்படவுள்ள இந்தப் பள்ளி கறுப்பு யூதர், வெள்ளை யூதர் ஆகிய இரு பிரிவினருக்கும் உரியதாக இருக்கும். இந்தப் பள்ளி பொருளாதாரச் சிக்கலின்றி நடைபெற யூதர் இனப் பெரும்புள்ளிகளுள் ஒருவரான திரு எஸ். கொடேர் ஆங்கிலோ-யூத கூட்டமைப்பினை உதவி கேட்டு வந்தபோது, அந்த அமைப்பு ஆண்டு ஒன்றுக்கு 150 பவுன் பள்ளியின் நடைமுறைச் செலவுக்காகத் தரமுன் வந்துள்ளது. இந்த உதவி குறிப்பிடத் தக்க பெருந்தொகையாக இருப்பினும் பள்ளிச் செலவுகளுக்கு இது போதுமானதாகாது. ஆகவே யூதர்கள் தாங்களே பொருள் நன்கொடைதரவும், கொச்சி அரசின் உதவியினைக் கல்வி விதிகளின் கீழ்பெற அணுகவும் முடிவு செய்துள்ளனர்"* எனத் தெரிய வருகின்றது.

1903–இல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற பட்டமளிப்பு விழாவில் நான் கலந்து கொண்டேன். அப்போது பல்கலைககழக வேந்தர் முதன் முதல் இளங்கலைப் பட்டம் பெற்ற யூதன் ஒருவனுக்குப் பட்டம் வழங்கினார்.

---

* சென்னை மெயில் நாளிதழ், 1909 (Madras Mail, 1909.)

1901 கொச்சி மாநிலக் கணக்கெடுப்பின்படி 180 வெள்ளை யூதர்களும், 957 கறுப்பு யூதர்களும் இருப்பதாகத் தெரிய வருகின்றது.

**ஜோடிய - Jhodia**

பொரோசர் சாதியின் ஓர் உட்பிரிவு.

**ஜோரிய - Jhoria**

கௌடொ சாதியின் ஓர் உட்பிரிவு.

**ஜீலக - Jilaga (pith)**

தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம். நெட்டி எனப் பொருள்படுவது.

**ஜீணிகர் – Jinigar**

"இந்தச் சாதியைச் சேர்ந்த சிலர் குறிப்பிடத்தக்க வகையில் சந்திரகிரி வட்டத்தில் வாழ்கின்றனர். இப்பொழுது இவர்கள் வண்ணப் படங்கள் தீட்டும் பணியில் ஈடுபட்டுள்ளனர். ஒரு காலத்தில் நுண்கலை வினைஞர்களாக விளங்கிய இவர்களைப் பற்றிக் கூறப்படும் விவரங்கள் வருமாறு:- வடசர்க்கார் பகுதியைச் சேர்ந்த ராசுக்களான இவர்கள் சந்திரகிரி அரசரிடம் பணியாளர்களாக வந்து அமர்ந்தனர். அரசருக்குப் பணி புரியும் கம்மாளர்களின் பணி ஒழுங்கினை மேற்பார்க்கவோ பணியின்போது அவர்கள் ஏமாற்றாதிருப்பதைக் கண்காணிக்கவோ இவர்கள் அமர்த்தப்பட்டனர். சில காலத்திற்குப்பின் கம்மாளர்கள் தெய்வத்திற்காக ஒரு தேரினைச் செய்து முடித்த பின், அதனால் மிகுந்த கர்வம் கொண்டவர்களாகத் தெய்வ உருவத்தினை அத்தேரில் வைப்பதற்குமுன் தாங்கள் அதில் அமர விரும்பினர். இந்த அடாத விருப்பம் காரணமாக அவர்கள் அங்கிருந்து வெளியேற்றப்பட்டனர். கம்மாளரின் பணியினை மேற்பார்த்து வந்த ராசுக்கள் அதன் பயனாய்த் தாங்கள் அத்தொழிலில் பெற்ற பயிற்சியின் உதவியோடு சமூகத்தவர்களுக்கு அப்பணியினைச் செய்யத் தொடங்கினர். நவாபுகளின் ஆட்சிக் காலத்தில் இவர்கள் இத்தொழிலைக் கைவிட்டுக்

குதிரைத் தளவாடங்கள் செய்யும் பணியினை மேற்கொண்டனர். சேணம் எனப் பொருள்படும் ஜீணை என்பதிலிருந்து இப் பெயர் இவர்களுக்கு அமைந்தது. இன்று இவர்கள் முச்சிகள் என அழைக்கப்படுகின்றனர்'' என இவர்களைப் பற்றி வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் திரு எச். எ. ஸ்டுவர்ட் எழுதியுள்ளார்.

பெல்லாரி மாவட்ட விவரக் குறிப்பில் திரு டபிள்யூ. பிரான்சிஸ் இவர்களைப் பற்றிப், ''பெல்லாரியில் ஜீணிகர் மர வேலைப்பாடுகளில் ஈடுபட்டுள்ளதோடு அத் தொழிலைச் சில முகமதியர்களுக்கும் கற்றுத் தந்துள்ளனர். அவ்வாறு கற்றுக் கொண்டவர்கள் இன்று கற்று தந்தவர்களைவிடக் கைதேர்ந்த தொழில் நுட்பம் வாய்ந்தவர்களாக உள்ளனர். இம்முகமதியர்கள் இருவர் செய்த வேலைப்பாட்டோடு கூடிய சாளுக்கிய மர பிலான தேக்கு மர நுழைவாயில்கள் டெல்லி தர்பாரில் பதக்கப் பரிசு பெற்றுள்ளன. அவை இப்பொழுது சென்னை அருங் காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

கர்நூல் மாவட்டத்தைச் சேர்ந்த நந்தியாலில் நான் அண்மையில் ஒரு ஜீணிகரை நேரில் சந்தித்தேன். அவன் பித்தளை வண்ணப் பூச்சுடைய விசிறிகள், தட்டுகள், வட்ட வடிவமான மேசைத் தட்டுகளுக்கான மூடி முதலியனவற்றையும் இந்து சமயத் தெய்வங்கள், புராண நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் வண்ண ஓவியங்களையும் படைக்கின்றான். டெல்லியில் உள்ள கர்சன் பிரபுவின் துணைவியாரின் சுற்றுப்பயண விடுதியின் தனி அறையின் பீடங்கள் பலவற்றை இவன் செய்து அளித் துள்ளான். இவனுடைய பூச்சுச் செய்யப்பட்ட பித்தளைப் பொருட்கள் டெல்லி பொருட்காட்சியில் பதக்கம் பெற்றுள்ளன எனினும் இவை 1886-இல் காலனி நாடுகளின் பொருட்காட்சிக்கு அனுப்பப்பட்ட இந்தியப் பொருள்களைக் காட்டிலும் கைநுட்பத் திறனில் தரம் குறைந்தனவே. கர்நூலில் செய்யப்படும் வண்ணப் பூச்சுப் பித்தளைப் பொருட்கள் இந்தியாவில் மற்றப் பகுதிகளில் செய்யப்படும் பொருட்களைக் காட்டிலும் தரத்தில் உயர்ந்தவை எனக் கூறப்படுகிறது. கஞ்சம் மாவட்டம் மண்டசாவில் செய்யப்

படும் வண்ணப் பூச்சுப் பொருட்கள் அளவில் பெரியன ஆகையால் பெரிய அளவிலான அலங்காரங்களுக்கே அவை பயன் படுகின்றன. இத்தகைய அலங்காரங்கள் பல நாடுகளில் முகமதியர்கள் கட்டிடக் கலைகளில் உள்ளிட ஒப்பனைக்குப் பயன் படுத்தப்படுகின்றன. கர்நூல் வடிவமைப்புகள் சற்றே பிதுங்கிய மலர் கொத்துக்களாக இருக்கும். வண்ணங்கள் பளிச்செனவும் செறிவுடையனவாகவும் அவற்றின் மேல் தீட்டப்பட்டிருக்கும். கஞ்சம் மாவட்ட ஊரான நோசமில் தோலில் குடையப் பட்ட தெய்வ உருவங்களும், மலர் வடிவமைப்புக்களும் வண்ணம் தீட்டப்பட்டிருக்கும். பனை ஓலை, காகிதம், துணி ஆகியவற்றில் பளிச்சென வண்ணம் தீட்டப்பட்ட சீட்டாட்டத் திற்கான சீட்டுக்களும், விசிறிகளும் கூட இங்குச் செய்யப்படு கின்றன.

நெல்லூர் மாவட்டத்தின் ஜீணிக வாண்டுலு பொம்மைகள், படங்கள், மாதிரி உருவங்கள் ஆகியனவற்றைக் காகிதம், நெட்டி ஆகியன கொண்டு தயாரிக்கின்றனர். திருச்சிராப் பள்ளியில் இந்துக்களின் கோயில்களின் நுட்பமான சரியான மாதிரிகள், செயற்கை மலர்கள், மாட்டு வண்டிகள் முதலியன வற்றினை நெட்டி கொண்டு தயாரிக்கின்றனர். அதுவே சோல தொப்பிகள் தயாரிக்கவும் பயன்படுத்தப்படுகின்றது. சென்னை அருங்காட்சியகத்தில் பல ஆண்டுகளுக்கு முன்னர் செய்யப்பட்ட தஞ்சாவூர் அரசர் தர்பாரில் வீற்றிருக்கும் காட்சி அவர் முன் மல்லர்கள் போரிடும் மற்போர் காட்சியோடும் தேவதாசிகளின் ஆடற் கோலத்தோடும் வைக்கப்பட்டுள்ளது.

**ஜிங்க - Jinga (Indian gazelle: *Gazella bennetti*)**

பத்ம சாலேக்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம். இதற்குச் சமமான ஜிங்கல, போயர்களின் ஒரு குலம்.

**ஜீர - Jira**

பெல்லாரி மாவட்டத்தில் பூக்கள் விற்கும் லிங்காயதன் தன்னை ஜீர என அழைத்துக் கொள்வான். இவர்கள் சாதி ஜீர குலம்.

**சீரிகெ - Jirige (cumin - *Cuminun Cyminum*)**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். குர்ணிகளின் ஒரு கோத்திரம்.

**ஜீவால - Jivāla (an insect)**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**ஜோகி – Jōgi**

தெலுங்கு பேசும் இரவலர்களான ஜோகிகள் பற்றி வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் திரு எச்.எ.ஸ்டுவர்ட் தொகுத்துக் கூறியுள்ள செய்திகள் வருமாறு:- "தாசரிகளைப்போல ஜோகிகளும் ஊர்களைச் சுற்றிப் பிச்சை எடுக்கும் வித்தை காட்டுபவர்களும் இரவலர்களும் ஆவர். இவர்கள் பாசிமணி விற்பவர்கள், பன்றி வளர்ப்பவர்கள் என இரு பிரிவினராக உள்ளனர். திறமை மிக்க பாம்பாட்டிகளான இவர்கள் மந்திரங்களும், மருத்துவமும் தெரியும் என ஏமாற்றப் பார்ப்பர். மிக நலக்கேடான பழக்கங்களை உடைய இவர்கள் சூத்திரர்களுடைய இல்லங்களில் கூடத் தடையின்றி உணவு கொள்வர். கைம்பெண்களிடமிருந்து ஒரு சிறு தொகையைத் தண்டமாகப் பெற்றுக் கொண்டு அவர்களை வைப்பாட்டிகளாக இருந்து வர அனுமதிக்கும் இவர்கள் அத்தகைய பெண்கள் மஞ்சள் பூசிக் குளிக்க அனுமதிப்பதில்லை." ஜோகிகள் பிச்சை எடுப்பதும், பன்றி வளர்ப்பதும் ஆகிய இவற்றோடு பயிர்த் தொழில், தெருநாய்களைப் பிடித்துக் கொல்லுதல், துப்புரவுப் பணி, திருட்டு, கொள்ளை ஆகியனவற்றையும் மேற்கொண்டுள்ளனர். கிள்ளேகயாட என அழைக்கப்படும் மகளிர் சிலர் பச்சைக் குத்துவதைத் தொழிலாகக் கொண்டுள்ளனர். தங்களுடைய குடிசைகளுக்கான பொருட்களைச் சுமந்தபடி அல்லது கழுதைகளின் மேல் ஏற்றியபடி ஜோகிகள் ஊர்ஊராகச் சுற்றித் திரிவர். "கழுதைமேல் ஏற்றப்பட்டுள்ள பொதிகளில் அங்கங்கே திருடிய துணிகளை மறைத்து வைப்பர். ஊருக்குப் புறத்தே நீர்வற்றிய குளத்தின் பரப்பில் தங்குவர். இவர்களுடைய குடிசைகள் பனை ஓலைகள் ஐந்து சேர்த்துப் பின்னப்

பட்ட வளைந்த கூரைகளைக் கொண்டவை" எனத் திரு எஃப். எஸ். முல்லலெ தெரிவிக்கின்றார். இவர்கள் குடிசைகள் முன் பக்கம் முழுவதும் திறப்பு உடையனவாக இருக்கும்.

ஜோகிகள் தமிழ்நாட்டில் தோட்டியன் (பார்க்க: தனிக் கட்டுரை) என அழைக்கப்படுகின்றனர். துப்புரவுப் பணியாளர்களாக உள்ளவர்கள் குறவர் அல்லது ஒட்டர் என அழைக்கப் படுவர். துப்புரவுப் பணியில் ஈடுபட்டுள்ளவர்கள் சாதியைச் சேர்ந்த மற்றவர்களோடு கலந்து பழகுவதில்லை. ஜோகிகள் சிலர் தங்கள் முன்னோர்களில் ஒருவர், பார்வதியினுடைய மார்பகத்தைக் குறித்துப் பழித்துப் பேசியதால், பார்வதி இட்ட சாபத்தின் காரணமாகத் தாங்கள் பிச்சை எடுக்க நேர்ந்ததாகக் கூறுகின்றனர். இவர்கள் மாலர்களையும், மாதிகர்களையும் விடத் தங்களை உயர்ந்தவர்களாகக் கருதுகின்றனர். எனினும் இவர்களுடைய இல்லங்களில் ஒட்டன்கள் (நவ்வி தாதியார்) உண்பதில்லை. முதலை, வயல் எலி, பூனை ஆகியனவற்றை இவர்கள் உண்பர். ஜோகி சாதியைச் சேர்ந்த மணமகன் மணப் பெண்ணின் கழுத்தில் தாலி அணிவிக்கும் முன் மஞ்சள் தோய்த்த கயிற்றில் அதனைக் கோத்து ஒரு பெண் பூனையின் கழுத்தில் கட்ட வேண்டும் என்ற வழக்கம் இவர்களிடையே உள்ளது. ஜோகிகள் பூனைகளைப் பிடிப்பதை மக்கள் சில போது உடன்படுவதில்லை. பூனையின் ஒரு மயிர் உதிரும்படியாக அதற்குத் தீங்கிழைப்பதுகூடக் கொடிய பாவமாக மக்கள் கருதுவதே இதற்குக் காரணமாகும். மக்களின் இத்தகைய மனப்போக்கினை உணர்ந்த ஜோகிகள் தங்கள் திருமணத் திற்குப் பூனை வேண்டும் எனச் சொல்லி மக்களை ஏமாற் றுவர். ஒரு சமயம் ஜோகி ஒருவன் ஒரு கோணிப்பை நிறைய பூனைக்குட்டிகளைக் கொண்டுபோவதை நான் நேரில் பார்த்து அவை எதற்காக எனக் கேட்டபோது அவன் அவற் றைத் தின்னவே கொண்டுபோவதாகக் கூறினான்.

சிவப்பு நிறக் கோவணம் அணிந்து, தோளில் ஒரு சிறு துண்டு போட்டுக்கொண்டு ஜோகி சாதிப் பிச்சைக்காரர்கள் நல்ல பாம்பு, மலைப் பாம்பு, சாரைப் பாம்பு ஆகியவற்றைக் கூடையில் சுமந்தவர்களாகச் சுற்றித் திரிவர். ஒருமுறை அவர்

களுடைய ஒரு பையினை ஆராய்ந்தபோது அதில், மலைப் பாலைப் (*Mimusops hexandra*) பழங்கள், பொடுதலைப் (*Lippa nodiflora*) பூங்கொத்துக்கள் (இது மருந்தாகப் பயன்படுவது), முள்ளம் பன்றியின் முள் (இதனைப் பொற்கொல்லர்களுக்கு வாருகோலாக விற்பர்), கணவாய் மீனின் உள்தோடு, ஒரு வகைப் பொடியோடு கூடிய தேங்காய்க் கொப்பரை, குருவிக் காரர் தயாரிப்பது போன்ற நரிக் கொம்பு (போலியாக நரியி னுடையது எனக் கூறப்படுவது), பாம்புக்கடிக்கு முறிவு செய்யக் கூடிய இரண்டு மரச் சிப்பங்கள் ஆகியன இருக்கக் கண் டேன். இவர்கள் சாதிப் பெண்கள் நிறைய வளையல்கள், பாசிகள், சுறா மீனின் எலும்புகள், சோழிகள் ஆகியவற்றை அணிந்தவர்களாக 'சுப்பம்மா! லட்சம்மா!' எனக் கூவியபடி தெருவில் வருவர். பிச்சை வாங்காமல் வீட்டு வாசலை விட்டு இவர்கள் அப்பால் செல்லமாட்டார்கள். திருட்டுப் பொருட்களை மறைத்து வைப்பதற்கு ஏற்றதான பெரிய சுரைக் குடுக்கையினை இவர்கள் உடன் தூக்கித் திரிவர்.

பிற தெலுங்குச் சாதியார்களைப் போலவே ஜோகிகளிடை யேயும் புறமணக்கட்டுப்பாடு உடைய குலப்பிரிவுகள் உள்ளன. அவற்றுள் மாதிரிக்குச் சில வருமாறு:–

| | |
|---|---|
| வகிதி (முற்றம்) | பிந்துகொலு (பித்தளைப் பானை) |
| உளுவல (கொள்ளு) | சப்பாதி (சுவையில்லாதது) |
| வவதி (உறவு முறை) | பொடதாசரி (மொட்டைப் பிச்சைக்காரன்) |
| குந்தர (வட்டம்) | ஜல்லி (காளைகளின் கழுத்தை அலங்கரிக்கும் பனை ஓலைச் சலங்கை) |
| செருக்கு (கரும்பு) | |
| குடி (கோயில்) | |

**1901** மைசூர் மாநிலக் கணக்கெடுப்பில் கில்லெ கையட்ட, ஹெலவ, ஜங்கலிக, பாகனாடி ஆகியன ஜோகியர் சாதிக்கு உரியனவாகப் பதியப்பட்டுள்ளன. விருஷ்ப, காவேரி மாதா, கேத்ருமக்களு என்பனவற்றைச் சிலர் தங்களுடைய கோத்திரங்

களாகப் பதிந்துள்ளனர். சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் சித்தரு, பாமுலர் (பாம்பு) ஆகியன ஜோகி சாதியின் உட்பிரிவு களாகப் பதியப்பட்டுள்ளன. பாமுலர் என்பது பாம்பாட்டி களான ஜோகிகளுக்குரிய தொழில் தொடர்பான மற்றுமொரு பெயராகும்.

இச்சாதியைச் சேர்ந்த பெண்கள் நடத்தை கெட்டவர்களாக இருப்பதோடு இவர்களிடையே பலர் பரத்தையராகவும் உள்ள னர். தாங்கள் கற்புடையவர்கள் என்பதனை மெய்பிக்க மாட்டுச் சாணம் கரைக்கப்பட்ட தண்ணீர், அல்லது மிளகாய்த் தூள் கலந்த தண்ணீரைக் குடிக்கும் பழக்கம் இவர்களிடையே உள்ளது பிறருடைய மனைவியரோடு கள்ளத் தொடர்பு கொண்டிருப் பதான குற்றம் மெய்ப்பிக்கப்பட்ட ஒருவன் அதற்கான தண்டத் தொகையினைச் செலுத்த முடியாதவனாக இருந்தால் தலையில் எந்திரக் கல்லினைச் சுமந்தபடி ஒரு பர்லாங் தூரம் நடந்து செல்லும் தண்டனையை அனுபவிக்கவேண்டும்.

திருமண உறுதிப்பாட்டுச் சடங்கின்போது மணமகளுக்கு விலையாக அவளைச் சேர்ந்தவர்களுக்கு ஒரு சிறு தொகையும் பன்றி ஒன்றும் தரப்படவேண்டும். பன்றியினை அடித்துச் சாராயத்தோடு கூட விருந்து வைப்பர். இவர்களுடைய மணச் சடங்குகளுள் சில குறிப்பிடத்தக்கவை. மணமக்கள் கரத்தில் அவர்களுடைய தாய்மாமன்மார்கள் மனிதர்களின் தலைமுடி, அழிஞ்சில் (*Alangium lamarckii*), எட்டி (*Strychnos Nux-Vomica*) ஆகியவற்றின் தளிர்கள் கொண்ட கங்கணத்தை அணிவிப்பர். மணமகன் வீட்டார் மணமகள் குடிசைக்குத் தாலி கட்டுவதற் காகச் செல்லும்போது மணமகள் உறவினர்களும் மற்றவர்களும் அவர்கள் செல்லும் வழியில் குறுக்கே ஒரு கயிற்றினையோ மூங்கில் தட்டினையோ வைத்து வழி மறிப்பர். சிறு கைகலப் பிற்குப்பின், அவ்வாறு தடுக்கும் மணமகள் வீட்டாருக்குக் கொஞ்சம் தொகையினைக் கொடுத்தபின், மணமகன் வீட்டார் மேற்செல்வர். இவ்வாறு தடுக்கும் கயிறு வலெப்புதாடு எனப் படும். இது உறவுக்கயிறு எனப் பொருள்படும். இது முறையான உறவின் அடையாளமாகும். கறுப்புப் பாசிமணிகள் கோக்கப் பட்ட தாலிக் கயிற்றினை மணமகள் கழுத்தில் மணமகன்

அணிவிக்கும்போது மணமக்கள் உலக்கை மீதும் உரல்மீதும் அமர்வர். கூடியுள்ளவர்கள் அவர்கள் மீது அரிசி தூவி வாழ்த்துவர். அதன்பின் மணமக்களின் தாய்மாமன்மார் அவர்களைத் தோளில் சுமந்தபடி மணப் பந்தலுக்குக் கொண்டு செல்வர். ஒட்டேக்களையும் உப்பரவர்களையும் போலவே ஜோகி சாதியைச் சேர்ந்த கணவனை இழந்தவளும் ஏழு முறை மணப் பந்தலில் அமர்வாள் என்ற வழக்கு மொழியும் உள்ளது.

ஒரு சிறுமி பூப்படைந்தவுடன், அவளை அவளுடைய உடன்பிறந்தவனோ, கணவனோ அமைக்கும் தனிக் குடிசையில் இருக்கச் செய்வர். இதன் கூரை நாவல், வேம்பு, மா, நொச்சி ஆகியவற்றின் இலைக் கொத்துக்களால் வேயப்பட்டிருக்கும். தீட்டு நீக்கும் சடங்கின் இறுதி நாளன்று பூப்படைந்த சிறுமியின் ஆடைகளும், அவள் தங்கியிருந்த குடிசையும் எரிக்கப் படும்.

இறந்தவர்களை இவர்கள் புதைககின்றனர். பிணத்தினை ஒரு துணியில் சுற்றிச் சுடுகாட்டிற்குத் தூக்கிச் செல்வர். அதனைப் புதைகுழியில் இறக்குமுன் கூடியுள்ளவர்கள் அதன் கண்களின் மீது அரிசியினைத் தூவுவர். இறந்தவர் குலத்தினின்றும் வேறான குலத்தைச் சேர்ந்த ஒருவன் பிணத்தின் வாயில் நான்கணாவினை இடுவான். புதைகுழியில் பிணத்தின் தலையினை ஒரு பக்கமாகத் திருப்பி வைத்தபின், அந்தப் பக்கமாகப் புதைகுழியில் ஒரு குடைவினை ஏற்படுத்தி அதனுள் பலவகை உணவுப் பொருட்களையும் வைப்பர். பிணம் சுடபபடுவதில்லையாயினும் இறந்தவரின் மகன் சுடுகாட்டுக்கு நெருப்பினை தூக்கிச் செல்லும் வழக்கம் உள்ளது. ஜல்லிவல்லு பிரிவினரிடையே பிணத்தின் கக்கத்தில் ஒரு கோழிக் குஞ்சையும், கொஞ்சம் உப்பினையும் வைக்கும் வழக்கம் உள்ளது. கருமாந்திரம் எனப்படும் இறுதிநாள் சாவுச் சடங்கின்போது, சோறு, காய்கறி, பழம், சாராயம் ஆகியவற்றை இறந்துபோனவருக்குப் படைப்பர். புதைகுழியின் அருகே ஒரு துணியினை விரித்து இறந்தவரின் மகனும், பங்காளிகளும், மூதாதையர்களின் பெயர்களை உரக்கக் கூறியபடி மேற்சொன்ன பொருட்களை அத்

துணியில் படைப்பர். இதனைப் பின்னர் அனைவரும் உண்பர். ஜோகி வல்லு குலத்தவர் மட்டும் படைக்கப்பட்டவைகளை நீரில் வீசி எறிவர். மற்ற ஜோகி குலத்தவர்கள் இதுபோல வீசி எறிந்தால் அவர்களிடம் தண்டத்தொகை வசூலிக்கப்படும். பின்னர் கூடியுள்ள அனைவரும் ஒரு குளக்கரைக்கோ, ஆற்றங் கரைக்கோ சென்று மண்ணால் ஒரு மனித உருவின் மாதிரியை அமைத்து அதன் அருகே மண் விளக்கேற்றி வைப்பர். அங்கும் சோறு முதலியன படைத்தபின் மண் உருவம், அந்த விளக்கு ஆகியன நீரில் வீசி எறியப்படும். மனைவியை இழந்த ஒருவன் இச்சடங்கினை முடித்தபின் குளிக்கும்போது, அவனுடைய அரைஞாண் கயிற்றினை அவனைப்போல மனைவியை இழந்த வன் ஒருவன் அறுத்து எறிவான்.

ஜோகிகள் பெத்தவாடு, மல்லம்மா, கங்கம்மா, அய்யாவாரு, ருத்ரம்மா, மதுரை வீரரு ஆகிய தெய்வங்களை வழிபடுவர்.

ஜோகி சாதிப் பெண்கள் சிலர் திருமணத் தாலியோடு கூடத் தங்கள் குலதெய்வங்களின் நினைவாகத் தனித் தாலியினையும் அணிகின்றனர். இத்தாலியினைக் குலதெய்வத்தின் முன் வைத்து வழிபாடு செய்தபின் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுள் மூத்தவள் அதனை அணிவாள். அவள் இறந்தபின் குடும்பத்தில் அடுத்தபடி மூத்தவளாகின்றவளுக்கு அது உரியதாகும்.

ஜோகிகளின் குற்ற நடவடிக்கைகள் தொடர்பாகத் திரு முல்லாலெ பின்வருமாறு எழுதுகின்றார்:-* "ஜோகி சாதி யினைச் சேர்ந்த குழுவினர் பயணம் மேற்கொள்ளும் முன் அந்த வட்டாரத்தில் உள்ள மற்ற ஜோகி குழுக்களைக் கலந்து பேசுவர். தனித்து நிற்கும் ஒரு வேப்ப மரத்தடியில் இவர்கள் கூடிப் பேசுவர். இங்கு பயணத்திற்கான அடிப்படை ஏற்பாடு களை முடித்துக் கொண்ட பின், தங்கள் தெய்வமான பெரு மாளினை வழிபட்டபின் பன்னிரண்டு முதல் பதினைந்து பேரடங்கிய குழுவினராகக் கையில் மூங்கில் கழிகளைத் தாங்கிச் செல்வர். தலையில் துணியினைக் கட்டியபடி உடலில் ஓரளவே

* முந்து நூல். (Op. cit.)

உடைகள் அணிந்துள்ள இவர்கள், தாங்கள் மறைந்திருக்கும் சாலை வழியே வரும் வண்டிகளை எதிர்பார்த்துக் காத்திருப்பர். ஒவ்வொரு வண்டியினையும் இரண்டு மூன்று பேர் சேர்ந்து தாக்கி அவற்றைச் சாலையை விட்டு விலக்கி ஓட்டியபின் கவிழ்த்துவிட்டு, வண்டியில் வருபவர்களின் பொருள்களைப் பறித்துக் கொள்வர். அவ்வாறு பறிக்கப்பட்டவை பாதுகாப் பாக வைக்கப்படச் சாதியைச் சேர்ந்த குழுத் தலைவனிடம் தரப்படும். அவன் அதனைத் தன் குடிசைப் பக்கமாக ஒளித்து வைத்திருந்து, பின்னர் விற்பதற்காக எடுத்துச் செல்வான். இவர்கள் தங்கியுள்ள இடத்தைச் சுற்றி அமைந்துவள 11 சிற்றூர்களில் வாழும் எண்ணெய் விற்பவர்களான 'சமூக மதிப்பு' வாய்ந்தவர்களே இவர்களிடமிருந்து பொருள்களை வாங்கிக் கொள்பவர்கள். இவ்வாறு சுற்றுப்புறத்தில விற்பனை செய்ய முடியாத திருட்டுப் பொருட்களை இவர்கள் சென்னை நகரத்தில் கொண்டுபோய் விற்பர். சிறைத் தண்டனை பெற்றுத் திரும்புபவர்கள் மீண்டும் சாதியில் சேர்வது எளிதானதே. அதற்காகச் சாராயத்தோடு அவன் மற்றவர்களுக்கு விருந்து தர வேண்டும். திருட்டில் சிறை சென்றவனுக்கான பங்கினைப் பாதுகாப்பாக வைத்திருக்கும் அவன் கூட்டாளிகள் அப்பங்கி லிருந்து விருந்து ஏற்பாடுகளைச் செய்வர். அதன்பின் மற்ற சாதியார் செய்வதைப் போலச் சிறை சென்றவன் நாவினைச் சூடான தங்கத் தகட்டால் சுடும் சடங்கு நிகழும். இதனை அவர்கள் குழுவினைச் சேர்ந்த ஜங்கமே நடத்துவான். இச் சாதியைச் சேர்ந்த சிறுவர்களைப் பெரியவர்கள் களத்து மேட்டி லிருந்து தானியங்களைத் திருடவும், வாய்ப்பு நேரும்போது தானியம் ஏற்றிச்செல்லும் வண்டிகளில் மூட்டையினை அறுத்து ஒழுகும் தானியத்தைப் பிடித்து வரவும் அனுப்புவர்.

**ஜோகி – Jogi**

குடுபிகளின் ஓர் உட்பிரிவு.

**ஜோகி குருக்கள் - Jogi Gurukkal**

பார்க்க: யோகி குருக்கள். (See; Yogi Gurukkal)

**ஜோகி புருஷர் - Jogi Purusha**

புருஷர் அல்லது ஜோகி புருஷர் அண்மையில் புதிதாகத் தோன்றியுள்ள இரு பிரிவினரான ஜாதியார். இதில் ஒரு பிரிவினர் தனிச் சாதியாக வளர்ந்துள்ளனர். மற்றொரு பிரிவினர் பிற சாதியாரின் பழக்க வழக்கங்களை மேற்கொண்டுள்ளனர். தென் கன்னட மாவட்டத்தைச் சேர்ந்த மராத்தி, துளு மொழி பேசுபவர்கள் தாங்கள் தனிச் சாதியார் எனவும், தங்கள் சாதியில் மற்றவர்களைச் சேர்த்துக் கொள்வதில்லை என்றும் கூறுகின்றனர். இவர்களுக்கான தலைமை மடம் சுதிரியிலும், கிளை மடங்கள் ஹலோரி, புவ்வரசு ஆகிய ஊர்களிலுமாகத் தென்கன்னட மாவட்டத்தில் அமைந்துள்ளன. ஜோகி புருஷர் இந்த மூன்று மடங்களில் ஏதேனும் ஒன்றினைச் சேர்ந்தவர்கள். இவர்கள் பைரவரைச் சிறப்பாக வழிபடுகின்றனர். சிலர் கோரக்சநாதரைத் தங்கள் குலதெய்வமாகக் கொண்டுள்ளனர். இவர்கள் குரு இவர்களைப் பைரவ நெறியில் நிற்கத் தீட்சை தருவார். இவர்கள் மணம் புரிந்து கொண்டோ, துறவு மேற்கொண்டோ விருப்பம்போல் வாழ்க்கை நடத்தலாம். துறவு வாழ்க்கை மேற்கொள்பவர்கள் காதில் நடுவில் ஒரு துளையிட்டுப் பீங்கான் அல்லது நீர்யானையின் கொம்பினாலான வளையத்தை அணிவர். மண வாழ்க்கை மேற்கொள்பவர்கள் இதுபோலக் காதில் துளையிட்டுக் கொள்ள வேண்டியதில்லை. அவர்களுக்குத் தீட்சை தரும்போது களிமண் கட்டியொன்றினைக் காதில் துளை இருக்கவேண்டிய இடத்தில் வைத்து அழுத்துவர். தீட்சை பெற்ற ஜோகி புருஷர் அனைவரும் சிங்கநாதம் எனப்படும் பித்தளை, செம்பு, வெள்ளி, ஊதுகுழல்களைக் கோத்துக் கட்டப்பட்ட நூலினைக் கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும். உணவு கொள்ளுமுன் பைரவரை வணங்கி இக் குழல்களை முழக்க வேண்டும் என்பது விதி.

ஜோகி புருஷர் மக்கள் வழித் தாயஉரிமையை மேற்கொள்கின்றனர். மணச் சடங்குகளை நடத்தக் கராடி பிராமணர்களை அமர்த்தும் இவர்கள் இறந்தவர்களை உட்கார்ந்த நிலையில் புதைப்பர். பன்னிரண்டாம் நாள் நடத்தப்படும் இறுதிச் சாவுச் சடங்கினை ஒரு பிராமணர் நடத்தி வைப்பார்.

இச்சடங்கின்போது காகங்களுக்குச் சோறும், பிராமணர்களுக்குத் தானமும் தருவதோடு தீட்டுப் போக்கிப் புனிதமாக்கும் நிகழ்ச்சியும் நடத்தப்படும். இறந்தவர் தீட்சை பெற்றவரானால் மூன்றாம் நாள் முதல் பொஜ்ஜ நாள் (12ஆம் நாள்) வரை புதை குழி அருகே பூசை நடத்த வேண்டும்.

ஜோகி புருஷர் சிலர் இரத்தலை மேற்கொண்டிருக்கின்றனர். பிறர் கூலிகளாகவும் ஏவலர் முதலிய பணியாளர்களாகவும் உள்ளனர்.

**சோனகன் – Jonagan**

*1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் சோனகன் என்ற இப்பெயர், "இந்துப் பெற்றோர்களுக்குப் பிறந்த முசல்மான் வணிகனைக் குறிக்கும் பெயர் சோனகன். அரேபிய எனப் பொருள்படும் சோனகம் என்ற தமிழ்ச் சொல்லான இது முகமதியர்களை மட்டும் குறிப்பதாக அமையாமல் பொதுவாகக் கலப்பினத்தவரான முகமதியர்களைக் குறிக்கத் தமிழர்களால் வழக்கில் பயன்படுத்தப்படுகின்றது" எனக் கூறப்பட்டுள்ளது. தென் ஆர்க்காடு மாவட்ட விவரக் குறிப்பில் திரு பிரான்சிஸ், "ஜோனகன் அல்லது சோனகன் என்ற சொல் சோனக நாட்டான் அல்லது அரேபியன் எனப் பொருள்படும். இந்துக்கள் லப்பைகளையும், மரக்காயர்களையும் குறிக்க வழங்கும் இச் சொல் ஏளன தொனிக் குறிப்பு உடையது" எனக் கூறுகிறார். இன்னொரு வழக்குப்படி சோனகன் என்பது கடலில் மீன் பிடிக்கும் மீனவர்களையும், படகோட்டிகளையும் குறிப்பது. வளமான வணிகர்களைக் குறிக்கும் சொல் மரைக்காயர். மலபாரைச் சேர்ந்த மாப்பிள்ளாக்களைப் பற்றிய குறிப்பில் திரு பத்மனாப மேனன், "முகமதியர்களைப் பொதுவாகச் சோனக மாப்பிளாக்கள் என அழைப்பர். சோனகர் என்ற சொல் கிரேக்கர்களைக் குறிக்கும் யவனகர் என்பதற்குப் பதிலாகப் பயன்படுத்தப்படுகிறது" எனக் கூறியுள்ளார்.

**சோதி – Jothi (light)**

போயர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**சோதிநகரர் - Jotinagara (people of the city of light)**

சோதிநகரர், சோதிபட்டண என்பன கன்னட எண்ணெய் ஆட்டும் காணிகர்களுக்குரியதாகக் கொட்டைகளிலிருந்து எண்ணெய் எடுப்பவர் என்ற பொருளில் வழங்கும் சொல்லாகும். இவ்வாறு அவர்கள் தங்களை உயர்த்திக் கூறிக்கொள்வர். இதே போன்று தமிழ்நாட்டு எண்ணெய்ச் செக்கார் தங்களைச் சோதி நகரத்தார் எனவும் திருவிளக்கு நகரத்தார் எனவும் அழைத்துக் கொள்கின்றனர்.

**யூத மாப்பிள்ள - Juda Māppilla**

கொச்சி யூதர்களுக்குரிய ஒரு பெயர்.

**ஜுலாக - Julāha**

முகமதிய நெசவாளர் சிலர் ஜுலாகர் எனக் கணக்கெடுப்பின்போது தங்களைப் பதிந்து கொண்டுள்ளனர்.

**ஜுங்கு - Jungu (Cock's-comb)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். சேவலின் கொண்டை எனப் பொருள்படுவது.

தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்
இரண்டாம் தொகுதி
முடிந்தது

---

## சொல்லடைவு

### தமிழ் — ஆங்கிலம்

# சொல்லடைவு

## ஆங்கிலம் — தமிழ்

---

## தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 005
## அண்மைவெளியீடுகள்

| | |
|---|---|
| காஞ்சி கோயில்கள் | 90.00 |
| பார்புகழும் பால்சங்கு | 40.00 |
| தன்வந்திரி வைத்தியக்கும்மி | 50.00 |
| தஞ்சைக் கூத்து மரபுகள் | 50.00 |
| தஞ்சைமராட்டியர் வளர்த்த தமிழ் இலக்கியம் பகுதி - 3 | 100.00 |
| வீட்டு மருத்துவம் | 44.00 |
| தொண்டைமான் செப்பேடுகள் | 70.00 |
| தமிழ்ப் பழமொழிகள் ஓர் ஆய்வு | 120.00 |
| சாந்தாதி அசுவமகம் | 240.00 |
| அறிவியல் களஞ்சியம் தொகுதி - 14 | 700.00 |
| தமிழில் சொல்லாக்கம் | 130.00 |
| பழவேற்காடு 1816 இல் (மெக்கன்சியின் சுவடி - பதிப்பாய்வு) | 125.00 |
| தமிழ்நாவல்களில் உளச் சித்திரிப்பு | 130.00 |
| தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும் தொகுதி - 2 | 160.00 |
| தமிழக அறிவியல் வரலாறு | 60.00 |
| இசைத்தமிழ்ப் பேரறிஞர்கள் தொகுதி - 1 | 60.00 |
| உலக நாடுகளில் தமிழர் பண்பாடு | 50.00 |
| 108 ஆடலியக்கத் தமிழ்ப் பெயரீடுகளும் அமைவுகளும் | 50.00 |
| பாவேந்தரின் மொழியுணர்வும் மொழிநடையும் | 35.00 |
| தமிழ் நிகண்டுகள் வரலாற்றுப் பார்வை | 140.00 |

தொடர்பு முகவரி :
இயக்குநர் (பொறுப்பு), பதிப்புத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், (அரண்மனை வளாகம்)
தஞ்சாவூர் - 613. 001. தொ. போ. 04362 - 274581